# மானிடவியல் நோக்கில் சங்க இலக்கியம்

*சென்னைப் பல்கலைக்கழக*
*முனைவர்(பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக*
*அளிக்கப்பெற்ற ஆய்வேடு*


*ஆய்வாளர்*

***ச. நீலமேகன்***

*மேற்பார்வையாளர்*
***முனைவர் மு. பொன்னுசாமி***
*மேனாள் பேராசிரியர்*
*தமிழ் மொழித்துறை*
*சென்னைப் பல்கலைக்கழகம்*






*தமிழ் மொழித்துறை*
*சென்னைப் பல்கலைக்கழகம்*
*மெரினா வளாகம்*
*சென்னை – 600 005*

*ஏப்ரல் – 2018*

*முனைவர் மு. பொன்னுசாமி*
*மேனாள் பேராசிரியர்*
*தமிழ் மொழித்துறை*
*சென்னைப் பல்கலைக்கழகம்*
*மெரினா வளாகம்*
*சென்னை – 5*

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

*“மானிடவியல் நோக்கில் சங்க இலக்கியம்” என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித்துறையில் முனைவர் பட்டத்திற்காக என் மேற்பார்வையில் ஆய்வாளர் ச. நீலமேகன் அவர்களால் எழுதி அளிக்கப்பெற்றது என்றும், இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.*

*இடம்:* *(மு. பொன்னுசாமி)*

*நாள் :* *மேற்பார்வையாளர்*

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அக. | - அகநானூறு |
| அகத். | - அகத்திணையியல் |
| இளம். | - இளம்பூரணர் |
| உ. ஆ. | - உரையாசிரியர் |
| என்.சி.பி.எச். | - நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட் |
| ஐங். | - ஐங்குறுநூறு |
| கலி. | - கலித்தொகை |
| குறி. | - குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | - குறுந்தொகை |
| சிலம்பு | - சிலப்பதிகாரம் |
| சிறு. | - சிறுபாணாற்றுப்படை |
| திரு. | - திருமுருகாற்றுப்படை |
| தொல். | - தொல்காப்பியம் |
| நச். | - நச்சினார்க்கினியர் |
| நற். | - நற்றிணை |
| நூற். | - நூற்பா |
| நெடு. | - நெடுநல்வாடை |
| ப. | - பக்கம் |
| ப.ஆ. | - பதிப்பாசிரியர் |
| பக். | - பக்கங்கள் |
| பட். | - பட்டினப்பாலை |
| பதி. | - பதிற்றுப்பத்து |
| பரி. | - பரிபாடல் |
| புற. | - புறநானூறு |
| புறத். | - புறத்திணையியல் |
| பெரு. | - பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - பொருநராற்றுப்படை |
| பொருள். | - பொருளதிகாரம் |
| மணி. | - மணிமேகலை |
| மது. | - மதுரைக்காஞ்சி |
| மலை. | - மலைபடுகடாம் |
| முல். | - முல்லைப்பாட்டு |
| மேற். | - மேற்கோள் |
| மொ. ஆ. | - மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| *P* | - *Page* |

ச. நீலமேகன்
முனைவர்பட்ட ஆய்வாளர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
மெரினா வளாகம்
சென்னை – 5

## ஆய்வாளர் உறுதிமொழி

“மானிடவியல் நோக்கில் சங்க இலக்கியம்” என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித்துறையில் முனைவர் பட்டப்பேற்றிற்காக எழுதப்பட்ட இவ்வாய்வேடு முனைவர் மு. பொன்னுசாமி அவர்களின் மேற்பார்வையின்கீழ் என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: (ச.நீலமேகன்)

நாள்: ஆய்வாளர்

# பொருளடக்கம்

## முன்னுரை

தமிழ் மொழியின் மிகத்தொன்மையான இலக்கியமாகப் பாட்டும் தொகையும் என்ற இரு தொகைநூல்கள்(*Anthology*) திகழ்கின்றன. இவை சங்க இலக்கியம் என்ற பெயரால் அடையாளப்படுத்தப்பட்டு வருகின்றன. தமிழ்மொழி பேசும் மக்களினத்தின் பண்பாட்டுப் பெருமையைப் பறைசாற்றும் ஆதாரமாக விளங்கும் இவ்விலக்கியங்கள், ஐரோப்பியர் வருகைக்குப் பிறகான கல்விச் சூழலாலும், அச்சு ஊடகத்தின் தோற்றத்தாலும் வெகுமக்கள் தளத்திற்குக் கொண்டுசெல்லப்பட்டன. அதேபோன்று ஆரியப் பண்பாட்டின் ஆதிக்கம் தமிழ்ச் சமூகத்தில் பரவிவந்த சூழ்நிலையில் அரசியல் இயக்கங்கள் தமிழ்ப் பண்பாட்டின் தொன்மையையும் பாரம்பரியத்தையும் எடுத்துக்கூறி மக்களை எழுச்சியூட்ட சங்க இலக்கியங்களை அடையாளப்படுத்தின.

இந்நிலையில் சங்க இலக்கியங்கள் பல்கலைக்கழகத் தமிழியல் ஆய்வுகளில் குறிப்பிடத்தக்க முக்கியத்துவத்தைப் பெற்றுக் கல்வெட்டியல், தொல்லியல், மொழியியல், நாட்டுப்புறவியல், சமூகவியல், உளவியல், மார்க்சியம் போன்ற பல்துறை அறிவியல் புலங்களில் பல்வேறு பரிமாணங்களில் ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. அவ்வரிசையில் மானிடவியல் பின்புலத்தில் சங்க இலக்கியங்களை அணுகுவது அக்காலச் சமூகத்தைப் பற்றிய கூடுதல் புரிதலுக்கு வழிவகுக்கிறது.

சங்க இலக்கியங்களான தொகைநூல்களில் உள்ள கவிதைகள் பல புலவர்களால் பல்வேறு காலகட்டத்தில் பாடப்பட்டவை. அப்புலவர்களும் பாலினம், ஊர், நாடு, இனம், தொழில், சமயம் மற்றும் பாட எடுத்துக்கொண்ட பொருண்மை எனப் பல நிலைகளில் வேறுபட்டவர்களாய் உள்ளனர். வாய்மொழி மரபின் தொடர்ச்சியாக அமைந்த சங்கக் கவிதைகள் தொடக்கத்தில் பாணர் மரபிலும் அதனைத் தொடர்ந்து புலவர் மரபிலும் செழுமையாக்கப்பட்டு வந்துள்ளன.

பாட்டும் தொகையும் என்றழைக்கப்படும் சங்க இலக்கியப் பிரதி மக்கள் மனத்தில் கருக்கொண்டு தோன்றிப் பலகாலம் வாய்மொழி மரபிலிருந்து பிறகு எழுத்து மரபுக்கு மாறி தொகுப்பு, உரை, பதிப்பு, வாசிப்பு என எத்தனையோ ஊடாட்டங்கள் அப்பிரதிக்குள் நிகழ்ந்திருக்க வாய்ப்புண்டு. எனவே அந்தந்தக் காலக்கருத்துகளால் தாக்கத்துக்குள்ளான பிரதியாகத்தான் சங்க இலக்கியப் பிரதியைக் கருதமுடியும். எனவே சங்க இலக்கியப் பிரதி வெளிப்படுத்தும் பொருள் புலப்பாடு என்பது மேற்குறித்த பல்வேறு பரிமாணங்களை உள்ளடக்கியது என்பது கவனிக்கத்தக்கது.

இலக்கியப் பிரதிகள் மனிதனின் வாழ்க்கையைச் சித்திரித்தாலும், இருப்பதை இன்னும் அழகுபடுத்தியும் புனைந்தும் கூறுவதால் அவை நேரடி வரலாற்றுத் தரவுகளாகக் கருதப்படுவதில்லை. ஆனால் இயற்கையைப் பின்புலமாகக்கொண்டு சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் நிலவியல் பின்னணியோடு தாவரங்கள், விலங்குகள் மற்றும் பறவைகளைத் துணையாகக்கொண்டு தங்கள் கருத்துகளை விளக்குவதோடு, தம் கவிதைக்கு அடிப்படையாய் அங்கு வாழ்ந்த பல்வேறு மக்களின் சமூக – பண்பாட்டு நடத்தை முறைகளையும் நேரில் கண்டு உற்றுநோக்கி விவரிக்கும் தன்மை, இனவரைவியலார் ஒரு குறிப்பிட்ட மக்களின் பண்பாட்டை விவரிப்பதைப்போன்று அமைந்துள்ளது. எனவே சங்க இலக்கியங்கள் வெறும் கருத்துகளையும் உணர்வுகளையும் மட்டுமே பேசாமல், அதனோடு தொடர்புடைய

*பருப்பொருட்களான நிலம், குடியிருப்பு, வீடு, கருவிகள், புழங்கு பொருட்கள், உணவு, உடை போன்ற பலவற்றைப் பற்றியும் பேசுகின்றன என்கிற அடிப்படையில் மானிடவியல் என்ற அறிவுத்துறையின் துணைகொண்டு சங்க இலக்கியப் பிரதியை நோக்குவதாக இவ்வாய்வு அமைகின்றது.*

***ஆய்வுத் தலைப்பு***

*சங்க இலக்கியத் தொகை நூல்களின் இலக்கிய நயம் காணும் நோக்கில் கற்பனை, உவமை, அணி, யாப்பு என்ற இலக்கியக்கூறுகளின் அடிப்படையிலும், திணை துறை அடிப்படையிலும், திணை இலக்கிய மாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, செவிலி என்ற தனித்தனித் திணைமாந்தர்களின் அடிப்படையிலும், தொகுப்பு, உரை, பதிப்பு முதலியவற்றை ஆய்வுப்பொருளாகக்கொண்டும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவை மட்டுமல்லாமல் சமூகவியல், தொல்லியல், உளவியல் என்ற பிற அறிவுத்துறைகளின் பின்புலத்தில் புதிய பரிமாணத்தில் பார்க்கப்பட்டுச் சங்க இலக்கியங்கள் ஆய்வுக்குட்படுத்தப்பட்டு வருகின்றன. இதன் தொடர்ச்சியாக மனித வாழ்வின் அறிவியல் துறையாக விளங்கும் மானிடவியல் கோட்பாடுகளின் கண்கொண்டு நோக்குவது அவ்விலக்கியத்தைப் பற்றியும் அவ்விலக்கியம் காட்டும் சமூகத்தைப்பற்றியும் புதிய புரிதலுக்கு வழிவகுக்கும் என்ற அடிப்படையில் ''மானிடவியல் நோக்கில் சங்க இலக்கியம்'' என்னும் தலைப்பு ஆய்வுப் பொருண்மையாகக் கொள்ளப்பெற்றது.*

***ஆய்வு நோக்கம்***

*சங்க இலக்கியங்களைப் பிற அறிவியல் துறைக் கோட்பாடுகளின் அடிப்படையில் அணுகுவது, புதிய புரிதலையும் பரிமாணத்தையும் ஏற்படுத்தவல்லது என்ற பின்னணியில் மானிடவியல் கோட்பாடுகளின் பின்புலத்தில் சங்க இலக்கியங்களை அணுகுவது இவ்வாய்வின் நோக்கமாக அமைகின்றது.*

***ஆய்வின் எல்லை***

*பாட்டும் தொகையும் என்றழைக்கப்படும் சங்க இலக்கிய நூல்கள் இவ்வாய்வின் எல்லையாக அமைகின்றன.*

***ஆய்வு மூலங்கள்***

*ஆய்வு மூலங்கள் முதன்மை, துணைமை என்ற இரு நிலைகளில் அமைகின்றன. பாட்டும் தொகையும் எனப்படும் சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் இவ்வாய்வுக்கு முதன்மை மூலங்களாக அமைகின்றன.*

*சங்க இலக்கியங்களைப் புரிந்துகொள்வதற்குத் துணைக் கருவிகளாக அமைந்துள்ள சங்க இலக்கிய உரைநூல்கள், ஆய்வு நூல்கள், ஆய்வு தொடர்பாக வெளிவந்துள்ள ஆய்வேடுகள், ஆய்வுக்கட்டுரைகள், இதழ்கள், அகராதிகள் மற்றும் இணைய தளங்கள் ஆகியனவும் மானிடவியல் துறை தொடர்பான நூல்களும் துணைமை மூலங்களாக அமைகின்றன.*

**ஆய்வு முன்னோடிகள்**

மானிடவியல் நோக்கில், சங்க இலக்கியப் பிரதி முழுவதையும் உள்ளடக்கிய பல்கலைக்கழக ஆய்வுகள் அவ்வளவாக நடைபெறாத நிலையில் சங்க இலக்கியத்தை மையமாகக்கொண்டு,

சிலம்பு நா. செல்வராசுவின் "சங்க இலக்கிய மறுவாசிப்பு – சமூகவியல், மானுடவியல் ஆய்வுகள்" (2005), மற்றும் "தொல்காப்பியத்தில் மணமுறைகள் – சமூக மானுடவியல் ஆய்வு" (2010).

ராஜ் கௌதமனின் "பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்" (2006), பக்தவத்சல பாரதியின் "பாணர் இனவரைவியல்" (2012)

ஆ. தனஞ்செயனின் "சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும்" (2010) மற்றும் "குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும்" (1996)

பெ. மாதையனின் "சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்"(2004)

கா. சிவத்தம்பியின் "பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி"(2010)

எம்.சி. ஏழுமலையின் "மானிடவியல் நோக்கில் புறநானூறு" (2008), சென்னைப் பல்கலைக்கழக எம். ஃபில் பட்ட ஆய்வு.

முதலான ஆய்வு நூல்களும், பல்வேறு ஆய்விதழ்களில் வெளிவந்துள்ள மானிடவியல் நோக்கிலான சங்க இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளும் இவ்வாய்வின் முன்னோடி ஆய்வுகளாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

சங்க இலக்கியப் பனுவல்களை மானிடவியல் கோட்பாட்டு நோக்கில் அணுகுவதால் இவ்வாய்வு இலக்கிய மானிடவியல் அணுகுமுறையையும், பல தரப்பட்ட சமூக வளர்ச்சி நிலைகளைக்காட்ட விளக்கமுறை அணுகுமுறையையும் ஒப்பீட்டு அணுகுமுறையையும், சமூகவியல் அணுகுமுறையையும் நெறிபிடித்துச் செல்கிறது.

**இயல் பகுப்பு**

'மானிடவியல் நோக்கில் சங்க இலக்கியம்' எனும் தலைப்பிலான இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின் வருமாறு ஐந்து இயல்களாகப் பகுத்து ஆராயப்பட்டுள்ளது. அவை,

இயல் 1. சூழலும் சமூக அமைப்பும்

இயல் 2. குடிகளும் சமூக இருப்பும்

இயல் 3. உற்பத்தி முறைகளும் உற்பத்தி உறவுகளும்

இயல் 4. சடங்குகளும் நம்பிக்கைகளும்

இயல் 5. புழங்குபொருட்களும் பண்பாடும்

*முன்னுரை*

*ஆய்வுப்பொருள் தெரிவிற்கான காரணம், ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வேட்டின் அமைப்பு, இயல்பகுப்புமுறை மற்றும் ஒவ்வொரு இயலிலும் பேசப்பட்டுள்ள கருத்துகளின் சாரமாக, இயல்களின் சுருக்கவிளக்கம் ஆகியன முன்னுரையில் எடுத்துரைக்கப் பெறுகின்றன.*

***இயல் 1. சூழலும் சமூக அமைப்பும்***

*மனித வாழ்க்கையைச் சூழலே இயக்குகிறது. இத்தகைய சூழலின் தாக்கத்துக்குட்பட்டே சங்ககால மக்களின் வாழ்க்கை முறைகள் அமைந்திருந்தன என்பது இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.*

*குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற நிலத்தின் இயல்புக்கேற்ப நீர் நில விளை வளங்கள் அமைந்திருந்த தன்மையும் அதையொட்டியே மக்களின் வாழிடங்களும் புழங்குவெளிகளும் காணப்பட்ட நிலையினை இவ்வியல் எடுத்துரைத்துள்ளது.*

*நிலத்தின் இயல்புக்கேற்ப விளைபொருட்களும் தொழிலும் அமைந்திருந்த நிலை, ஒவ்வொரு நிலத்தின் விளைபொருளுக்கும் இயற்கை வளத்துக்கும் ஏற்ப மக்களின் உணவுப்பண்பாடு அமைந்திருந்த தன்மை, மக்கள் விளைபொருட்களையும் வேட்டைப் பொருட்களையும் தங்கள் தேவைக்காகப் பகிர்ந்துகொண்ட முறை, குறிப்பாகக் கள் உணவு மக்கள் அனைவராலும் விரும்பி உண்ணப்பட்ட நிலை ஆகியன விவரிக்கப்பட்டுள்ளன.*

*நிலம், பொருளாதாரம், சடங்கு, வழிபாடு, அழகியல் போன்ற பல்வேறு தளங்களில் சங்ககால மக்களால் ஆடைகள் பயன்படுத்தப்பட்டுள்ள தன்மை மற்றும் நிலத்தின் இயல்புக்கேற்பவும், கிடைக்கும் மூலப் பொருளுக்கேற்பவும், மக்கள் தங்கள் இருப்பிடங்களை அமைத்து வாழ்ந்தமுறை ஆகியன விளக்கப்பட்டுள்ளன.*

*சமூகத்தின் அடிப்படை அலகாக இருப்பது குடும்பம் அத்தகைய குடும்பம் என்னும் அமைப்பு திருமண உறவுகளால் தீர்மானிக்கப்படுகிறது. இத்திருமண உறவுகள் ஒவ்வொரு நிலத்தின் பண்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப பல நிலைகளில் அமைந்திருந்ததை இவ்வியல் எடுத்துக்காட்டியுள்ளது.*

*சங்ககால மக்களுக்கும் சூழலுக்கும் இடையிலான தொடர்புபற்றியும் அதன் விளைவாக சமூக, பொருளாதார, அரசியல் நிலைகளில் ஏற்படும் மாற்றத்தால் பலதரப்பட்ட படிநிலைகளில் அமைந்த சமூகமாகச் சங்கச்சமூக அமைப்புக் காணப்பட்டதை இவ்வியல் நிறுவுகிறது.*

***இயல் 2. குடிகளும் சமூக இருப்பும்***

*உயர்ந்தவர்களைக் குறித்தே இலக்கியம் படைக்கப்பட வேண்டும் என்பதைக் கொள்கையாகக்கொண்டு தமிழில் தோன்றியுள்ள மரபார்ந்த இலக்கியங்கள் யாவும் ஆளும் வர்க்கத்தைப் பற்றியே பேசுகின்றன. இனக்குழுச் சமூக அமைப்பு கட்டுடைந்து, அரசுருவாக்கம் தோற்றம் பெற்றுவிட்ட காலத்தில் தோன்றியதாகக் கருதப்படும் சங்கப் பாடல் தொகுப்பும் ஆளும் வர்க்கத்தைப்பற்றியே பேசுகின்றன. சமூகத்தின் வரலாறாக அவர்களின் வாழ்வே அடையாளப்படுத்தப்பட்டுள்ளன.*

ஆனால் சங்ககாலச் சமூகத்தின் உண்மை வரலாற்றை ஆளும் வர்க்கத்தின் ஏவலர்களாக இருந்து சமூக இயக்கத்துக் செயலாற்றிய அடித்தட்டு மக்களின் வாழ்க்கையைக் குறித்தும் நோக்குவதால் மட்டுமே அறிந்துகொள்ளமுடியும் என்ற நோக்கில் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள சாதாரண குடிமக்களின் வாழ்வு குறித்தும் சமூக இயக்கத்தில் அவர்கள் வகிக்கும் பங்கு குறித்தும் அறிந்துகொள்ளும் வகையில் சங்க இலக்கியம் காட்டும் குடிமக்களைத் திணைக்குடிகள், நிலைக்குடிகள், தொழிற்குடிகள், அலைகுடிகள் என நான்கு நிலைகளாகப் பகுத்து அக்குடிமக்களின் சமூக இருப்பையும் மதிப்பையும் விளக்குவதாக இவ்வியல் அமைந்துள்ளது. மேலும் ஒட்டுமொத்த சமூக அமைப்பில் பெண்களின் இருப்பு எத்தகையதாக இருந்தது என்பதை இவ்வியல் விளக்குகிறது.

**இயல் 3. உற்பத்தி முறைகளும் உற்பத்தி உறவுகளும்**

சமூகத்தின் வளர்ச்சிக்கும் தொடர்ந்த இடைவிடாத இயக்கத்திற்கும் உழைப்பும் உழைப்பை அடிப்படையாகக்கொண்ட பொருளாதாரமுமே காரணமாக அமைகின்றன. அத்தகைய பொருளாதார நடவடிக்கை தொடர்பான செயல்பாடுகள் சங்ககாலச் சமூகத்தில் எத்தகையதாக இருந்தன என்பதை இவ்வியல் விளக்குகிறது.

மக்கள் தங்களுக்குத் தேவையான பொருட்களை உற்பத்தி செய்தமுறை, உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளப்பட்ட நிலை, அவை மக்களால் நுகர்வு செய்யப்பட்ட தன்மை ஆகியன குறித்தும் பொருளாதார நடவடிக்கைகளைக் குறித்தும் இந்நடவடிக்கைகளின் மூலமாக ஏற்பட்ட சமூக உறவுகளைக் குறித்தும் இவ்வியலில் விவரிக்கப்பட்டுள்ளது.

உற்பத்திச் சாதனமாக இருந்த நிலம் சமூக அமைப்பிற்கு ஏற்பப் பொதுவுடைமையாகவும் தனியுடைமையாகவும் இருந்த நிலை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. உற்பத்தியின் அடிப்படையில் சமூகத்தில் வர்க்கபேதங்கள் தோன்றிய நிலை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. உற்பத்தி உறவுகளில் ஏற்பட்ட மாற்றம் மக்களின் வாழ்வில் ஏற்படுத்திய தாக்கங்கள் குறித்தும், தொழில் குடிகளின் தோற்றம் உற்பத்தி உறவுகளில் எத்தகைய மாற்றத்தை ஏற்படுத்தியது என்பதையும், உற்பத்தி உறவுகளில் பெண்களின் பங்கு எத்தகையதாக இருந்தது என்பதையும் இவ்வியல் எடுத்துரைத்துள்ளது.

**இயல் 4. சடங்குகளும் நம்பிக்கைகளும்**

சங்கப் பாடல்கள் காட்டும் திணைசார் சமூகத்தில் பண்பாட்டின் அடையாளமாகச் சடங்குகளும் நம்பிக்கைகளும் திகழ்கின்றன. மக்கள் தங்கள் அன்றாட வாழ்வில் பின்பற்றிவரும் சடங்குகளை அவற்றின் தன்மைக்கும் நோக்கத்துக்கும் ஏற்ப மானிடவியலார் பல்வேறு வகைகளில் வகைப்படுத்தி விளக்குகின்றனர். அவற்றை அடிப்படையாகக்கொண்டு சங்கப் பாடல்களினூடே அறியலாகும் சடங்குகளையும் அச்சமூகத்தில் புழக்கத்திலிருந்துவந்த மரபுவழிப்பட்ட நம்பிக்கைகளையும் விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**இயல் 5. புழங்குபொருட்களும் பண்பாடும்**

ஒரு குறிப்பிட்ட மக்கள்சமூகத்தில் புழக்கத்திலிருந்த பொருட்களைக்கொண்டு அச்சமூகத்தின் பண்பாட்டையும், அக்காலகட்டத்து மக்களின் வாழ்க்கை முறைகளையும் அறிந்துகொள்ளமுடியும். இப்பின்னணியில்

சங்க இலக்கியப் புலவர்கள் தங்கள் பாடல்களினூடே பதிவுசெய்துள்ள பொருட்களை அடிப்படையாகக்கொண்டு அதன்வழிப் புலப்படும் புழங்கு பொருட்களை வீடுசார் பொருட்கள், அணிகலன்கள், போர்க்கருவிகள், வேளாண்கருவிகள், தொழிற்கருவிகள், இசைக்கருவிகள், ஒப்பனைப் பொருட்கள் என அவற்றை வகைப்படுத்தி அவற்றின்வழி வெளிப்படும் பண்பாட்டுக் கூறுகள் இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**முடிவுரை**

ஆய்வேட்டின் முடிவுரையாக அமையும் இப்பகுதியில் ஒவ்வொரு இயலிலும் கண்டறியப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுத்துரைக்கப்பெற்று ஆய்வேட்டின் முடிவுரையாகத் தரப்பெற்றுள்ளது. மேலும் ஆய்வுப் பொருண்மையுடன் தொடர்புடைய மேலாய்வுக் களங்கள் சுட்டிக்காட்டப் பெற்றுள்ளன

**துணைநூற்பட்டியல்**

ஆய்வுக்கு உதவிய நூல்கள், அகராதிகள், இணையதளங்கள் ஆகியவற்றின் பட்டியல் இப்பகுதியில் அகரவரிசையில் தரப்பெற்றுள்ளன.

## *1. சூழலும் சமூக அமைப்பும்*

***1.1.*** *காலந்தோறும் சமூகம் பல்வேறு தாக்கங்களால் மாற்றத்திற்குள்ளாகிறது. இது இயற்கையானதும் தவிர்க்கவியலாததுமாகும். இச்சமூக மாற்றங்களை அவ்வக்காலங்களில் தோன்றிய இலக்கியங்களை உற்றுநோக்க அறிந்துகொள்ளலாம். சங்ககாலச் சமூகத்தை அறிய பாட்டும் தொகையும் என்ற சங்க இலக்கியங்கள் துணைபுரிகின்றன.*

*மனித வாழ்க்கையை அவனுடைய சுற்றுச்சூழலே தீர்மானிக்கிறது*[1] *என்பார் ஜெர்மானிய அறிஞர் - ஃபிரெட்ரிக் ராட்செல் (Fredrich Ratzel). மனிதர்களின் உணவு, உடை, வாழிடம், பண்பாடு, நாகரிகம், பொருளாதாரம், சடங்கு, சமயம் போன்ற அனைத்திலும் அதன் தாக்கத்தை உணரலாம்.*

*“ஒரு நாட்டின் நிலவியலை ஆராய்கையில் இயற்கைத் தோற்றம் என்றும், பண்பாட்டுத் தோற்றம் (Cultural features) என்றும் இரு பகுதிகளாகக் கொண்டு ஆய்வது நிலவியலார் வழக்கமாகும். இயற்கைத் தோற்றத்தில் அந்நாட்டின் தட்பவெப்ப நிலை, நில அமைப்பு, நிலவளம் முதலானவை கூறப்படும். பண்பாட்டுத் தோற்றத்தில் அதன் மக்கள், அம்மக்கள் வாழ்விடம், அவர்களின் தொழில், அவர்களால் ஆக்கப்படும் பொருள்கள், அந்நாட்டின் ஏற்றுமதி, இறக்குமதி ஆகியவை கூறப்படும். இம்முறையைப் பின்பற்றி நாம் தமிழ்நாட்டின் நிலப்பரப்பினை ஆராய்தல் வேண்டும்”*[2] *என்ற கருத்தின் அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்தாகப் பகுத்துப் பார்க்கப்படும் ஐந்து வகைப்பட்ட நிலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளைச் சூழலமைப்பு எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்பதைக் குறித்து ஆராய்வதில் இவ்வியல் கவனம் கொள்கிறது. இங்கு இலக்கியத்திலிருந்து சூழலையும், சூழலிலிருந்து சமூகத்தையும் புரிந்துகொள்ளலாம்.*

*சூழல் என்பது தாவரங்கள், விலங்குகள் அடங்கிய அனைத்து உயிரினங்களுடன், அவற்றுடன் தொடர்பு கொண்டிருக்கும் அனைத்து இயற்பியல் கூறுகளையும் அடக்கியதாகும். இவைகளுக்கு இடையே தொடர்புகள், பரிமாற்றங்கள் அல்லது இடைவினைகள் எவ்வாறு நடைபெறுகிறது என்பதைப் பற்றி அறிவியல் அடிப்படையில் ஆய்வு செய்வதைச் சூழலியல்(Ecology) ஆய்வு எனக் குறிப்பிடுவர்.*[3]

*சுற்றுச்சூழல் (environment) என்பது, உயிரினமோ சமூகமோ எதுவாயினும் அது வாழக்கூடிய பௌதிக, கனிம உயிரியல் கூறுகளின் ஒருங்கிணைந்த ஒரு தொகுப்பை அல்லது கூட்டமைப்பைக் குறிப்பிடுகிறது. காற்று, நீர், நிலம், இயற்கை, ஆதாரங்கள், தாவரங்கள், விலங்கினங்கள், மக்கள் ஆகிய ஒவ்வொரு ஒழுங்கமைப்பும் தனித்தும், ஒன்றோடு ஒன்று பரஸ்பரம் தொடர்புகொண்டு இயங்கும் சூழலமைவுகளே சுற்றுச் சூழலாகும்.*[4]

*இவ்வாறு மனிதனுக்கும் சூழலுக்கும் இடையிலான, காலம் மற்றும் இடம் சார்ந்த தொடர்புகள் பற்றி ஆராயும் மானிடவியலின் ஒரு துறைக்குச் சூழலியல் மானிடவியல் என்று பெயர். இது சூழலை மனித இனம் எவ்வாறு*

---

[1] *ஆ. தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும், ப. 136*
[2] *தமிழ்நாட்டு வரலாறு-தொல்பழங்காலம், பக்.34-35.*
[3] *http://ta.wikipedia.org/s/m7d*
[4] *ஆ. தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும், ப. 137*

*மாற்றியமைக்கிறது என்பதையும் அதன் விளைவாக ஏற்படும் சமூக, பொருளாதார, அரசியல் வாழ்வுகளில் ஏற்படும் மாற்றங்களையும் ஆய்வு செய்கிறது.*[1]

*சங்க இலக்கியத்தை சூழல் குறித்தான கண்ணோட்டத்தில் அணுகுவது அந்நூலுக்குத் திணை, துறை வகுக்கப்பட்ட காலத்திலிருந்தே தொடங்கிவிட்டது. "சங்க இலக்கியம் என்பது முழுமையும் சூழலை (ecology), நிகழ்வுகளை (phenomenon) மையமிட்ட படைப்பியக்கம் எனலாம்"*[2] *என பக்தவத்சல பாரதி குறிப்பிடுவதும் இங்கு நோக்கத்தக்கது.*

*பாட்டும் தொகையும் எனக் குறிப்பிடப்படும் சங்கப் பனுவல்களில் இயற்கை வர்ணனை மிகுந்திருப்பது வெளிப்படை. இதனை மு. வ., தனிநாயகம் அடிகள் போன்ற அறிஞர் பலரும் சுட்டிக்காட்டியுள்ளனர். சங்கப்பாக்களைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என முதற்பொருளான நிலத்தை அடிப்படையாகக்கொண்டு ஐந்தாகப் பகுத்திருப்பதிலும், அந்நிலங்களுக் குரியவற்றைக் கருப்பொருள் எனக் குறிப்பிடுவதிலும் சூழலியல் நோக்கு வெளிப்படக் காணலாம். சூழல் உறவுகளைப் பண்பாட்டுச் சூழல், சமூகச்சூழல் என்று வகைப்படுத்துவர்.*

*இங்கு நில அமைப்பு, உணவு, உடை, வாழிடம், திருமண உறவுகள் ஆகியன குறித்து மட்டும் நோக்கப்படுகிறது.*

### *1.2. நில அமைப்பு*

*"தமிழ் நிலத்திற்குள் இருக்கும் திணைப்பாகுபாடுகள் பண்பாட்டு வேறுபாடுகளைக் காட்டுவன. இத்திணைகள் இம்மண்ணில் குறைந்தது 5 வகையான பண்பாட்டுப் பரப்புகளைக் காட்டுகின்றன"*[3] ***- பக்தவத்சல பாரதி***

*"ஆற்றுப்படையிலுள்ள வருணனைகள், இந்நிலப்பிரிவுகள் வெறும் இலக்கிய மரபு மட்டுமல்ல; புவியியல் அமைப்பும் கூட என்பதனை ஐயத்திற்கிடமின்றி நிரூபிக்கின்றன. அத்துடன் இந்நிலப்பகுதிகளில் ஒவ்வொன்றிலும் பலவிதமான நாகரீக நிலைகளில் வாழும் மக்களைக் காண்பதை நாம் முக்கியமாகப் பார்க்கவேண்டும். குன்றுகளில் வாழும் மக்கள் மிகவும் புராதனமான(நாகரீகமற்ற) நிலையிலும், மருதநிலப் பகுதியில் வாழும் மக்கள் வளர்ச்சியடைந்த நிலையிலும் காணப்படுகிறார்கள். உண்மையாகப் பார்க்கும்போது ஒரே போக்கில்லாத வளர்ச்சியைக் காட்டும் சித்திரமாக இவ்வருணனைகள் திகழ்கின்றன"*[4] ***- கா. சிவத்தம்பி***

*"நிலத்தினுடைய இயற்கையமைப்புக்குத் தக்கபடி அக்காலத்து மக்கள் வாழ்க்கை ஐந்து விதமாக அமைந்திருந்தது. குறிஞ்சி நிலம், முல்லை நிலம், மருதநிலம், பாலைநிலம் என்னும் நிலப்பிரிவுப்படி அவர்களுடைய வாழ்க்கையும் ஐந்து வகையாக இருந்தது"*[5] ***- மயிலை சீனி. வேங்கடசாமி***

*"நிலப்பகுதிகள் தோறும் தங்கி நிலைத்து வாழத்தலைப்பட்ட மனித சமுதாயம் ஆங்காங்கே இருந்த இயற்கைச் சூழல்களை அடிப்படையாய்க் கொண்டு*

---

[1] *http://ta.wikipedia.org/s/pzb*
[2] *பக்தவத்சலபாரதி, இலக்கிய மானிடவியல், முன்னுரை, ப. X.*
[3] *பக்தவத்சலபாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப.60.*
[4] *கா. சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 13.*
[5] *மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப.5.*

தமது வாழ்வை அமைத்துக் கொண்டது. அவரவர் வாழ்ந்த நிலத்தியல்பு, அவரவர் பயன்படுத்திய உற்பத்திக் கருவிகள் ஆகியவற்றின் நிலைக்கேற்ப அவரவர் வாழ்வியல் நிலைகளும் வேறுபட்டு அமைந்திருந்தன"[1] - **பெ. மாதையன்**

"நிலவியலின் ஆற்றல் மனித வாழ்வினையும் வளர்ச்சியையும் தன்னகப்படுத்தவல்லது என்ற உண்மை இக்காலத்துப் புதிதாய் உருவாகி எழுந்துள்ள அறிவியல்துறை. அதனை ஆந்த்ரோபாஜ்யாக்ரபி (Anthropogeography) என வழங்குகின்றனர். ஆனால், இயற்கையின் சூழ்நிலை மனித வாழ்வினை மாற்றுகிறது என்ற இவ்வுண்மையைப் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் எவ்வாறோ உணர்ந்துள்ளனர்"[2] – **மு. வரதராசன்**

சங்ககாலத்தில் வாழ்ந்த பண்டைத் தமிழ்க் கவிஞர்கள், நிலப்பரப்பு, அதிலுள்ள இயற்கைக் காட்சி, பருவ காலங்கள் ஆகியவை மனிதனுடைய வாழ்க்கையை மாற்றி அமைக்கின்றன என்பதை உன்னிப்பாக நோக்கி உணர்ந்திருக்கின்றனர். குறிப்பிட்ட ஒரு நிலப்பரப்பின் பருவநிலைக்கும் இயற்கை வளத்துக்கும் ஏற்றவாறு அதே நிலப்பகுதியில் வாழும் மனிதர்களுடைய ஒழுக்கமும் ஒழுகலாறும் அமைகின்றன. இயற்கையின் சூழல் மனித வாழ்க்கையில் ஏற்படுத்தும் மாறுதல்கள் வெளிப்படையாகத் தெரிவதில்லை. ஆயினும், மிக நுண்ணிய முறையில் எவ்வாறோ மனிதனின் உள்ளத்தைத் கவர்ந்து, அவனுடைய வாழ்க்கையின் போக்கு அமைவதற்கான முதல் காரணமாக இயற்கை அமைகின்றது. இவ்வுண்மையைப் பண்டைக்காலத்துப் புலவர்கள் உணர்ந்திருந்தனர் என்பதைச் சங்க இலக்கியம் தெரிவிக்கின்றது.[3] – **மு. வரதராசன்**

நிலத்தின் நீர் நில வளங்கட்கேற்ப அந்நிலத்து வாழும் மக்கட்குப் பண்பும் செயலும் இயைபுபடுகின்றன.[4] - **ஔவை சு. துரைசாமிப்பிள்ளை**

மேற்குறித்த அறிஞர்களின் கருத்துக்கள் சங்ககால நிலவியலையும் அதனூடான மக்கள் பண்பாட்டையும் எடுத்துரைக்கின்றன.

தமிழகப் புவிப்பரப்பு குறிஞ்சி (மலை), முல்லை(காடு), மருதம்(வயல்), நெய்தல்(கடல்) என்ற நான்கு நிலைப்பட்ட நில அமைப்பைக்கொண்டு விளங்கியமையின் தமிழர் நிலத்தை 'நானிலம்' என்றும் குறிப்பிட்டனர். சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி நானிலம் என்ற சொல்லுக்குக் "குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் என்னும் நால்வகைப்பட்ட நிலமுடையது"[5] என விளக்கமளிக்கிறது. இவ்வாறு தமிழக நிலப்பரப்பை நான்காகப் பகுத்துப் பார்க்கும் பார்வை தொல்காப்பியர் காலத்திலேயே தொடங்கிவிட்டதை,

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்

[1] பெ. மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.10.
[2] மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக். 25-26
[3] மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 36
[4] புறநானூறு, ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, ப. 407
[5] https://agarathi.com/word/நானிலம்.

சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"[1]

என்ற தொல்காப்பிய அடிகள் காட்டுகின்றன. சங்கத் தமிழ்க் கவிஞர்கள் தங்கள் கவிதைகளில் புனைந்து காட்டியுள்ள நிலத்தோற்றங்கள் உண்மையானவை; இயற்கையானவை; கற்பனையற்றவை எனவே சங்ககால நிலச்சூழலமைப்பைப் புரிந்துகொள்வதற்குச் சங்கக் கவிதைகள் பெருமளவு துணைபுரிகின்றன.

சங்கக் கவிதைகளில் புனைந்து காட்டப்பட்டுள்ள நிலப்பின்னணியைக் குறித்துக் கருத்துரைக்கும் தனிநாயகம் அடிகள், "தமிழ்க் கவிதைகளில் நிலத்தோற்றங்கள் உண்மையானவையும் செயற்கையானவையும் ஆகும். புறக்கவிதைகளில் உண்மையானவை, அகக் கவிதைகளில் பெருமளவு செயற்கையானவை. செயற்கை என்றால் மெய்யற்றது என்று நான் கூறவில்லை. அந்த வருணனைகள் இயற்கைக்கும் மெய்ம்மைக்கும் உண்மையானவைதான், ஆனால், கவிஞர் தமிழ் நாட்டின் எந்த ஒரு தனி இடத்தையும் வருணிக்கமாட்டார். அவர் பல இடங்களிலிருந்து தன் விவரிப்புகளைத் தொகுக்கலாம். அவை அவரது கவிதைக்குப் பின்னணியாக அமையும்"[2] என்றும், "பழந்தமிழ்க் கவிதையின் இயற்கை வருணனை நுட்பமானது. உயர்வுநவிற்சி வருணனைகள் அற்றது"[3] என்றும் குறிப்பிடுவார். இக்கருத்தின் அடிப்படையில் சங்ககால நிலப்பின்னணியை சங்கக் கவிதைகளிலிருந்தே பகுத்துக் காணலாம்.

### 1.2.1. குறிஞ்சி நிலம்

தமிழர் நாகரிகம் குறிஞ்சிநிலத்தில் தோற்றம் பெற்றதையும், அந்நிலம் மக்கள் வாழ்வதற்குரிய தகவமைப்பைப் பெற்று விளங்கியதையும், "தமிழ்நாட்டு நாகரிகம் மற்றச் சிறந்த நாகரிகங்களைப் போலக் குறிஞ்சி நிலத்தில் தோன்றியது. நீரும் நிழலும் தற்காப்பியங்களும் உணவுப் பொருள்களும் ஒருங்கே கிடைக்கப்பெறும் நிலம் குறிஞ்சி நிலமேயாகும்"[4] என்றும், "தமிழ் நாட்டிலுள்ள மலைகள் பனிமலைகள் அல்ல; வானளாவிய மரங்களும் மண்டிய புதர்களும் கொண்டவை. வற்றாத நீரோடைகள் பாய்பவை. காயும் கனியும் கிழங்கும் கணக்கின்றித் தருபவை. வேளாண்மை செய்வதற்கேற்ற நிலப்பரப்பினை உச்சிப் பகுதியிலும் கொண்டவை. இவ்வாறு நீர்வளமும் நிலவளமும் மிகுந்து மக்கள் வாழ்வதற்கேற்ற வாய்ப்புகளைப் பெற்றிருந்தமையால்தான் தமிழ்நாட்டில் நாகரிகம் மலைப்பகுதிகளில் தோன்றியது"[5] என்றும் குறிப்பிடும் கருத்துக்கள் தெளிவுபடுத்துகின்றன.

மலையும் மலை சார்ந்த பகுதியுமான குறிஞ்சி நிலப்பகுதியை சங்கப்பாக்கள் கோடு, குவடு, கல், துறுகல், பிறங்கல், அறை, பொருப்பு, அடுக்கம், கவாஅன், சிலம்பு, குன்றம், வெற்பு, வரை, மலை என்ற பெயர்களால் சுட்டுகின்றன. இதனை, "கோடு உயர் அடுக்கத்து, ஆடு மழை ஒளிக்கும்"[6], "கருந்தாள் வேங்கை அம்குவட்டிடை"[7], "தூவெள் அருவிக் கல் உயர் நண்ணியதுவே"[8], "துறுகல் மீமிசை,

[1] தொல். அகத். 5
[2] தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும், ப. 106.
[3] தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும், ப. 43.
[4] தமிழ்நாட்டு வரலாறு – தொல்பழங்காலம், ப. 40
[5] தமிழ்நாட்டு வரலாறு – தொல்பழங்காலம், பக். 40-41
[6] நற். 233:3
[7] நற். 351:5-6
[8] குறு. 235:2-3

உறுகண் அஞ்சாக் குறக் குறுமாக்கள்''[1], ''எண் அரும் பிறங்கல்''[2], ''ஓங்கு வரை அடுக்கம்''[3], ''கறங்கு வெள் அருவி பிறங்கு மலைக் கவாஅன்''[4], ''மழை தவழ் சிலம்பு''[5], ''குறவர் மகளிரேம்; குன்றுகெழு கொடிச்சியேம்''[6], ''சூர்உறை வெற்பு''[7], ''பெருவரை இழிதரும் நெடுவெள் அருவி''[8], ''மலைஉறை குறவர்''[9] எனவரும் அடிகள் காட்டுகின்றன.

மலையிடங்களைச் சூழ்ந்து மக்கள் வாழ்ந்த குறிஞ்சி நிலம் 'மலைநாடு'[10] எனப்பட்டது. இப்பகுதி மட்டுமின்றி கானம், விடர், சாரல், புனம், ஏனல், படப்பை எனப்பட்ட இடங்களும் மக்கள் புழங்குவெளிகளாக இருந்தன. இதனை, ''கான் உழு குறவர்''[11], ''பெருங்கல் விடரகம்''[12], ''அகல்இலைப் பலவின் சாரல்''[13], ''இரும் பிடித் தடக்கையின் தடைஇய பெரும்புனம்''[14], ''மலைஅயற் கலித்த மைஆர் ஏனல்''[15], ''நம் படப்பைச் சூருடைச் சிலம்பு''[16] என வரும் அடிகளைக்கொண்டு அறியலாம்.

இந்நிலப்பகுதி இயற்கையாகப் பெய்யும் மழையை அடிப்படையாகக் கொண்ட நீர் ஆதாரங்களைக் கொண்டு விளங்கியது. அவ்வப்போது பெய்யும் மழையின் புதுவெள்ளத்தினால் அப்பகுதி செழிப்புற்றது. அத்தகைய நீர்ப்பெருக்கினை புதுநீர்[17], புதுவெள்ளம்[18], புனல்[19] என்ற பெயர்களால் சங்கப் பாக்கள் சுட்டுகின்றன. இவை மட்டுமின்றிக் காட்டாறு, அருவி, சுனை என்பனவும் குறிஞ்சி நிலத்தின் நீர்வள ஆதாரமாக விளங்கியதை, ''அருவி வேங்கைப் பெரு மலை நாடன்''[20], ''அகல் வாய்ப் பைஞ் சுனை''[21], ''பூமலர் கஞலிய கடு வரற் கான் யாற்று''[22] என்ற அடிகள் விளக்குகின்றன. மேலும், வானம் மழை பெய்யாது போயினும் குறிஞ்சி நிலம் அதன் அருவி நீரால் வளமுடையதாக விளங்கியதை, ''கருவி வானம் பெய்யாது ஆயினும், அருவி ஆர்க்கும் அயம் திகழ் சிலம்பு''[23] என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

குறிஞ்சி நிலத்தின் வழியிடங்கள் கொடிய விலங்குகளால் துன்பம் தரும் தன்மையதாக இருந்ததை, மலைச் சாரல் வழிகள் களிறும் புலியும் இயங்குவதாகவும், ஒன்றையொன்று தாக்கும் தன்மையுடையதாகவும் இருந்தன[24]; வேங்கை மலர்ந்து வண்டினங்கள் சூழ்ந்து மொய்க்கும் பக்கமலையில் களிற்றியானையைக் கொன்று சிங்கம் சுற்றித் திரியும்[25]; மலைப்பிளவுகளில் குட்டிகளை ஈன்ற பெண்புலியின் பசியைப் போக்கவேண்டி இரை தேடி ஆண்புலி பதுங்கியிருக்கும்[26]; மலைப் பக்கங்களில் உள்ள சிறுவழி வெள்ளம் பெருகிக் குறுக்கிட்டு ஓடுவதாகவும், பாம்புகள் இயங்குவதாகவும் இருக்கும்[27]; பன்றி புலியோடு போரிடற்கு இடனாக அமைந்ததாகவும்[28]; இரைதேடும் பெண்புலி இயங்கும் துயர்தரும் வழிகளைக் கொண்டும், விரைந்து செல்லக்கூடிய காட்டாற்று வெள்ளத்தைக் கொண்டதாகவும், புலி களிற்றியானையைத் தாக்கிக் கொல்லும் இயல்புடையதாகவும் இருந்தது[29] எனக் குறிஞ்சித்திணைப் பாடல்களில் குறிப்பிடப்படுவதைக் கொண்டு அறியமுடிகிறது.

---

[1] நற். 104:3-4
[2] அக. 8:13
[3] குறு. 69:4
[4] அக. 118:1
[5] அக. 328:12
[6] நற். 276:4
[7] அக. 98:5
[8] அக. 358:12
[9] நற். 64:4
[10] ஐங். 202:4
[11] நற். 209:2
[12] நற். 344:9
[13] குறு. 352:3
[14] நற். 344:3
[15] நற். 108:1
[16] அக. 158:7-8
[17] நற். 68:5
[18] அக. 68:16
[19] கலி. 39:1
[20] குறு. 96:1
[21] நற். 357:7
[22] அக. 18:2
[23] நற். 365:6-7
[24] குறு. 88:2-3; நற். 85:4-6, 158:5-9, 255:4-5
[25] நற். 112:1-4
[26] நற். 332:6-7
[27] நற். 104:9-11, 168:8-11
[28] ஐங். 266:1-2
[29] நற். 144:1-4

குறிஞ்சிப்பூ மலர்ந்து விளங்கும் மலையிடங்களில் ஓவியன் எழுதி வைத்ததுபோல வேட்டுவரில்லங்கள் திகழ்ந்தன.[1] இவர்களின் வாழ்விடங்கள் 'சிறுகுடி'[2], 'சீறூர்'[3], 'சேரி'[4] எனப்பட்டன. இத்தகைய சிறுகுடிகள் மலை சூழ்ந்த கானகத்தைப் பொருந்தியும், மூங்கில் முள்ளால் அமைந்த வேலியையுடையதாகவும், மலையை அரணாகக்கொண்டும், காவற்காடு சூழ்ந்ததாகவும் விளங்கியதை, "கல்லக வரைப்பில் கான் கெழு சிறுகுடி"[5], "குழு மிளைச் சீறூர்"[6] எனவரும் அடிகள் விளக்குகின்றன. கானவர் இரவில் துயில்கொள்ளாது காவல் காக்கும் பாதுகாப்புடையதாக அவர்களின் ஊர்கள் இருந்தன. இதனை, "கடியுடை வியல் நகர்க் கானவர் துஞ்சார்"[7] என நற்றிணை குறிப்பிடுகிறது.

குறவர்களின் சிற்றூர், பெரிய மலையிடத்திலிருந்து அருவிகள் விழுந்து ஒலிக்கின்ற, பலமலர்களையுடைய மலைச் சாரலில் அமைந்திருந்தது.[8] இதனை, 'சேரிகள் மிக்க சிற்றூரில் பலாமரங்கள் மிக்கிருக்கும் முன்றிலை உடைய மனையில் குறவனின் மனைவி இரவில் நெருங்கி விழுகின்ற அருவியின் ஒலிகேட்டு உறங்காதிருப்பாள்'[9] என்ற நற்றிணைப் பாடற்கருத்தும் உணர்த்தும்.

இந்நிலப்பகுதி மக்கள் வாழ்வதற்குரிய தகவமைப்பை எந்த அளவுக்குப் பெற்றிருந்தது என்பதை நோக்கும் போது. இந்நிலப்பகுதி மனித முயற்சியின்றியே மக்கள் தங்கள் உணவுத் தேவையைத் தீர்த்துக்கொள்வதற்குரிய மூங்கில்நெல், பலா, வள்ளிக்கிழங்கு, தேன் போன்ற விளைபொருட்களைக் கொண்ட வளமான பகுதியாகக் காணப்பட்டது. இதனைப் பாரியின் மலைவளத்தைப்பற்றிக் குறிப்பிடும் புறநானூற்றுப்பாடலொன்று,

> "உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே:
> ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல் விளையும்மே;
> இரண்டே, தீம் சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே;
> மூன்றே, கொழுங் கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே;
> நான்கே, அணி நிற ஓரி பாய்தலின், மீது அழிந்து,
> திணி நெடுங் குன்றம் தேன் சொரியும்மே"[10]

எனக் குறிப்பிடுகின்றது. காந்தளை இயற்கை வேலியாக உடைய சிறுகுடியில் வாழும் குறவர்கள், அருவியை உடைய பரந்த நிலத்தில் மலை நெல்லை விதைத்தனர்.[11] அவற்றை மலையருவியின் நீரினால் விளைவித்தனர். இதனை, "மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி, அருவியின் விளைக்கும் நாடன்"[12] என்ற குறுந்தொகைப் பாடலடி காட்டும்.

குறவர் யாமரம்[13], அகில்[14], சந்தனம்[15] முதலிய மரங்களை வெட்டி எறிந்து அவற்றை எரித்த கொல்லைகளில் களைக்கோட்டினால் களையை நீக்கிக் கருந்தினையை விதைப்பர்.[16] அகன்ற பரப்பையுடைய கற்பாறையிடத்துக் குறவர் தினையைக் கதிரடித்து நெடும்போராகக் குவிக்க எண்ணுவர்.[17] யானையும் புலியும் பொருது சண்டையிட்டதால் ஏற்பட்ட ஒலியை மேகத்தின் முழக்கம் எனக்கருதி

---

[1] நற். 268:3-4
[2] நற். 85:10, 114:3
[3] நற். 95:7
[4] நற். 77
[5] நற். 122:3
[6] நற். 95:7
[7] நற். 255:3
[8] குறு. 95:1-3
[9] நற்.77: 4-8
[10] புற. 109:3-8
[11] குறு. 100:1-3
[12] குறு. 371:2-3
[13] குறு. 198:1-2
[14] நற். 282:6-8
[15] ஐங். 212,253:1-2
[16] குறு. 214:1-2
[17] நற். 125:10-12

*காயவைத்த தினையை விரைந்து கூட்டிக் குவிப்பர்.*[1] *மலைப்பக்கத்தில் உள்ள பெரிய தினைப்புனத்தில் குறவன், சிறிய தினையை அரிந்தபின், அதன் மறுகாலில் கொழுவிய அவரைக்கொடி பூக்கும்.*[2] *எனவரும் செய்திகள் குறவர்கள் தினை விளைவித்த முறை குறித்து குறிப்பிடுகின்றன*

*குறிஞ்சிநிலம் பல்வேறு இயற்கை விளைபொருட்களைக் கொண்டு மக்களுக்குப் பயன் விளைத்ததை, 'கிளைகளில் எல்லாம் தேனிறால் தொடுக்கப்பெற்று அவை தூங்கும்; பெரிய பழங்கள் குலைகுலையாகப் பழுக்கும்; மலையின்கண் உள்ள வெளிய அருவி மாலைபோல இறங்கிவரும்; சாரலில் உள்ள கொல்லைகளில் பலவகைக் கூலங்களும் விதைக்கப்பட்டு விளைந்து பொலியும்'*[3] *என்றும், 'கிழங்குகள் மண்ணின் கீழே இறங்கின; தேனடைகள் மரக்கிளைகளிலும் மலையிலும் தொடுக்கப்பெற்றன. சில விதைகளை விதைத்த அளவில் தினைக்கதிர்கள் பலவாக விளைந்தன'*[4] *என்றும், 'வேங்கை மரத்தின் கிளைகளிலிருந்து தேன் கசிந்து கல்லின் குழிகளில் வடியும், குறவர்களின் இளமகார் அதனை வழித்து உண்பர்'*[5] *என்றும், பலாப்பழங்கள் மிக்கிருக்கும் பயன் மிகத் தரும் மலைப்பக்கம்.*[6] *அங்கு அருவிநீர் விழும் இடத்தில் வாழை வளர்ந்து நிற்கும், அக்கனிகளை மந்திகள் கவர்ந்து உண்ணும்*[7] *என்றும் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன.*

### *1.2.2. முல்லை நிலம்*

*காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலம் எனப்பட்டது. இந்நிலத்தை வன்புலம் எனவும் குறிப்பிடுகின்றனர். இந்நிலத்தில் வாழ்ந்த மக்கள் கால்நடை மேய்த்தலையும், வரகு சாமை போன்றவற்றை விதைத்தலையும் தொழிலாகக் கொண்டவர்கள். இங்கு வாழ்ந்த மக்கள் ஆயர், இடையர், கோவலர் என்ற பெயர்களால் குறிப்பிடப்படுகின்றனர்.*

*முல்லை எனப்பட்ட காட்டு நிலம் சங்கப் பாடல்களில் புனம், கானம், தூறு, காடு, புறவு, முரம்பு, பாட்டம், முதையல் என்ற பெயர்களால் சுட்டப்பட்டுள்ளதை, "இனமயில் அகவும் கார்கொள் வியன்**புனம்**"*[8]*, "மரந்தலை மணந்த நனந் தலைக் **கானம்**"*[9]*, "முதிர்காய் வள்ளிஅம் **காடு**"*[10]*, "முள்ளுடைக் குறுந் **தூறு**"*[11]*, "காமர் மடப் பிணை, அரலை அம்காட்டு இரலையொடு, வதியும் **புறவு**"*[12]*, "வன்பரல் **முரம்பு**"*[13]*, "பாங்கரும் **பாட்டங்கால்** கன்றொடு செல்வேம்"*[14]*, "விதையர் கொன்ற **முதையல்** பூழி"*[15] *எனவரும் சங்கப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன.*

*இந்நில மக்களின் புழங்கு வெளிகளான வாழிடங்கள், மாடம், பாக்கம், புறவினாடு (காடு சார்ந்த ஊர்ப்புறப்பகுதி), சிறுகுடி, சீறூர், மென்புலவைப்பு(மென்மையான புலங்களையுடைய மருத நிலம்) என்றிருந்ததை, "இடம் சிறந்து உயரிய எழு நிலை **மாடம்**"*[16]*, "குருந்தங் கண்ணிக் கோவலர், பெருந் தண் நிலைய **பாக்கமும்** உடைத்தே"*[17]*, "தாது ஆர் பிரசம் ஊதும், போது ஆர் **புறவின் நாடு** கிழவோனே"*[18]*, "புன் புலம் தழீஇய பொறைமுதல் **சிறுகுடி**"*[19]*, "முயற் பறழ்*

---

[1] *நற். 344:9-11*
[2] *குறு. 82:3-5*
[3] *நற். 93:1-4*
[4] *நற். 328:1-2*
[5] *நற். 168:1-4*
[6] *நற். 326:1*
[7] *நற். 251:1-3*
[8] *அக. 334:13*
[9] *நற். 394:1*
[10] *முல். 101*
[11] *அக. 274:11*
[12] *நற். 121:3-5*
[13] *நற். 394:5*
[14] *கலி. 116:1*
[15] *நற். 121:1*
[16] *முல். 68*
[17] *ஐங். 439:2-3*
[18] *ஐங். 406:3-4*
[19] *அக. 284:7*

*உகளும் முல்லை அம் புறவில், கவைக் கதிர் வரகின் **சீறூர்**"*[1], *"இன்புறு புணர்ச்சி நுகரும் **மென்புல வைப்பு**"*[2] *எனவரும் அடிகள் விளக்குகின்றன.*

*வழியிடங்கள் நீளிடை, பெருவழி, செந்நிலமருங்கு என்ற பெயரில் இருந்ததை, "வம்பு விரித்தன்ன செம்புலப் புறவில், நீர்அணிப் பெருவழி **நீள்இடைப்** போழ"*[3], *"தளவுப்பிணி அவிழ்ந்த தண்பதப் **பெருவழி**"*[4], *"செய்து விட்டன்ன **செந்நில மருங்கு**"*[5] *என வரும் அடிகளும், மக்கள் கூடும் பொதுவெளிகள், தொழூஉ, பாசறை எனப்பட்டதை, "**தொழூ**வினுள் கொண்ட ஏறு எல்லாம் புலம் புக"*[6], *"கொல் ஏறு கோடல் குறை என, கோவினத்தார் பல் ஏறு பெய்தார் **தொழூஉ**"*[7], *"வெஞ் சின வேந்தன் வியன் பெரும் **பாசறை**"*[8], *"ஏந்து கோட்டு யானை வேந்தன் பாசறை"*[9] *எனவரும் அடிகளும் குறிப்பிடுகின்றன.*

### *1.2.2.1. முல்லை நிலக் காட்சிகள்*

*சங்க இலக்கிய முல்லைப் பாடல்களில் கார்காலமாகிய பெரும்பொழுதும், மாலையாகிய சிறுபொழுதுமே மிகுதியான அளவு சங்கப் புலவர்களால் வர்ணிக்கப்பட்டுள்ளன.*

*இம்முல்லைநிலக் கோவர் வாழ்வினைக் குறித்து, 'கார்காலத்தில் பெய்த பெருமழை பெருவெள்ளத்தை ஏற்படுத்துகிறது. மேய்ச்சல் தொழில் செய்யும் இடையர்களுக்கு அவ்வெள்ளம் இடையூறாக இருக்கவே, அதனை வெறுத்து அவ்வெள்ளத்திலிருந்து தங்கள் கால்நடைகளைப் பாதுகாத்துக்கொள்வதற்காக மேட்டு நிலப்பகுதிகளில் அவற்றை மேயவிட்டனர். காந்தளின் இதழ்களால் கட்டிய மாலைகளைச் சூடிக்கொண்ட அவர்கள் மழை பெய்ததால் ஏற்பட்ட குளிர்ச்சியினால் உடல் நடுங்கினர். பற்கள் பறையடிப்பதைப்போல் அடித்துக்கொண்டன. இத்தகைய குளிர்ச்சியிலிருந்து தங்களைப் பாதுகாத்துக்கொள்ள கைகளை நெருப்பில் காட்டிச் சூடேற்றி கன்னங்களில் வைத்துக்கொண்டனர்'*[10] *என நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இடையர்கள், கார்கால மழைப்பொழிவால் ஏற்பட்ட குளிரிலும் கொள்ளியின் வெப்பத்தில் தன் உள்ளங்கையைச் சூடேற்றிக் கொண்டு, இருளில் ஆட்டுக்குட்டிகளைக் கவர்ந்து செல்வதற்கு வரும் குறுநரிகளை ஓட்ட நீண்ட ஒலியினை எழுப்பினர்.*[11] *என அகநானூறும், முல்லை நிலச் சூழலில் வாழ்ந்த ஆயர்களின் வாழ்க்கை முறைகளைக் கலித்தொகையின் முல்லைக்கலிப் பாடல்களும் விவரிக்கின்றன.*

*இந்நிலப்பகுதி அவ்வப்போது மழைப் பொழிவின்மையால் வறட்சியுற்றுக் காணப்பட்ட நிலையினை, 'எருதுகள் உழாமையால் கொட்டிலில் வினையற்று நிற்றலை வெறுத்துச் சோம்பிக்கிடந்தன, புள்ளி மான்கள் வெம்மையால் புழுங்கின'*[12]*; 'ஞாயிறு தன் கதிர்களையே கைகளாகக் கொண்டு ஈரத்தினைக் கவர்ந்து பசுமை அற்றுப் போகும்படி காய்தலால் காடு வளங்குன்றித் தன் அழகு மாறுபட்டுக் காணப்பட்டு எங்கும் வெடித்துக்கிடக்கின்ற பரந்தகன்ற நிலப்பரப்பைக் கொண்டு விளங்கியது'*[13] *என்று சங்க அகப்பாக்கள் வர்ணிக்கின்றன. இத்தகைய கோடை வறட்சியால் பட்டுப்போன காட்டினை நற்றிணைப் பாடலொன்று, "வறம் கொல*

---

*[1] அக. 384:5-6*
*[2] ஐங். 407:3-4*
*[3] நற். 221:5-6*
*[4] அக. 64:4*
*[5] அக. 304:6*
*[6] கலி. 104:60*
*[7] கலி. 107:3-4*
*[8] அக. 364:10*
*[9] அக. 304:17*
*[10] நெடு. 1-8*
*[11] அக. 94:7-8*
*[12] குறு. 391:1-2*
*[13] அக. 164:1-7*

*வீந்த கானம்"*[1] *எனக் குறிப்பிடுகிறது. முல்லை பாலையாக மாறும் தன்மையை இப்பகுதி விளக்குவது நோக்கத்தக்கது.*

*கார்காலத்தில் பெய்கின்ற பருவமழையே இந்நிலப்பகுதியைச் செழிப்படையச் செய்தது. மேற்குறித்தவாறு வறட்சியுற்றிருந்த காடானது முன்னைய அழகினைப் பெறுமாறு மிக்க மழை பொழிந்து, வண்டின் கூட்டம் ஆரவாரம் செய்ய, மணங்கமழும் முல்லைப் பூவுடன் செங்காந்தள் பூவும் வேறு பல்வகைப் பூக்களும் ஒருசேர மலர்ந்து காடு மணம் வீச*[2]*, வரிகளை உடைய நுணல்கள் ஆரவாரிக்க, தேரைகள் ஒலிக்க, கார்காலம் தொடங்கிய நிலையினைச் சங்கப்பாடல்கள் பலவும் காட்டுகின்றன*[3]*.*

*முல்லை நிலத்தில் கார்காலத்தில் பெய்த பருவ மழையைக்கொண்டு மானாவாரி நிலங்களான முல்லைநிலக் கொல்லைகளில் உழுதொழில் நடைபெற்றது. இதனை, 'கொல்லை உழவர்கள் மழை பெய்த செம்மண் நிலத்தை ஏர்கொண்டு உழுது வரகினை விதைத்து, பின்னாளில் அவற்றில் வளர்ந்த களைகளைக் களைக்கொட்டினால் பறித்துப் புனத்தைத் தூய்மை செய்தனர்'*[4] *என்றும், 'தரிசாகக் கிடந்த பழைய கொல்லையை, உழுததனாலாகிய நிறைந்த மகிழ்ச்சியையுடைய உழவர், காலையில் விதைப்பதற்காகச் சிறிய கூடைகளில், விதைகளை எடுத்துச் சென்றனர்'*[5] *என்றும், 'பலநாட்கள் பெய்த மழையினால் புதிதாகத் திருத்திய புன்செய் நிலத்தில் விதைக்கப்பட்ட வரகு வளர்ந்து தழைத்தது'*[6] *என்றும் வரும் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன.*

### *1.2.3. மருத நிலம்*

*வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருதம் எனப்பட்டது. ஏனைய நான்கு நிலங்களைக் காட்டிலும் நில வளத்திலும் நீர் வளத்திலும் சிறந்து, செழிப்பான நிலப்பகுதியாகத் திகழ்வது மருதநிலமாகும். வேளாண்மை இந்நிலத்தின் முதன்மையான தொழில், இதற்கு ஏற்ற நீராதாரத்தினை ஆறு, ஏரி, போன்றவை எப்போதும் தரக்கூடிய தன்மை உடையனவாக இருத்தலின் இப்பகுதி வளமுடையதாக விளங்கியது. எனவே இந்நிலப் பகுதியில் உழவுத் தொழிலை மேற்கொண்ட மக்கள் வளமான வாழ்க்கையை வாழ்ந்தனர்.*

*ஒருநாடு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப்பட்ட ஐந்து நில அமைப்பைக் கொண்டு விளங்கினாலும் அவற்றுள் உயிர்நாடியாக விளங்கி, உணவுத் தேவையில் தன்நிறைவு அடைந்ததாகவும், தன் வளத்தால் மற்றநிலங்களுக்கும் உதவக் கூடிய தன்மையுடையதாகவும் திகழ்ந்தது மருத நிலமாகும். இந்நிலமே மற்ற நிலப்பகுதிகளைக் காட்டிலும் நாகரிக முதிர்ச்சியுடையதாகவும், பொருளாதார அடிப்படையில் தன்நிறைவு அடைந்ததாகவும், வளர்ச்சிபெற்ற சமூக அடித்தளத்தைக் கொண்டதாகவும் திகழ்ந்தது. இதற்கெல்லாம் முதன்மையான காரணமாக அமைந்தது அந்நிலப் பகுதியின் நிலவியல் சூழலாகும். இப்பகுதி வளமுடையதாக அமைந்ததற்கு வண்டல் மண்ணின் வளத்தைக்கொண்டு விளங்கும் வயல் எனப்பட்ட மென்புலங்களே காரணமாக இருந்தன. இத்தகைய நிலவியல் சூழலே*

---

[1] *நற். 238:1*

[2] *அக. 164:1-7; கலி. 102:1-4, 101:1-5; ஐங். 499:1-2*

[3] *ஐங். 468:1-2; அக. 154:1-10*

[4] *அக. 194*

[5] *குறு. 155*

[6] *குறு. 220*

*இந்நிலப்பகுதியில் உபரி உற்பத்தியைத் தந்து, சொத்துடைமையை உருவாக்கி, அரசு உருவாக்கம் ஏற்படக் காரணமாக அமைந்தது.*

### *2.3.1. நீர், நில, விளை வளங்கள்*

*இந்நிலப்பகுதியின் நீர் நில வளத்தை, ‘‘தண் துறை ஊரன்’’[1], ‘‘கழனிஅம் தண்துறை ஊர’’[2], ‘‘கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர!’’[3], ‘‘அறல்வார் நெடுங்கயம்’’[4], ‘‘பழனம் சேர் ஊர’’[5], ‘‘அகன் துறை ஊரன்’’[6], ‘‘துறைகேழ் ஊரன்’’[7], ‘‘தீம்புனல் ஊர’’[8], ‘‘மிகுபுனல் நல் ஊர’’[9], ‘‘பாய் புனல் நல்ஊர’’[10], ‘‘பெரும் புனல் ஊர’’[11], ‘‘மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத் தண் துறை ஊரன்’’[12], ‘‘ஆம்பல் அமன்ற தீம் பெரும் பழனத்துப் பொய்கை ஊர்’’[13] எனவரும் பாடலடிகள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன.*

*இந்நிலப்பகுதியின் விளைவளம் குறித்து, ‘‘வித்திய உழவர் நெல்லொடு பெயரும், பூக் கஞல் ஊரன்’’[14], ‘‘பூத்த கரும்பின் காய்த்த நெல்லின் கழனி ஊரன்’’[15], ‘‘ஆய் கரும்பு அடுக்கும் பாய்புனல் ஊர’’[16], ‘‘கயற்கணம் கலித்த பொய்கை ஊர’’[17], ‘‘குண்டு நீர் வாளை பிறழும் ஊரன்’’[18], ‘‘கயல் ஆர் நாரை போர்வில் சேக்கும் தண் துறை ஊரன்’’[19] எனவரும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.*

*மருத நிலத்தின் நீர் வளத்தை, ‘‘கடல்கண் டன்ன கண்அகன் பரப்பு’’[20] என்றும், வான் மழையை நம்பியிராத நீர் வளத்தைக் கொண்டு வாழ்ந்த வளவாழ்வை, ‘‘வானம் வேண்டா வறன்இல் வாழ்க்கை’’[21] என்றும் சுட்டுகின்றன.*

*மருதநில வயற்பகுதி, கழனி, செறு, செய், வரம்பணை, பழனம், களம் என்ற பெயர்களால் சுட்டப்படுவதை, ‘‘பூத்த கரும்பின் காய்த்த நெல்லின் **கழனி** ஊரன்’’[22], ‘‘நெல் விளை கழனி நேர் கண் **செறு**’’[23], ‘‘செழுஞ் **செய்** நெல்லின் சேயரிப் புனிற்றுக் கதிர்’’[24], ‘‘பாசவ லிடித்த கருங்கா முலக்கை, ஆய்கதிர் நெல்லின் **வரம்பணை**’’[25], ‘‘சுடர்ப் பூந் தாமரை நீர் முதிர் **பழனம்**’’[26], ‘‘தாழ்சினை மருதம் தகைபெறக் கவினிய நீர்சூழ **வியன்களம்** பொலிய’’[27] எனவரும் அடிகள் உணர்த்துகின்றன.*

*மருதநிலத்தின் நீர் வளத்தின் காரணமாக ஆங்காங்கே சோலைகள் அமைந்து காணப்பட்டன. இச்சோலைகள் பொழில், படப்பை, தண்டலை, என்ற பெயர்களால் சுட்டப்பட்டதை, ‘‘கழனிஅம் **படப்பை**க் காஞ்சி ஊர!’’[28], ‘‘மருது ஓங்கு படப்பை’’[29], ‘‘தாது ஆர் காஞ்சித் தண் **பொழில்** அகல் யாறு’’[30], ‘‘பொழில் புறவின் **பூந்தண்டலை**’’[31] என வரும் அடிகள் காட்டுகின்றன.*

*மருதவளம் சிறப்பதற்கு அதன் நீர்த்தடங்கள் அடிப்படையாக அமைந்தன. அத்தகைய நீர்த்தடங்களாக, ஆறு, ஏரி, பொய்கை, பண்ணை, வாவி, குண்டுநீர், கயம், இலஞ்சி, துறை என்பன விளங்கியதை, ‘‘தாது ஆர் காஞ்சித் தண் பொழில் அகல் **யாறு**’’[32], ‘‘இரு காமத்து இணை **ஏரி**’’[33], ‘‘துறை மீன் வழங்கும் பெரு நீர்ப் **பொய்கை**’’[34], ‘‘கரை சேர் மருதம் ஏறிப் **பண்ணை** பாய்வோள் தண் நறுங் கதுப்பே’’[35],*

[1] அக. 56:8,76:2, 216:5; நற். 100:3, 280:4, 300:4
[2] கலி. 79:6
[3] அக. 96:8
[4] அக. 126:6
[5] கலி. 70:5
[6] நற். 40:11
[7] அக. 106:5, 276:5; ஐங். 11:2
[8] அக. 156:7
[9] கலி. 69:7
[10] கலி. 78:10
[11] ஐங். 65:2
[12] ஐங். 6:4-5
[13] நற். 200:6-7
[14] ஐங். 3:4-5
[15] ஐங். 4:4-5
[16] அக. 116:4
[17] நற். 230:5
[18] நற். 310:4
[19] ஐங். 9:4-5
[20] அக. 176:1
[21] அக. 186:1
[22] ஐங். 4:4-5
[23] நற். 400:2
[24] அக. 156:3
[25] குறு. 238:1-2
[26] அக. 6:16
[27] அக. 366:1-2
[28] அக. 96:8
[29] அக. 376:3
[30] அக. 246:6
[31] பட். 33
[32] அக. 246:6
[33] பட். 39
[34] அக. 316:1
[35] ஐங். 74:3-4

*“செறுவும் **வாவி**யும், மயங்கி, நீர் அற்று”[1], “பைங்கால் கொக்கின் புன் புறத்தன்ன, **குண்டுநீர்** ஆம்பலும் கூம்பின”[2], “நெடு நீர்த் தண் **கயம்** துடுமெனப் பாய்ந்து”[3], “மீன் முதிர் **இலஞ்சி**க் கலித்த தாமரை”[4], “குண்டு நீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம் தண் **துறை**”[5] எனவரும் சங்கப்பாடலடிகள் உணர்த்துகின்றன.*

### *1.2.4. நெய்தல் நிலம்*

*கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் நிலம் எனக் குறிப்பிடப்படுகிறது. இத்தகைய நெய்தல் நிலத்து மக்களின் புழங்குவெளியாக விளங்குவது பரந்து விரிந்த கடற்பரப்பாகும். இப்பகுதி மக்கள் பொருளாதாரத் தேவையின் பொருட்டு கடலையும், அன்றாட மனித வாழ்க்கைக்கான இருப்பிடங்களையும் தொழில் சார் பணிகளையும் மேற்கொள்ள கடற்கரை சார்ந்த பகுதிகளையும் ஆதாரமாகக்கொண்டு வாழ்ந்தனர்.*

*சங்கப் பாடல்களில் கடல், “பெருநீர்க் குட்டம்”[6], “பெருநீரழுவம்”[7], “முழங்குகடல் ஓதம்”[8], “வெள்தலைப்புணரி”[9], “பெருநீர்”[10], “விரிநீர்”[11], “முந்நீர்”[12], “தெண்கடல் பெருந்திரை”[13], “தெண் திரைப் பெளவம்”[14], “பெருங்கடல்”[15], “உரவுநீர்ச் சேர்ப்பு”[16] என்ற பல்வேறு பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.*

*கடல்சார்ந்த இடங்களில் மக்களின் புழங்குவெளிகள் சிறுகுடி, ஊர், சேரி, பாக்கம், பட்டினம், பொழில், படப்பை, எக்கர், கானல், துறை, கழி என்ற பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளன.*

#### *1.2.4.1. சிறுகுடி*

*பரதவர் வாழும் சிற்றூர் ‘சிறுகுடி’[17] என்று அழைக்கப்படுகின்றது. இத்தகைய சிற்றூர்கள் கடற்கரைச் சோலையின்கண் அமைந்திருந்ததை, “கானல் நண்ணிய சிறுகுடி”[18] என்றும், அது கண்டல் மரங்களாகிய வேலி சூழ்ந்து கண்டார் விரும்பும் தன்மையதாக இருந்ததை, “கண்டல் வேலிக் காமர் சிறுகுடி”[19] என்றும் குறிப்பிடப்படுவதிலிருந்து அறியலாம்.*

*கடற்கரைச் சோலையில் உள்ள அழகிய சிறுகுடியில் வாழும் மீனவர்கள், கடல்மேல் சென்று மீன்களைப் பிடிக்கின்ற தொழிலை உடையவர்கள், கடல் நீரை விளைவயலாகக் கொள்ளுகின்றவர்கள்.[20] இச்சிறுகுடியில் வாழும் பரதவர்கள் பெரிய மீன்களைப் பிடிக்கும் இயல்புடையவராய் இருந்ததை, “பெரு மீன் கொள்ளும் சிறுகுடிப் பரதவர்”[21] எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.*

*இச்சிறுகுடியிலிருந்து கடலின் மேற் செல்லும் மீனவர் புன்னை மர நிழலிலே தங்குவர்; அங்குக் கடலின் மேற் செல்லுதற்குரிய காலம் பார்த்து, முறுக்குண்ட வலையைப் பிரித்துக் காயவிடுவர்[22]; பரதவர் தாம் பிடித்துவந்த மீன்களை விற்பர்; கள்ளுண்டு களித்திருப்பர்; சிறுகுடியிருப்புகளின் முன்றிலில் நண்டுகள் விளையாடும்; புலால்நாற்றம் வீசும்[23]; மேலும், பரதவர் சோலை சூழ்ந்த துறையிடத்து விற்றவை போக மிகுதியான மீன்களை நுண்ணிய மணற்பரப்பில்*

---

*[1] பட். 244*
*[2] குறு. 122:1-2*
*[3] நற். 330:3*
*[4] அக. 186:3*
*[5] குறு. 91:2-3*
*[6] அக. 280:9*
*[7] அக. 20:1*
*[8] அக. 220:12*
*[9] அக. 20:8*
*[10] அக. 310:17*
*[11] நற். 130:10*
*[12] நற். 283:6*
*[13] ஐங். 126:3*
*[14] ஐங். 121:3*
*[15] அக. 60:1*
*[16] அக. 360:15*
*[17] குறு. 184:2*
*[18] குறு. 228:3*
*[19] நற். 191:5*
*[20] நற். 45*
*[21] நற். 219:6*
*[22] நற். 4:1-4*
*[23] நற். 239:1-5*

காயவைப்பர்[1] என இவர்களின் வாழ்க்கை, சூழல் சார்புடையதாக விளங்கியதைச் சங்கப்பாக்கள் தெரிவிக்கின்றன.

### *1.2.4.2. ஊரும் சேரியும்*

கடல்சார்ந்த பகுதிகளில் ஊரும், ஊரின் ஒரு பகுதியாகச் சேரியும் விளங்கியது. இதனை, "இருங் கழிச் சேர்ப்பின் தம் உறைவின் ஊர்க்கே"[2], "தெண் கடற் சேர்ப்பன் வாழ் சிறு நல் ஊர்க்கே"[3], "உடைகடற் படப்பையெம் உறைவின் ஊர்க்கே"[4], "தெண்கடல் கண்டல் வேலிய ஊர்"[5], நம் ஊர்க் கானல்அம் பெருந் துறை, கவின் பாராட்டி,[6] எனவரும் அடிகளும், "புலால் அம்சேரி, புல்வேய் குரம்பை"[7] , "ஊரும் சேரியும் உடன் இயைந்து அலர் எழ"[8], "நெல்லும் உப்பும் நேரே; ஊரீர்! கொள்ளீரோ" எனச் சேரிதொறும் நுவலும்"[9] எனவரும் அடிகளும் குறிப்பிடுகின்றன.

### *1.2.4.3. பாக்கம்*

பரதவர் வாழும் கடற்கரை ஊர் பாக்கம் என்றும் அழைக்கப்பட்டது. "சிறுகுடிப் பாக்கம்"[10], "கலிகெழு பாக்கம்"[11], "நல்லோள் தந்தை சிறுகுடிப் பாக்கம்"[12], "கொழு மீன் கொள்பவர் பாக்கம்"[13] என வரும் அடிகள் இதனைச் சுட்டுகின்றன.

### *1.2.4.4. பட்டினம்*

பட்டினம் என்னும் பகுதியும் நெய்தல் நில மக்கள் வாழிடமாக இருந்தது. இது பரதவர்களோடு, வேற்றுநாட்டவரும், வணிகர்களும் வாழும் மாடமாளிகைகள் நிறைந்த வளம்நிறைந்த பகுதியாக இருந்ததைப் பத்துப்பாட்டுள் ஒன்றான பட்டினப்பாலை விவரிக்கின்றது.

### *1.2.4.5. பொழில்*

கடற்கரைப் பகுதிகளில் 'பொழில்' எனப்பட்ட சோலைகள் காணப்பட்டன. இச்சோலைகள் பல்வேறு மலர்களால் மணம்பெற்று விளங்கியதை, "பல் மலர் நறும் பொழில்"[14] என்றும், காதலர் சந்திப்பு இத்தகைய பொழில்களில் நடைபெற்றதை, "மின் இவர் கொடும் பூண், கொண்கனொடு இன் நகை மேவி, நாம் ஆடிய பொழிலே"[15], "பல்பூந் தண்பொழில், பகல்உடன் கழிப்பி"[16] என்றும் சுட்டுவனகொண்டு உணரமுடிகிறது.

### *1.2.4.6. படப்பை*

நெய்தல் நிலப்பகுதிகள் படப்பை எனப்பட்ட தோட்டங்களையும் கொல்லைப் புறங்களையும் கொண்டதாகவும் இருந்ததை, "கழி சூழ் படப்பை"[17], "கண்டல் வேலிக் கழி சூழ் படப்பை"[18], "உயர் மணல் படப்பை"[19] எனவரும் அடிகள் குறிப்பிடுகின்றன.

---

[1] அக. 300:1-4
[2] நற். 4:12
[3] நற். 49:10
[4] நற். 67:12
[5] நற். 74:9-10
[6] அக. 210:8-9
[7] அக. 200:2
[8] அக, 220:1
[9] அக. 390:8-9
[10] நற். 203:6, 323:6
[11] நற். 303:2
[12] நற். 323:6
[13] நற். 207:3
[14] நற். 398:6
[15] நற். 187:9-10
[16] அக. 360:1
[17] பட். 32
[18] நற். 207:1
[19] நற். 375:9

#### 1.2.4.7. மணற்பகுதிகள்

எக்கர் எனப்பட்ட அலையால் கொழிக்கப்பட்ட மணல் மேடுகளில் பரதவப் பெண்கள் நண்டினைப் பிடித்து விளையாடினர்.[1] இத்தகைய மணல் மேடுகளில் தாழை, புன்னை போன்ற தாவரங்கள் காணப்பட்டன. இந்நெடிய மணற் பரப்புகளில் மகளிர் வண்டற் பாவை செய்து விளையாடினர்.[2] உமணர் உப்பு வண்டிகள் இத்தகைய நெடிய மணற்பரப்பைக் கடந்தே சென்றன.[3] என நெய்தல் நிலத்தில் காணப்பட்ட மணற்பகுதிகள் குறித்து குறிப்பிடப்பட்டுள்ளன.

#### 1.2.4.8. சோலைகள்

சங்கப் பாக்களில் கடற்கரைப் பரப்பில் அமைந்த கானல் எனப்பட்ட சோலைகளும் மக்கள் புழங்குவெளிகளாக இருந்தன. காதலர் சந்திப்புக்கள் இத்தகைய சோலையிடங்களில் மிகுதியும் நடைபெற்றதை, ''மணம் கமழ் நறு வீ வரிக்கும் துறைவன், தன்னொடு புணர்த்த இன் அமர் கானல்''[4] எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விடங்கள் மலர்ந்த மலர்களையும், புன்னை மரங்களையும் கொண்டு விளங்கியதை, ''விரி பூங் கானல்''[5], ''நறும் பூங் கானல்''[6], ''பல் பூங் கானல்''[7], ''புன்னைஅம் கானல்''[8] எனவரும் அடிகள் உணர்த்தும்.

#### 1.2.4.9. துறை

பரந்து பெருகிய நீரைக்கொண்டு குளிர்ந்திருக்கும் கடற்கரைப் பகுதி தண்ணந்துறை எனப்பட்டது. இதனை, ''புன்னையொடு ஞாழல் பூக்குந் தண்ணந்துறை''[9], ''சுறவினம் கலித்த நிறை இரும் பரப்பின் துறை''[10], ''வலம்புரி வான் கோடு நரலும் இலங்கு நீர்த் துறை''[11] என்ற சங்கப் பாடலடிகள் காட்டும்.

#### 1.2.4.10. கழி

கடற்கரைப் பகுதிகளில் காணப்பட்ட உவர்நீர்ப்பரப்புப் பகுதிகள் 'கழி' எனப்பட்டன. இக்கழிகள் ''செழுநீர்த் தண்கழி''[12], ''கழி சூழ் படப்பை''[13] எனப் பலவாறு சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.[14] இத்தகைய கழிகள் முதலையொடு, சுறாமீன் உலவித் திரிவதாகக் காணப்பட்டதை, ''நெடு நீர் இருங் கழிக் கடுமீன் கலிப்பினும்''[15], ''கொடுந் தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும், இருங் கழி''[16], ''கோட் சுறா வழங்கும் வாள் கேழ்இருங் கழி''[17] எனவரும் அடிகளும், நெய்தற் பூக்களை உடையனவாகக் காணப்படதை, ''நெய்தல் மாக்கழி''[18] எனவும் சுட்டுவதுகொண்டு தெளியலாம். மேலும் இத்தகைய உப்பளங்களில் சிவந்த இறா மீன்களைப் பிடிப்பதற்காகக் காக்கைகள் தாவும்[19] எனவும் குறிப்பிடப்படுகிறது.

#### 1.2.4.11. நில வளம்

மழைபெய்யுங்காலத்து நெல்விளைவதாகவும், மழை வறண்ட காலத்து உப்புவிளைவதாகவும் அமைந்த ஊர்களும் நெய்தல் நிலப்பகுதியில் காணப்பட்டது.

''பெயினே, விடு மான் உளையின் வெறுப்பத் தோன்றி,

[1] நற். 49, 106
[2] நற். 191:2-3
[3] நற். 183:1-5
[4] நற். 267:5-6
[5] நற். 155:3
[6] நற். 191:11
[7] நற் 223:3
[8] நற். 227:3
[9] ஐங். 103:1-2
[10] நற். 223:7-8
[11] நற். 172:8-9
[12] அக. 160:12
[13] நற். 38:7
[14] அக. 350:1, 360:2-3
[15] அக. 50:2
[16] அக. 80:1-2
[17] நற். 78:1
[18] அக. 240:3
[19] நற். 31:2-3

*இருங் கதிர் நெல்லின் யாணரஃதே:*
*வறப்பின், மா நீர் முண்டகம் தாஅய்ச் சேறு புலர்ந்து,*
*இருங் கழிச் செறுவின் வெள் உப்பு விளையும்,*
*அழியா மரபின் நம் மூதூர்''*[1]

*என மருத நில வளமும் நெய்தல் நில வளமும் ஒருங்கே அமைந்திருந்த நிலையினை நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது. இத்தகைய நில அமைப்பினைக் குறித்து அகநானூற்றுப் பாடலும், 'கழனிவாழ் உழவர்கள் வலிமையாக வீசும் காற்றில் நெல்லைத் தூற்ற, அதன் தூசும் துரும்பும் அருகிலிருக்கும் உப்பளத்தின் சிறு பாத்திகளில் சென்று வீழ்ந்ததைக் கண்ட நெய்தல் நில மக்கள், உப்பு பாழ்பட்டுப்போனமைக்காக உழவருடன் மாறுபட்டு சேற்றுக் குழம்பினை எடுத்தெறிந்து கைகலப்பில் ஈடுபட்டனர்'*[2] *எனக் குறிப்பிட்டுள்ளது கவனிக்கத்தக்கது.*

*உப்புப் பாத்திகளையுடையதும், கடற்கரைச் சோலையால் சூழப்பெற்றதுமான சிறிய குடியிருப்புகள் விளங்கின.*[3] *அக்குடியிருப்புக்கள் புலால் நாற்றம் வீசுவதாக இருந்ததை, ''இரும் புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கம்''*[4]*, ''புலவுநாறு இருங்கழி''*[5]*, ''புலால்அம் சேரி''*[6]*, ''புலாஅல் மறுகின் சிறுகுடிப்பாக்கம்''*[7] *எனவரும் அடிகள் உரைக்கின்றன.*

*பெண்கள் கடற்கரை மணற்பரப்பில் மீன் வற்றலைக் காயவைத்தனர். அவற்றைக் கவர்ந்துசெல்ல வரும் பறவைகளை விரட்டினர், உப்பங்கழிக்கருகிலுள்ள ஞாழல் மரத்தின் கிளைகளில் ஊசல் ஆடினர். குவிந்த மணலில் குரவைக் கூத்தாடினர். கடலில் குளித்து விளையாடினர்.*[8] *தோழியர் கூட்டத்தோடு கடலாடுதல், கடற்கரைச் சோலையில் சிற்றில் புனைதல், சிறுசோறு ஆக்குதல் போன்றவற்றில் ஈடுபட்டு பொழுதைக் கழித்தனர்.*[9]

*பரதவர்கள் இரவில் விளக்குகளைக் கொளுத்தி வைத்துக்கொண்டு அவற்றின் வெளிச்சத்தில் மீன் வேட்டம் சென்றனர்.*[10] *மீன் பிடித்தலோடு உப்பு விளைத்தலும் செய்தனர்.*[11] *நுண்ணிய வலைகளைக்கொண்டு பலவகை மீன்களைப் பிடித்தனர். அவற்றை இரப்போர்க்கு வழங்கினர், எஞ்சியவற்றை விலைகூறி விற்று, பின்பு செறிந்த மணற்பரப்பில் படுத்து உறங்கினர்.*[12] *என நெய்தல் நிலவளம் சங்கப்பாக்களில் விளக்கப்பட்டுள்ளது.*

### *1.2.5. பாலை நிலம்*

*தமிழ்நாட்டு நிலப்பரப்பில் பாலை என்றொரு நிலப்பகுதி குறிப்பிடப்படுகின்றது. இது நிலையான பாலைவனத்தைப் போன்றதொரு நிலப்பரப்பன்று. தமிழ் இலக்கியம் குறிப்பிடுகின்ற பாலை என்னும் நிலப்பரப்பு பருவ மாறுபாட்டால் மழைப் பொழிவின்மையின் காரணமாகத் தோன்றும் தற்காலிக வறட்சியைக் காணும் நிலப்பகுதியாகும். இத்தகைய பாலைநிலம் தோன்றும் தன்மையைக்குறித்து இளங்கோவடிகள் தாம் இயற்றிய சிலப்பதிகாரத்தில்*

---

[1] *நற். 311:1-5*
[2] *அக. 366:6-11*
[3] *நற். 254:10-12*
[4] *அக. 70:2*
[5] *அக. 80:10*
[6] *அக. 200:2*
[7] *அக. 270:2*
[8] *அக. 20:1-10, 80:4-6*
[9] *அக. 110:5-9, 60:10-11, 90:1-2*
[10] *அக. 100:5-7*
[11] *அக. 140:1-3*
[12] *அக. 30:1-11*

*"முல்லையுங் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து*
*நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்*
*பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"*[1]

*என்று குறிப்பிடுவது நோக்கத்தக்கது.*

*தனிநாயம் அடிகள் இத்தகைய பாலைநிலம் குறித்து, "தமிழ்நாட்டில் இருக்கும் பாலைநிலங்கள் என்பவை, மிகச் சிறிய அளவில் கற்பனை செய்தாலும்கூடக் கோபி, சகாரா போன்ற மணற்பாங்கான பாலைவனப் பகுதிகள் அல்ல. தமிழர்கள் பாலை என்ற சொல்லால் குறித்தது, பிற நிலப்பகுதிகளை – குறிப்பாக மலைப்பகுதிகள், மேய்ச்சல் நிலங்களைத்தான். பருவமழை தப்பியோ, இயற்கையாக நீர் வறண்டதாலோ, கோடைக்காலத்தில் அவை பாலைவனம் போன்ற தோற்றத்தைப் பெற்றன"*[2] *என்று குறிப்பிடும் கருத்தும் எண்ணிப்பார்க்கத்தக்கது.*

> *"ஐந்திணைகளில் மலையும் காடும் திரிந்ததன் விளைவே பாலை என்பதால், பழந்தமிழர் 'பாலை' என்பதைத் தனிப்பொருளாக, நிலமாகக் கொள்ளவில்லை"*[3]
>
> *"நிலத்தை நான்கு வகையாகப் பகுத்து, நானிலம் என்று வழங்கும் மரபு உண்டு.... நால்வகை நிலங்களுள், மழையின்மையால் வறட்சியுற்றுக் கெடுவன குறிஞ்சியும் முல்லையும் ஆகும். அவ்வாறு கெட்ட நிலையில் அவை பாலை எனப்படும்"*[4]
>
> *நிலத்தைக் குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என நான்கு வகையாகப் பிரிப்பது தமிழ் இலக்கிய மரபு.*[5]
>
> *"பாலைக்குத் தனியாக நிலமில்லை. முதுவேனிற் காலத்தில் காடும் மலையும் வளம் பிரிந்த வறண்ட நிலையே பாலை எனப்படும். பாலை – பிரிவு. வளம் பிரிந்ததால் அப்பெயர் பெற்றது. அக்கால நிலங்களே பாலைநிலம் எனப்படும். இதனாலேதான் தமிழகம் நானிலம் எனப்பட்டது"*[6]
>
> *"நிலம் நால்வகையாகப் பிரிக்கப்பட்டது காடுறையுலகம், மைவரை (மலை) உலகம், தீம்புனல் உலகம், பெருமணல் உலகம் என்பனவாக முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லப்பட்டன. உலகம் இந்நால்வகை இயற்கைப் பிரிவினுள் அடங்கிவிடுகின்றது. பாலையின் தோற்றம் இயற்கையன்று. நிலைத்தலும் அன்று. சோலை நிலம் பாலையாவதும், பாலை நிலம் சோலையாவதும் என்றும் நிகழக்கூடியனவே. ஆதலின் ஆசிரியர் பாலையை நிலப்பகுப்பினுள் சேர்த்திலர். இப்பிரிவு தமிழ்நாட்டுக்கு மட்டும் உரியதன்று; உலகத்திற்கே உரியது என்பதனை*

---

[1] *சிலம்பு. காடுகாண் காதை, 64-66*
[2] *தனிநாயக அடிகள், நில அமைப்பும் தமிழ்க் கவிதையும், ப. 85*
[3] *N. Sanjeevi, Geography – A prime Factor in Ancient Tamil Poetry (Annals of Oriental Research of University of Madras) p-2.*
[4] *மு. வரதராசன், இலக்கிய மரபு, பக். 11-12*
[5] *மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 212*
[6] *புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப. 64*

உணர்த்தவே காடுறை உலகம், மலை உலகம் என்றும் குறிப்பிட்டனராதல் வேண்டும்"[1]

"நீரற்று வறண்டு போன நிலப்பகுதியே பாலைநிலம். தொல்காப்பியர் பாலைக்குத் தனிநிலம் குறிக்கவில்லை. முல்லையிலும் பாலை தோன்றலாம்; குறிஞ்சியிலும் பாலை தோன்றலாம்; மருதத்திலும் பாலை தோன்றலாம்; நெய்தலிலும் பாலை தோன்றலாம்; வளம் பொய்த்து வறண்டு போன எந்த நிலத்திலும் பாலை தோன்றும்"[2]

"பாலைக்கு நிலமே இல்லை என்று கொள்ளாது, அது மற்றை நால்வகை நிலத்திற்கும் உரியதென்றே கொள்ளவேண்டும் என்பது தொல்காப்பியர் கருத்து"[3]

மேற்குறித்த அறிஞர் பெருமக்களின் கருத்தும் தமிழ் நிலப்பரப்பில் பாலை நில அமைப்பை விளக்குகின்றன.

குறிஞ்சி, முல்லை நிலங்கள் மழைப் பொழிவின்மையின் காரணமாக வளங்குன்றி தோன்றும் நிலப்பரப்பு பாலை எனப்படுகின்றது. இந்நிலப்பகுதியில் மக்கள் வாழ்தல் மிகுந்த துன்பம் நிறைந்ததாகக் காணப்பட்டது. இந்நிலப்பகுதிகளில் வேளாண் உற்பத்தி நடைபெறுவதில்லை. கொள்ளைப் பொருள்களும், வேட்டையாடுதலுமே இப்பகுதிவாழ் மக்களின் வாழ்வாதாரமாக இருந்தன. இந்நிலப்பகுதிகளில் எயினர், வேடர், மழவர், ஆறலை கள்வர் எனப்பட்ட மக்கள் வாழ்ந்தனர்.

இந்நிலப்பகுதி மிகுந்த வெப்பம் நிறைந்ததாகவும், நீரற்றதாகவும், நிழலற்றதாகவும், விலங்குகள் உண்ண உணவின்றித் துன்பப்படும் நிலையினதாகவும், கொடிய காட்டுவிலங்குகளின் நடமாட்டமுடையதாகவும், உயிர் இரக்கமற்ற மனிதர்கள் வாழும் பகுதியாகவும் இருந்ததைச் சங்கப் பாடல்கள் சித்தரிக்கின்றன.

பாலைநிலம் குறிஞ்சி முல்லை நிலங்களின் திரிபு என்பதைச் சங்கப் பாடல்களே பல இடங்களில் நிரூபித்துக் காட்டுகின்றன. "குன்ற வைப்பின் கானம்"[4], "உறை துறந்திருந்த புறவு"[5], "பெரு மலை அருஞ் சுரம்"[6], "வெம் மலை அருஞ் சுரம்"[7], "மழை கரந்து ஒளித்த கழை திரங்கு அடுக்கம்"[8] எனவரும் பாடலடிகளை மேற்குறித்த கருத்துக்குச் சான்றுகாட்டலாம்.

சூரியனின் வெம்மையினால் இப்பகுதி பொலிவிழந்து தாவரம், விலங்கு, பறவை, மனிதன் என அனைத்து உயிரினங்களும் துன்பப்படும் நிலையினதாக இருந்ததை, "வெம் மலை அருஞ் சுரம்"[9], "வெஞ்சுரம்"[10], "கடுங் கதிர் திருகிய, வேய்

---

[1] சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, பக். 133-134
[2] சாமி. சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், பக். 19-20
[3] வே. முத்துசாமி ஐயர், தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, ப. 14
[4] நற். 137:9
[5] நற். 164:1
[6] நற். 184:3
[7] நற். 277:11
[8] அக. 347:10
[9] நற். 277:11
[10] அக. 365:9

*பயில் பிறங்கல்''*[1], *''வெம் முனை அருஞ் சுரம்''*[2], *''வேனில் நீடிய சுரன்''*[3] *எனவரும் சங்கப் பாடலடிகள் காட்டுகின்றன.*

*இப்பாலை நிலங்கள் நீரின்றித் துன்பம் தருவனவாக இருந்ததை, ''அருவி ஆன்ற நீர் இல் நீள் இடை''*[4], *''நெடுங் கயம் புரிந்த நீர் இல் நீள் இடை''*[5], *''மழை பெயல் மறந்த கழை திரங்கு இயவு''*[6], *''ஈரம்இல் வெஞ்சுரம்''*[7], *''யானை கைதோய்த்து உயிர்க்கும் வறுஞ்சுனை''*[8] *எனவரும் அடிகள் சுட்டிக் காட்டுகின்றன.*

*நிழலின்றி உயிர்களுக்குத் துன்பம் தருவதாய் இருந்த நிலையினை, ''நெடு நீர் அற்ற நிழல் இல் ஆங்கண்''*[9], *''காடே, நிழல் கவின் இழந்த அழல் கவர் மரத்த''*[10], *''நிழற் கவின் இழந்த நீர் இல் நீள் இடை, அழல் அவிர் அருஞ் சுரம்''*[11] *எனவரும் அடிகள் சான்றுரைக்கின்றன.*

*கொடிய விலங்குகள் திரியும் நிலையினதாக இருந்ததை, ''புலி வழங்கு அத்தம்''*[12], *''இரும்புலி வழங்கும் சோலை''*[13], *''புலி எதிர் வழங்கும் வளி வழங்கு ஆர் இடை''*[14] *எனச் சுட்டுவதுகொண்டு தெளியலாம்.*

*பாலை மக்களின் புழங்குவெளிகளாகக் குரம்பை, வியல்நகர், மன்றம், புலம், வைப்பு, பொதியில், குறும்பு, பாக்கம், சிறுகுடி, மூதூர், சீறூர் எனப்பட்ட பல பெயர்களில் அமைந்த இடங்கள் இருந்ததை,*

> *''கல் சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பை''*[15], *''அல்குபதம் மிகுத்த கடிஉடை வியல்நகர்''*[16], *''முனை புலம் பெயர்த்த புல்லென் மன்றம்''*[17], *''கோடை நீடலின், வாடு புலம்''*[18], *''நீர் இல் வைப்பு''*[19], *''குன்ற வைப்பு''*[20], *''தொல் மூதாலத்துப் பொதியில்''*[21], *''வில்லோர் குறும்பு''*[22], *''கல் சேர்பு இருந்த சில் குடிப் பாக்கம்''*[23], *''தொன்று இயல் சிறுகுடி''*[24], *''நெடுங் கொடி நுடங்கும் நியம மூதூர்''*[25], *''புன் தலை மன்றத்து அம் குடிச் சீறூர்''*[26] *எனவரும் பாலைத்திணைப் பாடலடிகள் காட்டுகின்றன.*

*மக்கள் புழங்கும் வழியிடங்களாக, ஆறு, சிறுநெறி, இயவு, நீளிடை, ஆரிடை, கவலை, அழுவம், அத்தம், அதர் எனப்பட்ட இடங்கள் காணப்பட்டதை,*

> *''நாம் வெங் காதலர் சென்ற ஆறு''*[27], *''களிறு வழங்கு சிறுநெறி''*[28], *''குன்றகச் சிறு நெறி''*[29], *''வெந்துகள் இயவு''*[30], *''அழல் அவிர் நீள் இடை''*[31], *''ஆறு செல் வம்பலர் நீள் இடை''*[32], *''போக்கு அருங் கவலை''*[33], *''அருஞ் சுரக் கவலை''*[34], *''வேய் பயில் அழுவம்''*[35], *''ஆள் இல் அத்தம்''*[36], *''அரண் இல் சேய் நாட்டு அதர்''*[37], *''கழை கவின் அழிந்த கல் அதர்ச் சிறுநெறி''*[38] *எனவரும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.*

---

[1] *அக. 17:15*
[2] *நற். 224:11*
[3] *அக. 201:19*
[4] *நற். 137:5*
[5] *நற். 148:4*
[6] *அக. 245:5*
[7] *அக. 277:12*
[8] *அக. 119:18-19*
[9] *நற். 105:5*
[10] *நற். 256:3*
[11] *அக. 213:9-10*
[12] *நற். 107:6*
[13] *நற். 274:8*
[14] *நற். 174:4*
[15] *அக. 129:6*
[16] *அக. 49:14*
[17] *அக. 157:11*
[18] *அக. 377:1*
[19] *குறு. 211:7*
[20] *நற். 137:9*
[21] *குறு. 15:2*
[22] *அக. 261:14*
[23] *அக. 187:12*
[24] *அக. 75:7*
[25] *அக. 83:7*
[26] *அக. 321:10*
[27] *நற். 186:10*
[28] *குறு. 329:3*
[29] *அக. 205:22*
[30] *நற். 66:5*
[31] *நற். 29:2*
[32] *அக. 95:8*
[33] *அக. 35:10*
[34] *அக. 53:12*
[35] *அக. 327:19*
[36] *நற். 174:2*
[37] *நற். 384:6*
[38] *நற். 333:2*

*பாலை நிலத்தின் தன்மையினைக் கீழ்வரும் நற்றிணை, அகநானூற்றுப் பாடல்களின் நுட்பமான வர்ணனைகளைக்கொண்டு விளங்கிக்கொள்ளலாம்.*

*மழை பெய்யாது ஒழிந்ததால் நிற்கவும் நிழலிடமற்ற மூங்கில்களும் வாடி வதங்கிய நீரற்ற வெம்மையான பரற்கற்கள் நிரம்பிய பாலைநில வழி. அவ்வழியில் செல்பவர்களைக் கொல்வதற்காக ஆண்புலி காத்திருக்கும். ஆறலை கள்வர் வழியிடைச் செல்வோரை அம்பு எய்து கொல்வர். கொல்லப்பட்ட பிணங்களைக் கழுகுகளும் நரிகளும் தின்னும். பருந்துகள் பிணங்களின் கண்மணிகளைப் பெயர்த்தெடுக்கும். கறையான் புற்றுக்களில் பாம்பு வாழும். அப்புற்றுகளில் உள்ள புற்றாஞ் சோறு முதலியவற்றைக் கரடி உறிஞ்சி இழுக்கும். நீரைக் காணாது கலைமான் வருத்தமுறும். சுனைகள் வற்றிக் காணப்படும். மூங்கில்கள் வெப்பத்தால் வெடித்துச் சிதறும். கானல்நீரை நீரென நம்பி அதனைப் பருக விலங்குகள் ஓடி அலையும். சூறாவளிக்காற்று சுழன்று அடிக்கும். புலியுடன் சினங்கொண்டு போர்செய்த யானைகள் தருக்கித் திரியும்.[1]*

### *1.3. உணவு*

*ஒரு சமூகத்தின் பண்பாட்டை அறிந்துகொள்ள உதவும் பல்வேறு கூறுகளுள் உணவும் ஒன்று. உணவுப் பண்பாட்டைத் தீர்மானிப்பதில் புவியியல் கூறுகளான நீர், நிலவள ஆதாரங்கள், சமூகப் படிநிலை, பொருளாதாரநிலை என்பனவும் முக்கியப் பங்காற்றுகின்றன.*

*ஒவ்வொரு பகுதியிலும் வாழ்ந்த மக்கள் தங்கள் உணவுத்தேவையை வேளாண்மையின் மூலம் கிடைத்த உணவுப்பொருள்களைக் கொண்டும்; விலங்கு வேட்டையில் கிடைத்த பல்வேறு விலங்குகளின் ஊனினைக் கொண்டும்; வெவ்வேறு நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் தங்களுக்குள் செய்துகொண்ட பண்டமாற்றுப் பொருள்களைக் கொண்டும்; நிறைவேற்றிக் கொண்டனர்.*

#### *1.3.1. குறிஞ்சி நில மக்களின் உணவு*

*மலைப் பகுதிகளில் வாழும் குறவர்கள் மலையின் சமதளப் பரப்புகளில் காட்டினை எரித்துத் தினைப் புனத்தை உருவாக்கினர். அவற்றில் தினை விதைத்தனர் மேலும், தேனெடுத்தல்; கிழங்கு அகழ்தல்; வேட்டையாடுதல்; காய்கனிகளைச் சேகரித்தல் போன்ற அன்றாட உணவுத் தேவைக்கான பணிகளில் ஈடுபட்டனர். குறிஞ்சிநில மக்களின் இத்தகைய உணவுப் பண்பாட்டை அவர்கள் வாழ்ந்த பகுதியின் நில வளமும் நீர் வளமும் தீர்மானித்தது. குறிஞ்சி நில மக்களின் உணவு முறையும் பண்பாடும் குறித்து அறிந்துகொள்ள குறிஞ்சித்திணைப் பாடல்கள் பெரிதும் உதவுகின்றன.*

*நன்னனது நாட்டிற்குச் செல்லும் வழியில் உள்ள குறிஞ்சி, முல்லை, மருதம் ஆகிய நிலப்பகுதிகளில் முசுண்டை, எள், தினை, வரகு, அவல் இடிப்பதற்கு ஏற்ற மூங்கில்நெல், வெண்சிறுகடுகு, இஞ்சி, கவலைக்கிழங்கு, மலைவாழைப் பூ மற்றும் காய், பெருமூங்கில் நெல், நாவல் பழம், கூவைக் கிழங்கு, மாங்கனி, ஆசினிப் பலா, ஐவனநெல், வெண்ணெல், கரும்பு ஆகியன விளைந்தன.[2] என மலைபடுகடாமில் வரும் குறிஞ்சிநில மக்கள் சமூகத்தைப் பற்றிய விவரிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது.*

---

[1] *நற். 29:1-5, 148:4-11, 164, 224:8-11, 325:1-6, 333:1-5, 352:1-9; அக. 1:7-16, 215:7-17, 241:5-11, 247:3-13, 295:1-10, 327:7-19*

[2] *மலை. 95-144*

கானவர், யானையின் தந்தத்தைக் காவு மரமாகக்கொண்டு, பனை ஓலையால் செய்த வட்டிலில், தேன், கிழங்கு, பன்றியின் தசை போன்றவற்றைச் சுமந்து வருவர்.[1] அவற்றையும், நெய்யில் பொரித்து வெந்த பருத்த தசையையும், தினையரிசிச் சோற்றையும் கூத்தர்கள் உணவாகப் பெறலாம்[2] என்று மலைபடுகடாம் குறிப்பிடுவதுகொண்டு, மலை சார்ந்த மக்களின் உணவு முறைகளும் அவர்களது விருந்தினரைப் போற்றும் பண்பும் புலப்படுகிறது.

மலைப்பகுதிகளில் தினை விளைவித்து[3] அத்தினையினை உணவாகக் கொள்ளும் குறவர்கள், பெண்நாயினால் கௌவிக் கொண்டுவரப்பட்ட உடும்பின் தசை, மான், பன்றி ஆகியவற்றின் இறைச்சி, மூங்கில் குழாய்க்குள் நிரப்பப்பெற்று முற்றிய தேனால் செய்யப்பட்ட கள், நெல்லால் சமைக்கப்பட்ட கள், பலாக்கொட்டையின் மாவும் புளியம்பழமும் மோரும் பெய்து ஆக்கிய மூங்கிலரிசிச்சோறு,[4] பன்றியின் தசை[5] ஆகியவற்றை உணவாகக் கொண்டனர். நற்றிணைப் பாடலொன்று, 'ஆட்டிறைச்சியுடன் நெய் கலந்தும். வெண்மையானச் சோற்றில் வெள் எலியின் சூட்டிறைச்சியைச் சேர்த்தும் சமைக்கப்பட்ட உணவினைக் குறித்து குறிப்பிடுகிறது.[6]

குறிஞ்சிநிலக் கானவர்கள், உண்பதற்கு இனிய பலா உள்ளிட்ட பழங்களையும், தினை, தேன், சேம்பு, மஞ்சள், கரும்பு, விலங்கின் தசை, கிழங்கு; அவரை விதை, மூங்கிலரிசி, அரிசி, ஆகியவற்றால் ஆக்கிய புளிங்கூழ்; கறி விரவிய சோறு; வெல்லம் கலந்து இடித்த தினை மாவு[7] ஆகியவற்றையும், தாம் அம்பெய்து கொன்ற பன்றி[8], முள்ளம்பன்றி[9] ஆகியவற்றையும் உணவாகக் கொண்டனர்.

குறிஞ்சி நிலத்தில் தோரை நெல், வெண்சிறு கடுகு, ஐவன நெல், இஞ்சி, மஞ்சள், மிளகு ஆகியன விளைந்தன.[10] பாரியின் பரம்பு மலையில் வாழும் மக்களுக்கு இயற்கையாகவே விளைந்த மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் ஆகிய நான்கும் உணவாகப் பயன்பட்டன.[11] மேலும், பாரியின் நாடு செம்புற்றின் ஈசலை, இனிய மோரோடு கூட்டிச் சமைத்த புளிக்கறியை உடையதாக விளங்கியது.[12]

தினைக் கொல்லையை உழும் குறவர், தம் வீட்டிற்கு வரும் விருந்தினர்களுக்குத் தினைமாவினை அளித்தனர்.[13] காட்டில் வாழும் கானவர், காட்டு நாய்கள் சூழ்ந்துகொன்ற பன்றியின் இறைச்சியைச் சுற்றத்தோடு உண்டனர்.[14] இவர்கள் அம்பு எய்து கொணர்ந்த முள்ளம் பன்றியின் கொழுத்த தசைப் பகுதியைக் கிழங்கோடு கலந்து தேன் மணம் கமழும் கூந்தலை உடைய கொடிச்சி அக்குடியில் வாழுகின்ற பலருக்கும் பகுத்துத் தந்தாள்.[15] எனவரும் கருத்துக்கள் குறிஞ்சிநில மக்களின் உணவுப் பண்பாடு குறித்து அறிய துணைநிற்கிறது.

### 1.3.2. முல்லை நில மக்களின் உணவு

நீர் வளம் குறைந்த காடுசார்ந்த முல்லை நிலப் பகுதிகளை 'வன்புலம்' என்று சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன.[16] இந்நிலப்பகுதியை வாழிடமாகக்கொண்டு கோவலர், ஆயர், அண்டர், இடையர் என்ற பெயர்களால் அழைக்கப்பட்ட முல்லை

[1] மலை. 152-157
[2] மலை. 161-169
[3] மலை. 203-210
[4] மலை. 170-185
[5] மது. 294-295
[6] நற். 83:5-6
[7] மலை. 282, 315-318, 326-345, 425, 432-445
[8] மலை. 242-252
[9] நற். 285:2-4
[10] மது. 286-290
[11] புற. 109:3-8
[12] புற. 119:3
[13] பதி. 30:22-24
[14] நற். 82:7-11
[15] நற். 85:7-10
[16] புற. 42:17; பெரு. 206

*நில மக்கள் ஆடு, மாடுகளை மேய்க்கும் தொழிலை மேற்கொண்டனர். அதோடு தினை, எள், வரகு முதலியவற்றைத் தங்கள் நிலப்பகுதிகளில் பயிரிட்டனர்.*[1] *இவர்களின் பொருளாதாரம் பால்படு பொருட்களிலிருந்தே மிகுதியாகக் கிடைத்தது.*

*ஆயர்களின் உணவில் தினைச்சோறும், வரகுச்சோறும் முக்கியமானவை. தயிர், மோர், நெய், ஆகியனவும், மோர் விற்றுப்பெற்ற நெல்லும், பாலும்*[2]*, பாற்சோறும்*[3] *அவரை விதையின் பருப்பைப் போட்டுத் துழாவிய சுவையுடைய மூரல் எனப்பட்ட உணவும்*[4] *சிறந்த உணவாகக் கருதப்பட்டது.*

*வன்புலப் பகுதியில் வாழ்ந்த வேட்டுவர்கள், உடும்பைக் கொன்றும் வரியுடைய தவளையைத் தோண்டி எடுத்தும் நீண்ட கோடுகளை உடைய புற்றுக்களை வெட்டி அங்கு வாழும் ஈசல்களை மண்ணைத்தோண்டி எடுத்தும் பகலில் முயலை வேட்டையாடியும், கள்ளுண்டும் தங்கள் உணவுத் தேவையை நிறைவேற்றிக் கொண்டனர்.*[5]

*செம்மறியாட்டின் பழுப்பு நிறம் வாய்ந்த தயிரை உலை நீராக்கி, வரகு அரிசியை அதிற்போட்டு, ஈயலை அதில் இட்டுச் சமைத்த புளிப்புடைய சோற்றில் பசுவின் வெண்ணெய்யினைப் பெய்து உண்டனர். புளிப்புச் சுவையுடைய களாப்பழங்களும், விளாம்பழங்களும் உண்ணப் பயன்பட்டன.*[6]

### *1.3.3. மருதநில மக்களின் உணவு*

*பல்வேறுவகையான பயிர்களையும் பயிரிடுவதற்கு ஏற்ற நீர்நில வளங்களையும் கொண்டு நிலையான வருவாயைத் தரக்கூடிய நிலப்பகுதியாக மருதநிலம் காணப்பட்டது. இத்தகைய வளமான பகுதியினைச் சங்கப் புறப்பாடலொன்று 'மென்புலம்'*[7] *எனக் குறிப்பிடுகிறது. இப்பகுதியில் வாழ்ந்த மக்கள் தன்நிறைவான வாழ்க்கை வாழ்ந்தனர். எனவே, இத்தகைய மருதநிலத்து ஊரினை, "தொல் பசி அறியாத் துளங்கா இருக்கை மல்லல் பேர் ஊர்"*[8] *எனப் பெரும்பாணாற்றுப்படை விதந்துரைக்கின்றது.*

*மருத நிலப்பகுதி வளமுடையதாகக் காணப்பட்டதற்கு அப்பகுதியில் இருந்த ஆறுகளும் குளங்களுமே முக்கிய காரணமாக இருந்தன. இதனைச் சோழநாட்டில் காவிரி பாய்வதால் அந்நாட்டில் ஒருவேலி நிலம் ஆயிரங்கலமான செந்நெல்லை விளைவித்ததாகக் குறிப்பிடும்,*

> *"சாலி நெல்லின், சிறை கொள் வேலி,*
> *ஆயிரம் விளையுட்டு ஆக,*
> *காவிரி புரக்கும் நாடு கிழவோனே"*[9]

*என்ற பொருநராற்றுப்படை அடிகளால் அறிந்துகொள்ளலாம்.*

*நெல்லும், கரும்பும் இவர்களின் முக்கியமான விளைபொருள்.*[10] *எனவே இவர்களின் அன்றாட உணவில் நெல்சோறு முதன்மையானதாக விளங்கியது. மருதநிலம் நீர்வளம் நிறைந்த ஆறுகளையும், குளங்களையும் கொண்டிருந்ததால்*

---

[1] *மது. 271-272; நற். 121:1-2*
[2] *பெரு. 155-168*
[3] *பெரு. 172; மலை. 417*
[4] *பெரு. 192-196*
[5] *நற். 59:1-5*
[6] *அக. 394:1-6*
[7] *புற. 42:18*
[8] *பெரு. 253-254*
[9] *பொரு. 246-248*
[10] *பொரு. 193-194; பதி. 19:17-23, 30:14-16; பட். 240; நற். 210*

மீன் மக்களின் அன்றாட உணவில் முக்கிய இடம் பெற்றிருந்தது. இத்தகைய மீன்களை வலைஞர்கள் கழனிகளிலும், மடுக்களிலும், பொய்கைகளிலும் பிடித்து அவற்றை விலைகூறி விற்ற செய்தியினை, “வள்ளை நீக்கி வயமீன் முகந்து, கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்”[1] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. மேலும், இவர்கள் குடியிருப்பில் கள்ளும், பச்சைமீன் சுட்ட தசையும் விற்கப்பட்டது.[2]

வலையர் வாளை, வரால்மீனின் தசைத் துண்டுகளையும், கள்ளையும் நெற்போர்களை அடித்துக் கடாவிடும் களத்திலுள்ள உழவர்களுக்குக் கொடுத்து நெல்லைப் பெற்றுக்கொண்டனர். கூத்தர்களுக்கு அத்தகைய களங்களில் கள்ளையும், மீன் விரவிய சோற்றையும் தந்து உழவர்கள் மகிழ்ந்தனர்.[3]

பசி, வறுமை என்பதை அறிந்திராத உழவர் குடியிருப்புகளில் நெல்சோறும், கோழிப் பெடையினாற் சமைத்த பொரியலும்.[4] அரிசியாலாக்கிய சோற்றினை நண்டினது கலவையோடு பாணர்க்கு உண்ணத் தந்தனர்.[5] இல்லத் தலைவி ஒருத்தி உடும்பின் தசையைப் பெய்து சமைத்த தயிரோடு கூடிய கூழையும் பிற உணவுப்பொருளையும் பாணருக்கும் அவர்தம் சுற்றத்திற்கும் விருந்தாக வழங்கினாள்[6] என்கிறது புறநானூறு.

உழவர் மீன் குழம்பை அரிசிச் சோற்றோடு உண்டனர்.[7] மருதநில பாணர் மனைகளில் மீன் உணவு சமைக்கப்பட்டது.[8] கழனியில் விளைந்த நெல்லைக்கொண்டு மகளிர் பச்சை அவலை இடித்தனர்.[9] உழவர் பிள்ளைகள் பழஞ்சோறு, அவல் ஆகியவற்றை உண்டனர்.[10]

நாரைகள் ஆமையின் வயிற்றை உடைத்து உண்ட தசையின் மிச்சத்தை வயலில் பறை கொட்டுபவர்கள் உண்டனர்.[11] வயல்களைக் காக்கின்ற காவலர்கள் வயல் ஆமைகளின் முதுகிலே நத்தைகளை உடைத்து, அவற்றின் தசையினை உண்பர்.[12] உழவர் வாளை, ஆமை முதலியவற்றின் தசைகளோடு, கரும்பின் சாற்றையும் விருந்தினர்க்குக் கொடுத்தனர்.[13]

விடியற் காலையில் மீன் வேட்டத்தில் கிடைத்த மீனைக் கள்ளுக்கு விலையாகக் கொடுத்து அதை உண்டு களித்திருக்கும் கணவன்மார்க்கு, பாண்மகளிர் ஆம்பல் இலையில், பிரம்பின் இனிப்புடன் கூடிய புளிப்பினையுடைய திரண்ட பழத்தினைப் பெய்து ஆக்கிய சோற்றைத் தந்தனர்.[14]

உழவர் நெற்களத்தின்கண் தம்மை நாடிவரும் இரவலர்களுக்கு நெல்லினை வாரிவழங்கினர்.[15] அத்தகைய இரவலர்க்கு உழவர் வாளைமீனின் பொரியலைக் கள்ளுடன் சேர்த்து வழங்கினர்[16] என மலைபடுகடாமும் குறிப்பிடுகிறது.

காவிரி பாயும் சோழநாட்டு உழவர்கள் வெண்ணெல் அரிசியால் ஆக்கிய சோற்றை வெள்ளுலையிற் பெய்து மாங்கனியைப் பிசைந்து செய்த புளிக்குழம்பு, சுறாமீன் இறைச்சி, வள்ளைக் கீரை, பாகற்காய் ஆகியவற்றோடு கள்ளையும்

---

[1] மது. 255-256
[2] பெரு. 275-282
[3] மலை. 454-465
[4] பெரு. 253-256
[5] சிறு. 194-195
[6] புற. 326
[7] நற். 60:1-5
[8] மது. 268-269
[9] பதி. 29:1-2
[10] பெரு 223-226
[11] ஐங். 81:1-2
[12] நற். 280:6-7
[13] புற. 42:12-17, 249:1-7; பெரு. 262
[14] அக. 196:1-7
[15] அக. 30:8-9
[16] மலை. 454-464

உண்டனர். களமர் எனப்பட்ட உழுதொழில் செய்வோர் விடியற் காலையில் பழஞ்சோற்றையும் உண்டனர்.[1]

### 1.3.4. நெய்தல் நில மக்களின் உணவு

கடற்கரையின் அருகிலுள்ள பெருமணற்பகுதிகளில் வாழ்விடத்தை அமைத்துக்கொண்டு கடல் வளத்தையே தமது வாழ்வாதாரமாகக்கொண்டு வாழ்ந்த பரதவர்கள் மீன் பிடித்தலையும் உப்புவிளைத்தலையும் தொழிலாகக் கொண்டவர்கள். 'பரதவப் பெண்கள் மீன்களை வட்டிகளில் சுமந்துசென்று அவற்றை நெல்லுக்கு விலையாகக் கொடுப்பர்'[2] என்றும், 'பரதவர் கள்ளையும், குழல்மீன் சூட்டையும் தர பாணர்கள் உண்டு மகிழ்தனர்'[3] என்றும், 'பரதவர்க் குலச் சிறுவர்கள் இறால் மீனின் சூட்டிறைச்சியைத் தின்றும் மற்றொருசாரார், வயலின்கண் உள்ள ஆமையைப் புழுக்கின இறைச்சியைத் தின்றும் மகிழ்ந்திருந்தனர்'[4] என்றும் குறிப்பிடும் செய்திகள் நெய்தல் நில பரதவ மக்களின் உணவுப் பண்பாட்டை அறியத் துணை நிற்கின்றன.

புகார் நகரின் தெருக்களில் மீனை வெட்டி, இறைச்சியை அறுத்து, அவற்றின் தசைகளைப் பொரிக்கும் இடங்களில் ஆரவாரம் மிக்கதாய்க் கொடிகள் நடப்பட்டிருந்ததை, "மீன் தடித்து, விடக்கு அறுத்து, ஊன் பொரிக்கும் ஒலி முன்றில்"[5] எனக் குறிப்பிடுகிறது பட்டினப்பாலை.

### 1.3.5. பாலை நில மக்களின் உணவு

மழைப் பொழிவின்மையால் வறட்சியுற்ற குறிஞ்சி, முல்லை நிலங்கள் பாலையாயின. நீரும் நிழலுமற்று வளம் குன்றியிருக்கும் இப்பகுதிகளில் எவ்வித உணவு உற்பத்தியும் நடைபெறுவதில்லை. இங்கு மறவர், எயினர், வேடர் எனப்பட்ட மக்கள் வாழ்ந்தனர்.

இவர்களின் தொழில்களாக வேட்டையாடுதல், வழிப்பறி செய்தல், ஆநிரை கவர்தல் முதலியனவாக இருந்தன. எயிற்றியர் எறும்புகள் சேகரித்த புல்லரிசிச் சோற்றையும், கருவாட்டையும் உண்டனர். அவற்றை பாணர்க்குத் தேக்கிலையில் உண்ணத் தந்தனர்.[6] புளிங்கறி இட்ட சோறும், ஆமானின் சூட்டிறைச்சியும் இவர்களின் உணவாக இருந்தது.[7] எயினர் ஈந்தின் விதை போன்ற சிவந்த சோற்றையும், நாய்கள் கடித்துக் கொண்டுவந்த முட்டையினை உடைய உடும்பின் பொரியலையும் உணவாக உண்டனர்.[8] மேலும் எயினர்கள் தம்மைநாடி வரும் விருந்தினர்க்கு முள்ளம்பன்றித் தசையுடன் கூடிய சோற்றினை அளித்தனர்.[9]

பாலைநில வேட்டுவர் காட்டுப்பசுவின் இறைச்சியையும், யானைத் தந்தத்தையும் கள்ளுக்கு விலையாகக் கொடுத்தனர்.[10] பாலைநிலக் கானவர் பன்றியையும், வலை கொண்டு பிடித்த முயல் போன்றவற்றையும் சுற்றத்தோடு கூடி உண்டனர்.[11]

பாலைநில ஆறலை கள்வரும், உப்பு விற்கும் உமணரும் யானையின் ஊனினை உணவாகக் கொண்டதை, 'புலியால் கொன்று தின்னப்பெற்ற யானையினது எஞ்சிக்கிடந்த ஊனை ஆறலைப்போர் கோலிற்கோத்து எடுத்துச்

---

[1] புற. 399:1-12
[2] அக. 32:1-5
[3] சிறு. 158-163
[4] பட். 61-64
[5] பட். 176-177
[6] பெரு. 95-105
[7] சிறு. 175-177
[8] பெரு. 130-133
[9] புற. 177:13-16
[10] பதி. 30:9-12
[11] பெரு. 106-117

சென்றது போக எஞ்சியதைத் தீக்கடைகோலாலாக்கிய சிறு தீயில் வதக்கி, சோற்றின் உலையில் கூட்டி உணவு சமைத்தனர்'[1] என அகநானூறு சுட்டுவதைக் கொண்டு அறியமுடிகிறது.

வேடர்கள் பறவைகளின் ஊனைத்தின்று புலால் நாற்றம் நாறுகின்ற வாயினை உடையவர்களாவும், இவர்களின் பிள்ளைகள் பருத்திச் செடிகள் அடர்ந்து வளர்ந்துள்ள பகுதிகளில் எலிகளை வேட்டையாடுபவர்களாகவும் இருந்ததை புறநானூறு[2] குறிப்பிடுகிறது.

வேட்டுவர் உடும்பு, தவளை, ஈசல், முயல், மான், யானை போன்றவற்றை வேட்டையாடினர்.[3] பறவைகளைப் பிடிப்பதற்காக வலைகளைப் பயன்படுத்தினர்.[4] புறாக்களை வலைவிரித்துப் பிடித்தனர்.[5] வேட்டைக்குப்பின் மிகுதியாகப் பருகிய கள்ளின் மயக்கத்தில் செருக்குற்றுக் கிடந்தனர்.[6] கள்ளினைப் பெறுவதற்கு வேட்டுவர் தாம் வேட்டையாடிய காட்டுப்பசுவின் இறைச்சியோடு யானையின் தந்தத்தையும் கடைத்தெருவிற்கு எடுத்துச் சென்று தாம் வாங்கும் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பர்.[7]

வேட்டுவர்கள் தாங்கள் வேட்டையாடிய மான் தசையை ஆயமகளிடமும் உழத்தியரிடமும் கொடுத்து அதற்குமாற்றாகத் தயிரினையும், வெண்ணெல்லினையும் பெற்றுச் செல்வர்[8] என்றும், வேடர் குலத் தலைவனான நள்ளி மான் கூட்டத்தை வேட்டையாடி அதன் வெள்ளிய நிணமுடைய இறைச்சியைத் தீயில் சுட்டு இரவலர்க்குத் தந்தான்[9] என்றும், வல்வில் ஓரி தன்னை நாடி வந்த இரவலர்க்கு மான் தசையையும், மதுவையும், தந்து அனுப்பினான்[10] என்றும் புறநானூறு வேடர்களின் உணவைப்பற்றிக் குறிப்பிடுகிறது.

பசுக்கூட்டத்தைக் கவர்ந்துவந்த வீரர்கள், தாம் கவர்ந்துவந்த பசுக்களுள் கொழுத்த பசு ஒன்றைக் கொன்று அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்துப் பலியிட்டு, அதன் புலாலைச் சமைத்து உண்டனர்[11] என்றும், மழவர் இளைய பசுவினைக் கொன்று அதன் ஊனைத் தின்பர்.[12] என்றும், உப்பு வணிகர் கூட்டம் விட்டொழிந்த கல் அடுப்பில், வலிய வில்லையுடைய மழவர், ஊனைப் புழுக்கி உண்பர்.[13] என்றும் குறிப்பிடப்பட்டுள்ள சங்கப்பாடல் கருத்துக்கள் பாலைநில மக்களின் உணவுமுறை குறித்து அறிய உதவுகின்றன.

### 1.3.6. அந்தணர் உணவு

அந்தணர் நெற்சோறும், வெண்ணெய்யில் வெந்த மிளகுப்பொடியும், கறிவேப்பிலையும் கலந்து சமைத்த மாதுளங்காய்ப் பொரியல், மாங்காய் ஊறுகாய். ஆகியவற்றை உணவாகக் கொண்டனர்.[14]

### 1.3.7. எளியோர் உணவு

ஒருவரின் பொருளாதார நிலையை அவர்கள் உண்ணும் உணவின் வாயிலாகவும் அறியமுடிகிறது. சங்ககாலத்தில் பொற்கலத்தில் உணவு உண்டு வளவாழ்வு வாழ்ந்த மக்களைப்போல் வறுமையில் வாடிய மக்களும் இருந்ததை, 'தம் வறுமை புறத்தார்க்குப் புலனாகாதவாறு கதவடைத்து, கிணைமகள் ஒருத்தி தம்

[1] அக. 169:3-7
[2] புற .324:1-8
[3] நற். 59:1-5; புற. 202:1,214:3-4
[4] நற். 212:1
[5] நற். 189:6-7
[6] நற். 59:1-5
[7] பதி. 30:9-13
[8] புற. 33:1-6
[9] புற .150
[10] புற .152
[11] அக. 309:1-6
[12] அக. 249:12-13
[13] அக. 119
[14] பெரு 305-310

கடும்பசிக்கு ஆற்றாது குப்பையில் நின்ற வேளைக் கீரையை உப்பின்றி வேகவைத்து சுற்றத்தோடு உண்டனர்'[1] எனச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. பிறரிடம் பொருள்பெற்று உண்பதால் மெலிந்த உடலை உடைய பாணர்[2] பசுவின் கன்றை உரித்து உணவாகக் கொண்டனர்.[3]

### 1.3.8. பிற

திருமண விழாவில் உழுந்து கலந்து சமைத்த பொங்கல்,[4] இறைச்சியுடன் சேர்த்து ஆக்கிய நெய்மிக்க வெண்மையான சோறு[5] ஆகியன அனைவருக்கும் வழங்கப்பட்டது.

### 1.3.9. உணவுப் பண்டமாற்று

வெவ்வேறு நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்கள் தங்கள் விளைபொருட்களைத் தங்களுக்குள் பண்டமாற்று செய்து தங்கள் உணவுத் தேவைகளை நிறைவேற்றிக்கொண்டனர். காட்டில் வாழும் வேட்டுவன் மானின் தசையைத் தந்தும், இடைமகள் தயிரைத் தந்தும் உழவர்களிடமிருந்து நெல்லைப் பெற்றுச் சென்றனர்.[6]

ஆய்ச்சியர் மோர், வெண்ணெய் முதவியவற்றைப் பானையில் சுமந்துசென்று விற்று அதன்மூலம் கிடைத்த பொருளைக்கொண்டு தன் சுற்றத்தை உண்பித்ததை, "அளை விலை உணவின் கிளை உடன் அருத்தி"[7] என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. வலைஞர்கள் கழனிகளிலும், மடுக்களிலும், பொய்கைகளிலும் மீன்களைப் பிடித்து அவற்றை விலைகூறி விற்றனர்.[8] வலையர் வாளை, வரால்மீனின் தசைத் துண்டுகளையும், கள்ளையும் களத்திலுள்ள உழவர்களுக்குக் கொடுத்து நெல்லைப் பெற்றுக்கொண்டனர்.[9]

பாணர்குடிப் பெண்கள், உழத்தியரிடம் கெடிற்று மீனைக் கொடுத்துப் பெரும் பயற்றையும்,[10] மீனைக் கொடுத்து நெல்லையும்[11] பெற்றுச் சென்றனர். பரதவப் பெண்களும் மீன்களை வட்டிகளில் சுமந்துசென்று அவற்றை நெல்லுக்கு விலையாகக் கொடுத்தனர்.[12]

வேட்டுவன் மான் தசையை ஆயமகளுக்குக் கொடுத்துத் தயிரையும், உழவர்க்குக் கொடுத்து நெல்லையும் பெற்றுச் சென்றான்.[13] போர்த் தொழில் செய்யும் வேட்டுவர் வழிப்போக்கரைக் கொள்ளையிட்டுப் பெற்ற பொருளைக் கள்ளுக்கு விலையாகத் தந்தனர்.[14]

### 1.3.10. உணவாகப் பயன்பட்ட மலர்கள்

பல்வேறு வகையான மலர்கள் மக்களுக்கு உணவாகப் பயன்பட்டன. ஆம்பல் மலரை ஒருவகைப் பக்குவம் செய்து, களியாக்கிச் சோற்றுடன் உண்டனர். கைம்பெண்டிர் ஆம்பலின் அல்லியரிசியை உணவாக உண்டு வாழ்ந்தனர். வேளைப் பூவை மோரில் இட்டுப் பக்குவம் செய்து ஒருவகைப் புளிங்கூழ் சமைத்தனர். இச்செய்தியினை,

---

[1] சிறு. 136-139
[2] குறு. 33
[3] நற். 310, நற்றிணை மூலமும் உரையும், என்.சி.பி. எச்., ப. 572
[4] அக. 86:1
[5] அக. 136:1
[6] புற. 33:1-6
[7] பெரு. 163
[8] மது. 255-256
[9] மலை. 454-465
[10] ஐங். 47
[11] ஐங். 49
[12] அக. 32:1-5
[13] புற. 33:1-6
[14] பதி. 75:9-11

"செழுஞ் செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு,
தடந் தாள் ஆம்பல் மலரொடு கூட்டி"[1]

"சிறு வெள் ஆம்பல் அல்லி உண்ணும்
கழி கல மகளிர் போல"[2]

"வேளை வெண் பூ வெண் தயிர்க் கொளீஇ,
ஆய்மகள் அட்ட அம் புளி மிதவை"[3]

எனவரும் சங்கப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

### 1.3.11. நானிலச் சமூகத்தில் கள் உணவு

உலகில் மிகப்பழமையான நாகரிகத்தைக் கொண்டிருக்கக்கூடிய நாடுகளின் மக்கள் பண்பாட்டில் மது முக்கிய இடம் வகிக்கிறது. சங்ககால மக்கள் வாழ்வில் கள் என்னும் நீர்ம உணவுப்பொருள் அன்றாட உணவுப் பயன்பாட்டில் தவிர்க்கமுடியாத இடத்தைப் பெற்றிருந்ததோடு அது ஒரு மதுபானம், உணவுப்பொருள் என்பதையும் தாண்டி சமூகத்தில் அதன் புழங்குவெளியில் பல்வேறு பரிமாணங்களில் பலபொருளைத் தருவதைக் காணமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் கள், தேறல், தேக்கள், தோப்பி, நறவு, அரியல், மது, மட்டு, மட்டம், பிழி, மகிழ் எனப் பல்வேறு பெயர்களால் குறிக்கப்பெறும் இவற்றை பொதுவாக மது என்று கருதினாலும், ஒவ்வொன்றும் தன்னளவில் அதன் தயாரிப்பு முறையாலும், அதனைத் தயாரிக்கப் பயன்படுத்தப்படும் மூலப் பொருட்களாலும், அது தரும் களிப்பின் அளவாலும் வேறுபட்டுத் திகழ்ந்துள்ளன.

மக்கள் தாங்கள் வாழ்ந்த நிலவியல் சூழல், பொருளாதாரத் தேடல், உற்பத்திப் பொருட்கள் ஆகியவற்றின் அடிப்படையில் தென்னை, பனை, ஈந்து முதலிய மரங்களிலிருந்தும், நெல், தினை, தேன் போன்றவற்றைக்கொண்டும் தங்கள் தொழில்நுட்பத் திறனுக்கு ஏற்பக் கள்ளினைத் தயாரித்துள்ளனர்.

#### 1.3.11.1. வீட்டில் கள் சமைத்தல்

மேற்குறித்தவாறு பல்வேறு வகையாகத் தயாரிக்கப்பட்ட கள், வணிகநோக்கமின்றி வீடுகளில் தங்கள் தேவைக்காகத் தயாரிக்கப்பட்டது. குறிஞ்சிநில மக்கள் தங்கள் இல்லங்களிலேயே நெல்லினைக் கொண்டு கள் சமைத்ததை, 'இல்அடு கள்ளின் தோப்பி'[4] எனப் பொருநராற்றுப்படையும், சிலவாகிய குடிகளைக் கொண்ட சிறிய ஊரில் உள்ள வீட்டில் கள் சமைக்கப்பட்டதை, 'இல்அடு கள்ளின் சில்குடிச் சீறூர்'[5] எனப் புறநானூறும், கானவன் ஒருவனின் மனைவி, தன் இல்லத்தில் தேனால் சமைத்த கள்ளின் தெளிவைக் கொடுக்க அதனைக் கானவன் உண்டதை,

"இருவி வேய்ந்த குறுங் காற் குரம்பை,
பிணை ஏர் நோக்கின் மனையோள் மடுப்ப,
தேம் பிழி தேறல் மாந்தி, மகிழ் சிறந்து"[6]

---

[1] அக. 78:17-18
[2] புற. 280:13-14
[3] புற. 215:3-4
[4] பெரு. 142
[5] புற. 329:1
[6] குறி. 153-155

எனக் குறிஞ்சிப்பாட்டும், நல்லியக்கோடனைக் காணச் சென்ற பாணர்க்கு, நெய்தல் நிலப் பரதவர் நுளைமகள் காய்ச்சி அரித்த தேறலைப் பருகக் கொடுத்ததை, 'நுதி வேல் நோக்கின், நுளைமகள் அரித்த, பழம் படு தேறல் பரதவர் மடுப்ப'[1] எனச் சிறுபாணாற்றுப்படையும் குறிப்பிடுவதுகொண்டு மக்கள் தங்கள் இல்லங்களில் 'கள்' சமைத்து உண்டதை அறிந்துகொள்ள முடிகிறது.

### 1.3.11.2. கள்ளும் கொடியும்

தெருக்களிலும், கடைவீதிகளிலும் 'கள்' விற்கும் இடம் என்பதைக் குறிக்க அடையாளக் கொடிகள் பறக்கவிடப்பட்டன. இதனை, 'பைங்கொடி நுடங்கும் பலர்புகு வாயில்'[2], 'நெடுங் கொடி நுடங்கும் நறவு மலி மறுகில்'[3],'நெடுங் கொடி நுடங்கும் நறவு மலி பாக்கம்'[4], 'கட்கொடி நுடங்கும் ஆவணம்'[5] என்பன காட்டுகின்றன.

கள்ளின் விலையை எடுத்துக் காட்டும் கொடிகளும் பறக்கவிடப் பட்டிருந்ததை 'பலர் புகு மனைப் பலிப் புதவின் நறவு நொடைக் கொடியோடு'[6] என்று பட்டினப்பாலை குறிப்பிட, கள்ளின் களிப்பு மிகுதியைச் சாற்றுகின்ற கொடிகளும் பறக்கவிடப்பட்டிருந்ததை, 'கள்ளின் களிநவில் கொடி'[7] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

### 1.3.11.3. கள் விலை

'கள்' என்னும் உணவுப்பொருளை இல்லங்களில் சமைக்கும் வழக்கம் காணப்பட்டாலும், வணிக நோக்கிலான கள் விற்பனை மக்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்ததைக் காணமுடிகிறது. கள்ளினை உண்பவர்கள் அதற்கு விலையாகப் பல்வேறு பெருட்களைத் தந்துள்ளனர். பகைவேந்தன் ஊர்ந்து சென்ற யானையின் வெண்கோட்டைக் கள்ளுக்கு விலையாகத் தந்ததை,

> "வேந்து ஊர் யானை வெண் கோடு கொண்டு,
> கள் கொடி நுடங்கும் ஆவணம் புக்கு உடன்,
> அருங் கள் நொடைமை தீர்ந்த பின், மகிழ் சிறந்து"[8]

என்றும், வேட்டுவர் வழிப்போக்கரைக் கவர்ந்து பெற்ற பொருள்களைக் கள்ளுக்கு விலையாகக் கொடுத்ததை, 'அரும் பறை வினைஞர் புல் இகல் படுத்து, கள்ளுடை நியமத்து ஒள் விலை கொடுக்கும்'[9] என்றும், நெல்லை விலையாகக் கொடுத்து உழவர் கள்ளை உண்டதை, 'அரியல் ஆர்கை வன்கை வினைநர்'[10] என்றும் பதிற்றுப்பத்து குறிப்பிடுகின்றது.

வேடர்கள் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பதற்காக யானைகளை வேட்டையாடியதை, 'அரியல்அம் புகவின் அம்கோட்டு வேட்டை, நிரைய ஒள்வாள் இளையர் பெருமகன்'[11] எனக் குறுந்தொகையும், கள் விலைக்காகக் களிற்றுக் கன்றினைக் கள் விற்போர் வீட்டு வாயிலில் கொண்டுவந்து மறவர் கட்டியதை, 'நறவு நொடை நல்இல் புதவு முதற் பிணிக்கும், கல்லா இளையர் பெருமகன்'[12] என்று அகநானூறும் குறிப்பிடுகிறது.

---

[1] சிறு. 158-159
[2] பெரு. 337
[3] அக. 126:10
[4] அக. 196:1
[5] பதி. 68:10
[6] பட். 179-180
[7] மது. 372
[8] பதி. 68:9-11
[9] பதி. 75:9-10
[10] பதி. 62:16
[11] குறு. 258:5-6
[12] அக. 83:8-9

*பகைப் புலத்திலிருந்து கொண்டுவந்த பசுக் கூட்டத்தைக் கந்தாரம் என்னும் பெயருடைய மதுவிற்கு விலையாகத் தந்து மறவன் உண்டதைப் புறநானூறு[1] காட்டுகிறது. குறிஞ்சி நிலத்தவன் பகைவர் பசுக்கூட்டங்களைக் கவர்ந்துவந்து கொடுத்து தனது பழைய கள்விலைக் கடனையும் தீர்த்துக் கள்ளினைப் பருகியதை,*

> *“கேளா மன்னர் கடிபுலம் புக்கு*
> *நாள்ஆ தந்து, நறவுநொடை தொலைச்சி,*
> *இல்அடு கள்இன் தோப்பி பருகி”[2]*

*என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.*

### *1.3.11.4. கள்ளும் ஊனும்*

*சங்கப் பாடல்கள் காட்டும் மக்களின் உணவுப்பழக்கத்தை கூர்ந்து கவனிக்கும்போது ஊன் உணவை மிகுதியும் உண்டதைக் காணமுடிகிறது. மனிதனின் தொடக்ககால உணவுத் தேவையை விலங்குகளின் தசைகளே பூர்த்தி செய்தன. இந்நிலையில் ஊன் உணவோடு மதுவை உண்ணுதல், அல்லது மதுவோடு ஊனை உண்ணுதல் என்கிற நிலையைப் பல சங்கப் பாடல்களில் காணலாம்.*

*தொண்டைமான் இளந்திரையனைக் காணச்சென்ற பாணர் குழுவிற்குப் பட்டினத்து மக்கள், ஆண்பன்றியின் தசையுடன் களிப்புமிக்க கள்ளினைப் பருகத் தந்ததைப் பெரும்பாணாற்றுப்படையும்,[3] பாண்டியன் நெடுஞ்செழியனை வாழ்த்திப் பாடிய பாணர்கள், கொழுவிய தசையை உண்டு களிப்புமிக்க நறவினை உண்டதை,*

> *“அழித்து ஆனாக் கொழுந் திற்றி*
> *இழித்து, ஆனாப் பல சொன்றி,*
> *உண்டு, ஆனாக் கூர் நறவின்”[4]*

*என மதுரைக்காஞ்சியும் குறிப்பிடுகின்றது. நன்னனைக் காணச்சென்ற கூத்தர்களுக்கு, பசிய முளையால் ஆக்கிய கள்ளின் தெளிவை வரால் மீனின் தசைத் துண்டுகளோடு மருதநிலத்து உழவர் தந்ததை மலைபடுகடாம்[5] காட்டுகிறது.*

*நெல் விளைந்த வயலில் பறவைகளை விரட்டும் உழுகுடியோர், பனங்கருக்கை விறகாகக் கொண்டு கழியிடத்துப் பிடித்த மீனைச் சுட்டு, அதனுடன் கள்ளையும் உண்டதை,*

> *“நெல் விளை கழனிப் படு புள் ஓப்புநர்*
> *ஒழி மடல் விறகின் கழி மீன் சுட்டு,*
> *வெங் கள் தொலைச்சியும், அமையார்”[6]*

*என்ற நற்றிணைப் பாடல் காட்டுகிறது. பாலைநில ஆறலை கள்வர்கள் எருதினைக் கொன்று அதன் தசையை நெருப்பிலிட்டுச் சுட்டுத் தின்று, நெல்லாற் சமைத்த தோப்பிக் கள்ளினைக் குடித்ததையும்,[7] தூண்டிற் கோலால் மீனைப் பிடிக்கும் பாணரது மகள், வரால்மீனைச் சுட்டு, கள்ளுண்டு களித்திருந்த தன் தந்தைக்கு உண்ணக் கொடுத்ததையும்[8] அகநானூறு குறிப்பிடுகிறது.*

---

[1] புற. 258:1-3
[2] பெரு. 140-141
[3] பெரு. 342-345
[4] மது. 211-213
[5] மலை. 456-464
[6] நற். 29:13-15
[7] அக. 265:13-16
[8] அக. 216:1-4

சோழநாட்டுக் களமர்கள் அரிக்கப்பட்ட மதுவை ஆமை இறைச்சியோடும், ஆரல் மீனின் துண்டத்தோடும் உண்டதை,

> "களமர்க்கு அரித்த விளையல் வெங்கள்
> யாமைப் புழுக்கின் காமம் வீட ஆரா,
> ஆரல் கொழுஞ் சூடு அம் கவுள் அடாஅ"[1]

என்று குறிப்பிட, புரவலர் கள்ளுண்ணும் இரவலர்க்கு ஆட்டுக்கிடாயின் ஊனைத் தந்ததையும்,[2] உழவர் உண்கலத்தில் பெரிய கெடிற்று மீனாகிய உணவுடன் பூக்கள் விரவிய கள் வைக்கப்பட்டிருந்ததையும்,[3] ஓய்மான் நல்லியாதன் தன்னை நாடிவந்த பாணர்க்குப் பாம்பு சீறினாற்போல் பெரிதும் நாட்பட்ட களிப்பு மிக்க கள்ளின் தெளிவோடு சூட்டிறைச்சியைத் தந்ததை 'அரவு வெகுண்டன்ன தேறலொடு, சூடு தருபு'[4] என்றும், அதியமான் தன் இரவலர்க்குக் களிப்பினைத்தரும் கள்ளோடு, அமிழ்து போன்ற சுவையை உடைய ஊன்துவையலோடு கூடிய சோற்றை உண்பித்ததை,

> "மகிழ் தரல் மரபின் மட்டே அன்றியும்,
> அமிழ்து அன மரபின் ஊன் துவை அடிசில்
> வெள்ளி வெண் கலத்து ஊட்டல் அன்றி"[5]

என்றும், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் கிணைப் பொருநனுக்குச் சூட்டிறைச்சியையும், மணம்கமழும் கள்ளின் தெளிவைத் தந்ததை, 'நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ் சூடு, மணிக் கலன் நிறைந்த மணம் நாறு தேறல்'[6] என்றும் வரும் புறநானூற்றுப் பாடலடிகள் உணர்த்தக் காணலாம்.

### 1.3.11.5. கள்விற்கும் பெண்டிர்

சங்க காலத்தில், 'அரியற்பெண்டிர்'[7], 'அரியலாட்டியர்'[8] எனக் குறிப்பிடப்படும் பெண்கள் கள்விற்கும் தொழிலை மேற்கொண்டிருந்தனர். கள் விற்கும் இடம் என்பதைக் குறிக்கும் கொடி பறக்கவிடப்பட்டு, பலரும் கள்ளுண்ணப்புகும் வாயிலில் கள்ளைச் சமைக்கின்ற மகளிர் வட்டிலைக் கழுவியதை, 'கள்அடு மகளிர் வள்ளம் நுடக்கிய'[9] எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

### 1.3.11.6. கூட்டாக மது அருந்துதல்

மது உண்ணல் என்பது கூட்டுக் களிப்பாகவே காணப்படுகின்றது. மக்கள் கூட்டாகச் சேர்ந்து மது அருந்திக் கொண்டாடிக் களித்தலை 'உண்டாட்டு'[10] என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இத்தகைய உண்டாட்டு ஆனிரை கவரும் போரில் பெற்ற வெற்றியைக் கொண்டாடும் விதமாகவே அமைந்தது. இதனை, மறவர்கள் புடைசூழ பகைப்புலம் சென்று ஆனிரைகளைக் கவர்ந்து வந்தவர்களை ஆரவாரத்துடன் வரவேற்று, 'நறவும் தொடுமின்; விடையும் வீழ்மின்'[11] என கள்ளும் ஆட்டிறைச்சியும் தந்து உண்டாட்டு நிகழ்த்தியதைப் புறநானூறு குறிப்பிடுகின்றது.

தேனாலான கள்ளின் தெளிவை, மலையிடத்துள்ள சிற்றூரில் வாழும் குறவர்கள் தம் சுற்றத்துடன் உண்டு மகிழ்ந்து குரவைக்கூத்தாடி முருகனை

---

[1] புற. 212:2-4
[2] புற. 364:3-5
[3] புற. 384:8-9
[4] புற. 376:14
[5] புற. 390:16-18
[6] புற. 397:13-14
[7] அக. 157:1
[8] அக. 245:9
[9] பெரு. 339
[10] தொல்.பொ. 58.
[11] புற. 262:1

வழிபட்டதை, 'நீடு அமை விளைந்த தேக்கள் தேறல் குன்றச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து'[1] என திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

மீன்வேட்டம் முடிந்த விடியலில் பரதவர் தேன்மணம் வீசும் தெளிந்த கள்ளைத் தம் சுற்றத்தாருடன் உண்டுமகிழ்ந்ததை, 'தேம் கமழ் தேறல் கிளையொடு மாந்தி'[2] என நற்றிணை குறிப்பிட, மருதநிலத் தலைவனொருவன் தன் சுற்றத்துடன் மட்டு அருந்தி பரத்தை இல்லம் சென்றதை, 'மகிழ் துணைச் சுற்றமொடு மட்டு மாந்தி'[3] என அகநானூறு குறிப்பிடக் காணலாம். மேற்குறித்த செய்திகளில் கள்ளுண்ணல் குழுவோடு இணைந்த கூட்டுக்களிப்பாக இருந்தது கவனிக்கத்தக்கது.

### 1.3.11.7. கள் உண்டவர்கள்

அரசர், மறவர், புலவர், பாணர், கூத்தர், பொருநர், குறவர், உழவர், பரதவர், வேடர் என ஆண்பெண் பேதமின்றிச் சமூகத்தில் காணப்பட்ட அனைத்து மக்களாலும் விரும்பி உண்ணப்பட்ட உணவுப் பொருளாகக் கள் விளங்கியது. சங்க காலத்தில் பெண்கள் கள் உண்டனர். ஔவை என்னும் பெண்பாற் புலவர்,

"சிறிய கள் பெறினே, எமக்கு ஈயும்; மன்னே!
பெரிய கள் பெறினே,
யாம் பாட, தான் மகிழ்ந்து உண்ணும்; மன்னே!"[4]

என்று அதியமான் தந்த கள்ளினை உண்டு பாடியதாகக் குறிப்பிடுவதைக் கொண்டும், தன் கணவனோடு ஊடல்கொண்ட மகளிர் நறவு உண்டு மகிழ்ந்ததை, 'நறவு மகிழ்ந்து, மாண் இழை மகளிர், புலந்தனர்'[5] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுவதைக்கொண்டும் தெளிந்த கள்ளைப் பருகி துறையில் நீர் மொள்ள வந்த பெண்கள் தம் கணவரது பண்பற்ற பரத்தமை குறித்துப் பாடி குரவைக் கூத்தாடியதை,

"தெண் கட் தேறல் மாந்தி, மகளிர்
நுண் செயல் அம் குடம் இரீஇ, பண்பின்
மகிழ்நன் பரத்தைமை பாடி, அவிழ் இணர்க்
காஞ்சி நீழல் குரவை அயரும்"[6]

என்று அகநானூறு குறிப்பிடுவதைக்கொண்டும் அறியலாம். மேலும், வையைப் புதுவெள்ளத்தில் நீரில் விளையாடிக் களைத்தபின், வெள்ளிக்கிண்ணத்திலே வெப்பம் மிகுந்த மதுவினை வார்த்துப் பெண்கள் பருகியதைப் பரிபாடலும்[7] உயர் மாடங்களில் வாழ்ந்த செல்வமகளிர், மிகுந்த களிப்பினைத்தரும் கள்ளினைக் கைவிட்டு, இனிய காமபானத்தை விரும்பி உண்டதைப் பட்டினப்பாலையும்[8] குறிப்பிடுகின்றன.

### 1.3.11.8. கள்ளின் அரசியல்

கள் உணவினை வீரர்களுக்குப் புத்துணர்வு பெறுவதற்காகப் போருக்குச் செல்லும்முன்னும்,[9] போருக்குப் பின் வெற்றிக் கொண்டாட்டத்தின்போது கொடுத்தும்[10] கொண்டாடியுள்ளனர்.

[1] திரு. 195-196
[2] நற். 388:8
[3] அக. 346:15
[4] புற. 235:1-3
[5] மது. 679-680
[6] அக. 336:6-9
[7] பரி. 10:71-78
[8] பட். 108
[9] பதி. 21:16-19
[10] அக. 266:11-14

*கள் உண்பதற்கு என்ற நிலையையும் தாண்டி, அது ஒருவனைத் தான் உண்ட கள்ளுக்காக, தன் உயிரையும் ஈந்து தலைவனைக் காக்கும் அளவுக்கு நன்றி உணர்ச்சி மிக்கவனாக மாற்றுகிறது. இதனை, 'தலைவனே! உன் பாட்டன் போர் செய்தபோது அவன் பாட்டன் பகைவர் எறிந்த வேலைத் தான் ஏற்று மாண்டான். மறப்போர் புரியும் இவனும் மழை பெய்யுமிடத்து மழைத்துளிகள் மேலே விழாதபடிக்குக் காக்கும் ஓலைக் குடை போலப் பகைவர் உன்னை நோக்கி எறியும் வேலைத் தான் ஏற்றுத் தாங்குவான். ஆதலால், பெரும! கள்ளை முதலில் இவர்க்குத் தந்து பின்பு நீ உண்பாயாக எனக் கூறுவதையும்[1], வீரர் பலருள்ளும் தலைமைப் பண்பு காரணமாக அரசனால் மேலாக மதிக்கப்பட்ட தன் மகனுக்கு மண்டை என்னும் உண்கலத்தில் கள்ளை வழங்கி சிறப்பித்தமைக்காக, அதற்கு நன்றிக் கடனாகத் தன் உயிரைத் தருவதற்குரிய காலம்(கால் இல்லாத கட்டிலாகிய பாடையில் கிடத்தித் தூய வெள்ளாடையை அவன் மீது இன்னும் போர்த்தவில்லையே) இன்னும் தன் மகனுக்கு வரவில்லையே'[2] என்று மறக்குடிப் பெண் ஒருத்தி ஏங்குவதாகவும் அமைந்த ஔவையின் இரு புறநானூற்றுப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. இவை கள் பயன்கருதி வழங்கப்பட்டதன் அரசியலைக் காட்டுகின்றன.*

### *1.3.11.9. சமாதானமும் கள்ளும்*

*விரைய வீசும் காற்றில் உழவர்கள் நெல்லைத் தூற்ற தூசும் துரும்பும் அருகிலிருக்கும் உப்பளத்தின் சிறு பாத்திகளில் சென்று வீழ்ந்ததைக் கண்ட நெய்தல்நில மக்கள் உப்பு பாழ்பட்டுப்போனமைக்காக உழவருடன் மாறுபட்டு சேற்றுக் குழம்பினை எடுத்தெறிந்து கைகலப்பில் ஈடுபட்டபோது அவர்தம் மாறுபாட்டைக் களைய முதுமையுற்ற மருதநில மக்கள் இருவரையும் அமைதியுறச் செய்து, முற்றிய கள்ளின் தெளிவை நுளையர்க்குக் கொடுத்து அவரை மகிழ்வித்ததை, அகநானூற்றுப் பாடல் ஒன்று காட்டுகிறது.[3] இங்குக் கள் இரு குழுக்களுக்கிடையேயான வேறுபாட்டைக் களைவதில் ஒரு முக்கிய அங்கமாகச் செயல்பட்டுள்ள தன்மை நோக்கத்தக்கது.*

### *1.3.11.10. சடங்குகளில் கள்*

*சுடுகாட்டில் கள்ளி ஓங்கிவளர்ந்துள்ள களர்நிலத்தின் பக்கத்தே, பாடையை நிறுத்திய பின்னர், பிணத்தைப் புல்மீது கிடத்தி, கள்ளுடனே சிலசோறாகிய உணவைப் புலையன் படைத்து இறப்புச் சடங்கு செய்ததை,*

> *"கள்ளி போகிய களரி மருங்கின்,*
> *வெள்ளில் நிறுத்த பின்றை, கள்ளொடு*
> *புல்லகத்து இட்டசில் அவிழ் வல்சி*
> *புலையன் ஏவ, புல்மேல் அமர்ந்து உண்டு,*
> *அழல்வாய்ப் புக்க பின்னும்"[4]*

*என்ற புறநானூற்றுப்பாடல் குறிப்பிடுகின்றது. அதேபோல், பசுக்கூட்டத்தை மீட்டுவந்த கரந்தை வீரர்கள், நடுகல் வழிபாட்டில் அக்கல்லுக்கு மயிற்றோகைகளைச் சூட்டி, துடியை முழக்கி நெல்லால் ஆக்கிய கள்ளொடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுத்ததை,*

> *"வில் ஏர் வாழ்க்கை விழுத் தொடை மறவர்*

---

[1] *புற. 290* [2] *புற. 286* [3] *அக. 366:6-11* [4] *புற. 360:16-20*

*வல் ஆண் பதுக்கைக் கடவுட் பேண்மார்,*
*நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்து,*
*தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்"[1]*

என்றும், போர் முனையில் பகைவரை வென்று அவர்தம் பசுக்கூட்டத்தை ஆனேறுடன் கவர்ந்து கொண்டுவந்தமைக்காக விடியற்காலத்தே முதிர்ந்த கள்ளாகிய நறவினைப் பலியாகக் கொடுத்ததை, 'நனை முதிர் நறவின் நாட் பலி கொடுக்கும்'[2] என்றும் குறிப்பிடும் அகநானூற்றுப் பாடல்களைக் கொண்டு அறிந்துகொள்ளலாம். அதேபோல், அன்னை ஒருத்தி தன் மகள் உற்ற காதல் நோயை அறியாது, நீர்த்துறையிடத்து நிலைபெற்ற கடவுளுக்குக் கள்ளையும், மாலையையும், வெள்ளாட்டுக் கிடாயையும் சேர்த்துக் காணிக்கைப் பொருளாகத் தந்து வழிபட்டதை.

*"கள்ளும் கண்ணியும் கையுறையாக*
*நிலைக் கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்*
*நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி"[3]*

என்ற அகநானூற்றுப்பாடல் உணர்த்தக் காணலாம். மேற்கண்ட பாடல்களின் வழி கள் சடங்குகளில் படையல் பொருளாக இடம்பெற்றதைக் காணமுடிகிறது. இறந்தவர்களுக்குப் படையலிடும்போது அவர்கள் வாழ்ந்தபோது விரும்பி உண்ணப்பட்ட பொருட்கள் அவர்கள் நினைவாகப் படைக்கப்படுகின்றன. இதனைக் கருத்தில்கொண்டு நோக்கும்போது வீரர்களால் விரும்பப்பட்ட கள் அவர்கள் இறந்தபின் அவர்களின் நடுகல்லில் படைக்கும் படையல் பொருளாக மாறியது எனக் கருதலாம்.

### 1.4. ஆடைகள்

#### 1.4.1. ஆடைகளும் பண்பாடும்

மனிதனின் எண்ணங்கள் சொற்களில் மரபுவழிப் பாதுகாக்கப்பட்டு அடுத்து வரும் தலைமுறைக்கு உணர்த்துவதைப் போலவே பொருட்களும் மக்களின் எண்ணங்களை, அறிவுப் பாரம்பரியத்தை, தொழில்நுட்பத்தை அடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்லவும் கற்பிக்கவும் செய்கின்றன.

மனித நாகரிக வளர்ச்சியில் மிக முக்கியமான கூறாக விளங்கும் ஆடை, அவை உடுப்பதற்கானவை என்பதையும் தாண்டி, அதை உருவாக்கப் பயன்படுத்தப்பட்ட பொருளாலும் உடுத்தும் முறையாலும் ஒரு குறிப்பிட்ட மக்களின் பண்பாட்டை அடையாளப்படுத்தும் எழுதாத ஆவணமாக உள்ளன. ஆடைகள் ஒரு குறிப்பிட்ட மக்களினம் வாழும் சூழலையும், அங்கு கிடைக்கும் அதற்கான மூலப் பொருளையும், அதை நெய்வதற்கான தொழில்நுட்பத் திறனையும் பொறுத்து இடத்திற்கு இடம் வேறுபடுகின்றன.

ஆடைகள் எந்தெந்த சூழலில் எத்தகைய ஆடைகள் உடுக்கப்படுகின்றன என்பதைப் பொறுத்தும் தனக்குள் பண்பாட்டு மரபுகளைப் பொதிந்து வைத்துள்ளன. மனிதனின் பருவ வளர்ச்சிக்கு ஏற்ப எந்தப் பருவத்தில் எத்தகைய உடையை உடுப்பது என்ற முறைமைகளும் ஆடையைக் குறித்த சிந்தனைகளில் கவனிக்கத்தக்கது.

---

[1] அக. 35:6-9 [2] அக. 213:7 [3] அக. 156:13-15

ஆடைகள் ஒரு மனிதனை அவன் யார், அவனுக்குச் சமூகத்தில் உள்ள மதிப்பு எத்தகையது, அவன் வகிக்கும் பதவி அல்லது பொறுப்பு, அவனது பொருளாதார நிலை முதலிய பலவற்றையும் உணர்த்தும் குறியீடாகவும் உள்ளன.

பொதுவாக உடலில் உடுக்கப்படுபவை அனைத்தையும் ஆடை என்ற பொதுச் சொல்லால் இன்று குறிப்பிட்டாலும். அவற்றின் நிறம், ஆடை உருவாக்கத்தில் பயன்படுத்தப்பட்ட மூலப்பொருள், உடலில் அணியப்பெறும் இடம், அவற்றின் தன்மை, ஆடையின் அளவு எனப் பல்வேறு கூறுகள் ஆடையினைப் பல பெயர்களால் உணர்த்தியுள்ளதை ஆடை குறித்த வரலாற்றை நோக்கும்போது புரிந்துகொள்ளலாம்.

சங்க இலக்கியப் பாடல்களில் ஆடைபற்றி நோக்கும்போது மேற்குறித்த பண்புகளின் அடிப்படையில் அவை: உடை, தழை, துகில், கலிங்கம், அறுவை, சிதார், உடுக்கை, ஆடை, தானை, கச்சு, ஈரணி, போர்வை, காழகம், கச்சம், கச்சை, வம்பு, மடி, சீரை, பட்டு, படம், படாம், பூங்கரைநீலம், உத்தரீயம், கம்பலம், கவசம், தூசு, மடிவை, சிதர்வை, சிதவல், வார், துகின்முடி, மெய்ப்பை, மெய்ம்மறை, மெய்யாப்பு, வாலிது, வெளிது, புட்டகம், நூல், பக்குடுக்கை என்ற பெயர்களால் குறிப்பிடப்படுகின்றன.

மேற்குறித்த ஆடைகள், பஞ்சின் மெல்லிய பகுதியாகிய ‘துய்’ என்பதிலிருந்து உருவாக்கப்பட்டதால், ‘துகில்’ என்றும், உடம்பை அடுத்திருப்பதால் ‘ஆடை’ என்றும், அறுக்கப்பட்டதால் ‘அறுவை’ என்றும், சிதைந்த பண்பு காரணமாக அமைந்ததால் ‘சிதார்’, ‘சிதர்வை’ என்றும், மடித்து வைக்கப்பெற்றமையின் ‘மடிவை’ என்றும் ஆடைகள் பல்வேறு காரணங்களால் பெயர் பெறுகின்றன,

சங்க இலக்கியத்தில் ஆடை எனும் ஒரு பண்பாட்டுக்கூறு தன்னளவில் ஆடை என்பதையும் தாண்டி பண்பாட்டு அடையாளமாக விளங்குவதோடு, அக்காலச் சமூகத்தின் பொருள்சார் பண்பாட்டின் பல்வேறு கூறுகளோடு இணைந்து பல்வேறு பொருண்மைகளை உணர்த்தி நிற்கின்றன. இக்கருத்தின் அடிப்படையில் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்ட ஆடைகளைக் கீழ்வருமாறு பகுத்துக் காண்பதின் மூலம் பண்பாட்டுத் தளத்தில் அவை எத்தகைய பொருண்மைகளைக் கொண்டிருந்தன என்பதை விளங்கிக் கொள்ளலாம்.

### *1.4.1.1. சடங்கியல் முக்கியத்துவம்*

சடங்கியல் அடிப்படையில் பார்க்கும் போது பொருட்களுக்குக் காரணகாரியத் தொடர்பு கற்பிக்கும் வழக்கு தமிழ்ப்பண்பாட்டில் நிலவுவதைக் காணலாம். பழக்காலத் தமிழர் திருமணச் சடங்கில் மணமகளுக்குப் புத்தாடை (கோடிக்கலிங்கம்) உடுக்கத் தரப்படுகிறது. இது ஒரு பெண் கன்னியாகத் தனியாக வாழ்ந்த நிலையிலிருந்து ஆணோடு சேர்ந்து வாழ்தல் என்ற புதிய படிநிலைக்குப் பெண் மாறுவதின் அடையாளமாகக் கருதலாம். இதனைத் தமிழ்ப் பண்பாட்டில் திருமணச் சடங்கில் மட்டுமல்லாது பிற சடங்கியல் நிகழ்வுகளையும் நோக்க உணரலாம்.

*மேற்குறித்த கருத்தின் அடிப்படையில் மணப்பெண்ணைத் தூய ஆடையால் பொலிவு பெறச் செய்ததை 'தூஉடைப் பொலிந்து மேவரத் துவன்றி'[1] என்றும், திருமணம் முடித்த முதல் நாள் இரவில் புதுமணப்பெண் புதுப்புடவைக்குள் (கோடிக் கலிங்கம்) ஒடுங்கியிருந்ததை,*

> *"ஓர் இற் கூடிய உடன் புணர் கங்குல்,*
> *கொடும் புறம் வளைஇ, கோடிக் கலிங்கத்து*
> *ஒடுங்கினள் கிடந்த ஓர் புறம் தழீஇ"[2]*

*என்றும் அகநானூறு குறிப்பிடுகிறது. மேலும், இறந்த வீரனின் உடலுக்குப் புலைத்தியால் வெளுக்கப்பட்ட தூய ஆடை போர்த்தப்பட்டதையும்[3], இறந்த வீரனின் உடலைக் கால்கழி கட்டில் எனப்பட்ட பாடையில் கிடைத்தி வெள்ளை ஆடை போர்த்தப்பட்டதை, 'கால்கழி கட்டிலில் கிடப்பி, தூவெள்அறுவை போர்ப்பித்திலதே'[4] எனக் குறிப்பிடுவது கொண்டும், சடங்குகளில் ஆடைகள் பெற்ற முக்கியத்துவத்தை அறியலாம்.*

### *1.4.1.2. வழிபாட்டியல் முக்கியத்துவம்*

*வழிபடச் செல்லும் பக்தர்கள் (அடியார்கள்) தாங்கள் வழிபடச் செல்லும் கடவுளைப்பொறுத்துச் சில குறிப்பிட்ட நிறத்தில் அமைந்த ஆடைகளைச் சில குறிப்பிட்ட காரணங்களின் அடிப்படையில் அணிகின்றனர்.*

*இதனை, மேல்மருவத்தூர் செல்லும் இருபால் பக்தர்களும் சிவப்பு நிற ஆடையை உடுத்திச் செல்வதும், திருப்பதி செல்லும் பக்தர்கள் மஞ்சள் நிற ஆடையை உடுத்துவதும், முருகனை வழிபடச் செல்வோர் மஞ்சள், துவர் நிற ஆடையை உடுத்துவதும், ஐயப்ப பக்கதர்கள் கருப்பு, நீலம், துவர் போன்ற நிறங்களினால் ஆன ஆடைகளை உடுத்துவதும், மேல்மலையனூர் செல்லும் பக்தர்கள் மஞ்சள் நிற ஆடைகளை உடுத்துவதும். நாட்டுப்புறங்களில் ஊர் தெய்வங்களை வழிபடும் பக்தர்கள் மஞ்சள் நிற ஆடை உடுத்துவதும் கொண்டு விளங்கிக்கொள்ளலாம்.*

*அதேபோல் மஞ்சள் தண்ணீரை ஊற்றியோ, அல்லது குளித்த ஈர ஆடையோடோ, கோவிலைச் சுற்றி தரையில் உருண்டு வருதல், மண்சோறு உண்ணுதல், தீமிதித்தல் போன்ற நேர்த்திக் கடன்களைச் செய்யும் வழிபாட்டில் ஈர ஆடைகளை உடுத்தி வழிபடும் வழக்கும், வேப்பந் தழைகளை நூலில் கோர்த்துக்கட்டி ஆடையாக உடுத்தி நேர்த்திக்கடன் செய்வதும் தமிழர் வழிபாட்டில் ஆடைகள் பெற்ற முக்கியத்துவத்தை உணர்த்துகின்றன.*

*மேற்குறித்த சமகாலத் தெய்வ வழிபாட்டில் ஆடைகள் பெற்ற முக்கியத்துவத்தைப்போன்றே சங்ககால வழிபாட்டுச் சடங்குகளிலும் ஆடைகள் முக்கியத்துவம் பெற்றவையாகத் திகழ்ந்ததைப் பின்வரும் பகுதிகள் காட்டும்.*

*திருப்பரங்குன்றத்தில் முருகனின் அடியவர்கள் தேன் பொருந்திய மலர், தளிர், பூத்தொழிலமைந்த துகில், வடித்தமணி, இலைவடிவினதாகிய வேல்*

---

*[1] அக. 136:15 [2] அக. 86:20-22 [3] புற. 311 [4] புற. 286:4-5*

*ஆகியவற்றைச் சுமந்தவராய்ச் சென்றதை 'தேம்படுமலர், குழை, பூந்துகில், வடிமணி, ஏந்து இலை சுமந்து'*[1] *எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது.*

*கள்ளினை மலையுறை தெய்வத்துக்குப் படைத்த குறவர் மகளிர் தழையாடை அணிந்திருந்ததை,*

> *"பாப்புக் கடுப்பு அன்ன தோப்பி வான் கோட்டுக்*
> *கடவுள் ஓங்கு வரைக்கு ஓக்கி, குறவர்,*
> *முறித் தழை மகளிர் மடுப்ப, மாந்தி"*[2]

*என்றும், தழையாடை உடுத்திய நெய்தல் நிலப்பெண்கள், முத்துக்களோடு வலம்புரிச் சங்கினைச் சொரிந்து குளிர்ந்த துறையின்கண் தெய்வத்தினை வாழ்த்தி வணங்கியதை,*

> *"அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து,*
> *தழை அணிப் பொலிந்த கோடு ஏந்து அல்குல்*
> *பழையர் மகளிர் பனித் துறைப் பரவ"*[3]

*என்றும், குறிப்பிடும் அகநானூற்றுப் பாடலடிகள் வழிபாட்டின்போது பெண்கள் தழையாடை அணிந்திருந்ததைக் காட்டுகின்றன. இதைப்போன்றே, அந்தணர் புலராத ஆடையை அணிந்துகொண்டு முருகனை வழிபட்டதை, 'ஒன்பது கொண்ட மூன்று புரி நுண் ஞாண், புலராக் காழகம் புலர உடீஇ'*[4] *என நற்றிணை குறிப்பிடுகிறது.*

### *1.4.1.3. அழகியல் முக்கியத்துவம்*

*ஒன்றினை மேலும் அழுகுபடுத்திக் காட்டுவதற்கு அதில் இல்லாதவற்றை அல்லது இருப்பதோடு மற்றொன்றைச் சேர்த்து ஒப்பனை செய்யும் அழகியல் உணர்வு மனிதனிடம் காணப்படும் பண்புகளுள் ஒன்று. அந்தவகையில் யானை உடை எனப்பட்ட துணியால் போர்த்தி அணிசெய்யப்பட்டதை, 'உரு கெழு யானை உடை கொடு' என்றும், பனை மடலால் செய்த குதிரைக்குக் கச்சையினை அணிவித்து அழகு செய்ததை, 'சிறு மணி தொடர்ந்து, பெருங்கச்சு நிறீஇ,...உண்ணா நல்மாப் பண்ணி'*[5] *என்றும் நற்றிணை குறிப்பிடுகிறது*

*"மனித குலத்தில் மிகத் தொன்மையான ஆடையானது உடலை மறைப்பதை விடவும் உடலை அழகுபடுத்தும் முகமாகவே உருவானது. அந்த அடிப்படையில்தான் தழையாடையும் ஏற்பட்டது"*[6] *என்ற கூற்றின்படிச் சங்க இலக்கியத்தில் தழையாடைகள் அழகியல் நோக்குடன் இளம்பெண்களால் அணியப்பட்டதைக் காணமுடிகிறது.*

### *1.4.1.4. பொருளியல் முக்கியத்துவம்*

*தற்சார்ப்பு நோக்கின்றி ஒருவன் வைத்திருக்கும் பொருளைப் பொதுநிலையில் ஒன்றுடன் ஒன்று ஒப்பிட்டுப் பார்க்கும்போது மதிப்புகுறைந்ததாகவும், மதிப்பு மிக்கதாகவும் தீர்மானிக்கப்படுகிறது. அம்மதிப்பீடு பொருளின் மதிப்பு(value), பொருளின் தரம்(quality), பொருளின்*

---

[1] *பரி. 21:1-2*
[2] *அக. 348:6-9*
[3] *அக. 201:5-7*
[4] *திரு. 183-184*
[5] *நற். 220:1*
[6] *பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 338*

*தோற்றம்(Appearance), பொருளின் வடிவம்(shape), பொருளின் அப்போதைய நிலை(condition) போன்ற பண்புகளைக் கொண்டு தீர்மானிக்கப்படுகிறது. மேலும், ஒன்றை ஈதல், இரத்தல் என்பவற்றைக் கொண்டும் ஒருவனின் செல்வநிலையையும் வறுமை நிலையையும் மதிப்பிடலாம்.*

*"பண்பாட்டில் எண்ணற்ற பொருள்சார் கூறுகள் மனிதர்களின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்தாலும், அவை சமூகத்தின் தரநிலையைக் காட்டுவனவாகவும் அமைகின்றன."[1] என்ற கருத்தின் அடிப்படையில் பாணர்கள் எனப்பட்ட இரவலர்கள் உடுத்திய ஆடை தன்னளவில் ஆடையை மட்டும் உணர்த்தாது அவர்களின் பொருளாதார நிலையையும் காட்டுவதைச் சங்கப் பாடல்கள் வழி அறியலாம்.*

*சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படும் பாணர், பொருநர், புலவர் உள்ளிட்ட கலைஞர்களின் வறுமை வாழ்வை, அவர்கள் உடுத்தியிருந்த உடையின் சிதைந்த நிலையைக் குறியீடாகக் கொண்டு புலவர்கள் சித்தரித்துள்ளனர். இத்தகைய இரவலர்கள் உடுத்தியிருந்த ஆடை ஒரு நிலையில் வறுமை நிலைப்பட்ட சாதாரண குடிகளின் வாழ்க்கைத் தரத்தையும், மற்றொரு நிலையில் பொருள் வளம்படைத்த மேட்டுக்குடிகளின் வாழ்க்கைத் தரத்தையும் உணர்ந்துகொள்ள ஒரு அளவுகோலாகப் பயன்பட்டுள்ளது. இதனை, பாணர்களும், புலவர்களும் தங்கள் புரவலர்களான மன்னர்களையும், வள்ளல்களையும் காண்பதற்கு முன்பு வரை,*

> *'முதுநீர்ப் பாசி அன்ன உடை'[2], 'பாசி வேரின் மாசொடு குறைந்த துன்னற் சிதாஅர்'[3], 'துரும்பு படு சிதாஅர்'[4], 'நீர்ப் படு பருந்தின் இருஞ் சிறகு அன்ன, நிலம் தின் சிதாஅர்'[5]*

*எனப்பட்ட சிதைந்த நிலையில் இருந்த கந்தல் ஆடையை உடையவர்களாகவும், அவர்களைச் சந்தித்தபின்,*

> *'திருமலர் அன்ன புதுமடி'[6], 'கொட்டைக் கரைய பட்டுஉடை'[7], 'புகை விரிந்தன்ன பொங்கு துகில்'[8], 'நூலாக் கலிங்கம்'[9], 'அரவு உரி அன்ன, அறுவை'[10], 'கொட்டைக் கரைய பட்டு'[11], 'ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம்'[12], 'இழை மருங்கு அறியா நுழை நூல் கலிங்கம்'[13], 'காம்பு சொலித்தன்ன அறுவை'[14]*

*எனப்பட்ட மதிப்புயர்ந்த ஆடைகளை அணிந்தவர்களாகவும் குறிப்பிடப்படுவதிலிருந்து விளங்கிக்கொள்ளலாம். சங்கப் பாடல்கள் குறிப்பிடும் பல்வேறு உடைகளுள் கலிங்கம், துகில், அறுவை, கச்சு, படாம் என்ற பெயரிலான ஆடைகளை அணிந்த அரசர்கள் நிலந்தோயும் அளவிற்கு ஆடை உடுத்தியதை, 'இருநிலந் தோயும் விரிநூல் அறுவை'[15] எனக் குறிப்பிடுகிறது.*

*மேற்குறித்த சான்றுகளிலிருந்து பாணர்களைப் போன்ற சாதாரண குடிகள் எளிய உடையையும், கந்தலாடையையும் உடுத்தியவர்களாக இருக்க, மன்னர்களும்*

---

*[1] பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 330*
*[2] புற. 390:14*
*[3] பொரு. 153-154*
*[4] புற. 398:19*
*[5] பதி. 12:19-20*
*[6] புற. 390:15*
*[7] பொரு. 155*
*[8] புற. 398:20*
*[9] பதி. 12:21*
*[10] பொரு. 83*
*[11] பொரு. 155*
*[12] பெரு. 468*
*[13] மலை. 561*
*[14] சிறு. 236*
*[15] பதி. 34:3*

அவர்களைப் போன்ற பிற செல்வந்தர்களும் மதிப்புயர்ந்த ஆடைகளை உடுத்தியதைச் சங்கப்பாக்கள் காட்டுகின்றன.

### *1.4.1.5. குறியியல் முக்கியத்துவம்*

*இளம்பெண்களே தழையாடையை உடுத்தினர். ஆண்களோ, முதியவர்களோ உடுத்தியதாகச் சான்றுகளில்லை. தழையாடை உடுத்திக்கொண்டு அத்தழை அசையும் அல்குலை உடையவளாய் இளையவள்(பரத்தை) தெருவின் வழியே சென்றாள்.[1] எனக் கூறும் நற்றிணைப் பாடல், தழையாடை பரத்தையரின் இளமையையும் அழகையும் காட்டும் குறியீடாக விளங்குவது நோக்கத்தக்கது.*

*கணவனை இழந்து அல்லியரிசி உண்டு வாழ்ந்த கைம்பெண்ணொருத்தியின், 'சிறிய வெண்மையான ஆம்பல், முன்பு தான் இளமையாய் இருந்த காலத்தில் தனக்குத் தழையுடையாய் இருந்தது'[2] என்ற கூற்று தழையாடை இளம்பெண்களுக்கானது என்பதையும் அது அவர்களின் இளமையைக் காட்டும் குறியீடாய் இருந்ததை, 'மடவோள்'[3], 'குறுமகள்'[4], 'பெருமடத் தகுவி'[5], 'இளையோள்'[6] எனவாறு குறிப்பிடப்படுவதிலிருந்தும் அறியமுடிகிறது.*

*தலைவன் கொண்டுவந்த கையுறையான தழையாடை வேற்றுப்புலத்தைச் சார்ந்தது என்பதால் தலைவியால் வாங்க மறுக்கப்பட்டது. இங்குத் தழையாடை திணைக் கலப்பை (புற மணத்தை) ஏற்காத நிலையைக் காட்டும் குறியீடாய் விளங்குவது நோக்கத்தக்கது.[7]*

*காதலன் கையுறையாய்த் தந்த தழையாடையை ஏற்றுக்கொள்ளுதல் தலைவிக்கு தலைவன்பாலுள்ள காதலை வெளிப்படுத்தும் அடையாளமாகவும். தலைவி நொதுமலர் வரைவைத் தவிர்க்க தலைவன் கையுறையாய்த் தந்த தழைக்குரிய மரத்தைப் போற்றுவதும் தழையாடை குறியீட்டுத் தன்மை கொண்டதைக் காட்டுகிறது.[8]*

*'செம்பொறிச் சிலம்பொ டணித்தழை தூங்கும், எந்திரத் தகைப்பி னம்புடை வாயில்'[9] என்ற பதிற்றுப்பத்து பாடலடிக்கு "ஈண்டுப் பொருவீர் உள்ளீரேல், நும் காலிற் கழலினையும் அரையிற் போர்க்குரிய உடையினையுமொழித்து இச்சிலம்பினையும், தழையினையும் அணிமினென அவரைப் பெண்பாலாக இகழ்ந்தவாறென்க"[10] என்று உரைசெய்யப்பட்டுள்ளது. இங்குத் தழையாடை பகைவரை இகழ்வதற்காகப் பயன்படுத்தப்பட்டதைக் காணமுடிகிறது. இதில் தழையாடை பெண்களுக்குரியது என்பதையும், அதை ஆண்கள் உடுத்துதல் இழிவானது (அதாவது ஆண் மக்களே போர் செய்யும் தகுதியுடையவராதலால்) எனக் கருதப்பட்டது. இன்றும் சமூகத்தில் ஆணை இழிவுபடுத்த அவனைப் 'புடவை கட்டிக்கொள்' என்று கூறுவதோடு ஒப்ப வைத்து எண்ணத்தக்கது.*

*மேற்குறித்த தழையாடை பற்றிய கருத்துக்கள் பெண்கள் போரில் பங்கேற்கும் வழக்கமில்லை என்பதையும், ஆண்களைவிட பெண்கள் வலிமை குறைந்தவர்கள் என்பதையும், பெண்ணை விட ஆண் வீரம் மிக்கவன் என்பதையும்,*

---

[1] நற். 320:3-10
[2] புற. 248
[3] நற். 8:3
[4] அக. 7:6, 230:5
[5] அக. 275:15
[6] நற். 320:4; புற. 341:3
[7] நற். 359:4-9
[8] ஐங். 201
[9] பதி. 53:6-7
[10] பதிற்றுப்பத்து, மூலமும் உரையும், என்.சி.பி. எச்., ப. 184

*அத்தகைய வீரமில்லாதவன் பெண்ணைப் போல தாழ்வாகக் கருதப்படுவான் என்பதையும் வெளிப்படுத்தும் குறியீடாய் விளங்குவது நோக்கத்தக்கது.*

### *1.4.1.6. தொழிலியல் முக்கியத்துவம்*

*ஒரு குறிப்பிட்ட தொழிலை மேற்கொள்ளும் மனிதர்கள் தங்கள் பணியின் பொருட்டாகச் சில பொருட்களைத் தவிர்க்க இயலாது பயன்படுத்தவேண்டிய சூழலில் அவை முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் காணப்படும். இக்கருத்தின் அடிப்படையில் பார்க்கும்போது கச்சை, கவசம் என்ற இரண்டு உடைகளையும் வீரர்கள் போரின் போது பயன்படுத்தியுள்ளனர் என்பது கவனிக்கத்தக்கது.*

*வம்பலர் எனப்பட்டவர்கள் உடைவாள் செருகப்பட்டு இறுகிய உடையினை உடையவர்களாக இருந்ததை, 'சுற்றுவீங்கு செறிவுடை'[1] எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. வீரனொருவன் சுருக்கத்தோடு கூடிய வளைந்த ஆடை உடுத்தி போரிட்டதை, 'கொடுந்திரை ஆடை'[2] எனக் குறிப்பிடக் காணலாம்.*

*காவலர்களும்[3], குதிரை வீரர்களும் இடையில் கச்சையினை அணிந்திருந்தனர். குதிரை வீரர் கச்சை அணிந்ததை, 'இளையர் அரைச் செறி கச்சை யாப்பு அழித்து அசைஇ'[4] என்றும், நீலநிறக் கச்சையினையும் பூவேலை செய்யப்பட்ட ஆடையினையும் உடையவனாக மறவன் விளங்கியதை, 'நீலக்கச்சை, பூஆர் ஆடை .... மறவன்'[5] என்றும் புறநானூறு குறிப்பிடுகிறது.*

*போர் வீரர்கள் புலியின் தோலால் செய்த கவசத்தை மார்பில் அம்புகள் புதையாவண்ணம் தடுப்பதற்காக அணிந்திருந்தனர்.[6] ஆறலைத்தலைத் தொழிலாகக் கொண்ட எயினர்களும்,[7] ஆறலைக் கள்வர்களும்,[8] மேய்த்தல் தொழிலை மேற்கொண்ட பொதுவர்களும்[9] துவர் ஆடையை உடுத்தினர். தன் தொழிலின் காரணமாக மாசுபடிந்த ஆடையை இடையர்கள் உடுத்தினர்.[10]*

*பாசறையில் அரசனுக்குப் பாதுகாவலாக இருந்த ஊமை மிலேச்சர்கள் நெருங்குதல் உறக் கட்டின உடையினையும் மெய்ப்பை, படம் எனப்பட்ட சட்டைகளையும் அணிந்திருந்ததை, 'மறித்துவீங்கு செறிவுஉடை, மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து, வலிபுணர் யாக்கை, வன்கண் யவனர்'[11], 'படம்புகு மிலேச்சர்'[12] என்று முல்லைப்பாட்டு குறிப்பிடுகிறது.*

*உப்பு வணிகர்கள் படம் எனப்பட்ட மெய்ப்பையிட்டு, மார்பிடத்தே கச்சினை அணிந்தவர்களாகக் காணப்பட்டனர். 'படம்புக்கு பொருகணை தொலைச்சிய புண்தீர் மார்பின், விரவுவரிக் கச்சின்'[13] என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் இதனைக் காட்டுகின்றன.*

*வீரர்கள் போருக்குச் செல்லும்போது வெள்ளாடை உடுத்திச் சென்றனர். தந்தையையும், கணவனையும் போரில் இழந்த மறக்குடிப் பெண் ஒருத்தி தன் குடிக்கு ஒரே வாரிசான சிறுவயதுப் பிள்ளைக்கும் வெண்மையான ஆடையை உடுப்பித்து கையில் வேலைத் தந்து போருக்கு அனுப்பியதை, 'வேல் கைக்*

---

[1] பெரு. 73
[2] புற. 275:1
[3] ஐங். 206:5
[4] நற். 21:1-2; புற. 377:24
[5] புற. 274:1-2
[6] புற. 13:2
[7] ஐங். 363:1
[8] நற். 33:6
[9] கலி. 102:37
[10] புற. 54:11
[11] முல். 59-61
[12] முல். 66
[13] பெரு. 69-71

கொடுத்து, வெளிது விரித்து உடீஇ... செருமுகம் நோக்கிச் செல்க' என விடுமே!'[1] என்ற புறநானூற்றுப் பாடலடி காட்டுகிறது.

### 1.4.2. தழையாடை

மனிதன் பயன்படுத்திய ஆடைகளுள் பழமையானதும் முதன்மையானதும் தழையாடையே, இத்தழையாடைகள் ஆம்பல்,[2] வயலைக்கொடி,[3] நெய்தல்,[4] நொச்சி, பிடவம், முல்லை, தோன்றி, கொன்றை,[5] ஞாழன்,[6] அசோகு[7] போன்றவற்றின் தழைகளையும், ஆம்பல்,[8] குவளை,[9] ஞாழன்,[10] நெய்தல்[11] போன்ற பூக்களையும் சேர்த்தோ அல்லது தனித்தோ உருவாக்கப்பட்டன. அவை புதியனவாகவும் பசுமையானதாகவும்[12] நெடுநேரத்துக்குப்பின் வாடிவிடக்கூடிய[13] தன்மையுடையதாகவும் இருந்தன.

சங்க இலக்கியத்தில் தழையாடை பகைத்தழை,[14] மடிவை,[15] குழை[16] என்ற பெயர்களால் குறிப்பிடப்பட்டாலும் 'தழை' என்று குறிப்பிடுவதே பெருவழக்காக உள்ளது. பழந்தமிழ்ச் சமூகத்தில் இத்தழையாடை இளம்பெண்கள் பலராலும் விரும்பி உடுத்தப்பட்டது.

#### 1.4.2.1. நிலமும் தழையும்

ஒவ்வொரு நிலத்தின் தன்மைக்கேற்ப தழையாடைகள் மாறுபட்டு விளங்கின. மகளிர் தங்கள் வாழிட எல்லைக்குட்பட்ட இடங்களிலிருந்த தழைகளையே ஆடையாகக் கட்டி உடுத்தினர். வேற்று நிலத்தைச் சார்ந்தவர் தரும் தழைகளை வாங்க மறுத்தனர். இதனை, "உடுக்கும் தழை தந்தனனே யாம் அஃது உடுப்பின், யாயஞ் சுதுமே"[17] எனத் தாய்க்கு அஞ்சித் தலைவன் தந்த தழையை ஏற்க மறுத்த தலைவியின் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

#### 1.4.2.2. தழையாடை உடுத்தப்பட்ட இடம்

இவ்வாடை மகளிரின் இடைப்பகுதி தொடங்கி கணுக்கால் வரையுள்ள பகுதியைக் குறிப்பாக அல்குலினை[18] மறைக்கப் பயன்படுத்தப்பட்டன. இதனை, 'தழையணி அல்குல் தாங்கள் செல்லா'[19], 'திருந்துஇழை அல்குற்குப் பெருந்தழை உதவி'[20] என்ற அடிகளும், தழையாடைகள் தொடையை மறைக்குமளவுக்கே நீளமுடையதாக விளங்கின என்பதை, 'வயல்வெல் ஆம்பல் அம்பகை நெறித்தழை தித்திக் குறங்கின் ஊழ்மாறு அலைப்ப'[21], 'வயலையம் பிணையல் வார்ந்த கவாஅன் திதலை அல்குல் தழையுடை தாழ்ந்த துடையினையும்'[22] என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

#### 1.4.2.3. தழையாடை உடுத்துவோர்

ஆயர்[23], கொடிச்சி[24], குறத்தி[25], எயினர் மகளிர்[26] எனத் தழையாடை அனைத்து நிலத்தைச் சார்ந்த பெண்களாலும் விரும்பி உடுக்கப்பட்டது. தழையாடைகள் உயர்ந்தோர்[27], தாழ்ந்தோர் என்ற பாகுபாடின்றி அனைத்துத் தரப்பு மக்களாலும்

---

[1] புற. 279
[2] நற். 390:4
[3] ஐங். 211:2
[4] நற். 60:9
[5] கலி. 102:5-6
[6] நற். 54:9
[7] குறு. 214:4
[8] ஐங்.72:1
[9] குறு. 342:5
[10] ஐங். 147:1
[11] ஐங். 211:3
[12] ஐங். 191; குறு. 294; நற். 363; அக. 331
[13] ஐங். 211:3
[14] நற். 96
[15] பதி. 27
[16] அகம். 269
[17] நற்:359:4-5
[18] அக. 189, 201, 230, 269, 275, 348
[19] குறு. 159:1
[20] குறு. 214:4
[21] குறு. 293:5-6
[22] அக. 189:8
[23] அக. 59:5
[24] ஐங். 256:2
[25] அக. 348:9
[26] அக. 331:5
[27] அக. 320:3

விரும்பி அணியப்பெற்றது. தழையாடைகள் பரிசுப்பொருளாகவும்,[1] விளையாட்டின் போதும்,[2] விழாக்களின் போதும்,[3] நீராடுதலின் போதும்,[4] மிகவும் விரும்பி அணியப்பட்டதைச் சங்கப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. இக்கருத்துக்களை எண்ணிப் பார்க்கும்போது மலர்களைப்போல் தழைகளும் ஒரு சிறந்த ஒப்பனைப் பொருளாக எல்லா தரப்பு மக்களாலும் பயன்படுத்தப்பட்டதை,

> 'அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ'[5], 'ஐதகல் அல்குல் அணிபெறத் தைஇ'[6], 'விழவு அணி மகளிர் தழை அணிக் கூட்டும்'[7], 'தழையணிப் பொலிந்த கோடேந்து அல்குல்'[8], 'அம்பூந் தொடலை அணித்தழை அல்குல்'[9]

எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன.

### *1.4.2.4. தழையாடையும் அணிகலனும்*

இடையில் உடுக்கும் ஆடையாகக் குறிப்பிடப்படும் தழையாடைகளைத் தனியாக உடுத்தினரா அல்லது வேறு ஏதேனும் ஆடைகளின் மீது உடுத்தினரா என்பதை அறிந்துகொள்ள இயலவில்லை. ஆனால், சில அணிகலன்களைத் தழையாடையோடு சேர்த்து இடையில் அணிந்ததை, 'திருந்துஇழை அல்குற்குப் பெருந்தழை உதவி'[10], 'துத்திப் பாந்தள் பைத்துஅகல் அல்குல் திருந்துஇழைத் துயல்வுக் கோட்டுஅசைத்த பசுங்குழைத் தழையினும்'[11] என்ற சங்கப்பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

### *1.4.3. உடுத்திய இடம்*

ஆடைகள் உடலில் உடுத்தப்பட்ட இடத்தைப்பற்றி குறிப்பிடும் புலவர்கள், பெண்களாயின் அல்குலினைக் குறிப்பதால் பெண்கள் தங்கள் இடைப்பகுதியை மறைப்பதற்காக ஆடை உடுத்தினர் என்பது விளங்கும். இதனை, 'பூந்துகில் மரீஇய ஏந்து கோட்டுஅல்குல்'[12],'பைங்காழ் அல்குல் நுண்துகில் நுடங்க'[13], 'துகில் அணி அல்குல்'[14] என்ற சான்றுகளின் வழி அறியலாம்.

ஆண்கள் உடுத்திய ஆடைகளைப் பற்றிக் குறிப்பிடும்போது 'அரை', 'இடை' என அவர்கள் உடுத்திய இடத்தைக் குறிப்பிடுவதுகொண்டு ஆண்களும் உடலின் இடைப்பகுதியை மறைக்க ஆடை உடுத்தியதை அறியமுடிகிறது. இதனை,

> 'உரு எஞ்சாது இடை காட்டும் உடை கழல் அம் துகில்'[15],'நூலாக் கலிங்கம் வால் அரைக் கொளீஇ'[16], 'என் அரை நீல் நிறச் சிதாஅர் களைந்து'[17],'என் அரை முதுநீர்ப் பாசி அன்ன உடைகளைந்து'[18]

என்ற சங்கப் பாடலடிகள் காட்டுகின்றன. மார்பில் அணியும் மேலாடையை அனைவரும் உடுத்தினர் என்று சொல்ல முடியாது. குங்குமம், சந்தனம், அகில்குழம்பு, மாலை, ஆபரணங்கள் போன்றவற்றால் மகளிர் தங்கள் மார்புப் பகுதியை மறைத்துக் கொண்டனர்.

---

[1] அக. 383; நற். 80, 359
[2] ஐங். 147
[3] நற். 170, 390; அக. 70
[4] ஐங். 15
[5] நற். 96:8, 123:7
[6] நற். 390:5
[7] அக. 70:12
[8] அக. 201:6
[9] புற. 341:2
[10] குறு. 214:4
[11] குறு. 294:5-6
[12] நெடு. 145
[13] பெரு. 329
[14] சிறு. 262
[15] கலி. 81:5
[16] பதி. 12:19-21
[17] புற. 385:5-6
[18] புற. 390:13-14

### 1.4.4. ஆடையின் நீளம்

சங்கப் பாடல்களில் மக்கள் உடுத்திய ஆடையின் வடிவத்தினை அறிந்துகொள்ள முடியவில்லையாயினும், அவற்றின் நீள, அகலங்களைப்பற்றி கீழ்காணும் பாடல் குறிப்புகளின் வழி ஊகிக்கமுடிகிறது.

> ‘மருங்கிற் கட்டிய **நிலனேர்பு துகினினன்**’[1],‘வேல் வலான் **உடைத் தாழ்ந்த** விளங்கு வெண் துகில் ஏய்ப்ப’[2],‘பூங் கரை நீலம் **புடை தாழ** மெய் அசைஇ’[3],‘**நிலம் தாழ்ந்த** பூங் கரை நீலம் தழீஇ’[4], ‘**இரு நிலம் தோயும்** விரிநூல் அறுவையர்’[5], ‘ஒருத்தி, **அடி தாழ்** கலிங்கம் தழீஇ’[6], ‘மீப்பால் வெண் துகில் **போர்க்குநர்**’[7], ‘சிறு நுண் பல் வியர் அம் துகில் **தலையில் துடையினள்**’[8],‘காதல் கொள் வதுவை நாள், **கலிங்கத்துள் ஒடுங்கிய**’[9], ‘கோடிக் **கலிங்கத்து ஒடுங்கினள்**’[10], ‘முருங்காக் கலிங்கம் **முழுவதும் வளைஇ**’[11]

மேற்குறித்த பாடலடிகளில் வரும் ‘நிலனேர்பு’, ‘உடைத் தாழ்ந்த’, ‘புடை தாழ’, ‘நிலம் தாழ்ந்த’, ‘நிலம் தோயும்’, ‘அடி தாழ்’, ‘போர்க்குநர்’, ‘தலையில் துடையினள்’, ‘கலிங்கத்துள் ஒடுங்கிய’, ‘முழுவதும் வளைஇ’ என்பனவற்றிலிருந்து உடைகள் இடையிலிருந்து நிலம் தாழும் அளவுக்கும், உடல் முழுதும் போர்த்திக்கொள்ளும் அளவுக்கு நீளமாகவும், அகலமாகவும் விளங்கியதை அறிந்துகொள்ளலாம்.

### 1.4.5. ஆடைகளின் நிறம்

ஆடைகள் வெண்மை, துவர், நீலம் என்ற நிறங்களில் காணப்பட்டதை, ‘தூ வெள் அறுவை’[12], ‘வெண் துகில்’[13], ‘துவர்செய் ஆடை’[14], ‘செந் துவர் ஆடை’[15],‘அம் துவர் ஆடை’[16], ‘கருந் துவர் ஆடை’[17], ‘நீலக் கச்சை’[18], ‘நீலக் கச்சினர்’[19] எனக் குறிப்பிடுவது கொண்டும், ‘புகை விரிந்தன்ன பொங்கு துகில் உடீஇ’[20], ‘அறுவைத் தூ விரி கடுப்பத் துவன்றி மீமிசைத் தண் பல இழிதரும் அருவி’[21], ‘ஆவி அன்ன அவிர் நூல் கலிங்கம்’[22], ‘அறுவைத் தூமடி அன்ன நிறம் கிளர் தூவிச் சிறு வெள்ளாங்குருகே!’[23],‘புகை முகந்தன்ன மாசுஇல் தூஉடை’[24], ‘அவிர் துகில் புரையும், அவ்வெள் அருவி’[25] என ஆடையின் நிறத்துக்கு புகை, அருவி, ஆவி, வெள்ளாங்குருகு முதலியனவும்; அகிலின் புகை,[26] சிலந்திக் கூடு[27] போன்றனவும் உவமையாகக் கூறப்படுவதிலிருந்து அறியமுடிகிறது.

### 1.4.6. ஆடைகளின் தொழில் திறம்

பண்டைக் காலத்தில் நெசவாளர்கள் ஆடைகளை நெய்வதில் தங்கள் தொழில் திறனைக் காட்டியுள்ளனர். இதனை, ‘புகை முகந்தன்ன மாசுஇல் தூ உடை’[28], ‘நுண்வினைக் கச்சை’[29], ‘பாம்புரித்தன்ன வான்பூங் கலிங்கம்’[30], ‘இழை

---

[1] திரு. 214
[2] கலி. 105:17
[3] கலி. 111:3
[4] கலி. 115:13-14
[5] பதி. 34:3
[6] கலி. 92:42
[7] பரி. 10:79
[8] நற். 120:7-8
[9] கலி. 69:3
[10] அக. 86:21-22
[11] அக. 136:20
[12] புற. 286:5. 291:2, 311:2
[13] பரி. 10:79
[14] நற். 33:6
[15] ஐங். 363:1
[16] கலி. 102:37
[17] கலி. 108:10
[18] புற. 274:1
[19] மது. 639
[20] புற. 398:20
[21] புற. 154:10-12
[22] பெரு. 469
[23] நற். 2-3
[24] திரு. 138
[25] குறி. 55
[26] புற. 337:9
[27] அக. 111:4
[28] திரு. 138
[29] குறி. 125
[30] புற. 397:15

மருங்கு அறியா நுழை நூல் கலிங்கம்’[1], ‘அரவு உரி அன்ன, அறுவை நல்கி’[2], ‘வினை மாண் காழகம் வீங்கக் கட்டி’[3] என வருவனவற்றைக் கொண்டு அறியலாம்.

### 1.4.7. ஆடைக்குக் கஞ்சியூட்டல்

ஆடைகள் நீர்த்துறைகளில் துவைத்துத் தூய்மை செய்யப்பட்டதை, ‘துறை போகு அறுவைத் தூமடி’[4] என்ற அடிகள் உணர்த்துகின்றன. ‘தூவெள் அறுவை’, ‘கழுவுறு கலிங்கம்’ என்பன தூய்மை செய்யப்பட்ட ஆடைகளை உணர்த்தின. ஆடைகளைத் துவைத்தல் அதற்குக் கஞ்சியூட்டுதல் போன்ற பணிகளை அக்காலத்தில் புலைத்தி எனப்பட்ட ஆடை வெளுப்பவள் மேற்கொண்டு வந்ததனை,

> ‘பசை விரல் புலைத்தி நெடிது பிசைந்து ஊட்டிய பூந் துகில்’[5], ‘சோறு அமைவு உற்ற நீருடைக் கலிங்கம்’[6], ‘காடி கொண்ட கழுவுறு கலிங்கம்’[7] ‘புலைத்தி எல்லித் தோய்த்த புகாப் புகர் கொண்ட புன் பூங் கலிங்கம்’[8], ‘களர்ப் படு கூவல் தோண்டி, நாளும், புலைத்தி கழீஇய தூ வெள் அறுவை’[9], ‘ஆடை கொண்டு, ஒலிக்கும், நின் புலைத்தி’[10]

என்ற பாடலடிகளைக்கொண்டு அறிந்துகொள்ள முடிகின்றது. இங்கு, ஆடைகளைத் துவைத்தல் மற்றும் அதற்குக் கஞ்சியூட்டுதல் ஆகிய செயல்பாடுகள் ஆடைகள் நூலால் நெய்யப்பட்டவை என்பதையும், தரமானவை என்பதையும் காட்டும் சான்றாய் அமைவது கவனிக்கத்தக்கது. மேலும், ஆடைகளை வெளுப்பதற்கென்று புலைத்தியர் எனப்பட்ட பணியாட்கள் இருந்ததைக்கொண்டு அக்காலச் சமூகத்தின் பொருளாதார நிலையையும் ஊகிக்க இடமளிக்கிறது.

### 1.4.8. ஆடைகளுக்குச் சாயம் தோய்த்தல்

ஆடை நெய்யும் பாவு விரிந்து இருந்ததை ‘துகில் ஆய் செய்கைப் பா விரிந்தன்ன’[11] என்பதைக் கொண்டும், ஆடைகளுக்குச் சாயம் தோய்க்கும் வழக்கு இருந்ததை ‘தோயாப் பூந்துகில்’[12] என்பதைக் கொண்டும், ஆடைகளுக்கு மணம் ஊட்டும் வழக்கம் இருந்ததை, “மென் நூல் கலிங்கம் கமழ் புகை மடுப்ப”[13], “வெறி உற விரிந்த அறுவை மெல் அணை”[14] எனச் சுட்டுவனவற்றைக் கொண்டும், அறிந்துகொள்ளலாம். நெய்தல் தொழில் செய்வோர் சிறியதும், பெரியதுமான ஆடைகளைக் கொண்டுவந்து விற்பனை செய்ததை,

> ‘தெண் திரை அவிர் அறல் கடுப்ப, ஒண்பல்
> குறியவும் நெடியவும் மடி தரூஉ விரித்து,
> சிறியரும் பெரியரும் கம்மியர் குழீஇ’[15]

என்றும், ஆடை விற்போரை ‘கலிங்கம் பகர்நர்’[16] என்றும் மதுரைக்காஞ்சி குறிப்பிடக் காணலாம்.

ஆடை நெய்யுங்கால் பாவானது விரிந்தது போல வெய்யில் தோன்றியதை, “துகில் ஆய் செய்கைப் பா விரிந்தன்ன வெயில் அவிர்பு நுடங்கும் வெவ் வெங்

---

[1] மது. 561
[2] பொரு. 83
[3] கலி.7:9
[4] நற். 2
[5] அக. 387:6
[6] மது. 721
[7] நெடு. 134
[8] நற். 90:3-4
[9] புற. 311:1-2
[10] கலி. 72:14
[11] அக. 293:4
[12] திரு. 15
[13] மது. 554
[14] நற். 40:5
[15] மது. 519-521
[16] மது. 513

*களரி"[1] என்று குறிப்பிடும் அகநானூற்றுப் பாடல் அடிகளைக் கொண்டு அக்கால நெசவுத் தொழில் பற்றிய செய்தியை அறியமுடிகிறது.*

*சங்க இலக்கியத்தில் ஆடைகளைப் பற்றியும் அதனை உடுத்தியதைப் பற்றியும் குறிப்புள்ளதே தவிர அவற்றை எப்படியெல்லாம் உடுத்தினர் என்பதை அறியமுடியவில்லை. இரண்டாயிரமாண்டுக்கு முற்பட்ட சங்ககால மக்கள் இன்றுள்ளதைப் போல் ஆடைகளைத் தைத்துப் பயன்படுத்தவில்லையாயினும், ஆடைகளைப் பலபட மடித்துச் செருகிக் கட்டும் கலையால் அவை அழகியல் தன்மையோடு உடுக்கப்பெற்றிருக்க வாய்ப்புண்டு எனக் கருதலாம். நீளமாக நெய்யப்பட்ட சேலையை எத்தகைய கத்தரிப்பும் தையலும் இல்லாமல் உடலில் கொசுவம் எனப்பட்ட மடிப்புகளை ஏற்படுத்தி இன்றும் பெண்கள் அணிவது பழங்கால உடுத்தும் முறையோடு ஒப்புநோக்கத் தக்கது.*

### *1.5. வாழிடங்கள்*

*நாடோடியாகச் சுற்றித்திரிந்து; கிடைத்ததை உண்டு; மரப்பொந்துகளிலும், கிளைகளிலும், குகைகளிலும் வாழ்ந்த மனிதன் காலப்போக்கில் நிலையாகத் தங்கி வாழத் தலைப்பட்டபோது தனக்கென ஒரு வாழிடத்தை அமைத்துக்கொள்ளும் நிலைக்கு வளர்ச்சிபெற்றான். அத்தகைய வாழிடங்கள் அவன் வாழ்ந்த இடத்தின் தட்பவெப்பச் சூழல், மேற்கொண்ட தொழில், பொருளாதாரம், அறிவுநிலை, இருப்பிடத்தை அமைத்துக்கொள்வதற்குக் கிடைத்த மூலப்பொருட்கள் மற்றும் அழகியல் உணர்வு முதலிய காரணிகளின் அடிப்படையில் அமைந்தன.*

*பழந்தமிழர்கள் தாங்கள் வாழ்வதற்கான இருப்பிடங்களை அமைத்துக்கொண்ட தன்மையை உலகலாவிய நிலையில் நோக்கும்போது தனித்தன்மை வாய்ந்ததாக விளங்குகின்றது. அவை பழந்தமிழர்களின் தொழில்நுட்பத் திறனையும், அழகியல் உணர்வையும் பறைசாற்றுவனவாக உள்ளன. இத்தகைய இருப்பிடங்கள் சாதாரண வாழிடங்களான குடில், குரம்பை என்ற நிலைகளில் தொடங்கி அனைத்து வசதிகளும் கொண்ட வளமனைகளான மாடம், நெடுநகர், அரண்மனை எனப் பல நிலைகளில் சிறந்து விளங்கின.*

*சங்கப்பாக்கள் மக்கள் வாழ்ந்த இருப்பிடங்களை அவற்றின் தன்மைக்கேற்ப அகம், இல், இல்லம், உறையுள், உறைவிடம், கல்லளை, குடில், குரம்பை, குறும்பு, நெடுநகர், புக்கில், மனை, மாடம், அரண்மனை, பொதியில், மன்றம் என்ற பல பெயர்களால் குறிப்பிடுகின்றன. இவ்வாழிடங்கள் ஒருவகையில் பழந்தமிழரின் வாழ்க்கை முறைகளையும், சமூகமாற்றத்தையும், பண்பாட்டையும் அறிந்துகொள்ளப் பெரிதும் துணைநிற்கின்றன.*

*தொடக்கத்தில் மனிதர்கள் தங்களுக்கான வாழிடங்களைத் தான் வாழ்ந்த நிலப்பகுதிகளில் கிடைத்த செடிகொடிகள், புல், இலை, தழை, ஓலை, மரக்கிளைகள் போன்ற இயற்கையில் கிடைத்த எளிமையான மூலப்பொருட்களைக் கொண்டே அமைத்துக்கொண்டனர். காலப்போக்கில் ஏற்பட்ட சமூக மாற்றங்களுக்குப் பிறகு மண்ணாலும், மரங்களாலும், கருங்கற்களாலும், செங்கற்களாலும் அமைந்த சாதாரண வீடுகள் முதல் உயர்ந்து நிற்கும் மாடமாளிகைகள் வரை அமைத்துக்கொள்ளத் தொடங்கினர். இங்குப் பல்வேறு விதமான வாழிடங்களை அமைத்துச் சங்கத் தமிழர்கள் வாழ்ந்ததைக் குறிஞ்சி(மலை), முல்லை(காடு),*

[1] *அக. 293:4-5*

*மருதம்(வயல்), நெய்தல்(கடற்பகுதி) பாலை(வறட்சியான பகுதி) என்று பகுக்கப்பட்ட நிலவியல் பின்னணியில் அமைந்த சங்கப் பாடல்களினூடாக அறிந்துகொள்ளும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. இது பழந்தமிழர்கள் தங்கள் வாழிடங்களை அமைத்துக்கொண்டதில் இயற்கைச் சூழலும், பண்பாட்டுச் சூழலும் எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தியது என்பதை அறியத் துணை நிற்கிறது.*

### *1.5.1. கோவலர் குடியிருப்பு*

*காடுசார்ந்த பகுதிகளில் மேய்ச்சல் தொழிலை அடிப்படையாகவும் கால்நடைகளைத் தங்கள் பொருளாதார மூலமாகக் கொண்டும் வாழ்ந்த ஆயர்கள் தாங்கள் வாழ்வதற்கான குடியிருப்பை அளவில் சிறியதாகவும், தங்கள் பகுதியில் கிடைத்த பொருள்களைக் கொண்டு எளியமுறையில் அமைத்துக்கொண்டதை, 'ஆடுகள் நின்று தின்னும் பொருட்டு அவற்றிற்கு உரிய தழைகளைத் தாம்பால் கட்டின குறிய காலையுடைய குடில்; அக்குடிலினது சிறு வாயில், கழியாற் செறிக்கப்பட்ட கதவினைக் கொண்டுள்ளது; வரகுகற்றையால் வேயப்பட்ட கழிகளைத் தலையிலே உடைய சேக்கையின்கண் தோற்பாயலை விரித்து அதன்கண் துயிலும் இடையன்; குறிய முளைகளையுடைய முற்றத்தின்கண், செம்மறி ஆடுகளும் வெள்ளாடுகளும் நீண்ட கயிற்றால் கட்டப்பட்டுக் கிடக்கும் அக்குடியிருப்பு இடுமுள் வேலியினை உடையதாகவும் எரு மிகுந்தும் காணப்பட்டது'[1] எனப் பெரும்பாணாற்றுப்படை விவரிக்கின்றது.*

### *1.5.2. உழவர் குடியிருப்பு*

*மேற்குறித்த கால்நடைப் பொருளாதார வாழ்வைக்கொண்ட ஆயர்களைக் காட்டிலும். உழவுத்தொழில் செய்வோர் நிலையான வாழ்க்கை வாழ்ந்தவர்கள். அவர்களின் வேளாண்பொருளாதாரம் தன்நிறைவுபெற்றது, உபரியைச் சேமித்துவைப்பதற்கும், அவர்களின் வேளாண்கருவிகளையும், புழங்கு பொருட்களையும் வைப்பதற்கு ஏற்ற முறையில் உழவர் குடியிருப்பு அமைந்திருந்தது. இத்தகைய குடியிருப்பினைக் குறித்து, 'முள்வேலி சூழ்ந்த உழவர் வீடுகளில் முற்றத்தின்கண், பெண் யானைத் திரள் நின்றாற் போன்ற நெற்கூடுகள் நிற்கும்; முற்றத்தை ஒட்டிய மரப்பந்தரின் கீழ் யானையின் காலைப் போன்ற வரகு திரிக்கின்ற திரிகை நடப்பட்டிருக்கும்; குறிய வண்டிகளோடு கலப்பையும் சார்த்தி வைப்பதால் சுவர் தேய்ந்து காணப்படும்; புகை சூழ்ந்து காணப்படும் கொட்டில்களும் கார் காலத்தே ஆகாயத்தே பரவிய முகில்கள் போன்று வரகு வைக்கோலால் வேயப்பட்ட கூரையைக் கொண்டதாகக் காணப்பட்டது'[2] எனப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.*

*தென்னந்தோப்புகளை உழுது பண்படுத்தும் உழவர்களின் மனைகள் தென்னையின் வாடிய மடலால் வேயப்பட்டு மணம் கமழ்கின்ற பூந்தோட்டங்கள் சூழத் தோப்புகள்தோறும் தனித்தனியாக அமைந்திருந்தன.[3] என்ற பெரும்பாணாற்றுப்படை தரும் சான்று மக்கள் தங்கள் வாழிடங்களில் கிடைத்த மூலப் பொருள்களைக்கொண்டு தங்கள் இருப்பிடத்தை அமைத்துக்கொண்ட முறையினைத் தெளிவாக்குகின்றது.*

---

[1] *பெரு. 147-153* [2] *பெரு. 184-191* [3] *பெரு. 351-355*

### *1.5.3. வலைஞர் குடியிருப்பு*

*வேழக்கோலை நிரல்பட வைத்து, இடையிடையே வெள்ளிய மரக்கொம்புகளைக் கலந்து, தாழை நாராலே யாத்துத் தருப்பைப் புல்லால் வேயப்பட்ட குறிய இறப்பையுடைய குடில். அக்குடிலின் முற்றத்தில் மீனை வாரி எடுக்கும் பறிகள் வைக்கப்பட்டுள்ளன, வளைந்த காலையுடைய புன்னையின் கொம்பை வெட்டி இயற்றிய பசுங்காய்கள் தொங்குகின்ற பந்தர் அமைக்கப்பட்டுள்ளது.[1] என வலைஞர் குடியிருப்பைக் குறித்துப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. இங்கு இருப்பிடத்தை அமைப்பதற்குரிய மூலப் பொருட்களான வேழக்கோல், தாழைநார், தருப்பைப்புல், புன்னைக்கொம்பு முதலியன நெய்தல் நிலத்தைச் சார்ந்தவையாக இருப்பது கவனிக்கத்தக்கது. மேலும் இவர்கள் தங்கள் உணவுத் தேவைக்கான காய்கறிகளைத் தங்கள் வீட்டின் முற்றத்திலேயே விளைவித்துக் கொள்ளும் திறன் படைத்தவர்களாக விளங்கினர்.*

### *1.5.4. அந்தணர் உறைவிடம்*

*அந்தணர் உறைவிடம் செழுமையான கன்றுகளைப் பிணித்துள்ள சிறிய கால்களைக் கொண்ட பந்தரினையும்; சாணத்தால் மெழுகப்பட்ட தரையினையும் வழிபடுந் தெய்வங்களையும் உடையதாக விளங்கியது. கிளிகளுக்கு வேதத்தின் ஓசையைக் கற்பிக்கும் அவ்வில்லத்தில் கோழிகளையும் நாய்களையும் வளர்ப்பதில்லை.[2] எனக் குறிப்பிடுவது கொண்டு அவர்களின் குடியிருப்பின் அமைப்பையும் பண்பாட்டையும் விளங்கிக்கொள்ள முடிகிறது.*

### *1.5.5. வளமனையும் அரண்மனையும்*

*செல்வவளம் படைத்தவர்களின் இல்லங்களும், அரண்மனைகளும் வடிவத்தில் உயர்ந்தும், அகன்றும், வசதிமிக்கதாகவும் இருந்ததன. இத்தகைய வளமனையின் அமைப்பினை, 'விண்ணுலகைத் தீண்டும் உயர்ந்த எழுநிலை மாடம், அம்மாடத்தின் மேல் மாடத்தில் இளவேனிற் பருவத்து உறங்குவதற்காகப் படுக்கைகள், காற்றுப்புகும் சாளரங்கள் அமைக்கப்பட்டு அவற்றில் சிறப்புற அமைக்கப்பெற்ற கதவுகள் என இருந்ததை,*

> *"வான் உற நிவந்த மேல் நிலை மருங்கின்*
> *வேனில் பள்ளித் தென்வளி தரூஉம்*
> *நேர் வாய்க் கட்டளை, திரியாது, திண் நிலைப்*
> *போர் வாய் கதவம் தாழொடு துறப்ப"[3]*

*என நெடுநல்வாடை விவரிக்கிறது. இந்நூலிலேயே நல்லநாள் பார்த்து, கைதேர்ந்த சிற்பநூல் அறிந்த தச்சர்களால் நுட்பமாகத் திட்டமிடப்பட்டு அரண்மனையின் ஒவ்வொரு பகுதியும் அமையவேண்டிய திசைகளைக் கருத்தில் கொண்டு, கோபுர வாயில், முற்றம், முன்வாயில், அந்தப்புரம் என சிற்ப வேலைப்பாடுகளுடன் அரண்மனை அமைக்கப்பட்டதை, 72 முதல் 114 வரையிலான அடிகள் விளக்கிக் காட்டுகின்றன.*

*பொருள்வளம் படைத்தவர்களின் வீடு அகன்ற முற்றத்தைக்கொண்டு விளங்கியதை, "அகல்நகர் வியன் முற்றம்"[4] என்றும், அந்நகரில் ஓவியங்கள்*

---

[1] பெரு. 263-267 [2] பெரு. 297-301 [3] நெடு. 60-63 [4] பட். 20

தீட்டப்பட்ட மாடங்கள் இருந்ததை, "வேறுபட்ட வினை ஓவத்து வெண்கோயில்"[1] என்றும், புகார் நகரில் அகன்ற உணவுச் சாலைகளும்,[2] துறவிகள் தவம்புரியும் சமணபௌத்த பள்ளிகளும் காணப்பட்டன[3] என்றும் புகார்நகரின் மக்கள் புழங்கும் வாழிடங்களைப்பற்றி பட்டினப்பாலை விவரிக்கின்றது.

### 1.5.6. பரதவர் இல்லம்

பரதவர்களின் குடில்கள் குறுகிய நுழைவாயிலைக் கொண்டிருந்தன. அவற்றின் குறுகிய கூரையின் நடுவில் தூண்டிலின் காம்பு செருகி வைக்கப்பட்டிருந்தது. இவ்வில்லங்களின் முன்னர் உள்ள மணற்பரப்பில் வலைகள் உலர்த்தப்பட்டிருக்கும்.[4] என்ற செய்தி தொழில் அடிப்படையில் அமைந்த குடியிருப்பைக் காட்டுகிறது.

### 1.5.7. பாணர் குடியிருப்பு

சிறுபாணாற்றுப்படை பாணன் ஒருவனின் வறுமை நிறைந்த வீட்டை, 'பொலிவிழந்த அடுக்களை, கூரையிடத்து உள்ள கழிகள் கட்டற்று வீழ்ந்த கறையான் புற்றுவைத்த பழைய சுவர், காளான் பூத்துக் கிடக்கும் அட்டில்'[5] என விவரிக்கிறது. இது பொருளாதார அடிப்படையில் வறியோர் வாழ்ந்த வீட்டின் நிலையைக் காட்டுகிறது.

### 1.5.8. குடில்

சங்க இலக்கியத்தில் குடில் எனப்பட்ட குடிசையை அமைத்து மருத நில உழவர்கள் வாழ்ந்தனர். இக்குடில் மருதநில வயல் வரம்புகளிலே அமைக்கப்பட்டிருந்ததையும், அக்குடிலின் கூரை புதிய வைக்கோலால் வேயப்பட்டதையும். அக்குடிலின் முற்றத்தில் உலக்கையைக் கொண்டு அவல் இடிக்கப்பட்டதையும்,

> "………வரம்பில்
> புது வை வேய்ந்த கவி குடில் முன்றில்
> அவல் எறி உலக்கைப் பாடு……"[6]

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

### 1.5.9. குரம்பையின் அமைப்பு

குரம்பை எனப்படும் சிறுகுடில்கள் கால்கள் நடப்பட்டும், கழிகளைக் கொண்டும் அமைக்கப்பட்டன, அவற்றின் கூரை புல், இலை, முள்ளிச் செடிகள், ஈந்தின் இலை, தினைத்தாள் போன்றவற்றால் வேயப்பட்டதை, முறையே, "நடுகாற் குரம்பை"[7], "கழிமிடைந்து இயற்றிய, புல்வேய் குரம்பை"[8], "புல்வேய் குரம்பை"[9], "இலைவேய்குரம்பை"[10], "முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பை"[11], "ஈத்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை"[12], "இருவி வேய்ந்த குறுங்காள் குரம்பை"[13] எனவரும் சங்கப் பாடலடிகள் காட்டுகின்றன.

---

[1] பட். 49-50
[2] பட். 43
[3] பட். 53
[4] பட். 81-83
[5] சிறு. 132-134
[6] பெரு. 224-226
[7] நற். 285:7
[8] மலை. 438-439
[9] அகம். 369:24
[10] மது. 310
[11] நற். 207:2
[12] பெரு. 88
[13] குறி. 153

அவற்றின் தோற்றம் குறுகியும், புதர் போன்றும் இருந்ததை, ''குறி இறைக் குரம்பை''[1], ''புதல் போல் குரம்பை''[2] என்பது கொண்டும், அவை, கானகப் பகுதிகளில் இருந்த கற்பாறைகளின் மீது அமைக்கப்பட்டிருந்ததை, ''கலைபிணை விளிக்கும் கானத்து ஆங்கண், கல் சேர்பு இருந்த கதுவாய்க் குரம்பை''[3] எனக் குறிப்பது கொண்டும் அறியமுடிகிறது.

பாலை நிலத்தில் வாழ்ந்த எயினர்கள் இத்தகைய குரம்பையினை அமைத்து வாழ்ந்தனர். இதில் வாழ்ந்த எயினர்கள் மிக்க வெப்பத்தின் காரணமாக வருந்தினர். என்பதை, ''உறு வெயிற்கு உலைஇய உருப்பு அவிர் குரம்பை''[4] எனச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

### *1.5.9.1. குரம்பைகளில் வாழ்ந்தோர்*

குறிஞ்சி நிலப் பகுதியில் வாழ்ந்த எயினர்கள் இத்தகைய சிறுகுடில்களில் வாழ்ந்தனர். இக்குடிசை அணிலும் எலியும் திரியாதபடி முள் போன்ற ஈந்தின் இலையால் வேயப்பட்டிருந்ததைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.[5]

> ''தீம் தயிர் கடைந்த திரள் கால் மத்தம்
> கன்று வாய் சுவைப்ப, முன்றில் தூங்கும்
> படலைப் பந்தர்ப் புல் வேய் குரம்பை,
> நல்கூர் சீறூர்''[6]

எனக் குறிப்பது கொண்டு இத்தகைய குரம்பை எனப்படும் சிறு குடில்கள் முல்லை நிலத்திலும் அமைந்திருந்ததையும்,''படலைப் பந்தர்ப் புல் வேய் குரம்பை,நல்கூர் சீறூர்''[7], ''நல்கூர் பெண்டின் புல் வேய் குரம்பை''[8] எனச் சுட்டுவது கொண்டு இக்குடில்கள் வறுமைப்பட்ட எளிய மக்களின் வாழிடமாக இருந்ததையும் அறிய முடிகிறது. மேலும் பாலை நிலமான கானகப் பகுதிகளில் வாழ்வோர் இத்தகைய குடில்களில் வாழ்ந்ததையும், இத்தகைய குடில்களில் உணவு சமைத்தல் குடிலின் முற்றத்தில் நடைபெற்றதையும்,

> ''அகல் இலை கவித்த புதல் போல் குரம்பை,
> ஊன் புழுக்கு அயரும் முன்றில்
> கான்கெழு வாழ்நர் சிறுகுடி யானே''[9]

எனவரும் அகநானூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன. மேற்குறித்த இவர்களேயன்றி, குறவர், விலைஞர், பரதவர், பாலை நில மறவர்[10], கானவர்[11] ஆகியோரும் இத்தகைய குரம்பைகளை அமைத்து வாழ்ந்ததை, ''குறி இறைக் குரம்பைக் குறவர் மாக்கள்''[12], ''விலைஞர் குரம்பை''[13], ''குறியிறைக் குரம்பைக் கொலை வெம் பரதவர்''[14] எனவரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

'குரம்பை' எனப்படும் சிறுகுடில்கள் தேவையின் பொருட்டுக் குறிஞ்சி நிலக் குறவர்களால் தற்காலிகமாகவும் அமைத்துக்கொள்பவையாக இருந்ததை, 'பெரிய காய்களைக் கொண்ட பலாமரத்தின் பழுத்த பழங்களைக் கொள்ளும் பொருட்டுக் குறவர்கள் குடிசையை நாட்டினர்'[15] எனக் குறிப்பிடுவது கொண்டு அறிய முடிகிறது.

---

[1] புற. 129:1
[2] அக. 315:16
[3] அக. 129:5-6
[4] சிறு. 174
[5] பெரு. 83-88
[6] அக. 87:1-4
[7] அக. 87:3-4
[8] அக. 369:24
[9] அக. 315:16-18
[10] அக. 63
[11] அக. 172
[12] புற. 129:1
[13] பட். 198
[14] அக. 210:1
[15] அக. 12:8-9

நில அடிப்படையில் பார்க்கும்போது 'குரம்பை' எனப்பட்ட சிறுகுடில்கள் மருதம் தவிர்த்த குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை ஆகிய நிலப்பகுதிகளிலேயே பெரிதும் அமைந்திருந்தை மேற்கண்ட சான்றுகள் காட்டுகின்றன.

### 1.5.10. குறும்பு

குறும்பு என்னும் சொல் சங்கப் பாக்களில் அரண் என்ற பொருளை உணர்த்தி நிற்கிறது. இத்தகைய இருப்பிடங்கள் பாலை நிலத்தில் அமைந்திருந்தன. இது கல்லால் அரண் செய்யப்பட்ட இருப்பிடமாக இருந்ததை, "கடுங்கண் மறவர் கல்கெழு குறும்பு"[1] என்றும், பகைவரின் அரண் என்பதைக் குறிக்க "மேவார் அருங்குறும்பு"[2] என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

கொடிய வில்லையுடைய எயினர் அரண் 'ஊகம் புல்லாலே வேயப்பட்ட உயர்ந்த நிலைமையினையுடைய மதிலையும், மலையில் தேனிறாலை ஒக்கும் குதையினையுடைய அம்புக் கட்டினையும், கடிதாக ஒலிக்கும் துடிகள் தொங்குகின்ற திரண்ட காலையுடைய பந்தரினையும், சங்கிலியால் நாய்களைக் கட்டி வைத்துள்ள கிட்டுதற்கரிய காவலமைந்த வீடுகளையும், உயிர்வாழ் முள்வேலியையும் அதனைச் சூழ்ந்த காவல்காட்டினை உடைய பக்கத்தினையும், உருண்ட கணைய மரமிட்ட ஒட்டுக் கதவினையும், செவ்வே நிற்கின்ற நெடிய முனையினையுடைய வலிய கழுக்களை நிரைத்த ஊர்வாயிலையும் உடையதாக இருந்ததை பெரும்பாணாற்றுப்படை கொண்டு அறியமுடிகிறது.[3]

இத்தகைய அரண்களில் வில் ஏந்திய மறவர்கள் வணிகர்களைக் கொன்று அவர்களிடமிருந்து கொள்ளையிட்ட பொருட்களை தங்களுக்குள் பகுத்துக்கொண்டனர்.[4]

வளைந்த வில்லையுடைய எயினர்கள் தம் அரணிலிருந்து ஆறலைத்தற்கு ஊக்கத்துடன் எழுந்துவந்து அம்பினை எய்யும் இடமாதலின் 'குறும்பு', "கொடுவில் எயினர் குறும்பு"[5] எனப்பட்டது.

வெற்றி தரும் வேலினையும், மழைபோல் சொரியும் அம்பினையும், மேகம் போன்ற தோற்கிடுகினையும் உடைய சோழரது விற்படை பொருந்தியதாக அரண் விளங்கியதை, "சோழர் வில்ஈண்டு குறும்பு"[6] என அகநானூறு குறிப்பிடுகிறது. மேற்குறித்த கருத்துக்களை நோக்கும்போது குறும்பு என்பது தொடக்கத்தில் எயினர், மறவர் எனப்பட்ட பாலை நில மக்கள் வாழ்ந்த இடமாக இருந்து பின்பு போர் வீரர்கள் தங்குமிடத்தைக் குறிப்பதாயிற்று என்பதை அறியமுடிகிறது.

### 1.5.11. மனை

சங்க இலக்கியத்தில் 'மனை' என்றும் மக்கள் வாழும் இருப்பிடம் குறிப்பிடப்படுள்ளது. இது ஆணும் பெண்ணும் நிலையாகத் தங்கி வாழும் இருப்பிடத்தைக் குறித்தது. இவ்வாழிடம் ஆணும்பெண்ணும் கூட்டாக வாழும் குடும்பம் என்ற அமைப்போடு தொடர்புடையதாகக் காணப்படுகிறது.

[1] அக. 87:7
[2] அக. 342:7-8
[3] பெரு. 122-129
[4] அக. 89
[5] அக. 319:3
[6] அக. 336:20-21

*சங்கப் பாடல்களில் 'மனை' பற்றி பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவற்றுள் நம்மனை[1], எம்மனை[2], தன்மனை[3], நும்மனை[4], உம்மனை[5], இம்மனை[6], தாய்மனை[7], காதலிமனை[8], பிறர்மனை[9] என வருவன இருப்பிட வேறுபாட்டைச் சுட்டுவதாகப் பயின்று வந்துள்ளன.*

*மனையின் இயல்பினைக் காட்டுவதாக வளமனை[10], நன்மனை[11], வறுமனை[12], பாழ்மனை[13], செழுமனை[14], கடிமனை[15] ஆகியன உணர்த்துகின்றன. இவை முறையே வளம் நிறைந்த வீடு, விருந்தினரைப் போற்றும் வீடு, பொலிவிழந்த மனை, வறிய இல்லம், பாழ்பட்ட வீடு, காவல் மிக்கவீடு மற்றும் மனையறம் சிறந்த வீடு என்ற பொருளில் பயின்று வந்துள்ளதைக் காணமுடிகிறது. பிற வீடுகளிலிருந்து திருமண வீட்டைச் சிறப்பித்துக்காட்ட மணமனை[16] என்றும் சுட்டப்படுள்ளது.*

### *1.5.12. நெடுநகர்*

*சங்கப் பாடல்களில் பொருள்வளம் படைத்தவர்களின் வளமும் வசதிகளும் கொண்ட வாழிடமாக நெடுநகர் எனப்படும் பேரில்லங்கள் திகழ்ந்தன. "நிலவுடைமைச் சமூகத்தின் மிகை உற்பத்தி – உபரி இலாபம் தந்த செல்வக் குவியல்களிடைதான் மாபெரும் கலைக்கோயில்களிலிருந்து மாடமாளிகைகள் வரை வளர்ச்சியடைய முடிந்தது"[17] என என். சண்முகலிங்கன் குறிப்பிடுவது இங்கு கவனிக்கத்தக்கது. நகர் என்ற சொல்லுக்கு அகராதிகள், "நகரம்; மாளிகை; அரண்மனை; கோயில்; சடங்கு செய்யும் இடம்; விழாக்கள் நிகழும் மண்டபம்; மனைவி"[18] என விளக்கமளிக்கின்றன. இவற்றில் இல்லம், மாளிகை, பெரியவீடு, அரண்மனை என்ற பொருளில் சங்கப் பாடல்களில் நெடுநகர் குறிப்பிடப்பட்டுள்ளது. 'நகர்' என்ற சொல்லோடு நீண்ட, உயர்ந்த என்ற பொருள் தரும் 'நெடு' என்னும் அடை சேர்க்கப்பட்டு 'நெடுநகர்' என்ற சொல் ஆளப்பட்டுள்ளது.*

*இத்தகைய நெடுநகர் எனப்படும் மாளிகைகள் நகர்ப்புறங்களில் அமைந்திருந்தன. நகர்ப்புறங்கள் வணிக மையங்களாக விளங்கியமையால் செல்வம் கொழித்தது எனவே செல்வந்தர்களும், அரசர்களும் இத்தகைய பேரில்லங்களை அமைத்து வளவாழ்வு வாழ்ந்தனர். இந்நெடுநகர்கள் தொழில் திறம் வாய்ந்த கட்டடக் கலைஞர்களால் கட்டப்பட்டதை, "நல்வினை நெடுநகர்"[19] என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.*

*நெடுநகர்கள்(மாளிகை) சுட்டசெங்கற்களால் கட்டப்பட்டன. இவற்றில் நெற்கூடுகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. இவை மலையைக் குடைந்து செய்தாற்போன்ற வானளாவிய உயரத்தைக் கொண்டிருந்தன. இதனை முறையே*

*"சுடுமண் ஓங்கிய நெடு நகர் வரைப்பு"[20]*

---

[1] நற். 129:5
[2] நற். 330:7; கலி. 75:18
[3] ஐங். 3:5
[4] ஐங். 86:4
[5] அக. 56:14
[6] அக. 56:14
[7] நற். 26:4
[8] ஐங். 480:3
[9] கலி. 59:16
[10] ஐங். 66:4; புற. 354:6
[11] நற். 280:9
[12] அக. 203:7, 369:25
[13] பதி. 26:10
[14] அக. 355:8
[15] நற். 40:1; கலி. 24:9
[16] அக. 107:21; கலி. 68:18, 70:10
[17] என். சண்முகலிங்கன், இலக்கை -இந்திய மானிடவியல், ப. 171
[18] http://agarathi.com/word/நகர்
[19] ஐங். 376:3
[20] பெரு. 405

“நெடு நகர் வீழ்ந்த கரி குதிர்ப் பள்ளி”[1]

“நெல்லுடை நெடு நகர்”[2]

“வரை குயின்றன்ன வான் தோய் நெடுநகர்”[3]

“விண்பொரு நெடுநகர்”[4]

எனவரும் சங்கப் பாடலடிகள் உணர்த்துகின்றன. பசும்பூண் பாண்டியனின் அரண்மனை மலைபோன்று உயர்ந்தோங்கிக் காணப்பட்டதை, “மலைபுரை நெடுநகர்”[5] என்றும், முற்றங்களில் வெண்மணல் பரப்பப்பட்டு பொலிவு பெற்ற வாயிலை உடையதாக நெடுநகர் விளங்கியதை, “வெண்மணல் நிவந்த பொலங்கடை நெடுநகர்”[6] என்றும் அவ்வில்லங்கள் செல்வ வளம்பெற்று விளங்கியமையால், “பொன்னுடை நெடுநகர்”[7] என்றும் அகநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

### 1.5.13. மாடம்

சங்கத் தமிழரின் நாகரிக வளர்ச்சிக்கும் தொழில்நுட்ப அறிவிற்கும் சான்றாகத் திகழ்வது ‘மாடம்’ எனப்பட்ட வாழிடங்கள். இத்தகைய மாடங்களின் அமைப்பினை, “மழை ஆடும் மலையின் நிவந்த மாடம்”[8], “மலை புரை மாடம்”[9], “நிரை நிலை மாடம்”[10], “விண்பொர நிவந்த, வேயா மாடம்”[11], “விண்தோய் மாடம்”[12], “பிறங்குநிலை மாடம்”[13], “நெடுங்கால் மாடம்”[14], “கொடுங்கால் மாடம்”[15] என்றெல்லாம் சங்கப்பாடல்கள் சிறப்பிக்கின்றன.

‘வணிக வீதிகளில் அமைந்த மாடங்கள், அருகருகே அமைந்த படிகளைக் கொண்டு, நீண்ட ஏணிப்படிகள் சார்த்தப்பட்டவையாகவும், வளைந்த திண்ணைகளை உடையவையாகவும், வீடுகள் பல கட்டுக்களைக் கொண்டு அமைந்தவையாகவும், சிறிய வாயிலும், பெரிய வாயிலும், பெரிய இடைக்கழிகளும் பெற்று மேகங்கள் தீண்டும் உயர்ச்சியை உடையவையாகவும் காணப்பட்டது. அவற்றில் உறைந்த மகளிர் சாளரங்களின் வழியாக வீதிகளில் நடைபெற்ற விழாவினைக் காண்பர்’ என மாடத்தின் அமைப்பு குறித்து,

“குறுந் தொடை நெடும் படிக்கால்
கொடுந் திண்ணை, பல் தகைப்பின்,
புழை, வாயில், போகு இடைகழி,
மழை தோயும் உயர் மாடம்”[16]

என்று பட்டினப்பாலை, தெளிவாக விளக்கிக் காட்டுகிறது.

மதுரை மாநகரில் மேகங்கள் உலவுகின்ற மலை போல ஓங்கிய மாடங்கள் இருந்ததையும் அவை மதிலால் சூழப்பட்டிருந்தது,[17] இத்தகைய மாடங்களின் நிலாமுற்றத்தில் நின்றுகொண்டு மகளிர் தீர்த்தநீரில் ஆடும் திருவிழாக் காட்சிகளைக் கண்டனர்[18] என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

---

[1] மது. 169
[2] அக. 176:20
[3] அக. 93:12
[4] அக. 167:4
[5] அக. 296:12
[6] அக. 325:2
[7] அக. 385:5
[8] மது. 355
[9] மது. 406
[10] மது. 451
[11] பெரு. 348
[12] பெரு. 369
[13] பட். 285
[14] பட். 111
[15] பட். 261
[16] பட். 142-145
[17] மது. 355
[18] மது. 443-452

*கடற்கரையை ஒட்டிய துறைமுக நகரங்களில் இத்தகைய மாடங்கள் இருந்ததையும்,*[1] *இவற்றில் செல்வவளம் மிக்க வணிகர்கள் வாழ்ந்ததையும், உயர்ந்து விளங்கும் இத்தகைய மாடத்தின்கண் மகளிர் பந்தாடியதை, "உயர்நிலை வான்தோய் மாடத்து, வரிப்பந்து அசைஇ"*[2] *என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.*

*பாவை விளக்குகள் ஒளிவீசும் உயர்ந்த ஏழடுக்கு மாளிகையில் அரசி இருந்ததை "பாவை விளக்கில் பரூஉச் சுடர் அழல, இடம் சிறந்து உயரிய எழு நிலை மாடம்"*[3] *என முல்லைப்பாட்டு சுட்டுகிறது.*

*புகார் நகரின் கடற்கரைப் பகுதிகளில் நீண்ட தூண்களைக் கொண்ட உயர்ந்த மாடங்கள் கட்டப்பட்டிருந்தன. அவற்றில் ஒளியுடைய விளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன.*[4] *என்றும், சோழனின் தலைநகரான உறந்தை பெரிய நிலைகளையுடைய மாடங்களைக் கொண்டு விளங்கியது*[5] *என்றும் பட்டினப்பாலை. உரைக்கின்றது.*

*நன்னனது மூதூரில் இத்தகைய மாடங்கள் மலை போலவும், மேகத்தைப் போன்றும் ஓங்கி இருந்தது என மலைபடுகடாம்*[6] *குறிப்பிடுகிறது. அதியமான் நெடுமான் அஞ்சியின் தலைநகரில் மலைகளில் கூட்டத்தை ஒத்ததாக மாடங்கள் இருந்ததை "மலைக் கணத்து அன்ன மாடம்"*[7] *என ஔவையாரின் புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது.*

*இத்தகைய மாடங்கள் நகர்ப்புறங்களில் அமைந்திருந்ததை, "நல்நகர், விண்தோய் மாடம்"*[8] *என்றும், அவை நீண்ட தூண்களைக் கொண்டு ஒளியுடைய விளக்குகள் ஏற்றப்பட்டதால், "நெடுங்கால் மாடத்து ஒள்எரி"*[9] *என்றும், வளைந்த திண்ணைகளைக் கொண்டிருந்ததால், "கொடுங்கால் மாடம்"*[10] *என்றும், இவை வெள்ளிய சுண்ணச்சாந்தால் கட்டப்பெற்றிருந்ததால் "புதுப்பிறை அன்ன சுதைசெய் மாடம்"*[11] *என்றும், ஆய் சுதை மாடத்து அணிநிலா முற்றம்"*[12] *என்றும் குறிப்பிடப்படுள்ளன. மேலும், மாடங்கள், "மாடம் ஓங்கிய மல்லல் மூதூர்"*[13]*, "மாடம் பிறங்கிய மலி புகழ் கூடல்"*[14] *என நாட்டின் வளமையைக் காட்டும் குறியீடாகவும் குறிப்பிடப்படுள்ளது கவனிக்கத்தக்கது.*

### *1.5.14. கல்லளை*

*கல்லளை என்ற சொல் கற்குகையைக் குறிக்கிறது. இத்தகைய கல்லளையிலே புலி தங்கும் இயல்புடையதை "புலி சேர்ந்து போகிய கல் அளை"*[15]*, "புலிபுகா உறுத்த புலவுநாறு கல்அளை"*[16] *எனக் குறிப்பிடுவனவற்றைக் கொண்டு அறியலாம். மனிதர்கள் தங்களுக்கான இருப்பிடங்களைத் தாங்களே அமைத்துக் கொள்வதற்கு முன்பு இத்தகைய கல்லளைகளில் வாழ்ந்துள்ளனர்.*

*கூத்தர்களை இரவு நேரத்தில் புதல்வர்களுடன் செல்லும் செலவினைத் தவிர்த்து இத்தகைய குகைகளில் தங்கிச் செல்லுமாறு அறிவுறுத்துவதை,*

*"புள்கை போகிய புன்தலை மகாரோடு*
*அற்கு, இடை கழிதல் ஓம்பி, ஆற்ற, நும்*

---

[1] *பெரு. 320-322*
[2] *பெரு. 332-333*
[3] *முல். 85-86*
[4] *பட். 111*
[5] *பட். 285*
[6] *மலை. 484*
[7] *புற. 390:7*
[8] *பெரு. 368-369*
[9] *பட். 111*
[10] *பட். 261*
[11] *புற. 378:6*
[12] *கலி. 96:19*
[13] *நெடு. 29*
[14] *மது. 429*
[15] *புற. 86:4*
[16] *குறு. 253:6*

இல் புக்கன்ன, கல் அளை வதிமின்''[1]

என்று மலைபடுகடாம் சுட்டுவது கொண்டு கல்லளை வழிப்போக்கர்களின் தங்குமிடமாகப் பயன்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

### 1.5.15. பிற வாழிடங்கள்

'அகம்' இது சங்கப் பாக்களில் ஆணும் பெண்ணுமாய் சேர்ந்து குழந்தைகளைப் பெற்று அமைதியாக இல்லறம் நடத்தும் இடம்[2] என்ற பண்பாட்டுப் பொருளை உரைப்பதைத்தாண்டி அதன் உருவ அமைப்புகளைப் பற்றி அறிந்துகொள்ள இயலவில்லை.

'இல்' என்னும் இருப்பிடம் சங்கப் பாடல்களில் பல இடங்களில் சுட்டப்படுள்ளது. இத்தகைய இல்லங்கள் நல்இல், மூதில், சிற்றில், பேரில் என்று அவற்றின் தனித்தன்மை கருதி குறிப்பிடப்பட்டுள்ளன. அதுமட்டுமின்றி உரிமை நிலையில் எம்இல், தம்இல், என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

'நல்இல்' எனப்பட்ட வாழிடம் மண்டபம், கூடம், தாய்க்கட்டு, அடுக்களை எனப் பல அங்கங்களைக் கொண்டதாகவும், உயர்ந்தும், தென்றல் காற்று உலவும் பல சாளரங்களைக் கொண்டு ஆறு கிடந்தாற் போன்ற அகன்ற தெருக்களில் காணப்பட்டதை, ''வகைபெற எழுந்து வானம் மூழ்கி, சில்காற்று இசைக்கும் பல்புழை நல்இல்''[3] என்றும், வணிகர் இல்லங்கள் மலையைப் போன்று உயர்ச்சியுடையதாய் தொழில் திறத்தால் மாட்சிமைப் பட்டதாய் அமைந்திருந்ததை, ''குறும்பல் குழுவின் குன்று கண்டன்ன, பருந்து இருந்து உகக்கும் பல்மாண் நல்இல்''[4] என்றும், மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

'மூதில்' என்பது பழைமையான இருப்பிடத்தையும், 'சிற்றில்' எனப்பட்ட இருப்பிடங்கள் முள்வேலியால் சூழப்பட்டு வளைந்த கால்களையுடைய பந்தலையும், செம்மண் பூசப்பட்டும் காணப்பட்டதை, ''இடுமுள் வேலி முடக்கால் பந்தர், புதுக்கலத்து அன்ன செவ்வாய்ச் சிற்றில்''[5] என்பது கொண்டும், சிற்றில்லில் கூரையைத் தாங்க தூண்கள் இருந்ததை, ''சிற்றில் நல் தூண் பற்றி''[6] எனக் குறிப்பது கொண்டும் அறிந்துகொள்ள முடிகிறது.

'பேரில்' என்பது அமைப்பு நிலையாலும் செல்வச் சிறப்பாலும் ஏற்பட்ட பெயர் என்பதை உணர முடிகிறது. இத்தகைய பேரில்லம் ஒன்று கதவடைக்கப்படாததாகவும், வண்டுகள் மொய்க்கும் மதுவினால் மண்டை என்னும் கலம் எப்பொழுதும் நிறைந்திருப்பதாகவும், வருவார்க்கு வரையறை இல்லாமல் வழங்கும் சோற்றை உடைய தேய்ந்த குறட்டைக் கொண்ட முற்றத்தைக் கொண்டு விளங்கியதை,

''அந்தோ! எந்தை அடையாப் பேர் இல்!
வண்டு படு நறவின் தண்டா மண்டையொடு
வரையாப் பெருஞ் சோற்று முரி வாய் முற்றம்''[7]

என்று புறநானூற்றுப்பாடல் குறிப்பிடுகிறது.

---

[1] மலை. 253-255
[2] அக. 66, 123
[3] மது. 357-358
[4] மது. 501-502
[5] அக. 394:8-9
[6] புற. 86:1
[7] புற. 261:1-3

‘புக்கில்’ என்பது தற்காலிகமாகத் தங்கும் இடத்தையும், அடைக்கலமாகச் செல்லும் இடத்தையும் குறிப்பிடுகிறது. புலவர்க்கும் அந்தணர்க்கும் வள்ளல்களின் இல்லம் புக்கில் ஆவதை, “புலவர் புக்கில்”[1], “துகள் அறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்”[2]என வரும் புறப் பாடல் அடிகளும். பரத்தையை நாடிச் செல்லும் தலைவனுக்கு அப்பரத்தை இல்லம் புக்கில் ஆவதை, “நின்றாய்; நின் புக்கில் பல”[3] எனக் கலித்தொகை சுட்டுவது கொண்டும் அறியமுடிகிறது.

### 1.5.16. பொதியிலும் மன்றமும்

மேற்குறித்த தனிப்பட்ட வாழிடங்கள் மட்டுமின்றிச் சமூகத்தேவையின் பொருட்டு மக்கள் ஒன்றாகக் கூடும் பொது இடங்களும் சங்க காலத்தில் இருந்தன. அவை பொதியில், மன்றம் என்ற பெயரால் விளங்கின. இத்தகைய பொதுமக்கள் கூடும் அம்பலங்கள் ஆலமரத்தின் அடியில் இருந்ததை, “தொல் மூதாலத்துப் பொதியில்”[4], “தொல்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்”[5] எனச் சுட்டுவதைக் கொண்டு அறியலாம். இப்பொதியில்கள் விட்டத்தையும் தூண்களையும் கொண்டு விளங்கியதை, “செதுகாழ் சாய்ந்த முதுகாற் பொதியில்”[6] என்பதைக் கொண்டும், மேலும் இவை, மக்கள்பலரும் தங்குமிடமாக இருந்ததை, “முன் ஊர்ப் பொதியில் சேர்ந்த மென்நடை இரும்பேர் ஒக்கல்”[7] எனக் குறிப்பிடுவதைக் கொண்டும் அறியமுடிகிறது.

சான்றோர் அவை பொதியிலில் இருந்ததை மதுரைக்காஞ்சி “அவை இருந்த பெரும் பொதியில்”[8] என்கிறது. மேலும் இப்பொதியிலைக் குறித்து பட்டினப்பாலை, ‘போரில் அரசனால் சிறைப்பிடுத்திக் கொண்டுவரப்பட்ட பகை மன்னர்களின் உரிமை மனைவியர் பலரும், நீர் உண்ணும் துறைகளில் நீராடி, அம்பலங்களை மெழுகித் தூய்மைப் படுத்துவர், அந்திப் பொழுதில் விளக்குகளை ஏற்றி, தெய்வம் உறையும் தறிகளுக்கு மலர் சூட்டி வழிபாடு செய்வர். புதியவராய் வந்து தங்குபவர்களும் வழிபாடு செய்யும் இடங்களாக அம்பலங்கள் விளங்கின.’[9] என்கிறது. அதேபோல் முருகன் எழுந்தருளும் பல்வேறு இடங்களில் மன்றமும், பொதியிலும் இடம்பெற்றிருந்ததை, “மன்றமும் பொதியிலும், கந்துடை நிலையிலும்”[10] என்ற திருமுருகாற்றுப்படை அடிகளால் அறியமுடிகிறது.

இப்பொதியில்களில் உறையும் கடவுளுக்கு வழிபாடு நடத்தப்பட்டதையும், போரின் காரணமாகப் பொதியில் பாழ்பட்டதால் தெய்வங்கள் தாம் உறைந்த தூண்களிலிருந்து அகலும்; தாம் பலி பெறும் இடங்களை மாற்றிக்கொள்ளும் என்பதையும், அப்பாழ்பட்ட அம்பலங்கள் முதியோர் சூதாடும் இடமாக இருந்ததையும்,

> “புற்றுடைச் சுவர புதல் இவர் பொதியில்,
> கடவுள் போகிய கருந் தாட் கந்தத்து”[11]
>
> “கலி கெழு கடவுள் கந்தம் கைவிடப்
> பலி கண் மாறிய பாழ்படு பொதியில்,
> நரை மூதாளர் நாய் இடக் குழிந்த”[12]

எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன.

---

[1] புற. 375:15
[2] புற. 221:6
[3] கலி. 90:25
[4] குறு. 15:2
[5] அக. 251:8
[6] அக. 373:4
[7] புற. 390:19-20
[8] மது. 161
[9] பட். 246-249
[10] திரு. 226
[11] அக. 307:11-12
[12] புற. 52:12-14

### 1.5.17. மன்றம்

சங்கப் பாடல்கள் காட்டும் 'மன்றம்' எனப்பட்ட பொதுவிடத்தில் குரவை, மடலேறுதல், பலி போன்ற பல்வேறு நிகழ்வுகள் நடைபெற்றன. மன்றம் பலர் கூடும் இடமாக இருந்ததை, "மன்றம் போகி, பகலே, பலரும் காண"[1] என்ற அடி சுட்டுகின்றது. இம்மன்றங்கள் மரங்களின் அடியில் அமைந்திருந்தன என்பதை 'மன்றவேம்பு'[2], 'மன்றப் பனை'[3], 'மன்று இரும் பெண்ணை'[4], 'மன்றப் புன்னை'[5], 'மன்ற வேங்கை'[6], 'இரத்தி நீடிய அகன் தலை மன்றம்'[7] முதலான தொடர்கள் சுட்டுவதாகக் கருதலாம்.

போர்களின் போது இத்தகைய மன்றங்களைப் பாழ்படுத்துவதை போரிடுவோர் நோக்கமாகக் கொண்டிருந்தனர். போரின் காரணமாகச் சிற்றூரின் குடியிருப்புகள் அழிந்ததால் மன்றங்கள் ஆளில்லாது போனதை, "ஆள்இல் மன்றம்"[8] என்றும், போரின் காரணமாக ஊர்களிலுள்ள மன்றங்கள் நெருஞ்சி முட்செடிகள் படர்ந்து பாழ்பட்ட இடங்களாக மாறியதையும், பசுக்கள் தங்குகின்ற அந்த மன்றங்கள் சாணமும் ஆரவாரமும் இன்றிக் கிடந்ததை, "தாது எரு மறுத்த கலி அழி மன்றம்"[9] என்றும், போர்களின் போது மன்றங்கள் பாழ்படுத்தப்பட்டதை, "நின் படைஞர், சேர்ந்த மன்றம் கழுதை போகி"[10], "முனைபுலம் பெயர்ந்த புல்லென் மன்றம்"[11], "மலைந்தோர் தேஎம் மன்றம் பாழ்பட"[12] என்றும் குறிப்பிடுவனவற்றைக்கொண்டும் அறியமுடிகிறது.

தெய்வங்களுக்குப் பலியிடல் இம்மன்றங்களில் நிகழ்த்தப்பட்டது. குயவன் ஒருவன் இத்தகைய பலியிடும் வழிபாட்டை நிகழ்த்தியதை, "முது குயவன் இடுபலி நுவலும் அகன்தலை மன்றத்து"[13] எனக் குறிப்பிடுவதைக்கொண்டு தெளியலாம்.

கூத்தர், பாணர் போன்றோர் இத்தகைய மன்றகளில் தங்கியிருந்ததை, "வாங்குபு தகைத்த கலப் பையர் ஆங்கண் மன்றம் போந்து"[14], "வயிரிய மாக்கள் பண் அமைத்து எழீஇ, மன்றம் நண்ணி, மறுகு சிறை பாடும்"[15], "இரும் பேர் ஒக்கல் கோடியர் இறந்த புன் தலை மன்றம்"[16] எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன. பாணர்கள் இம்மன்றங்களில் தங்கி உணவு சமைத்து உண்டனர்.[17]

மடல் ஏறுதல், குரவைக்கூத்தாடல் போன்றன இம்மன்றங்களில் நடைபெற்றதை, "இவ்வூர் மன்றத்து மடல்ஏறி"[18], "என்னை மடல் மாமேல் மன்றம் படர்வித்தவள்", "தாதுஎரு மன்றத்து அயர்வர், தழூஉ"[19], "தாது எருமன்றத்துத் தூங்கும் குரவை"[20] எனவரும் கலித்தொகைப் பாடலடிகள் காட்டுகின்றன.

புகார் நகரில் கடற்கரை மணற்பரப்பில் அமைந்த அகன்ற மன்றத்தில் ஆட்டுக்கிடாய்களையும் கௌதாரிப் பறவைகளையும் மோதவிட்டுப் போர் புரியச் செய்யும் விளையாட்டைக் காண்பதற்கு மக்கள் ஒருங்கு கூடுவர்.[21] எனப் பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது.

---

[1] நற். 365:2-3
[2] புற. 76:4
[3] கலி. 142:47
[4] கலி. 129:12
[5] நற். 49:8
[6] குறு. 241:4
[7] புற. 34:12
[8] நற். 346:5
[9] பதி. 13:17
[10] பதி. 25:4
[11] அக. 157:11
[12] பெரு. 423
[13] நற். 293:2-3
[14] பதி. 23:4-5
[15] பதி. 29:8-9
[16] அக. 301:23-24
[17] புற. 34
[18] கலி. 58:22
[19] கலி. 103:62
[20] கலி. 108:60-61
[21] பட். 69-77

### *1.5.18. பரண்*

*இது 'இதணம்'[1], 'பணவை'[2] எனக் குறிப்பிடப்படுகின்றது. இது தினைப்புனத்திலுள்ள கதிர்களை உண்ணவரும் பறவைகளையும், விலங்குகளையும் விரட்டுவதற்காகக் குறிஞ்சி நிலத்திலுள்ளவர்களால் வேங்கை மரத்தின் மேலோ,[3] மலையின் மேலோ[4] அமைக்கப்பட்டது. இப்பரண் மலைப் பகுதிகளில் விளைந்த பிரம்புகளைக் கொண்டு அமைக்கப்பட்டது.[5] இதன் மீது புலித்தோலை வேய்வதும் உண்டு.[6] இத்தகைய பரண்களில் பகலில் இளம் பெண்களும், இரவில் ஆண்களும் தினைப்புனத்தைக் காவல் காத்தனர்.[7]*

### *1.5.19. நடைமுறை வாழ்க்கையில் வாழிடம்*

*பழந்தமிழர்கள் தங்கள் நில அமைப்புக்கும், தேவைக்கும், சூழலுக்கும் எற்ப பல்வேறு நிலைகளில் தங்கள் வாழிடங்களை அமைத்துக்கொண்டு வாழ்ந்தனர். அத்தகைய வாழிடங்கள் வெறும் தங்குவதற்கானவை என்பதைத் தாண்டிப் பல வாழ்வியல் நடைமுறைகளைக் கொண்டவையாக விளங்கின.*

*பழங்காலத்தில் திருமணங்கள் மணமகள் வீட்டிலேயே நடத்திவைக்கப்பட்டன. உடன்போக்கு மேற்கொண்ட நிலையில் மட்டுமே மணச்சடங்குகள் மணமகன் வீட்டில் நடைபெற்றது.[8] இத்தகைய இல்லங்கள் மற்ற இல்லங்களைக் காட்டிலும் புதுப்பொலிவு பெற்றவையாக இருந்தன. இதனைப் பண்டைத் தமிழரின் திருமணமுறை பற்றிக் குறிப்பிடும் அகநானூற்றுப்(86, 136) பாடல்கள் குறிப்பிடுகின்றன.*

*மனையின் முற்றத்தில் திருமணப்பந்தல் அமைக்கப்பட்டது. அப்பந்தலின்கீழ்ப் புதுமணல் பரப்பப்பட்டது. மாலைகள் தொங்கவிடப்பட்டன. விளக்குகள் ஏற்றப்பட்டன. மணமுழவு முழக்கப்பட்டது. கடவுளுக்கு வழிபாடு நிகழ்த்தப்பட்டது. மங்கல மகளிர் மணமகளை நீராட்டி மணவினைகளைச் செய்தனர். எனவே மணச்சடங்கு நடைபெற்ற நிலையில் மனை, 'மணமனை' எனச் சிறப்பிக்கப்பட்டது.*

*இன்றைய காலத்தைப் போன்று கடவுள்களும் கோயில்களும் தோற்றம் பெறாத தொல்பழங்காலத்தில் இயற்கையையும் உருவமில்லாத உயிர்ப்பாற்றல்களையுமே வழிபட்டனர். இத்தகைய தெய்வ வழிபாட்டினை மக்கள் தங்கள் இல்லங்களிலேயே மேற்கொண்டனர். வீட்டின் சுவர்களில் பாவை எழுதி அவற்றுக்குப் படையலிட்டு வழிபட்டனர். இதனை, "காழ் புனைந்து இயற்றிய வனப்பு அமை நோன் சுவர்ப் பாவையும் பலி எனப் பெறாஅ"[9] எனக் குறிப்பிடுவது கொண்டு அறியலாம்.*

*முருகனுக்கு எடுக்கும் வெறியாட்டுச் சடங்கும் மனையின் முற்றத்தில் களம் அமைத்து வேலனை அழைத்து நிகழ்த்தப்பட்டதைப் பல சங்கப்பாக்களினூடாக அறிந்துகொள்ள முடிகிறது. மற்றொரு பாடலில் சான்றோர் ஒன்றுகூடி நிச்சயித்த திருமணநாள் விரைந்து வரவேண்டி தலைவி ஒருத்தி இல்லத்தில் உறைகின்ற தெய்வங்களுக்குப் பலியிட்டு வணங்கியதை,*

---

[1] குறி. 41
[2] குறி. 226
[3] நற். 373:6-7; அக. 388:7
[4] நற். 194:5-5; அக. 308:9
[5] குறி. 40-41
[6] நற். 351:7
[7] மலை. 203-204, 298-299
[8] ஐங். 399:1-2
[9] அக. 369:7-8

*“வல்லே வருக, வரைந்த நாள்!" என,*
*நல் இறை மெல் விரல் கூப்பி,*
*இல் உறை கடவுட்கு ஆக்குதும், பலியே!’”*[1]

*என்ற அகநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிடக் காணலாம். மேற்குறித்த செய்திகள் வாழிடங்கள் வெறும் தங்குவதற்கானவை என்பதையும் தாண்டி வழிபாடு, சடங்கு எனப் பல பரிமாணங்களில் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகத் திகழ்ந்துள்ளது.*

### *1.6. மண உறவுகள்*

*திருமணம் என்பதற்கு, “மண உறவு உடைய ஆண் ஒருவனையும் பெண் ஒருத்தியையும் பெற்றோர் கூடி முடிவு செய்து மணச்சடங்குகள் வழி சேர்த்து வைப்பது, திருமணம் என்பதன் விரிவான பொருளாகும்”*[2] *எனக் குறிப்பிடுவர். திருமணம் என்பது ஆணும் பெண்ணும் இணைந்து வாழ்வதற்கு மனித சமுதாயம் ஆக்கிவைத்துள்ள ஒரு நெறிமுறையாகும். இத்தகைய நெறிமுறைகள் ஒவ்வொரு பண்பாட்டுக் குழுவிற்கும் ஒவ்வொரு விதமாகப் பலதரப்பட்டதாக விளங்குவதைச் சங்கப் பாடல்களை முன்வைத்துப் பார்க்கும்போது விளங்கிக்கொள்ள முடிகிறது.*

*மிகப்பழங்காலத்தில் மனிதர்கள் தங்களுக்குள் கட்டுப்பாடற்ற பாலுறவு முறையினைக் கொண்டவர்களாக இருந்தனர். இக்கட்டுப்பாடற்ற ஆண்-பெண் பாலுறவுகள் மனித நாகரிக வளர்ச்சிப் போக்கில் முறைப்படுத்தப்பெற்றன. யார் யாருடன் பாலுறவு கொள்ளலாம், யாருடன் பாலுறவு கொள்ளக்கூடாது என்பனபோன்ற கட்டுப்பாடுகள் சமூகத்தில் ஏற்படுத்தப்பட்டன. இக்கட்டுப்பாடுகளைச் செயல்படுத்தக்கூடிய ஊடகமாகத் திருமணம் என்ற சடங்கு விளங்குகிறது. மேலும் சமூகக் கட்டுக்கோப்பைத் திருமண உறவுகளே கட்டிக்காக்கின்ற ஒன்றாகத் திகழ்வதால் அது மனித வாழ்வில் மிகுந்த கவனத்திற்குள்ளாகின்றது.*

*தனிப்பட்ட நிலையில் ஆணும் பெண்ணும் தங்களுக்குள் பாலுறவு விருப்பம் கொண்டவர்களாக இருந்தாலும், அது சமூகத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஒன்றாக மாறவேண்டுமானால் அது திருமணம் என்ற சடங்கின்வழி உறுதிப்படுத்தப்பட வேண்டும். அவ்வாறு உறுதிப்படுத்தப்படாத பாலுறவு சமூகத்தால் கண்காணிக்கப்பெற்றது. பெற்றோராலும் மற்றோராலும் கண்டிக்கப்பெற்றது. இதற்குக் களவில் ஏற்படும் தடைகள் பற்றிப் பேசும் சங்கப்பாடல்களே சான்று.*

*“திருமணம் இரண்டு தனிப்பட்டவர்களுக்கிடையே நடைபெறும் உடன்படிக்கை அன்று. இரு குழுக்களிடையே இணைப்பை நெருக்கத்தை ஏற்படுத்தும் உறவு”*[3] *என்ற கருத்தும் திருமணத்தின்மீது சமூகத்துக்கு உள்ள பொறுப்பைப் புலப்படுத்துகிறது.*

*“விலங்கினங்களில் கட்டுப்பாடற்ற பாலுறவு காணப்பட்டது. எவையும் எதனுடனும் கூடிப்பழகலாம். ஆனால் மனித குலத்தில் ஒரு கட்டத்தில் ஒருவர் எவருடன் பாலுறவு கொள்ளக் கூடாது என ஏற்படுத்திக் கொண்ட தாகப்புணர்ச்சி விலக்குதான் (incest taboo) பண்பாட்டின் தோற்றுவாய்”*[4] *எனப் பிரெஞ்சு*

---

[1] *அக. 282:16-18*
[2] *சிலம்பு.நா . செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள், ப .2*
[3] *சி. என். நடராஜன், தமிழரின் திருமண முறை, பக் .342-356*
[4] *மா .தேன்மொழி, சங்ககாலத் திருமண முறைகள்:இனவரை*

*மானிடவியல் அறிஞர் கிளாட் லெவிஸ்ட்ராஸ் குறிப்பிடுகிறார். இக்கருத்தை நோக்க பாலுறவை முறைப்படுத்தி, பண்பாட்டுக்கு அடித்தளம் இடும் ஒன்றாகத் திருமணம் என்ற சடங்கு பங்காற்றி வருவது குறிப்பிடத்தக்கது.*

*திருமணம் என்பது ஆணும் பெண்ணும் கணவன் மனைவியாய் இணைந்து வாழ்வதற்கு அதற்காகச் செய்யப்படும் சடங்குகளின் வாயிலாகச் சமூகம் தரும் அங்கீகாரமாகத் திகழ்கிறது. அவர்கள் வாழும் வாழ்க்கைக்குப் பாதுகாப்பளிக்கிறது. இவர்களின் திருமண உறவுக்கு வாழ்நாள் முழுவதும் சாட்சியமாகவும், புறத்தே நின்று கண்காணிக்கும் பணியையும் சமூகம் மேற்கொள்கிறது. திருமணமான ஆணும்பெண்ணும் அவர்களுக்கென்று சமூகம் விதித்துள்ள முறைமைகளிலிருந்து விலகும்போது அவர்களைக் கண்டிக்கிறது, அறிவுரை கூறி நல்வழிப்படுத்துகிறது.*

*“புராதன சமூக அமைப்பில் மணச்சடங்குகள் அடையாளம் அற்றவையாகவே இருந்துள்ளன. உலகத்திலுள்ள பல தொல்குடிகளில் இத்தகு மரபே இருந்துள்ளது. புராதன ஆண்பெண் உறவு முறைகளில் சடங்குகளுக்கு இடம் இல்லை. குடும்ப அமைப்பின் அடுத்தடுத்த வளர்ச்சிக் கட்டங்களில் கணவர், மனைவியர் யார் என்பதை அடையாளப் படுத்தும் எளிய குறியீடுகள் இடம்பெறலாயின. சமூகப் பரிணாம வளர்ச்சியில் உடைமைத் தோற்றத்திற்குப் பின்னர் ஒருத்திக்கு ஒருவன் எனும் பாலியல் உறவு நெறிப்படுத்தப்பட்ட பின்னரே மணச்சடங்குகள் இறுக்கம் பெற்று நிறுவனமாயின. அதற்கும் பின்னரே சடங்குகளுக்குப் புனிதம் கற்பிக்கப்பெற்றது.”[1] எனத் திருமணச் சடங்கின் பரிணாம வளர்ச்சியைப் பற்றி சிலம்பு நா. செல்வராசு குறிப்பிடுவார்.*

*தற்காலச் சூழலில் திருமணத்தைக் குறிக்கும் ‘திருமணம்’ என்ற சொல் சங்கப் பாடல்கள்களில் காணப்படவில்லை. ஆயினும் ‘மணம்’, ‘மன்றல்’, ‘வதுவை’, ‘வரைவு’, ‘வரைதல்’, ‘கடி’, ‘கடிமணம்’, ‘கரணம்’ என்னும் சொற்கள் திருமணத்தைக் குறிப்பனவாய்ப் பயின்று வந்துள்ளன.*

*சங்க இலக்கியப் பாடல்களை நோக்கும் போது திருமணம் என்ற சடங்கு குடும்பம், பாலுறவு, இனப்பெருக்கம், பொருளாதாரம் போன்ற பல காரணங்களுக்காக நிகழ்த்தப்பட்டதை அறியமுடிகிறது.*

### *1.6.1. பாலுறவு*

மகப்பேற்றுக்காக மட்டுமே மணத்தல் என்பது மட்டுமின்றி ஆண்கள் தங்கள் பாலியல் தேவைக்காகவும் பெண்களை மணந்துள்ளனர். இத்தகைய பெண்களுக்குப் பரத்தையர் என்று பெயர். இத்தகைய பெண்களை மணப்பதைப் பரத்தையர் மணம் எனலாம். இப்பெண்களுக்குப் பிள்ளைகளைப் பெற்றுக்கொள்ளும் உரிமை இல்லை. இவர்கள் ஆண்களின் பாலுறவுத் தேவைக்காகமட்டுமே பயன்படுத்தப்பட்டனர். இவர்களைக் குறித்துக் *கருத்துரைக்கும் சிலம்பு நா. செல்வராசு, “சங்க இலக்கியங்கள் பரத்தையரை விலை மகளிராகக் காட்டவில்லை. மாறாகத் தலைவன் ஒருவனின் பல்வேறு மனைவியராக இனங்காட்டுகின்றன”[2] எனக் குறிப்பிடுவார்.*

---

*வியல் நோக்கு, (கருத்துரை: பக்தவத்சல பாரதி, ப.6)*

*[1] சிலம்பு .நா . செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள், பக் . 2-3*

*[2] சிலம்பு நா. செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள், ப. 84*

பொருள் வளம் படைத்த ஆண்கள் தங்களின் பாலுறவுத் தேவைக்காகத் தன் மனைவியல்லாத காமக் கிழத்தி, இற்பரத்தை, சேரிப்பரத்தை எனப்பட்ட பிற பெண்களோடும் தொடர்பு கொண்டிருந்தனர். இத்தகைய பரத்தைமை மருதநிலச் சமூகத்தில் மிகுதியும் காணப்பட்டதை மருதத்திணையில் அமைந்த சங்கப் பாக்கள் காட்டுகின்றன.

ஆடவர்கள் பரத்தையர் குடியிருப்பு அமைந்துள்ள பகுதிக்குச் சென்றும் தன் மனைக்கே பரத்தையரைத் தேரில் அழைத்துவந்தும் பாலுறவு கொண்டனர். பரத்தை ஒருத்தியை தலைவியின் இல்லத்திற்கே அழைத்துவந்து தழுவுவதை, "யாணர் ஊர! நின் மாண் இழை மகளிரை எம் மனைத் தந்து நீ தழீஇயினும்"[1] என்ற நற்றிணைப் பாடலடி குறிப்பிடுகிறது.

இந்நிலையினைக் கா. சிவத்தம்பி, "பண்டைய தமிழகத்தில் நகர்ப்புறங்களில் வணிகர்களும், கிராமப்புறங்களில் வேளாளர்களும் ஆளும் வர்க்கமாக இருந்துள்ளனர். இவர்களுக்கு முறையான மணவாழ்க்கைக்கு அப்பாற்பட்டதான பரத்தமை உறவும் கிடைத்தது. காமக் களியாட்டம் என்பது ஆளும் வர்க்கத்தின் பொழுது போக்குக்கலை"[2] எனக் குறிப்பிடுகின்றார்.

தொகைநூல் காலச் சமூகத்தில் பரத்தை மணம் வழக்கில் இருந்ததை, "நல்லோர் நல்லோர் நாடி வதுவை அயர விரும்புதி நீயே"[3], "நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு வதுவை அயர்தல் வேண்டி"[4], "நறுப்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு வதுவை அயர்ந்தனை என்ப அலரே"[5], "முழவுமுகம் புலரா விழவுடை வியல்நகர் வதுவை மேவலன் ஆகலின்"[6], "பூ அணிப் பொலிந்த நின் வதுவைஅம் கமழ் நாற்றம்"[7], "புதுவோர்ப் புணர்தல் வெய்யன் ஆயின் வதுவை நாளால் வைகலும்"[8], "யாணர் ஊரன் காணுநன் ஆயின், வரையாமையோ அரிதே"[9] எனவரும் அகப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

### *1.6.2. பலதார மணம்*

ஒருவன் ஒருபெண்ணை மட்டும் மணந்து வாழும் நிலைக்கு மாறாக ஒரே நேரத்தில் பல பெண்களை மணந்து வாழும் நிலையும் பழஞ்சமூகத்தில் வழக்கில் இருந்தது.

இத்தகைய மணமுறை உலகத்தில் பெருவழக்காகக் காணப்பட்டதை, "உலக இனக்குழுவியல் மாதிரிகளில் 554 சமுதாயங்களுள் பலமனைவி மணமுறை 415 சமுதாயங்களிலும், ஒருதுணை மணம் 135 சமுதாயங்களிலும், பல கணவர் மணம் 4 சமுதாயங்களிலும் உள்ளன. இதைக் கணக்கில் கொள்ளும்போது உலகச் சமுதாயங்களுள் 75 விழுக்காடு பலமனைவி மணமுறையையே வழக்கில் கொண்டுள்ளது எனத் தெரிய வருகிறது"[10] எனக் குறிப்படுவதுகொண்டு அறியமுடிகிறது.

இத்தகைய பலதார மணமுறைக்கு வீட்டு வேலைகளைக் கவனித்தல், கால்நடை பராமரிப்பு முதலிய பொருளாதாரம் சார்ந்த பணிகளில் பெண்களின்

---

[1] நற் .330:6-7
[2] கா. சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, (அறிமுகவுரை, ஆர். பார்த்தசாரதி) ப. XXVI
[3] ஐங் .61:4-5
[4] அக .66:7-8
[5] அக .36:11-12
[6] அக. 206:11-12
[7] கலி. 66:11-12
[8] கலி. 75:10-11
[9] நற். 390:7-8
[10] பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், பக். 395-396

பங்களிப்பு மிகுதியாக இருத்தல், மனைவி கருவுற்று இருக்கும் காலத்தில் ஆண் தன் பாலுறவுத் தேவைக்காக வேறு பெண்களை நாடுதல், பல பெண்களை மணப்பதை ஆண் சமூகத் தகுதியாகக் கருதுதல் போன்றவற்றைக் குறிப்பிடுவர்.

தொல்காப்பியம் முதல் மனைவியைத் ‘தொன்முறைக் கிழத்தி’ என்றும், இரண்டாவது மனைவியை, ‘வழிமுறைக் கிழத்தி’ என்றும், ஆணின் பாலியல் தேவைக்காக மணந்துகொள்ளப்பட்ட பெண்களைக் ‘காமக்கிழத்தியர்’ என்றும், குறிப்பிடுகிறது. குடி தழைப்பதற்குரிய மகப்பேற்றுக்காக ஆடவன் இரண்டாவதாக ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்வது பற்றிய குறிப்பு ஐங்குறுநூற்றில்(292) காணப்படுகிறது. இப்பாடலில் கணவன் இரண்டாவதாக ஏற்றுக்கொண்ட மனைவியை இல்லத்திற்கு அழைத்து வந்தபோது,

> “நின்னினும் சிறந்தனள், எமக்கே – நீ நயந்து
> நன் மனை அருங்கடி அயர,
> எம் நலம் சிறப்ப, யாம் இனிப் பெற்றோளே”[1]

எனக்கூறி முதல் மனைவி அவளை மகிழ்ந்து ஏற்றுக்கொள்கிறாள். இத்தொன்மையான வழக்கத்தினைத் தொல்காப்பியம் “பின்முறையாக்கிய பெரும்பொருள் வதுவைத் தொன்முறை மனைவி எதிர்ப்பாடு”[2] என்று குறிப்பிட்டுள்ளது நோக்கத்தக்கது.

இத்தகைய பலதார மணமுறை வழக்கில் இருந்தமைக்கான சமூகச்சூழலை “பண்டைக்காலத்தில் பழங்குடிகளிடையே போர் நடவடிக்கைகள் மிகுதியாக இருந்தமையால் ஆண்களில் இழப்பு மிகுதியாக இருந்தது. இதனால் ஆண், பெண் பால் விகிதம் சமநிலையில் இல்லை. இதுவும் பலமனைவி மணமுறைக்கு ஒரு காரணமாகும்”[3] எனப் பக்தவத்சல பாரதி சுட்டிக்காட்டுவார்.

### 1.6.3. அரசியல்

திருமணம் என்னும் உறவு ஆண்பெண் விருப்பங்களைத் தாண்டி பொருளியல், அரசியல் முதலான பிற காரணங்களுக்காகவும் நடைபெற்றுள்ளன. இதனை, “சீறூர் மன்னருடன் உறவுத் தொடர்பு கொண்டால் தம் வலிமை மிகும் எனக் கருதிய வேந்தர்கள் சீறூர் மன்னரின் மகளைத் திருமணம் செய்ய விழைந்தனர். வேந்தரின் விழைவுக்கு ஒவ்வாது எதிர்த்து நின்ற சீறூர் மன்னர்களும் உண்டு” என்றும், “முதுகுடி மன்னரிடம் மகட்கொடை வேண்டிய வேந்தர்களின் நோக்கம் மருத விளை வயல்களைக் கைப்பற்றுதலே ஆகும். மகட்கொடை கொடுத்தால் அந்த மண உறவு மூலம் மருதநிலங்களைப் பெறலாம் எனவும் கருதியிருக்கலாம். ஆனால் மகட்கொடை மறுத்தல் முதுகுடி மன்னர் இயல்பு எனத் தெரிந்தும் அவர்கள் மேல் படையெடுத்த வேந்தர்களின் நோக்கம் மருதநிலத்தைக் கைப்பற்றுதலே ஆகும்”[4] என்றும் குறிப்பிடும் கருத்துக்கள் அரசியல் நோக்கிலான திருமணங்கள் சங்க காலத்திலேயே கால்கொண்டுவிட்டதைக் காட்டுகின்றன. இதனைச் சங்கப் பாடல்களில் வரும் மகள்மறுத்தல் துறைப் பாடல்களை நோக்கப் புலப்படும்.

---

[1] ஐங். 292:3-5
[2] தொல். பொருள். கற்பு. 31
[3] பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 400
[4] பெ. மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப. 79

### *1.6.4. பொருளாதாரம்*

*திருமண உறவுகளில் ஆண்பெண் விருப்பத்தோடு பொருளியல் அம்சங்களும் கருத்தில் கொள்ளப்பட்டதை, நற்றிணையில் வரும் நொதுமலர் வரைவுழித் தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்றதாக அமைந்த பாடல்வழி(நற்.207) உணரமுடிகிறது. நெய்தல் திணையில் அமைந்த இப்பாடலில் தலைவியால் விரும்பப்பட்ட தேரில் வரும் தலைவன் மிக்க செல்வமுடையவன். ஆனால் நொதுமலர் வரைவு மேற்கொள்ளும் அயலார் அத்தகைய செல்வமில்லாத சிறுமையாளர் என்ற கருத்துப்பட குறிப்பிடப்படுகிறது. இங்குப் பெண்கேட்டு வருவோர் பெண்ணின் குடிக்கு ஒத்த பரதவர்குடியினராக இருந்தும் பெண் அக்குடிக்கு அயலவனான தேரில் வரும் தலைவனையே விரும்புகிறாள். இதற்குப் பெண்ணின் காதல் முதன்மைக் காரணமாயினும் துணைமைக் காரணமாகப் பொருளியல் விளங்குவது நோக்கத்தக்கது. இச்சான்றினை அடிப்படையாகக் கொண்டு திருமணஉறவுகளில் பொருளாதாரமும் ஒரு முக்கியக் கூறாக விளங்கியதை ஊகிக்கமுடிகிறது.*

### *1.6.5. புறமணம்*

*சங்க இலக்கியத்தில் தாய்வழிச் சமூகத்தின் எச்சமாகத் திகழும் 'களவு' எனப்படும் ஆண்-பெண் இடையிலான காதல் வாழ்வில் ஆணும் பெண்ணும் தங்களுக்கான வாழ்க்கைத் துணையைத் தாங்களே தேடிக்கொண்டனர். அதாவது தாங்கள் வாழும் குழுக்களுக்கு அப்பால் தங்களுக்கான மணத்துணையைத் தேடிக்கொள்ளுதல் என்ற நிலையில் அது இருந்துள்ளது. இங்கு இனம், நிலம், பொருளாதாரம் முதலிய நிலைகளைத் தாண்டி ஆண்-பெண் இடையிலான காதலும் பாலியல் வேட்கையுமே முதன்மை பெற்றதாக விளங்கியுள்ளது. இத்தகைய நிலையில் அமைந்த மண உறவினை புறமணம்(exogamy) என மானிடவியலார் குறிப்பிடுகின்றனர். இதனை, "ஒருவன் தான் சார்ந்த குழுவுக்கு வெளியே சென்று திருமணம் செய்ய வேண்டியதை வலியுறுத்தும் ஒரு விதிமுறை"[1] என்பார் இ. பி. டைலர்.*

*தொல்காப்பியத்தில் மணமுறைகளைக் குறித்து ஆராய்ந்த சிலம்பு ந. செல்வராசு, "புறமணச் சமூக அமைப்பே களவியல் இலக்கியங்கள் உருவாகக் காரணமாக இருந்துள்ளது"[2] என்றும், "சங்க அக இலக்கிய வரலாற்றில் களவு மணம் அங்கீகரிக்கப்பட்ட மணமாக இல்லை. களவுப்பாடல்கள் வெளிப்படுத்தும் மனிதமனப் பதற்றங்களும் அச்சங்களும் இதனை வெளிப்படுத்தும். அலர் தூற்றல், வெறியாடல், உடன்போக்கு என்று ஒவ்வொரு அகப்பொருள் கூறுள்ளும் ஓர் எதிர்நிலை உணர்வு செயல்படுவதை உணரவேண்டும். இவற்றிற்கெல்லாம் காரணம் ஆடவன் ஒருவன் தன் குலம் அல்லாத வேறு குலத்தில் பெண்ணைத் தேடுவதுதான்"[3] என்றும் குறிப்பிடுவார்.*

*புறமணம் நிகழ்ந்ததற்கான சாத்தியங்கள் குறித்த ம. வெண்ணிலாவின் "சங்ககாலத்தில் வருணக் கோட்பாடுகள் காணப்பட்டாலும் அவை மக்களிடையே திருமண உறவுகளைத் தடைசெய்கின்ற அளவிற்கு வளர்ச்சி அடையவில்லை.*

---

[1] *E.B. Tylor, Dictionary of Anthropology, p. 197*

[2] *சிலம்பு.நா . செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள், ப . 201*

[3] *சிலம்பு.நா . செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள், ப . 201*

*எனவே எதிர்ப்பு ஏற்பட்டாலும் அந்த எதிர்ப்பு, குலம் கருதி ஏற்பட்ட எதிர்ப்பாக இருந்திருக்கவில்லை. குலம் எதிர்ப்புக்குக் காரணமாக அமையுமானால் அத்தகைய எதிர்ப்புகள் தலைவன் வீட்டிலும் தோன்றியிருக்க வேண்டும். தலைவன் வீட்டார் எதிர்த்ததாகச் சங்கப் பாடல்களில் சான்றுகள் இல்லை''*[1] *என்ற கருத்தும் நோக்கத்தக்கது.*

*மேற்குறித்த கருத்துக்களை நோக்கும்போது, தங்கள் குழுவைத் தாண்டிய புறமணங்கள் சங்ககாலச் சமூகத்தில் நிகழ்ந்திருக்க வாய்ப்பிருப்பதைக் கீழ்க்காணும் சங்கப் பாடல் கருத்துக்களைக்கொண்டு ஊகிக்கமுடிகிறது.*

*நற். 365:* *''வரையாது காலம் கடத்தும் தலைவனை நாடி, 'வரையாது காலம் கடத்தும் நீ ஒரு சான்றோனா? என்று கேட்டுவிட்டு வரவேண்டும் அதற்காக அன்னையின் காவலைக் கடந்து இல்லத்தின் வாயிலைக் கடந்து ஊர் அம்பலத்தில் சென்று நாணத்தை விட்டு அவன் ஊர் எங்கு உள்ளது எனக் கேட்டு வர வேண்டும்'' என்ற தோழி கூற்று.*

*குறு. 40:* *''யாயும் ஞாயும் யார் ஆகியரோ? எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?'' எனத் தலைவன் கூறுவது.*

*அக:110 .* *பகலும் மறைந்து இரவும் வந்துவிட்டது. அதனால் இம் மெல்லிய இலைப்பரப்பில் நீவிர் ஆக்கிய சிறு சோற்றை விருந்துண்டு, இக்கல்லென்னும் ஒலியையுடைய சிறிய குடிலில் தங்கினால் வரும் குறை ஏதும் உண்டோ? என்ற தலைவனின் வினவலுக்கு, 'இழிந்த கொழுமீனாகிய இவ்வுணவு முதலியன நுமக்கு ஏற்றன அல்ல' என்று நெய்தல் நிலப்பெண்கள் பதிலுரைப்பது.*

*அக. 272:* *தலைவியால் விரும்பப்பட்ட தலைவன் இருள், பனி போன்ற இடர்களைக் கடந்து தலைவியின் குடிசையில் நுழைந்தபோது, அவனை முன்பின் அறியாத பெண்ணின் தாய் அவனை முருகவேல் எனக் கருதிப் பாராட்டித் துதித்தல்.*

*அக. 300:* *''புதியவர் போன்று எம் சிற்றூருக்கு வருகை தருக, எம் வீட்டாரும் விருந்து எனக் கருதி எதிர்கொண்டு வரவேற்பர். மேலும் பொழுது மயங்கி இருள் சூழ்ந்துவிட்டது, இன்றைய பொழுது ஊருக்குச் செல்ல வேண்டாம்; எனக் குறையிரந்து வேண்டுவர்'' என்ற தோழி கூற்று.*

*அக. 118:* *''அருவிகள் விளங்கும் பக்கமலையில் சிறுகுடிப்பாக்கத்தில் வேங்கை மலர்களைச் சூடி ஆடவரும் பெண்டிரும் தெருக்களில் குரவைக் கூத்தாடுவர். அப்போது தலைவியைச் சந்திக்க நீ வந்தால் இவ்வூர் அலர் தூற்றும் அதனால் அஞ்சுகிறோம்'' என்ற தோழி கூற்று.*

*அக. 140,390:* *உப்பு விற்கும் உமணப் பெண்ணைக் காதலிப்பதாக அமைந்த பாடல்கள்.*

*மேற்குறித்த பாடல்களில் அவன் ஊர் எங்குள்ளது எனக்கேட்பது, முன்பின் அறிமுகமில்லாத தலைமக்கள் சந்தித்துக்கொள்வது, தலைவன் பெண்ணின்*

[1] *ம. வெண்ணிலா, கலப்புத் இலக்கியங்களில் திருமணங்கள், ப.20*

*தாய்க்கு அறிமுகமில்லாதவனாக இருப்பது, ஊரார் அலர் தூற்றுவர் என அஞ்சுவது, தலைவியைச் சந்திக்க தலைவன் தேரேறி வருவது,[1] தலைவனை இரவு தங்கிச் செல்ல வேண்டப்படுவது,[2] இவை போல்வன அக்காலத்தில் புறமணம் நிகழ்ந்ததற்கான அடையாளங்களாகக் கருதலாம்.*

*வ. சுப. மாணிக்கனாரின் “களவொழுக்கம் பண்டைத் தமிழகத்தில் பரவியிருந்தது. பெற்றோர் அறியாமல் காதலர்களைத் தேடிக்கொள்ள முயன்ற இளம்பாலர்கள் அன்று மிகப் பலர். இரவும் பகலும் களவுக் கூட்டங்கள் நிகழ்ந்தன எனவும், தேரேறியும் வந்து இக்களவு நடத்தும் துணிவு இருந்தது எனவும் அறிகின்றோம்”[3] என்ற கூற்றும் புறமணச்சூழலை விளக்குகிறது.*

*உதியஞ்சேரலாதன் நல்லினி எனும் வேளிர் குலப் பெண்ணையும்,[4] நெடுஞ்சேரலாதனும்,[5] செல்வக் கடுங்கோ வாழியாதனும்[6] வேளாவிக் கோமான் பதுமன் என்பவனின் மகள்களையும், குட்டுவன் இரும்பொறை[7] வேளிர் குலத்தில் தோன்றிய வேண்மாள் அந்துவஞ்செள்ளை எனும் வேளிர்குலப் பெண்ணையும் மணந்துகொண்டனர் எனச் சேர மன்னர்கள் வேளிர் குலப் பெண்களை மணந்து கொண்ட செய்தியினைப் பதிற்றுப்பத்துப் பதிகங்கள் வழி அறிய முடிகிறது. இவற்றையும் புறமணம் நிகழ்ந்ததற்கானச் சான்றாதாரங்களாகக் கொள்ளலாம்.*

### *1.6.6. பொருளாதாரநிலையும் திருமணமும்*

*சங்கப் பாடல்களில் பண்டைக் காலத் திருமணம் குறித்த தகவல்களை நோக்கும்போது, சில இடங்களில் பொருள் வளம்மிக்க குடும்பத்தில் பிறந்து வளர்ந்த பெண்கள் பொருள் வளமற்ற வறுமைப்பட்ட ஆடவர்களை மணந்துகொண்டு வாழ்ந்த செய்தியினை அறிந்துகொள்ள முடிகிறது.*

*மணம் நிகழ்ந்தபின் தலைவியின் இல்லச் சிறப்பினைக் காணச் சென்று மீண்ட செவிலித்தாய் நற்றாயிடம் கூறுவதாக அமைந்த நற்றிணைப் பாடலில் ‘பொற்கலத்தில் ஏந்திய பாலையும் உண்ணாதவளாய் இருந்த சிறு விளையாட்டுப் பருவத்தினள் தற்போது தான் மணந்த கொழுநன் குடி வறுமையுற்ற சூழலிலும் தன்னைப் பெற்ற தந்தையின் வளமான உணவினைக் கருதாதவளாய் ஒரு பொழுது உண்டு, ஒரு பொழுது உண்ணாத நிலையினள் ஆயினள்’[8] எனக் குறிப்பிடப்படுகிறது .*

*செல்வச் செழிப்புடைய வீட்டில் வாழ்ந்த தலைவி ஆடவன் ஒருவனுடன் உடன்போக்கு சென்றுவிட்டாள். அவள் சென்ற காதலனின் இல்லம் சீரும் சிறப்பும் இல்லாத சிற்றூரில் வறுமையால் வாழும் பெண்களின் ஒற்றைப்பசு கட்டப்பட்ட தூண் கொண்ட முகப்பினையுடைய புல்வேய்ந்த குடிசையான வறிய இல்லத்தில் சிலம்பினைக் கழித்து அவனை மணஞ் செய்து கொண்டாளோ? அதனை எண்ணித்தான் யான் பெரிதும் வருந்துகின்றேன் எனச் செவிலித்தாய் வருந்துவதை அகநானூறு[9] குறிப்பிடுகிறது.*

---

*[1] குறு345 .*
*[2] நற். 67*
*[3] வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக். 92-93*
*[4] பதிற்றுப்பத்து இரண்டாம்பத்துப் பதிகம். 2-3*
*[5] பதிற்றுப்பத்து நான்காம்பத்துப் பதிகம். 1-13*
*[6] பதிற்றுப்பத்து எட்டாம்பத்துப் பதிகம். 1-3*
*[7] பதிற்றுப்பத்து ஒன்பதாம்பத்துப் பதிகம். 1-2*
*[8] நற். 110*
*[9] அக. 369:15-25*

தலைவியைத் திருமணம் செய்துகொள்வதற்கு முன்பு ஒரு பசு உடைமையால் பகற் சோறு உண்டால், இராச் சோறு இல்லாத சீரில் வாழ்க்கையை உடையதாகத் தலைவனின் செல்வநிலை இருந்ததையும் தலைவியை மணந்துகொண்டதால் செல்வநிலை அடைந்ததையும் குறுந்தொகைப் பாடலொன்று சுட்டுகிறது.[1]

சங்ககாலத்தில் ஆண்பெண் சேர்ந்து வாழும் வாழ்க்கையில் உடன்போக்குத் திருமணமானாலும், பெற்றோர் ஏற்பாட்டுத் திருமணமானாலும் உள்ளம் ஒருமித்த காதலர்களுக்குப் பொருளாதாரம் ஒரு தடையாக இல்லை என்பதை மேற்குறித்த கருத்துக்கள் புலப்படுத்துகின்றன.

### *1.6.7. அகமணம்*

மனித சமூக வரலாற்றில் ஆதியில் காணப்பட்ட தாய்வழிச் சமூகம் மெல்லமெல்ல தந்தைத் தலைமைச் சமூகமாகவும், சொத்துடைமைச் சமூகமாகவும் மாறிய காலகட்டத்தில் தந்தை வழிச் சமூகம் திருமண உறவுகளில் மிகப்பெரிய கட்டுப்பாடுகளைக் கொண்டுவந்தது. அதன் விளைவாக இரத்த உறவில்லாத ஆனால் ஒத்த குழு அல்லது குடிகளுக்குள்ளேயே மணஉறவு கொள்ளவேண்டும் என்ற விதிமுறைகளையும் கட்டுப்பாடுகளையும் ஏற்படுத்தியது. இத்தகைய மணமுறையை “தான் சார்ந்த வர்க்கம் அல்லது குடிக்குள்ளேயே திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்ற கட்டுப்பாடே அகமணம் எனப்படும்”[2] என்ற இ.பி. டைலரின் அகமணம் குறித்த வரையறையோடு ஒப்புநோக்கலாம்.

தொல்பழங்காலச் சமூகத்தில் ஆணும் பெண்ணும் தங்களுக்கான இணையைத் தாங்களே தேடிக்கொண்டனர். அத்தகைய நிலை சமூகத்தில் ஆண்பெண் உறவில் பல குழப்பங்களை ஏற்படுத்தியது. இத்தகைய சமூகச் சூழலை, “தரும சிந்தனை இல்லாத ஒருவன் இளையவள் ஒருத்தியின் பெண்மை நலத்தைக் கவர்ந்து உண்டு பின்னர் அவளைக் கைவிடுத்தான்; அவளது முறையீட்டினைக் கேட்டறிந்த அவையோர் முன் அவன் யான் அவளை அறியேன் எனப் பொய்ச்சூள் கூறினான், அவையத்தார் சான்றாவார் சிலர்தம் கூற்றினால் உண்மையை அறிந்து கொண்டு, அவனை மூன்று கவர்த்த கிளைகளின் நடுவே கட்டி வைத்து நீற்றினை அவன் தலையில் கொட்டினர்; அவையில் கூடியிருந்தோர் அத்தண்டனை தக்கதே என மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்”[3] என்ற அகநானூற்றுப்பாடல் கருத்து மூலம் அறியமுடிகிறது. இந்நிலையை மாற்றவே அறிவில் சிறந்த பெரியோர்களால் மணவிதிகள் ஏற்படுத்தப்பட்டன. இதனை, “பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்ப”[4] எனத் தொல்காப்பியம் சுட்டுகிறது.

அகமண முறைக்கு ஆதரவாகச் சங்ககாலச் சமூகம் செயல்பட்டதற்குப் புறநானூற்றில் வரும் மகட்பாற்காஞ்சித் துறைப் பாடல்களும் சான்று பகர்கின்றன. இப்பாடல்களில் பெண்ணின் பெற்றோர் பெண்கேட்டு வந்தவர்கள் வேந்தர்களே ஆயினும், செல்வத்தை வேண்டாது தனக்கு நிகரல்லாதவர்க்குப் பெண் தருதல் இல்லை என்று வஞ்சினம் கூறிப் போர் வேண்டி நிற்பதைப் புறப்பாடல்கள் காட்டுகின்றன.[5]

---

[1] *குறு. 295*
[2] *E.B. Tylor., Dictionary of Anthropology, p. 186.*
[3] *அக. 256*
[4] *தொல்.பொருள். கற். நூற். 4*
[5] *புற. 336-354*

### *1.6.8. உடன்போக்கு மணம்*

*களவொழுக்கத்தில் ஈடுபடும் ஆண், யாரும் அறியாமல் தலைவியை உடன் அழைத்துச் சென்று மணந்துகொள்ளுதல் உடன்போக்கு எனப்படும். இவ்வாறு உடன்போக்கு மேற்கொண்டு ஆணும் பெண்ணும் மணம் செய்துகொள்ளுதல் என்பதும் பண்டைக் காலத்தில் பெருவழக்காக இருந்துள்ளது. இதனை, "கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே, புணர்ந்து உடன் போகிய காலையான"[1] எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.*

*சங்கப் பாடல்களில் இத்தகைய உடன்போக்கு மணம் குறித்துக் குறிப்பிடப்பட்டாலும். இம்மணத்தைச் சமூகம் முழுமையாக ஏற்றுக்கொண்ட ஒன்றாக அறியமுடியவில்லை. காரணம், தலைவியை உடன் கொண்டு செல்லும் தலைவன் தலைவியின் உறவினரால் தேடப்பட்டனர். உடன்போக்கு மேற்கொண்டு செல்லும் காதலரைப் பெண்ணின் ஐயன்மார் பின் தொடர்ந்து வந்தபொழுது பெண்ணை உடன் அழைத்துச் சென்ற தலைவன் மலையில் மறைந்துகொள்வதையும்,[2] மறவரை எதிர்த்துப் போர் செய்த தலைவன் பெண்ணின் உறவினர் தேடிவந்தபோது தன்னைக் காட்டகத்து ஒளித்துக்கொள்வதையும்,[3] தலைவியை உடன்போக்கில் அழைத்துச் சென்ற தலைவன் தலைவியிடம் 'நான் வேங்கை மரத்தின் பின்னே இருக்கின்றேன். அச்சமயம் மறவர் வரின் அவரைப் போரிட்டு வெற்றி பெறுவேன், நின் சுற்றத்தார்வரின் மறைந்துகொள்வேன்'[4] எனக் குறிப்பிடுவனவற்றைக் கொண்டு ஊகிக்க முடிகிறது.*

*மேற் குறித்த இக்கருத்துக்கள் பெற்றோர் ஏற்பாடு செய்யும் அகமணம் நடைமுறைக்கு வந்துவிட்ட சூழலையும், வயதுவந்த ஆணும் பெண்ணும் குழுவிற்கு அப்பாற்பட்டுத் தாங்களே தேடிக்கொண்ட புறமணம் அருகிப் போய்விட்ட சூழலையும், தலைவி உடன்போக்கு போனபோது ஊர் பழிதூற்றும் செயல்[5] உடன்போக்கு மீதான சமூக எதிர்ப்பினையும் காட்டுகின்றன.*

*தன் மகள் உடன்போக்குச் சென்றபோது தாய் வருந்துவதையும்,[6] உடன்போக்குச் சென்றுவிட்ட தன் மகளைப் பின் தொடர்ந்து செல்வதையும்,[7] பொய்யான வாக்குறுதிகளைச் சொல்லித் தன் மகளை அழைத்துச் சென்றவனை, "நெஞ்சு உணத் தேற்றிய வஞ்சினக் காளை"[8], "அறனிலாளன்"[9], என்று பழிப்பதையும் சங்கப் பாடல்களில் காணலாம்.*

*உடன்போன காதலர்கள் மீண்டும் தம் பெற்றோரை அடைந்தபோது அவர்களை ஏற்றுக்கொள்வதும் அக்காலத்து வழக்காக இருந்தது. உடன்போகிய தலைமக்கள் மீளற் பொருட்டுப் பெண்ணின் தாய் காகத்திற்குப் பராய்க்கடன் செய்வதையும்,[10] திரும்பி வந்தபோது மகிழ்வதையும்,[11] திருமணத்திற்கு முன் தன் மனையில் நிகழ்த்த வேண்டிய சிலம்பு கழிச் சடங்கினை உடனழைத்துச் சென்ற தலைவனின் தாய் தன் மனையில் செய்தாலும், திருமணச் சடங்கினைத் தன்மனையில் செய்ய விரும்புவதையும்,[12] தன்மகள் மேற்கொண்ட உடன்போக்கை அறநெறி என மகிழ்ந்து கூறி அவள் செல்லும் சுரவழி வெம்மைநீங்கி இனிதாகுமாக என வேண்டுவதையும்,[13] கொண்டு இதனை அறிய முடிகிறது.*

---

[1] தொல். பொருள். கற். நூற். 141
[2] குறு .312
[3] நற். 48
[4] நற் .362
[5] ஐங். 372
[6] ஐங். 379
[7] குறு. 44
[8] ஐங். 372
[9] அக. 207:12, 219:10
[10] ஐங். 391
[11] ஐங். 394
[12] ஐங். 399
[13] ஐங். 371

### *1.6.9. களவு மணம்*

*களவு என்பது திருணத்திற்கு முந்தைய ஆண்பெண் உறவுநிலை எனப் பொதுவாக எல்லோராலும் கருதப்பட்டு வரும் நிலையில் களவு என்பதே ஒரு தனிப்பட்ட மணமுறையாக இருந்துவந்துள்ளதை, "களவுநெறி என்பதும் கற்பு நெறி என்பதும் தனித்தனியாகத் தொல் தமிழகத்தில் வழக்கில் இருந்த நெறிகளாக அறியக் கிடக்கின்றன. கற்பியலின் முன் வாழ்க்கை களவொழுக்கம் என்பதும் மறுக்கப் பெற்ற கருத்துரையாகக் கிடைத்துள்ளது. எனவே களவு என்பது தனி வாழ்க்கை முறை என்பதும் அது கற்பு வாழ்க்கை முறை உருப்பெற்று உச்சம் பெற்ற காலத்தில் தன் மதிப்பினை இழந்ததோடு சான்றோர் பழிக்கும் ஒழுக்கமாக இருந்தது என்பதும் களவு தம்மை நிலைபெறுத்திக் கொள்ளக் கற்பு முறைக்கு மாறவேண்டி இருந்தது என்பதும் தெரிய வருகின்றன"[1] என்ற கூற்றின் வழி அறியமுடிகிறது. இக்களவினைத் தொல்காப்பியம் "காமக்கூட்டம்" என்று குறிப்பிடுகிறது.*

*சங்கச் சமூகத்தைப் பொறுத்தவரை களவுமணம் சமூக அங்கீகாரத்தைப் பெற்றதாக இல்லை. அம்பல், அலர், இற்செறிப்பு போன்ற அக்காலச் சமூக நெருக்கடிகளே இதனைத் தெளிவுபடுத்துகின்றன. மேலும் இது தொடர்பாக, "கற்பு மணம் நிகழ்வதற்கு முன்னர்க் களவு வாழ்க்கை மேற்கொள்வதை அற்றைச் சமூகம் ஒப்புக் கொண்டதாகத் தெரியவில்லை. களவு காதலரிடையே நிகழும் ஒருவிதப் பதற்றமும் தலைவி, தோழியிடையே காணப்பட்ட ஒருவித அச்சமும் களவிற்குத் தொல் சமூகம் ஏற்புரிமை அளிக்கவில்லை என்பதையே மறைமுகமாக வெளிப்படுத்துகின்றன"[2] எனச் சிலம்பு நா. செல்வராசு குறிப்பிட்டுள்ள கருத்தும் மனங்கொள்ளத்தக்கது. ஆயினும் அம்பல், அலர் என்பன பெண்ணுக்கு ஏற்படும் தீங்கைத் தடுப்பதற்காகச் சமூகம் செய்கின்ற எச்சரிக்கை என்பதைச் சுட்டிக்காட்டிக் களவுமணம் சமூக வழக்கில் இருந்ததை, "இரவுக்குறி, பகற்குறி, அம்பல், அலர் ஆகியன சமுதாயத்தில் பெண் பக்கம் ஏற்பட்ட தீங்கைத் தடுப்பதற்காக மெல்ல மெல்ல ஏற்பட்ட கட்டுப்பாடுகள் என்றே கருத வேண்டும். இவை தனக்குரிய கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெண்ணுக்கு மறுக்கவில்லை. மாறாக, உணர்ச்சி வசப்பட்டுப் பொய்யன் ஒருவனைத் தெரிவு செய்து மகள் ஏமாந்து விடக்கூடாது என்ற ஏக்கம் புதிய புதிய கட்டுப்பாடுகள் தோன்ற காரணமாயின"[3] என க.ப. அறவாணன் குறிப்பிடுகிறார்.*

*களவு இன்பத்தை அகநானூற்றுப் பாடலொன்று 'பழியொடு வரூஉம் இன்பம்'[4] என்று குறிப்பிடுகிறது. இது சங்க காலச் சமூகத்தில் களவுநெறி கற்புநெறிக்கு இணையான வழக்காகக் காணப்பட்டாலும் அது சமூகத்தில் பழிக்குரிய நிலையையே பெற்றிருந்தது என்பதைக் காட்டுகிறது. ஆனாலும் காதலர்கள் பெற்றோர் இசைவினைப் பெற்று மணச் சடங்கின் மூலம் கற்பு வாழ்க்கைக்கு மாறும்போது அது சமூக ஏற்பினைப் பெற்றதையும் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.*[5]

*பல்வேறு காலங்களில் பாடப்பட்ட சங்க இலக்கியப் பாடல் தொகுப்பில் கூறப்பட்டுள்ள களவு, கற்பு எனப்பட்ட இருவேறு மண முறைகளில் களவு மணம்*

---

*[1] சிலம்பு நா. செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள், ப . 226*

*[2] சிலம்பு நா. செல்வராசு, தொல்காப்பியத்தில் மணமுறைகள், ப . 224*

*[3] க.ப. அறவாணன், தமிழ்மக்கள் வரலாறு, ப. 220*

*[4] அக. 112:12*

*[5] குறு. 374:1-3; ஐங். 6; கலி. 107:30-34, 115:17-20*

*சங்க காலத்திற்கு முற்பட்ட தாய்வழிச் சமூகத்தில் காணப்பட்ட மணமுறையின் எச்சமாகவும், கற்பு மணம் சங்ககாலத் தந்தை வழியிலான உடைமைச் சமூகத்தில் அழுத்தம் பெற்றுவிட்ட மணமுறையையும் குறித்துப் பதிவுசெய்துள்ளன எனக் கருதலாம்.*

*தாய்வழிச் சமூகத்தில் காணப்பட்ட மணமுறையான களவு மணத்தில் பெண்கள் தனக்கான பால் உறவுத் துணையைத் தாங்களே தேர்வு செய்து கொண்டனர். பெண்ணின் இத்தகைய மணத்துணைத் தேர்வில் தோழி, செவிலி, நற்றாய் ஆகிய பெண்களின் பங்களிப்பு மிகுதியாகக் காணப்பட்டதையும். தந்தை தமையன் முதலானோரின் பங்களிப்பு இல்லாமல் இருப்பதையும் கொண்டு அவதானிக்க முடிகிறது.*

### *1.6.10. கற்புமணம்*

*சங்கப் பாடல்களினூடே அறியலாகும் பல்வேறு மணமுறைகளுள் ஒன்று கற்புமணம். இத்திருமணம் பெரியோர் முன்னிலையில் பெற்றோராலும் சுற்றத்தாராலும் ஏற்பாடு செய்யப்பட்டது. இத்திருமணம் களவின் தொடர்ச்சியாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியத்தைப் பெற்றிருக்கவில்லை. இது பழங்காலத்தில் இருந்த மணமுறைகளுள் தனித்ததொரு மணமுறையாகும். இம்மணமுறை குறித்துக் கருத்துரைக்கும் வ. சுப. மாணிக்கனார், ‘‘கற்பு வாழ்க்கைக்குக் களவு நல்ல தோற்றுவாய் எனப்படுமே அன்றி இத்தோற்றுவாயின்றிக் கற்பியல் அமையாது சிறவாது எனப்பட்டது. நல்ல காதல் வாழ்க்கை களவானே முகிழ்க்கும் என்றல் பொருளன்று. ‘கற்பெனப்படுவது களவின் வழித்தே’ என்பது இறையனார் களவியல். இக்கருத்து அகத் தமிழ் நெறியன்று. ஒவ்வொரு கற்பியலுக்கு முன்னும் களவியல் நிகழ்ந்தாதல் வேண்டும் எனவும் திருமணம் கூட்டும் ஒரே நெறி களவுதான் எனவும் கூறுவார் கூற்று அல்தமிழ் என அகற்றுக. இறையனார் யாத்த இவ்விலக்கணம் அக இலக்கியத்திலும் தமிழ்மன்பதையின் வாழ்க்கையிலும் காணாத கட்டுரை ஆகும்’’[1] எனக் குறிப்பிடுகிறார்.*

*சங்கப் பாடல்கள் காட்டும் சமுதாயத்தில் களவில் ஈடுபட்ட காதலர்கள் அனைவருமே சொன்னசொல் தவறாது நடந்துகொண்டனர் என்று கூறுவதற்கு இயலாத நிலையை அகநானூற்றுப்பாடல் ஒன்று, ‘அறமற்ற ஒருவன் இளம்பெண் ஒருத்தியின் பெண்மை நலத்தினை நுகர்ந்து, பின்னர் அவளை அறியேன் என அறவோர் முன்னிலையில் பொய்ச்சூள் உரைத்தான். அவையிலிருந்த பெரியோர் உண்மையைக் கட்டறிந்து பெரிய மரத்தின் கவர்த்த கிளையில் அவனைக் கட்டிவைத்து அவன் தலையில் நீரினை ஊற்றினர்’[2] எனக் குறிப்பிடுகிறது.*

*இதே போன்றதொரு பெண்ணின் மனப்போராட்டத்தை, ‘‘யாரும் இல்லை; தானே கள்வன் தான்அது பொய்ப்பின், யான்எவன் செய்கோ?’’[3] என்ற குறுந்தொகைப் பாடலும் காட்டுகிறது.*

*மேற்குறித்த இத்தகையதொரு சூழலே முறைப்படுத்தப்பட்ட சடங்குகளை அடிப்படையாகக்கொண்ட திருமணங்கள் தோன்றக் காரணமாக அமைந்ததை,*

---

*[1] வ.சுப. மாணிக்கனார். தமிழ்க்காதல், ப. 107*

*[2] அக. 256:14-20*

*[3] குறு. 25:1-2*

*"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்*
*ஐயர் யாத்தனர் கரணம் என்ப"*[1]

*என்றும், பெண்ணைக் கொடுத்தற்குரிய மரபுடையவர்களாலும் பெண்ணைப் கொள்ளுதற்கு உரிய மரபுடையவர்களாலும் முடிவு செய்யப்பட்டுக் கரணம் எனப்பட்ட சடங்குகளின் வழி திருமணங்கள் ஏற்பாடு செய்யப்பட்டதை,*

*"கற்பெனப்படுவது கரணமொடு புணரக்*
*கொளற்குரிய மரபிற் கிழவன் கிழத்தியைக்*
*கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே"*[2]

*என்றும், வரும் தொல்காப்பிய நூற்பாக்கள் தெளிவுபடுத்துகின்றன. பண்டைக் காலத்திருமண முறைகளைப்பற்றி அறிய துணைநிற்கும் அகநானூற்றின் 136வது பாடலை இத்தகைய களவின்வழி வாராக் கற்பு மணத்திற்குச் சான்று காட்டலாம். இத்தகைய கற்புமணத்தை வ.சுப. மாணிக்கனார், 'மரபுநெறி' எனக் குறிப்பிடுகிறார்.*

### *1.6.11. பெருந்திணை மணம்*

*சங்க காலத்திற்கு முன்பும் சங்க காலத்திலும் பெருவழக்காகக் காணப்பட்ட மண முறைகளில் ஒன்று பெருந்திணை மணம். இத்தகைய மண முறையைத் தொல்காப்பியம்,*

*"ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்*
*தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்*
*மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்*
*செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே"*[3]

*எனக் குறிப்பிடுகிறது.*

### *1.6.11.1. மடலேறி மணத்தல்*

*தான் விரும்பிய பெண்ணை மணக்க இயலாத நிலை ஏற்படும்போது தலைவன் மடல் ஏறுவான். இதற்காக வேண்டி பனங்கருக்கால் குதிரை செய்து ஊரின் முச்சந்திகளில் அதன்மீது ஊர்ந்து வருவான். அப்போது தலைவியின் உருவப் படத்தைக் கையில் பிடித்துக்கொள்வான். எலும்பு மாலையை அணிந்துகொள்வான் இதனைக் குறுந்தொகை,*

*"விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல்*
*மணியணி பெருந்தார் மரபிற் பூட்டி*
*வெள்ளென் பணிந்துபிற ரெள்ளத் தோன்றி*
*ஒருநாண் மருங்கிற் பெருநா ணீக்கித்*
*தெருவி னியலவுந் தருவது கொல்லோ"*[4]

*எனக் குறிப்பிடுகிறது. 14,173 ஆகிய இரு குறுந்தொகைப் பாடல்களும் மடல் ஏறிப் பெண்ணை மணந்ததைக் குறிப்பிடுகிறது. "மடலே காமந் தந்தது அலரே மிடைபூ*

---

[1] *தொல். பொருள். 143*
[2] *தொல். பொருள். 140*
[3] *தொல். பொருள். அகம். 54*
[4] *குறு. 182:1-5*

எருக்கின் அலர்தந் தன்றே"[1] என நற்றிணையும், கலித்தொகையில் வரும் 138-141 வரையிலான பாடல்களும் இதனைக் குறிப்பிடக் காணலாம். இவ்வாறு ஆடவன் தன் காமத்தை வெளிப்படுத்தி ஊராரின் ஒப்புதலோடு ஒரு பெண்ணை அடைவதையே மடலேறி மணத்தல் என்பர்.

ஆயினும் வ.சுப. மாணிக்கனாரின், "பெருந்திணைக்கண் ஒவ்வாத் தலைவியை உடன்படுத்துதற்காக மடலேற்றம் நிகழ்வதில்லைகாண்…… விரும்பாத பெண்ணை வேண்டி ஒருவன் மடலேறி வருவானாயின் அவன் வீதி வரவைச் சமுதாயம் ஒப்புங்கொல்? அவன் பேச்சைப் பெரியவர்கள் ஏற்பர்கொல்? அத்தகைய ஒரு போக்கிற்கு இடம்கொடுத்தால் எப்பெண்ணையும் மடலேறிப் பெறச் சில காமுகர்கள் முனைய மாட்டார்களா? ……ஆதலின் விருப்பமில் கன்னியை வணக்குவதற்கு ஒருவன் மடலூரான் மடலேற்றம் ஒத்தகாமம் உடையார் மாட்டே நிகழ்வது"[2] என்ற கருத்து இங்கு எண்ணிப்பார்க்கத்தக்கது.

### *1.6.11.2. இளமை தீர்திறம்*

தலைவனும் தலைவியும் தன் இளமைப்பருவம் கழிந்த பின்றை கொள்ளும் காம வேட்கை. இதனைத் தொல்காப்பிய உரையாசிரியர் இளம்பூரணர், "தலைமகன் முதியனாகித் தலைமகள் இளையளாதலும் தலைமகள் முதியளாகித் தலைமகன் இளையனாதலும், இவ்விருவரும் இளமைப் பருவம் நீங்கியவழி அறத்தின் மேல் மனம் நிகழ்தலன்றிக் காமத்தின்மேல் மனம் நிகழ்தலும்"[3] என மூன்று நிலைகளாக வகைப்படுத்திக் குறிப்பிட்டுள்ளார். இதில் முதல் வகைக்கு ஆரியரின் எண்வகை மணமுறைகளில் ஒன்றான நாற்பத்து எட்டு ஆண்டு பிரமச்சரியம் காத்தவனுக்குப் பன்னிரண்டு வயதே ஆன இளையவளை முதல் பூப்பு எய்தி மறுபூப்பு எய்தும்முன் மணஞ்செய்து கொடுக்கும் 'பிரம்மம்' என்ற மணமுறையோடு ஒப்பவைத்து நோக்கத்தக்கது.

தலைமகன் இளையன் ஆகித் தலைமகள் முதியளாக இருந்த நிலையில் நடைபெற்ற திருமணங்கள் பழங்காலச் சமூகத்தில் நடைபெற்றதை, எட்கர் தர்ஸ்டன் எழுதியுள்ள 'Ethnographic Notes in South India' (தென்னிந்திய மானிட இயல்) என்ற நூலில் தென்னிந்தியப் பழங்குடிகளின் மணமுறைகளைக் குறித்த பதிவுகள் வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது. இந்தகைய திருண உறவுகள் சேலம் மாவட்டத்தைத் சேர்ந்த மலையாளி, தமிழ்நாட்டைச் சேர்ந்த கம்மர், மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த பழநி மலையில் உள்ள குன்னுவர், கொங்கர், தொட்டியன், கப்பிலியன், திருநெல்வேலியிலுள்ள தெலுங்கு செட்டிகள், கோண்டு, கள்ளர், வலம்பர், கோயமுத்தூரைச் சேர்ந்த கவுண்டர் ஆகிய இனத்தாரிடையே வழக்கில் இருந்துள்ளது.(ப. 50-55) இத்தகைய திருமணங்களில் கணவனாக இருக்கும் சிறுவனின் மனைவியுடன் சிறுவனின் தந்தை (பெண்ணின் மாமனார்) உடல் உறவு கொண்டு பிள்ளை பெற்றுக்கொள்ள உதவியதையும், இத்தகைய திருமணங்கள் உறவு முறைக்குள் திருமணம் நடக்க வேண்டும் என்ற அக மணமுறையின் காரணமாகவும், சொத்து வேறு ஒருவருக்குச் சென்றுவிடக்கூடாது என்ற பொருளியல் காரணமாகவும் நடைபெற்றதை எட்கர் தர்ஸ்டனின் பதிவுகளில் இருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

---

[1] நற். 152:1-2

[2] வ. சுப. மாணிக்கனார், தமிழ்க் காதல், ப. 195-196

[3] தொல். பொருள். 54., இளம். உரை

தலைமக்கள் இருவரும் இளமைப் பருவம் நீங்கியவழி அறத்தின் மேல் மனம் நிகழ்தலன்றிக் காமத்தின்மேல் மனம் நிகழ்தலுக்கு இளம்பூரணர் கலித்தொகையில்(94) மருதத் திணையில் வரும் குறளன் கூனி காமவேட்கையை உதாரணமாய்க் காட்டுவார்.[1]

### 1.6.11.3. மிக்க காமத்து மிடல்

இது காம மிகுதியால் வலிதிற் பற்றிப் புணர்தலைக் குறிப்பிடுகிறது. இத்தகையதொரு முறை சமூகத்தில் இருந்ததைக் கலித்தொகை,

> "மையின் மதியின் விளங்கு முகத்தாரை
> வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று"[2]

எனக் குறிப்பிடுகிறது. இப்பாடலடிக்கு மதிபோலும் முகமுடைய மகளிரை வலிதிற் புணர்தல் என்று பொருள். இதுவும் ஒரு மணமுறையாக பண்டைக் காலத்தில் இருந்துள்ளது. இது ஆரியரின் எண்வகை மணத்துள் 'இராக்கதம்' என்ற மணமுறையோடு ஒப்பிடத்தக்கது. "நாகரிக வளர்ச்சி பெறாத சமுதாயங்களில் பெண்களை வன்முறையில் கைப்பற்றிப் புணரும் வழக்கமே பெருவழக்காக இருந்ததாகக் கூறப்படுகிறது"[3] என்றும், "இத்தகைய மணமுறை கோண்டுகள், முதுவர், மாலர் ஆகிய இனங்களைச் சார்ந்த தென்னிந்திய பழங்குடிகளிடம் வழக்கில் இருந்தது. இது தொல் பழங்கால வழக்கின் எச்சமாகக் கருதலாம்"[4] என்றும் குறிப்பிடும் கருத்துக்கள் இப்பெருந்திணை மணம் சமூகத்தில் வழக்கத்தில் இருந்ததை உறுதிப்படுத்துகிறது.

பெற்றோர்களின் ஏற்பாட்டுத் திருமணங்களில் மேற்குறித்தவாறு வயது பொருத்தமில்லாத வயது முதிர்ந்தவனை மணக்க நேரிடும் என்ற எண்ணத்தின் காரணமாகவே இளவயதுடைய ஆடவனுடன் அவன் வேறு இனக்குழுவைச் சார்ந்தவனாகக் காணப்பட்டாலும் அவன்பால் ஈடுபாடு கொண்டனர் எனக் கருதலாம்.

### 1.6.12. ஏற்பாட்டுத் திருமணங்கள்

சங்ககாலத்தில் நடைபெற்ற திருமணங்கள் காலச் சூழலுக்கும் ஆண்பெண் மனவிருப்பங்களுக்கும், குலமுறைக்கும் ஏற்ப பல வகைப்பட்ட நிலைகளில் நடைபெற்று வந்துள்ளதைச் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. அவற்றுள் பெரியோர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட ஏற்பாட்டுத் திருமணமும் ஒன்றாகும். இதனை மரபுவழி மணம் என்றும் குறிப்பிடுவர். பெற்றோர் அல்லது பெரியோர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட இத்தகைய திருமணத்தை, "தமரிற் பெறுதல்"[5] என்றும்,

> "கற்பு எனப்படுவது கரணமொடு புணர,
> கொளற்கு உரி மரபின் கிழவன் கிழத்தியை,
> கொடைக்கு உரி மரபினோர் கொடுப்ப, கொள்வதுவே"[6]

---

[1] தொல். பொருள். 54, இளம். உரை
[2] கலி. 62
[3] எட்கர் தர்ஸ்டன், தென்னிந்திய மானிட இன இயல், ப. 22
[4] சிலம்பு நா. செல்வராசு, தொல்காப்பியத்தில் மண முறைகள் சமூக மானுடவியல் ஆய்வு, பக். 150-151
[5] தொல்.பொருள். செய். 488
[6] தொல். பொருள். கற்பு. 140

*என்றும் குறிப்பிடுகிறது தொல்காப்பியம். இதற்கு, பாரிமகளிரை மணக்க வேண்டி கபிலர் விச்சிக்கோவிடம் வேண்டுவதைக் கூறும் புறநானூற்றுப் பாடலைச் சான்று காட்டலாம்.*[1]

*பெற்றோர் குடி, குணம், சுற்றம் ஆகியவற்றை ஒப்பிட்டுப் பார்த்துப் பலருடன் கலந்து உசாவி(அலோசனை) திருமணம் நிகழ்த்தும் வழக்கத்தையும், பெண்ணின் சுற்றத்தார் தலைவியின் முன்கையைப் பற்றி ஊரிலுள்ள அனைவரும் அறிய தலைவனிடம் தரும் வழக்கத்தையும்,*

*“கொடுப்பின் நன்கு உடைமையும், குடி நிரல் உடைமையும்,*
*வண்ணமும், துணையும், பொரீஇ”*[2]

*“நேர் இறை முன்கை பற்றி, நுமர் தர,*
*நாடு அறி நல் மணம் அயர்கம்”*[3]

*எனக் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகிறது. இத்தகைய ஏற்பாட்டுத் திருமணங்கள் தலைமக்களால் களவை முறைப்படியாக வெளிப்படுத்தியோ அல்லது களவு வெளிப்பட்டோ பெற்றோரால் நடத்திவைக்கப்படுவதும் உண்டு, இதனை,*

*“எந்தையும் யாயும் உணரக் காட்டி*
*ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்,*
*மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப”*[4]

*“மலர்ந்த பொய்கை, முகைந்த தாமரைத்*
*தண் துறை ஊரன் வரைக!*
*எந்தையும் கொடுக்க! என வேட்டேமே”*[5]

*“மண்ணி மாசு அற்ற நின் கூழையுள் ஏற அவன்*
*கண்ணி தந்திட்டது எனக் கேட்டு, 'திண்ணிதா,*
*தெய்வ மால், காட்டிற்று இவட்கு' என, நின்னை அப்*
*பொய் இல் பொதுவற்கு அடை சூழ்ந்தார் தந்தையோடு*
*ஐயன்மார் எல்லாம் ஒருங்கு”*[6]

*“அஞ்சல் அவன் கண்ணி நீ புனைந்தாய்ஆயின், நமரும்*
*அவன்கண் அடைசூழ்ந்தார், நின்னை; அகன் கண்*
*வரைப்பில் மணல் தாழப் பெய்து, திரைப்பில்*
*வதுவையும் ஈங்கே அயர்ப”*[7]

*எனவரும் பாடலடிகளால் உணரலாம். களவில் தலைவனால் வரைவு நீட்டிக்கும்போது தலைவியைப் பெண்கேட்டு வரும் ‘நொதுமலர் வரைவு’ (வேற்று வரைவு) குறித்த*

*“……………………………………நம் நகர்*
*அருங் கடி நீவாமை கூறின், நன்று’ என*
*நின்னொடு சூழ்வல், தோழி!”*[8]

[1] புற. 200
[2] குறி. 30-31
[3] குறி. 231-232
[4] குறு. 374:1-3
[5] ஐங். 6
[6] கலி. 107:30-34
[7] கலி. 115:17-20
[8] கலி. 54:16-18

*"புதுவ மலர் தைஇ, எமர் என் பெயரால்,*
*வதுவை அயர்வாரைக் கண்டு?"*[1]

எனவரும் பாடல்களும் பிறவும்(*நற். 165, 207; குறு. 31, 171, 208, 321, 379; ஐங். 110, 168, 201, 205, 367*) குறிப்பிடுவது கொண்டு அக்காலச் சமூகத்தில் வழக்கத்தில் இருந்த ஏற்பாட்டுத் திருமணங்கள் குறித்து அறியமுடிகிறது.

இத்திருமண ஏற்பாட்டில் பெண்வீட்டில் மணம்பேச முதியவர்கள் முன்நின்று செயல்பட்டதை, *"தண்டுடைக் கையர் வெண்தலைச் சிதவலர்"*[2] என்ற குறுந்தொகைப் பாடலடி குறிப்பிடுகிறது.

### 1.6.13. ஏறுதழுவல் மணம்

சங்ககாலத்தில் வழக்கத்தில் இருந்த பல்வேறு மணமுறைகளில் ஒன்று முல்லைநில மக்களான ஆயர்களிடையே காணப்பட்ட ஏறுதழுவி பெண்ணை மணத்தல் என்னும் மணமுறையாகும். கால்நடைகளே ஆயர்களின் செல்வமாகக் கருதப்பட்டதால் அவற்றைப் பகைவர்கள் கவர்ந்து செல்லாதவாறு காப்பதற்கு உடல் வலிமையும் மனவலிமையும் கொண்டவர்களாக ஆடவர்கள் இருக்கவேண்டும் என எதிர்பார்க்கப்பட்டனர். இதன் காரணமாகவே ஆயர்களின் பண்பாட்டில் வீரத்தை வெளிக்காட்டி ஏற்றினைத் தழுவி பெண்ணை மணக்கும் மணமுறை வழக்கத்தில் இருந்தது.

ஏறுதழுவி பெண்ணை மணக்கும் மணமுறை குறித்து முல்லைக்கலியில் வரும் *101-107* வரையிலான பாடல்களில் விரிவாகப் பேசப்பட்டுள்ளது. ஏறுதழுவுதல் குறித்த செய்தியானது முறையாகப் பறை மூலம் எல்லோருக்கும் அறிவிக்கப்பட்டது.[3] சீவி விடப்பட்ட கொம்புகளைக் கொண்ட எருதுகள் தொழுவத்தில் விடப்பட்டு, பறைமுழக்கப்பட்டது.[4]

ஏறுதழுவலில் கொல்லும் தன்மையுடைய ஏற்றின் கொம்புக்கு அஞ்சுகின்றவனை ஆயமகள் மறுபிறப்பிலும் தழுவமாட்டாள்.[5] அஞ்சாது தழுவும் ஆயமகனுக்குப் பெண்ணின் பெற்றோர் முலைவிலை (பரிசப்பொருள்) வேண்டாது பெண்ணைக் கொடுப்பர்.[6] இதனைக் கீழ்வரும் பாடலடிகளும் உணர்த்தும்.

*".... கோள் அரிதாக நிறுத்த கொலை ஏற்றுக்*
*காரிகதன் அஞ்சான் பாய்ந்த பொதுவற்கே,*
*ஆர்வுற்று, எமர், கொடை நேர்ந்தார்"*[7]

### 1.6.14. குலமுறைத் திருமணங்கள்

திருமண உறவுகளில் ஆணும் பெண்ணும் ஒத்த குலத்தவராக இருக்கவேண்டும் என்ற நிலை முல்லை நில ஆயர்களிடம் இருந்தது. இதனை முல்லைக்கலிப் பாடல்களை நோக்கப் புலப்படும்.

*"ஆயர் மகன் ஆயின் ஆய மகள் நீ ஆயின்*
*நின் வெய்யன் ஆயின் அவன் வெய்யை நீ ஆயின்"*[8]

---

[1] கலி. 114:3-4
[2] குறு. 146:3
[3] கலி. 102:13
[4] கலி. 101:8-10
[5] கலி. 103:63-64
[6] கலி.103:71-73
[7] கலி. 104:73-75
[8] கலி. 107:19-20

“புல்லினத்து ஆயனைநீ ஆயின், குடம் சுட்டு
நல்லினத்து ஆயர், எமர்”[1]

என வரும் பாடலடிகளில் ஆணும் பெண்ணும் ஒத்த குலத்தவராக இருக்கின்ற காரணத்தால் களவுக்காதல் திருமணத்தில் முடியும் அதற்காக அஞ்சவேண்டியதில்லை என்பதையும், பெற்றோர்கள் இத்தகைய திருமணத்திற்கு இசைவு தெரிவிப்பர் என்பதையும்,

“அஞ்சல் அவன் கண்ணி நீ புனைந்தாய்ஆயின், நமரும்
அவன்கண் அடைசூழ்ந்தார், நின்னை; அகன் கண்
வரைப்பில் மணல் தாழப் பெய்து, திரைப்பில்
வதுவையும் ஈங்கே அயர்ப”[2]

எனவரும் முல்லைக்கலிப் பாடல் தெரிவிக்கிறது. மேற்குறித்த சான்றுகள் ஆயர் இனத்தவரிடையே திருமண உறவுகளில் குலஒப்புமை எதிர்ப் பார்க்கப்பட்டதையும் குலமுறைத் திருமணங்கள் வழக்கில் இருந்ததையும் காட்டுகின்றன.

**1.6.15. சேவை செய்து மணத்தல்**

பெண்ணை மணக்க விரும்பும் ஆடவன் அப்பெண்ணின் பெற்றோர்க்குப் பணிசெய்து(சேவை) அவர்களின் நன்மதிப்பைப் பெற்றுப் பெண்ணை மணக்கும் மன முறைக்குச் சேவைமணம் என்று பெயர். இவ்வாறு பெண்ணின் பெற்றோர்க்குச் செய்யும் சேவை மணப்பெண்ணுக்குத் தரும் பரிசப்பொருளை ஈடுகட்டுவதற்கும், பெண்ணின் பெற்றோர்க்கு ஆடவன் தன் உழைப்பின் திறத்தையும் ஆற்றலையும் வெளிப்படுத்துவதற்கும் வாய்ப்பாக அமைகிறது.

இத்தகைய மணமுறை இந்தியப் பழங்குடிகளிடம் நிலவுவதைப் பக்தவச்சல பாரதி, “மர்டாக் தொகுத்த 565 உலக இனவரைவியல் மாதிரிகளுள் 13 சமுதாயங்களில் மணப்பெண் வீட்டுக்குப் பணி செய்யும்(suitor service) முறை காணப்படுகிறது. திருமணத்திற்கு முன் மணமகன் மணப்பெண் வீட்டிற்குச் சென்று குடும்பப் பணிகளைச் செய்ய வேண்டும்”[3] என்றும், “பெரும்பாலும் இவ்வகைப்பணி மணப்பெண் பணத்தை ஈடுசெய்வதற்காகவே செய்யப்படுகிறது. கோண்டு, பெய்கர், காசா போன்ற இந்தியப் பழங்குடிகளிடமும் இவ்வகைப் பழக்கம் நிலவுகிறது”[4] என்று குறிப்பிடுவார்.

சங்கத் தொகைநூல் காட்டும் சமூகத்தில் மேற்குறித்த தன்மையிலான சேவைமணம் வழக்கில் இருந்தது எனக் கருதுவதற்கு, ‘நெய்தல் நிலப்பெண்ணை விரும்பும் ஆடவன் ஒருவன் அப்பெண்ணின் தந்தையுடன் கூடிக் கடற்கரைக்கு அடுத்துள்ள உப்பளத்தில் உப்பை விற்றுத் திரிந்தும், பெருங்கடல் ஆழத்தில் புணையுடன் சென்றும், அவன்வயமாகியும், அவனுக்குப் பணிந்தும், அவனைச் சார்ந்தும் இருப்போமானால், அறத்தை எண்ணிப் பார்த்து ஒருவேளை தானே நாம் விரும்பும் தலைவியை நமக்கு மணஞ்செய்து தருவானோ?’[5] என்ற அகநானூற்றுப் பாடற்கருத்து சான்றாக அமைகிறது.

---

[1] கலி. 113:9-10
[2] கலி. 115:17-20
[3] பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 414
[4] பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 415
[5] அக. 280

## *1.7. இயல் முடிவுகள்*

*சங்ககால மக்கள் வாழ்வை இயக்குவதில் சூழல் முக்கியப் பங்காற்றியுள்ளது. நில அமைப்புக்கு ஏற்பவே மக்களின் வாழ்க்கை முறைகள் அமைந்திருந்தன. நில அமைப்பும், மக்களின் புழங்குவெளிகளும், நீர் ஆதாரங்களும், விளைபொருட்களும், தாவர இனங்களும், விலங்கினங்களும் நிலத்திற்கு நிலம் வேறுபட்டுக் காணப்பட்டதை அறியமுடிகிறது.*

*குறிஞ்சி நிலப்பகுதியைக் கோடு, குவடு, கல், துறுகல், பிறங்கல், அறை, பொருப்பு, அடுக்கம், கவாஅன், சிலம்பு, குன்றம், வெற்பு, வரை, மலை என்ற பெயர்களால் அடையாளங்காண முடிகிறது. இந்நிலத்தில் மக்கள் புழங்குவெளிகளாக கானம், விடர், சாரல், புனம், ஏனல், படப்பை எனப்பட்ட இடங்கள் இருந்தன. இப்பகுதியின் நீர் ஆதாரமாக அவ்வப்போது பெய்யும் மழைநீரும் காட்டாற்று வெள்ளமும், அருவிநீரும், சுனைநீரும் இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது. இந்நிலத்தின் வழியிடங்கள் கொடிய விலங்குகளால் துன்பம் நிறைந்ததாக இருந்தது. இவர்களின் வாழ்விடங்களை 'சிறுகுடி' , 'சீறூர்' , 'சேரி' என்ற பெயர்களால் அறியமுடிகிறது. இந்நிலம் பல்வேறு இயற்கை விளைபொருட்களைக் கொண்டு மக்களுக்குப் பயன் விளைத்தது. வேட்டையாடுதலும் தினைவிதைத்தலும் இவர்களின் முக்கிய வாழ்வாதாரமாக இருந்தது.*

*முல்லை நிலங்களைப் புனம், கானம், தூறு, காடு, புறவு, முரம்பு, பாட்டம், முதையல் என்ற பெயர்களால் அறியமுடிகிறது. இவர்களின் புழங்கு வெளிகளாக மாடம், பாக்கம், புறவினாடு, சிறுகுடி, சீறூர், மென்புலவைப்பு என்பன குறிப்பிடப்பட்டுள்ளன. கார்காலப் பருவமழையே இந்நிலப்பகுதியை செழிப்படையச் செய்தது. கால்நடை மேய்த்தலும், வரகு சாமை போன்றவற்றை விதைத்தலும் இவர்களின் தொழிலாக இருந்ததை அறியமுடிகிறது.*

*ஏனைய நிலங்களைக் காட்டிலும் நீர்நில வளத்தில் செழித்து விளங்கிய மருதநிலப்பகுதி கழனி, செறு, செய், வரம்பணை, பழனம், களம் என்ற பெயர்களால் சுட்டப்படுகின்றன. இந்நிலச் செழிப்பிற்குரிய நீர்வள ஆதாரமாக ஆறு, ஏரி, பொய்கை, பண்ணை, வாவி, குண்டுநீர், கயம், இலஞ்சி, துறை என்பன விளங்கின. பொழில், படப்பை, தண்டலை எனப்பட்ட சோலைகளைச் சூழ்ந்து விளங்கியது. இந்நிலத்தின் நீர்நில வளம் வேளாண்மை செழிக்கக் காரணமாக அமைந்தது.*

*நெய்தல் நிலமக்களின் பொருளாதாரம் கடலையும் கடல்சார்ந்த பகுதிகளையும் அடிப்படையாகக் கொண்டிருந்தது. இவர்களின் புழங்குவெளிகளாகச் சிறுகுடி, ஊர், சேரி, பாக்கம், பட்டினம், பொழில், படப்பை, எக்கர், கானல், துறை, கழி என்பன இருந்தன. மீன் பிடித்தலும் உப்பு விளைத்தலும் இவர்களின் முதன்மைத் தொழிலாக இருந்தது. மழைபெய்யுங்காலத்து நெல்விளையும் ஊர்களும் நெய்தல் நிலப்பகுதியில் காணப்பட்டது.*

*பாலை நிலப்பகுதியில் மக்கள் வாழ்தல் மிகுந்த துன்பம் நிறைந்ததாகக் காணப்பட்டது. கொள்ளைப் பொருள்களும், வேட்டையாடுதலுமே இப்பகுதிவாழ் மக்களின் வாழ்வாதாரமாக இருந்தன. இந்நிலப்பகுதிகளில் எயினர், வேடர், மழவர், ஆறலை கள்வர் எனப்பட்ட மக்கள் வாழ்ந்தனர். இந்நிலப்பகுதி மிகுந்த வெப்பம் நிறைந்ததாகவும், நீரற்றதாகவும், நிழலற்றதாகவும், விலங்குகள் உண்ண உணவின்றித் துன்பப்படும் நிலையினதாகவும், கொடிய காட்டுவிலங்குகளின்*

நடமாட்டமுடையதாகவும், உயிர் இரக்கமற்ற மனிதர்கள் வாழும் பகுதியாகவும் இருந்ததைச் சங்கப் பாடல்கள் சித்தரிக்கின்றன. சூரியனின் வெம்மையினால் இப்பகுதி பொலிவிழந்து தாவரம், விலங்கு, பறவை, மனிதன் என அனைத்து உயிர்களும் துன்பப்படும் நிலையினதாக இருந்தது. பாலை மக்களின் புழங்குவெளிகளாகக் குரம்பை, வியல்நகர், மன்றம், புலம், வைப்பு, பொதியில், குறும்பு, பாக்கம், சிறுகுடி, மூதூர், சீறூர் எனப்பட்ட பெயர்களில் அமைந்திருந்தன.

தன்னை நாடி வரும் இரவலர்களுக்கு மன்னர்களும் வள்ளல்களும் பரிசுப்பொருட்களைத் தருவதோடு உணவளித்துப் போற்றும் பண்பைக் கொண்டவர்களாகத் திகழ்ந்துள்ளதை அறியமுடிகிறது. அத்தகைய விருந்தில் பலவகையான கள்ளினை அவர்களுக்கு வழங்கி உபசரிப்பதைக் காணமுடிகிறது.

மக்கள் தாங்கள் வாழ்ந்த நிலப்பகுதியின் விளைபொருளுக்கும் அவர்கள் உண்ணும் உணவுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்துள்ளது. நீர் வளமற்ற குறிஞ்சி, முல்லை, பாலை நில மக்களின் அன்றாட உணவில் இறைச்சி தவிர்க்கமுடியாத ஒன்றாக இருந்துள்ளது. முல்லை, மருதம், நெய்தல் ஆகிய பகுதிகளில் மீன் உணவை உண்பதைக் காணமுடிகிறது. இதற்கு அப்பகுதியின் நீர்வளமே காரணமாக அமைந்தது.

மக்கள் தங்கள் உணவுத் தேவையைப் பண்டமாற்றின் மூலம் நிறைவேற்றிக்கொண்டனர். பண்டமாற்று வேலைகளில் பெண்களே தங்களுக்குள் பொருட்களைப் பரிமாறிக் கொண்டனர் என்பது கவனிக்கத்தக்கது.

பண்டைச் சமூகத்தில் விருந்து எல்லா நிலத்து மக்களாலும் போற்றப்பட்ட ஒன்றாக இருந்தது. எந்த நிலத்தைச் சார்ந்த மக்களாயினும், உணவு சமைக்கும் பணியைப் பெண்களே மேற்கொண்டனர்.

வணிக நோக்கில் கள்ளும் இறைச்சியும் விற்பனை செய்யப்பட்ட நிலையினை அறிய முடிகிறது. மக்கள் தன்னளவில் யாரும் தங்கள் உணவினைத் தாழ்வானதாகக் கருதவில்லை.

குறிஞ்சி, பாலை நிலத்தைச் சேர்ந்த மக்கள் தங்கள் உணவினை தினம்தினம் தேடவேண்டிய நிலையினர்களாக இருந்ததைக் காணமுடிகிறது. இப்பகுதி மக்கள் தங்கள் உணவுத் தேடலுக்காகவே ஒரு நாளின் பெரும்பகுதி நேரத்தைச் செலவிடவேண்டியவர்களாக இருந்தனர். வேட்டையில் கிடைத்த விலங்கின் ஊன் தங்கள் குழுவிலுள்ள அனைவருக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டது.

போரின்போது வீரர்களுக்கு ஊன் உணவும் கள்ளும் தருவதை அரசர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

பாணர்களின் ஒரு பிரிவினர் தங்கள் உணவுத் தேவைக்காக மற்றவர்களையே நாடவேண்டிய நிலையில் இருந்தனர். இதற்கு இவர்களின் ஊர்ஊராகச் சுற்றித் திரியும் கலை வாழ்வும், உணவு உற்பத்தியில் ஈடுபடாமையுமே காரணமாக அமைந்தது.

கள் வணிக நோக்கோடு கடைகளிலும், வீதிகளிலும், வயல்வெளிகளிலும் விற்கப்பட்ட அதே வேளையில், தங்களுக்குத் தேவையான கள்ளினைத் தாங்களே தங்கள் இல்லங்களில் தயாரித்தும் மக்கள் பருகியுள்ளனர். குளிர்ச்சியானது,

*சூடானது, புளிப்புச் சுவையுடையது, மணமுடையது, களிப்பு மிக்கது, களிப்பற்றது எனப் பலநிலைகளில் கள் உண்ணப்பட்டது.*

*சங்ககால மக்கள் வாழ்வில் இன்றியமையாத உணவாக மதிப்புவாய்ந்ததாகக் கருதப்பட்ட கள் மக்களால் கொண்டாடப்பட்டது. கள்ளினை இழிவான பொருளாகவோ அதை அருந்துவதைக் தரக்குறைவாகவோ மக்கள் கருதவில்லை. மாறாகக் கள்ளினை வாழ்த்தியதைத்தான் காணமுடிகிறது. சமூகத்தில் உயர்நிலையில் இருந்த மன்னர்கள் தொடங்கி சாதாரண குடிமக்கள் வரை கள்ளினைப் பருகியுள்ளனர்.*

*பொருளாதார அடிப்படையில் பார்க்கும்போது கள் அடும் தொழில் சங்ககாலத்தில் மிகச் சிறப்பானதாக விளங்கியுள்ளது. கள்ளினை வெற்றி, மகிழ்ச்சி, களிப்பு ஆகியவற்றின் குறியீடாகக் காணமுடிகிறதே தவிர தோல்வியின் அடையாளமாக உண்ணப்பட்டதைக் காணமுடியவில்லை.*

*கள்ளினைத் தனித்த மதுபானம் என்ற அளவில் பார்க்காமல் உண்ணும் உணவின் ஒரு பகுதியாகவே பார்த்தனர். கள் வழிபாட்டுச் சடங்குகளில் படையல் பொருளாகப் படைக்கப்பட்டது.*

*சங்க காலச் சமூகத்தில் ஆடைகளை யார் உடுத்தினர், எவ்வாறு உடுத்தினர் என்று நோக்கும்போது, அவற்றை உடுப்பவரின் வாழிடம், தொழில், பொருளாதாரம், சமூகத்தகுதி, ஆண்பெண் என்ற பால்நிலை வேறுபாடு, ஆகியவற்றைப் பொறுத்துப் பல நிலைகளில் இருந்ததைக் காணமுடிகிறது.*

*ஆடை உடுத்தப்பட்ட இடத்தை நோக்கும்போது, ஆண்பெண் என்ற இருபாலருமே உடலின் இடைப் பகுதியில் உடுத்த அளித்த முக்கியத்துவத்தை மேலாடைக்கு அளிக்கவில்லை என்பதைச் சங்கப்பாக்கள் காட்டுகின்றன.*

*பொருளாதாரத் தகுதியின் அடிப்படையில் பார்க்கும்போது சமூகத்தில் தலைமை நிலையிலிருந்தவர்கள் பயன்படுத்திய ஆடைக்கும் விளிம்பு நிலையிலிருந்த உழைப்பாளர்களாகிய குடிமக்கள் பயன்படுத்திய ஆடைக்கும் இடையே மிகப்பெரிய இடைவெளி இருப்பதை அறியமுடிகிறது.*

*அரசர்களும், உயர்குலப் பெண்களும் நிலந்தாழ உடை உடுத்தியிருந்தனர். அரசர்கள், கிழார் போன்ற பொருள் வளம் படைத்த சிலர் மட்டுமே இடையாடையுடன் மேலாடையும் உடுத்தினர். சாதாரண மக்கள் இடையாடை மட்டுமே உடுத்தினர். குறவர்கள் மரநாருடுக்கைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.*

*ஆண்களுக்குரிய ஆடையாகப் படம், மெய்ப்பை போன்றவையும், பெண்களுக்குரியதாகத் தழையுடை, பூங்கரைநீலம் போன்றவை இருந்துள்ளன. கச்சினைப் பெண்கள் மார்பில் அணிய ஆண்கள் அதனை இடையில் கட்டியுள்ளனர்.*

*இரவலர்க்குக் கொடுக்கப்பட்ட பல்வேறு கொடைப் பொருட்களுள் முதன்மையானதாக ஆடை இருந்துள்ளது.*

*போருக்குச் செல்லும் வீரர்கள் வெள்ளாடை அணிந்து போருக்குச் சென்றனர். இறந்த உடல்களைத் தூய வெள்ளை ஆடையால் போர்த்தினர்.*

*பொருள் படைத்தவர்களின் உடைகளைத் துவைக்க ஊரில் புலைத்தி எனப்பட்ட ஆடை வெளுப்பவள் இருந்துள்ளாள். ஆடைகளுக்குக் கஞ்சியூட்டுவதும், மணப்புகை ஊட்டுவதும் வழக்கில் இருந்துள்ளது.*

*திருமணச் சடங்கில் மணமகளுக்குப் புத்தாடை உடுக்கத் தரப்பெற்றது. வளமனைகளில் உள்ளவர்கள் வெண்ணிறத் துணிகளைப் படுக்கை விரிப்புகளாகப் பயன்படுத்தியுள்ளனர். துணியினாலான அடையாளக் கொடிகள் பறக்கவிடப்பட்டன.*

*ஆடைகளைக் களைவது போல கனவு காண்பது தீச்சகுனமாகக் கருதப்பட்டது. யானை, குதிரை போன்றவற்றின் மீது ஒப்பனைப் பொருளாக போர்வைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.*

*வாழிடங்கள் குறித்த செய்திகளைத் தொகுத்துக் காணும்போது, வாழிடங்களை அமைத்துக்கொள்வதில், சுற்றுச்சூழல், தொழில், பொருளாதாரம், மனிதத்தேவைகள் என்பவை முக்கிய பங்கு வகிப்பதை அறிந்துகொள்ள முடிகிறது.*

*அவரவர் செய்யும் தொழிலுக்கு ஏற்ப வாழிடங்கள் அமைந்திருந்தன. அத்தொழிலுக்குரிய கருவிகளை வைப்பதற்குரிய இடமாகவும் வாழிடங்கள் திகழ்ந்தன.*

*ஒவ்வொரு நிலப்பகுதியிலும் அமைக்கப்பட்ட வீடுகள் அந்தந்தப் பகுதிகளில் கிடைத்த மூலப்பொருட்களைக் கொண்டு அமைக்கப்பட்டதை, பாலை நிலத்தில் ஈந்தின் ஓலையாலும், முல்லை நிலத்தில் வரகு வைக்கோலாலும், மருத நிலத்தில் நெல் வைக்கோலாலும், நெய்தல் நிலத்தில் தருப்பைப் புல்லாலும் குடிசையின் கூரைகள் வேயப்பட்டுள்ளது கொண்டு அறியமுடிகிறது.*

*பல்வேறு நிலைகளாக அமைந்த வாழிடங்கள் அக்காலச் சமூகப் பொருளாதார ஏற்றத்தாழ்வைக் காட்டுவனவாக உள்ளன.*

*இல்லங்கள் தங்குமிடம் என்பதைத் தாண்டி சடங்கு, வழிபாடு, விழா போன்றவற்றை நடத்தும் இடமாகவும் திகழ்ந்துள்ளன.*

*ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழ்வதற்குரிய இடமாக மேற்குறித்த பல வகையான இல்லங்கள் விளங்கினாலும். சமூகத்திலுள்ள மக்கள் அனைவரும் பொதுவில் கூடும் இடமாக மன்றம், பொதியில் ஆகியன விளங்கின. சான்றோர் அவை இவ்விடத்திலேயே கூடுவதைக் காணமுடிகிறது.*

*வாழிடங்களோடு பெண்கள் முக்கியத் தொடர்புடையவர்களாகக் காணப்படுகின்றனர்.*

*சிறிய குடியிருப்புகளில் வீட்டின் முற்றம் முக்கிய பங்குவகித்தது. கால்நடைகளைக் கட்டுதல், சமைத்தல், தானியங்களைக் குற்றுதல், வழிபாடு, விழா போன்றவற்றை நிகழ்த்துதல் ஆகியன வீட்டின் முற்றத்திலேயே நடைபெற்றன. பெரும்பாலும் இத்தகைய முற்றங்களில் ஏதேனும் ஒரு மரம் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இது பண்டைத் தமிழரின் இயற்கையிலிருந்து பிரிக்கமுடியாத வாழ்வைக் காட்டுவதாக உள்ளது.*

சங்க இலக்கியப் பாடல்களை நோக்கும் போது திருமணம் என்ற சடங்கு குடும்பம், பாலுறவு, இனப்பெருக்கம், பொருளாதாரம் போன்ற பல காரணங்களுக்காக நிகழ்த்தப்பட்டதை அறியமுடிகிறது.

மகப்பேற்றுக்காக மட்டுமே மணத்தல் என்பது மட்டுமின்றி ஆண்கள் தங்கள் பாலியல் தேவைக்காகப் பரத்தையர்களையும் மணந்துள்ளனர்.

ஒருவன் ஒருபெண்ணை மட்டும் மணந்து வாழும் நிலைக்கு மாறாக ஒரே நேரத்தில் பல பெண்களை மணந்து வாழும் பலதார மணமுறையும் வழக்கில் இருந்துள்ளது.

திருமணம் என்னும் உறவு ஆண்பெண் விருப்பங்களைத் தாண்டி பொருளியல், அரசியல் முதலான பிற காரணங்களுக்காகவும் நடைபெற்றுள்ளன. திருமண உறவுகளில் ஆண்பெண் விருப்பத்தோடு பொருளியல் அம்சங்களும் கருத்தில் கொள்ளப்பட்டன என்பதை அறியமுடிகிறது.

இனக்குழு வாழ்வில் தங்கள் குழுவைத் தாண்டிய புறமணங்கள் சங்ககாலச் சமூகத்தில் நிகழ்ந்திருக்க வாய்ப்பிருப்பதை அவதானிக்க முடிகிறது.

பொருள் வளமிக்க குடும்பத்தில் பிறந்து வளர்ந்த பெண்கள் பொருள் வளமற்ற வறுமைப்பட்ட ஆடவர்களை மணந்துகொண்டு வாழ்ந்த நிலையினை அறிந்துகொள்ள முடிகிறது.

பெண்ணின் பெற்றோர் பெண்கேட்டு வந்தவர்கள் வேந்தர்களே ஆயினும், செல்வத்தை வேண்டாது தனக்கு நிகரல்லாதவர்க்குப் பெண் தருதல் இல்லை என்று வஞ்சினம் கூறிப் போர் வேண்டி நிற்பதைப் புறப்பாடல்கள் காட்டுகின்றன.

சங்கப் பாடல்களில் உடன்போக்கு மணம் குறித்து குறிப்பிடப்பட்டாலும். இம்மணத்தைச் சமூகம் முழுமையாக ஏற்றுக்கொண்ட ஒன்றாக அறியமுடியவில்லை. உடன்போன காதலர்கள் மீண்டும் தம் பெற்றோரை அடைந்தபோது அவர்களை ஏற்றுக்கொள்வதும் அக்காலத்து வழக்காக இருந்தது.

களவு என்பது திருணத்திற்கு முந்தைய ஆண்பெண் உறவுநிலை எனப் பொதுவாக எல்லோராலும் கருதப்பட்டு வரும் நிலையில் களவு என்பதே ஒரு தனிப்பட்ட மணமுறையாக இருந்துள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.

சங்கச் சமூகத்தைப் பொறுத்தவரை களவுமணம் சமூக அங்கீகாரத்தைப் பெற்றதாக இல்லை. அம்பல், அலர், இற்செறிப்பு போன்ற அக்காலச் சமூக நெருக்கடிகளே இதனைத் தெளிவுபடுத்துகின்றன.

களவு மணம் சங்க காலத்திற்கு முற்பட்ட தாய்வழிச் சமூகத்தில் காணப்பட்ட மணமுறையின் எச்சமாகவும், கற்பு மணம் சங்ககாலத் தந்தை வழியிலான உடைமைச் சமூகத்தில் அழுத்தம் பெற்றுவிட்ட மணமுறையாகவும் அறியமுடிகிறது.

கற்புமணம் பெரியோர் முன்னிலையில் பெற்றோராலும் சுற்றத்தாராலும் ஏற்பாடு செய்யப்பட்டது. இத்திருமணம் களவின் தொடர்ச்சியாகத்தான் இருக்க வேண்டும் என்ற அவசியத்தைப் பெற்றிருக்கவில்லை. இது பழங்காலத்தில் இருந்த மணமுறைகளுள் தனித்ததொரு மணமுறையாக இருந்ததை அறியமுடிகிறது.

*சங்க காலத்திற்கு முன்பும் சங்க காலத்திலும் பெருவழக்காகக் காணப்பட்ட மண முறைகளில் ஒன்று பெருந்திணை மணம். தான் விரும்பிய பெண்ணை மணக்க இயலாத நிலை ஏற்படும்போது ஆடவன் மடல் ஏறி மணத்தலும் வழக்கில் இருந்துள்ளது.*

*பழங்காலத்தில் பெரியோர்களால் மரபுவழி ஏற்பாடு செய்யப்பட்ட ஏற்பாட்டுத் திருமணமும் வழக்கில் இருந்துள்ளது.*

*முல்லைநில மக்களான ஆயர்களிடையே காணப்பட்ட ஏறுதழுவி பெண்ணை மணத்தல் என்னும் மணமுறை ஆயர்பண்பாட்டிற்கே உரியதாக விளங்குகிறது. திருமண உறவுகளில் ஆணும் பெண்ணும் ஒத்த குலத்தவராக இருக்கவேண்டும் என்ற நிலை முல்லை நில ஆயர்களிடம் இருந்தது.*

*பெண்ணை மணக்க விரும்பும் ஆடவன் அப்பெண்ணின் பெற்றோர்க்குப் பணிசெய்து அவர்களின் நன்மதிப்பைப் பெற்றுப் பெண்ணை மணக்கும் சேவை மணமுறையும் வழக்கத்தில் இருந்துள்ளது.*

## *2. குடிகளும் சமூக இருப்பும்*

***2.1.*** *தமிழினத்தின் தொன்மையையும், பண்பாட்டையும் அடையாளப்படுத்த உதவுவதில் கிடைத்தவற்றுள் தொன்மையானதும் முதன்மையானதுமாக விளங்குபவை பாட்டும் தொகையும் என்ற பெயரால் குறிப்பிடப்படும் சங்க இலக்கியங்களாகும். உலக அரங்கில் தமிழினத்தின் தனித்தன்மையை இவ்விலக்கியங்களே எடுத்தியம்புகின்றன.*

*தமிழிலுள்ள மரபார்ந்த இலக்கியங்கள் பலவும் ஆளும் வர்க்கத்தைப் பற்றியே பேசுகின்றன. ஆதிப் பொதுவுடைமைச் சமூக அமைப்பு சிதைவடைந்து தனி உடைமைச் சமூக அமைப்பு கால்கொள்ளத் தொடங்கிவிட்ட காலச் சூழலில் தோன்றியதாகக் கருதப்படும் சங்க இலக்கியங்களிலும் இந்நிலையையே காணமுடிகிறது. அவற்றில் ஆளும் வர்க்கத்தைச் சார்ந்தவர்களையே பாட்டுடைத் தலைவர்களாக்கிப் போற்றிப் புகழப்பட்டுள்ளமை கவனிக்கத்தக்கது.*

*உற்பத்திச் சக்திகள் உற்பத்தி உறவுகளில் எத்தகைய மாற்றங்களைக் கொண்டுவருகின்றன என்பதைக் குறித்துக் குறிப்பிடும் கார்ல் மார்க்ஸ், "ஒவ்வொரு கட்டத்திலும் ஆளும் வர்க்கத்தின் கருத்துகளே செல்வாக்கு மிக்க ஆளுமைக் கருத்துகளாக விளங்கும். அதாவது எந்த வர்க்கம் சமுதாயத்தில் பொருளாதாரச் சக்திகளை ஆளுமை புரிந்து கொண்டிருக்கிறதோ அதுதான் அறிவார்ந்த சக்திகளின் மீதும் ஆட்சிசெலுத்துகிறது. பொருளை உற்பத்திசெய்யும் சாதனங்களைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் வர்க்கம் அதே நேரத்தில் மனத்தால் படைக்கப்படும் அறிவார்ந்த படைப்புச் சத்திகளையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும். பொதுவாகச் சொன்னால் பொருளை உற்பத்தி செய்யும் சாதன வசதிகள் குறைவாக உள்ளவர்களின் கருத்துகள் பொருளாதார வசதிமிக்கோருக்குக் கட்டுப்பட்டதாக இருக்கும். செல்வாக்குமிக்க பொருளாதார உறவுமுறைகளின் மிகச்சரியான வெளிப்பாடுதான் ஆளும் கருத்துகளாக அமையும்"[1] எனக் குறிப்பிடுகிறார்.*

*மேற்குறித்த இக்கருத்திற்கு ஏற்ப ஆளும் வர்க்கம் பொருளாதாரச் சக்திகளை மட்டுமின்றி, கருத்தியல் ரீதியிலும் தன் ஆளுமையைச் செலுத்தியது. இந்நிலையில் பொருளாதாரத்தில் தன்னை அண்டிப் பிழைக்க வேண்டிய நிலையில் இருந்த பாணர் குழுவும், புலவர் கூட்டமும் அவர்களைப் போற்றிப் புகழ்வதையே தொழிலாகக் கொண்டிருந்தன. அவர்களைப் புகழ்ந்து பாடுவதையே நோக்கமாகக்கொண்டு இலக்கியங்களைப் படைத்தன. இத்தகைய இலக்கியங்களில் ஆள்வோரை விதந்துபாடிய அளவுக்கு அடித்தட்டு மக்களைக்குறித்துப் பாடுவதில் அக்கறை காட்டவில்லை.*

*இந்நிலையில் ஆளும் வர்க்கத்தின் ஏவலர்களாக இருந்து சமூக இயக்கத்துக்கு அடிப்படையாக அமைந்த அடித்தட்டு மக்களைக் குறித்து நேரடியான பதிவுகள் இலக்கியங்களில் பேசப்படாத நிலையில் இங்கொன்றும் அங்கொன்றுமாகவே அவர்களைக் குறித்து அறிந்துகொள்ளமுடிகிறது.*

*இவ்வாறு அடித்தட்டு மக்களின் வரலாறு ஆவணங்களில் இடம்பெறாமல் போனதற்கான காரணங்களாக "மேட்டிமையோரால் உருவாக்கப்பட்ட கல்வெட்டுக்கள், பட்டயங்கள், நாணயங்கள், இலக்கியங்கள் ஆகியனவற்றில்*

---

[1] லூர்து, தே., நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், *(மேற்.) ப. 73*

விளிம்பு நிலையினர் அல்லது அடித்தள மக்களைக் குறித்த செய்திகளைக் குறிப்பிடத்தக்க வகையில் கண்டறிய முடியாது''[2] என்றும், ''அடித்தள மக்கள் பிரிவின் வரலாற்றை எழுதும் பொழுது மரபுவழிச் சான்றுகள் ஓரளவிற்கே கிட்டுகின்றன. ஏனெனில் பண்பாட்டடையாளங்கள் பறிக்கப்பட்டும் மறுக்கப்பட்டும் வாழ்ந்த ஒரு குழுவானது, வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டிருக்க இயலாது''[3] என்றும் ச. பிலவேந்திரன் குறிப்பிடுகிறார்.

எனவே இங்கு ஆளும் வர்க்கத்தினரைக் கணக்கில் கொள்ளாது குடிமக்கள் என்ற சாதாரண நிலையில் வாழ்ந்த மக்களைக் குறித்து ஆய்வதை நோக்கமாகக் கொண்டு சமூகத்தில் அவர்களின் இருப்பும் மதிப்பும் எத்தகையதாக இருந்தது என்பதை இவ்வியல் பேசுகிறது. 'குடி'[4] என்னும் சொல்லிற்கு அகராதிகள் பல்வேறு பொருள்களைக் குறிப்பிடுகின்றன. அவற்றுள் 'குடிமக்கள்', 'ஆட்சிக்குட்பட்ட மக்கள்' என்னும் பொருண்மையிலேயே குடி என்னும் சொல் இவ்வியலில் எடுத்தாளப்பட்டுள்ளது. இவ்வியல் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள குடிமக்களைப் பின்வரும் நான்கு நிலைகளில் பகுத்து ஆராய்கிறது.

1. திணை குடிகள்
2. நிலை குடிகள்
3. தொழிற்குடிகள்
4. அலை குடிகள்

### 2.2. திணை குடிகள்

இங்குத் திணை என்னும் சொல் நிலத்தைக் குறிக்கிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்தாகப் பகுக்கப்பட்ட நிலப்பகுதிகளில் வாழ்ந்த, தலைமக்களாகக் குறிப்பிடப்படும் குறவர், கானவர், கொடிச்சியர், ஆயர், ஆய்ச்சியர், உழவர், உழத்தியர், பரதவர், பரத்தியர், எயினர், எயிற்றியர் உள்ளிட்ட குடிமக்களை

---

[2] ச. பிலவேந்திரன், சனங்களும் வரலாறும், ப. 6.
[3] ச. பிலவேந்திரன், சனங்களும் வரலாறும், ப. 7
[4] **தமிழ்ப் பேரகராதி:**குடியானவன்; குடியிருப்போர்; ஆட்சிக்குட்பட்டபிரசைகள்; குடும்பம்;கோத்திரம்; குலம்; வீடு; சிறுகுடி; கலக்கி; ஊர்; வாழ்விடம்.

**நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ் – தமிழ் அகராதி :** உடம்பு; ஊர்ப்பொது; குடியானவன்; குடியென்னேவல்; குலம்; கோத்திரம்; சமுசாரம்; நெற்றிப்புருவம்; பட்டினம்; மருதநிலத்தூர்; மனைவி; வீடு.

**முல்லை தமிழ் இலக்கிய அகராதி :**கோத்திரம்; ஊர்; குடிமக்கள்; பருகுதல்; குலம்; புருவம்; வீடு.

**மெய்யப்பன் தமிழ் அகராதி :**பருகுகை; மதுபானம்; மதுவுண்ட மயக்கம்; புருவம்; குடியானவன்; குடியிருப்போன்; ஆட்சிக்குட்பட்ட குடிகள்; குடும்பம்; குலம்; வீடு; ஊர்; வாழிடம்.

**வெள்ளிவிழா தமிழ்ப் பேரகராதி(1) :**உடம்பு; ஊர்ப்பொது; குடியானவன்; குடியென்னேவல்; குலம்; கோத்திரம்; சமுசாரம்; நெற்றிப்புருவம்; பட்டினம்; மருதநிலத்தூர்; மனைவி; வீடு.

**யாழ்ப்பாண அகராதி – 1 :**ஊர்ப்பொது; குடியென்னேவல்; குலம்; கோத்திரம்; சமுசாரம்; நெற்றிப்புருவம்; பட்டினம்; மருதநிலத்தூர்.

**செந்தமிழ் அகராதி :**பருவகை; புருவம்; குடியானவன்; ஆட்சிக்குட்பட்ட மக்கள்; குடும்பம்; வமிசம்; குலம்; ஊர்; வாழ்விடம்.

**பெப்ரிசியஸ் அகராதி :**குடும்பம்; குடியானவன்; குடியிருப்பு; வீடு; ஊர்; குடி; குடிகள்; குடிபடைகள்; குடிகெடுதல்; குடிகேடு; குடிநாசம்.

**கழகத் தமிழ் அகராதி :** உடம்பு; ஊர்ப்பொது; குடியானவன்; குடியென்னேவல்; குலம்; கோத்திரம்; சமுசாரம்; நெற்றிப்புருவம்; பட்டினம்; மருதநிலத்தூர்; மனைவி; வீடு; மதுபானம்; மதுவுண்ட மயக்கம்; புருவம்; குடியிருப்போர்; குடும்பம்; ஊர்; வாழ்விடம்; குடிமக்கள்; திணை; பருகு; உறிஞ்சு.

**க்ரியா தற்காலத் தமிழ் அகராதி :** குடிமகன்; குடும்பம்; (மனித) இனம்; குடித்தனம்.

இங்குத் திணை குடிகளாகக்கொண்டு சங்க காலச் சமூகத்தில் அவர்களின் இருப்பும் மதிப்பும் குறித்தும், அவர்களின் பண்பாட்டு அடையாளங்களைக் குறித்தும் விவரிக்கப்பட்டுள்ளது.

### 2.2.1. குறவர்

குன்றுசார் பகுதிகளில் வாழ்ந்த குறவர்கள் புல்லால் வேயப்பெற்ற சிறுகுடிலில் வாழ்ந்தனர்.[1] மரல் நாரினாலே பின்னிய உடையினை உடுத்தினர்.[2] தினைவிதைத்தல், வேட்டையாடுதல், கிழங்ககழ்தல், தேனெடுத்தல்[3] முதலியன இவர்களின் முக்கியத் தொழில்களாக இருந்தன. இவர்களின் வீட்டு முற்றத்தில் முழவைப்போன்றும், குடம்போன்றும் பலாப்பழங்கள் காய்த்திருந்தன.[4]

#### 2.2.1.1. குறவர் வாழ்க்கை

இனக்குழுச் சமூகமாக வாழ்ந்த குறவர்கள் பன்றி உழுத புழுதியில் தினையை விதைத்தனர். மரையாவைக் கறந்த நுரை கொண்ட இனிய பாலை உலைநீராக வார்த்து சந்தன விறகால் எரியூட்டித் தினையைச் சமைத்து வாழை இலையிலே, பலருடன் பகுத்து உண்டனர்.[5] தங்கள் உணவுத் தேவைக்காகக் கடமான், பன்றி, போன்றவற்றை வேட்டையாடினர். பெண் நாயை ஏவி உடும்பினைப் பிடித்தனர். புளியம் பழத்தின் புளிப்பைக் கலந்து ஆன் முதலிய விலங்கின் மோரை உலையாக வார்த்து அதில் மூங்கிலின் முற்றிய அரிசியைப் பெய்து சோறாக்கி உண்டனர்.[6] தங்கள் வீட்டில் மூங்கிற்குழாயில் வைத்திருந்த முதிர்ந்த மதுவை உண்டு வேங்கை மர முற்றத்தில் மகளிரோடு குரவைக்கூத்தாடினர்.[7] எனக் குறவர்களின் வாழ்க்கையைக் குறித்துச் சங்கப்பாடல்கள் விவரிக்கின்றன.

#### 2.2.1.2. தொழில்

குறவர் தினைப்புனத்தை உருவாக்குவதற்குத் தம் நிலப்பகுதியிலுள்ள நறைக்கொடியையும், அகில் மரத்தையும், சந்தன மரத்தையும் தீயிட்டுக் கொளுத்துவர்.[8] இதனால் இவர்கள் “எறி(ரி) புனக் குறவன்”[9] என்று சுட்டப்படுவது நோக்கத்தக்கது.

#### 2.2.1.3. தினைப்புனக் காவல்

குறவர் கொல்லைக் காட்டினை உழுது தினை விதைப்பர்.[10] பகல் நேரத்தில் தினைப்புனத்திற்கு வரும் கிளிகளைத் தட்டை, தழல் போன்ற கருவிகளைக் கொண்டு விரட்டி, காவல் காப்பதைக் குறமகளும்,[11] பரணமைத்து இரவு நேரத்தில் தினைப்புனத்தில் தினையை உண்ணவரும் யானையை அம்பு, கிணைப்பறை, கவண் போன்ற கருவிகளைக்கொண்டும்,[12] விரட்டி காவல் காப்பதைக் குறவர்களும் மேற்கொண்டனர்.

#### 2.2.1.4. வழிபாடு

குறமகளிர் குன்றத்தின்கண் வாழும் முருகனுக்கு வெறியாட்டு எடுத்தனர்.[13] தேனாகிய பலியைக் கொடுத்து வழிபட்டனர்.[14] தெய்வம் வாழும் மலைக்குக்

---

[1] ஐங். 252
[2] நற். 64:4
[3] அக. 322:12
[4] புற. 236:1; நற். 44:9
[5] புற. 168
[6] மலை. 170-185
[7] அக. 78, 232; புற. 129:1; நற். 276
[8] குறு. 339; நற். 5:5; ஐங். 253, 254
[9] புற. 231:1
[10] நற். 209
[11] குறு. 346; நற். 102; ஐங். 260; அக. 188
[12] நற். 108
[13] திரு. 227-244
[14] ஐங். 259

*கள்ளைப் படைத்தனர்.*[1] *குறவமகளிர் என்றும் பிழைசெய்யாத காரணத்தால் குறவர்கள் குறித்த குறிதப்பாது கணை தொடுக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தனர்.*[2] *குறவர் குன்றத்தில் உறையும் கடவுளை வழிபட்டுப் பிள்ளைப்பேறு பெறுவதுண்டு.*[3] *எனவரும் செய்திகள் குறவர்களிடம் நிலவிய நம்பிக்கையையும் வழிபாட்டையும் குறித்து விளக்குகின்றன.*

### *2.2.1.5. கானவர்*

*கானவன் என்ற சொல்லுக்கு, 'குறிஞ்சி, முல்லை அல்லது பாலைநிலத்து மகன்'*[4] *என அகராதிகள் விளக்கமளிக்கின்றன. ஆனால் இவர்கள் மலைப் பகுதியை வாழிடமாகக் கொண்டிருந்ததை, "பாடு இன் அருவிப் பயம் கெழு மீமிசை, காடுகாத்து உறையும் கானவர் உளரே"*[5]*, "கல் கெழு சிறுகுடிக் கானவன்"*[6] *எனவரும் பாடலடிகள் சுட்டுகின்றன.*

### *2.2.1.6. காட்டெரிப்பு வேளாண்மை*

*மானிடவியலார் மனிதர்கள் உணவிற்கான ஆதாரத்தை ஈட்டிய முறைகளின் அடிப்படையில் உணவு சேகரித்தல், உணவு உற்பத்தி என்ற இரண்டு முக்கியக் கட்டங்களைக் குறிப்பிடுவர். இவற்றில் கானவர்கள் வேட்டையாடுதல், காய், கனி, கிழங்கு, தேன் போன்ற இயற்கை விளைபொருட்களைச் சேகரித்தல் என்கிற அடிப்படையில் உணவு சேகரித்தல் காலகட்டத்தைச் சேர்ந்த சமூகத்தவர்களாகவும், மற்றொரு நிலையான உணவு உற்பத்தி என்கிற நிலையில் காட்டெரிப்பு வேளாண்மை செய்தவர்களாகவும் காணப்படுகின்றனர்.*

*கானவர் மலைசார்ந்த பகுதிகளில் மரங்களையும், புதர், செடி, கொடிகளையும் எரித்துத் தினைப்புனங்களை உருவாக்கினர். இதனை "சாரல் அகில் சுடு கானவன் உவல் சுடு கமழ் புகை, ஆடு மழை மங்குலின், மறைக்கும்*[7]*"என்பதால் அறியமுடிகிறது. இவ்வாறு மரங்களை வெட்டி எரித்த கொல்லையில் கானவர் களைக்கோட்டினால் களையை நீக்கிக் கருந்தினையை விதைக்க, அதனைக் கொடிச்சி காவல் புரிவாள்*[8] *என்கிறது குறுந்தொகை. இவ்வாறு காட்டினை எரித்து உண்டாக்கிய புனத்தில் ஐவன நெல்லை விதைத்து அது நன்கு விளைந்து கோடையில் நீரின்றி வாடியபோது மழைபொழிந்த நிகழ்வைப் புறநானூறு,*

> *"………………… ……………..கானவர்*
> *கரிபுனம் மயக்கிய அகன்கண் கொல்லை,*
> *ஐவனம் வித்தி, மையுறக் கவினி,*
> *ஈனல் செல்லா ஏனற்கு இழுமெனக்*
> *கருவி வானம் தலைஇ யாங்கும்"*[9]

*எனக் குறிப்பிடுகிறது. மேலும், வேடன் சுட்டெரித்த கொல்லையில் பெய்த மழைநீரின் ஈரத்தில் தழைத்து வளர்ந்த தினைக் கதிர்களை மகளிர் காவல் காத்ததை,*

> *"தொடுதோற் கானவன் சூடுறு வியன்புனம்,*
> *கரிபுறம் கழீஇய பெரும்பாட்டு ஈரத்து,*
> *தோடுவளர் பைந்தினை நீடுகுரல் காக்கும்*

[1] *அக. 348*
[2] *கலி. 39*
[3] *ஐங். 257*
[4] *http://agarathi.com/word/கானவன்.*
[5] *மலை. 278-279*
[6] *அக. 7:22*
[7] *நற் .282:6-8*
[8] *குறு. 214:1-3*
[9] *புற .159: 15-19*

ஒண்தொடி மகளிர்க்கு ஊசலாக"[1]

எனக் குறிப்பிடுகிறது அகநானூறு.

அகில் சந்தனம் முதலிய மரங்களை அழித்துத் திருத்திய மேட்டுநிலத்தில் விதைத்த தோரை நெல், வெண்சிறு கடுகு, ஐவனமென்னும் வெண்ணெல் ஆகியவற்றோடு இஞ்சியும் மஞ்சளும் பசிய மிளகுக் கொடியும் பிறவுமாகிய பலவாய் வேறுபட்ட பண்டங்கள் கல்தரையில் குவிக்கப்பட்டு இருந்தன'[2] என்று மதுரைக்காஞ்சியும் கானவர்களின் காட்டெரிப்பு வேளாண்மைக்குச் சான்றுபகர்கின்றன.

### 2.2.1.7. தினை விதைத்தல்

மேற்குறித்தவாறு காட்டினை எரித்துத் தினைப்புனத்தை உருவாக்கிய கானவர்கள், புனத்தை உழுதும், பன்றிகள் தம் மருப்பினால் உழுத புழுதியிலும் தினைப் பயிரினை விதைத்தனர்.

புன்புலத்தை உழுது கானவர் விதைத்து வளர்ந்த தினைப்பயிரில் வந்து படியும் கிளிகளைக் கானவரின் மகள் கடிந்து விரட்டி தினைப்புனம் காத்ததை,

"வன்கட் கானவன் மென்சொல் மடமகள்
புன்புல மயக்கத்து உழுத ஏனல்
பைம்புறச் சிறுகிளி கடியும் நாட!"[3]

எனக் குறிப்பிடுவது கொண்டு அறியலாம். இவ்வறே, 'மலர்ந்த காந்தளின் கொழுங்கிழங்கு வெளிப்பட்டுத் தோன்றும்படி தன் இனத்துடன் கூடி, தறுகண்மையுடைய பன்றி கிளறியது; அவ்வாறு பன்றி உழுத புழுதியில், குறவர் நல்லநாள் பார்த்து உழாமலே தினையை விதைத்தனர்'[4] என்றும், 'கிழங்குகளை அகழ்ந்தெடுக்கும் பன்றிகள் தம் மருப்பினால் உழுத புழுதியில் தாம் விதைத்து விளைவித்த தினையின் முதல் விளைச்சலைக் கானவர் கொய்து சென்றனர்'[5] என்றும், 'குறவர் விளைந்த தினையைக் கொய்துவிட்டமையால், அக்கொய்யப்பட்ட தினையின் பசிய அடிப்பக்கத்தை உடைய வறுந்தட்டைகள் மட்டும் நீண்டு நிற்றலைக்கண்டும் கிளிகள் நீங்கிச் செல்லவில்லை'[6] என்றும் வரும் பாடற் கருத்துக்களும் கானவரின் தினைவிதைப்பைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

### 2.2.1.8. தினைப்புனக் காவல்

கானவர்கள் அரிதின் முயன்று உருவாக்கிய தினைப்புனத்தில் விதைத்த தினைக் கதிர்களை யானை, பன்றி முதலிய விலங்குகளிடமிருந்தும், கிளி உள்ளிட்ட பறவைகளிடமிருந்தும் காப்பதற்காகப் பரண் அமைத்து இரவிலும் பகலிலும் காவல் காத்தனர். இரவில் உயரமான மலைப்பகுதியிடத்தோ அல்லது உயரமான மரங்களிலோ அமைக்கப்பெற்றிருந்த பரண்களில் கானவர்கள் தீப்பந்தங்களைக் கொளுத்தி வைத்துக்கொண்டும், பகலில் அக்கானவர்களின் மகளான கொடிச்சியர் எனப்பட்ட இளம்பெண்கள் தட்டை, தழல், குளிர் எனப்பட்ட கிளிகடி கருவிகளைக் கொண்டும் காவல் காத்தனர். கானவர் உழுது விளைத்த தினைக்கதிரைப் பன்றிகள் கவர்ந்து உண்டதை,

[1] அக. 368:1-4
[2] மது. 286-290
[3] ஐங். 283:1-3
[4] புற .168:3-6
[5] அக. 270:1-3
[6] ஐங்.284

*"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்,*
*துறுகட் கண்ணிக் கானவர் உழுத*
*குலவுக் குரல் ஏனல் மாந்தி"*[1]

*எனக் குறிப்பிடுவது கொண்டும், கானவர் அத்தினைப் பயிரைத் தின்னவரும் காட்டுப் பன்றியை ஓட்டுதற்குக் காவற் பரண் மீது நீண்ட சுடர்விளக்கைக் கொளுத்தி வைத்ததை,*

*"புருவைப் பன்றி வருதிறம் நோக்கி,*
*கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய*
*நெடுஞ் சுடர் விளக்கம்"*[2]

*எனக் குறிப்பிடுவது கொண்டும் அறியமுடிகின்றது. பன்றிகளைப் போலவே யானைகளும் தினைப்புனத்திற்கு வந்து தினைக் கதிர்களைக் கவர்ந்து உண்ணும். எனவே அத்தகைய யானைகளை விரட்ட அவற்றின் காலடிச் சத்தம் கேட்ட கானவன் உயர்ந்த மலையில் ஆசினிப் பலாவின் மேல் இட்ட பரணில் ஏறி கவண்கொண்டு கல் எறிந்ததை,*

*"பிடியொடு மேயும் புன்செய் யானை*
*அடிஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்*
*நெடுவரை ஆசினிப் பணவை ஏறி,*
*கடுவிசைக் கவணையில் கல்கை விடுதலின்"*[3]

*எனக் கலித்தொகை குறிப்பிடுவதுகொண்டும், எரிகொள்ளியை எறிந்து விரட்டியதை,*

*"வாலா வேழம் வணர் குரல் கவர்தலின்,*
*கானவன் எறிந்த கடுஞ் செலல் ஞெகிழி*
*வேய் பயில் அடுக்கம் சுடர மின்னி"*[4]

*என்று நற்றிணை குறிப்பிடுவதுகொண்டும் அறியலாம். கானவர் யானைகளை விரட்ட பரண் மேலிருந்து புலித்தோலால் அமைத்த குறும்படையிலிருந்து அம்பு எறிந்து துரத்துவதும் உண்டு. மகளிர் அத்தகைய பரண்களின் மேலிருந்து தழல், தட்டை, குளிர் ஆகிய கருவிகளால் ஒலி எழுப்பிக் கிளிகளை ஓட்டுவர். இதனை,*

*"குறும்படைப் பகழிக் கொடுவிற் கானவன்*
*புனம்உண்டு கடிந்த பைங்கண் யானை*
*நறுந்தழை மகளிர் ஓப்பும் கிள்ளையொடு*
*குறும் பொறைக்கு அணவும்"*[5]

*என்று குறுந்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது. இவ்வாறே தினைப்புனத்துட் புகுந்து தின்னும் யானைகளை விரட்டுவதற்காக எழுந்த ஆரவார ஓசை மலைகளில் எதிரொலித்ததை,*

*"இலங்குஏந்து மருப்பின் இனம்பிரி ஒருத்தல்,*
*விலங்கல் மீமிசைப் பணவைக் கானவர்*
*புலம்புக்கு உண்ணும், புரிவளைப் பூசல்"*[6]

---

[1] *நற். 386:1-3*
[2] *அக. 88:4-6*
[3] *கலி. 41:7-10*
[4] *நற். 393:4-6*
[5] *குறு. 333:1-4*
[6] *மலை .297-299*

*என மலைபடுகடாமும் குறிப்பிடக் காணலாம்.*

### *2.2.1.9. யானைத்தந்த வேட்டை*

*இன்றைய காலத்தைப் போன்றே பழங்காலத்திலும் யானைகள் அவற்றின் தந்தங்களுக்காக வேட்டையாடப்பட்டன.*[1]

### *2.2.1.10. கிழங்கு அகழ்தல்*

*கானவர்கள் மலைப்பகுதிகளில் வள்ளிக் கிழங்குகளையும் கவலைக் கிழங்குகளையும் தோண்டி எடுத்தனர்.*[2]

### *2.2.1.11. விலங்கு வேட்டை*

*கானவர்கள் காட்டெரிப்பு வேளாண்மையைக் கைக்கொண்டிருந்த அதே வேளையில் வேட்டையாடி உணவு சேகரிக்கும் நாடோடி வாழ்க்கையினராகவும் இருந்துள்ளனர். இவர்கள் உணவுக்காகப் பன்றி, முயல், முள்ளம்பன்றி போன்றவற்றை வேட்டையாடினர். பன்றிகளை வேட்டையாடுவதற்காகச் சுருக்கு வார், அம்பு, கவைக்கோல் போன்ற கருவிகளோடு வேட்டைநாய்களையும் பயன்படுத்தினர். யானையின் தந்தத்தைக் காவு மரமாகக்கொண்டு தேன் முதலியவற்றையும், பன்றியின் ஊன் நிறைந்த வட்டியினையும் தம் ஊருக்குள் கொண்டுவந்தனர்.*[3] *மேலும் காட்டில் கானவன் அம்பெய்திக் கொண்டுவந்த முள்ளம் பன்றியின் கொழுத்த தசைப் பகுதியைக் கிழங்கோடு சேர்த்து சிறுகுடியினர் பலர்க்கும் கொடிச்சி பகுத்துத் தந்தாள்.*[4] *கானவர் கரடுமுரடான காட்டில் உலவ செருப்பைப் பயன்படுத்தினர். வேட்டையில் முயல் முதலியவற்றைப் பிடிப்பதற்குக் கவைக்கோலையும், வலைகளையும் வேட்டைநாய்களையும் பயன்படுத்தினர்.*[5]

### *2.2.1.12. யானைகளைப் பழக்கல்*

*கானவர்கள் பண்டைக் காலத்தில் யானைகளை மரங்களைச் சுமக்கப் பயன்படுத்தியுள்ளனர். இதனை, ''யானையால் கொண்டுவரப்பட்ட உலர்ந்த மரத்து விறகால் கானவர்கள் தீக்கடைகோலைக்கொண்டு மூட்டிய நெருப்பின் ஒளியில் மான்கூட்டம் தங்கித் துயிலும்''*[6] *என்ற புறநானூற்றுப் பாடற் கருத்து குறிப்பிடுகிறது .*

### *2.2.1.13. பலா மரக் காவல்*

*கானவர் இயற்கையில் விளைந்த பலாப்பழங்களின் விளைவைத் தாங்களே பெறும் பொருட்டு பலாமரங்கள்தோறும் வலைகளை விரித்துக் குரங்குகள் தின்னாவண்ணம் பிணித்தனர். அவற்றை அம்பெய்து துரத்தினர் எனக் குறுந்தொகைப் பாக்கள் குறிப்பிடுகின்றன.*[7]

### *2.2.2. கொடிச்சி*

*கொடிச்சி என்ற சொல்லுக்குக் 'குறவர் குலப்பெண்' என அகராதிகள் விளக்கமளிக்கின்றன. இவர்கள் குறவர் குலத்துப் பெண்கள் என்பதற்கு, ''குறவர்*

---

*[1] அக. 21:22-27, 282:1-10, 172:6-13; நற். 65:5-7*
*[2] குறு. 379:1-3; ஐங். 208:1-3*
*[3] மலை .152-155*
*[4] நற். 85:7-10*
*[5] பெரு. 106-117*
*[6] புற. 247:1-3*
*[7] குறு. 342:1-4, 4-385:1*

மகளிரேம் குன்று கெழு கொடிச்சியேம்”[1] எனச் சங்கப் பாடலும் சான்று பகர்கின்றது. குறிஞ்சி நிலப்பெண்ணுக்குக் கொடிச்சி என்னும் பெயர் வந்தது குறித்து ஞா. தேவநேயப் பாவாணர், “ஆடவன் பெண்டு ஆகிய இருபாலருள், பெண்டு மிகமெல்லியளாதலின், கொடி எனப்படுவாள், இதனாலேயே, குறிஞ்சி நிலப்பெண்டிற்குக் கொடிச்சி என்று பெயர்”[2] எனக் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

தினைக் கொல்லையில் தினைக்கதிர்களை உண்ணவரும் கிளிகளைக் கிளிகடி கருவிகளைக்கொண்டு ஓட்டுதல் கொடிச்சியின் பணியாக இருந்ததை, “கொடிச்சி காக்கும் பெருங்குரல் ஏனல்”[3], “பிடிக்கை அன்ன பெருங்குரல் ஏனல் உண்கிளி கடியும் கொடிச்சி கைக் குளிரே”[4] என வரும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இவர்கள் தழையாடையை உடுத்திக்கொள்ளும் பழக்கமுடையவர்கள்.[5] குறிஞ்சிநிலக் கொடிச்சியின் கூந்தல் மயில் தன் அழகிய தோகையை விரித்ததைப் போன்றும்,[6] கண் குவளை மலர்போன்றும்,[7] குரல் கிளியைப் போன்றும்,[8] பற்கள் நாணல் முளையையும்,[9] முள்ளையும் போன்றும்,[10] அவளது கைவிரல் காந்தல் போன்றும்,[11] நடை மயில் போன்றும்[12] இருந்ததாகக் கொடிச்சியரின் தோற்றம் சங்கப் பாடல்களில் பல்வேறு இடங்களில் வர்ணிக்கப்பட்டுள்ளது.

கொடிச்சி காட்டில் கானவன் அம்பெய்திக் கொண்டுவந்த முள்ளம்பன்றியின் கொழுத்த தசையையும், அகழ்ந்தெடுத்த கிழங்குகளையும் சிறுகுடியிலுள்ள பலர்க்கும் பகுத்துத் தந்து வாழும் இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்தவள்.[13] இவர்கள் குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த சீறூரின்கண் வாழ்ந்தனர்.[14]

கொடிச்சியர் தங்கள் தந்தையினால் விதைத்து உருவாக்கப்பட்ட தினைப்புனத்தில் தட்டை என்னும் கிளியோட்டும் கருவியைக்கொண்டு பரண்மேல் இருந்து தினைப்புனத்தைக் காவல் செய்தல்,[15] ஐவனமாகிய நெல்லைக் குத்துதல்,[16] சிவந்த தினையைப் பாறையில் உலர்த்துதல்[17] போன்ற பணிகளைச் செய்தனர்.

### 2.2.3. ஆயர்

அகராதிகள் கோவலர் என்பதற்கு, “முல்லைநிலமாக்கள், இடையர்”[18] என்றும், இடையன் என்பதற்கு, “ஆடுமாடு மேய்ப்பவன்; முல்லை நிலத்தவன்; இடைச்சாதியான்”[19] என்றும், பொதுவர் என்பதற்கு, “இடையர்; பொதுமகளிர்; நடுவர்”[20] என்றும், ஆயன் என்பதற்கு, “இடையன்”[21] என்றும் பொருளுரைக்கின்றன. இதனை நோக்கும்போது, ஆயர், இடையர், பொதுவர், கோவலர் எனச் சங்கப் பாடல்களில் வெவ்வேறு பெயர்களால் சுட்டப்படுவோர் அனைவரும் முல்லைநிலப்பகுதியில் வாழ்ந்த ஓரின மக்கள் எனத் தெரிகிறது. ஆட்டினங்களையும், ஏறுடைப் பசுக்கூட்டங்களையும் மேய்த்தல், பால்படு

---

[1] நற் .276
[2] பாவாணர் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப. 4
[3] ஐங். 296
[4] குறு .360:5-6
[5] நற் .22:1, 134
[6] ஐங். 300
[7] ஐங். 299
[8] ஐங். 289:1
[9] ஐங். 256
[10] குறு. 286:1
[11] நற். 379:9-13
[12] ஐங். 258:2
[13] நற். 85
[14] நற். 95:8
[15] நற். 306
[16] நற். 373:3-4
[17] குறு. 335
[18] http://agarathi.com/word/கோவலர்
[19] http://agarathi.com/word/இடையன்
[20] http://agarathi.com/word/பொதுவர்
[21] http://agarathi.com/word/ஆயன்

பொருட்களான தயிர், மோர், வெண்ணெய் போன்றவற்றை விலைகூறி விற்றல் முதலியன இவர்களின் முதன்மையான தொழில்களாக இருந்தன.

உறி, பானை, தோற்படுக்கை, தீக்கடைக்கோல் முதலிய கருவிகளை இட்டு வைத்த தோற்பையை ஒருசேரச் சுருக்கிக்கட்டி, அவற்றோடு ஓலைப்பாயையும் முதுகிற் கொண்டு, குளிர் நிறைந்த நடு இரவுப் பொழுதில் ஆட்டுக் குட்டிகளைக் காட்டில் ஒருசேரத் தொகுத்து வைத்துள்ள இடையர்கள், மென்மை வாய்ந்த கொள்ளியின் தீயில் அகங்கை காய்ந்திட, இருளில் ஆட்டினைக் கவர்ந்து உண்ணவரும் குறுநரிகளைச் சீழ்க்கை ஒலி செய்து அலைத்து ஓட்டியும், காவல் புரிவர்.[1] வாயை மடித்து இடையர்கள் எழுப்பும் சீழ்க்கை ஒலி ஆட்டினங்களை ஒருவழிக் கூட்டுவதற்காகவும்,[2] பிறபுலம் புகாது தடுப்பதற்காகவும்[3] எழுப்பப்பட்டது.

மாலை நேரத்தில் குழல் ஊதினர்.[4] இத்தகைய குழல் ஊதும் திறத்தை முறையாகக் கல்லாது தன் குடிவழிக் கற்றறிந்தவராக இருந்தனர் என்பதை, "பல் ஆன் கோவலர் கல்லாது ஊதும் சிறு வெதிர்ந் தீம் குழற் புலம்புகொள் தெள்விளி"[5] என அகநானூறு குறிப்பிடுகிறது.

மாசுபடிந்த ஆடையையுடைய[6] ஆட்டுக்கூட்டத்தை மேய்க்கும் இவர்கள் முல்லையின் நறுமணம் கமழும் மலரை இரவிலே கொய்து வெண்மையான பனங்குருத்தின் போழுடனே சேர்த்து மாலையாகத் தொடுத்து அணிந்தனர்.[7]

### *2.2.3.1.* கோவலர் உள்ளம்

கோவலர் அறம் புரியும் நெஞ்சம் கொண்டவர்களாக இருந்தனர். இக்காரணத்தினால் அவர்கள், "அறவை நெஞ்சத்து ஆயர்"[8] எனப் போற்றப்பட்டனர். சிலப்பதிகாரமும் இக்கோவலர்களைக் குறித்து,

> "ஆ காத்து ஓம்பி, ஆப் பயன் அளிக்கும்
> கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பாடு இல்லை"[9]

எனக் குறிப்பிடுகின்றது. இவர்களின் அன்புள்ளத்தினை, "பாலைவழி வருவோரைப் பேணிக் காக்கும் பண்பினைப் பெற்ற இவர்கள், இளைய எருதுகளின் எருத்தில் கட்டிய மூங்கிற்குழாயுள் அடைத்து வைத்த சுவைமிக்க புளிச்சோற்றினைத் தேக்கின் இலையில் இட்டு அப்புதியோரின் பசி நீங்கக் கொடுத்தனர்"[10] என அகநானூறும், "தம் குடியிருப்பை அடைந்த பாணர்க்குழுவிற்கு நண்டின் பார்ப்பை ஒத்த பசிய தினையாலாக்கிய சோற்றைப் பாலோடே அவர்கள் உண்ணத் தந்தனர்"[11] எனப் பெரும்பாணாற்றுப்படையும், 'இரவு நேரத்தில் வந்த கூத்தர் குழுவிற்கு இடைக்குல மகளிர் முன்னரே தமக்கெனச் சமைத்துள்ள பாலையும் பாற்சோற்றினையும் தருவதைப் பெறுவீர்'[12] என மலைபடுகடாமும் குறிப்பிடுவதுகொண்டு அறியமுடிகிறது.

---

[1] அக. 94:1-8, 274: 4-12
[2] அக. 394:13-16
[3] நற். 142
[4] கலி. 101:34-35; நற். 69:8, 371:8
[5] அக. 399:11-12
[6] புற. 54:11
[7] நற். 169
[8] புற. 390:1
[9] சிலம்பு. 15:120-121
[10] அக. 311:8-11
[11] பெரு. 166-168
[12] மலை. 416-417

### *2.2.3.2. கோவலர் தொழில்*

*கோவலர் மேய்த்தல் தொழிலை முதன்மையாகக் கொண்டிருந்ததை, ‘‘பல்ஆன் கோவலர்’’[1], ‘‘பகன்றைக் கண்ணி பல் ஆன் கோவலர்’’[2], ‘‘முல்லைக் கண்ணிப் பல் ஆன் கோவலர், புல்லுடை வியன் புலம் பல் ஆ பரப்பி’’[3] எனவரும் சங்கப்பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இவர்கள் மேய்த்தல் தொழிலையன்றி பிற தொழிலை அறியாதவர்கள் என்பதை, ‘‘கல்லாக் கோவலர்’’[4] என வருவது கொண்டு அறியமுடிகிறது. இவர்கள் மழை வெள்ளத்திலிருந்து ஆநிரைகளைப் பாதுகாக்க பெருமழை பெய்த காலங்களில் மேடான பகுதிகளுக்கு ஓட்டிச் சென்றனர்.[5]*

*கோவலர் தம் பசுக்கூட்டங்கள் உண்டற் பொருட்டுத் தம் கோல்களாலே சிறு கூவலினைத் தோண்டி நீர்ப்பத்தலினைக்கொண்டு சிறுகுழிகளை நீரால் நிறைப்பதை,*

> *‘‘கல்லாக் கோவலர் கோலின் தோண்டிய*
> *ஆன் நீர்ப் பத்தல் யானை வெளவும்’’[6]*

> *‘‘நெடு விளிக் கோவலர் கூவல் தோண்டிய*
> *கொடு வாய்ப் பத்தல் வார்ந்து உகு சிறு குழி’’[7]*

*எனவரும் அகப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மேலும், ‘கோவலர்கள் அருவி நீர் வற்றிய கோடைக்காலத்தில் பசித்த ஆனிரைகளின் பசி தீரும் பொருட்டுக் கூர்மை மிக்க வாளால் வேங்கை மரத்தின் பூக்கள் உதிருமாறு தழை செறிய அமைந்த கிளைகளை வெட்டிக்கழிப்பர்’[8] எனப் புறநானூறு இவர்களின் மேய்த்தல் தொழில் குறித்துக் கூறுகிறது.*

### *2.2.3.3. ஆய்ச்சியர் தொழில்*

*ஆய்ச்சியர் பசும்பாலிலிருந்து வெண்ணெய் எடுத்தல்,[9] வேற்று ஊர்களுக்குச் சென்று மோர் விற்றல்[10] போன்ற பணிகளைச் செய்தனர். இவர்கள் மோருக்குப் பண்டமாற்றாகக் கிடைத்த நெல்லைப் பனையோலைக் கூடையில் வாங்கிவந்ததை, ‘‘ஆய்மகள் அளைவிலை உணவின் கிளைஉடன் அருந்தி’’[11] எனப் பெரும்பாணாற்றுப்படையும், ‘‘வரிக்கூழ வட்டி தழீஇ’’[12] எனக் கலித்தொகையும் குறிப்பிடுகிறது. தொலைவிலுள்ள வேற்றுப் புலத்தில் பசுக்கூட்டங்களை மேய்க்கும் தொழிலை ஆயன் மேற்கொண்ட நிலையில், ஆய்ச்சியர் அருகிலுள்ள தினை அரிந்த வயலுள் கன்றுகளை மேய்த்தனர்.[13] ‘கவைத்த வரகுக்கதிரைக் குற்றிச் சமைத்த சோற்றை வேளைப்பூவொடும் தயிரில் இட்டு இடைமகள் புளிக்கூழ் சமைப்பாள்’[14] என அவர்களின் வீடுசார் பணியினைப் புறநானூறு சுட்டுகிறது.*

*விடியற்காலையிலேயே எழுந்து தயிரினைக் கடைந்து மோர்ப்பானையைத் தலையிலே சுமந்துசென்று விற்று அதனால் கிடைத்த நெல் முதலிய உணவாலே தன் சுற்றத்தை உண்பிக்கும் இடைச்சி நெய்விற்ற பொருளைக்கொண்டு பசும்பொன்னை வாங்காது எருமைகளையும், நல்ல பசுக்களையும் அதன்*

---

[1] *குறு. 358:6, ஐங். 476:3, புற. 265:4*
[2] *ஐங். 87:1*
[3] *பதி. 21:20-21*
[4] *அக. 74:16 நற். 364:9*
[5] *நெடு. 3-8*
[6] *ஐங். 304:1-2*
[7] *அக. 155:6-9*
[8] *புற. 224:12-16*
[9] *கலி.110:17*
[10] *கலி. 108:5, 109:6-7*
[11] *பெரு. 162-163*
[12] *கலி.109:14*
[13] *கலி. 108:32-33*
[14] *புற. 215:1-4*

கன்றுகளையுமே வாங்குவாள் என அவர்களின் பொருளியல் நடவடிக்கை குறித்து பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.[1]

### 2.2.3.4. மணமுறை

ஆயர் இனத்து ஆண்கள் பெண்களை ஏறுதழுவி மணத்தல் மிகமுக்கியமான பண்பாடாக விளங்குவதை முல்லைக்கலிப் பாடல்கள்(101-107) காட்டுகின்றன. ஆயர் இனத்தில் திருமணம் அவர்கள் இனத்துக்குள்ளாகவே நடைபெற்றது. இதனை,

> "ஆயர் மகன் ஆயின், ஆய மகள் நீ ஆயின்,
> நின் வெய்யன்ஆயின், அவன் வெய்யை நீ ஆயின்,
> அன்னை நோதக்கதோ இல்லைமன்' ...."[2]

என்ற முல்லைக்கலிப்பாடல் குறிப்பிடுகிறது.

ஆயர் இனத்தில் கோவினத்தார் பசுக்கூட்டங்களை மேய்ப்பவர்கள் என்பதையும், இடையர்கள் என்போர், ஆடுகளை மேய்ப்போர் என்பதையும் கீழ் வரும் பாடல் பிரித்துக் காட்டுகிறது.

> "கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்ந்த
> குறுங் காற் குரவின் குவி இணர் வான் பூ
> ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்"[3]

ஆடு மேய்ப்போர், ஆவினம் மேய்ப்போர் என்ற வேறுபாடு இருப்பினும் அவர்களுக்குள் எவ்விதமான வேறுபாடோ ஏற்றத்தாழ்வோ இல்லை. இதனை முல்லைக்கலிப் பாடலொன்று தெளிவிக்கிறது. புல்லினத்து ஆயமகனுக்கும், கோவினத்து ஆயமகளுக்கும் இடையேயான காதல் உரையாடலானது கீழ் வருமாறு அமைந்துள்ளது.

> "தளிரியால்! என் அறிதல் வேண்டின், பகை அஞ்சாப்
> புல்லினத்து ஆயர் மகனேன், மற்று யான்
> ஒக்கும்மன்
> புல்லினத்து ஆயனை நீ ஆயின், குடம் சுட்டு
> நல் இனத்து ஆயர், எமர்"[4]

இதில் புல்லினத்து ஆய மகனுக்கும், கோவினத்து ஆய மகளுக்கும் இடையேயான காதல் உறவு இயல்பாகவே வெளிப்படுகிறது. அதேபோல் ஆயர் பண்பாட்டில் ஏறு தழுவி மணம் முடிக்கும் ஏறுதழுவல் விழாவிற்குப் பெண்ணின் உறவினரான கோவினத்தார், அவ்விழா குறித்த அறிவிப்பினை,

> "புல்லினத்தார்க்கும், குடம் சுட்டவர்க்கும், 'எம்
> கொல் ஏறு கோடல் குறை' என, கோவினத்தார்
> பல் ஏறு பெய்தார் தொழூஉ"[5]

என அறிவித்துப் புல்லினத்து ஆயரையும், கோவினத்து ஆயரையும் ஒருங்கே ஏறு தழுவ அழைத்தமையும் இவ்விருவருக்கிடையேயான ஏற்றத்தாழ்வின்மையைப் புலப்படுத்துகின்றது.

---

[1] பெரு. 155-165
[2] கலி. 107:19-21
[3] நற். 266:1-3
[4] கலி. 113:5-10
[5] கலி. 107:2-4

ஆயர் குலத்தில் ஆண்களின் வீரம் போற்றப்பட்டது. கொல்லும் தன்மையுடைய காளையை அடக்கும் வீரம் பொருந்தியவர்க்கே ஆயர் தம் மகளைக் கொடுக்க விரும்பியதை,

> "ஓஓ! இவள், 'பொருபுகள் நல்ஏறு கொள்பவர் அல்லால்
> திருமா மெய்தீண்டலர்' என்று கருமமா,
> எல்லாரும் கேட்ப, அறைந்து அறைந்து, எப்பொழுதும்
> சொல்லால் தரப்பட்டவள்"[1]

என்ற பாடல் உணர்த்துகிறது. ஆய மகளிரும் கொல்லும் தன்மையுடைய ஏற்றின் கொம்புகளுக்கு அஞ்சாது அதனை அடக்குபவனையே விரும்பியதை,

> "கொல் ஏற்றுக் கோடு அஞ்சுவானை மறுமையும்
> புல்லாளே, ஆய மகள்
> அஞ்சார் கொலை ஏறு கொள்பவர் அல்லதை,
> நெஞ்சிலார் தோய்தற்கு அரிய உயிர் துறந்து
> நைவாரா ஆய மகள் தோள்"[2]

எனவரும் முல்லைக்கலிப்பாடல் காட்டுகிறது. அதேபோல் தன் கணவன் கொல் ஏறு தழுவிக்கொண்டான் என்று ஊரார் சொல்லும் சொல்லைக் கேட்டவாறே மோர்விற்று வருவதை ஆயமகள் இன்பமாகக் கருதியதை,

> "கொல் ஏறு கொண்டான், இவள் கேள்வன்' என்று, ஊரார்
> சொல்லும் சொல் கேளா, அளை மாறி யாம் வரும்
> செல்வம் எம் கேள்வன் தருமோ? எம் கேளே"[3]

என்றும் வரும் முல்லைக்கலிப் பாடல் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. ஆயர்கள் திருமணத்தின் போது புதுமணல் பரப்பி, செம்மண் பூசி வீட்டை அழகுபடுத்துவர். அத்திருமண விழாவின்போது பெண் எருமையின் கொம்பை வீட்டினுள் நட்டுவைத்து அதனைத் தெய்வமாகக் கருதி வழிபட்டனர்.[4] மேலும், 'வதுவையும் ஈங்கே அயர்ப'[5] எனவும் குறிப்பிடுவது கொண்டு பெண் வீட்டில் திருமணம் நடத்தும் வழக்கம் ஆயர் குலத்தில் இருந்துள்ளதை அறியமுடிகிறது.

உலகத்தையே பெறுவதாக இருந்தாலும் சிறந்த குடிப்பிறந்த ஆயமகளிர் விரும்பியவனையன்றி, வேறொருவனைத் திருமணம் செய்து கொள்ளார் என்பது அவர்களின் கற்பின் சிறப்பைக் காட்டுவதாகும். இதனை,

> "விரி நீர் உடுக்கை உலகம் பெறினும்,
> அரு நெறி ஆயர் மகளிர்க்கு
> இரு மணம் கூடுதல் இல் இயல்பு அன்றே?"[6]

என முல்லைக்கலி குறிப்பிடுவதுகொண்டு தெளியலாம்.

### 2.2.3.5. வழிபாடு

கோவலர்களைக் குறித்த பல்வேறு செய்திகளை ஒருசேரப்பேசும் பெரும்பாணாற்றுப்படையில் அவர்களின் வழிபடு கடவுளைக் குறித்த எந்தஒரு

---

[1] கலி. 102:9-12
[2] கலி. 103:63-67
[3] கலி. 106:40-45
[4] கலி. 114:12-14, 115:18-19
[5] கலி. 115:20
[6] கலி. 114:19-21

குறிப்பும் இடம்பெறாத நிலையில் எட்டுத்தொகையில் ஒன்றான கலித்தொகையின் முல்லைக்கலிப் பாடல்களைக்கொண்டே அவர்களின் கடவுள் வழிபாடு குறித்த செய்திகளை அறிந்துகொள்ள முடிகிறது. இவர்கள் திருமாலை வழிபடு கடவுளாகக் கொண்டவர்கள் என்பதை,

> "பாடு இமிழ் பரப்பகத்து அரவணை அசைஇய
> ஆடு கொள் நேமியாற் பரவுதும்"[1]

எனக் கலித்தொகை குறிப்பிட்டாலும், கோவலர் ஆலமரத்திலும், கடம்ப மரத்திலும் கடவுள் உறைவதாக நம்பினர்.[2] எனவே, நீர்த்துறையிலும், ஆலமரத்திலும், பிற தொன்மையான மரங்களில் உறையும் தெய்வங்களையும் முறையாக வழிபட்டு ஏறுகளை அடக்குதற்காகத் தொழுவினுள் புகுந்தனர்.[3] என்பது கொண்டு தமிழரின் தொன்மை வழிபாடான மரத்தினடியில் தெய்வங்களை நிலைபெறச்செய்து மக்கள் வழிபட்ட இயற்கை வழிபாட்டையும் கொண்டவர்கள் என்பதை அறியமுடிகிறது.

### 2.2.3.6. நம்பிக்கை

ஆயர்களிடம் திருமாலின் திருவடிகளைத் தலையினால் வணங்கிக் கையினால் தொட்டுச் சூளுறைக்கும் பழக்கம் இருந்தது.[4] வேந்தன் இனிது வாழ்வதற்காகத் தெய்வத்திற்கு மடை கொடுக்கும் வழக்கமும் அவர்களிடம் இருந்ததை, "வேந்து ஊட்டு அரவத்து"[5] எனச் சுட்டுவதுகொண்டு அறியமுடிகிறது. நற்காரியங்களை மேற்கொள்ளும் முன் நன்நிமித்தம் பார்க்கும் பழக்கம் ஆயர்களிடம் இருந்தது. இதனைத் 'தலைவன் சூடிய கண்ணி தலைவியின் கூந்தலில் வீழ்ந்ததைத் தெய்வச் செயலாக எண்ணினர்'[6] என முல்லைக்கலிப் பாடல் சுட்டுவது கொண்டு அறியலாம்.

### 2.2.4. உழவர்

மருதநிலச் சமூகத்தில் வாழ்ந்த திணைக் குடிகளுள் முதன்மையானவர்களாகத் திகழ்ந்தவர்கள் உழவர்கள். இவர்களைக் குறித்து மருதத் திணைப் பாடல்கள் விரிவாகப் பேசுகின்றன. இவர்கள் வினைஞர், வினைநர், களமர், அரிநர் என்ற பிற பெயர்களாலும் சங்கப்பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

உழவுத் தொழில் செய்யும் உழவர்கள் தம் தொழிலில் சோம்பியிராதவராகவும், கடினமாக உழைப்பாளர்களாவும் இருந்ததை, "மடியா வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி"[7] என்றும், அவர்கள் உடல் வலிமை வாய்ந்தவராகக் காணப்பட்டதை, "வன்கை வினைநர்"[8], "கருங்கை வினைஞர்"[9], "வன்கை வினைஞர்"[10], "புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்"[11] என்றும் சுட்டப்படுவதுகொண்டு அறியமுடிகிறது.

இவர்கள் மேற்கொண்ட உழவுத்தொழில் குறித்துப் பெரும்பாணாற்றுப்படை, 'ஏறுகள் போரிட்ட சேற்றைச் சமப்படுத்தி உழவர் நாற்றுநடுவர்; நாற்றுநட்ட வயலின்கண் களைபறிப்போர் பறித்துப்போட்ட நெய்தல் மலரை உழவர் பிள்ளைகள் சூடி மகிழ்வர். நெற்கதிர்களின் தாளை அறுத்த

[1] கலி. 105:71-72
[2] கலி. 106:28-29
[3] கலி. 101:13-14
[4] கலி. 108:56-57
[5] கலி. 108:59
[6] கலி. 107:30-32
[7] பெரு. 254-255
[8] பதி. 62:16
[9] பெரு.223
[10] புற. 61:8
[11] பதி. 58:15

உழவர்கள் அவற்றைக் களம் நிறையும்படி போராகக் குவிப்பர், பின்னர் நெற்போர்களைப் பிரித்து கடாஅடித்துக் காற்றில் தூற்றுவர், தூற்றிய நெற்குவியல் மேருமலைபோன்று தோன்றும் என்று இவர்கள் உழுதொழில் குறித்தும், இவர்களின் இல்லங்களில் முற்றத்தில் உள்ள முளைகளில் கன்றுகள் கட்டப்பட்டிருக்கும், ஏணிக்கும் எட்டாது உயர்ந்து நிற்கும் நெற்கூடுகள் நெல்லால் நிரப்பப்பட்டுக் காணப்படும் என்றும், அத்தகைய இல்லங்களுக்குப் பாணர்கள் சென்றால் வெண்மைநிறச் சோற்றை அவர்தம் மனையிடத்தே வாழும் கோழிப் பெடையினால் சமைத்த பொரியலோடு பெறலாம் என்றும், அத்தகைய மருத நிலம் கரும்பாலைகளில் கரும்புச்சாறு பிழியும் ஆராவாரத்தைக்கொண்டதாக இருந்தது'[1] என்றும் விவரிக்கின்றது.

### 2.2.4.1. உழுதல்

நிலத்தைச் செம்மையாக உழுவதற்கு உழவர்கள் நல்ல வலிமையான எருதுகளைத் தேர்ந்து பயன்படுத்தியதை,

> "ஈரச் செவ்வி உதவினஆயினும்,
> பல் எருத்துள்ளும் நல் எருது நோக்கி,
> வீறு வீறு ஆயும் உழவன் போல"[2]
>
> "உரன்கெழு நோன்பகட்டு உழவர்"[3]

எனவரும் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன. சில உழவர்கள் மூப்புற்ற எருதுகளை உழுவதற்குப் பயன்படுத்தியதை, "மூப்புக் காரணமாகச் சேற்றில் செல்ல வலிமையில்லாமல் தங்கிய எருதுகள் உற்ற வருத்தத்தை நீக்குதற்காகக் கள்ளை உண்ணும் உழவர்கள் ஆரவாரித்தனர்"[4] என மதுரைக்காஞ்சியும், 'உழவுக்குப் பயன்படுத்திய சிறந்த எருதினை, அதன் பழைய சிறப்பு நீங்கியதென்று உழவுத் தொழிலைச்செய்வோர் புல்லுடைய தோட்டத்திலே அது தன் தொழிலைச் செய்யாதபடி விட்டுவிடுவர்'[5] என நற்றிணையும் குறிப்பிடும் கருத்துக்கள் உழவுக்கு எத்தகைய எருதுகள் பயன்படுத்தப்பட்டன என்பதைப் பற்றி அறிய உதவுகிறது.

உழுவதற்கு ஏற்ற பதமான ஈரம் உள்ள கொல்லையில் ஈரம் புலர்வதற்குள் உழுதுமுடிக்க வேண்டி ஒற்றை ஏர்கொண்ட உழவன் விரைந்து உழுவதை, "ஈரம் பட்ட செவ்விப் பைம் புனத்து ஓர் ஏர் உழவன் போல"[6] என்ற குறுந்தொகைப் பாடல் உவமை புலப்படுத்துகிறது.

செம்மையாக உழுகின்ற உழவர்கள், உழவுத் தொழிலிலே நன்கு நடைபயின்ற பெரிய எருதுகளை வீட்டின் வாயிலிலேயே நுகத்திற் பூட்டிக்கொண்டு சென்று பிடியானையின் வாயையொத்த வளைந்த வாயையுடைய கலப்பையை உடும்பு முகம் போன்ற முழுக் கொழு மறையும்படி அமுக்கி வளைய உழுது விதைத்து, பின்னர் களைக்கொட்டால் களைகளைக் களைந்து பயிர் விளைவிப்பர்"[7] எனப் பெரும்பாணாற்றுப்படையும், 'புன்புலத்தில் வித்துக்களை விதைக்கின்ற உழவுத்தொழில் செய்வோர் பல கடாக்களை அவை ஒலிக்கும்படி நுகத்தின் கண்ணேபூட்டி உழுவர்.'[8] எனப் பதிற்றுப்பத்தும், 'உழவர் தம் நிலத்தைக் கலப்பைகளால் மண் கீழ் மேலாக மாறும்படி உழுதனர். பெய்த மழையால் நன்கு ஈரம் படிந்தது மறுபடியும் உழுதனர். உழுத சாலில் அவர்கள் விதைத்த விதைகள்

[1] பெரு. 206-262
[2] புற. 289:1-3
[3] சிறு. 190
[4] மது. 260
[5] நற். 315:4-5
[6] குறு. 131:4-5
[7] பெரு. 196-206
[8] பதி. 58:15-17

ஒன்று பலவாக முளைத்து நாற்றுக்களாக நின்றன. மழைக்குப் பனங்குடையைத் தன் தலையில் கவிழ்த்துக் கொண்ட உழவர் முரசு முழங்கக் களைகளைப் பறித்தனர். அவர்கள் தூய்மை செய்த தோட்டத்தில் கதிர்கள் விளைந்து கவடுபட்டு நின்றன'[1], 'ஆராய்ந்த எருதுகளைக் கொண்ட உழவர்கள். மண் பிறழும்படி, அரிதாளையுடைய நிலத்தைப் பிளந்து உழுதனர்'[2] என அகநானூறும், 'செம்மையாகச் சாலடித்து உழுதனர்'[3] என நற்றிணையும் பண்டைய உழவுமுறைகளைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

### *2.2.4.2. உரமிடல்*

காஞ்சிமரத்தின் பூக்களை உழவர்கள் தம் வயல்களுக்கு உரமாகப் பயன்படுத்தியதை, "காஞ்சி மரத்தின் பூக்கள், மாலை கட்டினாற் போல, அதன் மென்மையான கிளைகளில் பூத்துக் குலுங்கும். நிலத்தை உழுபவர், வயல் வரப்புக்களில் நடப்பட்டுள்ள இம்மரத்தின் கிளைகளை எளிதில் வளைத்துப் பூக்களை உதிர்ப்பதற்கு ஏற்றவாறு, இம்மரங்கள் குறைந்த உயரம் உடையவை. இம் மலர்களின் மகரந்தத் துகள் வயல்களுக்கு எருவாகப் பயன்படுவதால், உழவர் இம்மரத்தின் பூக்களை வயலில் உதிர்ப்பர்"[4] எனக் குறுந்தொகைப் பாடலொன்று குறிப்பிடுகிறது.

### *2.2.4.3. நடவு செய்தல்*

கரிய எருமைக் கடாக்கள் தம்முள் போரிட்டமையால் சேறாகிய வயலில் அச்சேற்றைச் சமமாக மிதித்து உழவர்கள் நடவு செய்ததை,

> "கார் ஏறு பொருத கண் அகன் செறுவின்,
> உழாஅ நுண் தொளி நிரவிய வினைஞர்
> முடி நாறு அழுத்திய நெடு நீர்ச் செறுவில்"[5]

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் காட்டுகின்றன.

### *2.2.4.4. களையெடுத்தல்*

வயலில் களை பறிப்போர் 'களைஞர்'[6] எனப்பட்டனர். கொல்லை நிலங்களில் களைக்கொட்டினைக்கொண்டு களைபறித்து எறியும் தொழிலையுடையவர் "துளர் எறி வினைஞர்"[7] எனப்பட்டனர். இவர்கள் களைபறிக்கும் தொழிலின்போது கள்ளுண்டு களித்திருந்ததை, "கோடுடைக் கையர் துளர் எறி வினைஞர், அரியல் ஆர்கையர்"[8] என்றும், கொல்லை உழவர்கள் கொம்புடைய ஓலைக் குடையைத் தலையில் கவிழ்த்துக்கொண்டு பறையை முழக்கி ஒலியை எழுப்பிக் களைக் கொட்டினால் களையினைப் பறித்து வரகு விதைத்த புனத்தினைத் தூய்மை செய்ததை,

> "கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்,
> கறங்கு பறைச் சீரின் இரங்க வாங்கி,
> களை கால் கழீஇய பெரும் புன வரகின்"[9]

என்றும், களையெடுக்கும் முறைபற்றி அகநானூறு குறிப்பிடுகின்றது.

---

[1] அக. 194
[2] அக. 41:6
[3] நற். 340
[4] குறு. 10
[5] பெரு. 210-212
[6] பெரு. 213
[7] அக. 184
[8] அக. 184:13-14
[9] அக. 194:7-9

### *2.2.4.5. அறுவடை செய்தல்*

*சங்கப் பாடல்களில் நெற்கதிர்களை அறுப்பவர்கள் 'அரிவனர்'[1], 'அரிஞர்'[2], 'அறிநர்'[3], 'வினைஞர்'[4] என்ற பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளனர். உழுபவர் உழவர் என்றும், துடிகொட்டுபவர் துடியர் என்றும், விலைகூறி விற்பவர் விலைஞர் என்றும் குறிப்பிடப்படுவதைப் போல அரிதல்(அறுவடை) தொழில் காரணமாக இவர்கள் அரிஞர் எனப்பட்டனர். உரையாசிரியர்கள் இவர்களை 'மள்ளர்' என்றும் குறிப்பிடுகின்றனர்.*

*இவர்களின் அறுவடைத் தொழிலை, "பைதுஅற விளைந்த பெருஞ்செந் நெல்லின் தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர்"[5], "அரிந்து கால் குவித்த செந்நெல் வினைஞர்"[6] எனவரும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இவர்கள் நெல் அறுவடையின்போது, தடாரிப்பறை இசைத்ததை, "அரிப்பறை வினைஞர்"[7], "ஒலிந்த பகன்றை விளைந்த கழனி வன்கை வினைஞர் அரிபறை"[8] என வரும் அடிகள் சுட்டுகின்றன. இப்பறையொலிக்கு அஞ்சி, நெற்பயிரின் மடற்கண் உறைந்த வண்டுகளும் பறவை இனங்களும் வயற்பரப்பை விட்டு ஓடின. இதனை,*

> *"வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்*
> *தண்ணுமை வெரீஇய தடந் தாள் நாரை"[9]*
>
> *"வெண்ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணுமை*
> *பன்மலர்ப் பொய்கைப் படுபுள் ஓப்பும்"[10]*
>
> *"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ,*
> *பழனப் பல் புள் இரிய"[11]*
>
> *"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ,*
> *செங்கண் எருமை இனம் பிரி ஒருத்தல்"[12]*

*எனவரும் பல பாடலடிகள் காட்டுகின்றன. அறுவடையின்போது தண்ணுமை முழக்குதல் அக்கால வழக்காக இருந்ததை மேற்கண்ட பாடலடிகள் உணர்த்துகின்றன. இத்தண்ணுமை அறுவடை சேய்வோர்க்கு வேகத்தையும் உற்சாகத்தையும் தருவதற்காக முழக்கப்பட்டது.*

*"நெல் அரியப் பயன்பட்ட குறுவாள் பாண்சேரியினரால் மீன் சீவுதற்கும் பயன்படுவதாகும்"[13] என்ற புறநானூற்றுப் பாடற் கருத்து நெல் அரியும் பணியைப் பாணர்களும் செய்தனர் எனக் கருத இடம் தருகிறது.*

### *2.2.4.6. களமர்*

*எருதுகளை ஓட்டிப் போராகக் குவித்து வைத்துள்ள கதிர்களை அடிப்போர் 'களமர்' எனப்பட்டனர். விடியற் காலையில் வைக்கோல் போரைப் பிரித்துக் கடாவிடுத்துத் தூற்றி நெல்லைக் குவிக்கும்[14] இவர்களை "எருது எறி களமர்" என நற்றிணையும், "பெருங் களம் தொகுத்த உழவர்"[15] என அகநானூறும் சுட்டுகிறது. "உழவர்கள், தாழ்ந்த கிளைகளையுடைய மருதமரம் தழைத்துச் சிறக்குமாறு அழகு பெற்றுத் திகழும் நீர் சூழ்ந்த நெற்களம் பொலிவுபெறும்படி நெற்கதிரின்*

---

*[1] நற். 8:6, 400:3*
*[2] அக. 84:12*
*[3] நற். 275:1*
*[4] பெரு. 231*
*[5] பெரு. 230-231*
*[6] அக. 116:2*
*[7] ஐங். 81:2*
*[8] மது. 261-262*
*[9] அக. 40:13-14*
*[10] அக. 204:10-11*
*[11] நற். 350:1-2*
*[12] மலை. 471-472*
*[13] புற. 348:1-4*
*[14] அக. 37:2*
*[15] அக. 30:8*

போரினைப் பிரித்துக் கடாவிட்டனர்; கள்ளுண்டு களித்த அவ்வுழவர்கள் அக்காளைகளை மாற்றி வேறு காளைகள் கொண்டு கடாவிட்டனர்; பின்னர், விரைய வீசும் காற்றில் நெல்லைத் தூற்ற, பறந்து சென்ற தூசும் துரும்பும் அருகிலிருக்கும் உப்பு காயும் உப்பளத்திலுள்ள சிறிய பாத்திகளில் சென்று வீழ்ந்தது"[1] எனக் களமரின் தொழில் அகநானூற்றில் விளக்கப்பட்டுள்ளது.

### 2.2.4.7. அறைநர்

கரும்பு வெட்டும் தொழில் செய்தவர்கள் அறைஞர் எனப்பட்டனர். இவர், தாம் வெட்டிய கரும்பை கரும்பாலையில் இட்டு சாறுபிழிந்ததை, "அறைநர் தீம்பிழி எந்திரம் பத்தல் வருந்த"[2] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. கரும்பு வெட்டுவார் கரும்பிடமிருந்து பெற்ற தேனை வன்மையான நிலங்களுடைய ஊர்களிலிருந்து வரும் சுற்றத்தார்க்கு வழங்குவர்[3] எனப் புறநானூறு சுட்டுவதுகொண்டு இவர்கள் உழவுத் தொழில் செய்வோர் என்பதையும், மருத நிலப் பகுதிகளில் வாழ்ந்தவர்கள் என்பதையும் அறியமுடிகிறது.

### 2.2.4.8. கள் உணவு

நெல் அரிதல், உழவு செய்தல், கடாவிடுதல், களையெடுத்தல் போன்ற பல்வேறு உழவு வேலைகளில் ஈடுபட்டிருந்த உழவர்கள் அனைவரும் கள் அருந்துவதை வழக்கமாகக் கொண்டிருந்ததை, "கள்ஆர் உவகைக் கலிமகிழ் உழவர்"[4], "கள்ஆர் களமர்"[5], "கள் ஆர் வினைஞர்"[6], "கோடுடைக் கையர் துளர் எறி வினைஞர், அரியல் ஆர்கையர்"[7] எனவரும் பாடலடிகள் சுட்டிக்காட்டுகின்றன. இத்தகைய கள்ளை நெல்லை விலையாகக் கொடுத்து வாங்கியதை, "களன் அறு குப்பை காஞ்சி சேர்த்தி அரியல் ஆர்கை வன்கை வினைநர்"[8] எனக் குறிப்பது கொண்டு அறியமுடிகிறது. உழவர்கள் கள்ளோடு சேர்த்து ஆமை[9], வாளைமீன்[10] முதலான இறைச்சி உணவினையும் உண்டனர்.

### 2.2.4.9. பண்டமாற்று

இவர்கள் தங்கள் உணவுத் தேவைக்காக நெல்லைப் பண்டமாற்று செய்துகொண்டனர். இதனை, "கள்விற்கும் வலையருடைய மகளிர் கள்ளுடன் வரால் மீன் துண்டுகளை, நெல் குவிக்கப்பட்ட உழவரின் களத்திற்கே சென்று கொடுக்க, உழவர் வலையர் மகளிருக்கு நெல்லை முகந்து தருவர்"[11] என மலைபடுகடாம் குறிப்பிடுகிறது.

### 2.2.4.10. பிற தொழில்கள்

உழவர்களோடு வேளாண்பணிகளில் ஈடுபட்டிருந்த உழத்தியர்களும் அவர்தம் பெண்களும் உழவு சார்ந்த பணிகளை மட்டுமல்லாது பூ விற்றல் போன்ற பணிகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டனர். இதனை, "தரிசாகக் கிடந்த பழைய கொல்லையை, உழுததனாலாகிய நிறைந்த மகிழ்ச்சியையுடைய உழவர், காலையில் விதைப்பதற்காகச் சிறிய கூடைகளில், விதைகளை எடுத்துச் சென்றனர். மாலையில் அவர்கள் வீடு திரும்பும்போது, அவற்றில் மலரும் பருவத்து அரும்புகள் நிறையுமாறு மாலைப் பொழுது தானாக வந்தது"[12] எனக் குறிப்பது கொண்டும்,

[1] அக. 366
[2] பதி. 19:22-23
[3] புற. 42:14-15
[4] அக. 346:5
[5] அக. 366:3
[6] அக. 84:13
[7] அக. 184:13-14
[8] பதி. 62:15-16
[9] ஐங். 81:1-2; புற. 42:13, 212:1-4
[10] புற. 61:1-6
[11] மலை. 454-470
[12] குறு. 155

"அழகுகொண்ட பஞ்சு போன்ற வெளிய இதழையுடைய பசிய குருக்கத்தி மலருடனே விரவிய சிறு சண்பக மலரையும் வாங்கிக் கொள்வீராக என்று அம்மலர்களை வைத்திருத்தலால் வண்டுகள் சூழும் கடகப் பெட்டியைக் கையிலே கொண்டு திரிகின்ற உழவரின் இளமகள்"[1] எனக் குறிப்பிடுவது கொண்டும் அறியமுடிகிறது.

உழவின் ஆக்கத்திற்கு எருதுகளும், மிகுந்த வருவாய்க்குப் பசுக்களும் இன்றியமையாததாக இருந்ததால் "பால் பல ஊறுக! பகடு பல சிறக்க!"[2] என வேண்டினர். உழவர்கள் பால் வளத்திற்காக எருமைகளையும் வளர்த்தனர்.[3]

### 2.2.4.11. உழவர் வருத்தம்

நெல் வளம் சிறந்த பழங்காலத்தில் இற்றைக் காலத்தைப் போன்றே பெரு வெள்ளத்தால் பயிர்கள் சேதமடைந்தன. அதனைக் கண்டு உழவர்கள் வருந்தினர். இதனை, "ஒருபக்கம் வயலில் விளைந்து முற்றிய இள நெல்லின் மீதும், நெற்கதிரை அறுத்து அடுக்கி வைத்திருந்த அரிகளின் மீதும் மிகுதியான வெள்ளம் பெருகிப் பரந்தது என்று சொல்லி அவற்றைப் பாதுகாக்கும் பொருட்டு அறிவிப்பதற்குத் துடிகளை முழக்கினர். ஒரு பக்கம் உழவர்கள் விதைவிதைத்த தங்கள் நாற்றங்கால் வெள்ளத்தால் அடித்துவரப்பட்ட வண்டல் மண்மூடி மேடாகிப்போயிற்று என்று வருந்தி நின்றனர்."[4] எனப் பரிபாடல் குறிப்பிடுகின்றது. மேலும், போரினாலும் மன்னர் இறப்பினாலும் உழவுத் தொழில் மிகவும் பாதிக்கப்பட்டதைப் புறநானூறு காட்டுகிறது.[5]

விளைநிலம் அழித்தல், நீர்நிலை சிதைத்தல், குளக்கரை உடைத்தல், பொருட்களைக் கொள்ளையடித்தல், தீயிட்டுக்கொளுத்துதல் உள்ளிட்ட அழிவுச் செயல்களால் பெரிதும் பாதிப்புக்குள்ளானவர்கள் சமூகத்தில் உழைக்கும் வர்க்கத்தைச் சார்ந்த சாதாரண மக்களே என்பது கவனிக்கத்தக்கது.

### 2.2.5. பரதவர்

கடல் சார்ந்த பகுதிகளில் வாழ்ந்த மக்களைச் சங்க இலக்கியங்கள் பரதவர் எனக் குறிப்பிடுகின்றன. இவர்கள் கடல்சார் தொழில்களான மீன்பிடித்தல், உப்பு விளைத்தல், ஆழ்கடலில் இருந்து முத்தெடுத்தல், சங்கெடுத்தல் போன்ற தொழில்களைச் செய்து வந்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்தாகப் பகுக்கப்பட்ட திணைநிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களின் உணவில் மிகமுக்கியமான கூறாக விளங்கிய உப்பு, இந்நெய்தல் நிலப் பகுதியில் பரதவர்களால் விளைவிக்கப்பெற்று பண்டமாற்று வணிகத்தின் மூலம் பிற பகுதிகளுக்குக் கொண்டுசெல்லப்பட்டது. அவ்வகையில் நெய்தல் நிலப் பரதவர்களின் வாழ்வும் தொழிலும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக விளங்கியது.

### 2.2.5.1. வலை உலர்த்துதல்

கடற்கரைச் சோலையில் உள்ள சிறுகுடியிலிருந்து கடலுக்குச் செல்லும் மீனவர் புன்னை மர நிழலிலே தங்கி, முறுக்குண்ட வலையைப் பிரித்துக் காயவிடுவர். கடல்மேல் செல்லுதற்குரிய செவ்வி பார்த்திருந்து[6] கதிரிட்டு முறுக்கிய வலிய கயிற்றாற் பின்னிய பெரிய வலையைக் கடலில் இடும் பொருட்டுத்

---

[1] நற். 97:5-9
[2] ஐங். 3:2
[3] குறு. 181:4
[4] பரி. 7:39
[5] புற. 65:4
[6] நற் .4

தோணியைச் செலுத்துவர்.[1] சுறாமீன் கிழித்ததால் உண்டான வலையின் அகன்ற துளைகளைச் சுற்றத்தோடு சேர்ந்து மெல்லிய நாரினால் முடிச்சிடுவர்.[2]

### 2.2.5.2. மீன்பிடி தொழில்

கடலுக்குச் சென்று வலைவீசி மீன் பிடித்த பரதவர், தாம் கொண்டுவந்த கொழுவிய மீன்களின் குவியலைக் கடற்கரை மணலிலே கொண்டுவந்து குவிப்பர், பின் மீன் கொழுப்பினால் சமைத்த நெய்யைக் கிளிஞ்சலில் ஊற்றிச் சிறிய சுடரை ஏற்றி அவ்விளக்கொளியில் துயில்வர்.[3] கடற்கரையின் மணற்பரப்பில் காயவைத்த மீன்களைத் தின்னுதற்குக் கொக்கு, காக்கை போன்ற பறவைகள் பல குவியும்.[4]

### 2.2.5.3. சுறாமீன் பிடித்தல்

பரதவர் சுறா வேட்டம் இரவில் நிகழும். ஒளி பொருந்திய விளக்குகளைக் கொளுத்திக்கொண்டு இரவு நடுயாமத்தில் வேட்டை மேற்செல்வர். சுறாமீன்களைப் பிடிப்பதற்குக் கூரிய உளியைச் செருகிய மூங்கிலைக் கயிற்றில் கட்டிப் பயன்படுத்துவர். இது, படகிலிருந்தபடியே எறிந்து மீன்களைக் கொல்லும் கருவியாகும். இதன் காம்பில் கயிறு கட்டடப்பட்டிருக்கும். இதனை,

> “……………………………….நோன் புரிக்
> கயிறு கடை யாத்த கடு நடை எறி உளித்
> திண் திமில் பரதவர் ஒண் சுடர்க் கொளீஇ,
> நடு நாள் வேட்டம் போகி, வைகறைக்
> கடல் மீன் தந்து, கானற் குவைஇ”[5]

என்ற நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது.

மீன்பிடி தொழிலில் சிறந்து விளங்கிய பரதவர் கூரிய வாயினையுடைய, எறிந்து கொல்லும் உளியை, திண்ணிய மூங்கிலின் கோலில் அழுத்திப் பொருத்தி, வளைந்த மீன்பிடி படகுகளில் ஏறிச் செல்லும் பரதவர், கொம்புகளையுடைய சுறாமீன்கள் மீது வீசுவர்.[6] அப்போது கொல்லும் தன்மையுள்ள சுறாக்கள் வலைகளை அறுத்துச் சென்றுவிடுவதும் உண்டு[7] அவர்களால் எறியப்பட்ட உளி தாக்கிய களிப்புப் பொருந்திய பெரிய மீன், புண்பட்ட தன் உடலினின்றும் ஒழுகிய குருதியினால் புலால் நாறும் கடல் நீரின் நிறம் வேறுபடுமாறு செய்தது.[8]

பரதவர் தீச்சுடரைக் கொளுத்திக்கொண்டு அதன் ஒளியில் சுறா வேட்டம் மேற்கொண்டனர்.[9] பரதவர் குடிச் சிறார்களும் மீன் பிடிக்கும் படகின் மேலேறிக் கொண்டு கடற்பரப்பில் புகுந்து சுறா மீன்களையும் பிற மீன்களையும் கொணர்வர்[10] என நற்றிணைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. என பரதவரின் சுறாமீன் வேட்டைபற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

### 2.2.5.4. மீன் விற்றல்

வலைவிரித்து தமையன்மார் பிடித்துவந்த மீனை, தழையாடை உடுத்திய தங்கைமார்(பரதவப் பெண்கள்), திருவிழாக்கள் நடைபெறும் தெருக்களில் விற்றுவருவர்[11] என அகநானூறு குறிப்பிடுகிறது.

---

[1] நற் .74
[2] நற் .207:7-9
[3] நற் .175
[4] அக .300:1-5
[5] நற் .388:2-6
[6] குறு .304:1-4
[7] அக .340, நற் .303:8-12
[8] அக .210:1-6
[9] நற். 199
[10] நற். 111:1-8
[11] அக. 320:1-4

கடலில் வலைவீசி மீன்களைத் தொகுத்த பரதவர்கள் தம்மிடம் இரந்தோரின் வெற்றுக்கலம் நிறையுமாறு மீன்களை வாரி வழங்கினர். எஞ்சியவற்றைக் கூறுகளாகப் பகுத்து விலைகூறி விற்றனர்[1] என்றும், வலையில் கிடைத்த அயிலை மீன்களை எல்லோர்க்கும் பகுத்துக் கொடுத்தனர்[2] என்றும் குறிப்பிடும் அகப்பாடல் செய்திகள் அவர்களின் பகுத்துண்ணும் வாழ்க்கையையும், மீன் விற்கும் தொழிலையும் காட்டுகின்றன.

**2.2.5.5. மீன் உணங்கல்**

பரதவ மகளிர் நாள்தோறும் பிடித்த மீன்களில் விற்றவைபோக மிகுதியானவற்றைக் கடற்கரை மணற்பரப்பிலேயே சுறாமீனின் வற்றல், இறாமீனின் வாடல் ஆகியவற்றைக் காயவைத்து உணங்கலாக்கினர். இதனை,

> "பெருங் கடற் பரதவர் கோள் மீன் உணங்கலின்
> இருங் கழிக் கொண்ட இறவின் வாடலொடு,
> நிலவு நிற வெண் மணல் புலவ"[3]

எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது. மேலும், இறா மீன்குவியல்களைப் புன்னை மரநிழலில் உலர்த்துவதையும்,[4] நிணத்தை உடைய சுறாமீனை அறுத்து உணங்கலாக வெயிலிற் காயவைக்கும்போது கூட்டமாய்த் திரளும் பறவைகளை விரட்டுவதைப் பரதவ இனப்பெண்கள் தொழிலாகக் கொண்டிருந்தனர்.[5] இதனை, "புலவு மீன் உணங்கல் படு புள் ஓப்பி"[6], "எந்தை புணர் திரைப் பரப்பகம் துழைஇத் தந்த பல் மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்"[7] எனக் குறிப்பிடுவனவற்றாலும் அறியலாம்.

**2.2.5.6. முத்தெடுத்தல்**

பரதவர்கள் கடலுக்குச் சென்று மீன் பிடித்தல் தொழிலையன்றி நீருள் மூழ்கி முத்தெடுத்தல், சங்கெடுத்தல் போன்ற தொழில்களிலும் ஈடுபட்டிருந்தனர். இதனை,

> "வளை படு முத்தம் பரதவர் பகரும்"[8]

> "……………………………விரி திரைக்
> கண் திரள் முத்தம் கொண்டு, ஞாங்கர்த்
> தேன் இமிர் அகன் கரைப் பகுக்கும்
> கானல் அம் பெருந் துறைப் பரதவன்"[9]

> "இலங்கு இரும் பரப்பின் எறி சுறா நீக்கி,
> வலம்புரி மூழ்கிய வான் திமிற் பரதவர்"[10]

எனவரும் அகப்பாடலடிகளைக்கொண்டு அறிந்துகொள்ளலாம்.

**2.2.5.7. கள்ளுண்டு களித்தல்**

சங்ககாலச் சமூகத்தில் கள் உணவு எல்லா நிலத்து மக்களாலும் விரும்பி உண்ணப்பட்ட ஒன்றாக இருந்துள்ளது. நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவரிடத்தும் அவ்வழக்கம் இருந்துள்ளது. "வேட்டையில் கடலில் பெற்ற மீன்களைக் கடற்கரைச்

---

[1] அக. 30:1-10
[2] அக. 70:1-4
[3] குறு. 320:1-3
[4] நற். 101:1-5
[5] நற். 45
[6] நற். 331:4
[7] அக. 80:4-6
[8] ஐங். 195:1
[9] அக. 280:11-14
[10] அக. 350:10-11

சோலையின் நிழலில் குவித்துத் தேன்மணம் வீசும் தெளிந்த கள்ளைத் தம் சுற்றத்தாருடன் உண்பர்"[1] என்றும், 'பகலும் இரவும் மயங்கும் மாலைக்காலத்தில் பரதவர் கள்குடித்து மகிழ்ந்தவராய், தாம் வருந்தாது இனிதாய்ப் பெற்ற மீனை எளிதாக விற்பர்'[2] என்றும், பரதவர் தம் வலைவளத்தால் கிடைத்தவற்றைப் பிறநாட்டில் சென்று விற்று அதனால் கிடைத்த பொருளைத்தந்து கரிய பனையின் இனிய பிழிவான கள்ளை உண்போர் மகிழ்ந்திருக்கும் ஆரவாரத்தை உடையது இவ்வூர்[3] என்றும் குறிப்பிடும் நற்றிணைப் பாடற் கருத்துக்கள் இதனை விளக்குகின்றன. பரதவர் தம் இல்லத்திலேயே கள் சமைப்பதும் உண்டு. இதனை, "நுளைமகள் அரித்த, பழம்படு தேறல் பரதவர் மடுப்ப"[4] என்ற சிறுபாணாற்றுப்படையடிகள் குறிப்பிடுகின்றன.

### 2.2.5.8. உப்பு விளைவித்தல்

கடலுக்குள் சென்று மீன்பிடித்த பரதவர்கள் கடற்கரைக்கு அருகிலிருக்கும் உப்பளங்களில் உப்பு விளைவிக்கும் தொழிலைச் செய்துவந்தனர். இதனால் அவர்கள் "உழாஅ உழவர்" எனப்பட்டனர். இதனை, 'உழவர் தூற்றிய நெல்லின் தூசும் தும்பும் அருகிலிருக்கும் உப்பு காயும் உப்பளத்திலுள்ள சிறிய பாத்திகளில் சென்று வீழ்ந்தது. அதனைக் கண்ட நெய்தல் நில மக்கள் உணவுக்கு இனிமை தரும் வெள்ளிய உப்பு பாழ்பட்டுப் போனமையால் சினந்து, கழனி உழவருடன் மாறுபட்டுச் சேற்றுக் குழம்பினை எடுத்தெறிந்து கைகலப்பில் ஈடுபட்டனர்'[5] என்ற அகப்பாடல் கருத்தைக்கொண்டு அறியலாம்.

### 2.2.5.9. பண்டமாற்று

பரதவர் மீன்பிடி தொழிலோடு உப்பு விளைக்கும் தொழிலையும் செய்துவந்தனர். உமணர்களிடமிருந்து நெல்லைப் பெற்றுக்கொண்டு தாங்கள் கடல்நீரைக்கொண்டு விளைவித்த உப்பைப் பண்டமாற்றாக விற்றனர். மேலும், உப்பு வணிகர் வருகின்ற காலம் நோக்கிக் கடற்கரைச் சோலையில் உப்பினைக் குவித்துவைத்து அங்குக் காவலிருந்தனர். இதனை,

> "தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து,
> பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி"[6]
>
> "உவர் விளை உப்பின் உழாஅ உழவர்
> ஒழுகை உமணர் வரு பதம் நோக்கி,
> கானல் இட்ட காவற் குப்பை"[7]

எனவரும் நற்றிணைப் பாடலடிகள் காட்டுகின்றன. நெய்தல் நிலத் தலைவியொருத்தி, 'புதிய மீனை விற்று அதற்கு மாறாக வாங்கி வந்த நெல்லை இடித்து ஆக்கிய மாவின்கண் தயிரிட்டுப் பிசைந்த உணவினை நும்முடைய குதிரைகளுக்கு(உணக்கு) உணவாகக் கொடுப்போம்'[8] எனக் குறிப்பிடுவதும் பரதவர் உப்பினைக் கொடுத்து நெல்லினைக் கொண்ட பண்டமாற்று வணிகத்தை அறியத் துணைநிற்கிறது.

---

[1] நற். 388:2-6
[2] நற். 239
[3] நற். 38
[4] சிறு. 158-159
[5] அக. 366:5-9
[6] நற். 183:1-2
[7] நற். 331:1-3
[8] அக. 340:14-15

### 2.2.5.10. குரவைக்கூத்து

*மணற் குன்றுகள் மிகுந்த கடற்கரைப் பகுதியில் வாழும் பரதவருடைய மகளிர் நாள்தோறும் ஆடும் குரவைக் கூத்தின் ஓசை கடல் அலையோடு சேர்ந்து பேரொலியாக எழுந்தது.[1] பரதவர்களும் கள்ளுண்டு குரவைக் கூத்தாடினர்.[2]*

### 2.2.5.11. மணமுறை

*இவர்கள் தங்கள் இனத்துக்குட்பட்ட ஆண்பெண் திருமண உறவுகளையே விரும்பினர். தங்கள் குழுவிற்கு வெளியிலான புறமண உறவுகளைத் தவிர்த்துள்ளனர். இதனைப் பின்வரும் 'குறைவேண்டிய தலைவனைத் தோழி சேட்படுத்தது' என்ற கூற்றில் அமைந்த நற்றிணைப் பாடலைக்கொண்டு ஊகிக்க முடிகிறது.*

*'இத்தலைவி கடற்கரைச் சோலையில் உள்ள அழகிய சிறுகுடியின்கண்ணே இருக்கும், நீலநிறத்தையுடைய பெரிய கடலுங் கலங்குமாறு அதன்மேற்சென்று வலைவீசி மீனைப் பிடிக்கின்ற பரதவர் மகள் ஆவாள். நீயோ, நெடிய கொடிகள் காற்றாலசைந்து நுடங்கும் கடைத்தெருக்களைக் கொண்ட பழைய ஊரின்கண் உள்ள கடுமையான செலவுமிக்க தேரை உடைய செல்வம் கொண்டவனின் அன்புக்குரிய மகன் எம் குலத்துக்கு நீ பொருந்துவாய் அல்லை. மேலும் நிணத்தையுடைய சுறாமீனை அறுத்துக் காயவைத்தல் வேண்டி, அவை வெயிலிற் காயும்போது கூட்டமாய்த் திரளும் பறவைகளை நாங்கள் விரட்டும் தொழிலேம். எங்களுக்கு உயர்வு என்ன வேண்டியுள்ளது? ஒன்றும் வேண்டா! எம் உடம்பெல்லாம் புலால் நாற்றம் வீசுகின்றது; எனவே எம் அருகில் நீவிர் வர வேண்டா. கடல்நீரை விளைவயலாகக் கொள்ளுகின்ற எமது சிறிய நல்ல வாழ்க்கையானது நும்மைப்போன்ற உயர்வு உடையதன்று; எங்கள் பரதவர் குடியில் உம்மைப்போன்ற செல்வர்களும் உள்ளார்கள்'[3] இப்பாடற் கருத்தில் 'இவளோ மீன் பிடிக்கும் பரதவர் மகளாவாள்', 'நீயோ தேரையுடைய செல்வம் கொண்டவனின் மகன்' எனக் குறிப்பது புறமணத்தை ஏற்றுக்கொள்ளாத சமூகத்தைக் காட்டுகிறது.*

*மணமகன் தான் விரும்பிய பெண்ணின் தந்தைக்குப் பிடித்தமான முறையில் சேவைகள் செய்தோ, தனது திறமைகளைக் காட்டியோ அப்பெண்ணை மணத்தலைச் சேவை மணம் என மானிடவியலார் குறிப்பிடுவர். இக்கருத்தின் அடிப்படையில் நெய்தல் நிலப் பரதவர்களிடம் சேவைமணம் வழக்கில் இருந்ததைப் பின்வரும் அகநானூற்றுப் பாடற்கருத்து காட்டுகின்றது.*

*'நாம் தங்கியுள்ள இந்நாட்டை விட்டு நீங்கிப் பரதவனாம் அவள் தந்தையுடன் கூடி, பெரிய கடற்கரையினை அடுத்துள்ள உப்பளத்திலுள்ள உப்பினை விற்றுத் திரிந்து வருந்தியும், பெருங்கடல் ஆழத்தில் புணையுடன் சென்றும், அவன் வயமாகியும், அவனுக்குப் பணிந்தும், அவனைச் சார்ந்தும் இருப்போமானால், அறத்தை எண்ணிப் பார்த்து ஒருவேளை தானே நாம் விரும்பும் தலைவியை நமக்கு மணஞ்செய்து தருவானோ?'[4] என்ற கருத்து அக்காலத்தில் பரதவர் சமூகத்தில் சேவை மணம் வழக்கில் இருந்திருக்கலாம் எனக் கருத இடம் தருகிறது.*

---

[1] மது. 97  [2] புற. 24:4  [3] நற். 45  [4] அக. 280:6-11

*2.2.5.12. வலைஞர்*

வலை கொண்டு மீன் பிடித்து விற்போர் வலைஞர் எனப்பட்டனர். வலையால் மீன் பிடிப்பவராகிய பரதவர் என்றும் இவர்களைக் குறித்து அறிய முடிகிறது. இத்தகைய வலைஞர்களின் குடில், வேழக் கோலை நிரைத்து, வெள்ளிய மரக்கொம்புகளை இடையிடையே கலந்து, தாழை நாராலே கட்டித் தருப்பைப் புல்லாலே வேயப்பட்ட குறிய இறப்பையுடையதாக இருந்தது. அவர்தம் வீட்டில் மீனை வாரி எடுப்பதற்காக வைத்திருக்கும் பறியைக்(மீன்பிடி கருவி) கொண்டு தம் மக்களுடன் சேர்ந்து கயல் மீனையும் இறால் மீனையும் பிடிக்கும் இவர்கள் குளக்கரைக் காவல் பணியையும் மேற்கொண்டனர் எனப் பெரும்பாணாற்றுப்படை[1] குறிப்பிடுகிறது. இவர்கள் ஆரல், வாளை, வரால், கயல் எனப்பலவகைப்பட்ட மீன்களைப் பிடித்தனர்.[2] இவ்வாறு பிடிக்கப்பட்ட மீன்கள் விலைகூறி விற்கப்பெற்றதை, "கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்"[3] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

*2.2.6. வேடர்*

வேட்டைத் தொழில் செய்ததால் இவர்கள் வேட்டுவர் எனக் குறிப்பிடப்பட்டனர். இவர்களை "வில் உழுது உண்மார்"[4] என்கிறது புறநானூறு. அகராதிகள்[5] இவர்களைப் பாலைநிலத்தை வாழ்விடமாகக் கொண்டவர்கள் என்கின்றன. பதிற்றுப்பத்து இவர்கள் வாழ்விடத்தை, "குன்று தலைமணந்த புன் புல வைப்பு"[6] என்றும், புறநானூறு இவர்கள் காட்டில் வாழ்பவர்கள் என்பதை, "கான் உறை வாழ்க்கை, கதநாய், வேட்டுவன்"[7], "காட்டு நாட்டோம்"[8] என்பன குறிப்பிடுகின்றன.

'காட்டுப்பூனையின் ஆண் இனத்தைப்போன்று அச்சுறுத்திப் பார்க்கும் மெல்லிய தலையினையும், பறவைகளின் ஊனைத்தின்று புலால் நாற்றம் நாறுகின்ற வாயினையும் உடையவர். பற்கள் வெளியில் தெரியும்படியான வாயினை உடைய வேட்டுவர்களின் பிள்ளைகள் உடைமரத்தின் முட்களை ஊகம் புல்லின் நுனியில் செருகி அதை அம்பாகவும், மெல்லிய கொம்புகளாகிய வளரினை வளைத்து வில்லாகவும் கொண்டு பருத்திச் செடிகள் அடர்ந்து வளர்ந்துள்ள பகுதிகளில் எலிகளை வேட்டையாட உற்றுநோக்குவர்'[9] எனப் புறநானூறு இவர்களைக் குறித்துக் குறிப்பிடுகிறது.

இவர்கள் வேட்டை நாய்களோடு பல மலைகளையும் கடந்து செல்லும் இயல்புடையவர்கள்.[10] இவர்கள் விலங்குகளைப் பிடிப்பதற்காகச் சில விலங்குகளையும்,[11] பறவைகளையும்[12] பழக்கப்படுத்தி வளர்ப்பர். அவற்றைப் பார்வை விலங்கு என்பர்.

உடும்பு, தவளை, ஈசல், முயல், மான், யானை போன்றவற்றை வேட்டையாடினர்.[13] புலிகளையும் வேட்டையாடினர். இதற்குக் கற்பலகைகளைக் கொண்டு அமைக்கப்பெற்ற அடார் எனப்பட்ட புலியகப்படுத்தும் எந்திரத்தைப்

---

[1] பெரு. 263-274
[2] புற. 249
[3] மது. 256
[4] புற .170:4
[5] செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி, எட்டாம் மடலம், மூன்றாம் பாகம், ப . 212., http://agarathi.com/word/வேடன்
[6] பதி. 30:13
[7] புற .33:1
[8] புற. 150:19
[9] புற .324:1-8
[10] அக. 28:6-8
[11] புற. 320:1-4
[12] நற். 312:4
[13] நற். 59:1-5; புற. 202:1,214:3-4

பயன்படுத்தினர்.[1] பறவைகளைப் பிடிப்பதற்காக வலைகளைப் பயன்படுத்தினர்.[2] புறாக்களை வலைவிரித்துப் பிடித்தனர்.[3] வேட்டைக்குப்பின் மிகுதியாகப் பருகிய கள்ளின் மயக்கத்தில் செருக்குற்றுக் கிடந்தனர்.[4] கள்ளினைப் பெறுவதற்கு வேட்டுவர் தாம் வேட்டையாடிய காட்டுப்பசுவின் இறைச்சியோடு யானையின் தந்தத்தையும் கடைத்தெருவிற்கு எடுத்துச் சென்று தாம் வாங்கும் கள்ளுக்கு விலையாகக் கொடுத்தனர்.[5]

இவர்கள் தாங்கள் வேட்டையாடிய மான் தசையை ஆயமகளிடமும் உழத்தியரிடமும் கொடுத்து அதற்கு மாற்றாகத் தயிரினையும், வெண்ணெல்லினையும் பெற்றுச் சென்றதை, “வேட்டை நாயையுடைய வேட்டுவன், காட்டில் வாழும் வாழ்க்கையன்; அவன் மான் தசையைக் கொண்ட கடகப் பெட்டியையும், ஆய்மகள் தயிர் கொண்டுவந்த பானையும் உடையவன்; அவனுக்கு ஏரினால் உழுது வாழும் உழவர்தம் பெரிய வீட்டிலுள்ள மகளிர், வெண்ணெல்லை முகந்து தருவர் அதனைப் பெற்றவனாய் தன்னிருப்பிடம் திரும்புவான்”[6] என்கிறது புறநானூறு.

வேடர் குலத் தலைவர்களான நள்ளியும், ஓரியும் தன்னை நாடி வந்த இரவலர்க்கு மான் தசையையும், மதுவையும், பொன்னையும், மணியையும் தந்து அனுப்புவது அவர்களின் இனக்குழுப் பண்பைப் புலப்படுத்துகிறது.[7]

### 2.2.7. எயினர்

பாலைநிலத்தில் வாழ்ந்த எயினர்கள் ஆறலைத்தலைக் குலத்தொழிலாகக் கொண்டவர்கள்.[8] இவர்களை வேடன் என்றும் அகராதிகள் குறிப்பிடுகின்றன.[9] அச்சத்தை ஏற்படுத்தும் துடியினையும், வில்லினையும் கொண்ட இவர்கள் வழிப்போக்கரைத் தாக்கியோ கொன்றோ அவர்களின் பொருட்களைக் கொள்ளையிட்டனர்.[10] பட்டினப்பாலை இவர்கள் மருதநிலப்பகுதிகளுக்குத் துடியை முழக்கிச் சென்று நெற்கூடுகளைக் கொள்ளையிட்டுச் செல்வர் எனக் குறிப்பிடுகிறது.[11] உணவுக்காக வேண்டி முள்ளம் பன்றி முதலிய விலங்குகளை வேட்டையாடி உண்டனர்.[12] எயினர்களைப்பற்றி பத்துப்பாட்டில் ஒன்றான பெரும்பாணாற்றுப்படை 83 முதல் 105 வரையிலான அடிகளின் வழி மிக விரிவாக அறியமுடிகிறது. எயிற்றியர் கரம்புநிலத்தைக் குத்திக் கிளறிப் புல்லரிசியை எடுத்துவந்து அவற்றை நிலவுரலில் இட்டுக் குற்றி உணவு சமைத்தனர்.[13] இவர்கள் விலங்குகளைப் பிடிப்பதற்குப் பார்வை மான்களையும், உடும்பு போன்றவற்றை வேட்டையாடுவதற்கு நாய்களையும் பயன்படுத்தினர்.[14] புலால்நாறும் வேல்களையும், வில்லோடு சேர்ந்த அம்புக்கூடுகளையும் கொண்டதாக அவர்களின் இல்லங்கள் காணப்பட்டன.

#### 2.2.7.1. ஆறலை கள்வர்

ஆறலை கள்வர் என்பவர்களை வழிமறித்துத் துன்புறுத்தும் திருடர்கள் எனக் குறிப்பிடுவர். இவர்கள் நீர்வளமற்ற வறண்ட பாலைநிலப் பகுதிகளில் வாழ்ந்த மக்களாவர். வழிப்போக்கர்களிடமிருந்தும், வணிகக் குழுக்களிடமிருந்தும்

---

[1] புற .19:5
[2] நற். 212:1
[3] நற். 189:6-7
[4] நற். 59:1-5
[5] பதி. 30:9-13
[6] புற. 33:1-6
[7] புற. 150, 152
[8] ஐங்குறுநூறு மூலமும் உரையும், என்.சி.பி.எச்., ப. 793
[9] http://agarathi.com/word/எயினன்
[10] அக. 79:13-14 ,319:1-5
[11] பட். 265-267
[12] ஐங். 364:1 ,365
[13] பெரு. 83-105
[14] பெரு. 117-133

அவர்களைத் துன்புறுத்தியும் கொன்றும் அவர்களிடமிருந்து பொருட்களைக் கொள்ளையடித்து வாழும் வாழ்க்கையுடையவர்களாவர். இத்தொழிலை ஆறலைத்தல் என்றும், இத்தொழில் செய்பவர்களை ஆறலை கள்வர்கள் என்றும் குறிப்பிடுவர். ஆறலை கள்வர்கள் இத்தகைய ஆறலைத்தலேயன்றி கால்நடைகளைக் கொள்ளையடிப்பதையும் தொழிலாகக்கொண்டிருந்தனர். இவர்களை 'மறவர்', 'கள்வர்' என்ற பெயர்களால் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களில் அடையாளங்காண முடிகிறது.

இவர்களது வீரத்தையும் தோற்றத்தையும், "துணைப்படைகளைப் பெற்ற படையோடு அரசர்கள் வந்தாலும் அஞ்சாது, அழகிய சிலை மரத்தால் செய்யப்பெற்ற வில்லினது முறுக்குதலை உடைய நாணில் எழுந்த ஒலியாலே அரசரைப் புறமுதுகிடச் செய்வர். வில்லிலே அம்பைத் தொடுப்பது நாணும் செயல் என்று கருதுவர். கடிய துடியினது ஆரவாரத்தையும், வலிய பார்வையினையும், வலிமை மிகுந்த கழுத்தினையும் உடைய கலைமானின் கொம்பினைப் போன்று முறுக்குண்டு தாழ்ந்த தாடியினையும் வெவ்விதாகிய கடிய சினத்தையும் புறங்கொடாத வீரத்தையும் உடையவர். இம்மறவர் வழிச்செல்வாரிடத்துப் பொருள்களைப் பறித்துக் கொண்டு, அதற்கு ஈடாகப் புண்ணைக் கொடுப்பர்"[1] எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது.

ஆறலை கள்வர்களின் தொழிலை 1. ஆறலைத்தல்(வழிப்பறி), 2. நிரைகவர்தல் (கால்நடைகளைக் கொள்ளையடித்தல்) என்ற இரண்டு நிலைகளில் சங்கப்பாக்களில் காணமுடிகிறது.

### 2.2.7.2. வழிப்பறி

ஆறலை கள்வர்களின் வாழிடம் மலை சார்ந்த வன்னிலப் பகுதியில் அமைந்திருந்தது. அப்பகுதியில் குழிகளில் கிடக்கும் கலங்கல் நீரே அவர்களுக்கு நீராதாரமாக இருந்தது. இவர்கள் உண்பதற்கு, வளமற்ற குறைந்த உணவே கிடைத்தது. இரவுப் பொழுதில் துவர்நிற ஆடையை அணிந்து அம்புத் தொடையைக் கையில் கொண்ட அவர்கள் சூரியன் மறைந்த மாலைப் பொழுதில் வழியிடைச் செல்வாரின் வருகைக்காகக் காத்திருப்பர்[2] என அவர்களின் வழிப்பறித் தொழிலை நற்றிணைப் பாடல் காட்டுகிறது. இவர்கள் வழியிடைச் செல்வாரை எதிர்பார்த்து நிற்கும் தன்மை, "அத்தம் நண்ணி, அதர் பார்த்து இருந்த கொலை வெங் கொள்கைக் கொடுந் தொழில் மறவர்"[3] எனச் சுட்டுவதுகொண்டும் அறியமுடிகிறது. மேலும், வழிப்பறிக்கு ஏற்ற பொழுதாக சூரியன் மறைந்த மாலைப் பொழுதை இவர்கள் தேர்ந்தெடுத்தனர் என்பது நோக்கத்தக்கது.

'வில்ஏர் உழவர்' என்று குறிப்பிடப்படுகின்ற ஆறலை கள்வர், காட்டிலுள்ள கவர்த்த வழிகளில் செல்பவர்களை வருத்தி அவர் பொருட்களைக் கொள்ளையிட்டு உண்ணும் வாழ்க்கையை உடையவர்கள். எனவே இவர்கள் மழைவளத்தை விரும்பாதவர்கள். தமக்கு வேட்டை வாய்க்கப்பெற்ற நன்னாளில் தம் சுற்றத்துடன் சென்று வழிச் செல்வாரின் இரத்தம் களத்தில் சிந்திக் கிடக்கும்படியாகப் போரிட்ட தன்மையினை,

"கான்உயர் மருங்கில் கவலை அல்லது
வானம் வேண்டா வில்ஏர் உழவர்

---

[1] கலி .15 [2] நற். 33:1-7 [3] அக .363:9-10

*பெருநாள் வேட்டம் கிளைஎழ வாய்த்த,*
*பொருகளத்து ஒழிந்த குருதி"*[1]

*என அகநானூறு குறிப்பிடுகிறது. இதைப்போலவே, "கொலையை விரும்பும் கொள்கையினையும், கொடிய தொழிலையும் உடைய மறச்சாதியார் கொள்ளையிடும் நோக்குடன் பாலை நிலம் அடைந்து ஆறு செல் மாக்களை எதிர்பார்த்துக் காத்திருப்பார்; கொல்லுதலைச் செய்யும் வேல் கொண்டு மார்பிலே எறிந்தமையால் விழுப்புண்பட்டு இறந்து வீழ்ந்தவரின் ஊனினை உண்ணுதற்குப் பருந்தின் சேவல் தன் சுற்றத்தைக் கூவி அழைக்கும்"*[2] *என்று இவர்களைப்பற்றி குறிப்பிடப்படுவது கவனிக்கத்தக்கது.*

*மேற்குறித்தவாறு ஆறலை கள்வர்களால் கொல்லப்பட்ட வழிப்போக்கர்களின் உடல்கள் மீது சருகை இட்டு மூடிய கற்குவியல்கள், ஒரு ஊர் இருப்பதைப் போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியதை,*

*"மாறு நின்று எதிர்ந்த ஆறுசெல் வம்பலர்*
*உவல் இடு பதுக்கை ஊரின் தோன்றும்*
*கல் உயர் நனந் தலை"*[3]

*எனக் குறிப்பதுகொண்டும், "வெஞ் சுரத்து உலந்த வம்பலர் உவல் இடு பதுக்கை"*[4]*, "செரு வேட்டு, சிலைக்கும் செங் கண் ஆடவர், வில் இட வீழ்ந்தோர் பதுக்கை"*[5] *என குறிப்பிடுவனவற்றைக் கொண்டும் அறியலாம். இப்பதுக்கைகள் தழைகளாலும் கற்களாலும் மூடிவைக்கப்பட்டு கள்ளிகள் நிறைந்து பாழ்பட்ட இடமாகக் காணப்பட்டது.*[6]

*இவர்கள், சுரவழியில் செல்லும் வழிப்போக்கர்கள் வராத நேரங்களில் அக்காட்டில் வாழும் உயிர்களைக் கொன்று உண்பர். இதனை,*

*"நெடுங் கழை திரங்கிய நீர் இல் ஆர் இடை,*
*ஆறு செல் வம்பலர் தொலைய, மாறு நின்று,*
*கொடுஞ் சிலை மறவர் கடறு கூட்டுண்ணும்"*[7]

*எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது. முல்லை நிலம் சூழ்ந்த குன்றின் அடிவாரத்தில் உள்ள சிற்றூரில், வாழ்ந்த, இவர்கள், தினை கொண்டு சமைத்த கள்ளினை உண்டு, விற்படை கொண்டு வேட்டைமேற் சென்று, முல்லைநிலத் தோட்டத்தில் மானை அறுத்துத் தின்பர். இதனை,*

*"புன் புலம் தழீஇய பொறைமுதல் சிறு குடி,*
*தினைக் கள் உண்ட தெறி கோல் மறவர்,*
*விசைத்த வில்லர், வேட்டம் போகி,*
*முல்லைப் படப்பைப் புல்வாய் கெண்டும்"*[8]

*என்ற அகப்பாடலடிகள் விளக்கும். அழகிழந்த பொலிவற்ற தாடியினையும், அஞ்சாமையையும் உடைய மறவர்கள் தம் அம்புகளை அச்சம் தரும் நடுகல்லில்*

---

[1] அக. 194:1-4
[2] அக .363:5-15
[3] குறு. 297:3-5
[4] குறு. 77:2-3
[5] அக. 157:4-5
[6] அக .231:5-7
[7] குறு. 331:1-3
[8] அக. 284:7-10

தீட்டுவர்,[1] தீட்டிய அம்புகளின் கூர்மையை அறிய நகத்தால் அவற்றின் நுனியை நெருடுவர்.[2] என இவர்களைக் குறித்து அகநூல்கள் குறிப்பிடுகின்றன.

#### 2.2.7.3. நிரை கவர்தல்

ஆறலை கள்வர்கள் பசுக்களைத் தொழுவங்களிலிருந்து கவர்ந்து சென்றனர். இதனை, ''கறவை தந்த கடுங் கால் மறவர்''[3], ''அத்தக் கள்வர் ஆதொழு அறுத்தென''[4] எனவரும் அடிகள் காட்டுகின்றன. வேட்டையாடும் கள்வர் ஏறுகளைக் கொள்ளுங்கால் பறையினை முழக்குவர். இதனை, ''வேட்டக் கள்வர் விசியுறு கடுங் கண் சேக் கோள் அறையும் தண்ணுமை''[5] என அகநானூறு சுட்டுகிறது. இவர்களால் ஊர் பாழ்பட்டமையை, ''தாம் விதைத்து விளைக்காத எறும்புகள் சேகரித்த புல்லரிசியை உணவாகக் கொள்ளும் வில்லையுடைய வீரர்கள் பசுக்கூட்டங்களைப் பலமுறை கவர்ந்து சென்றமையாலும் வளஞ்சான்ற குடிமக்கள் வாழ்விழந்து குடிபெயர்ந்து சென்றுவிட்டமையாலும் ஊர் மன்றம் பாழ்பட்டுக் கிடந்தது''[6] எனக் குறிப்பிடுவதுகொண்டு அறியமுடிகிறது. இத்தகைய ஆநிரை கவர்தல் குறித்து ராஜ்கௌதமன், ''ஆநிரை கவர்தலும் மீட்டலும் இனக்குழுக்களுக்கு இடையில் வாழ்வு ஆதாரப் பிரச்சினையாக இருந்துள்ளன. இது பெருங்கற்கால நாகரிகத்தில் உருவானது''[7] எனக் கருத்துரைப்பார்.

## 2.3. நிலை குடிகள்

### 2.3.1. அந்தணர்

பழந்தமிழகத்தில் அந்தணர்கள் மதிப்புமிக்கவர்களாகக் கருதப்பெற்றனர். அந்தணர், அந்தணாளர், பார்ப்பார், மறைகாப்பாளன் என்னும் சொற்கள் ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சார்ந்த மக்களைக் குறிப்பன. அறநெறியில் வாழ்பவர், துறவி என்றெல்லாம் குறிப்பிடப்படும் அந்தணர், அறம் என்று முன்னோர்களால் வகுக்கப்பட்ட நீதிகளை முறைப்படி பின்பற்றுவோராக அடையாளப் படுத்தப்பட்டனர். இவர்கள் எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் கொண்டு வாழும் அறவோர் என்பதை, ''அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக லான்''[8] எனக்குறிப்பிடுகிறது திருக்குறள். சங்கப் பாடல்களில் இவர்கள், 'வாய்மொழிப் புலவர்'[9], 'நான்மறை முதல்வர்'[10], 'மறைகாப்பாளர்'[11], 'வேதியர்'[12], 'இருபிறப்பாளர்'[13] என்று குறிப்பிடப்பட்டுள்ளனர். வேதம் ஓதுதல் இவர்களின் தொழில் என்பதை, 'அந்தணர் வேதம்'[14], 'அந்தணர் அருமறை'[15], 'அந்தணாளர் நான்மறை'[16] என்பன காட்டுகின்றன. இவர்கள் அறிவிற் சிறந்தவர்களாக விளங்கியமை ''அறிவுடை அந்தணன்''[17], ''புலன் அழுக்கு அற்ற அந்தணாளன்''[18] எனக் குறிப்பிடுவனகொண்டு அறியமுடிகிறது.

#### 2.3.1.1. அந்தணர் தோற்றம்

வேதம் ஓதுதலைத் தொழிலாகக் கொண்டிருந்த இவர்கள் புரிநூல், கரகம், முக்கோல், மணை போன்ற புற அடையாளங்களைக்கொண்டு திகழ்ந்ததை, ''நூலே

---

[1] அக. 297:5-10
[2] குறு. 16:1-3
[3] அக. 63:12
[4] அக. 7:14
[5] அக. 63:17-18
[6] அக. 377:1-6
[7] ராஜ்கௌதமன், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், ப .6
[8] குறள். 30
[9] பரி. 9:12-13
[10] புற. 26:13
[11] பெரு. 301
[12] பரி. 11:84
[13] திரு. 182 புற. 367:12
[14] மது. 656
[15] பரி. 1:13, 2:57, 3:14, 4:65
[16] புற. 362:8-9
[17] கலி. 72:18
[18] புற. 126:11

கரகம் முக்கோல் மணையே ஆயுங் காலை அந்தணர்க்குரிய”[1] எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

கலித்தொகையும், அந்தணர்கள் எரிக்கின்ற ஞாயிற்றின் கதிர்களைத் தாங்குதற்காக ஏந்திய குடையின் நீழலில், உறியிலே வைத்த கமண்டலத்தையும், முக்கோலையும் தோளிலே வைத்து, மெய்ப் பொருளை அன்றி வேறொன்றையும் கருதாத நெஞ்சத்தினராய், ஐம்பொறிகளும் அவர்களுக்கு ஏவல் செய்தலை இயல்பாக உடைய கோட்பாட்டையும் ஒழுக்கத்தையும் கொண்டவராகக் காட்சி தருவதைக் காட்டுகிறது.[2]

பார்ப்பனச் சிறுவர்கள் குடுமியுடையவர்களாய்க் காணப்பட்டதை ‘நம்மூர்ப் பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங் குடுமித் தலைய மன்ற நெடுமலை நாட னூர்ந்த மாவே’[3] என ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது. இவர்கள் பசுக்களைப் போன்ற இயல்பு வாய்ந்தவர்கள் என்பதை, ‘ஆன் இயற் பார்ப்பன மாக்கள்’[4] என்கிறது புறநானூறு. மிகுந்த கேள்வியறிவும் ஐம்புலன்களையும் ஒடுக்கிய விரதங்களையும் நான்கு வேதங்களைக் கைக்கொண்டவர்களாகவும் அந்தணர் விளங்கினர்.[5] இவர்கள் தீயினை வழிபட்டதை, ‘அழல் புறந்தரூஉம் அந்தணர்’[6], ‘ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான்’[7] எனவரும் சங்கப் பாடலடிகள் காட்டுகின்றன. மேலும், இவர்கள் நாற்பத்தெட்டு ஆண்டுகள் பிரமசரியங் காத்து வாழும் இயல்பினராதலை,

“அறுநான்கு இரட்டி இளமைநல் யாண்டு
ஆறினில் கழிப்பிய, அறன்நவில் கொள்கை”[8]

எனவும், மேலும் ஈர ஆடையோடு வழிபாடு நடத்தியதையும், மார்பில் பூணூல் அணிந்ததையும், “ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண், புலராக் காழகம் புலர உடீஇ”[9] எனவும் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது. (இவர்களின் உணவு உறைவிடம் குறித்து இயல் 1ல் விளக்கப்பட்டுள்ளது.

### 2.3.1.2. தொழில்

பேரரசர், குறுநிலமன்னர், வணிகர் எனப்பலரும் அந்தணர்களைக்கொண்டு வேள்விச் சடங்குகளையும் வழிபாடுகளையும் நிகழ்த்தினர். வேதம் ஓதுதலையும், வேள்விகள் செய்வதையும் தொழிலாகக்கொண்டு[10] வேள்வியுள் குறிப்பிடப்படும் இருபத்தொரு துறைகளையும் கற்றுத் தெளிந்த இவர்கள், வேதம் ஓதுதலை காலை வேளையிலும்[11], வேள்வி இயற்றுதலை மாலை வேளையிலும்[12] மேற்கொண்டிருந்தனர். வேள்வி செய்யும்போது கலைமானின் உறுப்புத்தோலைப் போர்த்திக் கொண்டனர், வேள்வியில் நீர் நாணும்படியாக நெய் ஊற்றினர்.[13] கொழுப்புடன் கூடிய ஊன் கலந்த சோற்றைத் தீயில் பலியாக இட்டனர். வேள்விச் சாலையில் வேள்வித் தூண்களை நட்டனர்.[14] என்று இவர்கள் வேள்வி செய்வதைத் தொழிலாகக் கொண்டிருந்ததைச் சங்கப்பாக்கள் பலவும் குறிப்பிடுகின்றன.

சோழர்களில் கரிகாற் பெருவளத்தான்[15], சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்[16], சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி[17] ஆகியோரும், சேரர்களில், பல்யானை செல்கெழுகுட்டுவன்[18], செல்வக்கடுங்கோ வாழியாதன்[19],

[1] தொல்-பொருள். 615.
[2] கலி. 9:1-4
[3] ஐங். 202:2-3
[4] புற. 9:1
[5] புற. 26:12-13
[6] புற. 122:3
[7] கலி. 69:5
[8] திரு. 179-180
[9] திரு. 183-184
[10] மது. 468-474
[11] மது. 651-656
[12] புற. 2:20-24
[13] புற. 166
[14] பெரு. 315-316
[15] புற. 224
[16] புற. 397:20-21
[17] புற. 16, 125, 367, 377
[18] பதி. 21:1-7
[19] பதி. 70:18-19

பெருஞ்சேரலிரும்பொறை[1] ஆகியோரும், பாண்டிய மன்னர்களில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்[2], குறுநில மன்னர்களில் அதியமான் நெடுமானஞ்சி[3], மலையமான் திருமுடிக்காரி[4], கரும்பனூர் கிழான்[5] பாண்டியனின் படைத் தலைவனாகிய பண்ணி[6] ஆகியோரும் அந்தணர்களைப் போற்றியும் அவர்கள் வேள்விகளை இயற்றுதற்கு உதவியும் வந்துள்ளனர்.

வேள்விகள் பலவற்றை முடித்தமையால் பாண்டியமன்னன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி எனப்பட்டான்.[7] பெருஞ்சேரலிரும்பொறை தன் மனைவியோடு அமர்ந்து செய்த யாகத்தின் பயனாய் அவனுடைய மனைவியின் கருவில் சால்பு, செம்மை முதலான நற்பண்புகள் நிரம்பிய புதல்வனைப் பெற்றான்[8] எனக் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. அதுமட்டுமின்றி யாகம் செய்வார் சுவர்க்கம் புகுவர்[9] என மக்கள் நம்பினர். இவ்வாறு அரசர்கள் மட்டுமின்றி, வணிகர்களும் வேள்வி இயற்ற உதவியும், அந்தணர்களைப் போற்றியும் வாழ்ந்தமையை,

> 'அமரர்ப் பேணியும், ஆவுதி அருத்தியும்
> நல் ஆனொடு பகடு ஓம்பியும்
> நான் மறையோர் புகழ் பரப்பியும்'[10]

எனப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது. மேற்குறித்த இச்சான்றுகள் வேள்விக்கும், வேள்வி இயற்றுவோரான அந்தணர்க்கும் இருந்த சமூக மதிப்பைப் புலப்படுத்துகின்றன.

அந்தணர்கள் வேதம் ஓதுதலேயன்றி தூது செல்பவர்களாகவும் இருந்துள்ளனர்.[11] அகநானூற்றுப் பாடலொன்று 'பாலைவழியில் கையில் ஓலைச்சுருளுடன் செல்லும் பார்ப்பான் ஒருவனை ஆறலை கள்வர்கள் அவன் கையில் உள்ளதைப் பொன் எனக் கருதி அவனை அவ்விடத்திலேயே கொன்றதாகக் குறிப்பிடுகிறது. மேலும், அவன் வறுமையின் காரணமாக வாடிய தேகத்தைக் கொண்டவனாகவும், கிழிந்த ஆடையை உடுத்தியவனாகவும் காணப்பட்டான்'[12] என்றும் குறிப்பிடுவதுகொண்டு, அரசர்களால் அந்தணர்கள் போற்றப்பட்ட பண்டைக் காலத்தில் வறுமையில் வாடிய அந்தணர்களும் இருந்தனர் என்பதை அறியலாம்.

### 2.3.1.3. அரசர்களால் காக்கப்படுவோர்

அந்தணர்கள் அரசர்களால் போற்றப்பட்டனர். அவர்களுக்குப் பொருள் வழங்குதல் புண்ணியச் செயலாகக் கருதப்பட்டது.[13] மலையமான் திருமுடிக்காரி தன் நாட்டின் பல பகுதிகளை அந்தணர்க்கு உரிமையாக்கியதை, 'நின் நாடே; அழல் புறந்தரூஉம் அந்தணரதுவே'[14] எனக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. மேலும், கேள்விச் செல்வம் வாய்க்கப்பெற்ற வேள்வி செய்தலைத் தொழிலாக உடைய அந்தணர்க்கு அரிய அணிகலன்களை அரசர்கள் பலர் தாரைநீர் வார்த்துக் கொடுத்தனர்.[15]

---

[1] பதி. 74:1-2
[2] புற. 26:12-15
[3] புற. 99:1
[4] புற. 122:1-3
[5] புற. 384:15-18
[6] அக. 13:11-12
[7] புற. 15
[8] பதி. 74:16-21
[9] மது. 494-495
[10] பட். 200-202
[11] தொல். அகம். 28; நம்பி. 75
[12] அக. 337:7-13
[13] புற. 367:3-5
[14] புற. 122:2-3
[15] புற. 361:4-5, 367:4-5; பதி. 64:3-6

### 2.3.1.4. அந்தணரின் சமூக மதிப்பு

அறிவிற் சிறந்தவர்களாகக் கருதப்பட்ட அந்தணர்க்கு அரசர்கள் தலைவணங்கினர். இதனை, "இறைஞ்சுக, பெரும! நின் சென்னி – சிறந்த நான்மறை முனிவர் ஏந்து கை எதிரே!"[1] எனப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிக்கிழார் பாடிய புறப்பாடல் காட்டுகிறது. கபிலர் பாரிமகளிரை மணஞ்செய்துகொள்ள வேண்டி இருங்கோவேளிடத்தும், விச்சிக்கோவிடத்தும் அழைத்துச்சென்று அவர்களிடம், 'இவர்கள் பாரியின் மகளிர், இவர்களை உன்னிடம் அழைத்து வந்த நான் அந்தணன் ஆவேன்'[2] எனக் குறிப்பிடுகிறார். இங்குக் கபிலர், தான் அந்தணன் என்பதையும் எனவே, தன் சொல்லுக்கு மதிப்பளிக்க வேண்டும் என்பதையும் எதிர்பார்க்கிறார். இவ்வாறே 'யானே பரிசிலன் மன்னும் அந்தணன்'[3], 'அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே'[4] எனவரும் கூற்றுகளும் அந்தணர்க்கிருந்த பெருமித உணர்வையும், சமூக மதிப்பையும் புலப்படுத்துகின்றன.

வேதத்தை ஓதுதல், வேள்வி செய்தல், பிறரும் வேதத்தை ஓதச் செய்தல், வேள்வி செய்வித்தல், ஈதல், கொள்ளத்தகும் பொருட்களை ஏற்றல் என்று சொல்லப்பட்ட ஆறு தொழில்களையும் தவறாது செய்தொழுகுபவரும் தருமத்தை விரும்பிச் செய்பவருமாகிய அந்தணர்பாற் பணிந்தொழுகுவாய் என்று, பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார்

"ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்தல்
ஈத லேற்றலென் றாறுபுரிந் தொழுகும்
அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி"[5]

என்று பாடுகிறார். கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதனை அந்தணருக்குப் பணிதல் அல்லாமல் பிறருக்குப் பணிதலை அறியாய் எனப் போற்றுகிறார். இதனைப் "பார்ப்பார்க்கு அல்லது பணிபு அறியலையே"[6] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.

சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தானும், புலவர் தாமப்பல் கண்ணனாரும் வட்டாடினர். அவ்விடத்து வட்டுக்காய்கள் காணாமற் போயின; அதனால் வெகுண்ட சோழன் வட்டுக்காய்களைப் புலவர் மீது வீசியபோது, "ஆத்திப்பூவால் செய்த மாலையை அணிந்த நின் முன்னோர் யாவரும் பார்ப்பனர் மனம் நோகும் செயல்களைச் செய்யார்; ஆயினும் இவ்வெறுக்கத்தக்க செய்கை உனக்குரிய இயல்பாகுமோ?"[7] எனப் புலவர் கேட்கிறார். இதில் அரசர்கள் அந்தணர்களின் மனம் நோகும்படியான செயல்களைச் செய்யாமை பல தலைமுறைகளாகத் தொடர்ந்து வருவதைக் காட்டுவதோடு, அரசர்கள் அவர்கள்பால் வைத்திருந்த மதிப்பையும் புலப்படுத்துகின்றது.

### 2.3.1.5. ஒழுக்கம் குறைந்தவன்

இரவுக் குறியில் தலைவனைச் சந்திக்கச் செல்லும் தலைவியிடம் தனித்து நிற்கும் மகளிரைக் கண்டால் தன் காம வேட்கையாலே துன்பம் தருவதை வாழ்க்கையாகக்கொண்ட முடவனான முதுபார்ப்பானைக் குறித்து கலித்தொகை

---

[1] புற. 6:19-20
[2] புற. 201:1-7
[3] புற. 200:13
[4] புற. 201:7
[5] பதி. 24:6-8
[6] பதி. 63:1
[7] புற. 43:13-15

குறிப்பிடுகிறது.[1] இங்கு ஒழுக்கத்தில் சிறந்தவர்களாகக் குறிப்பிடப்படும் அந்தணனை ஒழுக்கமற்றவராகக் காட்டுவது கவனிக்கத்தக்கது. மேலும் அந்தணர் இறந்த அரசர்க்கு ஈமச்சடங்குகள் செய்ததை, 'தமது வீரமே பற்றுக்கோடாகக் கொண்டு நல்ல போரிலே வீழ்ந்த நெடிய கழலணிந்த வீரர் செல்லும் உலகிற்குச் செல்லுக' என்று கூறி அந்தணர் வாளால் மார்பைப் பிளந்து அடக்கம் செய்யவும் மன்னர் உய்வை அடைந்தனர்'[2] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

### 2.3.1.6. வேளாப் பார்ப்பார்

அந்தணர்க்குரிய குடியில் பிறந்து அவர்க்குரிய தொழிலான வேதம் ஓதுதல், வேள்வி செய்தல் ஆகியவற்றைச் செய்யாது ஒழிந்தவர்கள் 'வேளாப் பார்ப்பார்' எனப்பட்டனர். தாழ்நிலை அடைந்த இவர்களை 'யாகம் பண்ணாத ஊர்ப்பார்ப்பான்'[3] என்றும் சுட்டுகின்றனர். இவர்கள் சங்கறுக்கும் தொழிலை மேற்கொண்டிருந்ததை, 'வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த வளை'[4] என அகநானூறு காட்டுகிறது.

### 2.3.2. புலவர்

சங்ககாலத்தில் புலவர்கள் மிகவும் மதிப்புமிக்கவர்களாகக் காணப்பட்டனர். அரசர்களுக்கு உற்ற துணையாக விளங்கினர். அரசர்கள் தவறுசெய்தபோது இடித்துக்கூறி எடுத்துரைத்தனர். அரசர்களும் அப்புலவர் சொல்லுக்கு அடிபணிந்து நடந்தனர். எனினும் இவர்கள் வறுமையில் வாடியவர்களாகவும் இருந்தனர்.

'நல்லியக்கோடனின் அரண்மனை வாயில் பொருநர், புலவர், அந்தணர் முதலியோர் புகுதற்பொருட்டு எப்பொழுதும் அடைக்கப்படாது திறந்தே இருந்தது'[5] என சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுவது அக்காலத்தில் புலவருக்கிருந்த மதிப்பைக் காட்டுகின்றது. புலவர்களுக்கு மன்னர்கள் கொடை வழங்குவதைக் கடமையாகக் கருதினர்,[6] கொடை வேண்டி வந்த புலவர்களை வரவேற்றனர்.[7]

புலவர்கள் வறுமையில் வாடிய நிலையினைப் புறநானூறு, "இலம்படு புலவர்"[8], "புலவர் வாடிய பசியராகி, பிறர் நாடு படு செலவினர் ஆயினர்"[9] எனக் குறிப்பது கொண்டு அறியமுடிகிறது. மலையிலிருந்து இழிந்து இறங்கி கடலை நோக்கி வரும் ஆறுகளைப்போல வறுமையில் வாடிய புலவர்கள் புரவலரை நோக்கி நின்றனர்.[10] இவ்வாறு வறுமையால் வாடிய புலவர்கள் இரத்தலுக்கு ஏந்திய கைகள் நிறையுமாறு மன்னர்கள் பொன்னை வாரி வழங்கினர்.[11]

அரசர்கள் புலவர்களால் பாடப்படுவதை மதிப்பு மிக்கதாகக் கருதினர்.[12] இதனை, "புலவர் புகழ்ந்த பொய்யா நல் இசை"[13], "புலவர் வாய்ச்சிறப்பு எய்தி"[14], "புலவர் புகழ்ந்த நார்இல் பெருமரம்"[15], "புலவர் புகழ் குறி கொண்ட பொலந்தார் அகலத்து"[16], "புலவர் பாடுதுறை முற்றிய, கொற்ற வேந்தே!"[17], "புலவர் ஏத்த, ஓங்கு புகழ் நிறீஇ"[18], "பாரி பாரி' என்று பல ஏத்தி, ஒருவற் புகழ்வர், செந் நாப் புலவர்"[19],

---

[1] கலி. 65
[2] புற. 93:9-10
[3] அகநானூறு மூலமும் உரையும், என்.சி.பி.எச்., தொகுதி -1, ப. 71
[4] அக. 24:1-2
[5] சிறு. 203-204
[6] பெரு. 450
[7] மது. 750
[8] புற. 155:6
[9] புற. 240:12-14
[10] புற. 42:19-21
[11] மலை. 576-577; பரி. 10:126-127
[12] புற. 30
[13] புற. 228:7
[14] கலி. 67:2
[15] அக. 273:15
[16] அக. 354:8-9
[17] புற. 21:10-11
[18] பதி. 20:14
[19] புற. 107:1-2

*"புலவர் பாடி ஆனாப் பண்பின் .... செரு வெஞ் சேஎய் பெரு விறல் நாடே!"*[1] எனவரும் சங்கப்பாடலடிகளில் குறிப்பிடப்படுவது நோக்கத்தக்கது.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை இளையவன் என்று எண்ணி எதிரிகள் இகழ்ந்தபோது, இகழ்ந்த அவ்வரசர்களைப் போரில் வென்று முரசினை கைக்கொள்ளாது போவேனேயானால் மாங்குடி மருதன் முதல்வனாக உலகத்தில் வாழும் நிலையுடையோர் பலராலும் பாராட்டப்பட்ட சிறப்பினையுடைய புலவர்கள் பலரும் என் நில எல்லையைப் பாடாது நீங்கட்டும் என வஞ்சினம் கூறியதை,

> "மாங்குடி மருதன் தலைவன் ஆக,
> உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின்
> புலவர் பாடாது வரைக, என் நிலவரை"[2]

என்ற புறநானூறுப் பாடல் குறிப்பிடுகிறது. இது, புலவரால் ஒரு நாடு புகழ்ந்து பாடப்படுவது எவ்வளவு மதிப்புமிக்கதாகக் கருதப்பட்டது என்பதைக் காட்டுகிறது. இதைப்போன்றே, "மாசு இல் பனுவற் புலவர் புகழ் புல நாவின் புனைந்த நன் கவிதை .....வையை வரவு"[3] என வையையாறும், "தொல்லிசை நுணங்குநுண் பனுவற் புலவன் பாடிய இனமழை தவழும் ஏழிற் குன்றத்து"[4] என மலையும் புலவர்களால் புகழ்ந்து பாடப்பட்டதை உயர்வாகக் கருதினர். புலவரால் புகழ்ந்து பாடும்படியாக போரிட்டு மடிவதும் போற்றுதலுக்குரியதாகக் கருதப்பட்டது.[5] புலவரால் பாடப்பெறும் புகழுடையோர், வானில் வலவனால் செலுத்தப்படாதியங்கும் விமானத்தினைத் தாம் செய்யும் நல்ல செயல்களை முடித்தபின் அடைவர் என நம்பினர்.[6]

பாரி மகளிர்க்குத் திருமணம் செய்விக்கவேண்டி இருங்கோவேளிடம் அழைத்துச் சென்ற கபிலர்,

> "இவர் யார்?' என்குவைஆயின், இவரே,
> ஊருடன் இரவலர்க்கு அருளி, தேருடன்
> முல்லைக்கு ஈத்த செல்லா நல் இசை,
> படு மணி யானை, பறம்பின் கோமான்
> நெடு மாப் பாரி மகளிர்; யானே
> தந்தை தோழன்; இவர் என் மகளிர்;
> அந்தணன், புலவன், கொண்டு வந்தனனே"[7]

என்ற இப்பாடலில், ஊர்கள் அனைத்தையும் இரவலர்க்குக் கொடுத்துவிட்டு, தான் ஏறிச்சென்ற தேரையும் முல்லைக் கொடிக்கு வழங்கிய பாரியின் மகள்களாகிய இவர்களைப் பாரியின் தோழனும், அந்தணனும் புலவனுமாகிய யான் உனக்குத்தர நீ இம்மளிரைக் கொள்வாயாக என்று குறிப்பிடுகிறார். இதில் அவர், தான் ஒரு அந்தணன் என்பதைவிடவும் தான் ஒரு புலவன், ஆகவே தன் சொல்லுக்கு மதிப்பளிக்கவேண்டும் என்ற அவரின் எண்ணத்தையும், சொல்லின் அழுத்தத்தையும் பார்க்கமுடிகிறது. இது புலவர்க்கு அக்காலத்திருந்த மதிப்பைப் புலப்படுத்துகிறது.

---

[1] புற. 120:18-21
[2] புற. 72:14-16
[3] பரி. 6:7-13
[4] அக. 345:5-7
[5] புற .282
[6] புற. 27:7-9
[7] புற. 201:1-7

*புலவர்கள் மிகப்பெரும் செல்வமுடைய வேந்தர் பக்கத்தே இருப்பினும் அவரிடத்து வண்மை இல்லையாயின் அச்செல்வத்தால் பயனொன்றும் இல்லை அதனால் கொடைத் தன்மையுடையவர்களையே நாடினர்,*

> *“அரசர் உழையராகவும், புரை தபு*
> *வள்ளியோர்ப் படர்குவர், புலவர்”*[1]

*புலவர்கள் உண்ண உணவும் இருக்க இடமும் இன்றி வறுமையுற்று வாழ வழியின்றி தம்மை ஆதரிப்பார் இல்லாத நிலையில் இருந்த போதும், தகுதி வாய்ந்தவர்களை மட்டுமே புகழ்ந்து பாடுவர். பாடுதற்குத் தகுதியற்ற மன்னரைப் பாடாதொழிந்தனர்.*

> *“பீடு இன்று பெருகிய திருவின்,*
> *பாடு இல், மன்னரைப் பாடன்மார், எமரே!”*[2]

***2.3.2.1. தன்மான உணர்ச்சி***

*பெருந்தலைச்சாத்தனார் என்ற புலவர், பரிசில் வழங்கும் புரவலர் செல்வளமிக்க மூவேந்தர்களே ஆயினும் உள்ளன்பின்றி கொடுப்பதை ஏற்கமாட்டோம் என்பதை, “முற்றிய திருவின் மூவர் ஆயினும் பெட்பின்று ஈதல் யாம் வேண்டலமே”*[3] *எனக் குறிப்பிடுகிறார்.*

*அதியமான் நெடுமான் அஞ்சியிடம் பரிசில் பெறக் கருதி வந்த பெருஞ்சித்திரனார், தன்னைக் காணாமல் அரசன் கொடுத்த பரிசை எற்க மறுத்து, பரிசு அளவில் சிறியதாயினும் அதை விரும்பி நேரில்வந்து வழங்கவேண்டும் என்கிறார்.*

> *“காணாது ஈத்த இப்பொருட்கு யான் ஓர்*
> *வாணிகப் பரிசிலன் அல்லென், பேணி*
> *தினை அனைத்து ஆயினும் இனிது-அவர்*
> *துணை அளவு அறிந்து நல்கினர் விடினே”*[4]

*அதியமான் நெடுமான் அஞ்சியைக் காணவந்த ஔவையார், தனக்குப் பரிசில் நீட்டிக்கப்படும் நிலையில், “நெடுமான் அஞ்சி தன்தரம் அறியமாட்டானா? இல்லை என் தரத்தை அறியமாட்டானா? அறிவும் புகழும் உடையவர்கள் இறந்து விட்டனர் என்பதற்காக இவ்வுலகம் வறுமைப்படுவதில்லை. ஆதலால் எம் இசைக் கருவிகளைத் தோளில் சுமந்தோம். மரத்தை வெட்டிக்கொள்ளும் தச்சர் மழுவோடு காட்டிற்குச் சென்றால் அங்குள்ள மரங்கள் எப்படி அவர்களுக்கு உடனே வேண்டுமாறு பயன்படுமோ அப்படி எந்திசைக்கண் சென்றாலும் அத்திசையில் சோறு கிடைக்கும்”*[5] *எனக்கூறி பரிசில் பெறாது திரும்புகிறார்.*

*மேற்கண்ட பெருந்தலைச்சாத்தனார், பெருஞ்சித்திரனார் மற்றும் ஔவையார் ஆகியோரின் பாடல்கள் புலவர்கள் தன்மான உணர்ச்சிமிக்கவர்களாக அக்காலத்து விளங்கியதைக் காட்டுகிறன.*

---

[1] *புற. 154:4-5*
[2] *புற. 375:20-21*
[3] *புற .205:1- 2*
[4] *புற208 .:9 - 6*
[5] *புற .206:8-13*

### 2.3.2.2. வரிசையறிதல்

மலையமான் திருமுடிக்காரியைப் பற்றி கபிலர் பாடிய பாடலில், ஏனைய புலவர்களைப்போல தன்னையும் கருதாது தன் தகுதியினை அறிந்து ஈதல் வேண்டும், "வரிசை அறிதலோ அரிதே; பெரிதும் ஈதல் எளிதே"[1] எனக்கூறி தன் தகுதிப்பாட்டை நிலைநிறுத்துகிறார்.

மேற்குறித்தவை மட்டுமின்றி ஔவையார், பிசிராந்தையார், கபிலர் முதலிய புலவர்கள் முறையே அதியமான், கோப்பெருஞ்சோழன், பாரி ஆகிய மன்னர்களோடு நட்பு கொண்டிருந்தமையும், போரைத் தவிர்க்க ஔவையார், அதியமான் பொருட்டுத் தொண்டைமானிடம் தூது சென்றது,[2] சேரன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை மோசிகீரனாருக்கு கவரி வீசியது[3] மற்றும், கோப்பெருஞ்சோழன் செல்வம் உள்ளபோது என்னைக் காண வராவிட்டாலும், துன்பம் வரும் சூழல் ஏற்படுமாயின் பிசிராந்தையார் என்னைக் காண வருவார்[4] எனக் கூறியது போன்ற நிகழ்வுகளும் அக்காலத்தில் புலவர்க்கு இருந்த மதிப்பைப் புலப்படுத்துகின்றன.

### 2.3.3. பாகர்

சங்கத் தொகை நூல்களில் தேர்ப் பாகர், யானைப் பாகர் என இரு நிலைப்பட்ட பாகர்களைக் காண முடிகின்றது. தேர்ப்பாகர்களை வலவன் என்ற பெயராலும் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

### 2.3.3.1. தேர்ப் பாகர்

சங்கப் பாடல்களில் வலவன்[5], பாகர்[6] என்ற இரு பெயர்களால் குறிப்பிடப்பெறும் தேர்ப்பாகர்கள் தங்கள் தலைவர்களின் காதல் பொருட்டாகவும், போர்த் தொழிலின் பொருட்டாகவும், பரத்தையருடனான தொடர்பின் பொருட்டாகவும் குதிரைகள் பூட்டிய தேரினைச் செலுத்துபவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

தச்சர் தேரினைச் செய்து முடித்த பின்னர் அத்தேர் எப்படி ஓடுகிறது என்பதைத் தோர்ப்பாகர்கள் சோதித்துப் பார்த்தனர்.[7] தேரினை ஆராய்ந்து செலுத்துவதில் வல்வர்களான இவர்கள் 'நூலறி வலவ'[8] (குதிரை உளம் அறியும் நூல்; வடமொழியில் அசுவ இருதய நூல் என்பர்; அசுவ இருதயமாவது, குதிரையின் மனத்தை அறிந்து அதனைத் தன் குறிப்பின்படி இயங்குமாறு செய்யவல்ல மந்திரம் என்பர்[9])என விளிக்கப்பட்டது கொண்டு அறியலாம். இவர்கள் குதிரைகளின் உளம் அறிந்து தேரினைச் செலுத்தும் பணியினை மேற்கொண்டதோடு, தலைவனின் ஏவலர்களாவும் பணியாற்றினர்.

இப்பாகர்கள் தலைவனின் பரத்தைமையின் பொருட்டுப் பரத்தையர்களைத் தலைவன் இல்லத்திற்கு அழைத்துவருதல், பரத்தையர் சேரிக்குத் தலைவனை அழைத்துச் செல்லுதல், தலைவன் இருக்கும் பரத்தையர் இல்லத்தைத் தேடியலைதல்[10] என்பன பாகனின் பணிகளாக இருந்தன.

---

[1] புற. 121:3-4
[2] புற. 95
[3] புற. 50
[4] புற .215:7-9
[5] நற். 11:8
[6] நற். 19:6
[7] சிறு. 257
[8] அக. 114:8
[9] அகநானூறு மூலமும் உரையும், என்.சி.பி.எச்., ப. 351.
[10] கலி. 68:16-17

இவைமட்டுமின்றி தலைவனின் பரத்தைமைத் தொடர்பால், தலைவனுக்கும் அவன் மனைவிக்கும் இடையில் ஊடலைத் தீர்க்கும் வாயிலாகவும் செயல்பட்டனர். இதனை, “உன் ஒருத்தியைத் தவிர அவனுக்கு உரிய பெண்டிர் பிறர் இல்லை; இது தனக்குத் தெய்வமாக விளங்கும் தேரின் மீது ஆணை”[1] எனப் பாகன் ஒருவன் சூளுரைப்பதுகொண்டு தெளியலாம்.

மேற்குறித்த சான்றுகளை நோக்கும்போது, பாகர்கள் தலைவனின் திருமணத்திற்கு முன்பான களவுக் காலத்திலும், போரின் பொருட்டும், திருமணத்திற்கு பிறகான வாழ்க்கையில் தலைவனின் பரத்தையர் தொடர்ப்புக்கு ஏவல் செய்பவர்களாகவும், தலைவனின் பொருட்டாக ஊடல் தீர்க்கும் வாயிலாகவும் செயல்பட்டுள்ளனர். இது சங்க காலச் சமூகத்தில் பாகர்கள் ஒரு குறிப்பிட்ட பொருள் வளம் மிக்க தலைவர்களுக்கு ஏவலர்களாகப் பணியாற்றினர் என்பதை உணர்த்துகிறது.

### *2.3.3.2. யானைப் பாகர்*

சங்கப் பாக்களில் பாகர், பாகன்[2], காழோர்[3], கோலோர்[4] என்ற சொற்களால் யானைப் பாகர் குறிப்பிடப்பட்டுள்ளனர். சங்க காலத்தில் நடைபெற்ற போர்களில் யானைப் படையும், குதிரைப்படையும் மிக முக்கியமான பங்கு வகித்தன. அத்தகைய போரில் பயன்படுத்தப்பட்ட யானைகள் அனைத்தும் முறையாகப் பயிற்சியளிக்கப்பட்டு பராமரிக்கப்பட்டவையாகவே இருந்திருக்க வாய்ப்புண்டு. இதனை எண்ணிப் பார்க்கின்றபோது சங்கத் தொகை நூல் காட்டும் சமூகத்தில் பாகர்கள் எத்தகைய முக்கியத்துவத்தைப் பெற்றிருக்கக்கூடும் என்பதை ஊகிக்கலாம்.

யானைப் பாகர் தாம் ஏவிய கட்டளையைச் செய்வதற்கு ஏற்ப யானைகளைப் பழக்கப்படுத்தும் தொழிலை மேற்கொண்டிருந்தனர்.[5] அவற்றுக்கு நெய்வார்த்து மிதித்த கவளங்களை உண்பித்தல், கால்களைச் சங்கிலியால் பிணித்து, கட்டுத் தறியில் கட்டிவைத்து அவற்றைப் பராமரித்தல் ஆகியன இவர்களின் பணிகளாக இருந்தன.[6]

மதம்பட்ட யானைகள் பாகரின் ஆணைக்குக் கட்டுப்படாது பாகரைக் கொன்று வீசி எறிதலும் உண்டு.[7] எனவே அவர்களின் வாழ்க்கை சினம் கொண்ட யானைகள் அவர்களைக் கொல்லாது விட்டுவைத்திருப்பதைப் பொருத்தே அமைந்திருந்தது[8] என்று கூறும் அளவிற்குப் பாகர்களின் தொழில் சவாலுக்குரியதாக விளங்கியது. தன்னால் பழக்கப்பட்ட யானைகளை இழந்தபோது பாகர்கள் அதற்காக வருந்தினர்.[9]

### *2.3.4. புலையன்*

புலையன் என்பவன் போர்களத்தில் துடி, தண்ணுமை எனப்பட்ட தோல் கருவியை ஒலிக்கும் தொழிலை மேற்கொண்டிருந்ததை, “புலையன் பெருந்துடி கறங்கப் பிற புலம் புக்கு”[10], “புலையன் பேழ் வாய்த் தண்ணுமை இடம் தொட்டன்ன, அருவி இழிதரும் பெரு வரை நாடன்”[11], “துடி எறியும் புலைய!”[12]

---

[1] கலி. 71:10.
[2] புற. 220:2; அக. 336:13
[3] பெரு. 393
[4] மது. 381
[5] மலை. 324-327
[6] பெரு. 393-396; மது. 658-659
[7] மது. 380-383
[8] அக. 336: 13-14
[9] புற. 220:1-2
[10] நற். 77:1-2
[11] நற். 347:5-6
[12] புற. 287:1

எனவரும் சங்கப் பாடலடிகள் உணர்த்துகின்றன. இவை மட்டுமேயன்றி சுடுகாட்டில் ஈமச் சடங்குகளைச் செய்து பிணத்தைச் சுடும் தொழிலையும் மேற்கொண்டதை, “கண்டார் அஞ்சத்தக்க, கேடு பொருந்தியிருத்தலால் பாழிடமாகிய சுடுகாட்டில் கள்ளி ஓங்கி வளர்ந்துள்ள களர்நிலத்தின் பக்கத்தே, பாடையை நிறுத்திய பின்னர், பிணத்தைப் புல்மீது கிடத்தி, கள்ளுடனே சிலசோறாகிய உணவைப் புலையன் படைப்பான். புலையன் ஏவலுக்குப் புல்மேல் கிடத்திய பிணத்தைச் சுடலைத் தீயில் சுட்டெறித்தனர்”[1] என்ற புறநானூறுப் பாடல் உணர்த்துகிறது.

பாணன் உள்ளிட்ட சிலர், தலைவனுக்குத் தூண்டிலாக இருந்து, பரத்தையர் தொடர்பினை ஏற்படுத்திக் கொடுத்தனர் அதனால் தான் பாணனைப் புலையன் என்று சுட்டினர். பாகனும், பாணனும் சேரிப்பரத்தையர் தொடர்புக்குத் தலைவனோடு துணை போகக் கூடியவர்களாக இருந்ததை, பாண் தலை இட்ட பலவல் புலையனை,[2] ‘காலின் பிரியாக் கவிகைப் புலையன் தன்யாழின் இகுத்த செவி சாய்த்து’[3] என்ற கலித்தொகைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மேற்குறித்த கருத்துக்களைக்கொண்டு நோக்கும்போது ஒழுக்கத்திற் குன்றியவர்களைக் குறித்தே புலையர், புலையன் என்று சுட்டப்பட்டதாகக் கருதலாம். இக்காரணத்தினாலேயே பாணனையும் புலையன் என்று குறிப்பிட்டிருக்கலாம்.

மேற்குறித்த சான்றுகளைக்கொண்டு புலையன், இழிசினன், இழிபிறப்பாளன், உயர்ந்தோன் எனச் சங்க காலத்திலேயே செய்யும் தொழிலால் இழிவும் உயர்வும் கற்பிக்கும் பார்வை வந்துவிட்டதையும், செய்த தொழிலின் புலைத்தன்மை காரணமாகவே அவர்கள் இழிந்தவர்களாகக் கருதும் எண்ணம் ஏற்பட்டுவிட்டதையும் அனுமானம் செய்ய முடிகிறது. இதன் அடிப்படையில் சுத்தமில்லாத் தொழில் புரிந்த சிலரே சங்க காலச் சமூகத்தில் புலையர், புலைத்தியர் என்ற இழிநிலைக்குத் தள்ளப்பட்டனர் எனக் கருதலாம்.

தொன்மைச் சமூகத்தில் புலையர்கள் எனப்பட்டோர் இழிவாகக் கருதப்பட்ட நிலை குறித்து, “சங்க காலத்தில், குறிப்பாக வைதீகத்தாக்கம் பரவிய காலத்தில் தோன்றிய கலித்தொகைப் பாடல்களில் – கலித்தொகை காலத்தில், ‘புலையர்’ என்றொரு பிரிவினர் சமூகத்தில் அடிமைகளைப் போல வாழ்ந்தனர் என்பதை ‘புலையர் போலப் புன்கண் நோக்கித் தொழலும் தொழுதான்...’(கலி. 55) என்ற விளக்கத்தால் உய்த்தறியலாம். புலையர்கள், துன்பம் கொள்ளுமாறு பார்த்துக் கும்பிட்டார்கள் என்பதிலிருந்து அவர்களுக்குச் சமூகத்தில் இருந்த இழிவான நிலையை அனுமானிக்கலாம்”[4] என்பார் ராஜ் கௌதமன்.

### 2.3.5. துடியன்

போர்க்களத்தில் துடியடித்து வேகம் ஊட்டுதல், அறிவிப்புச் செய்தல், பகை வரவைப் பார்த்துச் சொல்லுதல் ஆகிய தொழிலைச் செய்பவனாகத் துடியன் சங்கப் பாடல்களில் சுட்டப்படுகிறான். இவர்களைக் குறித்து “போர்க்களத்திலும், பாசறையிலும், வேடர்களின் சீறூர்களிலும் போர், வேட்டை, ஆநிரை கவர்தல் ஆகிய வீரர் – வேடர் தொழில்கள் நடக்கும் இடங்களிலும் அவர்களை வேகப்படுத்தி ஊக்குவிக்க தனது துடி, தண்ணுமையைப் படுவேகமாக அடித்து

---

[1] புற. 360:15-20
[2] கலி. 85:22
[3] கலி. 95:9-11
[4] ராஜ் கௌதமன்., பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப. 163.

*முழங்குவது, அவர்களுக்குச் செய்தி அறிவிப்பது, ஏவல் செய்வது துடியன் பணியாக இருந்தது"[1] எனப் பெரும்பாணாற்றுப்படை அடிகளை[2] ஆதாரமாகக் கொண்டு குறிப்பிடுவார் ராஜ் கௌதமன்.*

*துடியன்(இழிசினன்) வாயை மடித்தபடி, பாசறையில் அடையாளப் பூவைப் பெறுமாறு வீரர்களுக்கு அறிவித்துத் துடி அடித்ததை, "பாசறை பூக்கோள் இன்று என்று அறையும் மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே?"[3] என்ற புறப்பாடல் காட்டுகிறது.*

*சேனைத் தலைவன் தன் படைவீரர்கள் கிளர்ந்தெழுந்து போர்புரியும் வகையில் அவர்களிடையே எழுச்சி உரையாற்றி போருக்குத் துடித்து எழுவதற்காகப் பாடப்பட்ட புறப்பாடலில், பகைவரின் படை வரவினைப் பார்த்துக் கூறுமாறு துடியன் விளிக்கப்பட்டதை, "துடி எறியும் புலைய! எறி கோல் கொள்ளும் இழிசின! ...வம்ப வேந்தன் தானை இம்பர் நின்றும் காண்டிரோ, வரவே!"[4] எனக் குறிப்பதுகொண்டு அறியமுடிகிறது. அதேபோல் படையெடுத்துப் போகும்போது துடியடித்து வீரர்களிடையே வேகத்தை உண்டாக்கியதை, "புலையன் பெருந் துடி கறங்கப் பிற புலம் புக்கு அவர் அருங் குறும்பு எருக்கி அயா உயிர்த்தா அங்கு"[5] என்ற நற்றிணைப் பாடலடி உணர்த்துகிறது. மேலும், துடியன் வேடர்களை வேட்டைக்கு உற்சாகப்படுத்துதற்காகத் துடி அடித்தல்,[6] வேடர்கள் ஆநிரையைக் கவருவதற்குப் புறப்படும் செய்தியைத் துடி எறிந்து அறிவித்தல்,[7] கழனியில் நெல் அரிவோரிடம் களைப்புத் தோன்றாதிருப்பதற்காகத் தண்ணுமை முழக்குதல்[8] போன்ற பணிகளையும் மேற்கொண்டு வந்துள்ளனர்.*

*இவர்கள் சங்க காலச் சமூகத்தில் எத்தகைய சமூக மதிப்பினைப் பெற்றிருந்தனர் என்பதை, "இனக்குழுச் சமூக வாழ்வில் துடியனின் செயல்பாடு இழிந்ததாகவோ, புலைத்தன்மை கொண்டதாகவோ இருந்திருக்க வாய்ப்பில்லை. வேளாண் சமூக அமைப்பில், மன்னராட்சி முறையில் துடியனின் செயல் புலைத்தன்மை கொண்டதாகவும் அதனால் அவன் புலையனாகவும், இழிந்தவனாகவும், இழிபிறப்பாளனாகவும் கருதப்பட்டிருக்கலாம். துடியன் தான் செய்த தொழில் காரணமாக இவ்வாறு இழித்துரைக்கப்பட்டான். தனிநபர் என்ற அளவில் இந்த இழிவு கற்பிக்கப்பட்டதே தவிர, துடியர் என்ற ஒரு குடி முழுவதும் பிறப்பால், பிறப்பால் அமைந்த தொழிலால் தீட்டு, புலை கற்பித்தது சாதியத்தின் பாற்பட்டதாகும். அத்தகையதோர் நிலைமை சங்க காலத்தில் காணப்படவில்லை. மேலும் பழைய இனக்குழுச் சமூக முறைமாறி உடைமைச் சமூக முறை வந்தபின், முன்னர்க் குழுச்சமூகத்திற்குச் சடங்கு ரீதியாகத் தேவைப்பட்டிருந்த துடியனது பணி மன்னராட்சி சமூகத்திற்குத் தேவைப்படாமல் புலைத்தொழிலாக மாறியது"[9] என ராஜ் கௌதமன் குறிப்பிடுவது கொண்டு அறியலாம்.*

*மேலும், "'துடியன்' இழிசினன் எனப்பட்டது இழிந்தவன் என்ற பொருளில் இல்லை. துடியில் கோல்கொண்டு இழுசுபவன்(அடிப்பவன்) இழிசினன் எனப்பட்டான் என்கிறார். 'இழிபிறப்பாளன்' என்றால் இழிந்த பிறப்பில்*

---

*[1] ராஜ் கௌதமன் பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப. 168*
*[2] பெரு. 141-146*
*[3] புற. 289:8-10*
*[4] புற. 287*
*[5] நற். 77:1-3*
*[6] புற. 170; அக. 89*
*[7] புற. 269*
*[8] அக. 40:12-14*
*[9] ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப. 169*

பிறந்தவனேயன்றி சாதியம் குறிப்பிடுகின்ற தீண்டத்தகாதவன் என்று பொருள் இல்லை என்கிறார். புலையன், புலைத்தி என்போர் தீண்டத்தகாதார் இல்லை; அது பிற்கால நிகழ்வு; சங்க காலத்தில் சுத்தமற்ற பணிகளைச் செய்த சிலர் புலையர், புலைத்தி எனப்பட்டார்கள் என்பது ஹனுமந்தராவ் கருத்து''[1] எனக் குறிப்பிடுவதும் இங்கு கவனிக்கத்தக்கது.

### 2.3.6. காவலர்

சங்கப் பாடல்களில் காவலர் என்னும் சொல் தினைப்புனக் காவலர், ஊர்க் காவலர், வயல் காவலர், குளக் காவலர், அரசன், வேந்தன் என்ற பல்வேறு பொருண்மைகளில் பயின்று வந்துள்ளது.

#### 2.3.6.1. தினைப்புனக் காவலர்

தினைக் கதிர்களை உண்ணவரும் யானையை விரட்டுதற்காக இரவில் குறிஞ்சிநிலக் கானவர் காவல் காத்து நிற்பர். இவ்வாறு காவல் காப்பவர்களை 'ஏனல் காவலர்'[2], 'சிறுதினைக் காவலன்'[3] என்று சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன. இவர்கள் தீப்பந்தம், கவண், வில் போன்றவற்றைப் பயன்படுத்தி யானை முதலிய விலங்குகளை விரட்டினர்.[4] பன்றிகளை விரட்ட அவை வரும் காலம் பார்த்து ஊது கொம்பினை ஊதி ஒலி எழுப்பினர்.[5]

#### 2.3.6.2. ஊர்க் காவலர்

பண்டைக் காலத்தில் மக்கள் வாழ்ந்த ஊர்களும் அவர்களின் மனைகளும் காவலர்களால் பாதுகாக்கப்பட்டன. இக்காவல் பணியை மேற்கொண்டோர் இரவில் உறங்காது காவல் காத்தனர். இதனை, ''துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்''[6], ''தந்தை அருங்கடிக் காவலர்''[7], ''நல்மனை நெடுநகர்க் காவலர்''[8], ''அருங்கடி காவலர்''[9], ''காவலர் கடுகினும்''[10], ''காவலர் அறிதல் ஓம்பி''[11], ''காவலர் கணக்குஆய் வகையின் வருந்தி''[12] எனவரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

#### 2.3.6.3. வயல் காவலர்

பழங்காலத்தில் விளைந்த வயல்களை விலங்குகள் பாழ்படுத்தி விடாமல் பாதுகாக்க அவற்றைக் காவல் காத்தனர். இதனை, 'நெல்லின் இளங்கதிரை முதிய பசு தின்றது; வயலைக் காவல் செய்வார், அதனைக் கண்டு அஞ்சி பாகற் கொடியோடு பகன்றைக் கொடியையும் சேர்த்து அவற்றால் காஞ்சி மரத்தில் அப்பசுவைக் கட்டினர்'[13] என்றும், அத்தகைய வயலைக் காவல் காக்கும் உழவர் வளைந்த நத்தையை உடைத்துத் தின்பர்[14] என்றும் அகப்பாக்கள் குறிக்கின்றன.

#### 2.3.6.4. குளக் காவலர்

குளத்தைக் காவல் செய்வதற்குக் காவலர் இருந்தனர். இத்தகைய காவலர் பெருமழை பெய்த காலங்களில் நள்ளிரவையும் பொருட்படுத்தாது கரையினைக் காவல் காத்தனர்.[15]

---

[1] ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப. 166
[2] குறு. 54:2-3
[3] ஐங். 230:2
[4] கலி. 52:14 நற். 13
[5] அக. 94:9-10
[6] அக. 122:6
[7] அக. 2:13-14
[8] அக. 22:16
[9] அக. 162:7
[10] குறி. 240
[11] அக .102:12
[12] குறு. 261:6-7
[13] அக. 156:3-5
[14] நற். 280:7
[15] அக. 252

### 2.3.7. கள்வர்

கள்வர்கள் பழங்காலத்திலும் இருந்துள்ளனர். இதற்குச் சங்க காலம் விதிவிலக்கன்று. இவர்களைப் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் நேரடியாகக் காணப்படவில்லை எனினும் பல்வேறு இடங்களில் கள்வர் குறித்தான உவமைகளின் வாயிலாக அவர்களைக் குறித்து அறிய முடிகிறது.

> *நீர் நிலையில் வாளைமீனை உண்ணும் பொருட்டுச் செல்லும் நாரை, தான் அடியிட்டு நடந்து செல்லும் ஓசையை அம்மீன் அறிந்து கொள்ளும் என அஞ்சிக்* ***காவலையுடைய வீட்டிற்புகும் கள்வனைப் போலத் தளர்ந்த நடையினதாய் மெல்லமெல்ல நடந்து செல்லும்***.[1]

> *பரத்தையின் இல்லத்திலிருந்த தலைவன் தனக்கு மைந்தன் பிறந்தமை அறிந்து மகிழ்ந்து* ***இடையாமத்து இருளிலே கள்வனைப்போல வந்துற்றான்.***[2]

> ***சமயம் பார்த்து உடைமையைக் கவரும் கள்வர்*** *போலத் தலைவியின் உடன்பாடின்றித் தலைவனைப் பாணர் பரத்தையர் சேரிக்குக் கவர்ந்து செல்வர்.*[3]

> *தலைவன்,* ***கள்வன் தான் குறித்த பொருளையே நோக்காது நோக்குவான்*** *போல தலைவியை நோக்கினான்.*[4]

> *மதிலை உடைய ஊரில் காவற்காரர்கள், கள்வரைக் கண்ணால் காணாதிருக்கவும், அவரால் வரும் குற்றத்தை எண்ணி, கள்வரைக் கண்டோம் என்று கூறுவர்.*[5]

> ***கள்வனானவன் மறைந்திருக்கக் கூடியவனோ****?*[6]

> ***ஓட நினைக்கும் கள்வன்*** *என்று கருதி எல்லோரும் கேட்கும்படி ஒய்யெனக் கூச்சலிட்டுப் பிறரை எல்லாம் அழைப்பேன்.*[7]

> *நின் காலிற் கிடக்கும் சிலம்புகளையும் என்(பரத்தை) பொருட்டாய்க்* ***கழற்றுதலையும் நாளை செய்யவல்லன்.*** *ஆதலால் உன் கணவனே கள்வன்.*[8]
> *யாரும் இல்லை; தானே* ***கள்வன் தான்அது பொய்ப்பின்****, யான்எவன் செய்கோ?*[9]

> *அன்னை போல இனிய சொற்களைக் கூறி அன்புசெய்தான்; இப்போது* ***கள்வரைப்போலக் கொடியவனாக உள்ளான்***.[10]

---
[1] அக. 276:1-4
[2] நற். 40
[3] குறு. 127
[4] கலி. 61:26
[5] கலி. 81:25-26
[6] கலி. 144:29
[7] கலி. 147:51-52
[8] பரி. 20:79-83
[9] குறு. 25:1-2
[10] நற். 28:1-4

மேற்குறித்த செய்திகளின் வாயிலாக, கள்வர்கள் பிறர் அரியாதவாறு மெல்ல நடந்து களவாடும் வீட்டினுள் செல்வர், இருளில் வருவர், நோக்காததைப் போல ஒன்றை நோக்குவர், மறைந்து இருப்பர், சிக்கியபோது ஓட நினைப்பர், நாள்தோறும் திருடுவர், உண்மையை ஒப்புக்கொள்ள மறுப்பர், சமயம் பார்த்து கொள்ளை அடிப்பர், கொடியவர் என அவர்களின் பண்புகளை அறிய முடிகிறது.

### 2.3.8. மழவர்

மழவன் என்ற சொல்லுக்கு அகராதிகள் “இளைஞன்; வீரன்; மழநாட்டான்”[1] என்று பொருளுரைக்கின்றன. மழவர் என்போர் ஒருவகைப் படைவீரர். இவர்கள், ‘கழற்கால் மறவர்’[2], ‘பெருந்தோள் மழவர்’[3] என மதுரைக்காஞ்சியில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்களை மழநாட்டார் என்றும் சில பாடல்கள்(அக.1, 91) குறிப்பிடுகின்றன. இவர்கள் களவுத் தொழில் செய்ததை, “கடுங்கண் மழவர் களவு உழவு எழுந்த நெடுங் கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர்” எனக் குறிப்பதுகொண்டு அறியமுடிகிறது. வில்லாற்றல் பொருந்திய இவர்கள் பாலைநிலப்பகுதியில் வாழ்ந்தவர் என்பதை, “கல்லா மழவர் வில்லிடை விலங்கிய துன் அருங் கவலை அருஞ் சுரம்”[4] என நற்றிணைப்பாடல் சுட்டுகிறது.

இவர்கள் சுருண்ட தலைமயிரினையும் சிவந்த கண்ணினையும் உடையவர்கள், இவர்கள் இருமலை அடக்கிக்கொள்வதற்காகப் புற்றுமண்ணை வாயில் அடக்கிக்கொள்வர். வில்லின் துணையோடு பகைவரின் கன்றுகளுடன் கூடிய ஆனிரைகளைக் கவர்ந்து சென்றனர்.[5] மயில் இறகால் தொடுக்கப்பெற்ற மாலையை அணிந்த இவர்கள், இளைய பசுவினைக் கொன்று அதன் ஊனைத் தின்பர்.[6]

பகைவரின் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துவந்த இவர்கள் தம்மோடு போரிட்ட கரந்தை வீரர்களை வாள்கொண்டும் அம்பு தொடுத்தும் நெடுந்தொலைவு விரட்டியபின்னர், தெய்வம் வாழும் பருத்த அடிமரத்தைக்கொண்ட வேப்பமரத்தடியில், கவர்ந்துவந்த பசுக்களுள் கொழுத்த பசு ஒன்றை கொன்று அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்துப் பலியிட்டு, அதன் புலாலை சமைத்து உண்டனர்.[7] இது தமது வெற்றிக்குக் காரணமான தெய்வம் அம்மரத்தில் உறைவதான நம்பிக்கையில் அவர்கள் மேற்கொண்ட வழிபாடு என்பதை அறியமுடிகிறது.

உப்பு வணிகர் கூட்டம் விட்டொழிந்த கல்அடுப்பில், வலிய வில்லையுடைய மழவர், ஊனைப் புழுக்கி உண்பர்.[8] பாலைவழிச் செல்வார்க்கும் வணிகர்க்கும் பெருந்துன்பம் விளைத்தனர்.[9] இவர்கள் ஆறலைத்தல் தொழிலில் ஈடுபட்டிருந்தனர்.[10]

### 2.3.9. மறவர்

சங்க இலக்கியத்தில் ‘வீரம்’, ‘வீரன்’ என்ற சொற்கள் மிகுதியும் பயின்றுவரவில்லை. ‘வீரர்’ என்ற சொல் ஓர் இடத்தில் மட்டும் பயின்று வந்துள்ளது.[11] சங்க இலக்கியத்தில் ‘வீரம்’ என்ற சொல்லுக்கு இணையாக ‘மறம்’

---

[1] http://agarathi.com/word/மழவன்
[2] மது. 395
[3] மது. 687
[4] நற். 387:4-5
[5] அக. 101:4-11, 129, 131
[6] அக. 249:12-13
[7] அக. 309:1-6
[8] அக. 119
[9] அக. 121, 127.
[10] அக. 337:5-13
[11] அக. 36:23

என்ற சொல்லையும், வீரர்களைக் குறிக்க 'மறவர்' என்ற சொல்லையும் புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி, மறவன் என்ற சொல்லிற்குப் "பாலை நிலத்தவன்; மலைவேடன்; மறக்குடியான்; வீரன்; படைத்தலைவன்; கொடியோன்"[1] என்று பொருளுரைக்கின்றது.

### 2.3.9.1. போர் வீரன்

அரசர்களும், படைத்தலைவர்களும் வீரர்களின் துணையோடே போர்கள் பலவற்றை நிகழ்த்தியுள்ளனர். போரில் இவர்களின் வீரம் போற்றப்பட்டது. வேல், வாள், வில் போன்றன இவர்களின் போர்க் கருவிகளாக இருந்தன.

இவர்களின் இயல்பைப் பதிற்றுப்பத்து, 'பகைவர்க்குப் புறங்கொடுத்து ஓடாத கொள்கையினையும் தாங்கள் செய்த அரிய வீரச் செயல்கள் பொறிக்கப்பட்ட வீரக் கழலையணிந்த கால்களை உடையவரும் பெரிய போரிலே பகைவரைச் சிதைத்தவரும் மேலும் போர் செய்தலையே விரும்புபவருமாகிய வீரர்களின் ஆரவாரம் இடிபோல நிலத்தையே அதிரச்செய்தது[2] எனக் குறிப்பிடுகிறது.

வீரர்கள் போர் மேற்கொண்டு செல்லும்போது நற்சகுனம் பார்ப்பது மரபு. அப்படிச் சகுனம் பார்த்தபோது பறவைகள் தீக்குறிகளைச் செய்தாலும் நாங்கள் மடியமாட்டோம் என்று வீரர் தம்முடைய பருத்த தோளினைத் தட்டுவர்[3] எனப் புறநானூறு இவர்களின் வீரத்தைப் புலப்படுத்துகின்றது.

இவர்கள் நெடுமொழிகூறிப் போருக்குச் செல்பவராகவும், அஞ்சா இயல்புடையவர்களாகவும், மனவலிமை மிகுந்தவர்களாகவும் இருந்ததை, "நீள்மொழி மறவர்"[4], "அஞ்சா மறவர்"[5], "நெஞ்சு உடைய புகன் மறவர்"[6] எனப் புறநானூறு சுட்டுகிறது. இவர்கள், முகத்திலும் மார்பிலும் வாளின் வாய் வெட்டுதலால் உண்டான தழும்பினை உடையவர்களாக இருந்ததை, "வாள் முகம் பொறித்த மாண் வரி யாக்கையர்"[7] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.

வீரர்கள் போரில் புறங்கொடுத்து ஓடாத மனவுறுதியினைக் கொண்டவர்களாக இருந்தனர்.[8] எனினும், போரில் புறங்கொடுத்துத் தோற்றபோது பகை நாட்டவரால் சிறைப்படுத்தப்பெற்றனர்.[9] வீரக்கழலணிந்த போரில் விருப்பம் கொண்ட இவர்களின் உதவியோடே பகை நாட்டின் மீது அரசர்கள் போர்தொடுத்துச் சென்றனர்.[10] மறக்குடி மகளை மணம் முடிக்க விரும்பிவந்த வேந்தன் மேற்கொண்ட போரிலும் இவர்கள் போர் செய்ததை புறநானூற்றுப்பாடல் விளக்குகிறது.[11] ஆற்றல் வாய்ந்த வீரர்கள் மன்னர்களால் போற்றப்பட்டனர்.[12]

### 2.3.9.2. வீரனைப் போற்றும் வீரத்தாய்மார்

பண்டைக் காலத்தில் வீரம் எந்த அளவுக்குப் போற்றப்பட்டது என்பதை, மார்பில் வேல் பாய்ந்து இறந்துகிடப்பதைக் கண்டு ஈன்ற பொழுதினும் பெரிதும் உவந்த தாய்,[13] முதல்நாள் போரில் தந்தையை இழந்து, நேற்றுநடத்த போரில் கணவனையும் இழந்து, இன்றும் போர்ப்பறைகேட்டு தன் குடிக்கு வேறு மகன் இல்லாத சூழலிலும் தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்பும் தாய்,[14] தன்

[1] செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, ஏழாம் மடலம், முதற்பாகம், ப. 330
[2] பதி. 30:41
[3] புற. 68:11-13
[4] புற. 369:3
[5] புற. 373:25
[6] புற. 55:8
[7] பதி. 58:3
[8] பதி. 57:1
[9] பதி. 37:9
[10] புற. 31:9-11 பதி. 22:20
[11] புற. 336,345
[12] பதி. 69:8; மது. 728-729
[13] புற. 278
[14] புற. 279

மன்னனுக்காக உயிரைக் கொடுக்கும் வாய்ப்பு தன் மகனுக்கு கிடைக்கவில்லையே என ஏங்கும் தாய்.[1] எனப் புறநானூற்றுப் பாடல்கள் பலவும் வீரத்தாய்மார் குறித்துப் பேசுகின்றன. இத்தகைய வீரத்தாய்மார்களே மேற்குறித்த மறவர்கள் உருவாகக் காரணமாயினர்.

### 2.3.9.3. கோட்டை காவல்

மறவர்கள் கோட்டைக் காவல் பணியையும் மேற்கொண்டதை, ''நன்னனைப் பொருந்தாத பகைவருடைய, கரிய தலைகள் துணியவும், அவற்றில் பருந்துகள் படியவும், போர்புரிந்து வெற்றிகொள்ளும் ஒள்ளிய வாளினையுடைய மறவர்கள் தம்முடைய கருங்காம்புடைய வேல்களைச் சாத்தி வைத்து விழிப்புடன் கோபுரவாயிலில் காவல்செய்து நிற்பர்''[2] என மலைபடுகடாம் குறிப்பிடுகிறது.

### 2.3.9.4. நடுகல்

விற்படை கொண்டு போரிட்டுப் போரில் இறந்த மறவர்க்கும், புறமுதுகுகாட்டி ஓடுதல் இழுக்கெனக் கருதி போர்க்களத்தில் பகைவரை எதிர்த்து நின்று போரிட்டு இறந்த மறவர்க்கும் நடுகற்கள் நடப்பெற்றுச் சிறப்பிக்கப்பெற்றனர்.[3] இவ்வாறு போரில் மாண்ட மறவர்கள், சொர்க்கம் செல்வர் என்று நம்பினர். இதனை, 'தமது வீரமே பற்றுக் கோடாகக் கொண்டு நல்ல போரிலே வீழ்ந்த நெடிய கழலணிந்த வீரர் செல்லும் உலகிற்குச் செல்லுக'[4] எனப் புறநானூறு சுட்டுகிறது.

### 2.3.9.5. படைத்தலைவன்

படைத்தலைவர்களும் மறவர் என்றே குறிப்பிடப்பட்டுள்ளனர். சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்கு முறையே பிட்டன்,[5] பழையன்,[6] பண்ணி[7] ஆகிய படைத்தலைவர்கள் போர்களின்போது படை உதவி செய்துள்ளனர். இவர்கள் மிகுந்த வீரமும் வள்ளல் தன்மையும் வாய்ந்தவர்களாக இருந்தனர். இதனை, 'சேரன் படைத்தலைவனான, பிட்டன், பரிசில் விருப்புடன் வாழ்வார்க்கு நல்ல அணிகலன்களை அளிப்பான்'[8], 'சோழமன்னர் கொங்கரை அடக்கும் பொருட்டு வெண்மையான கோட்டினை உடைய யானைகளைக் கொண்ட 'போஒர்' என்னும் ஊரின் தலைவனாகிய பழையன் என்னும் படைத்தலைவனிடம் தப்பாத வேற்படையைப் பெற்று வைத்திருந்தான்'[9], 'கோடை மலைக்குத் தலைவனான பண்ணி, வரையறையின்றி இரவலர்களுக்கு யானைகளை வழங்குபவன், கூர்மையான அம்பினை உடையவன், பாண்டிய மன்னனின்படைத்தலைவன்'[10] எனவரும் பாடற் கருத்துக்கள் விளக்கும்.

### 2.3.10. வேலன்

வேலன், தொல்சமய வழிபாட்டில் வழிபடும் பொருளுக்கும் வழிபடுபவனுக்குமிடையில் ஓர் இணைப்புப்பாலமாக இருந்து சடங்குகளை நிகழ்த்துபவனாக இயங்கினான். இவன் முருக பூசை செய்வோனாகையாலும் முருகனுக்குரிய வேலைக் கையில் கொண்டு வெறியாட்டுச் சடங்கு

---

[1] புற. 286
[2] மலை. 488-490
[3] ஐங். 352:1; அக. 387:13-20; மலை. 386-389
[4] புற. 93:9-10
[5] அக. 77
[6] அக. 326
[7] அக. 13
[8] அக. 143:10
[9] நற். 10:6-8
[10] அக. 13:9-11

நிகழ்த்துவதாலும் வேலன் என்று அழைக்கப்பட்டான். இவனைப் படிமத்தான் என்றும் குறிப்பிடுவர்.

வேலன் ஆடை சுற்றப்பட்ட பெரிய குடுமியையும், சிறிய பை தொங்கவிடப்பட்ட பல தலையையுடைய வளைந்த கோலினையும் உடையவனாகக் காணப்பட்டான்.[1] வெறியாட்டுச் சடங்கின்போது பச்சிலைக் கொடியால் நல்ல மணமுடைய சாதிக்காயை இடையே இட்டுத் தக்கோலக் காயையும் கலந்து காட்டுமல்லிகையுடன் வெண்டாளிப் பூவையும் சேர்த்துக் கட்டிய தலைமாலை உடையவனாகவும்,[2] கடம்ப மாலையைச் சூடியவனாகவும்,[3] வெண்மையான பனந்தோட்டினைக் கடம்ப மலரோடு சூடியவனாகவும்,[4] அவனது தோற்றம் குறிப்பிடப்பட்டுள்ளது.

சங்க காலத்தில் சடங்குகளை நிகழ்த்தும் பூசாரியான இவன், பின் நிகழவிருப்பதை முன் கூட்டியே அறிந்துகூறும் ஆற்றல் பெற்றிருந்தமையால் 'முதுவாய் வேலன்'[5] என்றும், 'ஆகுவது அறியும் முதுவாய், வேலன்'[6] என்றும் சிறப்பிக்கப்பட்டான். கழங்கு பார்த்தல், வெறியாட்டுச் சடங்கை நிகழ்த்துதல் போன்றவற்றில் வேலனின் பங்கு சமூகத்தில் முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கியது.

வேலன் கழற்சிக்காய்களைக்கொண்டு கழங்கு பார்த்துக் குறி கூறும் ஆற்றல் பெற்றிருந்தமையை, "வேலன் கழங்கினான் அறிகுவது"[7], "அணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்"[8] என்று வரும் அடிகள் உணர்த்துகின்றன.

களவில் ஆணுடன் தொடர்புகொண்ட இளம் பெண்ணின் உடல் மெலிவிற்குக் காரணம் யாதென்று அறியமுடியாது தாயும், செவிலித்தாயும் தவிக்கின்றபோது, அதற்கான காரணத்தை ஆராய்ந்து சொல்கின்றவனாக வேலன் என்பவன் சங்கப் பாடல்களில் சுட்டப்படுகின்றான். இவ்வேலன் அக்காலத்தில் தெய்வமேறி ஆடும் சடங்கை நிகழ்த்தியதால் கடவுளுக்கு இணையாக மதிக்கப்பட்டான் என்பதை,

> "கார் நறுங் கடம்பின் கண்ணி சூடி,
> வேலன் வேண்ட, வெறி மனை வந்தோய்!
> கடவுள் ஆயினும் ஆக"

என்ற நற்றிணைப் பாடலடிகள் உணர்த்துகின்றன. வெறியாட்டுச் சடங்கில் வேலனின் பணிகளாக வெறியாட்டுக் களத்தை அமைத்தல், தெய்வமேறி ஆடுதல், ஆட்டுக்குட்டியினை அறுத்துப் பலியிடல் போன்றன குறிப்பிடத்தக்கன.

### 2.3.11. கட்டுவிச்சி

சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் வேலன் என்னும் ஆண் பூசாரியைப் போன்றதொரு பெண் பூசாரியாக கட்டுவிச்சி என்பவளைக் கருதலாம். இவள் 'அகவன்மகள்' என்றும் குறிப்பிடப்படுகிறாள்.

கட்டுவிச்சி என்பவள் முறத்தில் நெல்லையிட்டு எண்ணி அதனால் புலப்படும் நிமித்தங்களை அறிந்து குறி கூறுபவள். அகராதிகளும் கட்டுவிச்சி

---

[1] அக. 195:13-15
[2] திரு. 190-193
[3] நற். 34:8-9
[4] அக. 98:16
[5] நற். 282:5; குறு. 362; அக. 388:19
[6] அக. 195:14
[7] ஐங். 248:2-3
[8] நற். 282:5

என்பதற்குக் ‘குறிசொல்பவள்’[1] என்றே பொருளுரைக்கின்றன. இக்கட்டுவிச்சியைக் குறிஞ்சி நிலப்பகுதியில் வாழ்ந்த சடங்குகளைச் செய்விக்கும் பெண் பூசாரியாகக் கருதலாம். இவள் தலைமுடி நரைத்து வயது முதிர்ந்தவளாகக் கணப்பட்டாள். குறிசொல்லும் முன் தான் வழிபடும் தெய்வங்களை அகவிப் பாடுவதால் அகவன்மகள் என்றும் அறியப்படுகிறாள். இதனை, “மனவுக் கோப்பு அன்ன நல்நெடுங் கூந்தல் அகவன் மகளே!”[2] எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது.

இவர்கள் கையில் தன் குடிக்கு அடையாளமாக விளங்கும் நுனியில் பூணிடப்பட்ட சிறு கோலை வைத்திருந்தனர். இதனை, “வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்” என்ற குறுந்தொகைப் பாடலடி காட்டுகிறது.

‘கட்டு’ என்பதற்கு “சேரியின் முதுபெண்டாகிக் குறிசொல்லுமாதரை மனையகத்துக் கொணர்ந்துவைத்து முறத்திலே பிடிநெல்லையிட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்துக்குப் பிரப்பிட்டு வழிபாடு செய்து அந்நெல்லை நந்நான்காக எண்ணி எஞ்சியவை ஒன்றிரண்டு மூன்றளவும் முருகணங்கெனவும் நான்காயின் பிறிதொரு நோயெனவுங் கூறப்படுவது”[3] என விளக்கமளிக்கிறது பின்னத்தூரார் உரை.

மேற்குறித்த உரைக்கு ஏற்பப் பெண்ணின் உடல் வேறுபாடு கண்டு காரணம் அறிய தாய் ஒருத்தி வீட்டின்கண் கட்டுவிச்சியை அழைத்து நெல்லைப் பரப்பிக் கட்டுவைத்து அக்கட்டுகளுக்கு எதிரே தன் பெண்ணை நிறுத்திக் குறிகேட்பதை,

> “நல்நுதல் பரந்த பசலை கண்டு, அன்னை
> செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇ
> கட்டின் கேட்கும் ஆயின்”[4]

என நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது. இக்கட்டுவிச்சியேயன்றி அகவன் மகள் எனத்தக்க குறமகள் ஒருத்தி மலை வளத்திற்காக முருக பூசை செய்வதைத் திருமுருகாற்றுப்படையில் வரும் பழமுதிர்ச்சோலைப் பகுதி நன்கு விளக்குகிறது. மேற்குறித்த சான்றுகள் தொடக்கக்காலம் தாய்வழிச் சமூகமாக இருந்தது என்பதையும் அதன் எச்சமே இத்தகைய பெண் பூசாரிகள் என்பதையும் காட்டுகிறது.

இத்தைகைய பெண் பூசாரிகள் குறித்து, “முன்னோர்களின் பெருமையைப் பாடும் பாண் மரபினர் இன்றும் கேரள மாநிலத்தில் பாலக்காடு மாவட்டத்திலுள்ள சிற்றூர்களில் வாழ்ந்து வருகின்றனர். மத்திய இந்தியாவில் உள்ள கோண்டு என்னும் நடுத் திராவிட மக்களிடம் அவர்களின் குடிப்பிறப்பை உணர்த்தும் ‘அகவுநர்கள்’ இருப்பதாக மானுடவியல் அறிஞர்கள் பதிவு செய்துள்ளனர். தமிழ்நாட்டில் தெலுங்கு மொழி பேசும் கம்பளத்தார்களிடையில் அவர்களின் முன்னோர்களின் சிறப்பைப் பாடும் அகவுநர்கள் இன்றும் வாழ்ந்து வருகின்றனர்”[5] என அ. பாண்டுரங்கள் குறிப்பிடுகிறார். இது தொன்மைக்காலக் கட்டுவிச்சியரின் மரபு இன்றும் தொடர்வதைக் காட்டுகிறது.

---

[1] http://agarathi.com/word/கட்டுவிச்சி

[2] குறு. 23:2-3

[3] நற். 288

[4] நற். 288:5-7

[5] http://keetru.com/index.php?option=com_content&view=article&id=16071&Itemid=139

### 2.3.12. புலைத்தி

சங்கப் பாடல்களில் புலைத்தி என்பவள் சேவைக் குடியைச் சார்ந்த பெண்ணாவாள். புலைத்தி என்னும் சொல்லுக்கு "இழிகுலப்பெண்; வண்ணாத்தி"[1] என அகராதிகள் பொருளுரைக்கின்றன. சங்க இலக்கியக் காலத்தில் இவர்கள் ஆடைகளை வெளுக்கின்ற தொழிலை முதன்மையாகக் கொண்டிருந்தனர். அதோடு கூடை முடைந்து விற்கும் கைத்தொழிலில் ஈடுபட்டவர்களாவும், தெய்வ வழிபாட்டின் பொழுது தொய்வமேறி ஆடும் பெண் பூசாரியாகவும் இருந்துள்ளனர். சில வேளைகளில் காமுற்ற ஆடவர்க்குப் பரத்தையரைத் தேடித்தரும் செயல்களிலும் ஈடுபட்டு வந்ததையும் சங்கப் பாடல்களினூடாக அறிய முடிகிறது.

புலைத்தியரால் உவர் நிலத்தில் கிணறு தோண்டி, நாள்தோறும் ஆடையை வெளுத்துத் தூய்மை செய்யப்பட்ட வெண்ணிற ஆடையால் போரில் இறந்த வீரன் ஒருவனின் உடல் போர்த்தப்பட்டதை,

> "களர்ப்படு கூவற் றோண்டி நாளும்
> புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை
> தாதெரு மறுகின் மாசுண விருந்து"[2]

எனப் புறநானூறும், 'உவர்மண் அரித்தலால் மயிர் கழிந்த ஊன் பொருந்திய தலையினையுடைய சிறுவருடன், ஆடையின் மறுக்களைச் சிதைத்த கறை பொருந்திய கூரிய நகத்தினையும், கஞ்சிப் பசை கொண்ட விரலையுமுடைய வண்ணாத்தி, நெடும்பொழுது பிசைந்து கஞ்சி உட்டிய அழகிய ஆடை ஒளிரும்'[3] என்றும், 'ஆடைகளிலே தோய்ந்துள்ள கஞ்சிப் பசையினைக் கரைத்து விடும் மெல்லிய விரல்களையும், பெரிய தோள்களையும் உடைய ஆடை ஒலிப்பவள், அக் கஞ்சிப் பசையினைத் துறையில் அலசி விடுவது போன்ற, தூய மயிரினையுடைய அன்னங்கள் தம் பெடைகளுடன் விளையாடி மகிழும்'[4] என்றும், 'அழுக்கினை அகற்றித் தூயதாக்கும் நன்மையுடைய கைகளைக் கொண்ட ஆடை வெளுப்பவள், ஆடையைக் கஞ்சியில் தோய்த்து எடுத்து, முதலில் நீளப் புடைத்துப் பின் முறுக்கி அவ்வாடையைக் குளிர்ந்த நீரில் இடுவாள்'[5] என்றும் வரும் சங்கப் பாடல் கருத்துக்கள் புலைத்தியர் உவர் நிலத்தில் கிணறு தோண்டி அந்நீரில் கஞ்சிப் பசை போக ஆடைகளைத் துவைத்ததையும், துவைத்தபின் அவற்றுக்குக் கஞ்சியூட்டியதையும் விளக்குகின்றன.

இவர்கள் பரத்தையர்க்கும் ஆடைகளைத் துவைத்துத்தரும் பணியை மேற்கொண்டதை, "ஆடைகளைத் துவைக்கும் செய்கையிலிருந்து கை ஓய்வு கொள்ளாத, வறுமையற்ற புலத்தி இரவிலே தோய்த்த சோற்றின் கஞ்சியிட்டுப் புலர்த்திய சிறிய பூத்தொழிலை உடைய ஆடையும் பொன்னரி மாலையும் அசைந்தாட ஓடுவாள் பரத்தையாகிய பெதும்பைப் பருவத்தினள்"[6] என்ற நற்றிணைப் பாடல் கருத்து விளக்குகிறது.

தெய்வ வழிபாட்டின்பொழுது தெய்வமேறி ஆடும் பெண் பூசாரியாகவும் இவர்கள் இருந்துள்ளனர். இவர்களது மெய்யின்கண் தெய்வமேறியதால் இவர்கள் துள்ளி ஆடியதை,

---

[1] http://agarathi.com/word/புலைத்தி

[2] புற. 311:1-3 புற. 286:4-5

[3] அக. 387:4-7

[4] அக. 34:11-13

[5] குறு. 330:1-3

[6] நற். 90:3-5

“முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு ஆன்மேல்”[1]

என்ற புறப்பாடல் குறிப்பிடுகிறது. இவர்கள் பனை ஓலையால் கூடை முடைந்து விற்கும் கைத்தொழிலையும் மேற்கொண்டனர்.[2] மேலும், ஊரிலுள்ளவர்களின் ஆடையை வெளுக்கும் புலைத்தி உயர்குடி ஆடவர்க்குப் பரத்தையரைத் தேடித்தரும்பொருட்டுத் தூது சென்றதைக் கலித்தொகைப் பாடலொன்று சுட்டுகிறது.[3] மேற்கண்ட கருத்துக்களை நோக்கும் போது இவர்கள் பிறப்பால் இழிந்தவர்களாகக் கருதப்படாது செய்தொழிலால் இழிந்தவர்களாகக் கருதப்பட்டனர் என ஊகிக்கலாம்.

### 2.3.13. பரத்தையர்

சங்க காலத் தமிழ்ச் சமூகத்தில் குடும்பம் சாராது பாலுறவுத் தேவைக்காகமட்டும் ஆண்களால் நாடப்பட்ட பெண்கள் பரத்தையர், காமக்கிழத்தி, இற்பரத்தை, சேரிப்பரத்தை, பொதுமகள் என்ற பெயர்களால் குறிப்பிடப்படுகின்றனர். பொருள் நோக்கமின்றி தலைவன்மீது கொண்ட அன்பு காரணமாக அவனுடன் மட்டும் பாலுறவுகொண்டு வாழ்பவள் இற்பரத்தை என்றும், பொருட்பயன் ஒன்றையே நோக்கமாகக்கொண்டு ஆடவர் பலரோடு பாலுறவு கொண்டு வாழ்பவள் சேரிப்பரத்தை என்றும் இரு நிலைப்பட்ட பரத்தையரைக் குறித்துச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

இன்றைய காலத்தைப்போல் விலைமகள் என்ற பொருளில் பரத்தையர்கள் நோக்கப்படவில்லை. இது குறித்து வ.சுப. மாணிக்கம், “பரத்தையர்களைப் பொருட் பெண்டிர்களாக, விலை மாதர்களாகத் தொல்காப்பியமும் சங்கப் பனுவல்களும் புனையவில்லை”[4] இவர்கள் ‘காமக்கிழத்தி’[5] என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டனர் எனக் குறிப்பிடுவார்.

சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை குடும்பம் என்ற அமைப்பிற்குள் சமூகத்தால் அங்கீகரிக்கப்பட்ட தன் கணவன் என்ற பாலுறவுத் துணையுடன் குடும்பம் தழைப்பதற்காகப் பிள்ளைகளைப் பெற்று இல்லறக் கடமையாற்றும் பெண் மனைவி என்றும், இத்தகைய குடும்பம் என்ற எல்லைக்குள் வராமல் ஆடவரின் பாலுறவுத் தேவையை நிறைவுசெய்வோர் என்ற அடிப்படையில் வாழத் தலைப்பட்டவர்களைப் பரத்தையர் என்றும் திருமணத்திற்குப்பின் பாலுறவுத் தேவைக்காக மனைவியல்லாத பிறபெண்களை நாடிச்செல்லும் தலைவனின் நடத்தையையே பரத்தமை என்றும் அடையாளப்படுத்தலாம்.

#### 2.3.13.1. பரத்தமையின் தோற்றம்

பரத்தமை என்பது எத்தகைய சூழலில் ஏற்பட்டது என்பதைப் பார்க்கும்போது, மனைவி கருவுற்றிருக்கும் காலம், மனைவியின் மாதவிடாய்க் காலம், மனைவியின் பிள்ளைப்பேற்றுக் காலம் ஆகிய காலங்களில் ஆடவர் மனைவியோடு பாலுறவு கொள்ளத் தடையாக இருப்பதால் அவர்கள் தங்கள் பாலுறவுத் தேவையை நிறைவேற்றிக்கொள்ள பரத்தையர்களை நாடியுள்ளனர். மேலும் வாரிசுகளைப் பெற்றுத் தருவதையே கடமையாக விதிக்கப்பட்ட மனைவி அவளால் இயன்றமட்டும் தொடர்ந்து கருச்சுமந்து பிள்ளைகளைப் பெற்றெடுத்து

---

[1] புற. 259:5-6
[2] கலி. 117:7-8
[3] கலி. 72:13-14
[4] வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப .238.
[5] தொல் .1096

வளர்க்கவேண்டிய நிலையில் இருந்ததால் ஆண்கள் தங்கள் பாலியல் வேட்கையைத் தீர்த்துக்கொள்ள பரத்தமையைச் சமூக நிறுவனமாகக் கட்டமைத்துச் சமூக ஏற்பினையும் பெற்றிருந்தனர்.

இத்தகைய 'பரத்தையர்' அல்லது 'பரத்தமை' என்ற கருத்தாக்கம் பெண்களின் பாலுறவு ஒழுக்கம் குறித்தான 'கற்பு' என்ற ஒழுக்கக் கோட்பாடு தோற்றுவிக்கப்பட்டபின் உருவாக்கப் பெற்றது. இத்தகைய பரத்தையர்/பரத்தைமை என்பது நிலவுடைமைச் சமூகத்தில் தோற்றம்பெற்ற ஒன்று என்பதும் மனங்கொள்ளத்தக்கது. இக்கருத்தோடு ந. கந்தசாமி அவர்கள் கூறும், "தலைவன் பரத்தையர் தொடர்பை அவர் தம் வழிநின்று எண்ணிப் பார்க்குங்கால் எல்லோருக்குமல்லாது செல்வச் செழிப்பு மிக்கோர்தம் பாலியல் நுகர்வுக்கு மட்டும் சமுதாயம் ஆக்கிக்கொண்ட ஓர் அமைப்பே சங்க இலக்கியப் பரத்தையர் கூட்டமெனலாம்"[1] என்ற கருத்தோடு ஒப்புநோக்கத்தக்கது.

### 2.3.13.2. பரத்தைமை நாட்டத்திற்கான காரணம்

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனிடம் தலைவி, என் முதுமையை இகழாதே! என்றும், என் இளமை கழிந்து மிகப்பழைமையாயிற்று என்றும் குறிப்பிடுவதை, "எம் முதுமை எள்ளல்; அஃது அமைகும்தில்ல!"[2], "எம் இளமை சென்று தவத் தொல்லஃதே"[3] எனக் குறிப்பிடுகிறது அகநானூறு. இங்குத் தலைவனின் பரத்தைமை நாட்டத்திற்குத் தலைவியின் முதுமையும் ஒரு காரணமாக இருந்ததை அறியமுடிகிறது.

பிள்ளைகளைப் பெற்றதால் எற்பட்ட மனைவியின் உடல்தளர்வு கணவனின் பரத்தமைக்குக் காரணமாக அமைவதை, "நீர் வளமிக்க புதுவருவாயையுடைய மகிழ்நனே உன் பரத்தையர் தூய்மையானவர்; மணமுடையவர்; நான் உனக்குக் குழந்தை பெற்றதால் பேய் போன்றவள் ஆகிவிட்டேன்"[4] என்ற தலைவியின் கூற்றாக அமைந்த ஐங்குறுநூற்றுப்பாடல் உணர்த்துகிறது.

### 2.3.13.3. பரத்தையரை மணத்தல்

பொருள் வளம்கொண்டிருந்த ஆண்கள் தங்களின் பாலுறவுத் தேவைக்காகத் தன் மனைவியை மட்டுமின்றி காமக்கிழத்தி, இற்பரத்தை, சேரிப்பரத்தை எனப் பலதரப்பட்ட பெண்களோடும் தொடர்பு கொண்டிருந்தனர். இதனால் ஆடவர் தம் இல்லத்துக்கும் செல்லாத நிலையை, "பலர்ப் பெறல் நசைஇ, நம் இல் வாரலனே"[5] என்ற நற்றிணைப் பாடலடி குறிப்பிடுகிறது.

ஆண்கள் தங்கள் பாலுறவுத் தேவைக்காகப் பல பரத்தையரை மணந்ததை, "நல்லோர் நல்லோர் நாடி வதுவை அயர விரும்புதி நீயே"[6], "நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு வதுவை அயர்தல் வேண்டி"[7], "நறுப்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு வதுவை அயர்ந்தனை என்ப அலரே"[8], "முழவுமுகம் புலரா விழவுடை வியல்நகர் வதுவை மேவலன் ஆகலின்"[9], "பூஅணிப் பொலிந்த நின் வதுவைஅம் கமழ் நாற்றம்"[10], "புதுவோர்ப் புணர்தல் வெய்யன் ஆயின்

---

[1] ந. கந்தசாமி, ஆடவரும் பொது மகளிர் நாட்டமும் - ஓர் ஆய்வு, ப .74.
[2] அக. 6:14-15
[3] அக. 6:20-21
[4] ஐங் .70
[5] நற். 180:4
[6] ஐங் .61:4-5
[7] அக .66:7-8
[8] அக .36:11-12
[9] அக .206:11-12
[10] கலி .66:11-12

வதுவை நாளால் வைகலும்"[1], "யாணர் ஊரன் காணுநன் ஆயின், வரையாமையோ அரிதே"[2] எனவரும் அகப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

பாணர்கள் தங்கள் தலைவர்களுக்கு நாள் தோறும் புதிய பரத்தைரைத் தேடித் தருவதைத் தொழிலாகக் கொண்டிருந்ததை நோக்கும்போது பரத்தை என்பவள் ஒரு ஆடவனுக்கு மட்டுமே பாலுறவுத் துணையாக அல்லது மனைவியருள் ஒருவராக இருந்தனர் என்ற கருத்து கேள்விக்குள்ளாகிறது. தலைவனின் பரத்தமை ஒழுக்கத்திற்குப் பாணன், பாகன், விறலி,[3] தோழன் அந்தணன்,[4] புலைத்தி[5] ஆகியோர் துணை நிற்பவர்களாகக் காணப்படுகின்றனர்.

### 2.3.13.4. பரத்தையை இல்லத்தில் கொண்டு தழுவுதல்

ஆடவர்கள் தங்கள் பாலுறவுத் தேவைக்காகப் பரத்தையரின் குடியிருப்பு அமைந்துள்ள பகுதிக்குச் சென்று அவர்களைத் தழுவுதலும், தன் மனைக்கே பரத்தையரை தேரில் அழைத்துவந்து தழுவுதலும் என்ற இரண்டு நிலைகளில் பரத்தையர் தொடர்பு நிகழ்ந்துள்ளது. பரத்தை ஒருத்தியை தலைவியின் இல்லத்திற்கே அழைத்துவந்து தழுவுவதை, "யாணர் ஊர! நின் மாண் இழை மகளிரை எம் மனைத் தந்து நீ தழீஇயினும்"[6] என்ற நற்றிணைப் பாடலடி கொண்டு அறியமுடிகிறது.

### 2.3.13.5. பரத்தையரின் தன்மைகள்

சூழல்களைப் பொறுத்தே மனித நடைத்தைகள் அமைகின்றன. அவ்வகையில் பரத்தை என்பவளைச் சமூகம் எவ்வாறு நடத்தியது என்பதைக்கொண்டு அவர்களின் பண்பும் அமைந்திருந்தது. பரத்தையர்கள் இளம் வயதுடையவர்களாக இருந்துள்ளனர். இதனைக், "குறுமகள்"[7], "குறுத்தொடி மடந்தை"[8], "மாண்ட மதிஏர் ஒள்நுதல் வயங்குஇழை ஒருத்தி"[9], "நலம்பெறு பணைத்தோள், நல்நுதல் அரிவை"[10] எனவரும் பாடலடிகள் சுட்டுகின்றன. இவர்கள் தழையாடையால் தங்களை ஒப்பனை செய்துகொண்டு,[11] உடலழகாலும் ஆடவர்களைக் கவர்பவர்களாக இருந்துள்ளனர்.[12]

சங்கப் பாடல்களில் அவர்களின் பொருள் நாட்டம் என்பது வெளிப்படையாக இல்லாவிட்டாலும் நோக்கம் பொருள் சார்ந்தது என்பதை மறுப்பதற்கில்லை. பரத்தையர் வேண்டும் பொருளை அவர்தம் ஏவற்பெண்டுகளிடம் அளித்து, அவர் விலை கூறி விற்கும் மாலையை வாங்கிப் பரத்தையரிடம் கொடுத்து அவரோடு ஆடவர் முயங்கி மகிழும் வழக்கத்தைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.[13] இம்மரபுக்குச் சான்றாகச், சங்ககாலப் பரத்தையும், "தாருங் கண்ணியும் காட்டி" தலைவன் தன் நெஞ்சைக் கவர்ந்துகொண்டான்[14] எனக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

பரத்தையர் தலைவனை இழிவான சொற்களால் இகழ்ந்து பேசியும், சினந்து நோக்கியும், தலைவனின் மாலையை அறுத்தெறிந்தும் தன் ஊடலைக் காட்டினர்.[15]

[1] கலி .75:10-11
[2] நற் .390:7-8
[3] நற் .170
[4] கலி. 72
[5] கலி. 72; நற். 90:1-5
[6] நற் .330:6-7
[7] அக. 96:9-10, 326:3; நற் .20:1, 90:9
[8] அக, 346:18
[9] அக. 306:9-10
[10] அக. 366:13
[11] குறு .293, 295
[12] கலி .97:17-20
[13] சிலம்பு. அரங்கேற்றுகாதை, 165-173
[14] நற் .150:8
[15] அக .306:9-15

இவர்களிடமிருந்து தம் கணவரைக் காப்பாற்றிக்கொள்வது அக்காலப் பெண்களுக்குப் பெரும் சவாலாக இருந்தது.[1]

தலைவி தன்னை இகழ்ந்துரைத்தாள் என்பதை அறிந்த பரத்தை, 'காவிரியாறு ஆட்டனத்தியைக் கவர்ந்து கொண்டபோது, அவனைக் கண்டிரோ என ஆதிமந்தி மயங்கி வருந்தியதைபோலத் தானும் அவள் கணவனாம் ஊரனைக் கைப்பற்றிக்கொள்ள எண்ணியுள்ளேன்'[2] என்றும், 'தன்னைத் தவிரப் பிறர் யாரும் தலைவனை முயங்கக் கூடாது என்பதற்காக, சாந்தினாலும் பூணினாலும் கண்ணியாலும் அடையாளம் வைத்து அனுப்பினள்'[3] என்றும் குறிப்பிடுவன அவர்தம் பண்பைப் புலப்படுத்தும்.

### 2.3.13.6. வாழிடம்

பரத்தையர்கள் ஊரின் ஒரு குறிப்பிட்ட தனிப்பகுதியில் வாழ்ந்தனர் என்பதை, 'எம்சேரி'[4], "சேரியால் சென்று, நீ சேர்ந்த இல் வினாயினன்"[5], "ஏனாதிப் பாடியம்"[6] என்பன காட்டுகின்றன. இப்பரத்தையர் சேரிக்குத் தலைவன் தேரில் சென்றதை,

> "தேர்தர வந்த, தெரிஇழை, நெகிழ்தோள்
> ஊர்கொள் கல்லா, மகளிர் தரத்தர"[7]

என்ற பாடலடி புலப்படுத்துகிறது. தலைவனின் தேரைப் பரத்தையரைப் பிடிக்கும் வலை என்கிறது கலித்தொகை.[8]

### 2.3.13.7. பிள்ளைபெறும் உரிமை பரத்தைக்கு இல்லை

அக்காலத்தில் பரத்தையர்க்கு பிள்ளை பெற்றுக்கொள்ளும் உரிமை மறுக்கப்பட்டது. அவ்வுரிமை தலைவிக்கு மட்டுமே உண்டு. இதுவே பரத்தையரினும் தலைவி மேம்பட்டவள் என்பதற்கான அடையாளமாக விளங்குகிறது. தலைவியை முயங்கினால் தன் மார்பில் பால்படும் என முயங்க அஞ்சிய தலைவனிடம் தலைவி, 'நீவிர் அழகியரான பரத்தையர்க்குப் பொருந்தியவர் ஆவிர்; பிள்ளைக்கு தாயாவதற்கே நாங்கள் பொருந்தியவர்கள் ஆவோம்'[9] என்றும், 'குறுகிய வளையல்கள் அணிந்த கையினலாகிய பரத்தையின் பிடியினை நீ தளர்த்திச் சென்ற அவ்வளவிற்கே அவள் நின்னைச் சினந்து கொண்டாள், அழுதாள், விரலை நெரித்தாள், பற்களைக் கடித்தாள் அத்தகைய நின் காதலியான அப்பரத்தை, எம்மைப் போலப் புதல்வரைப்பெற்று, நெல்லையுடைய பெரிய வீட்டில் நின்னைப் பிரிந்து தங்கியிருக்க என்ன கடமைப்பட்டவளா? அத்தகைய கடமை உடையவள் இல்லையே!'[10] என்றும் குறிப்பிடப்பெறும் கூற்றுக்கள் பரத்தைக்குப் பிள்ளைப் பெற்றுக்கொள்ளும் உரிமையும், இல்லறக் கடமையும் இல்லை என்பதையும், அத்தகுதி தனக்கே உண்டு என்பதையும் சுட்டிக் காட்டுவது நோக்கத்தக்கது.

[1] நற். 320
[2] அக. 76
[3] கலி. 79:9-10
[4] அக. 76:2
[5] கலி. 68:16
[6] கலி .81:17
[7] அக .316:8-9
[8] கலி .74:14-16
[9] அக. 26:19-20
[10] அக. 176:17-21

### 2.3.13.8. பரத்தமை ஏற்பும் எதிர்ப்பும்

பரத்தமையை ஏற்க மனமின்றி இல்லுறைப்பெண்கள் பரத்தையரை இழித்துப் பேசியுள்ளனர். இதனைப் பரத்தைக்கூற்றில் அமைத்த, ''தண்துறை ஊரன் பெண்டிர் எம்மைப் பெட்டாங்கு மொழிப' என்ப''[1] என்ற அகப்பாடலடிகள் உணர்த்துகிறது.

பரத்தையை நாடிச்சென்ற தலைவன் அவர்களோடு ஆற்றில் நீராடிப் பொழுதைக் கழித்தல் அக்கால வழக்காக இருந்துள்ளதை, ''அலமரல் ஆயமோடு அமர்துணை தழீஇ நலம் மிகு புதுப்புனல் ஆட''[2], ''எஃகுடை எழில்நலத் தொருத்தியொடு நெருநல் வைகுபுனல் அயர்ந்தனை என்ப''[3], ''குழைமாண் ஒள்ளிழை நீ வெய்யாளோடு....நெருநல் ஆடினை புனலே''[4] என வரும் சங்கப் பாடல்கள் பலவும்[5] சுட்டக் காணலாம். இத்தகைய பரத்தையருடனான நீராட்டில் தலைவன் ஈடுபட்டது தொடர்பான அலர் (இழிசொல்) சமூகத்தில் எழுந்துள்ளது.[6] இது பரத்தமை நடைமுறையில் இருந்தாலும் அது சமூக ஏற்பினைப் பெறவில்லை என்பதையே காட்டுவதாகக் கருதலாம். பரத்தமை சமூக ஏற்பினைப் பெற்றிருப்பின் அலர் எழவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது. மேலும் மருதநிலத் தலைவியர் கொண்ட ஊடலும் பரத்தமைக்கு எதிரான வெளிப்பாடு[7] என்பது யாவரும் அறிந்ததே.

தலைவி தலைவனால் விரும்பப்பட்ட பரத்தையைத் தழுவி தன் புதல்வனுக்கு 'நீயும் தாயாகுவை' எனக் குறிப்பிடுவதும், அவளை வானத்துக்கண் விளங்கும் தெய்வமான அருந்ததிக்கு ஒப்பாகக் கருதி தலைவி விரும்பி ஏற்றுக்கொண்டதையும்,

> ''மாசு இல் குறுமகள்! எவன் பேதுற்றனை?
> நீயும் தாயை இவற்கு?''[8]

> ''................ வானத்து
> அணங்கு அருங் கடவுள் அன்னோள் நின்
> மகன் தாய் ஆதல் புரைவது – ஆங்கு எனவே?''[9]

எனவரும் பாடலடிகள் உணர்த்துகின்றன. அதேபோல் பரத்தையும் தலைவியிடம் 'உனக்குத் தங்கைமுறையாவேன்' என உறவுமுறை கொண்டாடுவதை,

> ''நுங்கை ஆகுவென் நினக்கு என, தன்கைத்
> தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர
> நுதலும் கூந்தலும் நீவி''[10]

என்று குறிப்பதைக் கொண்டு அறியமுடிகிறது. மேற்குறித்த இச்சான்றுகள் அக்காலச் சமூகத்தில் பரத்தமை இல்லுறைப் பெண்களால் சகித்துக்கொள்ளப்பெற்று, ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாக இருந்துள்ளதைக் காட்டுகிறது.

---

[1] அக .216:5-6
[2] ஐங் .64:1-2
[3] அக.116:9-10
[4] அக .6:7-11
[5] அக .226:10-12, 246:6-7, 256:8-13, 296:5
[6] அக .226:10-12, 246:6-7
[7] நற். 250
[8] அக. 16:12-13
[9] அக. 16:17-19
[10] அக .386:12-14

மற்றொரு பாடல், 'தலைவனின் பரத்தமைமயை ஏற்றுக்கொள்ளாது வெறுத்து அவனோடு ஊடல் கொள்ளும் பெண்கள், தம்மிடத்துத் திருமகள் விலகிச் செல்ல, நொய் அரிசியை முறத்தால் புடைத்துத் தாமே சமைத்து உண்டு தனிமையை மேற்கொண்டவராய், இனிய மொழிபேசும் குழந்தைகள் பால் இன்றி உலர்ந்த முலையைச் சுவைத்துப் பார்த்துப் பெரிதும் வருந்தி இருப்பர் என்பதை அறிந்து வைத்தும், அவரது பரத்தமை குறித்து மாறுபாடு கொள்வோர் அறிவிலாதவரே ஆவர்; ஆதலின், ஊடலைக் கைவிடுக'[1] என்று தோழி ஒருத்தி தலைவிக்கு அறிவுறை கூறுவதாக அமைந்துள்ளது. இது அக்காலத்தில் பரத்தமையை ஏற்றுக்கொள்ள மனமில்லாவிட்டாலும் ஏற்றுக்கொண்டு வாழவேண்டிய நெருக்கடிக்கு உள்ளாக்கப்பட்ட இல்லுறைப் பெண்களின் நிலைக்குச் சான்றாகத் திகழ்கிறது.

### 2.3.13.9. பரத்தமையை தலைவி ஏற்காமை

பரத்தையைத் தழுவிய தலைவனைத் தலைவியர் தீண்டமறுத்தனர். எமது அழகு முற்றிலும் அழிந்து ஒழிவதாயினும் பெருமகனே! பிற பெண்டிரைத் தழுவிய நின் மார்பை நான் விரும்பேன்.[2] என்கிறது ஐங்குறுநூற்றுப்பாடல். அவ்வாறு தழுவுதல் கழித்த கலத்தைப் பயன்படக் கொள்ளுதல் போலாகுமென்று குறிப்பிடுகின்றன, ''ஆசு இல் கலம் தழீஇயற்று;வாரல்''[3], ''தொடுகலம்; குறுக வாரல்''[4] எனவரும் அகப்பாடலடிகள் பரத்தமை எதிர்ப்பிற்கான சான்றுகளாக அமைகின்றன.

### 2.3.13.10. பரத்தைக்குரிய வருவாய்

சங்க இலக்கியத்தில் பரத்தையர்கள் பொருட்பெண்டிர் என்ற நிலையில் இல்லாவிட்டாலும், அவர்களின் வாழ்வாதாரத்துக்குரிய பொருள் கிடைத்த முறை குறித்த சிலசெய்திகளை அறிந்துகொள்ள முடிகிறது. ''சிறிய வளையை உடைய இவளுக்கு விலையாகும் இது. என்று பெரிய தேரை அலங்கரித்து நம் வாயிலில் நிறுத்திவிட்டுப் பரத்தையை நாடிச் சென்றான்''[5] என நற்றிணையும், ''நின் காலிற் கிடக்கும் சிலம்புகளையும் என்(பரத்தை) பொருட்டாய்க் கழற்றுதலையும் நாளை செய்யவல்லன். ஆதலால் உன் கணவனே கள்வன்.[6] எனப் பரிபாடலும் குறிப்பிடுகின்றன.இது பரத்தையர்க்குரிய பொருள் வருவாயைப் புலப்படுத்துகிறது.

### 2.3.13.11. பரத்தையரின் சமூக மதிப்பு

பரத்தமையும், பரத்தையரும் சமூகத்தால் கடிந்து ஒதுக்கப்படவில்லை ஆயினும், அது சமூக ஏற்பினைப் பெற்றிருந்தது என முழுவதுமாகக் கூற இயலாது. தலைவனின் பரத்தமை தொடர்பால் ஊரில் எழுந்த அலர்; இல்லுறைப் பெண்கள் (ஆடவரின் உரிமை மகளிர்) பரத்தையர்களைப் பழித்தல்; குழந்தைகளைப் பெற்று இல்லறம் நடத்தும் வாய்ப்பு மறுக்கப்பட்ட நிலை; தலைவன் பரத்தையருடனான தொடர்பை ஒத்துக்கொள்ள தயங்குதல், அதற்காகப் பொய்ச் சூள் உரைத்தல் என்பன பரத்தமைக்கு இருந்த சமூகமதிப்பைப் புலப்படுத்துகின்றன.

---

[1] அக .316:8-17
[2] ஐங் .63
[3] நற். 350:9-10
[4] அக. 196:8
[5] நற் .300
[6] பரி .20:79-83

### *2.3.13.12. பரத்தைமை குறித்த மீள்பார்வை*

*பரத்தைக் குறித்து கைலாசபதி, அறவாணன், இராமகிருட்டினன், செயராமன், சிலம்பு செல்வராசு போன்றோர் தம் ஆய்வுக் கருத்துகளை மொழிந்துள்ளனர். இதன்வழி, தமிழகத்தில் நடந்த போர்கள் மற்றும் பகை காரணமாகப் பாதிப்பிற்குள்ளானதில் கணவனை இழந்த பெண்கள் பரத்தமைச் சமூகம் உருவாகக் காரணமாயிருத்தல் கூடும் என்றும் பரத்தையர் விலைமகளிர் அல்லர் என்ற கருத்தும் அறியப்படுகிறது.*[1]

*மேற்குறித்த அறிஞர்களின் கூற்று ஒரு பெரும் ஐயத்தை ஏற்படுத்துகின்றது, தோற்றவர் நாட்டுப் பெண்களே ஆனாலும் அவர்களும் கற்பு நெறியில் வாழ்ந்தவர்களே, அவர்களின் கணவன்மார் போரில் இறந்தனர் அல்லது தோற்றனர் என்பதற்காகத் தங்கள் உடலை பல ஆடவர்களோடு பகிர்ந்து வாழும் வாழ்வை ஏற்றுக் கொண்டனர் என்பது ஏற்புடையதா? மேலும் மேற்கூறிய கருத்தை மற்றொரு கோணத்திலும் பார்க்க இடம்தருகிறது. மேற்குறித்தவாறு போரினாலோ, பகையினாலோ ஏற்பட்ட கட்டாயத்தினால் காலச் சூழலின் காரணமாக பரத்தையராக நேர்ந்தவர்கள், சங்கப் பாக்கள் குறிப்பிடுவதைப்போலத் தன்னிடம் இன்பம் துய்க்க வரும் ஆடவனுக்காகக் காத்திருத்தல், அவன் பிரிவை எண்ணி ஏங்குதல் என்ற நிலைகள் ஏற்பட வாய்ப்புண்டா? என்ற கேள்வியையும் எழுப்புகிறது.*

*பரத்தையர்க்கு பிள்ளை பெற்றுக் கொள்ளும் உரிமை இல்லை என்பதால் பரத்தை மரபு தொடர்வதற்கும் வாய்ப்பிள்ளை அது குலத்தொழிலாக இருக்கவும் வாய்ப்பிள்ளை. எனவே பரத்தையர் என்பவர் அக்காலத்தில் பிறப்பின் வழி உருவாகாமல் இடையில் சூழலின் காரணமாக பரத்தையராக உருவாக்கப் பட்டவர்களே என்று கருத இடமுண்டு.*

*சங்க காலச் சமூகத்தில் பரத்தையர்க்கு பிள்ளைப் பெற்றுக்கொள்ளும் உரிமை இல்லை என்ற கருத்துக் கூறப்பட்டாலும். ஆண்-பெண் உறவில் கரு உருவாகி குழந்தை பிறத்தல் என்பது இயற்கையே இதனைத் தடுத்தல் இயலாது. இங்கு பிள்ளைப் பெற்றுக்கொள்ளும் உரிமை என்பது ஆடவனின் சொத்துக்களுக்கு வாரிசாகும் உரிமையுடைய பிள்ளையைப் பெற்றுக்கொள்ளும் உரிமையில்லாதவள் என்றே பொருள் கொள்ள வேண்டும். மேலும், பரத்தைக்கும் தாய் குறிப்பிடப்படுகிறாளே அவள் எங்கிருந்து வந்தாள்? என்ற கேள்விகளை எழுப்புகிறது.*

*கா.சிவத்தம்பி விறலியர் பரத்தையராக மாறினர் என்பதற்கான பதிவுகள் சங்க இலக்கியத்தில் உள்ளது என்பதை எட்டுத்தொகையில் அமைந்துள்ள புறப்பாடல்களைக் கொண்டு நிறுவுகிறார். "புறநானூறு: 32 ஒரு முக்கியமான மரபினைப் பற்றிக் கூறுகிறது. அதில் அவளை அனுபவிப்பதற்கு அடையாளச் சின்னமாக ஒரு பூவை வாங்குகிறான். இது விறலி பரத்தையாக மாறும் கட்டத்தின் முதற்படியாகலாம். பதிற்றுப்பத்து: 44, இன்னொரு உதாரணம் தருகிறது. அதில் உனது உடலை நோயோ, சாவோ அணுகாது விறலியே அணைந்திருப்பாள் என்று கூறப்படும். மன்னர்கள் விறலியுடன் திளைத்திருந்தமை இதிலிருந்து தெரியவருகிறது"*[2] *என்ற க.சிவத்தம்பி அவர்களின் இந்த அனுமானம்*

---

[1] *கி. மைக்கேல் சரோஜினி, (ப.ஆ), வளர்தமிழ் ஆய்வு, ப. 70.*

[2] *கா. சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், பக். 227-228.*

ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒன்று என்றே தோன்றுகிறது. பாணர்கள் தங்களைப் புரப்பார் இன்மையால் மருதநிலத் தலைவர்களுக்குப் பரத்தையரைத் தேடித்தரும் இழிநிலைக்குத் தள்ளப்பட்டது போல விறலியரும் பரத்தமைக்குத் தள்ளப்பட்டிருக்கலாம். மேலும், பரத்தையர்க்குத் தோழியராக விறலியர் சுட்டப்படுவது கொண்டு விறலியரும் பரத்தையராக இருக்க வாய்ப்புண்டு என்றும் கருதலாம்.

ஆண்களின் பாலுறவுத் தேவைகளுக்காக முறையான மணச்சடங்குகளால் பெற்றோராலும், சமூகத்தாலும் கூட்டுவிக்கப்பட்ட மணத்துணையைத் தவிர ஆண்கள் பிற பெண்களையும் நாடியுள்ளனர். அப்பெண்கள் ஒரு ஆடவனுக்கு மட்டும் பாலுறவுத் துணையாகவும், பல ஆண்களுக்குப் பாலுறவுத் துணையாகவும் எனப் பல நிலைப்பட்டவர்களாக இருந்துள்ளனர். தொடக்கக்காலத்தில் இத்தகைய மகளிர் விலைமகளிர் என்ற தற்காலப் பொருண்மை கொண்டவர்களாக திகழ்ந்திருக்க வாய்ப்பில்லை. கால மாற்றத்தில் ஏற்பட்ட பரிணாம வளர்ச்சியில் பரத்தமை சமூகத்தில் நிறுவனப்படுத்தப்பட்டது.

தாய்வழிச் சமூகம் வலுவிழந்து தந்தை வழிச் சமூகம் வலிமை பெற்றுவந்த காலத்தில் தொன்மைக் காலச் சமூகத்தில் நிலவிய கட்டுப்பாடுகளற்ற பாலுறவில் ஈடுபட்ட பெண்களைப் போல சுதந்திர வெளியில் வாழ்ந்த பெண்கள் ஆணாதிக்கச் சமூகத்தில் பரத்தையர் என அடையாளப்படுத்தப்பட்டனர். ஆண்களின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு அவர்களின் சொத்துக்களுக்கு வாரிசுகளை பெற்றுத்தருவதற்காக ஒரு கணவனை மட்டுமே பாலுறவுத் துணையாகக் கொண்டவர்கள் கற்புடைப் பெண்கள் என அடையாளப்படுத்தப்பட்டனர்.

களவில் ஈடுபட்டு ஆடவர்களால் கைவிடப்பட்ட பெண்கள் பரத்தையர்களாக மாறினரா? என்ற ஐயப்பாடும் எழுகிறது. இதற்குப் போதிய சான்றுகளில்லை ஆதலால் இது ஆய்வுக்குரியது. எனவே இக்காலத்தில் பரத்தையர் எனப்பட்ட பெண்கள் சமூகத்தில் இழிவானவர்களாகக் கருதப்படவில்லை.

ஆண்களின் பாலியல் வேட்கைக்கு வடிகாலாய் விளங்கிய பெண்கள் ஆடவர்களால் அவர்களின் இளமை தீரும் காலம் வரை நுகரப்பட்டு பின்பு அவர்களால் கைவிடப்பட்டிருக்க வாய்ப்புண்டு. இக்காரணத்தினாலேயே அவர்கள் தங்களின் பிற்காலப் பொருளியல் தேவைக்காக பொருளைப் பெற்று ஆணுக்கு இன்பத்தைத் தருதல் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டு விலைமகள், பொருட்பெண்டிர் என்ற நிலைக்கு மாறியிருக்கலாம்.

## 2.4. தொழில் குடிகள்

### 2.4.1. உமணர்

சங்ககாலச் சமூகத்தில் உப்பு வணிகம் செய்தவர்கள் உமணர் என குறிப்பிடப்படுகின்றனர். இவர்களின் தோற்றத்தை, “பாதிரிப் பூவை அலரிப்பூவுடன் இடையிடையே கலந்து தாழம்பூவின் தோட்டில் வைத்துக் கட்டிய வண்டுபொருந்தும் கண்ணியினைத் தரித்து, செருப்பு ஒலிக்கும் அடியினையும், கோலினையும் உடையவர்”[1] என அகநானூறு குறிப்பிடுகிறது. இவர்கள் மருதநிலப் பகுதியை வாழிடமாகக் கொண்டிருந்ததை, ‘மருத நிலத்தின்கண் உள்ள உப்பு

[1] அக. 191:1-4

*வாணிகர்கள் தம் நாட்டில் விளைந்த வெண்ணெல்லை வண்டிகளிலே ஏற்றிக் கொண்டுபோய் விற்று, அதற்கு விலையாகப் பிற நாடாகிய நெய்தல் நிலப்பகுதியில் விளைந்த உப்பைப் பெற்றுவந்து விலை கூறுவர்'[1] எனக்குறிப்பது கொண்டு அறியமுடிகிறது.*

*உமணர்கள், மீன் பிடித்தலோடு உப்பு விளைக்கும் தொழிலையும் செய்துவந்த பரதவ மக்களிடமிருந்து உப்பினை வாங்கி மற்ற நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்குப் பண்டமாற்றாக உப்பு விற்கும் தொழிலைச் செய்தனர். இதனை,*

*"தம்நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து,*
*பிறநாட்டு உப்பின் கொள்ளை சாற்றி"[2]*

*"உவர் விளை உப்பின் உழாஅ உழவர்*
*ஒழுகை உமணர் வரு பதம் நோக்கி,*
*கானல் இட்ட காவற் குப்பை"[3]*

*எனவரும் நற்றிணைப் பாடலடிகள் காட்டுகின்றன. இத்தகைய உப்பு வணிகர்கள் உப்பு விற்கச் செல்லும்போது எப்பொழுதும் கூட்டமாகவே சென்றனர்.[4] இது ஒரு ஊரே திரண்டு எழுந்து செல்வதைப்போன்று இருந்ததை,*

*"ஊர் எழுந்தன்ன உரு கெழு செலவின்,*
*நீர் இல் அத்தத்து ஆர் இடை, மடுத்த,*
*கொடுங் கோல் உமணர், பகடு தெழி தெள் விளி"[5]*

*எனவரும் அகநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. இவர்கள் தங்கள் பொருள்களுடன், கூட்டம் கூட்டமாகப் பல ஊர்களுக்கும் இடம்பெயர்ந்து செல்வர். உப்பு வண்டிகளைத் தாம் தங்கும் இடங்களில் நிறுத்தி, எருதுகளைத் தறிகளில் பிணிப்பர். அவ்வூர்களிலேயே இரவு தங்கி உணவுண்டு தம் எருதுகளையும் இளைப்பாற்றிப் பிற ஊர்களுக்கும் செல்வர். அவர்கள் நீங்கிச் சென்ற இடம், ஊர் பாழ்பட்டதைப்போன்று காணப்பட்டதை,*

*"உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின், அகன் தலை,*
*ஊர் பாழ்த்தன்ன ஓமைஅம் பெருங் காடு"[6]*

*எனக் குறுந்தொகைப் பாடலொன்று குறிப்பிடுகிறது. உமணர் தம் உப்பு வண்டிகளை இடர்ப்பாடான பாலைநில வழிகளிலும், பரற்கற்கள் பொருந்திய காட்டினைக் கடந்தும் ஓட்டிச் சென்றனர். அத்தகைய வண்டிகளை இழுத்துச் செல்ல வலிமையான எருதுகள் பயன்படுத்தப்பட்டதை, "உப்பு ஒய் உமணர் அருந் துறைபோக்கும், ஒழுகை நோன் பகடு"[7] என்றும் அவை வருந்தி வண்டியிழுத்துச் செல்வதை, "பகடுஅயாக் கொள்ளும் வெம்முனை"[8] என்றும் அகநானூற்றுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. அத்தகைய எருதுகள் முடம்பட்டபோது அவற்றுக்குப் பருக நீரோ, உண்பதற்குப் புல்லோ தராமல் மக்கள் இயக்கம் இல்லாத இடத்தே விட்டுச் சென்றதை,*

*"நீரும் புல்லும் ஈயாது, உமணர்*

---

[1] நற். 183
[2] நற். 183:1-2
[3] நற். 331:1-3
[4] அக .303:17-18, 390:1-4
[5] அக. 17:11-13
[6] குறு. 124:1-2
[7] அக. 30:5-6
[8] அக. 329:7

*யாரும் இல் ஒரு சிறை முடத்தொடு துறந்த*
*வாழா வான் பகடு ஏய்ப்ப"*[1]

*என்ற புறநானூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன.*

*உமணர் பரற்கற்கள் நிறைந்த காட்டினைக் கடந்து கடலில் விளைந்த உப்பினைக் கொண்டுவந்தனர்.*[2] *அவ்வாறு வரும் வழியின் மேடுபள்ளம் நிறைந்த துறை அவர்களுக்கு அச்சம் தருவதாக இருந்தது*[3] *மட்டுமின்றி அவர்கள் வரும் வழியில் உணவு சமைப்பதற்குத் தீமூட்டும் சுள்ளியாக யானை சுவைத்துப்போட்ட சக்கையான யாமரத்தின் பட்டைகள் பயன்பட்டன*[4] *என்றும், புலியால் கொன்று தின்னப்பெற்ற யானையினது எஞ்சிக்கிடந்த ஊனை ஆறலைப்போர் கோலிற்கோத்து எடுத்துச் சென்றது போக எஞ்சியதை தீக்கடைகோலாலாக்கிய சிறு தீயில் வதக்கி, சோற்றின் உலையில் கூட்டி உணவு சமைத்தனர்*[5] *என்றும் குறிப்பிடும் அகநானூற்றுப் பாடல்களைக்கொண்டு உமணர்களின் உப்புவணிகம் இடர்ப்பாடுகள் நிறைந்ததாக இருந்ததை அறியமுடிகிறது.*

*உமணர் தாம் உப்பு ஏற்றிச் செற்ற வண்டியின் அச்சு பாரந்தாங்காமல் முறிந்தவிடத்து அதனை மாற்றுவதற்காக சேம அச்சையும் உடன்கொண்டு சென்றனர்.*[6] *அவ்வாறு முறிந்த அச்சை அங்கேயே வீசிச்சென்றதை, "கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த பண் அழி பழம் பார்"*[7] *என நற்றிணை குறிப்பிடுகிறது.*

*உப்பு வணிகத்தில் உமணர்களோடு சேர்ந்து அவர்தம் குடும்பத்தைச் சார்ந்த பெண்களும் நெல்லுக்கு ஒத்த அளவினதே வெள்ளிய கல்லுப்பு என்று சேரியில் பண்டமாற்று வணிகத்தில் ஈடுபட்டிருந்ததை,*

*"கதழ் கோல் உமணர் காதல் மடமகள்*
*சில் கோல் எல் வளை தெளிர்ப்ப வீசி,*
*"நெல்லின் நேரே வெண் கல் உப்பு" எனச்*
*சேரி விலைமாறு கூறலின்"*[8]

*"நெல்லும் உப்பும் நேரே; ஊரீர்!*
*கொள்ளீரோ! எனச் சேரிதொறும் நுவலும்,*
*அவ் வாங்கு உந்தி, அமைத் தோளாய்!"*[9]

*என்ற பாடலடிகளைக் கொண்டு அறியமுடிகிறது. மேலும் அகநானூற்றுப் பாடலொன்றில் உப்பினைக் கொண்டுசெல்லும் உப்பு வணிகரது வண்டியுடன் பெட்டைக்கோழி இருந்தது எனக் குறிப்பிடுவதுகொண்டு உப்புக்கு விலையாக கோழியும் பெறப்பட்டது எனக் கருத இடமளிக்கிறது. மேலும், உமணர்கள் உப்பு மூட்டைகளை ஏற்றிச் சென்ற வண்டியில், தாங்கள் தங்கும் இடங்களில் நெல்லைக் குற்றுவதற்குரிய உரலை ஏற்றிச் சென்றனர். வண்டியில் பூட்டப்பெற்ற எருதுகள் சோர்வுற்ற காலத்தில் மாற்றிப்பூட்டுவதற்காக வேறு எருதுகளையும் உடன் ஓட்டிச் சென்றனர். இவ்வண்டியை உமண மகளிர் ஓட்டிச்செல்ல உமணர் பக்கத்தே நடந்து பாதுகாத்தனர்"*[10] *எனப் பெருநராற்றுப்படை குறிப்பிடுகிறது.*

---

[1] *புறு. 307:7-9*
[2] *அக. 295:8-10; புற. 313:5*
[3] *புற. 84:6*
[4] *அக. 257:16-17*
[5] *அக. 169:3-7*
[6] *புற. 102:1-5*
[7] *நற். 138:3-4*
[8] *புற. 140:5-8*
[9] *அக. 390:8-10*
[10] *பெரு. 46-65*

### *2.4.2. குயவன்*

*சங்க இலக்கிய காலத்தில் மட்பாண்டங்களைச் செய்யும் தொழிலை மேற்கொண்டிருந்தவர்கள் குயவர் என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளனர். சங்கப் பாக்கள் இவர்களை "கலம்செய்கோ"[1], "வேட்கோ"[2] என்ற பெயர்களாலும் குறிப்பிடுகின்றன.*

*இக்குயவர்கள் சங்க காலத்தில் மட்கலங்களைச் செய்யும் தொழிலையன்றி இறந்தவர்களை அடக்கம் செய்வதற்குரிய ஈமத் தாழிகளைச் செய்யும் பணியையும் மேற்கொண்டிருந்தனர். இதற்கு, ஐயூர் முடவனார், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை அடக்கம் செய்வதற்குரிய தாழியை செய்து தருமாறு வேண்டுவதாகவும்,[3] போரில் இறந்த கணவனோடு தானும்உயிர் துறக்க எண்ணிய பெண்ணொருத்தி குயவனிடம் இருவரையும் அடக்கத்தக்க அகலமான ஈமத் தாழியைச் செய்து தருமாறு வேண்டுவதாகவும்[4] அமைந்த புறநானூற்றுப் பாடல்கள் சான்றுபகர்கின்றன.*

*மட்பாண்டங்களைச் செய்வது மட்டுமின்றி திருவிழாக் குறித்த செய்தியை நொச்சிமாலை சூடி ஊர்த்தெருக்களில் அறிவிக்கும் பணியையும் குயவர் மேற்கொண்டதை,*

> *"ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி*
> *யாறுகிடந் தன்ன அகனெடுந் தெருவில்*
> *சாறெனை நுவலும் முதுவாய்க் குயவ!"[5]*

*எனக் குறிப்பிடுவது கொண்டும், இத்தகைய திருவிழாக் கொண்டாட்டத்தில் "நீலமணி போலும் பூங்கொத்துகளைக் கொண்ட நொச்சி மாலையைச் சூடிப் பலிகளை இடுகின்ற செயல்புரியும் கையினை உடைய மிக முதிய குயவன் தான் இடுகின்ற பலியை உண்ணுதற்காகத் தெய்வங்களையும் காக்கைகளையும் அழைப்பான்"[6] எனக் குறிப்பிடுவது கொண்டும் திருவிழாச் சடங்குகளில் பூசாரியாகவும் செயல்பட்டனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.*

### *2.4.3. கொல்லர்*

*சங்க காலத்தில் இரும்புக் கருவிகளையும் பொருட்களையும் செய்துதரும் தொழில் செய்தோர் கொல்லர் எனப்பட்டனர். வேல் முதலிய படைக்கருவிகளைச் செய்து கொடுத்தல், கொல்லனுக்குரிய கடமையாக இருந்ததை, "வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே"[7] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.*

> *வலிய கையை உடைய கொல்லன் செந்தீயில் காட்டப்பட்ட இரும்பில் தெளிக்கப்பட்டு அதனாற் கொள்ளப்பெறும் நீர் மீட்டற்கு அரிது.[8]*
>
> *வலிய கையையுடைய கொல்லனால் அராவிக் கூராக்கப்பட்ட அழகிய வாயையுடைய நெடிய கைப்பிடியை உடைய கோடரி கொண்டு நின் வீரர் காவல் மரங்களை வெட்டுவர்.[9]*

---

[1] புற. 228:1
[2] புற .32:8
[3] புற .228
[4] புற .256
[5] நற். 200:2-4
[6] நற் .293
[7] புற .312:3
[8] புற .21:7-8
[9] புற .36:6-7

*பிட்டன் பகைவர்க்கு, இரும்பைப் பயன்படுத்துகின்ற வலிய கையையுடைய கொல்லன் உலைக்கலத்திலே விளங்கும் உலைக்கல்லைப் போலும் ஆண்மை உடையவன்.*[1]

*தன் ஊரில் உள்ள வலிய கையுடைய கொல்லனைத் 'திருந்தின இலையுடைய நெடிய வேலை விரைந்து வடிப்பாயாக' என்று சொல்லி வேண்டி நிற்பான்.*[2]

*வேங்கை மரத்திலிருந்து விழுந்த பூக்கள், கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலைக்களத்தினின்றும் தெறித்து எழும் தீப்பொறி போல எழுந்து பரவி விழும்.*[3]

*கொல்லன் உலைக் களத்தில் அடிக்கும் இரும்பின் பொறி சிதறுமாறுபோலச் சிறிய பல காயையுடைய வேங்கை மரத்தின் மலர்கள் உதிரும்.*[4]

*கொல்லன் தொழில் புரியும் ஊதுகின்ற உலை மூக்கினைப் போல் காற்றை உள்விட்டு வெளியேற்றி கரடி நெட்டுயிர்ப்புக் கொள்ளும்.*[5]

*நுகத்தடியில் கட்டப்பட்ட தலையினைக் கொண்ட விரைந்த நடையினையும், காற்றினும் விரைந்தோடும் ஓட்டத்தினையும் உடைய அக்குதிரைகள், கொல்லன் வேகமாக இழுத்துவிடும் உலைக்களத்துத் துருத்திபோல வெப்பப் பெரு மூச்சு விடும்.*[6]

*இரும்பு வேலை செய்யும் கொல்லன், தனது வெம்மை மிகுந்த உலையிலே பனைமடலில் தோய்த்துத் தெளிக்கும் சிலவாகிய நீர்த்துளிகள் உலையின் நெருப்பினைச் சிறிது குறைக்கும்.*[7]

*மெத்தென்ற துருத்தியை அமுக்கி ஊதுகின்ற உலையிற் கொற்றொழில் செய்கின்றவனுடைய முறிந்த கொடிற்றை ஒத்ததாக இருந்தது நண்டின் கவைக்கால்.*[8]

*பெரிய கையினையுடைய யானைக்குக் கோட்டின்கண் பூணைச் செறிக்கும் வலிய கையினையுடைய கொல்லன், சம்மட்டியை விசைத்து எறிந்ததனால் எழுந்த திண்ணிய ஓசைக்கு அஞ்சி மாடத்தின் இறப்பிலே உறையும் செங்காற் புறவினது சேவல், இனிய உறக்கத்தை நீக்கியது.*[9]

என்ற மேற்கண்ட சங்கப் பாடல் கருத்துக்களைக் கொண்டு பார்க்கின்றபோது, கொல்லர் உலைக்கலத்தில் துருத்தியினைக் கொண்டு இரும்பினைக் காய்ச்சி வடித்து பல்வேறு இரும்புப் பொருள்களையும், படைக் கருவிகளான வேல், வாள், கோடரி போன்றவற்றையும் செய்து கொடுத்ததை அறிந்துகொள்ளமுடிகிறது. அரசனொருவன்,

> *“…………… தன் ஊர்க்*
> *கருங் கைக் கொல்லனை இரக்கும்*
> *திருந்து இலை நெடு வேல் வடித்திசின்' எனவே”*[10]

---

[1] புற .170:17
[2] புற .180:12-13
[3] அக .202:5-6
[4] நற் .13:5-7
[5] நற் .125:3-5
[6] அக .224:2-5
[7] நற் .133:9-11
[8] பெரு .206-208
[9] பெரு .437-440
[10] புற. 180:11-13

*எனக் கொல்லனிடம் வேல் வடித்துத் தரும்படி இரந்து நிற்பதாகக் குறிப்பிடும் புறநானுற்றுப்பாடல், சமூகத்தில் அவர்களுக்கிருந்த உயர்மதிப்பைப் புலப்படுத்துகின்றது.*

### *2.4.4. தச்சர்*

*சங்கத் தொகைநூல்களில் தச்சர்களைப் பற்றிய குறிப்பு சில இடங்களில் மட்டுமே காணப்பட்டாலும் தச்சர்களால் உருவாக்கப்பட்ட ஏராளமான புழங்குபொருட்களைப் பற்றிய குறிப்புகள் அதிக அளவில் காணப்படுகின்றன. அவற்றைக் கொண்டு அக்காலத் தச்சர்கள் பெற்றிருந்த சமூக முக்கியத்துவத்தை அறியலாம்.*

*சங்கத் தொகைநூல்களில் தச்சர்களைப்பற்றிக் குறிப்பிடும்போது அவர்கள் குதிரைகளால் இழுக்கப்பட்ட தேர்[1], எருதுகளால் இழுக்கப்பட்ட வண்டி, வண்டியின் சக்கரம்[2] ஆகியவற்றைச் செய்தவர்களாகக் குறிப்பிடப்படுகின்றனர்.*

*தச்சர்கள் தாங்கள் செய்த பொருட்களுக்குத் தேவையான மரங்களைத் தாங்களே காட்டிற்குச் சென்று தேர்ந்தெடுத்து வெட்டிக் கொண்டுவந்தனர். தந்தையின் தொழிலுக்கு அவர்களின் பிள்ளைகளும் உதவினர் என்பதை, "மரம் கொல் தச்சன் கைவல் சிறாஅர் மழுவுடைக் காட்டகத்து"[3] என்று புறப்பாடல் ஒன்று சுட்டுகிறது.*

*தச்சர்களின் பிள்ளைகளும் பிறர் விரும்பும் படியாகச் சிறு தேர்களை புனைந்துள்ளனர். இதனை, "தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த ...தேர்"[4] எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுவதிலிருந்து தந்தை வழியாகத் தச்சுத் தொழிலின் நேர்த்தியை அவர்களின் பிள்ளைகளும் தெரிந்து வைத்திருந்தனர் என ஊகிக்க இடம் தருவதோடு, தச்சுத் தொழில் குடித்தொழிலாக வழிவழியாக செய்யப்பட்டு வந்துள்ளது என்பதையும் அப்பாடற் கருத்து உணர்த்துகிறது. இவர்களைக் கம்மியர்[5] என்றும் குறிப்பிடுகின்றனர்.*

### *2.4.5. கம்மியர்*

*கம்மியர் என்னும் சொல் சங்க இலக்கியப் பாக்களில் தட்டார், கன்னார், சிற்பர், கொல்லர், தச்சர் போன்ற தொழில் நுட்ப அறிவு வாய்க்கப்பெற்றவர்களைக் குறிக்க வழங்கப்பட்ட பொதுச்சொல். அக்காலத்தில் கைத்தொழில் நுட்பஅறிவு வாய்க்கப்பெற்றவர் எல்லோருமே கம்மியர் என்றே அழைக்கப்படனர்.*

#### *2.4.5.1. பொற்கொல்லர்*

*சங்க இலக்கியத்தில் பொற்கொல்லர்கள் "இழைபுனைநர்"[6], "பொன் செய் கம்மியன்"[7] எனக் குறிக்கப்பெற்றனர். மதுரை நகரத் தெருக்கலில் பல்வேறு தொழில் செய்வோருக்கு இடையில் நின்று பொன்னாலான அணிகலன்களைச் செய்யும் தட்டாரும் வணிகம் செய்ததை, "சூடு உறு நன்பொன் சுடர் இழை புனைநரும்"[8] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.*

---

[1] குறு .61:1; புற .87:3; சிறு .257-258
[2] புற .290:4
[3] புற .206:11-12
[4] பெரு .248 - 249
[5] நெடு. 85-86
[6] மது. 512
[7] நற். 313:2
[8] மது. 512

*வேங்கை மரத்தின் புதிய பூ பொன்வேலை செய்யும் பொற்கொல்லனுடைய கைவினை வண்ணம் போல மிக அழகானதாக இருந்ததை,*

> *“கருங்கால் வேங்கை நாள் உறு புதுப் பூ*
> *பொன் செய் கம்மியன் கைவினை கடுப்ப”*[1]

*என்றும், பொன்னால் ஆகிய பல பொற்காசுகளால் அமைந்த மேகலையை பொற்கொல்லர் செய்ததை, “ஆசுஇல் கம்மியன் மாசுஅறப் புனைந்த பொலம்செய் பல்காசு* [2]*”என்றும், பொறி அற்றுப்போன அணிகலனை இணைத்துச் சந்து ஊதிக் கூட்டுதற்கு மணலைப் பயன்படுத்தியதை,*

> *“உறு வினைக்கு அசாவா உலைவு இல் கம்மியன்*
> *பொறி அறு பிணைக் கூட்டும் துறை மணல்”*[3]

*என்றும் குறிப்பிடுவதுகொண்டு, சங்க காலத்தில் வாழ்ந்த பொற்கொல்லர்களைக் குறித்து அறியமுடிகிறது. அக்காலத்து அரிய பல அணிகலன்கள் பொற்கொல்லர்களால் செய்யப்பட்டதை,*

> *“பொன்னும், துகிரும், முத்தும், மன்னிய*
> *மா மலை பயந்த காமரு மணியும்,*
> *இடைபடச் சேய ஆயினும், தொடை புணர்ந்து,*
> *அரு விலை நன் கலம் அமைக்கும்காலை”*[4]

*எனப் புறநானூறும், கொடுமணம் என்ற ஊர் தொழில் மாட்சிமைப்பட்ட நல்ல அணிகலன்களுக்குப் பெயர் பெற்று விளங்கியதை, “கொடுமணம் பட்ட வினை மாண் அருங்கலம்”*[5] *எனப் பதிற்றுப்பத்தும் குறிப்பிடுகின்றன.*

### *2.4.5.2. நெசவாளர்*

*மதுரை நகரத் தெருக்கலில் பல்வேறு தொழில் செய்வோருக்கு இடையில் நின்று சிறியனவும், பெரியனவுமாகிய மடித்த புடவைகளைக் கொண்டுவந்து விரித்து, சிறியோரும் பெரியோருமாகிய நெய்தல் தொழில் செய்வோர் விற்பனை செய்ததை,*

> *“குறியவும் நெடியவும் மடி தரூஉ விரித்து,*
> *சிறியரும் பெரியரும் கம்மியர் குழீஇ”*[6]

*என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.*

### *2.4.5.3. செம்புப் பாத்திரம் செய்வோர்*

*சங்க காலத்துச் செம்புப் பாத்திரம் செய்யும் தொழில் வல்லாரும் இருந்துள்ளனர். இதனை, கம்மியர் செம்பினாலே செய்த பானையைக் கடைந்தாற் போன்று மின்னி எங்கும் மழை பெய்ததை, “கம்மியர் செம்பு சொரி பானையின் மின்னி”*[7] *என்ற நற்றிணைப் பாடல் குறிப்பது கொண்டு அறிய முடிகிறது.*

---

*[1] நற். 313:2*
*[2] புற. 353:1-2*
*[3] நற். 363:4-5*
*[4] புற. 218:1-4*
*[5] பதி. 74:4*
*[6] மது. 520 – 521*
*[7] நற். 153:2-3*

### *2.4.5.4. முத்தினை தூய்மை செய்வோர்*

*கழுவித் தூய்மை செய்யப்பெறாத முத்திலும் மணியிலும் மூடி இருக்கும் மாசுகளைப் போக்கி அவற்றை ஒளிபெறச் செய்து அவற்றில் துளையிடும் பணி செய்யும் கம்மியர் சங்க காலத்தில் இருந்தனர். இதனை, "கைத்தொழில் வல்ல கம்மியன் அழகுபெறக் கழுவித் தூய்மை செய்யாத பசியமுத்து தனது ஒளியை வெளியே செலுத்தாது மறைத்தாற் போல"[1] என்ற நற்றிணைப் பாடல் உவமையால் அறியமுடிகிறது. மேலும் மணிகளில் துளையிடுவோரை "திருமணி குயினர்"[2] என மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது. அக்காலத்தில் 'பந்தர்' என்னும் ஊர் முத்துக்குப் பெயர் பெற்று விளங்கியதை, "பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்"[3] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.*

### *2.4.5.5. விசிறி செய்வோர்*

*விசிறி செய்து விற்கும் கைத்தொழில் செய்வோரும் சங்க இலக்கியத்தில் கம்மியர் என்ற சொல்லால் குறிக்கப்பெற்றுள்ளனர். இவர்களைக் குறித்து, 'கையாற் புனைதல் வல்ல, பொருள்களில் உருவங்களைப் பதிக்கும் கலைநுட்பம் வாய்ந்தவனால் பண்ணப்பட்ட அழகிய சிவந்த நிறமுடைய ஆலவட்டம் பயன்படுத்தாமல் உறையிலிடப்பட்டுக் கிடந்ததை, "கை வல் கம்மியன் கவின் பெறப் புனைந்த செங் கேழ் வட்டம் சுருக்கி"[4] என நெடுநல்வாடை சுட்டுவது கொண்டு தெளியலாம்.*

### *2.4.6. கூவியர்*

*அப்பவணிகர்கள் சங்க இலக்கியத்தில் கூவியர் என்ற பெயரால் குறிப்பிடப்படுகின்றனர். இவர்கள் அடை, மோதகம், அப்பம் முதலான பண்டங்களை விற்பனை செய்தனர்.[5]*

### *2.4.7. விலைஞர்*

*பொருட்களை விலைகூறி விற்கும் வணிகர்கள் விலைஞர் என்று அழைக்கப்பட்டனர். சங்கப் பாக்களில் இவர்களைப்பற்றி, பூவினை விலைகூறி விற்போர்,[6] வளையலை விலைகூறி விற்பவர்,[7] மதுரை நகர நாளங்காடியில் விலை கூறி விற்பவர்கள்,[8] ஊன் விற்போர்[9] என்ற நிலைகளில் அறிய முடிகிறது.*

## *2.5. அலைகுடிகள்*

### *2.5.1. பாணர்*

*சங்க காலத்தில் பாடுவதையும் இசைக்கருவிகளை வாசிப்பதையும் தொழிலாகக் கொண்டவர்கள் பாணர்கள் எனப்பட்டனர். பாணர் என்ற சொல்லுக்குப் பாடுவோர், புகழ்வோர், யாழ்மீட்டுவோர் என அகராதிகள் விளக்கமளிக்கின்றன. "பாணர் என்ற சொல் 'பண்' என்பதன் அடியாகப் பிறந்தது. பண் என்பது பாடலையும் இசையையும் குறிக்கும். பண்ணை இசைத்தவர்கள் பாணர்கள் எனப்பட்டார்கள்."[10] என்றும் இவர்களைக் குறித்து விளக்கப்பட்டுள்ளது. தமிழின் தொன்மையான இலக்கண நூலான தொல்காப்பியம் பாணர்களை*

---

[1] நற். 94:4-5
[2] மது. 511
[3] பதி. 74:6
[4] நெடு. 57-58
[5] மது. 624-627; பெரு. 377-378
[6] அக. 391:1-4
[7] குறு. 117:6
[8] மது. 395-406
[9] பட். 198
[10] வெ. வரதராசன், தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும், ப. 7

*இசைப்பாணர், யாழ்பாணர், மண்டைப்பாணர் என மூன்றாக வகைப்படுத்திக் கூறுகிறது. இவர்கள் யாழ்வாசிப்பதில் சிறந்து விளங்கினர்.*[1] *இவர்கள் வாசித்த யாழை அடிப்படையாகக்கொண்டு சிறுபாணர், பெரும்பாணர் என்றும் வகைப்படுத்துவதுண்டு. தனிநிலையில் பாணர் என்பது ஒரு இசைக் கலைஞனைக் குறித்தாலும், பொது நிலையில் பொருநர், விறலியர், கூத்தர், கோடியர், வயிரியர், கண்ணுளர், இயவர் முதலிய கலைக்குழுவினர் அனைவரையும் குறிக்கின்ற பொதுச்சொல்லாகவும் குறிப்பிடப்படுகிறது.*

*இவர்கள் வேந்தர்களையும், குறுநில மன்னர்களையும், முதுகுடி மன்னர்களையும், சீறூர் மன்னர்களையும் போற்றிப்பாடி, பரிசில் பெற்று வாழும் வாழ்க்கை உடையவர்களாக இருந்தனர்.*

*சங்க இலக்கியத்தில் இருநிலைப்பட்ட பாணர்களைக் காணமுடிகிறது. புரவலரைப் புகழ்ந்து பாடும் கலைத்துறைப் பாணர்கள் ஒருவகையினர். தலைமக்களிடையே தூது செல்லல், பரத்தையரைத் தலைவனுக்குக் கூட்டுவித்தல் போன்றவற்றை மேற்கொண்ட அகத்துறைப் பாணர்கள் மற்றொரு வகையினர்.*

### *2.5.1.1. குழுவாக இயங்குதல்*

*பாணர்கள் தனியே இயங்காமல் புரவலரை நாடிச் செல்லும்போது விறலி, பாடினி, இயவர், முழவர், கூத்தர் முதலான பல்வேறு கலைஞர்களுடன் குழுவாகவே சென்று பாடியும் ஆடியும் பரிசில் பெற்று வந்துள்ளனர். இதனை, "பசி தினத் திரங்கிய, ஒக்கலும் உவப்ப"*[2]*, "பாடுநர் கடும்பு"*[3]*, "இரு பாண் ஒக்கல் கடும்பு"*[4]*, "காரென் ஒக்கல், கடும் பசி, இரவல!"*[5]*, "பண் அமை நல் யாழ்ப் பாண் கடும்பு"*[6]*, "பாணர் பைதல் சுற்றம்"*[7]*, "பாணர்காண்க! இவன் கடும்பினது இடும்பை"*[8]*, "இரும் பேர் ஒக்கலொடு ஒருங்கு இனிது அருந்தி, தங்கினை சென்மோ, பாண!"*[9]*, "கல்லென் சுற்றமொடு கால் கிளர்ந்து திரிதரும் புல்லென் யாக்கைப் புலவு வாய்ப் பாண!"*[10] *எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன.*

### *2.5.1.2. பாணர் மதிப்பு*

*பாணர்கள் வறுமை நிலையில் வாடியவர்களாக இருந்தாலும், சமூகத்தில் அவர்கள் தங்கள் தொழிற் திறத்தால் சிறந்தவர்களாகவே மதித்துப் போற்றப்பெற்றனர். அவர்கள் அறிவிற் சிறந்து விளங்கியமை, "முதுவாய்ப் பாணன்"*[11] *என்பதால் போதரும். பிறப்பாலன்றி அவர்களின் யாழ் வாசிக்கும்திறன், இசைத்துறையில் பெற்றிருந்த மேதைமை முதலியன அவர்களைப் போற்றுதலுக்குரியவர்களாக மாற்றியது. இதனை, "துறைபல முற்றிய பைதீர் பாணர்"*[12]*, "நன்மை நிறைந்த நயவரு பாண"*[13]*, "தொல் இசை நிறீஇய உரைசால் பாண்மகன்"*[14]*, "பாணர் கைவல் சீறியாழ் கடன் அறிந்து இயக்க"*[15]*, "கை வல் பாண்மகன் கடன் அறிந்து இயக்க"*[16]*, "கடன்அறி மரபின் கைவல் பாண!"*[17] *எனக் குறிப்பிடுவனவற்றைக்கொண்டு தெளியலாம்.*

---

[1] *ஐங். 472, 473*
[2] *புற. 159:21*
[3] *புற. 160:10, 238:7*
[4] *புற. 224:3*
[5] *புற. 141:6*
[6] *புற. 170:13*
[7] *புற. 212:6-7*
[8] *புற. 173:2*
[9] *புற. 320:14-15*
[10] *பெரு. 21-22*
[11] *புற. 319:9*
[12] *மலை. 40*
[13] *புற. 308:3*
[14] *புற. 352:14*
[15] *புற. 398:4-5*
[16] *சிறு. 37*
[17] *பதி. 67:3*

### 2.5.1.3. பாணர் வறுமை

சங்க இலக்கியப் பாடல்களில் பாணர்கள் பசியிலும் ஏழ்மையிலும் வாடுபவர்களாகவே காணப்படுகின்றனர். இவர்கள் தங்களுக்கென்று எந்தவிதமான பொருளையும் சேர்த்துவைத்துக்கொள்ளாத பண்பினர். எனவே அவ்வப்போது அவர்களுக்குத் தேவை ஏற்பட்டபோது பரிசிலை எதிர்ப்பார்த்துச் சென்று புரவலரிடம் பொருள்பெற்று வாழும் வாழ்க்கையர். எனவே இவர்களின் நிலை இரங்கத்தக்கதாய் இருந்தது. கையில் யாழும், உடலில் காப்பார் இல்லாமையால் உண்டான பசியுடன், இடையில் வேறுவேறு நூலிழை நுழைந்து வியர்வையில் நைந்த கந்தலாடை உடுத்தியவனாய், வறுமையில் இருந்ததை,

> "கையது, கடன்நிறை யாழே; மெய்யது,
> புரவலர் இன்மையின் பசியே; அரையது,
> வேற்று இழைநுழைந்த வேர்நனை சிதாஅர்
> ஓம்பி உடுத்த உயவல் பாண!"[1]

> "உடும்பு உரித்தன்ன என்புஎழு மருங்கின்
> கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது,
> சில்செவித்து ஆகிய கேள்வி நொந்து நொந்து,
> ஈங்கு எவன் செய்தியோ? பாண!"[2]

எனவரும் புறப்பாடலடிகள் காட்டுகின்றன.

### 2.5.1.4. பாணர் பொருளாதாரம்

பாணர்களின் வாழ்க்கைக்குத் தேவையான பொருளாதாரம் இவர்களை ஆதரித்த புரவலர்களின் பரிசிலை அடிப்படையாகக்கொண்டு அமைந்திருந்தது. புரவலர்களிடமிருந்து உணவு,[3] கள்,[4] ஆடைகள்,[5] பொன்(பொற்றாமரை,ஆரம்)[6] முத்து[7] முதலியவற்றால் ஆன அணிகலன்கள், தேர்,[8] யானை,[9] குதிரை,[10] ஊர்[11] போன்றவற்றைப் பரிசிலாகப் பெற்றனர். எனினும் எப்பொருளையும் நாளைக்கு என்று சேர்த்து வைக்காது எல்லோர்க்கும் பகிர்ந்து கொடுக்கும் பண்புடையவராக விளங்கினர்.

### 2.5.1.5. அகவாழ்வில் பாணர்

பாணர்கள் மேற்குறித்தவாறு இசைக்கலைஞர்களாக மட்டும் இல்லாமல் அகவாழ்வில் தலைவன் தலைவிக்கு இடையே சந்துசெய்விப்பவனாகவும்[12] தூதனாகவும்[13] இருந்துள்ளதைச் சங்கப்பாக்கள் வாயிலாக அறியமுடிகிறது. தொல்காப்பியப் பொருளதிகாரம் பாணரை அகத்திணை வாயில்களுள் ஒன்றாகக் குறிப்பிடுகிறது.[14]

பரத்தையிடம் சென்றுவந்த தலைவனுக்காகத் தலைவியிடம் வாயில் வேண்டுபவராகவும், தலைவனின் தேவைக்காகப் பரத்தையர்களைத்

---

[1] புற. 69:1-4
[2] புற. 68:1-4
[3] பொரு. 103-118
[4] புற. 376:14; பொரு. 85-87
[5] புற. 69:3-4, 398:18-20; பொரு. 83
[6] புற.12:1, 69:20-21,150:20-21, 361:12-13
[7] பதி. 67:1-4
[8] பொரு. 163
[9] புற. 127:3; நற். 310:9; மது. 219; அக. 106:12
[10] புற. 185:4
[11] புற. 302:6-7
[12] புற. 144, 147
[13] நற். 167:5-6
[14] தொல். 1139

தேடித்தருபவர்களாகவும், அதன் பொருட்டுப் பல பெண்களின் நலம் சிதையக் காரணமானவராகவும்,[1] பொய்பேசுபவராகவும்[2] பாணர்கள் இருந்துள்ளனர். இதன் காரணமாகப் பாணர்கள் இல்லுறைப் பெண்களால் 'புலையன்'[3], 'பொய்யன்'[4] எனப் பெரிதும் பழிக்கப்பட்டனர்.

### 2.5.1.6. மீன்பிடித்து வாழ்ந்த பாணர்கள்

மேற்குறித்த இருநிலைப்பட்ட பாணர்களேயன்றி குளங்களில் மீன் பிடித்து வாழ்ந்த பாணர்களைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. 'மூங்கிலால் ஆன தூண்டில் கோலைப் பயன்படுத்தி மீனைப் பிடிப்பதற்காக, பச்சிறைச்சி இட்ட பசிய தோற்பையைத் தோளில் தொங்கவிட்டுச் சென்று தூண்டில் முள்ளில் இரையைக் கோர்த்து தூண்டிலிட்டபோது இரையை மட்டும் கவ்விக்கொண்டு வாளைமீன் சென்றது.'[5] எனக் குறிப்பிடுவதைக்கொண்டு அறியமுடிகிறது.

மற்றொரு பாடலில், 'பாணர்கள் இருள்நிறைந்த நள்ளிரவில் மடுவில் இருந்த வாளைமீன்களைப் பிடித்துக்கொண்டு வந்தனர், அப்பாணரின் தங்கை அம்மீனைக் கூடையில் இட்டுக் கொடிகள் அசையும் தெருவில் அவற்றுக்கு விலையாகப் பழைய நெல்லை வாங்காமல் முத்துக்களையும் அணிகலன்களையும் வாங்கினர்'[6] எனக் குறிப்பிடுகிறது.

### 2.5.1.7. பாண்மகளிர்

பாண்மகளிர் வீடுசார் பணிகளையும், பாணர்கள் பிடித்துக் கொண்டுவந்த மீன்களை மருதநிலத்து ஊர்களில் நெல்லுக்கு விலையாக மீனைக் கொடுத்து பண்டமாற்று செய்துவந்தனர். இதனை, 'கயிறு கட்டப்பெற்ற நுண்ணிய தூண்டிற் கோலைக் கொண்டு பிடித்த வரால் மீனை, கள்ளுண்டு களித்திருந்த தன் தந்தைக்கு வஞ்சி மரத்து விறகு கொண்டு சுட்டு உண்பிப்பாள்' எனவும், 'பாணர் குடிப்பெண்கள் கெடிற்றுமீனைச் வட்டியில் சுமந்து சென்று மருத நிலத்து ஊர்களில் கொடுத்து அதற்கு மாற்றாக அவ்வட்டி நிறையுமாறு நெல்லை வாங்கிவந்தனர்'[7] எனவும் ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

### 2.5.1.8. மக்கள் தொடர்பாளர்

ஊர் ஊராகச் சுற்றித் திரிந்த பாணர்கள் தங்களை ஆதரித்த அரசர்களையும், குறுநில மன்னர்களையும், சீறூர் மன்னர்களையும் தாம் செல்லும் இடங்களிலெல்லாம் போற்றிப் பாடினர். எனவே இவர்களைப் பழங்காலச் சமூகத்தில் ஆள்வோரின் மக்கள் தொடர்பாளர்களாகச் செயல்பட்டுள்ளதை ஊகிக்கமுடிகிறது. இதனை, "பாண் சமூகமரபின் அதிகபட்ச வளர்ச்சியானது வீரயுகக் காலத்தில்தான் ஏற்பட்டது. அக்காலத்தில்தான் அது உன்னதமான உச்சக்கட்டத்தை அடைந்தது. வீரயுகக் காலம் முழுவதும் முதுகுடி மன்னர், சீறூர் மன்னர், குறுநில மன்னர் எனச் சிறிய அளவிலான குடியினர் கோலோச்சினார்கள். இக்குடிகளின் வரலாறே வீரயுகத்தின் வரலாறாகும். இந்த வீரயுகத்தின் அருமை பெருமைகளை ஆடல் பாடல்களுடன் ஊரெங்கும், நாடெங்கும், நாட்டைக் கடந்தும் பரப்பியவர்கள் பாண் சமூகத்தாரே. இவர்கள் நிகழ்த்து ஊடகமாகச்

---

[1] ஐங். 139
[2] நற். 200:8-10; குறு. 127:4-6
[3] கலி. 68:19
[4] குறு. 127:4
[5] பெரு. 283-287
[6] அக. 126:6-12
[7] ஐங். 47, 49

*செயல்பட்டார்கள்”[1] எனப் பக்தவத்சல பாரதி குறிப்பிடுவதோடு பொருத்திப் பார்க்கலாம். மேலும் இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் ஒரு குறிப்பிட்ட மன்னரின் பாணராகத் தம்மை அடையாளப்படுத்திக்கொள்வதை, “அவன் எம் இறைவன்; யாம் அவன் பாணர்”[2] எனக் கூறிக்கொள்வது நோக்கத்தக்கது.*

### 2.5.2. பொருநர்

*சங்க இலக்கியம் பல்வேறு வகையான பாண் குடிகளைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. அவர்களுள் பொருநர் என்போர் அரசர்களோடும், நிலக்கிழார்களோடும் நெருங்கிய தொடர்பு கொண்டு அவர்களைப் புகழ்ந்துபாடி அதன் மூலம் அவர்கள் தரும் பொருளைக்கொண்டு வாழ்க்கை நடத்தும் குடியினர்களாய்க் காணப்பட்டனர்.*

*தொல்காப்பியப் புறத்திணையியல் “கூத்தரும் பாணரும், பொருநரும் விறலியும்”[3] எனவரும் நூற்பாப் பகுதி இப்பொருநர்களைப்பற்றி குறிப்பிட்டுள்ளது. இவர்கள் சங்க காலத்தில் வாழ்ந்த பாண் குடிகளில் மிகவும் தொன்மையானவர்களாகக் காணப்பட்டனர். இதற்குச் சங்க இலக்கியத்துள் பத்துப்பாட்டுள் ஒன்றாகிய பொருநராற்றுப்படை என்ற தனி நூலே சான்றாக விளங்குகின்றது. பொருநராற்றுப்படை, “கோடியர் தலைவ!”[4] எனப் பொருநனைக் கூத்தர்களுக்குத் தலைவன் என்று குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.*

*பொருநர்களில் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனப் பலவகையினராகக் காணப்பட்டனர். பொருநர்கள் அரசர்களோடும் தலைவர்களோடும் நெருக்கமான உறவு கொண்டிருந்ததால் மற்ற பாண் கலைஞர்களை விடவும் குறைந்த அளவே வெளியிடங்களில் இருந்த புரவலர்களை நாடிச் சுற்றித்திரிந்தனர் எனலாம். இதனை, “கடலில் படை எடுத்துச் சென்று பகைவரை வெல்வதால் கொள்ளும் பொருள் நெருங்கிப் பெருகிய மறம் பொருந்திய வலிய முயற்சியுடைய சோழநாட்டில் வாழும் பொருநன் நான். ‘நாங்கள் தலையாட்டம் அணிந்த குதிரைகளையுடைய நலங்கிள்ளியின் விருப்பத்துக்குரிய பொருநராவோம்! பிற மன்னரைப் பாடி அவர் ஒரு பொருள் தருவதை விரும்போம். அவனது முயற்சி வெல்குவதாகுக’ என்று அவனையே பாடுவோம்!”[5] என்ற புறநானூற்றுப் பாடல் உணர்த்தும் கருத்தால் அறியலாம்.*

*சங்க இலக்கியத்தில் பொருநர் என்ற சொல் 57 இடங்களில் போர் செய்வோர்(வீரர்), தலைவர், அரசன், வேந்தன், பகைவர், பாடுவோன் என்ற பல பொருள்களில் பயின்று வந்துள்ளது.[6] அவற்றுள் பாடுவோனைக்குறித்து எட்டுத்தொகையில் நான்கு[7] இடங்களிலும் பத்துப்பாட்டில் மூன்று[8] இடங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்க காலத்தில் பொருநர் என்ற பெயரால் பலர் இருந்தனர். அவர்களிலிருந்து பாடும் தொழிலுடைய இவர்களை வேறுபடுத்திக்காட்ட “பொராஅப் பொருநரேம்”[9] (போர் செய்யும் பொருநரல்லர்) என்றே ஒரு சங்கப் புலவர் வேறுபடுத்திக் காட்டியுள்ளார்.*

---

*[1] பக்தவத்சல பாரதி, பாணர் இனவரைவியல், ப. 34*
*[2] புற. 316:4*
*[3] தொல்.புறத். நூற். 36*
*[4] பொரு. 57*
*[5] புற. 382*
*[6] பெ. மாதையன், சங்க இலக்கியச் சொல்லடைவு, ப . 510*
*[7] அக. 76:5; புற. 386:18-19, 390:12, 391:12*
*[8] மது. 99; சிறு. 203; பொரு. 3*
*[9] புற. 386:19*

*விழாக்கள் நடைபெறும் வளம்நிறைந்த ஊர்களுக்குச் சென்று கலைத்திறன் காட்டிப் பின் விழா முடிவுற்றதும் அங்கிருந்து விழாக் கொண்டாடும் வேற்றுப் புலங்களுக்குச் சென்று வாழும் நாடோடிக் கலைஞர்களாய்ப் பொருநர்கள் விளங்கினர்.*[1]

*பொருநர்கள் தனித்து இயங்காமல் பாடினியர், கூத்தர், விறலியர் போன்ற பிற பாண் குடியினர்களையும் ஒருங்கிணைத்தே தம் கலைத் தொழிலை மேற்கொண்டுள்ளனர் என்பதைப் பொருநராற்றுப்படை காட்டுகிறது. இப்பொருநர்களுக்கு வள்ளல்களிடத்தில் மிகுந்த ஆதரவும் மதிப்பும் இருந்ததைச் சிறுபாணாற்றுப்படை காட்டும் நல்லியக்கோடனின் வாயில் அடைக்காப் பண்பு*[2] *வெளிப்படுத்துகிறது.*

*புரவலர்களின் முற்றத்தில் தடாரிப்பறை கிழியும்படி பாடி நின்ற இவர்கள்*[3] *பழமையான நீர்ப்பாசியைப் போன்ற நைந்துபோன ஆடையைக்*[4] *கொண்டவர்களாய் தலையில் ஈரும் பேனும் நிறைந்து வறுமையில் பெரும் பசியால்*[5] *நலிந்தவர்களாய்க் காணப்பட்ட இவர்களுக்குப் புரவலர்கள் பொருநர்களின் அப்போதைய பசி நீக்க முதலில் புத்தாடை தந்தும், பிறகு கள்ளினைத் தந்தும், செம்மறியாட்டின் ஊன் கலந்த சோற்றையும், தின்பண்டங்களையும், பொரிக்கறியையும் பொற்கலத்தில் இட்டு உண்பித்தனர். எதிர்காலத் தேவைக்காக அவன் சுற்றத்தின் பசி தீர்க்க செந்நெல்லை நெற்போரோடு நல்கியும், பொற்றாமரை, பொன்னரிமாலை, முத்துமாலை போன்ற அணிகலன்களோடு யானைகளையும் தந்து உதவினர்.*[6] *எனச் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன.*

### *2.5.3. கூத்தர்*

*சங்ககாலப் பாணர் குடிகளுள் கூத்தர் எனப்படுவோரும் அக்காலச் சமூகத்தில் மிகமுக்கியமான நிகழ்த்துக் கலைஞர்களுள் ஒருவராகத் திகழ்ந்துள்ளனர். இவர்கள் 'கோடியர்' என்ற பெயராலும் சங்கப் பாக்களில் சுட்டப்பட்டுள்ளனர். பாணர், விறலியர், பாடினியர் போன்றோர்களைக் கொண்ட ஒரு கலைக்குழுவில் இவர்களும் ஒரு அங்கத்தினராகத் திகழ்ந்துள்ளனர். பத்துப்பாட்டில் ஒன்றாகிய கூத்தராற்றுப்படை இக்கூத்தரைப் பாண்குழுவிற்குத் தலைவனாகக் குறிப்பிடுகிறது.*[7] *பொருநராற்றுப்படை, "கோடியர் தலைவ!"*[8] *எனப் பொருநனைக் கூத்தர்களுக்குத் தலைவன் என்று குறிப்பிடுகிறது.*

*கூத்தர்கள் தங்கள் கூத்துக் கலையினை நிகழ்த்தச் செல்லுமிடங்களிலெல்லாம் பல்வேறு இசைக் கருவிகளைத் தங்களுடன் எடுத்துச் சென்றுள்ளனர். மத்தளம், சிறுபறை, கஞ்சதாளம், ஊதுகொம்பு, நெடுவங்கியம், தூம்பு, குழல், கரடிகை, சல்லிகை எனப்பட்ட பறை, கிணை மற்றும் இன்னபிற இசைக்கருவிகளைப் பையிலிட்டு ஒத்த கனத்தையுடையனவாக மூட்டையாகக்கட்டி காவடியில் தொங்குமாறு கூத்தர்கள் ஏந்திச் சென்றதாக மலைபடுகடாம்*[9] *குறிப்பிடுகிறது.*

---

[1] *பொரு. 1-3*
[2] *சிறு. 203-206*
[3] *பொரு. 8-9*
[4] *புற. 390:14; பொரு. 79-81*
[5] *பொரு. 61-63*
[6] *புற. 390; பொரு. 81-177; மது. 99-105*
[7] *மலை. 50*
[8] *பொரு. 57*
[9] *மலை. 1-13*

வறுமையால் பற்றப்பட்டவர்களாகவே இக்கூத்தர்களும் இருந்துள்ளனர். இவர்கள் வறுமை நீங்கும்படி நன்னன், இவர்களது அழுக்கேறிய ஆடைகளை நீக்கி நுண்ணிய நூலினால் நெய்யப்பட்ட புத்தாடைகளை உடுக்கச்செய்தும், உணவு, அணிகலன்கள், தேர், யானை, குதிரை, பசு ஆகியவற்றைக் கூத்தர்க்கும், விறலியர்க்கும் வழங்கினான் என மலைபடுகடாம்[1] குறிப்பிடுவது கொண்டு புரவலரிடம் பொருள்பெற்று வாழும் வாழ்க்கையினராக இவர்கள் வாழ்ந்தனர் என்பதை அறியலாம்.

கூத்தர் புரவலரின் புகழினைத் தொகுத்துக்கூறி வாழ்த்திப் பாடி பரிசில் பெறுவதை வாழ்க்கையாகக் கொண்டிருந்தனர்.[2] அவ்வகையில் சேரமன்னன் அவையில் கூத்தர், தங்கள் திறமையைக் காட்டி, அரசனை வாழ்த்திப் பாடியதாக மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.[3] அவ்வாறு வாழ்த்திப் பாடியதற்குப் பரிசிலாகக் கூத்தர்கள் சுற்றம் மகிழும்படியாகக் குதிரைகளைக் கொடுத்தான் சேரன் என்கிறது பதிற்றுப்பத்து.[4] நாடுகளைக் கூத்தாடுவோர்க்குக் கொடுத்தவன் ஓரி என்கிறது சிறுபாணாற்றுப்படை[5]. கூத்தரை நல்லியக்கோடன் போன்ற வள்ளல்களும் போற்றி ஆதரித்தனர்.[6]

"கூத்தர்கள், கொடைத் தன்மையுடையார் கொடுத்த பரிசிலாகிய சிறிய உணவினை இடைவிடாதும், பாதுகாத்து வையாமலும் நன்கு உண்ணும் இயல்பினர்; நீரில் வாழும் முதலையின் அங்காந்த வாயினைப் போன்ற பாயால் வேயப்பெற்ற ஒலிக்கின்ற வாயினையுடைய வண்டியில் அமர்ந்து செல்வர்; 'இஃது எம்ஊர்' என்று சொல்லும்படியாகத் தமக்கென்று ஓர் ஊர் இல்லாதவர்; இருப்பினும் துன்பமிலா இன்ப வாழ்வினர். இனிய ஓசையினையுடைய கிணைப்பறை ஒலிக்க, காண்பார்க்குக் காட்சி இன்பம் உண்டாகுமாறு குவிந்த கொத்துக்களையுடைய எருக்கினது நெருங்கிய மலர்களாலாய கண்ணி, கூத்தருள் ஆடவர் தலையினை அழகு செய்யும்; காட்டுத் தீயின் அழல் ஒளியில் தொடுக்கப்பட்ட ஆவிரைச் செடியின் மலர்களாலாய மாலை அவர்தம் மங்கையரின் வண்ண மார்பகத்தின் அழகு முலைகளில் கிடந்தசையும்; நெருங்கிய நடையினையுடைய பெண் யானையின் உயிர்ப்பு ஒலியுடன் ஆண் யானையின் உயிர்ப்பொலி சேர்ந்து ஒலித்தது போன்று, சிறுவங்கியம், பெருவங்கியம் இவற்றின் ஒலியுடன் முழவின் ஓசையும் சேர்ந்து ஒலிக்கும்; கரிய மேகம் முழங்கும் போது நீரின்கண் ஒலிக்கும் தேரையின் ஒலியினைப் போன்று தாளம் அமைத்து, அரித்தெழுகின்ற ஓசையையுடைய பலவாத்தியங்களோடு பலஊர்களிலும் சென்று கூத்தாடுவர்; கூத்தாட்டம் முடிந்தவுடன் பையினுள் விரைவாகப் பல வாத்தியங்களையும் உள்ளிட்டு அதன் தலையினைச் சேர்த்துக் கட்டுவர்; பின்னர், தம் மிகப்பெரிய சுற்றத்தோடு கூத்தாடிய இடத்தினின்றும் பெயர்ந்து போவர்; அவர்கள் சென்றபின் பொலிவிழந்து காணப்படும் அக்கூத்தாட்டு அரங்கினை மறுநாள் சென்று பார்க்கும்போது அக்காட்சி ஆரவாரமுடைய பழைய அவ்வூரில் வாழும் மக்களுக்குப் பெருந்துன்பம் தருவதாகும்."[7] என்று இவர்கள் ஊர்ஊராகச் சென்று கூத்து நிகழ்த்தும் வாழ்வினை அகநானூற்றுப் பாடலொன்று குறிப்பிடுகிறது.

ஊர்களில் விழா நிகழுங்காலத்துக் கூத்தர் முழவு இமிழ ஆடுவர்.[8] அம்முழவு பலாப்பழத்தைப் போன்ற வடிவுடையதாகவும்,[9] அதன் ஓசை மலையில் இருந்து

---

[1] மலை. 561-583
[2] அக. 111:8-9
[3] மது. 523-525
[4] பதி. 42:14-15
[5] சிறு. 108-109
[6] சிறு. 125-126
[7] அக. 301:4-25
[8] பதி. 56:1-3
[9] மலை. 143

*வீழும் அருவி போன்றும் இருந்தது.[1] களத்தில் ஆடும் கூத்தர் வேறுவேறான ஒப்பனையுடன் காட்சிதந்தனர்.[2] அதனால் கூத்தாடு களம் அலையின் ஆரவாரத்தை ஒத்துத் தோன்றியது.[3] ஆனாலும், இப்படிப்பட்ட கூத்தர்களின் முழவோசைக்கு ஏற்ப யாழின் இசையைக் கேட்டு மகிழும் திருநாள் போரினால் அழிந்த நாடுகளில் நடைபெறுவதில்லை எனப் பட்டினப்பாலை[4] குறிப்பிடுகிறது.*

*காடு மேடுகளையும் பாலை வழிகளையும் பொருட்படுத்தாது தங்களை ஆதரிப்பவர்களை நோக்கிக் கூத்தர் சென்றனர். இதற்குப் பல்வேறு நிலப்பகுதிகளையும் கடந்து நன்னனிடம் பரிசு பெறவந்த கூத்தரையும், காடு மிக நெடிய என்று எண்ணாராய், சேரமன்னரின் சேவடியை விரும்பிச் சென்ற கூத்தரையும் சான்றுகாட்டலாம்.[5] இவ்வாறு புரவலரை நாடிப் பாலை நில வழியில் செல்லும் கூத்தர் வழிச் செல்லும் வருத்தம் புலப்படாதவாறு இருக்க யாழினை இசைப்பர்.[6] இவ்வாறு பல்வேறு வாத்தியங்களை இசைத்ததால் அவ்வொலி பெரிய மலையில் எதிரொலித்தது.[7] எனவரும் மேற்குறித்த சங்க இலக்கியச் செய்திகள் கூத்தர்களின் வாழ்வையும் அவர்களின் சமூக மதிப்பையும் காட்டுகின்றன.*

### *2.5.4. விறலியர்*

*சங்ககாலப் பாணர் சமூகத்தில் குறிப்பிடப்படும் பல்வேறு கலைஞர்களுள் குறிப்பிடத்தக்க பெண் கலைஞர்களாகத் திகழ்ந்தவர்கள் விறலியர்கள். இவர்களை பாண்மகள், பாடினி, ஆடுமகள், கிணைமகள் என்ற பெயர்களாலும் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இவர்களேயல்லாமல் பாடியர், பாடுமகள், பாட்டி, பாணிச்சி என்ற பெண்பாற் கலைஞர்களும் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவ்விறலியர் பாணர், பொருநர், கூத்தர் போன்ற பிற கலைஞர்களுடன் குழுவாகச் சென்று அரசர்களையும் வள்ளல்களையும் நாடித் தங்கள் ஆடல் திறனை வெளிப்படுத்திப் பொருள் பெற்று வாழ்ந்தனர்.*

*விறலி என்னும் சொல்லுக்கு 'உள்ளக்குறிப்புப் புறத்துவெளிப்பட ஆடுபவள்'[8], பாணர்குலப்பெண்; பதினாறுஅகவைப்பெண் என அகராதிகள்[9] விளக்கமளிக்கின்றன.*

*"மெல்லிதாய் வீழ்கின்ற மழையின் அழகினைக்கொண்ட கூந்தலினையும், ஆண் மயில்கள் சாயற்கொவ்வேமென நாணித் தம் பெடையினூடே சென்று மறைதற்குக் காரணமான சாயலினையும், ஓடியிளைத்த நாயினது நாவினை ஒத்து அணிகலனின்மையாற் பொலிவிழந்த அடியினையும், பிடியின் கையெனத்திரண்டு செறிந்த தொடையினையும், வாழைப்பூப் போன்ற பனிச்சையினையும், வேங்கை மலர் போன்ற சுணங்கினையும், கோங்கரும்பொத்து அணிகலனகத்தே அடங்கிய முலையினையும், நுங்கின் இனிய நீரினை ஒத்த ஊறலுடைய எயிற்றினையும், முல்லை சூடுதற்கமைந்த கற்பினையும், மெல்லியல்பினையும், மான் நோக்கினையும், ஒளிபொருந்திய நுதலினையும் உடைய விறலியர்"[10] என இவர்களது தோற்றமும் இளமைத் தன்மையும் குறித்து சிறுபாணாற்றுப்படை கூறுகிறது. மேலும், நாயின் நாவைப் போன்ற அடி, மான்போன்ற மருண்ட கண், மயில் போன்ற தழைத்த மயிர்[11] என்றும், ஒளிபொருந்திய நெற்றி, மடப்பம்*

---

[1] *குறு. 78:1-3*
[2] *புற. 29:22-24*
[3] *புற. 28:13*
[4] *பட். 252-255*
[5] *அக. 309*
[6] *நற். 212:3-4*
[7] *அக. 359:8-9*
[8] *தொல். பொருள். 91*
[9] *http://agarathi.com/word/விறலி*
[10] *சிறு. 13-33*
[11] *மலை .46*

பொருந்திய பார்வை, ஒளியுடைய பற்கள், சிவந்த வாய், தளர்ந்த நடை[1] என்றும், மூங்கில் போன்ற பெருத்த தோள், குளிர்ந்த கண், இளைய நகில், துகிலணிந்த அல்குல், தேனீக்கள் பரவிய கூந்தல், மின்னுகின்ற இழை[2] என்றும், பீலிமயில் போல மணம் வளரும் கூந்தல்[3], இனிய முறுவல்[4], என்றும், பொன்னாகிய அணிகலன்கள் ஒலிக்க பக்கங்கள் உயர்ந்த அல்குல், முகையினை ஒத்த பற்கள், இருண்டு தழைத்த ஐந்து பகுதிகளையுடைய கூந்தல்.[5] என்றும் வரும் சங்கப் பாடல் குறிப்புகளும் விறலியர்களின் தோற்றத்தைப் புலப்படுத்துகின்றன.

விறலியர் முழவோசையோடு ஒத்திசைந்த பண்ணமைந்த யாழிசைக்கு ஏற்ப, விறல்பட ஆடி அரசனுக்குக் களிப்பூட்டிய இவர்கள்[6] மன்னர்களின் அவைக்களத்தில் மட்டுமல்லாது மலைச் சாரலிலுள்ள குறிஞ்சி நிலத்து ஊர்களிலும் கூத்தாடினர்.[7] கூத்தர் விழாவிலும் ஆடினர்.[8] பழமையான நகரில் நெய்யினால் சுடர்விட்டு எரியும் விளக்கின் ஒளியிலும் நடனமாடினர்.[9] "வண்டுகளால் துளைக்கப்பட்ட மூங்கிலில் புகுந்த காற்று குழலிசையாகவும், அருவி கொட்டும் ஓசை முழவிசையாகவும், கலைமானின் தாழ ஒலிக்கும் கடிய குரல் பெருவங்கியத்தின் இசையாகவும், வண்டுகளின் ஒலி யாழின் இசையாகவும் விளங்கும் இப்பலவகை இசைகளையும் கேட்டு மந்திகளின் கூட்டம் விறலி போல ஆடும் மயிலின் ஆட்டத்தைக் கண்டு ஆரவாரித்தது"[10] என்ற அகப்பாட்டு வர்ணணை அவர்களின் ஆடல் திறனுக்குச் சான்று பகர்கின்றது.

இவர்கள் ஆடுவதில் மட்டுமின்றி பாடும் திறன் பெற்றவர்களாகவும் விளங்கினர் இதனை, "இறும்பூது கஞலிய இன்குரல் விறலியர் நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடி"[11], "பாடல் நல் விறலியர்"[12] எனக் குறிப்பிடுவது கொண்டு அறியலாம். மேலும் இவர்கள் முழவு, யாழ், தூம்பு, எல்லரி, ஆகுளி, பதலை முதலான பல இசைக் கருவிகளையும் இசைக்கவல்ல ஆற்றல் பெற்றவர்களாகவும் திகழ்ந்துள்ளனர்.[13]

விறலியர்களின் பரிசில் வாழ்க்கையையும் அவ்வள்ளல்களுக்கு விறலியர்பால் இருந்த மதிப்பையும் பாரியின் பறம்பு மலையும்,[14] ஆய் அண்டிரனின் பொதிய மலையும்[15] விறலியர்களால் அணுக இயலுமேயன்றி பகை மன்னர்களால் நெருங்க முடியாது என்ற புறப்பாடல் பதிவுகள் புலப்படுத்துகின்றன. இவர்கள் அத்தகைய வள்ளல்களிடமிருந்து, குறுந்தொடிகள்,[16] பொன்னரிமாலை,[17] யானையின் தந்தத்தில் விளைந்த ஒளி திகழும் மத்தம்,[18] பூத்த வேங்கை மரத்தைப் போன்ற அணிகலன்களையும்[19] மலைபோன்ற யானைகளையும்[20] பரிசாகப் பெற்றுள்ளனர்.

வயிற்றுப்பாட்டுக்கும் வழியில்லாத விறலியர்களும் வாழ்ந்துள்ளதை, "தோள் சுமையினது ஒரு புறத்தே பதலை என்னும் கருவி தொங்குகிறது; மற்றொரு புறத்தே துளையுடைய முழா தொங்குகிறது; இவற்றைச் சுமந்தவாறே எமக்கு உணவு இடுவார் யாருமிலராயினர்; எனக்கு உணவு இட்டுக் கவிழ்ந்து கிடக்கும்

---

[1] பதி .51
[2] பதி .54; புற .32
[3] புற .109,133
[4] புற .70
[5] பதி .18; புற .89:1-2
[6] பொரு .109-110; பதி.58
[7] நற் .328:11
[8] அக .352:5; மலை . 46-50
[9] பதி .47
[10] அக .82
[11] மலை .358-359
[12] பரி .17:15
[13] புற .152:13-17
[14] புற .111
[15] புற .128
[16] மது. 218; புற. 244
[17] புற. 141:2; பதி. 48; பெரு. 485-486
[18] புற. 170
[19] பதி. 40; புற. 105
[20] புற. 140:3; பதி. 43

*உண்கலத்தை மலர்த்த வல்லார் யாரெனச் சொல்லிச் சுரத்திடையை விறலி வருந்தினாள்"*[1] எனவரும் புறப்பாடல் கருத்துக்கள் புலப்படுத்துகின்றது.

வள்ளல்கள் முன்பும், ஊர்த்திருவிழாக்களில் மக்கள் முன்பும் ஆடியும் பாடியும் பரிசில் பெற்று வறுமை நிலையில் வாழ்ந்த விறலியர்கள் செய்யுள் புனையும் ஆற்றலைப்பெற்றுத் திகழ்ந்துள்ளனர் எனக் கருதுவதற்கு ஔவையார், ஆதிமந்தி போன்றோரது பாடல்கள் இடம் தருகின்றன.

குறுந்தொகையில் ஆதிமந்தியின் பாடலொன்றில் "யானும் ஓர் ஆடுகள மகளே"[2] எனக் குறிப்பிடுவது கொண்டு அவளை ஒரு விறலியாகக் கருத இடம் தருகிறது. அம்மன்கிளி முருகதாசும் "ஆதிமந்தியின் முன் கூறப்பட்ட பாடலை(குறு.31) நோக்கும் போது தன்னை ஆடுமகள் என்று கூறுவதால் அவள் விறலி என்பது வெளிப்படையாகிறது"[3] எனக் குறிப்பிடுவார். இதைப் போன்றே புறநானூற்றில் அதியமானின் வீரத்தைப் புகழும் பாடலொன்றில் ஔவையார் "இழை அணிப் பொலிந்த ஏந்து கோட்டு அல்குல், மடவரல், உண்கண், வாள் நுதல், விறலி!"[4] என விறலியின் கூற்றில் பாடுவார். இப்பாடலமைதி ஔவையாரை ஒரு விறலியாகக் கருத இடம் தருகிறது. க. கைலாசபதி ஔவையாரைப் பற்றிக் குறிப்பிடுகையில், "ஔவையார் அதியமானின் புகழ்பாடும் பாட்டொன்றில் அவர் தன்னை ஒரு விறலியாக இனம் காட்டிக்கொள்கிறார்"[5] என்று குறிப்பிடுவதும் கவனிக்கத்தக்கது. ஆனால் உ.வே.சா. "ஆராய்வோர் அதனைக் கொண்டு, விறலி முதலியவர்களாக நினைந்து விரைந்து முடிவு செய்துவிடுதல் மரபன்று; அங்ஙனம் பாடுதல் கவிமதமெனக் கொள்ளுதல் முறை" எனப் புறநானூற்று முன்னுரையில் தெளிவுறுத்துவதும் மனங்கொள்ளத்தக்கது.

மேற்குறித்தவாறு ஆடல் பாடல்களில் சிறந்து விளங்கி, செய்யுள் இயற்றும் அளவுக்குத் திறன்பெற்றவர்களாகவும் கருதப்பட்ட விறலியர்கள் பரத்தையர்களாகவும் மாறியுள்ளனர். இதனை, கா.சிவத்தம்பி புறப் பாடல்கள் சிலவற்றை அடிப்படையாக்கொண்டு "புறநானூறு: 32 ஒரு முக்கியமான மரபினைப் பற்றிக் கூறுகிறது. அதில் அவளை அனுபவிப்பதற்கு அடையாளச் சின்னமாக ஒரு பூவை வாங்குகிறான். இது விறலி பரத்தையாக மாறும் கட்டத்தின் முதற்படியாகலாம். பதிற்றுப்பத்து: 44, இன்னொரு உதாரணம் தருகிறது. அதில் உனது உடலை நோயோ, சாவோ அணுகாது விறலியே அணைந்திருப்பாள் என்று கூறப்படும். மன்னர்கள் விறலியுடன் திளைத்திருந்தமை இதிலிருந்து தெரியவருகிறது"[6] எனத் தெளிவுபடுத்துவார். ஆனால் சிறுபாணாற்றுப்படை, "முல்லை சான்ற கற்பின்; மெல்இயல்; மடமான் நோக்கின் வாள்நுதல் விறலியர்"[7] எனக் கற்புநிலை தவறாது வாழ்ந்தனர் என்ற கருத்தும் மனங்கொள்ளத்தக்கது. மேற்குறித்த இரு முரண்பட்ட கருத்துக்களும் இனக்குழுச் சமூகத்தில் உயர்வாகப் போற்றப்பட்ட விறலியர்கள் பிற்காலத்தில் அவர்களைப் போற்றுவார் இன்மையால் உடைமைச் சமூகத்தில் பரத்தையார்களாக தரம் தாழவேண்டிய நிலைக்கு ஆளாயினர் எனக் கருத இடமளிக்கிறது.

---

[1] புற. 103, 64
[2] குறு. 31:4
[3] அம்மன்கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும், பக். 235-236.
[4] புற. 89:1-2
[5] க. கைலாசபதி, தமிழில் வீரநிலைக் கவிதை, ப. 155.
[6] கா. சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், பக். 227-228.
[7] சிறு. 30-31

### 2.5.5. பாடினி

சங்க இலக்கியப் பாடல்களில் குறிப்பிடப்படும் பாடினி என்பவள் பாணனோடு இயைந்து செயல்பட்ட கலைஞர்களுள் ஒருவராவர். இவர்கள் பாணனோடு சேர்ந்து வேந்தர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் போன்றோரின் கொடைத் தன்மையையும் வெற்றிச் சிறப்பையும் புகழ்ந்து பாடி, பொருள் பெற்று வாழும் வாழ்க்கையை உடையவர்களாக வாழ்ந்துள்ளனர். இவர்கள் இசைபடப் பாடுவதில் வல்லவர்களாகவும், இசைக் கருவிகளை வாசிப்பதில் தேர்ந்தவர்களாகவும் இருந்துள்ளனர். சங்கத் தொகைநூல்களில் பாடினியைப்பற்றி பதினாங்கு இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.[1]

பொருநராற்றுப்படை இப்பாடினியர்களைப்பற்றி, "யாற்றின் அறல்போலும் கூந்தலினையும், பிறை போன்ற நுதலினையும், விற்போன்ற புருவத்தினையும், அழகிய கடையினையுடைய குளிர்ந்த கண்ணினையும், இலவிதழ்போன்ற இன்மொழி பேசும் வாயினையும், முத்துக்கள் போன்ற குற்றந்தீர்ந்த பற்களையும், கத்தரிகையின் குழைச்சை ஒத்து, அழகிய மகரக்குழை கிடந்தசையும் காதினையும், நாணத்தாலே கவிழ்ந்த கழுத்தினையும், அசைகின்ற மூங்கிலை ஒத்துப் பருத்த தோளையும், மெல்லிய மயிரினை உடைய முன்கையினையும், காந்தள் போன்ற மெல்விரலினையும், கிளியின் வாயை ஒத்த உகிரினையும், சுணங்கணிந்த முலையினையும், நீரின்கட் சுழி போன்ற உயரிய இலக்கணம் நிறைந்த கொப்பூழினையும், பிறரால் உண்டென்று காட்சி யளவையான் உணரப்படாத நுண்ணிடையையும், நிரலாக வண்டுகள் இருந்தாற்போன்று மணிகள் கோர்க்கப்பட்ட மேகலை அணிந்த அல்குலையும், கணைக்காலுக்கோதிய இலக்கணம் பொருந்திய திருத்தமுடைய கணைக்காலினையும், கணைக்காலுக்குப் பொருந்த அமைந்த நாயின் நாக்கை ஒத்த சிற்றடியினையும், அரக்குருக்கினாற் போன்ற சிவந்த நிலத்தே நடக்கையாலே பரல்கள் வருத்த மரலினது பழம்போன்ற கொப்புளங்கள் உச்சிப்போதின்கண் நடத்தலைத் தவிர்த்தலாலே பெடைமயிலின் அருகுநின்ற மயில்போலும் சாயலினையும் உடைய கல்விப்பெருமை மிக்க பாடினி"[2] என கேசாதிபாதமாக வருணிப்பதிலிருந்து பாடினியர் தோற்றப்பொலிவும் இளமையும் கொண்டவர்களாக விளங்கினர் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

இவர்கள் கூத்தர், பாணர், பொருநர், விறலி எனக் குறிப்பிடப்படும் கலைஞர்களின் வரிசையில் பாடலிலும் ஆடலிலும் சிறந்து விளங்கிய கலைஞர்களாவர். இவர்கள் வேந்தர், மன்னர், வள்ளல் எனப் பலதரப்பட்ட புரவலர்களிடம் அவர்களின் போர்த்திறத்தையும், வீரத்தையும், கொடைத்திறத்தையும் புகழ்ந்துபாடியும் தங்களின் ஆடல் உள்ளிட்ட பிற கலைத்திறனைக் காட்டியும் அப்புரவலர்களிடமிருந்து பொருள் பெற்று வாழும் வாழ்க்கையை உடையவர்களாகச் சங்கப் பனுவல்கள் சித்தரிக்கின்றன.

### 2.5.6. கிணைவர்

கிணைப்பறை எனப்படும் தடாரிப்பறையை வாசித்து வள்ளல்களின் கொடைத் தன்மையைப் போற்றிப் பாடி பரிசில்பெற்று வாழ்ந்தவர்கள் கிணைவர் எனப்பட்டனர். பாணர் மரபில் வந்த இவர்களும் சங்ககாலச் சமூகத்தில் வறுமையில்

---

[1] பதி. 14:17, 17:14, 61:16, 87:1; புற. 11:11, 11:14, 15:24, 242:3, 319:14, 361:11, 364:1; பொரு. 47, 162; பரி. 17:17

[2] பொரு. 25-47

வாடியவர்களாகவே இருந்துள்ளனர். இவர்களின் வறுமை நிலையைப் புறநானூறு "நிலை தளர்ந்து பாழ்பட்டுச் சீரழிந்த பல கால்களையுடைய மன்றத்தின் ஒருபக்கத்தே துயிலும் இடமாகக்கொண்டு பனை மடலினின்றும் எடுத்த நாரினையும், பனங்குருத்தையும் கிணையோடு சேர்த்துக்கட்டி; ஏரால் உழுதுண்டு வாழ்வோர் மனையின்கண் புகுந்து; அவர் நல்கும் உணவை இரந்துண்ணும் வருத்தம் பொருந்திய வாழ்வினை உடையவர்கள்"[1] என்றும், சிறுபாணாற்றுப்படை, "விழிக்காத கண்ணையும், சாய்ந்த செவிகளையும் உடைய குட்டிகள், பிறரால் கறக்கப்படாத பாலினை உடைய முலையை உண்ணுதலைத் தன் பசி மிகுதியால் பொறுக்க இயலாது, அண்மையின் ஈன்ற நாய் குரைக்கின்ற புன்மையை உடைய அடுக்களை; அதன் கண் கூரையிடத்து உள்ள கழிகள் கட்டற்று வீழ்ந்து கிடக்கும் பழைய சுவர்; அச்சுவரில் தோன்றிய கறையான் அரித்துச் சேர்த்த புழுதியிடத்துக் காளான் பூத்து விளங்கும் அட்டில்; இத்தகைய நல்குரவினால், இளைத்த உடலை உடைய நுண்மருங்குல் கிணைமகள் கடும்பசிக்கு ஆற்றாது குப்பையில் நின்ற வேளைக் கீரையை நகத்தால் கிள்ளி வந்தாள்; சுவை பயத்தற்கு இடும் உப்பும் இல்லாத வறுமை; உப்பின்றி அட்டிலிலே பக்குவம் செய்து கீரையை, புறங்கூறுவோர் காணுவதை நாணித் தலைவாயிற் கதவை அடைத்து எம் சுற்றத்தோடு பகிர்ந்து உண்டோம்"[2] என்றும் கூறும் பாடற் கருத்துகள் உண்ணும் உணவும் இருக்க இடமும் இன்றி வாழ்ந்த கிணைவர்களின் நிலையைச் சித்திரித்துக் காட்டுகின்றன.

கிணைவர்கள் தங்கள் வறுமை நிலையைப் போக்கிக்கொள்ள கிழார்களையும், குறுநில மன்னர்களையும் நாடியுள்ளனர். அதன்பொருட்டு அக்கிழார்களின் நிலவளத்தையும், கொடைநலத்தையும் பாடினர்.[3] அவர்களுற்ற பசித்துன்பத்தைப் போக்க இறைச்சிச் சோறு, பாலிலும் பாகிலும் செய்த பண்ணியங்கள்,[4] ஆண்பன்றியின் கொழுத்த ஊன் துண்டங்கள்,[5] சூட்டிறைச்சி, கள், முயலின் தசை விரவித்தந்த சோறு, நெற்கூடுகளிலிருந்து வேண்டுமளவு முகந்துகொண்ட உணவுப் பொருள், அணிகலன்கள்,[6] மணி, பொன், முத்து, உடை, எனப் பலவற்றைக் கொடுத்து இனி வறுமைத் துன்பத்தில் வருந்தாமல் நல்ல நிலையில் வாழவேண்டி கனவில் கண்டதை நனவிலே கொள்ளுமாறு[7] அவர்கள் நாடிச்சென்ற புரவலர்கள் நல்கியுள்ளனர்.

"வில்லியாதன் கிணையேம் பெரும!"[8] என்றும் "எழினி யாதன் கிணையேம் பெரும!"[9] என்றும் அவர்கள் குறிப்பிடுவதிலிருந்து, குறிப்பிட்ட வள்ளலின் புகழ்பாடுவோன் எனத் தங்களை அடையாளப்படுத்திக் கொள்வதில் பெருமை கொண்டனர் என்பதை அறிய முடிகிறது.

### 2.5.7. முழவன்

முழவன் என்பவன் சங்ககாலச் சமூகத்தில் பாணர்க்குழுவில் இடம்பெற்றிருந்த இசைக்கலைஞர்களுள் ஒருவன். இவன் முழுவு என்னும் தோல் இசைக் கருவியினை இயக்கும் காரணத்தால் முழவன் என அழைக்கப்பட்டான்.

பண்டைக் காலத்தில் ஊர்த் திருவிழாக்களில் கூத்தர் குழுவினர் நிகழ்த்திக் காட்டும் நிகழ்த்துக்கலைகளில் விறலியரின் ஆடலுக்கும், பாடினியரின்

[1] புற. 375
[2] சிறு. 129-140
[3] புற. 377,381,384
[4] புற. 381
[5] புற. 379, 384
[6] புற. 396
[7] புற. 377
[8] புற. 379:7
[9] புற. 396:14

பாடலுக்கும் முழவனின் முழவிசை முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக விளங்கியது. இவர்களைப் பற்றியக் குறிப்பு அகநானூற்றில் ‘கூத்தர் விழாவெடுக்கும் முதிய ஊரில் ஆடுகின்ற விறலியின் பின்னால் முழவினைத் தழுவியபடி நின்றான்’[1] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கூத்தர் குழுவில் இடம்பெற்றதோடன்றி, திருமணம் போன்ற மங்கள நிகழ்வுகளிலும் இவர்களின் பங்களிப்பு இருந்துள்ளதை, ‘ஓர் இல் நெய்தல் கறங்க, ஓர் இல் ஈர்ந் தண் முழவின் பாணி ததும்ப’[2] என்ற புறநானூற்றுப் பாடல் சுட்டுவது கொண்டு அறியலாம்.

### 2.5.8. கழைக்கூத்தி

ஊர் ஊராகச் சென்று கயிற்றின் மீது ஏறி ஆடும் கழைக்கூத்தியரை ஆடல்மகளிர் எனச் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இவர்கள் திருவிழாக்கள் நடைபெற்ற ஊர்களில் அரித்தெழும் ஓசையையுடைய இனிய இசைக்கருவிகளின் ஒலிக்கு ஏற்ப கழாய்க் கயிற்றில் ஏறி ஆடும் போது, தாளத்திற்கு ஆற்றாது தளர்வதை,

> “…………………………வியல் ஊர்ச்
> சாறு கொள் ஆங்கண் விழவுக் களம் நந்தி,
> அரிக் கூட்டு இன் இயம் கறங்க, ஆடு மகள்
> கயிறு ஊர் பாணியின் தளரும் சாரல்”[3]

எனக் குறிஞ்சிப்பாட்டும், குறிஞ்சி நிலப்பகுதியில் ‘புல்லாங்குழல் ஒலிக்க, பலவகை இசைக்கருவிகள் முழங்க ஆடுகின்ற கழைக்கூத்தி நடந்த முறுக்குண்ட கயிற்றில் அத்திப்பழம் போன்ற சிவந்த முகத்தையும் பஞ்சுபோன்ற தலையையும் உடைய குரங்கின் குட்டி ஆடும்’[4] என நற்றிணையும் குறிப்பிடுவது கொண்டு கழைக்கூத்தியரின் வாழ்க்கையை அறிய முடிகிறது.

## 2.6. பெண்ணின் இருப்பு

சங்க இலக்கியத்தில் பேசப்படும் பெண்களின் இருப்பு குறித்து முழுவதுமாக நோக்கும்போது, சொத்துடைமையின் அடிப்படையில் பெண் ஒடுக்கப்பட்டிருந்ததை உணரமுடிகிறது. ஆண் தன் தலைமையைத் தக்கவைத்துக் கொள்வதற்காகவும், தனக்குப் பிறகு தன் சொத்துக்கள் தன்வழிப்பிறந்த வாரிசுக்குப் போய்ச் சேரவேண்டும் என்பதற்காகவும் பெண்ணுடல் மீது மேலாதிக்கம் செலுத்துவதை உணரமுடிகிறது. அதற்காகக் கருத்தியல் ரீதியில் பெண்ணை ஒடுக்குவதற்கான பல்வேறு முயற்சிகள் நூதனமாகப் புகுத்தப்பட்டு வந்துள்ளதை சங்க இலக்கியத்தை உற்றுநோக்கப் புலப்படுகிறது. பெண்ணின் கற்பு போற்றப்பட்டமை, பெண்கள் காவலுக்கு உட்படுத்தப்பட்டமை, கணவன் இறந்துபிறகு மேற்கொள்ளும் கைம்மை நோன்புகள் அதையொட்டிய, ஒப்பனை மறுத்தல், அணிகலன் துறத்தல், வளையல் நீக்குதல், பாயின்றிப்படுத்தல் போன்ற நடைமுறைகளை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள பெண்களின் சமூக நிலை மேற்குறித்த நிலையில் மட்டுமே இருந்தது என்று சொல்வதற்கில்லை. உயர் வர்க்கத்தைச் சார்ந்த பெண்களோடு விளிம்பு நிலையில் வாழ்ந்த பெண்களை ஒப்பிடும்போது விளிம்புநிலைப் பெண்கள் சுதந்திரமாகவே இயங்கியதை உணரமுடிகிறது. இதற்கு அவர்களிடையே சொத்துடைமை இல்லாததும், அன்றாட

[1] அக. 352:5-6 [2] புற. 194:1-2 [3] குறி. 191-194 [4] நற். 95:1-4

வாழ்க்கைத் தேவைக்கான உற்பத்தி நடவடிக்கைகளில் அவர்களின் பங்களிப்பும் காரணமாக இருந்ததை சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன. இதனை கொடிச்சியர், ஆய்ச்சியர், உழத்தியர், நுளைத்தியர், எயிற்றியர் எனப்பட்ட திணைசார் பெண்களின் பொருளாதார நடவடிக்கையை நோக்கப் புலப்படுகிறது.

உயர் வர்க்கத்தைச் சார்ந்த பெண்கள் உழைப்பிலிருந்து விலகிய நிலையைக் காணமுடிகிறது. அவர்களின் ஆண்சார்புத் தன்மைக்கு இதுவே முக்கிய காரணமாக அமைவதை ஊகிக்கமுடிகிறது. செத்துடைமைச் சமூகத்தில் கற்பு பெண்ணுக்கான ஒன்றாக மட்டுமே வலியுறுத்தப்படுகிறது. பரத்தமை சமூகத்தில் நிறுவனப்படுத்தப்படுகிறது. இது சங்ககாலச் சமூகத்தில் பெண்ணுக்கிருந்த இழிநிலையைக் காட்டுகிறது.

சடங்கு இயற்றும் பூசாரிகளாக ஆண்களுக்கு நிகராக "அகவன்மகள்", "கட்டுவிச்சி", "புலைத்தி", "குறத்தி" எனப்பட்ட பெண்கள் செயல்பட்டுள்ள நிலையினை ஆண்மையச் சமூகத்தில் தாய்த்தலைமைச் சமூகத்தின் எச்சம் அல்லது இனக்குழுச் சமூக நிலை எனக் கருதலாம்.

### *2.7. இயல் முடிவுகள்*

குறிஞ்சி நிலப்பகுதிகளில் வாழ்ந்த குறவர், கானவர், கொடிச்சியர் எனப்பட்டோர் இனக்குழுச் சமூக அமைப்பைக் கொண்டவர்களாக இருந்தனர். வேட்டையாடுதலும், கிழங்கு, தேன் முதலான உணவுப் பொருட்களைச் சேகரித்தலும் இவர்களின் முதன்மையான தொழிலாக இருந்தது. வேட்டையில் கிடைத்தவற்றைத் தம் குழுவுக்குள் பகிர்ந்துகொண்டனர். இவர்களில் ஒரு பகுதியினர் தினைவிதைத்தலிலும் ஈடுபட்டிருந்தனர். தினைப் புனத்தை பகலில் பெண்களும், இரவில் ஆண்களும் காவல் காத்தனர். தந்தத்துக்காக யானைகளை வேட்டையாடினர். யானைகளைப் பழக்கி சுமைதூக்கப் பயன்படுத்தினர். இவர்கள் தங்களுக்கான உணவுத் தேவையில் தன்நிறைவு பெற்றவர்களாக இருந்தனர். தேவையின் பொருட்டு பண்டமாற்றுச் செய்துகொண்டனர்.

ஆயர்கள் மேய்த்தல் தொழிலை மேற்கொண்டவர்கள். பால்படு பொருட்கள் இவர்களின் அடிப்படைப் பொருளாதாரமாக இருந்தது. ஆய்ச்சியர் பால்படு பொருட்களைப் பண்டமாற்று செய்யும் பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தனர். ஆயர்களின் வீரம் சமூகத்தவர்களால் விரும்பப்பட்டது. இவர்கள் தங்கள் இனத்துக்குள் மட்டுமே திருமண உறவு கொண்டனர்.

உழவர்கள் நிலநீர் வளமிக்க பகுதிகளில் வாழ்ந்தனர். இவர்களைச் சங்கப்பாக்கள் வினைஞர், வினைநர், களமர், அரிநர் என்ற பல்வேறு பெயர்களால் சுட்டுகின்றன. வேளாண்மை இவர்களின் முதன்மையான தொழிலாக இருந்தது. பிற விளைபொருள்களை பண்டமாற்றுமூலம் பெற்றுக்கொண்டனர். உழத்தியர் உழவுசார் பணிகளையும் சிலர் பூவிற்கும் தொழிலையும் மேற்கொண்டனர்.

பரதவர் மீன்பிடித்தல், முத்தெடுத்தல், உப்பு விளைத்தல் ஆகியவற்றைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். பரதவப் பெண்கள் மீன்விற்றல், மீன் உணக்கல் போன்ற பணிகளில் ஈடுபட்டனர். பிற நிலத்தவரோடு பண்டமாற்றுச் செய்து தேவையானவற்றைப் பெற்று வந்தனர்.

பாலைநிலத்தில் வாழ்ந்த எயினர்கள் ஆறலைத்தலைக் குலத்தொழிலாகக் கொண்டனர். இவர்கள் வழிப்போக்கரைத் தாக்கியோ கொன்றோ அவர்களின் பொருட்களைக் கொள்ளையிட்டனர்; மருதநிலப்பகுதிகளுக்குத் துடியை முழக்கிச் சென்று நெற்கூடுகளைக் கொள்ளையிட்டனர்; ஆனிரை கவர்ந்தனர்; விலங்கு வேட்டையில் ஈடுபட்டனர்.

பழந்தமிழகத்தில் அந்தணர்கள் மதிப்புமிக்கவர்களாகக் கருதப்பெற்றனர். வேதம் ஓதுதலும், வேள்விகள் செய்வதும் இவர்கள் தொழிலாக இருந்தது. தூது செல்பவர்களாகவும் இருந்துள்ளனர். இவர்கள் அரசர்களால் போற்றப்பட்டு மிகுந்த செல்வாக்குடன் திகழ்ந்தனர்.

புலவர்கள் வறுமையில் வாடுபவர்களாக இருந்தாலும், மதிப்புமிக்கவர்களாகவும் அரசர்களுக்கு உற்ற துணையாகவும் விளங்கினர். அரசர்கள் தவறுசெய்தபோது இடித்துக்கூறி எடுத்துரைத்தனர். புலவர் சொல்லுக்கு அரசர்களும் அடிபணிந்து நடக்குமளவிற்குப் புலவர்கள் மதிப்புடையவர்களாகத் திகழ்ந்தனர். தன்மான உணர்ச்சி மிக்கவர்களாக இருந்தனர்.

சங்கப் பாடல்களில் வலவன், பாகர் என்ற இரு பெயர்களால் குறிப்பிடப்பெறும் தேர்ப்பாகர்கள் தங்கள் தலைவர்களின் காதல் பொருட்டாகவும், போர்த் தொழிலின் பொருட்டாகவும், பரத்தையருடனான தொடர்பின் பொருட்டாகவும் குதிரைகள் பூட்டிய தேரினைச் செலுத்துபவர்களாகவும் ஆளும் வர்க்கத்தின் ஏவலர்களாகவும் பணியாற்றினர்.

சங்கப்பாக்களில் பாகர், காழோர், கோலோர் என்ற பெயர்களால் அறியலாகும் யானைப் பாகர் சங்க காலத்தில் நடைபெற்ற போர்களிலும், யானையைப் பராமரித்தலிலும் முக்கிய பங்கு வகித்தனர்.

துடியன் என்போர் போர்க்களத்தில் துடியடித்து வேகம் ஊட்டுதல், அறிவிப்புச் செய்தல், பகை வரவைப் பார்த்துச் சொல்லுதல் ஆகிய தொழிலைச் செய்பவர்களாக அறிய முடிகிறது. இவர்கள் செய்தொழில் காரணமாகவே இழிசினன் எனப்பட்டனர்.

தினைப்புனக் காவலர், ஊர்க் காவலர், வயல் காவலர், குளக் காவலர் எனப் பல்வேறு காவலர்கள் சமூகத்தில் இருந்துள்ளனர். பிறர் பொருளை கொள்ளை கொண்டு வாழும் வாழ்க்கை உடையவராகக் கள்வர்கள் இருந்தனர்.

மழவர் எனப்பட்ட படைவீரர்கள் ஆறலைத்தல், ஆனிரைகவர்தல் ஆகியவற்றைத் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

அரசர்களும் படைத்தலைவர்களும் மறவர் எனப்பட்ட வீரர்களின் துணையோடே போர்கள் பலவற்றை நிகழ்த்தியுள்ளனர். போர்களில் இவர்களின் வீரம் போற்றப்பட்டது. இவர்கள் நெடுமொழிகூறிப் போருக்குச் செல்பவர்களாகவும், அஞ்சா இயல்புடையவர்களாகவும், மனவலிமை மிகுந்தவர்களாகவும் இருந்தனர். இத்தகைய மறவர்களைப் பெற்றவர்கள் வீரத்தாய்மார் எனப் போற்றப்பட்டனர். இத்தகைய மறவர்கள் போரில் இறந்தால் நடுகல் நாட்டிச் சிறப்பித்தனர்.

வேலன் எனப்பட்ட பூசாரி தொல்சமய வழிபாட்டில் வழிபடும் பொருளுக்கும் வழிபடுபவர்களுக்குமிடையில் ஓர் இணைப்புப்பாலமாக இருந்து

சடங்குகளை நிகழ்த்துபவனாக இயங்கினான். பின் நிகழவிருப்பதை முன் கூட்டியே அறிந்துகூறும் ஆற்றல் பெற்றவனாக கருதப்பட்டான். கழங்குபார்த்தல், வெறியாட்டுச் சடங்கை நிகழ்த்துதல் போன்றவற்றில் வேலனின் பங்கு சமூகத்தில் முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கியது.

சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் வேலன் என்னும் ஆண் பூசாரியைப் போன்றதொரு பெண் பூசாரியாகக் கட்டுவிச்சி என்பவளைக் கருதலாம். இவள் 'அகவன்மகள்' என்றும் குறிப்பிடப்படுகிறாள். குறிசொல்லுதலும் அகவிப் பாடுதலும் இவர்கள் தொழிலாக இருந்தது.

புலைத்தியர் ஆடைகளை வெளுக்கின்ற தொழிலை முதன்மையாகக் கொண்டிருந்தனர். கூடை முடைந்து விற்கும் கைத்தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். தெய்வவழிபாட்டின் பொழுது தெய்வமேறி ஆடும் பெண் பூசாரியாகவும் இருந்துள்ளனர். காமுற்ற ஆடவர்க்குப் பரத்தையரைத் தேடித்தரும் செயல்களிலும் ஈடுபட்டு வந்தனர்.

பரத்தமையும், பரத்தையரும் சமூகத்தால் கடிந்து ஒதுக்கப்படவில்லை ஆயினும், அது சமூக ஏற்பினைப் பெற்றிருந்தது என முழுவதுமாகக் கூற இயலாது. தலைவனின் பரத்தமை தொடர்பால் ஊரில் எழுந்த அலர்; உரிமை மகளிர் பரத்தையர்களைப் பழித்தல்; குழந்தைகளைப் பெற்று இல்லறம் நடத்தும் வாய்ப்பு மறுக்கப்பட்ட நிலை; தலைவன் பரத்தையருடனான தொடர்பை ஒத்துக்கொள்ள தயங்குதல், அதற்காகப் பொய்ச்சூள் உரைத்தல் என்பன பரத்தமைக்கு இருந்த சமூகஎதிர்ப்பைப் புலப்படுத்துகின்றன.

உமணர்கள் எனப்பட்ட உப்பு வாணிகர்கள் தம் நாட்டில் விளைந்த வெண்ணெல்லை வண்டிகளிலே ஏற்றிக் கொண்டுபோய் விற்று, அதற்கு விலையாக நெய்தல் நிலப்பகுதியில் விளைந்த உப்பைப் பெற்றுவந்து மற்ற நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்குப் பண்டமாற்றாக உப்பினை விற்கும் தொழிலைச் செய்தனர். இவர்களின் உப்புவணிகம் இடர்பாடுகள் நிறைந்ததாக இருந்தது. உப்பு வணிகத்தில் உமணர் பெண்களும் ஈடுபட்டிருந்தனர்.

குயவர்கள் சங்க காலத்தில் மட்கலங்களையும் இறந்தவர்களை அடக்கம் செய்வதற்குரிய ஈமத் தாழிகளைச் செய்யும் பணியையும் மேற்கொண்டிருந்தனர். திருவிழாக் குறித்த செய்தியை ஊர்த்தெருக்களில் அறிவிக்கும் பணியையும் குயவர் மேற்கொண்டனர். திருவிழாச் சடங்குகளில் பூசாரியாகவும் செயல்பட்டனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

சங்ககாலத்தில் இரும்புக் கருவிகளையும் பொருட்களையும் செய்துதரும் தொழில் செய்தோர் கொல்லர் எனப்பட்டனர். அரசனொருவன் கொல்லனிடம் வேல் வடித்துத் தரும்படி இரந்து நிற்பதாகக் புறநானூற்றுப்பாடலொன்று குறிப்பிடுகிறது இது சமூகத்தில் அவர்களுக்கிருந்த உயர்மதிப்பைப் புலப்படுத்துகின்றது.

தச்சர்கள் தேர், வண்டி போன்றவற்றையும் அன்றாடப் பயன்பாட்டுக்குரிய புழங்குபொருட்களையும் செய்து தரும் பணியை மேற்கொண்டனர்.

*பொற்கொல்லர், நெசவாளர், செம்புப் பாத்திரம் செய்வோர், முத்தினை தூய்மை செய்வோர், விசிறி செய்வோர் எனத் தொழில்நுட்ப அறிவு வாய்க்கப்பெற்றவர் எல்லோருமே கம்மியர் என்றே அழைக்கப்படனர்.*

*பாணர்கள் வேந்தர்களையும், குறுநில மன்னர்களையும், முதுகுடி மன்னர்களையும், சீறூர் மன்னர்களையும் போற்றிப்பாடி, பரிசில் பெற்று வாழும் வாழ்க்கை உடையவர்களாக இருந்தனர். யாழ் வாசித்துப் பாடுதலில் சிறந்து விளங்கிய இவர்கள் பசியிலும் ஏழ்மையிலும் வாடுபவர்களாகவே காணப்பட்டனர். சங்க இலக்கியத்தில், புரவலரைப் புகழ்ந்து பாடும் கலைத்துறைப் பாணர்கள், தலைமக்களிடையே தூது செல்லல், பரத்தையரைத் தலைவனுக்குக் கூட்டுவித்தல் போன்றவற்றை மேற்கொண்ட அகத்துறைப் பாணர்கள் என்ற இரண்டு நிலைகளில் அமைந்த பாணர்களைக் காண முடிகிறது. பாணர்கள் வறுமை நிலையில் வாடியவர்களாக இருந்தாலும், சமூகத்தில் அவர்கள் தங்கள் தொழிற்திறத்தால் சிறந்தவர்களாகவே மதித்துப் போற்றப்பெற்றனர். பாணர்கள் தனியே இயங்காமல் புரவலரை நாடிச் செல்லும்போது விறலி, பாடினி, இயவர், முழவர், கூத்தர் முதலான பல்வேறு கலைஞர்களுடன் குழுவாகவே செயல்பட்டுள்ளனர். கலைத்துறையில் செயல்பட்ட பாணர்களேயன்றி மீன்பிடித்து வாழ்ந்த பாணர்களும் இருந்துள்ளனர். இவர்கள் ஆளும் வர்க்கத்தின் மக்கள் தொடர்பாளர்களாகச் செயல்பட்டனர். சமூக மாற்றத்தால் இவர்கள் பரத்தையர்களைத் தேடித்தரும் இழிநிலைக்குத் தள்ளப்பட்டனர்.*

*பாண்குடிகளில் மிகவும் தொன்மையானவர்களான பொருநர்கள் விழாக்கள் நடைபெறும் ஊர்களுக்குச் சென்று கலைத்திறனைக்காட்டி வாழும் நாடோடிக் கலைஞர்களாய் விளங்கினர். பாணர்களைப் போன்றே குழுவாக இயங்கினர். வறுமையில் வாடினர்.*

*சங்ககாலத்தில் நிகழ்த்துக்கலையில் சிறந்து விளங்கிய கலைஞர்களாகக் கூத்தர்கள் திகழ்ந்துள்ளனர். இவர்கள் ‘கோடியர்’ என்ற பெயராலும் சங்கப் பாக்களில் சுட்டப்பட்டுள்ளனர். புரவலரை வாழ்த்திப் பாடிப் பரிசில் பெற்று வாழும் வாழ்க்கையைக் கொண்டவர்களாக இருந்துள்ளனர்.*

*விறலி, பாடினி என்போர் பாணர் குழுவில் இடம்பெற்றிருந்த பெண்பால் கலைஞர்களாவர். விறலியர் ஆடல்கலையிலும், பாடினியர் ஆடலோடு சேர்த்து பாடலிலும் சிறந்து விளங்கினர். இவர்கள் அரசர்களிடம் தங்கள் கலைத் திறனை வெளிப்படுத்திப் பொருள் பெற்று வாழ்ந்தனர். சமூக மாற்றத்தால் விறலியர்கள் பரத்தையர்களாகவும் மாறியுள்ளனர்.*

*கிணைவர் கிணைப்பறை வாசித்து வள்ளல்களின் கொடைத் தன்மையைப் போற்றிப் பாடி பரிசில்பெற்று வாழ்ந்தனர்.*

## *3. உற்பத்தி முறைகளும் உற்பத்தி உறவுகளும்*

*3.1 சங்க இலக்கியம் காட்டுகின்ற தமிழ்ச்சமுதாயம் பொதுவுடைமையை அடிப்படையாகக்கொண்ட இனக்குழுச் சமூக அமைப்பிலிருந்து படிப்படியே தனிவுடைமைச் சமூகமாக மாற்றமடைந்துகொண்டிருந்த நிலையைக் காட்டுகிறது. நாடோடி வாழ்க்கையிலிருந்து நிலைத்த வாழ்வுக்கும், உணவு சேகரிப்பு நிலையிலிருந்து உணவு உற்பத்தி நிலைக்கும் முன்னேறியது. இத்தகைய மாற்றங்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து வகைப்பட்ட நிலப்பின்னணியில் காணப்பட்ட மூலவளத்தையும் பிறபகுதிகளில் வாழ்ந்த மக்களோடு கொண்டிருந்த சமூகத்தொடர்பையும் அடிப்படையாகக்கொண்டு அமைந்திருந்தது.*

*நிலப்பின்னணியை அடிப்படையாகக்கொண்டு ஐந்தாகப் பகுத்துப் பார்க்கப்படும் ஒவ்வொரு சமூகமும் அந்தந்த நிலத்தின் நீர்நில வளத்தை அடிப்படையாகக்கொண்ட சூழலுக்கு ஏற்ப, வெவ்வேறு தொழில்களையும், சமூக நடைமுறைகளையும் கொண்டு, தனித்துவமான சமூக அமைப்புகளையும் பழக்கவழக்கங்களையும் கொண்டு இயங்கிவந்ததைச் சங்கப் பாடல்களின் வழி அறிந்துகொள்ள முடிகிறது.*

*மக்கள் தங்களுக்குத் தேவையான பொருட்களை எவ்வாறு உற்பத்தி செய்கின்றனர்; உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள் எவ்வாறு மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளப்படுகின்றன; அவை எவ்வாறு மக்களால் நுகர்வு செய்யப்படுகின்றன என்ற பொருளாதார நடவடிக்கைகளைக் குறித்தும் இந்நடவடிக்கையின் மூலமாக ஏற்படுகின்ற சமூக உறவுகளைக் குறித்தும் ஆராய்வதில் இவ்வியல் கவனம் கொள்கிறது.*

*ஒரு பொருளின் தன்மை சமூகத்தின் பிற தளங்களின் உறவைப் பெற்றிருப்பதால் ''ஒரு சமூகத்தின் பொருளியலைப் புரிந்துகொள்ள வேண்டுமாயின் அச்சமூகத்தின் அரசியல், சமய, சமூக உறவுகளையும் புரிந்துகொள்ள வேண்டியதாகிறது. இன்னொரு வகையில் சொல்லவேண்டுமானால் ஒரு பண்பாட்டைப் பற்றிய புரிதலென்பது அதன் பொருளாதார முறையைப் புரிந்து கொள்வதையும் உள்ளடக்கியே அமைகிறது எனலாம்''*[1] *என்ற கருத்திற்கு ஏற்ப சங்கப் பாடல்களின் வாயிலாக அறியலாகும் பல்வேறு சமூகத்தின் உற்பத்தி முறைகள் குறித்தும் அச்சமூகத்தில் வாழும் மக்களுக்கும் பிற சமூகங்களுக்குமான உற்பத்தி உறவுகளைக் குறித்தும் இவ்வியலில் பேசப்பட்டுள்ளது.*

### *3.1.1. உற்பத்தி முறைகள்*

*ஒரு குறிப்பிட்ட மக்கள் சமூகத்தின் பண்பாட்டைப் புரிந்துகொள்வதற்கு அம்மக்களின் பொருளாதார முறைகளைப் புரிந்துகொள்வது அவசியமாகிறது. அம்மக்கள் குழுவின் பொருளாதார நடவடிக்கைகள் உற்பத்தி – பகிர்வு – நுகர்வு ஆகியவற்றை அடிப்படையாகக்கொண்டு அமைகிறது.*

*மக்கள் தங்கள் உணவிற்கான ஆதாரத்தை ஈட்டியமுறை இங்கு உற்பத்தி முறை எனச் சுட்டப்படுகிறது. இத்தகைய உற்பத்தி முறைகள் ஒரு சமூகத்தின் வளர்ச்சி*

---

[1] *பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 304.*

*நிலைகளுக்கு ஏற்ப அமைந்திருந்தன. இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள வளர்ச்சிநிலை என்பது அச்சமூக மக்களால் பயன்படுத்தப்பட்ட உற்பத்தி சக்தி(கருவி, தொழில்நுட்பம்) மற்றும் உற்பத்தி உறவு ஆகியவற்றைப் பொறுத்து அமைகிறது.*

*மனித குலத்தவர்களின் உற்பத்தி முறைகளைக் குறித்து மானிடவியல் ஆய்வாளர்கள் பல்வேறு சிந்தனைகளை முன்வைத்து, அவை பல்வேறு படிமலர்ச்சி நிலைகளில் வளர்ச்சியடைந்து வந்துள்ளதை எடுத்துக்காட்டியுள்ளனர். இத்தகைய உற்பத்தி முறைகள் தொடர்பான சிந்தனைகளைச் சங்கப் பனுவல்களில் பொருத்திப் பார்த்துச் சிந்திக்கும்போது அக்கால மக்கள் சமூகத்தின் உற்பத்தி முறைகள் குறித்தும் அதன் விளைவாக அமையும் பகிர்வு மற்றும் நுகர்வுப் பண்பாட்டை அறிந்துகொள்ளலாம். சங்கப் பனுவல்களை இப்பின்புலத்தில் நோக்கும்போது அந்தந்த நிலத்தின் தன்மைக்கும் சூழலுக்கும் ஏற்ப வேட்டையாடுதல், மீன்பிடித்தல், உணவுசேகரித்தல், மற்றும் வேளாண்மை என்னும் படிநிலைகளில் உணவு உற்பத்தி அமைந்திருந்ததைக் காணமுடிகிறது.*

*மக்கள் எவ்வாறு உற்பத்தி உறவில் இணைகிறார்கள், அவர்கள் பயன்படுத்துகின்ற தொழில் நுட்பமுறை எவ்வாறுள்ளது, அவர்கள் வாழ்கின்ற சுற்றுச்சூழல் முறை யாது ஆகியவற்றைக் கவனத்தில் கொண்டு, மானிடவியலார் படிமலர்ச்சிச் சிந்தனைகளை முன்வைக்கின்றனர். இவர்கள் மக்களின் உற்பத்தி முறைகளின் அடிப்படைக் கட்டங்களாக உணவு சேகரித்தல், உணவு உற்பத்தி என்ற இருநிலைகளைக் குறிப்பிடுகின்றனர்.*

*இவற்றுள் உணவு சேகரித்தல் நிலை என்பது வேட்டையாடுதல், காய், கனி, கொட்டை, கிழங்கு, தேன் போன்ற இன்னபிற காட்டுப் பொருட்களைச் சேகரித்தல், மற்றும் மீன்பிடித்தல் ஆகியவற்றையும், உணவு உற்பத்தி நிலை என்பது ஆயர் வாழ்வு, காட்டெரிப்பு வேளாண்மை, தோட்டப்பயிர் வேளாண்மை, நீர்ப்பாசன வேளாண்மை ஆகியவற்றையும் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது.*[1] *இக்கருத்தின் அடிப்படையில் சங்கப் பனுவல்களினூடே அக்காலச் சமூகத்தின் உற்பத்தி முறைகளைப் பின்வருமாறு பொருத்திப் பார்க்கலாம்.*

*உணவு சேகரித்தல்(food collection) கட்டத்தைச் சார்ந்தவர்களாகக் குறிஞ்சி நில மக்களில் ஒரு சாராரும், உணவு உற்பத்திக் (food production) கட்டத்தைச் சார்ந்தவர்களாகக் குறிஞ்சிநிலப்பகுதியைச் சார்ந்த மற்றொருசாராரும்(குறவர்), முல்லை நில ஆயர்களும், மருதநில உழவர்களும் காணப்பட்டனர்.*

*கார்ல் மார்க்ஸின் சிந்தனைகளை அடியொற்றி வளர்ந்த மார்க்சிய மானிடவியல் அணுகுமுறை உற்பத்திமுறைகளைக் குறித்து அறிந்துகொள்வதற்குப் பெரிதும் உதவுகிறது. "மனித குலத்தின் உற்பத்தி முறைகளின் மூலம் (origin) 'தொன்மைச் சமூகவுடைமை (primitive communalism) ஆகும். பொருளாதார உற்பத்தியில் மிகவும் குறைவான உற்பத்தியுடைய(under developed) நிலை இதுவே என்பார் மார்க்ஸ். இதில் வேட்டையாடுதல், மீன் பிடித்தல், கால்நடை வளர்த்தல், எளிய வேளாண்மை யாவும் அடங்கும் என்பார். குடும்பம் சார்ந்த, உறவுமுறை சார்ந்த உற்பத்தி உறவே சமூக உறவாகவும் அமைந்தது. மேலும் இத்தகு முறையில் தனிநபர் நிலவுடைமை ஏற்படவில்லை. ஒரு குழு/சமூகம் என்னும் அளவிலேயே*

---

[1] *பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 302*

உடைமை (நிலம், நீர் அனைத்தும்) பேணப்பட்டது"[1] என்ற மார்க்ஸின் கருத்துக்களை அடிப்படையாகக்கொண்டு சங்கப் பனுவல்களை நோக்கும்போது, தொன்மைச் சமூகவுடைமை என்னும் நிலை குறிஞ்சி, முல்லை நிலச் சமூகங்களில் காணப்பட்டதைக் குறிஞ்சி, முல்லைத் திணைப் பாடல்களை உற்றுநோக்கப் புலப்படுகிறது.

குறிஞ்சிநிலச் சமூகத்தைப் பொறுத்தவரை வேட்டையாடுதல், காய், கனி, கிழங்கு போன்றவற்றைச் சேகரித்தல் என்ற அளவிலும், எளிய உழுகருவிகளைக் கொண்டு காட்டினை எரித்து உருவாக்கிய புனத்தில் தினை விதைக்கும் எளிய வேளாண்முறையில் உணவு உற்பத்தியாளர் என்ற அளவிலும் மக்கள் குழு தங்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களைத் தாங்களே உற்பத்தி செய்துகொண்டனர். இச்சமூக அமைப்பில் வேட்டையாடப்பட்ட விலங்கின் ஊனும், சேகரிக்கப்பட்ட பிற உணவுப் பொருட்களும், வேளாண்மையில் விளைந்த தினையும் அனைவருக்கும் பகிர்ந்து தரப்பெற்றது. நிலம் அனைவருக்கும் பொதுவாக இருந்தது. மக்கள் கூட்டாக உழைத்துப் பகிர்ந்துண்டு வாழ்ந்தனர்.

முல்லைநிலச் சமூகத்தில் கால்நடைகள் அனைவருக்கும் பொதுவான செல்வமாக இருந்தது. தங்கள் கால்நடைகளைப் பிற குழுவினர் கவர்ந்து செல்லாமல் பாதுகாக்கும் பொறுப்பு பொதுவில் அனைவருக்கும் உரியதாக இருந்தது. இக்காரணத்தினாலேயே ஆயர்கள் பொதுவர் என்ற பெயராலும் சுட்டப்படுகின்றனர். இவர்களும் மிக எளிய கருவிகளைக்கொண்டு வன்புல வேளாண்மையில் ஈடுபட்டுத் தங்களுக்கான உணவினை உற்பத்தி செய்தனர். இந்நிலத்தவர்களின் பால்படு பொருட்களின் பண்டப்பறிமாற்றமும் அப்பொருளின் நிகரமதிப்பைக் கருதாது தேவையின் அடிப்படையில் மட்டுமே பரிமாற்றம் செய்துகொள்ளப்பட்டன.

### *3.1.2. உழைப்புக் கருவிகள் (Instruments of labour)*

ஆதிகாலத்தில் மனிதன் மற்ற விலங்கு பறவைகளைப் போலவே உணவைத் தேடியலைந்து உண்டு உயிர்வாழும் நிலையிலேயே இருந்தான். அவனிடம் ஆயுதம் என்று சொல்லிக்கொள்வதற்குத் தன் கைகளைத்தவிர வேறு எதுவும் இல்லை. மனிதன் படிப்படியாகவே ஆயுதங்களைப் பயன்படுத்தக் கற்றுக்கொண்டான். தொடக்கத்தில் அவன் பயன்படுத்திய கருவிகள் மிக எளிமையானவை அவை கல்லாலும் மரத்தாலும் செய்யப்பட்டுக் கூர்மையற்றவைகளாகவும் கரடுமுரடானவைகளாகவும் இருந்தன.

மனிதர்கள் பல நூற்றாண்டுகாலப் பரிணாம வளர்ச்சிக்குப் பின்னரே நெருப்பின் பயன்பாட்டையும், கருவிகளில் புதிய தொழில் நுட்பங்களைப் புகுத்திப் பயன்படுத்தவும் கற்றுக்கொண்டனர். அதன் பின்னரே கூர்மையான கற்கருவிகளையும் கற்கோடரிகளையும் பயன்படுத்தினர். அதற்கடுத்த காலகட்டத்தில் ஈட்டி, அரிவாள் போன்றவற்றையும் வில், அம்பு போன்ற வேட்டைக் கருவிகளையும் தங்கள் உணவு சேகரிப்புக்கும் தற்காப்புக்கும் பயன்படுத்தினர்.

மனிதவாழ்வில் கருவிகளின் முக்கியத்துவத்தைக் குறித்துக் குறிப்பிடும் ராகுல் சாங்கிருத்யாயன், "மனிதன் நிகழ்காலத்தில் வாழ்வதற்காக மட்டுமே இயற்கையுடன் போராடுவதில்லை. தனது பிறவிச் சாதனங்களைக் கொண்டு மட்டுமே அவன்

---

[1] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள்,
பக். 305-306

போராடுவதில்லை. அவன் எதிர்கால வாழ்வைக் கருதியும் போராடுகிறான். அப்போராட்டத்திற்குத் தனது பிறவிச் சாதனங்களை மட்டுமல்லாமல், புதியபுதிய சாதனங்களையும் கண்டுபிடித்துக் கொண்டே இருக்கிறான். இதனால்தான் மனிதன் 'சமுதாய விலங்குடன் கூடவே, 'ஆயுதந் தரித்த விலங்கும்கூட!''[1] எனக் குறிப்பிடுவார். இவ்வாறு கருவிகளில் ஏற்பட்ட பரிணாம வளர்ச்சியே சமூக வளர்ச்சிக்கு முக்கியக் காரணமாக அமைந்தது. இதன் விளைவாகவே மனித இனம் வேட்டையிலும் வேளாண்மையிலும் அதிகளவு பயனைப் பெறமுடிந்தது.

பொருட்களின் உற்பத்தியே சமூக இயக்கத்திற்கு அடிப்படையாகும். எனவே மனித வாழ்விற்கு அடிப்படைத் தேவையாக விளங்கும் உணவு, உடை, உறைவிடம் போன்றவற்றைத் தோற்றுவிக்கும் மக்களின் செயற்பாடே உற்பத்தி எனக் குறிப்பிடப்படுகிறது. இத்தகைய உற்பத்தி நடைபெற உழைப்பின் குறிப்பொருள், உழைப்புக் கருவிகள், உழைப்பு ஆகிய மூன்றும் தேவைப்படுகிறது.

உற்பத்திச் சக்திகள் உற்பத்தி உறவுகளில் எத்தகைய மாற்றத்தைக் கொண்டுவருகிறது என்பதைக் கார்ல் மார்க்ஸ் தன் 'ஜெர்மன் ஐடியாலஜி' என்ற நூலில் ''ஒவ்வொரு கட்டத்திலும் ஆளும் வர்க்கத்தின் கருத்துகளே செல்வாக்கு மிக்க ஆளுமைக் கருத்துகளாக விளங்கும். அதாவது எந்த வர்க்கம் சமுதாயத்தில் பொருளாதாரச் சக்திகளை ஆளுமை புரிந்து கொண்டிருக்கிறதோ அதுதான் அறிவார்ந்த சக்திகளின் மீதும் ஆட்சிசெலுத்துகிறது. பொருளை உற்பத்தி செய்யும் சாதனங்களைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் வர்க்கம் அதே நேரத்தில் மனத்தால் படைக்கப்படும் அறிவார்ந்த படைப்புச் சக்திகளையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும். பொதுவாகச் சொன்னால் பொருளை உற்பத்தி செய்யும் சாதன வசதிகள் குறைவாக உள்ளவர்களின் கருத்துகள் பொருளாதார வசதிமிக்கோருக்குக் கட்டுப்பட்டதாக இருக்கும். செல்வாக்குமிக்க பொருளாதார உறவுமுறைகளின் மிகச்சரியான வெளிப்பாடுதான் ஆளும் கருத்துகளாக அமையும்''[2] எனக் குறிப்பிடுகிறார்.

மனிதன் கருவிகளைப் பயன்படுத்தியே உழைப்பை உற்பத்தியில் செலுத்துகிறான். எனவே ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் பொருளாதார வளர்ச்சி என்பது அச்சமூகத்தாரால் பயன்படுத்தப்படும் கருவிகளைக்கொண்டே தீர்மானிக்கப் படுகிறது. அதாவது உற்பத்தி சக்தியின் வளர்ச்சி என்பது உழைப்புக் கருவிகளைப் பொறுத்தும், உற்பத்தி முறையின் மாற்றம் என்பது உழைப்புக் கருவியின் வளர்ச்சியைப் பொறுத்தும், சமூக மாற்றம் என்பது உற்பத்தி முறையின் மாற்றத்தைப் பொறுத்தும் அமைகிறது.

மார்க்ஸ் தமது மூலதனம் என்ற நூலில், ''உழைப்புக் கருவிகள் என்பது உழைப்பாளி தனக்கும் தன் உழைப்பின் குறிப்பொருளுக்கும் இடையே வைப்பதும், அவரது செயற்பாட்டின் கடத்தியாகப் பயன்படுவதுமான பொருள், அல்லது பொருட் தொகுதி ஆகும். அவர் சில பொருட்களின் யாந்திரிக, பௌதிக, இரசாயனப் பண்புகளைப் பயன்படுத்திப் பிற பொருட்களைத் தமது நோக்கங்களுக்குச் சேவகம் புரியச் செய்கிறார்.''[3] என வரையறை கூறுவார்.

---

[1] ராகுல் சாங்கிருத்யாயன், மனித சமுதாயம், ப. 22

[2] லூர்து, தே., நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், (மேற்.) ப. 73.

[3] கார்ல் மார்க்ஸ், தியாகு (மொ.ஆ) மூலதனம், முதல் பாகம், ப. 246

*மேலும் உற்பத்தி முறைகளுக்கும் உற்பத்தி உறவுகளுக்கும் கருவிகள் எவ்வளவு முக்கியமான காரணியாக விளங்குகின்றன என்பதை மார்க்ஸ், ''மறைந்து போய்விட்ட மிருக ராசிகளை நிர்ணயிப்பதற்குப் புதைபடிவ எலும்புகள் எவ்வளவு முக்கியத்துவமுள்ளவையோ, மறைந்து போய்விட்ட சமூகப் பொருளாதாரக் கருவிகளின் மீதமிச்சங்களும் அதே அளவு முக்கியத்துவமுள்ளவையாகும்.''[1] என்றும், ''வெவ்வேறு பொருளாதார சகாப்தங்களை நாம் வேறுபடுத்திப் பார்க்க உதவுவது தயாரிக்கப்பட்ட பொருட்களை எவை என்பதன்று, அவை தயாரிக்கப்பட்டது எப்படி என்பதும், எக்கருவிகளால் என்பதுமே. உழைப்புக் கருவிகள் மனித உழைப்பு அடைந்துள்ள வளர்ச்சி நிலைக்கு ஓர் அளவுகோலை வழங்குவது மட்டுமல்லாமல், அந்த உழைப்பு நடைபெறுகிற சமூக நிலைமைகளைச் சுட்டிக் காட்டும் குறிகளாகவும் உள்ளன''[2] என்றும் குறிப்பிடுவார்.*

*மேற்குறித்தகருத்துக்களின் பின்னணியில் சங்கப் பாடல்கள் காட்டும் திணைச் சமூகத்தை நோக்கும்போது, ஒவ்வொரு சமூகத்தின் பொருளாதார வளர்ச்சியும், உற்பத்தி உறவுகளும் அந்தந்தச் சமூகத்தவர்களால் பயன்படுத்தப்பட்ட உற்பத்திக் கருவிகளைக்கொண்டே அமைந்திருந்ததை உறுதிப்படுத்த முடிகிறது.*

### *3.1.3. உற்பத்தி உறவு*

*''தமிழிலக்கியத்தில் கூறப்படும் திணைப் பிரிவுகளை ஆராயுங்கால் குறிஞ்சி நில வாழ்க்கையில் ஆதிகால பொதுவுடைமைச் சமுதாய அமைப்பு முறைச் சின்னங்களும் முல்லை நில வாழ்க்கையில் அடிமைச் சமுதாய அமைப்பு முறைச் சின்னங்களும் மருத நில வாழ்க்கையில் நிலப் பிரபுத்துவ சமுதாய அமைப்பு முறைச் சின்னங்களும் நிலவி வந்திருக்கின்றன என்ற முடிவுக்கு வருவதற்கு போதிய ஆதாரங்கள் உள்ளன''[3] என்பார் கு. மா. பாலசுப்பிரமணியம். இந்நிலங்களில் உற்பத்தி உறவு எவ்வாறு அமைந்திருந்தது என்பதை பின்வரும் பகுதிகள் விளக்கும்.*

### *3.2. குறிஞ்சி நிலம்*

*குறிஞ்சி நிலத்தில் குறவர், கானவர், வேடர் எனப்பட்ட மக்கள் வாழ்ந்தனர். இவர்களின் முதன்மையான தொழில்களாக விலங்கு, பறவைகளை வேட்டையாடுதல், காய், கனி, கிழங்கு, தேன் முதலானவற்றைச் சேகரித்தல் மற்றும் தினைவிதைத்தல் என்பனவற்றைக் குறிப்பிடலாம்.*

*குறிஞ்சி நிலத்தவர்கள் வேட்டையாடி உணவு சேகரித்தல், தினைவிதைப்பு வேளாண்மையின் மூலம் உணவு உற்பத்தி செய்தல் என்ற இருநிலைகளில் தங்கள் உணவுத் தேவையில் தன்னிறைவு அடைந்தவர்களாக இருந்தனர். அவர்கள் தாங்கள் மேற்கொண்ட தொழிலுக்கு மிக எளிய தொழில் நுட்பங்களையும், சாதாரண கருவிகளையுமே பயன்படுத்தினர்.*

*வேட்டையாடுவதற்கான வில், அம்பு, விலங்குகளையும் பறவைகளையும் பிடிப்பதற்கான வலைகள், தோண்டுகழிகள், முயல் வேட்டைக்குப் பயன்படுத்தப்பட்ட கவைக்கோல்கள், பன்றிகளைப் பிடிப்பதற்கான பொறிகள், கற்கோடரிகள், கற்களாலான உளிகள், களைக்கொட்டுகள் பறவைகளை விரட்டப் பயன்படுத்தப்பட்ட குளிர், தட்டை, தழல், கவண் எனப்பட்ட கிளிகடி கருவிகள்*

---

[1] *கார்ல் மார்க்ஸ், தியாகு (மொ.ஆ) மூலதனம், முதல் பாகம், ப. 247*

[2] *கார்ல் மார்க்ஸ், தியாகு (மொ.ஆ) மூலதனம், முதல் பாகம், பக். 247-248*

[3] *கு. மா. பாலசுப்பிரமணியம், பண்டைத்தமிழ் சமுதாய வளர்ச்சி, பக். 2-3*

மற்றும் பறைகள் முதலிய எளிய கருவிகளையே குறிஞ்சி நில மக்கள் பயன்படுத்தினர். எனவே குறிஞ்சிநிலச் சமூகத்தின் வளர்ச்சி என்பது மிகவும் மந்தமான நிலையிலேயே இருந்தது. இச்சமூகத்தில் எந்த ஒரு தனிமனிதனும் தனக்கானத் தேவைகளைத் தான் ஒருவனே நிறைவேற்றிக்கொள்ள முடியாத சூழலில், அனைவரும் தங்களுக்குள் ஒன்றுபட்டு உழைத்துத் தங்களுக்கான தேவைகளைப் பூர்த்திசெய்துகொள்ளவேண்டிய நிலையில் கூட்டுழைப்பால் சேகரிக்கப்பட்ட உணவுப்பொருட்கள் அனைவராலும் சமமாகப் பகிர்ந்துகொள்ளப்பட்டன. மேற்குறித்த காரணிகளால் குறிஞ்சிநிலப் பொதுவுடைமைச் சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகளோ, தனியுடைமையோ, வர்க்க பேதங்களோ தோன்றவில்லை.

எளிய கருவிகளையும் தொழில்நுட்ப அறிவில் குறைந்தும் காணப்பட்ட இவர்களின் நில அமைப்பும் சூழலும் உற்பத்திப் பெருக்கத்திற்கு ஏற்றதாக இல்லை. மேலும், இவர்கள் உள்நாட்டுப் பகுதியில் இருந்து நீங்கி மலைசார்ந்த பகுதிகளிலும், காட்டுப் பகுதிகளிலும் தனித்து வாழ்பவர்களாக இருந்தனர். இதனால் இவர்களுக்குக் கருவிப் பரிமாற்றமும் அறிவுப் பரிமாற்றமும் கிடைக்காமல் போனது. இச்சமூகத்தின் உற்பத்தி பின்னடைவுக்கு இதுவும் ஒரு காரணமாக இருந்தது. எனவே புராதன பொதுவுடைமைச் சமுதாய அமைப்பையும், இனக்குழுத் தன்மையையும் பெற்றிருந்த குறிஞ்சி நிலத்தில் பொருளுற்பத்தி மிகவும் மந்தமாக நடைபெற்றது.

மானிடவியலார் மனிதர்கள் உணவிற்கான ஆதாரத்தை ஈட்டிய முறைகளின் அடிப்படையில் உணவு சேகரித்தல், உணவு உற்பத்தி என்ற இரண்டு முக்கிய கட்டங்களைக் குறிப்பிடுவர். இதன் அடிப்படையில் நோக்கும்போது குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த கானவர்கள் வேட்டையாடுதல், காய், கனி, கிழங்கு, தேன் போன்ற காட்டில் காணப்பட்ட இயற்கை விளைபொருட்களைச் சேகரித்தல் என்கிற அடிப்படையில் உணவு சேகரித்தல் காலகட்டத்தைச் சேர்ந்த சமூகத்தவர்களாகவும், உணவு உற்பத்தி என்கிற மற்றொரு நிலையில் காட்டெரிப்பு வேளாண்மை செய்தவர்களாகவும் இருந்தனர்.

பொருளாதார அடிப்படையில் குறிஞ்சிநிலச் சமூகத்தை நோக்கும்போது குறிஞ்சிநில மக்களின் வாழ்க்கை உணவு தேடுதல், அவற்றைக் கூட்டாகப் பகிர்ந்து உண்ணுதல் என்ற அளவிலேயே இருந்தது. இத்தகைய கூட்டு வாழ்க்கை முறைக்கான காரணத்தை ராகுல் சாங்கிருத்யாயன் “இயற்கைச் சக்திகளுடனும், பகைவர்களுடனும் போராடுவதற்குப் பழங்கால மனிதன் கூட்டமாக இருப்பதுதான் நல்லது என்பதைத் தெரிந்துகொண்டான். இதனால்தான் கூட்டம் கூட்டமாக வாழ்வதை அவன் எப்பொழுதுமே விட்டுவிடவில்லை”[1] எனக் குறிப்பிடுவார். ஆயுதங்கள் கண்டுபிடிக்கப்படாத ஆதிகாலத்தில் மனிதர்கள் தங்கள் கூட்டு வலிமையைக்கொண்டே பகைக்குழுக்களிடமிருந்தும் விலங்குகளிடமிருந்தும் தங்கள் குழுக்களைப் பாதுகாத்துக் கொண்டனர்.

இனக்குழுச் சமூகத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கைச் சாதனங்கள் மிகக் குறைவாகவே இருந்தன. இதனால் மக்கள் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகத் தங்களின் கூட்டாக வாழ்ந்த சமுதாயத்தையே மிகுதியும் சார்ந்திருந்தனர். இதற்கு அவர்களின் அடிப்படைத் தேவையாக இருந்த

[1] ராகுல் சாங்கிருத்யாயன், மனித சமுதாயம், ப. 19

உணவுப்பொருட்கள் விரைவில் அழிந்துவிடும் தன்மையுடையதாகவும் நீண்ட காலம் சேமித்துவைக்க முடியாததாகவும் இருந்தது என்பதே காரணம். எனவே வேட்டையில் கிடைத்தவற்றைப் பகுத்துண்டு வாழ்ந்தனர். அம்மக்களிடம் காணப்பட்ட சொற்ப உடைமையும் சமூகம் அனைத்திற்கும் பொதுவானதாகவே இருந்தது. இத்தகைய சமூக அமைப்பையே ‘புராதன பொதுவுடைமைச் சமுதாய அமைப்பு’ என்றனர்.

இத்தகைய புராதன சமூகத்தின் உற்பத்திப் பகிர்வு குறித்து ராகுல் சாங்கிருத்யாயன், “புராதன கம்யூன் (பொதுவுடைமைச் சமுதாய) காலத்தில் தனிச் சொத்துடைமையும் இல்லை; தனி மனிதன் சமுதாயத்திலிருந்து தன்னை வேறுபடுத்தி நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. உற்பத்தியும் சமுதாய பூர்வமாகவே இருந்தது, அதைச் சமுதாயம் பூராவுமே அனுபவித்தது. அங்கே வர்க்கங்கள் இல்லை. ஒரு வர்க்கத்தின் ஆட்சியும் இல்லை”[1] எனக் குறிப்பிடும் கருத்து இங்கு எண்ணத்தக்கது.

மேற்குறித்த கருத்துக்களின் அடிப்படையில் குறிஞ்சி நிலச் சமூகத்தைப் பார்க்கும்போது அச்சமூகத்தில் வாழ்ந்த எந்த ஒரு மனிதனும் வேட்டைப் பொருளையோ, மற்ற விளைபொருட்களையோ தனக்கென்று சேமித்து அவற்றைத் தன் உடைமையாக்கிக் கொள்ளும் அளவுக்கு அச்சமூகத்தில் உபரி உற்பத்தி என்பது நடைபெறவில்லை. சொத்துடைமை தோன்றாத காரணத்தால் குறிஞ்சிநிலச் சமூகம் பொதுவுடைமைச் சமூகமாக விளங்கியது.

“ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி முடக்கத்திற்கு, உட்சுய தேவைப்பூர்த்தி, பூகோள ரீதியாகவும் சமுதாய ரீதியாகவும் ஒரு சமுதாயம் தனிமைப்பட்டிருத்தல் ஆகியவை சில காரணங்களாகும்”[2] என்ற கருத்தினை குறிஞ்சி நிலச் சமூகத்திற்குப் பொருத்திப் பார்க்கலாம். இனக்குழுவாக வாழ்ந்த குறிஞ்சிநில மக்கள் தங்கள் உணவுத் தேவைகளைத் தங்களுக்குள்ளாகவே பாதீடு செய்து பங்கிட்டுக்கொண்டனர். மேற்குறித்தவாறு பூகோள ரீதியாகப் பார்க்கும்போது பிற நிலங்களோடு குறிஞ்சி நிலத்தை ஒப்பிடும்போது போக்குவரத்துச் சாதனங்கள் அற்று தனித்து நிற்கும் பகுதியாகவே இருந்தது. அதாவது மக்கள் தங்கள் அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக்கொள்வதற்கு அடுத்தவரை நம்பியிருக்கவேண்டிய நிலையில் இல்லாமல் இருந்தனர். முக்கியமாகப் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையாக இருந்த வணிகம் குறிஞ்சி நிலத்தோடு தொடர்பு கொண்டிருக்கவில்லை.

குறிஞ்சிநிலப் பகுதியில் வேடர், குறவர் எனப்பட்ட மக்கள் வாழ்ந்தனர். இவர்களுள் வேடர்கள் என்போர் புராதனமான வேட்டைத் தொழிலையும், குறவர்கள் என்போர் உணவு உற்பத்தியில் ஈடுபட்டுத் தினைவிதைத்தல் போன்ற குறிஞ்சிநில வேளாண்மைப் பணியிலும் ஈடுபட்டவர்களாகச் சங்கப் பாடல்களை நோக்கும்போது அறிந்துகொள்ள முடிகிறது.

### 3.2.1. கருவி

“மனிதன் நிகழ்காலத்தில் வாழ்வதற்காக மட்டுமே இயற்கையுடன் போராடுவதில்லை. தனது பிறவிச் சாதனங்களைக் கொண்டு மட்டுமே அவன் போராடுவதில்லை. அவன் எதிர்கால வாழ்வைக் கருதியும் போராடுகிறான்.

[1] ராகுல் சாங்கிருத்யாயன், மனித சமுதாயம், ப. 82.

[2] கா. சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமுதாயம், பக். 9-10

அப்போராட்டத்திற்குத் தனது பிறவிச் சாதனங்களை மட்டுமல்லாமல், புதிய புதிய சாதனங்களையும் கண்டுபிடித்துக் கொண்டே இருக்கிறான். இதனால்தான் மனிதன் ‘சமுதாய விலங்குடன் கூடவே, ‘ஆயுதந் தரித்த விலங்கும்கூட!’’[1] என்பார் ராகுல் சாங்கிருத்யாயன்.

குறிஞ்சிநில மக்கள் தங்கள் வாழ்வாதாரத்திற்காகப் பயன்படுத்திய கருவிகளை நோக்கும்போது அவை மிக எளிமையானவைகளாக இருந்தன. அக்கருவிகளை உருவாக்கும் தொழில்நுட்பத்திலும் பின்தங்கிய நிலையிலேயே இருந்தனர். இவர்கள் பயன்படுத்திய கருவிகளுள் மிக முக்கியமானவைகளாகக் கண்ஏணிகள், தோண்டு கழிகள், பாறைகளாலான கூர் உளிகள், குத்தீட்டிகள், கவைக்கோல், வில்அம்பு, வலை, பன்றிகளைப் பிடிப்பதற்கான பொறிகள் மற்றும் சுருக்கு வார், பறவைகளை விரட்டுவதற்கான கவண்கல், தட்டை, தழல், குளிர் மற்றும் கிணை எனப்பட்ட சிறுபறைகள் முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

நாய்களைப் பழக்கி வேட்டையாடவும், யானைகளைப் பழக்கிப் பாரம் சுமக்கவும் பயன்படுத்தினர். சங்க இலக்கியக் குறிஞ்சித்திணைப் பாக்களில் இவர்கள் பயன்படுத்திய கருவிகளுள் வேளாண் கருவிகளைவிட வேட்டைக் கருவிகளைப் பற்றியே மிகுதியும் குறிப்பிடப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது. குறிஞ்சி நிலச்சமூகம் வேட்டைச் சமூகமாக இருந்ததை இக்கருவிகளின் பயன்பாடு காட்டுகிறது.

### 3.2.2. பொருளாதார நடவடிக்கைகள்

தினைவிதைத்தல், வேட்டையாடுதல், கிழங்ககழ்தல், தேனெடுத்தல் முதலியன இவர்களின் முக்கியத் தொழில்களாக இருந்தன.

### 3.2.3. எரிபுனச் சாகுபடி(காட்டெரிப்பு வேளாண்மை)

குறிஞ்சி நிலத்தில் முதன்மையான உற்பத்திக் கருவியாக விளங்கும் நிலம் ஒரு குறிப்பிட்ட நபரின் தனிவுடைமையாக இல்லாமல், அனைவருக்கும் பொதுவானதாகவே இருந்தது.

இவர்கள் மலைசார்ந்த பகுதிகளில் மரங்களையும், புதர்களையும், செடிகொடிகளையும் எரித்துத் தினைப்புனங்களை உருவாக்கினர்.[2] இவ்வகையில் நறைக் கொடிகளையும், அகில், சந்தனம் முதலிய மரங்களையும் தீயிட்டுக் கொளுத்தினர்,[3] இத்தகைய வேளாண் முறையினைக் காட்டெரிப்பு வேளாண்மை *(slash-and-burn agriculture)* என்று மானிடவியலார் குறிப்பிடுவர்.

மேற்குறித்தவாறு காட்டின் சிலபகுதிகளை எரித்துத் தினைப்புனத்தை உருவாக்கிய கானவர்கள், புனத்தை உழுதும்,[4] பன்றிகள் தம் மருப்பினால் உழுத புழுதியிலும் தினைப் பயிரினை விதைத்தனர்.[5] தினை மட்டுமின்றி ஐவன நெல்,[6] தோரை நெல், வெண்சிறு கடுகு[7] ஆகியனவற்றையும் விதைத்துப் பயிரிட்டனர்.

தினைப்புனத்தை யானை, பன்றி போன்ற விலங்குகளும், பறவைகளும் அழிக்காத வண்ணம் அவற்றைப் பாதுகாக்க உயரமான குன்றுகளின் மீதும், மரக்கிளைகளிலும் பரண் அமைத்து இரவு வேளைகளில் ஆண்களும், பகல்

---

[1] ராகுல் சாங்கிருத்யாயன், மனித சமுதாயம், ப. 22
[2] நற். 282:6-8
[3] புற. 231; குறு. 339; நற். 5:5; ஐங். 253, 254
[4] நற். 386:1-3; குறு. 214:1-3
[5] புற. 168:3-6; அக. 270:1-3
[6] புற. 159: 15-19
[7] மது. 286-290

வேளைகளில் பெண்களும் காவல் காத்தனர். ஆண்கள் இரவு நேரத்தில் தீப்பந்தங்களைக் கொளுத்தியும், அம்பு, கிணைப்பறை, கவண் போன்ற கருவிகளைக் கொண்டும், விலங்குகளை விரட்டினர்.[1] கொடிச்சியர் எனப்பட்ட குறவர் குலப் பெண்கள் தட்டை, தழல், குளிர் முதலான கருவிகளைக்கொண்டு தினைக் கதிர்களை உண்ணவரும் பறவைகளை விரட்டினர்.[2] இவர்களின் வேளாண் பங்களிப்பு குறித்து பெ. மாதையன், 'சங்க இலக்கியத்தில் மொத்தம் 55 இடங்களில் பெண்களின் தினைக்காவல் பேசப்பட்டுள்ளது. இது பெண்களின் வேளாண் பங்களிப்புக்கான சான்றாதாரங்களாக உள்ளன'[3] எனக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

### 3.2.4. வேட்டை

உணவுத்தேவையின்பொருட்டு விலங்குகளையும் பறவைகளையும் வேட்டையாடினர். கடமானின் தசை, முள்ளம் பன்றியின் தசை, பெண் நாயை ஏவிப் பெற்ற உடும்பின் தசை,[4] போன்றன அவர்களின் உணவில் முக்கிய இடம்பெற்றிருந்ததைக்கொண்டு இதனை உணரமுடிகிறது.

### 3.2.5. தந்த வேட்டை

யானைகள் அவற்றின் தந்தங்களுக்காக வேட்டையாடப்பட்டன. இதனை, கானவன் 'போர்க்களத்தில் எதிரிகளைக் கொல்லும் ஆற்றலையுடைய யானைகளின் வெண்மையான தந்தங்களை அதன் அரிய மருமத்தில் அம்பு எய்து கொன்று அதனைக் கொண்டுவந்து புல்லால் வேயப்பட்ட தனது சிறிய குடிசையில் புலால் நாற்றம் வீச ஊன்றிவைத்து, மதுவினை உண்டு களித்து, ஊன் கலந்த சோற்றைச் சுற்றத்தோடு உண்டு ஆடிப்பாடி மகிழ்வதாகக் குறிப்பிடுவது கொண்டும்,[5] 'நீர் ஊராது போகவே கோவலர் கைவிட்டுச் சென்ற கிணறுகளில் சருகுகள் மூடிக்கிடக்கும், அதனைக் கண்ட யானைகளின் கூட்டம் தம் வெண்மையான கொம்புகளைக் கைக்கொள்ள விரும்பிய அன்பில்லாத வேடர்கள் தங்களைப் பிடிப்பதற்காத் தோண்டி சருகுகளால் மூடி மறைத்த குழிகள் என்று கருதி அவற்றைப் பெருங்கற்கள் கொண்டு தூர்த்தன'[6] எனக் குறிப்பிடுவது கொண்டும் அறியமுடிகிறது. மேலும், கானவன் ஒருவன் 'தன்னோடு போரிட்டு இறந்துபட்ட யானையின் வெண்ணிறக் கொம்பினைக் கருவியாகக்கொண்டு நீர்வளம் மிக்க உயர்ந்த மலையில் பொன்னை அகழ்ந்தெடுத்தான்'[7] என்றும், புலியோடு போரிட்டுப் புண்கொண்ட யானையின் நல்ல தந்தத்தை விரும்பிய கானவர் வில்லிலிருந்து அம்பைச் செலுத்துவர்[8] என்றும், குறிப்பிடப்பட்டுள்ள சங்கப்பாடல் கருத்துக்களைக்கொண்டு அறியமுடிகிறது.

### 3.2.6. கிழங்கு அகழ்தல்

தங்கள் உணவுத் தேவைக்காகக் கானவர்கள் மலைப்பகுதிகளில் வள்ளிக் கிழங்குகளையும் கவலைக் கிழங்குகளையும் தோண்டி எடுத்தல் முக்கியப் பணியாக இருந்தது.[9]

### 3.2.7. பன்றி வேட்டை

கானவர்கள் காட்டெரிப்பு வேளாண்மையைக் கைக்கொண்டிருந்த அதே வேளையில் வேட்டையாடி உணவு சேகரிக்கும் நாடோடி வாழ்க்கையினராகவும்

---

[1] நற். 108
[2] ஐங். 260,296, 288:3-4; குறு. 346, 360:5-6; நற். 102, 306; அக. 188.
[3] பெ. மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப. 151
[4] மலை. 170-185; நற். 85
[5] அக. 172:6-13
[6] அக. 21:22-27
[7] அக. 282:1-10
[8] நற். 65:5-7
[9] குறு. 379:1-3

இருந்துள்ளனர். இவர்கள் உணவுக்காகப் பன்றி, முயல், முள்ளம்பன்றி போன்றவற்றை வேட்டையாடினர். இவர்கள் பன்றிகளை வேட்டையாடுவதற்காகச் சுருக்கு வார், அம்பு, வேட்டைநாய்கள், கவைக்கோல் போன்றவற்றைப் பயன்படுத்தினர்.

பன்றிகளைச் சுருக்கு வார் வைத்துப் பிடித்தனர். சுருக்கு வாரில் சிக்கும் பன்றிகளைக் காட்டு நாய்கள் சூழ்ந்து கொல்ல அவ்வாறு கொல்லப்பட்ட பன்றி இறைச்சியைக் கானவர் தம் சிறுகுடிக்குக்கொண்டுவந்து குடியிலுள்ள அனைவருக்கும் பகிர்ந்தளித்தனர்.[1]

தினைக் கதிர்களைத் தின்னவரும் பன்றிகளை மலைச் சாரல்களிலே அம்பெய்து வேட்டையாடினர். வேட்டையாடிய பன்றியைக் கானவன் தன் மனைவியிடம் தர, அவள் அப்பன்றியைத் தம் குடியினர் அனைவருக்கும் முறையுடன் பகுத்துத் தந்தாள். இதனை முறையே, "சாரல் கொடு விற் கானவன் கோட்டுமா தொலைச்சிப் பச்சூன் பெய்த பகழி"[2] என்றும்,

> "பிணர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு
> கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்,
> கல் அதர் அரும் புழை அல்கி, கானவன்,
> வில்லின் தந்த வெண் கோட்டு ஏற்றை,
> புனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி,
> குடி முறை பகுக்கும் நெடு மலை நாட!"[3]

என்றும் குறிப்பிடும் நற்றிணைப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

### 3.2.8. முள்ளம்பற்றி வேட்டை

கானவர் உணவுக்காக முள்ளம் பன்றிகளை அம்பெய்து கொன்று வேட்டையாடினர். வேட்டையாடிய முள்ளம் பன்றியின் கொழுத்த தசைப் பகுதியைக் கிழங்கோடு சேர்த்துத் தம் பகுதியில் வாழும் சிறுகுடியினர் பலர்க்கும் கொடிச்சியர் பகுத்துத் தந்தனர். இதனை,

> "……………………………………உரவுக் கணை
> வன் கைக் கானவன் வெஞ் சிலை வணக்கி,
> உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு,
> மனைவாய் ஞமலி ஒருங்கு புடை ஆட,
> வேட்டு வலம் படுத்த உவகையன்"[4]

> "……………………………………சாரல்
> கானவன் எய்த முளவு மான் கொழுங் குறை,
> தேம் கமழ் கதுப்பின் கொடிச்சி, கிழங்கொடு
> காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்"[5]

எனவரும் நற்றிணைப் பாடலடிகள் விளக்குகின்றன. மேலும், கானவர் வலைகளையும், வேட்டை நாய்களையும் பயன்படுத்தி முயல் வேட்டையாடினர்.[6] வில்லைத் துணையாகக்கொண்டு மான் வேட்டையாடினர்.[7]

---

[1] நற். 82:6-10
[2] நற். 75:5-7
[3] நற். 336:1-6
[4] நற். 285:2-6
[5] நற். 85:7-10
[6] பெரு. 106-117
[7] குறு. 272

### *3.2.9. யானைகளைப் பழக்கல்*

*பண்டைக் காலத்தில் குறிஞ்சி நிலப்பகுதியில் வாழ்ந்த கானவர்கள் யானைகளைப் பழக்கி மரங்களைச் சுமக்கப் பயன்படுத்தினர். இதனை, 'யானையால் கொண்டுவரப்பட்ட உலர்ந்த மரத்து விறகால் கானவர்கள் தீக்கடைகோலைக்கொண்டு மூட்டிய நெருப்பின் ஒளியில் மான்கூட்டம் தங்கித் துயிலும்'[1] என்று புறநானூறு சுட்டுவதுகொண்டு அறியலாம்.*

### *3.2.10. பலாமரக் காவல்*

*குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவர்களின் வீட்டு முற்றத்தில் பலாப்பழங்கள் காய்த்திருந்தன.[2] கானவர் இயற்கையில் விளைந்த அப்பலாப் பழங்களின் விளைவைத் தாங்களே பெறும் பொருட்டு அவற்றைக் குரங்குகள் கைக்கொள்ளா வண்ணம் பாதுகாக்க பலாமரங்கள்தோறும் வலைகளை விரித்துக் குரங்குகள் தின்னாவண்ணம் பிணித்தும்,[3] அம்பு எய்து துரத்தியும்[4] காவல் காத்தனர்.*

### *3.2.11. வேலைப் பிரிவினை*

*"உணவு சேகரித்த நிலை போய் உணவு உற்பத்தி செய்யும் நிலைக்கு வந்தபோது, மனித சமுதாயத்தில் வேலைப்பிரிவினை தொடங்கியது"[5] என்பார் கோ. கேசவன். விலங்குகளாலும், பறவைகளாலும் தினைப்புனம் அழிவதிலிருந்து பாதுகாக்க ஆண்பெண் இருவரும் இணைந்து காவல் பணியை மேற்கொண்டனர். பகல் வேளையில் பெண்களும், இரவு வேளையில் ஆண்களும் இப்பணியைச் செய்தனர்.*

*காட்டினை எரித்துத் தினைப்புனத்தை உருவாக்குதல், அவற்றில் தினை முதலான பயிர்களை விதைத்தல், வேட்டையாடுதல், கிழங்கு அகழ்தல், தேன் எடுத்தல் போன்றன ஆண்களின் பணிகளாக இருந்தன.*

*மலைப்பகுதிகளில் விளைவித்துக் கொண்டுவரப்பட்ட தினைப் பயிரினைப் பாறைகளில் உலர்த்துதல்,[6] உணவு சமைக்கத் தேவையான நெல்லைக் குற்றுதல்,[7] உணவு சமைத்தல், ஆண்கள் வேட்டையாடிக் கொண்டுவந்த விலங்கின் தசையைத் தம் குழுவிலுள்ள அனைவருக்கும் பகுத்துத் தருதல் போன்ற வீடுசார்ந்த பணிகளைப் பெண்கள் மேற்கொண்டனர்.*

## *3.3. முல்லைநில மக்கள்*

*சங்க அகப்பாக்களில் முல்லைத்திணைப் பாடல்கள் அனைத்தும் ஆயர்களின் வாழ்வைச் சித்தரிப்பனவாக இல்லை. மிகுதியான முல்லைப் பாடல்கள் பருவ மாற்றத்தையும், முல்லைநிலக் காதலர்களின் வாழ்விடச் சூழலையும் சித்தரிப்பவையாக இருப்பதைக் காணமுடிகிறது.*

*காடுசார்ந்த பகுதிகளையும் அங்குக் காணப்பட்ட வன்நிலக் கொல்லைப் பகுதிகளையும் வேளாண் நிலமாகக்கொண்டு வாழ்ந்த முல்லை நிலத்தவர்களின் உற்பத்திச் சாதனங்களாகக் கால்நடை வளர்ப்பும், வன்புல வேளாண்மையும் விளங்கின.*

---

[1] புற. 247:1-3
[2] புற. 236:1; நற். 44:9
[3] குறு. 342:1-4
[4] குறு. 385:1-4
[5] கோ. கேசவன்., மண்ணும் மனித உறவுகளும், ப. 135
[6] குறு. 335
[7] நற். 373:3-4

கால்நடைகளிடமிருந்து கிடைத்த பாலும் பால்படு பொருட்களும் முல்லைநில மக்களின் அடிப்படைப் பொருளாதாரமாக இருந்தது. பாலையும் பால்படு பொருட்களான தயிர், மோர், வெண்ணெய் ஆகியவற்றையும் அண்டையிலுள்ள பிற நிலமக்களுக்குக் கொடுத்து அவர்களிடமிருந்து மீன், நெல், உப்பு போன்றவற்றைப் பெற்றுக்கொண்டனர்.

கால்நடைகளே இவர்களின் சொத்து (மூலதனம்). எனவே, சொத்தைப் பாதுகாக்க வீரம் அவசியமானதாக இருந்ததால் வீரம் போற்றுதலுக்குரியதாகக் கருதப்பட்டது. வீர உணர்வை வளர்ப்பதற்காகவே ஏறுதழுவல் என்ற வீரவிளையாட்டு இவர்கள் சமூகத்தில் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகத் திகழ்ந்தது. வலிமையான ஏறுகளை அடக்கும் வீரர்களையே ஆயர்குலப் பெண்களும் மணக்க விரும்பினர்.

ஆடுமாடுகளை மேய்ச்சல் புலங்களுக்கு ஓட்டிச் சென்று மேய்த்தலும் அவற்றைக் கள்வர்களும், நரி போன்ற கொடிய விலங்குகளும் கவர்ந்துசெல்லாத வண்ணம் பாதுகாக்க இரவுவேளைகளில் காவல்காப்பதும் இவர்களின் அன்றாட வாழ்க்கைப் பணியாக இருந்தது.[1]

முல்லை நிலத்து மக்கள் பிறநிலத்து மக்களுக்குப் பால்படு பொருட்களை விற்று அதன்மூலம் கிடைத்த பொருட்களைக்கொண்டு வாழ்க்கை நடத்திவந்த நிலையினைச் சங்கப்பாக்கள் பல குறிப்பிடுகின்றன. குறிப்பாகப் பெரும்பாணாற்றுப்படை (148-205) இதனை விரிவாகச் சித்தரித்துள்ளது.

ஆய்ச்சியர்கள் தயிரிலிருந்து வெண்ணெயைப் பிரித்தெடுத்து, மோரையும், நெய்யையும் விற்று அதற்கு விலையாக நெல்லைப் பெற்றனர். நெய்விற்றுப்பெற்ற பொருளைக்கொண்டு கட்டிப் பசும்பொன்னை வாங்க விரும்பாத இடைமகள், எருமையையும், நல்ல பசுக்களையும் அவற்றின் கன்றுகளோடு வாங்குகிறாள் என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடும் செய்தி இடையர் குலப்பெண்களின் பொருளாதார நடவடிக்கையை அறியத் துணைநிற்கிறது.

முல்லைநில ஆயர்களின் பொருளாதாரம் கால்நடை மேய்த்தலை மட்டுமே சார்ந்திருக்கவில்லை. இவர்கள் வன்புல வேளாண்மையிலும் ஈடுபட்டுத் தினை, எள், வரகு முதலியவற்றைத் தங்கள் நிலப்பகுதிகளில் பயிரிட்டனர்.[2] இத்தகைய முல்லை நிலத்தவர்களின் பொருளாதாரப் பின்னணி குறித்து கா. சிவத்தம்பி, "முல்லைப் பொருளாதாரத்தைக் குறித்த நம்முடைய முதற்கருத்துப் பதிவு அது கால்நடை மேய்ச்சலை முற்றிலுமாகச் சார்ந்து இருக்கவில்லை என்பதுதான் தமிழ்நாட்டின் பூகோள அமைப்பு அப்பகுதி மக்களை நாடோடிகளாக்கும் இயல்புகளைக் கொண்டிருக்கவில்லை"[3] எனக் குறிப்பிடும் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

கால்நடை வளர்ப்புச் சமூகங்களில் வேளாண்மை கூடுதலான முக்கியத்துவம் பெற்றமையை, "எங்கெல்லாம் இயற்கைச் சூழல் சாதகமாக இருந்ததோ, அங்கெல்லாம் மேய்ச்சல் வேளாண்மையாக அல்லது கலப்பு வேளாண்மையாக உழவும் மேய்ச்சலும் சேர்த்தே செய்யப்பட்டன"[4] என்ற தாம்சனின் கூற்று முல்லை நிலத்தவர்களின் பொருளாதார நடவடிக்கையோடு பொருந்தி வருவது குறிப்பிடத்தக்கது.

---

[1] அக. 274
[2] மது. 271-272; நற். 121:1-2
[3] கா. சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 179.
[4] George Thomson, Studies in Ancient Greek Society, p. 33

மேய்த்தல் தொழிலோடு ஆயர்கள் வன்புல வேளாண்மையிலும் ஈடுபட்டதை, "கொல்லை உழவர்"[1], "கொல்லை கோவலர்"[2] எனச் சுட்டுவனகொண்டு விளங்கிக்கொள்ள முடிகிறது. இவர்கள் பலமுறை உழுது பண்படுத்திய பழங்கொல்லைப் புழுதியில் வரகினை விதைத்துப் பயிரிட்டதை,

> "விதையர் கொன்ற முதையல் பூழி,
> இடுமுறை நிரப்பிய ஈர் இலை வரகு"[3]

> "பேர் உறை தலைஇய பெரும் புலர் வைகறை,
> ஏர் இடம் படுத்த இரு மறுப் பூழிப்
> புறம் மாறு பெற்ற பூவல் ஈரத்து,
> ஊன் கிழித்தன்ன செஞ் சுவல் நெடுஞ் சால்,
> வித்திய மருங்கின் விதை பல நாறி"[4]

எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன.

### *3.3.1. கால்நடை வளர்ப்பு*

ஆடுகளை உடைமையாகக்கொண்ட இடையர்கள் ஊர்ப்புறங்களில் உள்ள வீடுகளுக்குப் பாலைக் கொண்டுவந்து தந்துவிட்டு உணவினைப் பெற்றுச் சென்றதை,

> "பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய,
> பாலொடு வந்து கூழொடு பெயரும்
> ஆடுடை இடைமகன்"[5]

எனும் குறுந்தொகைப் பாடலடி குறிப்பிடுகின்றது. செம்மறியாட்டுக் கூட்டத்தை மேய்க்கும் இடையர்கள் அவற்றை நரிகளிடமிருந்து பாதுகாக்கச் சீழ்க்கை ஒலி எழுப்பி அவற்றை விரட்டினர்.[6] இவர்கள் பசுக்கூட்டங்களை மட்டுமின்றி எருமைகளையும் மேய்த்தனர்.[7] இவர்கள் மேய்ச்சலின் பொருட்டுக் காடுகளிலும் தங்கி இருந்ததை அகநானூறு, "காடுறை இடையன்"[8] எனச் சுட்டுகிறது.

ஆயர் இல்லங்களில் மாட்டுத் தொழுவங்கள் வீடுகளுக்கு அருகில் அமைந்திருந்தன. மேய்ச்சலுக்குச் சென்ற மாடுகள் மாலை வேளைகளில் அத்தொழுவங்களை அடைந்தன.[9] இதனை, "மனைமனைப் படரும் நனைநகு மாலை"[10], "மன்றுநிறை புகுதரும் ஆபூண் தெண்மணி"[11] என்பனகொண்டு தெளியலாம்.

மேற்குறித்தவாறு மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்ட இடையர்கள் கால்நடைகளிடமிருந்து பெறப்பட்ட பாலை விற்கும் தொழிலில் ஈடுபட்டிருந்ததை, "பால் நொடை இடையன்"[12] என்று குறிப்பிடுவதுகொண்டு அறியமுடிகிறது. பால் பண்டமாற்றாக விற்கப்பட்டது. இத்தகைய பண்டமாற்றுப் பரிவர்த்தனையே

---

[1] அக. 194:13
[2] நற். 266:1, 289:8
[3] நற். 121:1-2
[4] அக. 194:1-5
[5] குறு. 221:2-4
[6] அக. 94:4-8, 274; நற். 142:1-8
[7] குறு. 279:1
[8] அக. 394:13
[9] அக. 54:6-12, 64:12-17, 214:10-15
[10] அக. 54:12
[11] அக. 64:14-15
[12] நற். 142:4

இனக்குழுச் சமூகக் கட்டமைப்பு உடைவதற்கான முதன்மைக்கூறு'[1] என்பார் கா. சிவத்தம்பி.

நிலையான குடியிருப்பும் கால்நடைவளர்ப்புடன் கூடிய வேளாண்மையும் (வன்புலச் சாகுபடி) சொத்துடைமை தோன்ற வழிவகுத்தது. உபரி உற்பத்தியை ஏற்படுத்தியது. சமூகத்தின் ஏற்றத்தாழ்வுக்கு அடித்தளமிட்டது. பொருள் இருப்பவன் பொருள் இல்லாதவனை அடிமைப்படுத்துவதும். பொருள் இல்லாதவன் இருப்பவனிடம் கொள்ளை அடிப்பதும் சமூகத்தில் கால்கொள்ளத் தொடங்கியது. இதுவே பின்னாளில் ஆநிரை கவரும் போராகத் தோற்றம் பெற்றது. இத்தகைய நோக்கில் ஆநிரை கவரும் போர்கள் நடைபெற்றதை, "அத்தக் கள்வர் ஆ தொழு அறுத்தென, பிறப்டு பூசலின் வழிவழி ஓடி"[2], "கறவை தந்த கடுங்கால் மறவர்"[3] எனவரும் அகப்பாடல் அடிகள் காட்டுகின்றன.

இத்தகைய பின்புலத்தில் முல்லை நிலத்தில் ஏற்பட்ட சமூக வளர்ச்சியில் உடைமைகளின் பாதுகாப்பு இன்றியமையாததாக வேண்டப்பட்டு அவை காவலுக்கட்படுத்தப்பட்டன. இதனை, "அருங் கடிக் காப்பின், அஞ்சு வரு, மூதூர்"[4], "அருங்கடி வியல்நகர்"[5], "கடிகொள் இருங்காப்பில் புல்லினத்து ஆயர்"[6] எனவரும் அடிகள் உணர்த்துகின்றன.

### 3.3.2. ஆண் – பெண் உற்பத்தி உறவு

குடியிருப்புக்கு அருகிலுள்ள தோட்டங்களை உழுது பயிரிட்டு முதன்முதலில் வேளாண்மையில் ஈடுபட்டவர்கள் பெண்களே. "கால்நடைகளால் இழுக்கப்படும் கலப்பை அறிமுகப்படுத்தப்பட்ட பின்னர்தான் வேளாண்மை ஆண்களுக்குரியதாக மாற்றப்படுகிறது"[7] என்றும், "முதல் உழைப்புப் பகிர்வு ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையில் நிகழ்ந்தது. பெண்கள்தான் முதல் குயவர்கள், முதலில் கூடை முடைந்தவர்கள், மண்வெட்டியால் மண்ணைக் கிளறி வேளாண்மை செய்தவர்கள் அல்லது குச்சிக்கொண்டு கிளறி முதன்முதலாகப் பயிரிட்டவர்கள். தானியங்கள் மதிப்பு மிக்க உணவாதாரமாக ஆனபின்னர், பானைகள், கூடைகள் ஆகியன சேகரித்தவற்றைச் சேமிப்பதற்கும், மேலும் அரைவைக்குரிய திரிகை போன்ற கருவிகளும் தேவைப்பட்டன. தானியம் சேகரிக்கப்பட்டதோடு உற்பத்தியும் செய்யப்பட்டது. தந்தையாதிக்கத்திற்கான மாற்றம் ஆடவர்களின் சிறப்புச் சொத்து வளர்ச்சியோடுதான் ஏற்பட்டது. பொதுவாக இது எப்போது நிகழ்ந்தது என்றால், கால்நடைகள் முதலில் அதனுடைய இறைச்சிக்காவும் பின்னர் பால்படு பொருள்கள் மற்றும் தோலுக்காகவும் (பண்டமாற்றுப் பரிவர்த்தனைக்குப் பயன்படுத்தப்பட்டது) பயன்படுத்தப்பட்டு, இறுதியாக வேளாண்மை, போக்குவரத்து ஆகியவற்றில் ஒரு சக்தியாக உபயோகப்படுத்தப்பட்டபோதுதான். இவ்உருவாக்கங்களின்போது மக்கள் சுற்றுச் சூழலைத் தங்களுடைய செலவழிவிற்குள் கொண்டு வந்து மென்மேலும் திறமையாக வாழத் தலைப்பட்டார்கள்"[8] என்றும் குறிப்பிடப்படும் ஆண்பெண் உற்பத்தி உறவு குறித்த

---

[1] கா. சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 182-183

[2] அக. 7:14-15

[3] அக. 63:10-13

[4] அக. 114:12

[5] அக. 224:17

[6] கலி. 110:1

[7] கா. சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 186

[8] D.D. Koswami, An Introduction to the study of Indian History, p.22

*கருத்துக்களை முல்லை நில ஆண்பெண் தொழில் பகுப்பில் பொருத்திப் பார்க்கலாம்.*

*முல்லைக்கலிப் பாடலொன்று, "புனத்தின்கண் இருக்கின்ற என் தமையனுக்கு உணவு எடுத்துச் செல்லுமோ? ஆனினத்துடன் இருக்கின்ற எந்தைக்குக் கறவைக் கலங்கள் கொண்டு செல்லுமோ? தினை அரிந்த வயலுள் என்தாய் மேயவிட்ட கன்றுகளை மேய்த்துக்கொண்டிருக்குமோ?"[1] எனத் தலைவி ஒருத்தி குறிப்பிடுவதாக அமைந்துள்ளது. இப்பாடல் ஆண் மேய்த்தல் தொழிலோடு வேளாண்மையிலும் நுழைந்துவிட்ட நிலையைக் காட்டுகிறது.*

*பெண் வேளாண்மையிலிருந்து மெல்ல விலகி வீடுசார் பணிகளிலும், பால்படு பொருட்களைப் பண்டமாற்று செய்யும் பணிகளிலும் தங்களை ஈடுபடுத்திக்கொண்டதை முல்லைக்கலிப் பாடல்கள் காட்டுகின்றன.[2]*

*மேற்குறித்த கருத்துக்கள் முல்லை நிலத்தில் ஆண் உற்பத்திச் சக்திகளின் மீது செலுத்திய ஆதிக்கத்தினைப் புலப்படுத்துவதோடு பெண் வீடுசார்ந்த பணிகளில் இயங்கவேண்டிய நிலையில் இருந்ததைப் புலப்படுத்துகிறது. இங்கு ஆணின் சொத்துடைமையை நிலைநாட்டுவதற்காகப் பெண்ணின் ஒழுக்கம் குறித்த கற்பொழுக்கம் கால்கொள்வதற்கான சூழல் தோன்றுவதற்கு உற்பத்தி உறவு காரணமாக இருந்தது என்பது கவனிக்கத்தக்கது.*

### *3.4. மருதநில மக்கள்*

*பயிர் செய்வதற்குரிய விளைநிலங்களையும் ஆறு, ஏரி, குளம், கிணறு என்ற பல்வேறு நீராதாரங்களையும் கொண்டு வேளாண் தொழிலில் சிறந்து விளங்கிய மருதநிலப் பகுதி, மக்களின் நிலையான வாழ்வுக்கும் மக்கள்தொகைப் பெருக்கத்திற்கும் வழிவகுத்தது.*

*மருதநிலப் பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட தொடர்ச்சியான வேளாண்மை அப்பகுதியின் பொருளாதார மேம்பாட்டுக்கு வழிவகுத்ததோடு, உபரி உற்பத்தி ஏற்பட்டு சொத்துடைமை தோன்ற அடித்தளமிட்டது. பிற தொழில்களின் தோற்றத்திற்கு வித்திட்டது. சமூகத்தில் வர்க்க பேதங்கள் தோன்ற ஆரம்பித்தன. தொழிலை அடிப்படையாகக்கொண்ட பல்வேறு மக்கள் பிரிவுகள் தோற்றம் பெற்றன.*

*சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படும் ஏவலர், வினைவளர், வினைஞர் முதலான தொழிற் பிரிவுகள் இதனைக் காட்டும். மேலும் இது உற்பத்திக் கருவியாக விளங்கிய நிலம் தனி உடைமையாக இருந்ததற்கான நிலையினை உறுதிப்படுத்துகிறது. சமூகத்தில் நிலவிய பொருளாதார மாற்றத்தைக் கா. சிவத்தம்பி, விறலி பரத்தையாக மாறிய நிலையினைச் சுட்டிக்காட்டி விளக்குவார்.[3]*

*வரலாற்றுக் காலத்துக்கும் முந்தைய பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தென்னிந்திய மக்கள் வேளாண்மையில் சிறந்து விளங்கினர். தொழில்கள் பலவற்றுள்ளும் அடிப்படையான தொழிலாக விளங்குவது வேளாண்மை. ஒரு நாட்டின் வளம் வேளாண் உற்பத்தியைக்கொண்டே கணக்கிடப்பெற்றது. உலக*

---

[1] *கலி. 108:31-33*
[2] *கலி. 108, 109*
[3] *கா. சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், அறிமுகவுரை, ப. XIII*

இயக்கத்தில் உழவின் முக்கியத்துவத்தை உணர்த்தவந்த திருவள்ளுவரும் "சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால் உழந்தும் உழவே தலை"[1] எனக் குறிப்பிடுவது நோக்கத்தக்கது.

சங்கப் பாடல்களில் உழவர்கள், "ஏரின் வாழ்நர்"[2], "ஏராளர்"[3], "தொழுவர்"[4], "களமர்"[5], "வேளாளர்"[6] எனப் பல பெயர்களால் குறிப்பிடப்படுகின்றனர். இத்தகைய உழவர்கள் நில உடைமையாளர்கள் (வேளிர், கிழார்), விவசாயக் கூலிகள் எனப் பொருளாதார அடிப்படையில் இரு நிலையினர்களாகக் காணப்பட்டனர்.

மருத நிலப்பகுதியைச் சார்ந்த நன்செய் நிலங்கள் பழனம், ஆறு, குளம், பொய்கை போன்ற நீர் வளமுள்ள பகுதிகளைச் சார்ந்து காணப்பட்டன. இத்தகைய நீர்வளம் மிக்க பகுதிகளில் இடையறாது ஆண்டின் எல்லா காலங்களிலும் பயிர் செய்யபட்ட நிலையினை,

> "வான் பொய்ப்பினும், தான் பொய்யா,
> மலைத் தலைய கடல் காவிரி
> புனல் பரந்து பொன் கொழிக்கும்
> விளைவு அறா வியன் கழனி"[7]

எனப் பட்டினப்பாலை சுட்டுகிறது. பழங்கொல்லைகள் பலவும் அழித்து விளைநிலங்களாக மாற்றப்பட்டதை, "முதைப் புனம் கொன்ற ஆர்கலி உழவர்"[8] எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது.

### 3.4.1. உழும் முறைகள்

நிலத்தைப் பலமுறை உழுது பண்படுத்தும் வழக்கமிருந்ததை, "செஞ்சால் உழவர்"[9], "உறுபெயல் தண்துளிக் கேற்ற பலவுழு செஞ்செய் மண்போல் நெகிழ்ந்து"[10] எனச் சுட்டுவன கொண்டு அறியமுடிகிறது. முல்லைநில உழவர்கள் செம்மண் நிலத்தின் புழுதி கீழ்மேலாகப் புரண்டு விழுந்து புலருமாறு உழுதனர்.[11] நிலத்தை உழுவதற்கு எருதுகள் மட்டுமின்றி எருமைக் கடாக்களும் பயன்படுத்தப்பட்டன.[12]

### 3.4.2. நாற்றுநடுதல்

பரிபாடல் குறிப்பிடும் 'வித்திடு புலம்'[13] என்பது நாற்றங்காலினைக் குறிப்பிடுவதாகக் கருதலாம். நெற்பயிரானது நாற்றுநடவு முறையில் விளைவிக்கப்பெற்றதை, "நீர்உறு செறுவின் நாறுமுடி அழுத்த"[14], "முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் செறு"[15] எனச் சுட்டுவதைக்கொண்டு அறியமுடிகிறது.

விதைகளை விதைப்பதற்குமுன் நிலத்தை நன்கு பலமுறை உழுது பண்படுத்தினர். இதனை, 'புனம் துளர்ந்து வித்திய'[16] எனச் சங்கப்பாடல் குறிப்பிடுகிறது. குறைந்த பரப்புள்ள நிலத்திலும் நிறைந்த அளவு சாகுபடி

---

[1] குறள். 1031
[2] புற. 33:4
[3] பதி. 76:11
[4] புற. 24:1, 209:2; நற். 195:6
[5] புற. 212:2, 387:25; நற். 125:9
[6] பரி. 20:63
[7] பட். 5-9
[8] குறு. 155:1
[9] பெரு. 197; நற். 340:7
[10] அக. 26:23-25
[11] அக. 194:1-4
[12] புற. 289:1-3; நற். 340:6-7
[13] பரி. 7:35
[14] நற். 60:7
[15] பெரு. 212
[16] குறு. 214:1

செய்யப்பட்டதை, "ஒருபிடி படியுஞ் சீறிடம் எழுகளிறு புரக்கு நாடு"[1] என்பதுகொண்டு தெளியலாம்.

### 3.4.3. கடாவிடுதல்

நெற்கதிர்களிலிருந்து நெல்லைப் பிரித்தெடுக்க மாடுகளைக் (எருது) கொண்டு பிணையலடிக்கப்பட்டது.[2] நெல் குவித்துவைக்கப்பட்ட காட்சி மலையைப் போன்று இருந்தது. நெல் மூட்டைகளில் நிரப்பப்பெற்று வைப்பதற்கு இடமில்லாமல் இருந்தது.[3] நெல்லினைச் சேமித்து வைப்பதற்கு நெற்கூடுகள் பயன்படுத்தப்பட்டன.[4]

உழவர், களமர், தொழுவர் எனப் பல பெயர்களால் குறிப்பிடப்படும் உழவர்கள் மேற்குறித்த பணிகளேயன்றி களையெடுத்தல், காவல் காத்தல், நெல் அரிதல் அவற்றைக் களத்தில் குவித்தல், தூற்றுதல் போன்ற பிற பணிகளையும் செய்தனர். இதனை, "கழனி உழவர் சூட்டொடு தொகுக்கும்"[5], "பெருங்களம் தொகுத்த உழவர்"[6], "கழனி காவலர்"[7] எனவரும் அடிகள் புலப்படுத்துகின்றன. இத்தகைய வேளாண் பணிகளுக்கு எத்தகைய கூலி வழங்கப்பட்டது என்பதை அறிய போதிய சான்றுகளில்லை.

### 3.4.4. பல்வகைப் பயிர்கள்

ஒரு பகுதியிலிலுள்ள நிலத்தில் ஒரே வகையான பயிரைச் செய்யாமல் அருகருகே வெவ்வேறு பயிர்களைச் செய்யும் வழக்கமிருந்ததை, "வாழைமென் தோடு வார்புறுபு ஊக்கும், நெல்விளை கழனி நேர்கண் செறு"[8] என்று நற்றிணை சுட்டுகிறது.

### 3.4.5. நீர் மேலாண்மை

உழவுத்தொழில் சிறக்க மழை முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கியமையின் அதனைத் 'தொழில் மழை'[9] எனச் சிறப்பித்தனர்.

நன்செய் நிலங்களில் பரவலாக நீர் நிறைந்து இருக்குமாறு வயல்களுக்கு நீர்ப் பாய்ச்சப்பெற்றதையும், அதற்காக ஆம்பி எனப்பட்ட ஏற்றம் பயன்படுத்தப்பட்டதையும், "ஏர் பரந்த வயல், நீர் பரந்த செறு"[10], "ஏற்றத்தோடு வழங்கும் அகல் ஆம்பியின், கயன் அகைய வயல் நிறைக்கும்"[11] எனவரும் அடிகள் சுட்டுகின்றன.

பாண்டிய மன்னன் தன் நாட்டின் நீர் வளத்தைப் பெருக்கியதை குடபுலவியனார் என்னும் புலவர், "நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருக"[12] எனக் குறிப்பிடுவதைக்கொண்டும், நீர்ப் பாசனத்திற்கு வாய்க்கால்கள் அமைக்கப்பட்டுப் பராமரிக்கப்பட்டதை, "பொய்கை வாயில் புனல் பொரு புதவு"[13] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுவதைக்கொண்டும், சோழன் கரிகால் பெருவளத்தான் தன் நாட்டின் நீர், நில வளத்தைப் பெருக்கியதை, "காடு கொன்று நாடு ஆக்கி, குளம் தொட்டு வளம் பெருக்கி"[14] எனப் பட்டினப்பாலை குறிப்பிடுவதைக்கொண்டும்

[1] புற. 40:10-11
[2] புற. 327:1-2
[3] பெரு. 242-245
[4] நற். 26:3
[5] புற. 13:11
[6] அக. 30:8
[7] நற். 280:7
[8] நற். 400:1-2
[9] அக. 252:11; மது. 10; பதி. 84:21
[10] புற. 338:1
[11] மது. 90-92
[12] புற. 18:28
[13] பதி. 27:9
[14] பட். 283-284

*அரசர்கள் தங்கள் நாட்டின் நீர் வளத்தைப் பெருக்குவதில் கவனம் செலுத்தியதை உணரலாம்.*

*ஆற்றில் பெருகிவரும் வெள்ளத்தைத் தடுப்பதற்காக அதன் கரைகளில் மணல் மூட்டைகளை அடுக்கிவைத்துப் பாதுகாத்தனர்.[1] நீர் நிலைகளைப் பாதுகாக்க காவலர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர்.[2]*

### *3.4.6. தொடர் வேளாண்மை*

*அறுவடை செய்யப்பட்ட வயல் மீண்டும் உழப்பட்டுப் பயிர் செய்யப்பட்டதை, "அரிகால் மாறிய அங்கண் அகல்வயல் மறுகால் உழுத ஈரச் செறு"[3], "அரிகாற் பெரும் பயறு"[4], "சிறு தினை கொய்த இருவி வெண் கால் காய்த்த அவரை"[5] எனவரும் அடிகள் குறிப்பிடுகின்றன.*

### *3.4.7. கரும்பு வேளாண்மை*

*நீர் வளமிக்க மருதநிலக் கழனிகளில் கரும்பு பயிரிடப்பட்டது. "கரும்புநடு பாத்தியில் கலித்த ஆம்பல்"[6], "பூத்த கரும்பின், காய்த்த நெல்லின், கழனி ஊரன்"[7], "கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்"[8], "வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்"[9], "அகல்வயல் நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூ"[10], "அகல்வயற் கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ"[11], "தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பு"[12] எனவரும் அடிகள் இதனைக் காட்டுகின்றன.*

*இக்கரும்புப் பயிரினைத் தமிழகத்திற்கு அறிமுகப்படுத்தியவர்கள் அதியமானின் முன்னோர்கள் எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.[13] சங்க காலத்தில் உறந்தை, கள்ளூர் போன்ற ஊர்களில் கரும்பு அதிகமாக விளைந்ததை, "இருங் கதிர் அலமரும் கழனிக் கரும்பின்... உறந்தை"[14], "கரும்பு அமல் படப்பை, பெரும் பெயர்க் கள்ளூர்"[15] எனவரும் அடிகள் குறிப்பிடுகின்றன.*

*களிற்றின் காலடிபட்ட இடத்தில் தேங்கும் நீரின் அளவுக்குக் கரும்புநடு பாத்தியில் நீர் தேங்கி இருந்ததை, "கரும்புநடு பாத்தி யன்ன பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே"[16] எனக் குறிப்பிடுவதைக்கொண்டும், கரும்பு அறுவடை செய்யும் கருவியின் முனை மழுங்கும் அளவுக்கு மிகுதியான கரும்பு விளைந்ததை, "கால மன்றியுங் கரும்பறுத் தொழியா"[17], "அரிநர் கொய்வாள் மடங்க, அறைநர் தீம்பிழி எந்திரம் பத்தல் வருந்த"[18] எனவரும் அடிகள் குறிப்பிடுவன கொண்டும் அறியமுடிகிறது. கரும்பிலிருந்து சாறு பிழிந்தெடுக்க எந்திரங்கள் இருந்ததை,*

> *"எந்திரம் சிலைக்கும் துஞ்சாக் கம்பலை*
> *விசயம் அடூஉம் புகை சூழ் ஆலைதொறும்,*
> *கரும்பின் தீம் சாறு விரும்பினிர் மிசைமின்"[19]*

---

[1] பதி.30:18-20
[2] அக. 252:9-13
[3] நற். 210:1-2
[4] ஐங். 47:3
[5] ஐங். 286:1-2
[6] ஐங். 65:1
[7] ஐங். 4:4-5
[8] பதி. 13:3
[9] புற. 386:10
[10] அக. 217:3-4
[11] அக. 235:11-12
[12] குறு. 85:4
[13] புற. 99, 392
[14] அக. 237:11-14
[15] அக. 256:15
[16] குறு. 262:7-8
[17] பதி. 30:14
[18] பதி. 19:22-23
[19] பெரு. 260-262

"ஆலைக்கு அலமரும், தீம்கழைக் கரும்பே"[1]

"மழை கண்டன்ன ஆலைதொறும், ஞெரேரெனக்
கழை கண் உடைக்கும் கரும்பின் ஏத்தமும்"[2]

"கார்க்கரும்பின் கமழாலை"[3]

எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன. இத்தகைய கரும்பாலைகளில் கரும்பு பிழியும் ஒலி யானைகள் பிளிறுவதுபோல் இருந்ததை, "கரும்பின் எந்திரம் களிற்று எதிர் பிளிற்றும்"[4] என்பதுகொண்டு அறிந்துகொள்ள முடிகிறது.

### 3.4.8. வேளாண் கருவிகள்

உழுவதற்குக் கலப்பையும், உழுத நிலத்தைச் சமப்படுத்துவதற்குத் 'தளம்பு'[5] என்ற கருவியும், நீர் இறைப்பதற்கு ஏற்றத்தோடு கூடிய 'ஆம்பி' எனப்பட்ட கருவியும், பயிர்களுக்கு இடையில் வளர்ந்த களைகளை நீக்குவதற்குத்ள 'துளர்', 'தொடுப்பு'[6] எனப்பட்ட களைக்கொட்டுகளையும் பயன்படுத்தினர். நெல்லரியும் உழவர் அறுவடையின்போது பறையினை (தண்ணுமை) முழக்கினர். விளைந்த நெற்கதிர்களை அறுவடை செய்வதற்கு 'குயம்', 'கூர்வாள்'[7] எனப்பட்ட அரிவாளினைப் பயன்படுத்தினர். நிலத்தில் விளைந்த நெல் போன்ற தானியங்களைச் சேமிக்கக் 'கூடு' எனப்பட்ட குதிர்கள் பயன்படுத்தப்பட்டன. விதை போன்றவற்றை எடுத்துச்செல்ல வட்டி எனப்பட்ட கூடைகள் பயன்படுத்தப்பட்டன. நெல் போன்ற தானியங்களை அளக்க 'அம்பணம்' எனப்பட்ட அளவைக் கருவிகளும், கரும்பினைப் பிழிய அரவை இயந்திரங்களும் பயன்படுத்தப்பட்டன. களத்தில் கதிரடித்துக் குவிக்கப்பெற்ற நெல்லை ஏற்றிச் செல்ல வண்டிகள்(சகடம்) பயன்படுத்தப்பட்டன.[8]

### 3.4.9. மது

உள்ளூர் வணிகத்தில் மது மிகமுக்கியமான உற்பத்திப் பொருளாக இருந்தது. இவை எவ்வாறு தயாரிக்கப்பட்டன. இவற்றைத் தயாரித்தவர்கள், விற்பனை செய்தவர்கள் ஆகியோரைக் குறித்து இவ்வாய்வேட்டின் முதல் இயலில் மிக விரிவாகப் பேசப்பட்டுள்ளது.

### 3.5. நெய்தல் நில மக்கள்

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவர்கள் கடல்சார் தொழில்களான மீன்பிடித்தல், ஆழ்கடலில் மூழ்கி முத்தெடுத்தல், சங்கெடுத்தல் மற்றும் உப்பு விளைத்தல் போன்ற தொழில்களைச் செய்து வந்தனர்.

பரதவர் தம் சுற்றத்துடன் கூட்டமாகச் சென்று கடலில் மீன் பிடித்தனர். தம்மிடம் இரந்தோரின் கலம் நிறையுமாறு மீன்களை வாரி வழங்கினர். எஞ்சியவற்றைக் கூறுகளாகப் பகுத்து விலைகூறி விற்றனர்.[9] இரவு நடு யாமத்தில் சுறா வேட்டை மேற்கொண்டனர்.[10] மீனவர்கள் பிடித்துவந்த மீன்களை மீனவப்

---

[1] மலை. 119
[2] மலை. 340-341
[3] பட். 9
[4] ஐங். 55:1
[5] புற. 61:3
[6] பெரு. 202
[7] நற். 195:5-6
[8] புற. 90
[9] அக. 30:1-10, 70:1-4
[10] நற் .388:2-6

பெண்கள் ஊர்ப்புறங்களில் விலைகூறி விற்றனர்.[1] நாள்தோறும் பிடித்த மீன்களில் விற்றவை போக மிகுதியானவற்றைக் கடற்கரை மணற்பரப்பிலேயே சுறாமீனின் வற்றல், இறாமீனின் வாடல் ஆகியவற்றைக் காயவைத்து உணங்கலாக்கினர்.[2] உணங்கலாக வெயிலிற் காயவைக்கும்போது கூட்டமாய்த் திரளும் பறவைகளை விரட்டுவதைப் பரதவ இனப்பெண்கள் தொழிலாகக் கொண்டிருந்தனர்.[3]

இவர்கள் கடலுக்குச் சென்று மீன் பிடிக்கும் தொழிலையன்றி நீரினுள் மூழ்கி முத்தெடுத்தல், சங்கெடுத்தல் போன்ற தொழில்களிலும் ஈடுபட்டிருந்தனர்.[4] மேலும் கடற்கரைக்கு அருகிலிருக்கும் உப்பளங்களில் உப்பு விளைவிக்கும் தொழிலையும் செய்துவந்தனர்.[5] இதனால் இவர்கள் "உழாஅ உழவர்"[6] எனப்பட்டனர்.

கடல்நீரைக்கொண்டு விளைவித்த உப்பை உமணர்களிடமிருந்து நெல்லைப் பெற்றுக்கொண்டு பண்டமாற்றாக விற்றனர்.[7] பரதவப் பெண்களும் உப்பினைக் கொடுத்து நெல்லினைப் பண்டமாற்று செய்துவந்தனர்.[8]

இவர்கள் ஆழ்கடலுக்குச் செல்லாமல் கரையோரங்களிலேயே மீன் பிடித்தனர். மீன் பிடிப்பதற்காக எளிய படகுகளையும், வலைகளையும், சுறா மீன்களைப் பிடிப்பதற்காகக் கூர் உளிகளையும் பயன்படுத்தினர்.

### 3.6. பாலை நில மக்கள்

#### 3.6.1. ஆறலை கள்வர்

உணவு உற்பத்திக்கு ஏற்ற நில வளமும் நீர் வளமும் இல்லாத வறண்ட பாலை நிலப்பகுதியில் எயினர்கள் என்போரும் ஆறலை கள்வர் என்போரும் வாழ்ந்தனர். இவர்கள் வழிப்போக்கர்களிடமிருந்தும், வணிகக் குழுக்களிடமிருந்தும் அவர்களைத் துன்புறுத்தியும் கொன்றும் அவர்களிடமிருந்து பொருட்களைக் கொள்ளையடித்து வாழும் வாழ்க்கையுடையவர்களாவர். ஆறலை கள்வர்கள் இத்தகைய ஆறலைத்தலேயன்றி கால்நடைகளைக் கொள்ளையடிப்பதையும் தொழிலாகக் கொண்டிருந்தனர். இவர்களை 'மறவர்', 'கள்வர்' என்ற பெயர்களால் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களில் அடையாளங்காண முடிகிறது.

இவர்கள், சுரவழியில் செல்லும் வழிப்போக்கர் வராத நேரங்களில் அக்காட்டில் வாழும் உயிர்களைக் கொள்ளைகொண்டு உண்பர்.[9] எறும்புகள் சேகரித்த புல்லரிசியை உணவாகக் கொண்டனர்[10]. இவர்களின் முக்கியக் கருவியாக வில் விளங்கியமையின் 'வில்ஏர் உழவர்' எனப்பட்டனர். இவர்கள் வேலினைக் கொலைக்கருவியாகப் பயன்படுத்தினர். இவர்களின் இத்தகைய வாழ்க்கை முறைக்கு நில அமைப்பே காரணமாக அமைவதை, சு. வித்தியானந்தனின், "சங்க கால மக்கட் பாகுபாடும், வாழ்க்கையும், ஒழுக்கமும் நில இயற்கைக்கு ஏற்பவே அமைந்திருந்தன"[11] என்ற கூற்று உணர்த்துகிறது.

[1] அக. 320:1-4
[2] குறு. 320:1-3
[3] நற். 45, 331:4; அக. 80:4-6
[4] ஐங். 195:1; அக. 280:11-14, 350:10-11
[5] அக. 366:5-9
[6] நற். 331:1
[7] நற். 183:1-2, 331:1-3
[8] அக. 340:14-15
[9] குறு. 331:1-3
[10] அக .377:1-6
[11] சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.8

### 3.6.2. எயினர்

*பாலை நிலத்தில் வாழ்ந்த எயினர்கள் ஆறலைத்தலைக் குலத்தொழிலாகக் கொண்டவர்கள்[1]. அச்சத்தை ஏற்படுத்தும் துடியினையும் வில்லினையும் கொண்ட இவர்கள் வழிப்போக்கரைத் தாக்கியோ கொன்றோ அவர்களின் பொருட்களைக் கொள்ளையிட்டனர்.[2] பட்டினப்பாலை இவர்கள் மருதநிலப்பகுதிகளுக்குத் துடியை முழக்கிச் சென்று நெற்கூடுகளைக் கொள்ளையிட்டுச் செல்வர் எனக் குறிப்பிடுகிறது.[3] உணவுக்காக வேண்டி முள்ளம்பன்றி முதலிய விலங்குகளை வேட்டையாடி உண்டனர் [4].எயினர்களைப்பற்றி பத்துப்பாட்டில் ஒன்றான பெரும்பாணாற்றுப்படை 83 முதல் 105 வரையிலான அடிகள் மிக விரிவாகக் குறிப்பிடுகின்றது. எயிற்றியர் கரம்புநிலத்தைக் குத்திக் கிளறிப் புல்லரிசியை எடுத்துவந்து அவற்றை நிலவுரலில் இட்டு, குற்றி உணவு சமைத்தனர்.[5] இவர்கள் விலங்குகளைப் பிடிப்பதற்குப் பார்வை மான்களையும், உடும்பு போன்றவற்றை வேட்டையாடுவதற்கு நாய்களையும் பயன்படுத்தினர்.[6]*

*ஒவ்வொரு பகுதியும் புவியியல் அடிப்படையில் தனித்தனியான நீர், நில வளங்களைப் பெற்றிருந்தமையின் சங்க இலக்கியம் காட்டும் நானிலச் சமூகத்தின் சமூக வளர்ச்சி என்பது சமமான வளர்ச்சியின்றி ஏற்றத்தாழ்வுடையதாகவே இருந்தது. இந்நிலையினைக் கா. சிவத்தம்பி, "நீர்ப்பாசன வாய்ப்பு மிக்க மருதநிலத்தில் செய்யப்படும் வேளாண்மை முறையினை, குன்றுப்பகுதியிலுள்ள வேளாண்மை முறையுடன் (பாரியின் பறம்பு மலை போன்றவை) ஒப்பிட்டு நோக்குவதும் அசமத்துவ வளர்ச்சிப் போக்கினை வெளிப்படுத்தும்"[7] எனக் குறிப்பிடுவார்.*

## 3.7. இறக்குமதிப் பொருள்கள்

### 3.7.1. யவனர் தேறல்

*பழந்தமிழர்கள் அயல்நாட்டினருடன் கடல்வழி வாணிகத்தில் ஈடுபட்டிருந்தனர். அவ்வாணிகத்தில் இறக்குமதி செய்யப்பட்ட பொருட்களுள் ஒன்றாக யவன நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட தேறல் எனப்பட்ட மது இருந்துள்ளது. இதனை, "யவனர் நன் கலம் தந்த தண் கமழ் தேறல்"[8] என்று புறநானூறு குறிப்பிடுகிறது. அரிக்கமேடு பகுதியில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வில் கி.மு. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த மதுச்சாடிகள் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதும் பண்டைத் தமிழர் வாணிகத் தொடர்பை அறியத் துணை நிற்கின்றன.[9]*

### 3.7.2. மிளகு

*மலை சார்ந்த பகுதிகளில் விளையக்கூடிய விளை பொருள்களுள் ஒன்றாக மிளகு காணப்பட்டதை, "கறிவளர் அடுக்கம்"[10], "கறிவளர் சாந்தம்"[11], "கறிஇவர் சிலம்பு"[12], "துறுகல் நண்ணிய கறியிவர் படப்பை"[13], "பைங் கறி நிவந்த பலவின் நீழல்"[14] எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன. இத்தகைய மிளகு(கறி) சங்க*

---

[1] ஐங்குறுநூறு மூலமும் உரையும், என்.சி.பி.எச்., ப. 793
[2] அக. 79:13-14 ,319:1-5
[3] பட். 265-267
[4] ஐங். 364:1 ,365
[5] பெரு. 83-105
[6] பெரு. 117-133
[7] கா. சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமுதாயம், ப. 17
[8] புற. 56:18
[9] சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப. 124
[10] புற. 168:2; குறு. 288:1
[11] அக. 2:6
[12] அக. 112:14
[13] அக. 272:10
[14] சிறு. 43

*காலத்தில் தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட விளைபொருள்களுள் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது. சேரநாட்டிலும் துளு நாட்டிலும் மிளகு மிக அதிகப்படியான அளவு விளைந்தது. சேர நாட்டிலிருந்தே யவனர்கள் பொற்காசுகளைக் கொடுத்து மிகுதியான அளவுக்கு மிளகினை வாங்கிக்கொண்டு சென்றதை,*

> *"……சேரலர்*
> *சுள்ளிஅம் பேரியாற்று வெண் நுரை கலங்க,*
> *யவனர் தந்த வினை மாண் நன் கலம்*
> *பொன்னொடு வந்து கறியொடு பெயரும்*
> *வளம் கெழு முசிறி"[1]*

*என்று அகநானூற்றுப்பாடல் குறிப்பிடுகிறது. சேரநாட்டில் விளைந்து மூட்டைகளில் கட்டிவைக்கப்பட்டிருந்த மிளகு படகுகளில் ஆற்றின் வழியாகக் கொண்டு செல்லப்பட்டு முசிறித் துறைமுகத்தில் நின்றிருந்த யவனக் கப்பல்களில் ஏற்றுமதி செய்யப்பட்டதை,*

> *"மனைக் குவைஇய கறி மூடையால்,*
> *கலிச் சும்மைய கரை கலக்குறுந்து;*
> *கலம் தந்த பொற் பரிசம்*
> *கழித் தோணியான், கரை சேர்க்குந்து"[2]*

*என்று புறநானூறு குறிப்பிடுவதைக்கொண்டு அறிந்துகொள்ள முடிகிறது. தமிழகத்திற்கும் யவனர்களுக்குமான இத்தகைய வணிகம் கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில் நடைபெற்றது. இதற்குச் சங்கப் பாடல்களும் யாவனரின் நூல்களும் சான்றாக அமைகின்றன.[3] யவனர்கள் யானைத் தந்தங்களை வாங்கிக்கொண்டு போனார்கள்.[4] கூடவே நீலக்கற்களையும் வாங்கிக்கொண்டுபோய் ரோமாபுரியில் விற்றார்கள்.[5]*

### *3.8. கால்நடைப் பொருளாதாரம்*

*சங்ககால வேளாண் சமூகத்தில் கால்நடைகள் பொருளாதாரப் பெருக்கத்தில் முதன்மையானதாக இருந்தன. வேளாண் தொழிலில் நிலத்தை உழுது பண்படுத்துவதற்கு எருதுகள் பயன்படுத்தப்பட்டன. "உழுத நோன் பகடு"[6], "உழவுஒழி பெரும்பகடு"[7], "பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்"[8] எனவரும் சங்கப் பாடலடிகள் இதற்குச் சான்று பகரும்.*

*நாட்டின் வளம் கால்நடைப் பெருக்கத்தையும், வேளாண் பெருக்கத்தையும் அடிப்படையாகக்கொண்டே தீர்மானிக்கப்பட்டமையை, "பால்பல ஊறுக பகடுபல சிறக்க"[9], "பகடு பல வாழ்த்தி, தன் புகழ் ஏத்தினெனாக"[10], "வினைப் பகடு ஏற்ற மேழி கிணைத் தொடா, நாள்தொறும் பாடேன்ஆயின்"[11], "பகடுதரு பெருவளம் வாழ்த்தி"[12] எனப் புலவர்களால் போற்றப்பட்டமையைக்கொண்டு அறிந்துகொள்ள முடிகிறது.*

*[1] அக. 149:7-11*
*[2] புற. 343:3-6*
*[3] சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், பக். 130-131*
*[4] மேலது, ப. 154*
*[5] மேலது, ப. 156*
*[6] புற. 125:7*
*[7] புற. 366:13*
*[8] அக. 262:2*
*[9] ஐங். 3:2*
*[10] புற. 383:4-5, 385:2*
*[11] புற. 388:11-12*
*[12] புற. 391:4*

கடாவிடுதல் எனப்பட்ட பிணையல் அடிப்பதற்கும் எருதுகள் பயன்படுத்தப்பட்டதை, “நீர்சூழ வியன்களம் பொலியப் போர்பழித்துக் கள்ளார் களமர் பகடுதளை மாற்றி”[1], “பரூஉப் பகடு உதிர்த்த மென் செந்நெல்”[2] எனச் சுட்டுவனகொண்டு தெளியலாம்.

உழவர்களும் உப்பு வணிகர்களும் தங்கள் வண்டிகளை இழுத்துச் செல்ல எருதுகளைப் பயன்படுத்தினர். இதனை,

“வார்கயிற் றொழுகை நோன்சுவல் கொளீஇப்
பகடுதுறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ”[3]

“………………………உமணர்
கொடுநுகம் பிணித்த செங்கயிற் றொழுகைப்
பகடயாக் கொள்ளும் வெம்முனை……..”[4]

எனப் பலவிடத்தும்[5] குறிப்பிடப்பட்டுள்ளதைக்கொண்டு அறியமுடிகிறது.

### 3.9. வணிகம்

#### 3.9.1. தேவை நோக்கிலான பண்டப் பரிமாற்றம்

நானிலச் சமூகத்தின் உற்பத்திப் பொருட்கள் பண்டமாற்று வணிகத்தின் மூலம் பரிமாறிக்கொள்ளப்பட்டது. வணிகத்தின் தோற்றத்திற்கு நிலவியல் மற்றும் சூழலியல் காரணிகளே அடிப்படையாக அமைகின்றன என்பதை வீ. மாணிக்கம், “வானிலை, மண்வளம் முதலானவை இடத்திற்கு இடம் வேறுபட்டுக் காணப்படுவதால் அனைத்து நிலப்பரப்புகளிலும் மனிதனுக்குத் தேவையான எல்லாப் பொருட்களும் கிடைப்பதற்கு வாய்ப்பில்லை. புலப்பெயர்ச்சியில் ஈடுபடும் வெவ்வேறு நிலப்பரப்புகளில் வாழும் மக்கள் மையமான ஓரிடத்தில் கூடுவர்; தம்மிடமுள்ள உபரிப்பொருளைக்கொடுத்துத் தமக்கு வேண்டிய பொருளைப் பெறுவர். இத்தகு பண்டப் பரிமாற்றமே வணிகத்தின் ஊற்றுக் கண்ணாக அமைந்தது”[6] என்பார்.

இத்தகைய உள்நாட்டுப் பண்டமாற்றுப் பொருளாதாரம் இலாபத்தை நோக்கமாகக் கொண்டதாக இல்லாமல், தேவையை நோக்கமாகக்கொண்டு நடைபெற்றது. எனவே இத்தகைய அடிப்படையில் பரிமாறிக்கொள்ளப்படும் பொருட்களின் மதிப்பு கவனத்திற் கொள்ளப்படுவதில்லை என்பது கவனிக்கத்தக்க ஒன்று.

சங்கப் பாடல்களில் பண்டப்பரிமாற்றம் “குறியெதிர்ப்பை”[7], “குறித்து மாறெதிர்ப்பை”[8] என்று சுட்டப்பட்டுள்ளது. மேலும் விலை, விற்றல் என்ற பொருளில் அமைந்த “நொடை”[9], “நொடுத்தல்”[10] எனும் சொற்களும் பண்ட மாற்றத்தைக் குறித்தன.

[1] அக. 366:2-3
[2] பதி. 71:4
[3] அக. 173:9-10
[4] அக. 329:5-7
[5] அக. 17:13-14, 30:5-6, 159:1-4, 295:9-11; புற. 307:7-9; பதி. 27:12-14; கலி. 109:4-5
[6] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல், ப. 466
[7] புற. 163; குறள். 221
[8] புற. 333:11
[9] அக. 60:4,61:10
[10] அக.196:3

### 3.9.1.1. இடையர்களின் பண்டப் பரிமாற்றம்

மேய்த்தல் தொழிலை மேற்கொண்ட இடையர்கள் ஆடுகளிடமிருந்தும் பசுக்களிடமிருந்தும் கறந்த பாலைக் கொடுத்து அதற்கு ஈடாகத் தானியங்களைப் பெற்றுச் சென்றதை, "பாலொடு வந்து கூழொடு பெயரும் ஆடுடை இடைமகன்"[1] என்று குறிப்பதுகொண்டு அறியமுடிகிறது. ஆய்ச்சியர் தயிரையும் மோரையும் மாற்றி அதன் மூலம் பெற்ற தானிங்களைப் பெற்று சுற்றத்துடன் உண்டனர்.[2] மேலும், 'நாள்மோர் மாறும்'[3], 'அளை விலை உணவு'[4] எனப் பொரும்பாணாற்றுப்படை சுட்டுவனவும் இருவேறுபட்ட சமூகக் குழுக்களுக்கிடையே நடைபெற்ற பண்டமாற்று குறித்து விளக்குகின்றன. ஆயமகள் நெய்யைப் பண்டமாற்றுசெய்து கிடைத்த பொருளைக்கொண்டு எருமையையும், நல்ல பசுக்களையும் அவற்றின் கன்றுகளோடு சேர்த்து வாங்கியதை,

> "நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்,
> எருமை, நல்ஆன், கருநாகு, பெறூஉம்"[5]

எனக் குறிப்பிடுவதைக்கொண்டு அறியமுடிகிறது.

### 3.9.1.2. வேடர்களின் பண்டப் பரிமாற்றம்

'மான் தசையைக் கொண்ட கடகப் பெட்டியையும், ஆய்மகள் தயிர் கொண்டுவந்து தந்த பானையையும் உடையவனாய்க் காணப்பட்ட வேடனுக்கு உழத்தியர் வெண்ணெல்லை முகந்து தருவர்.[6] எனக் குறிப்பிடுவது கொண்டு வேடர்கள் முல்லைநில ஆயர்களோடும், மருதநில உழவர்களோடும் கொண்ட பண்டப்பரிமாற்றத்தை அறிந்துகொள்ளலாம்.

குறிஞ்சி நிலத்தவர் உணவின்றிப் பசிப்பாராயின், யானையின் கொம்பை விற்று, அதன் விலையால் பெறப்படும் உணவை உண்டு வாழும் வாழ்வினராகக் காணப்பட்டதை,

> "காந்தள்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென,
> கடுங் கண் வேழத்துக் கோடு நொடுத்து உண்ணும்
> வல்வில் ஓரி கொல்லிக் குடவரை"[7]

எனச் சுட்டுவதுகொண்டு உணரலாம்.

குறிஞ்சி நிலத்து விளை பொருளான தேனையும் கிழங்கையும் கொடுத்து நெய்தல் நிலத்தில் பண்டமாற்றுச் செய்த குறிஞ்சி நில மக்கள், அவற்றின் விலையாக நெய்தல் நிலத்து மீன் நெய்யொடு நறவாகிய கள்ளையும் பெற்று வாழ்ந்ததை,

> "தேனெய் யொடு கிழங்கு மாறியோர்
> மீனெய் யொடு நறவு மறுகவும்
> தீங் கரும்போ டவல் வகுத்தோர்
> மான் குறையொடு மது மறுகவும்"[8]

எனப் பொருநராற்றுப்படை குறிப்பிடுகிறது.

---

[1] குறு. 221:3-4
[2] பெரு. 155-163
[3] பெரு. 160
[4] பெரு. 163
[5] பெரு. 164-165
[6] புற. 33:1-5
[7] குறு. 100:3-5
[8] பொரு. 214-217

### *3.9.1.3. மதுவுக்கு விலையாகத் தரப்பட்ட பொருட்கள்*

*ஆறலை கள்வர்கள் கள்ளுக்கு விலையாக யானைத்தந்தத்தைப் பரிமாற்றம் செய்துகொண்டனர்.*[1] *இதனை,*

> *“அண்ணல் யானை வெண் கோடு கொண்டு,*
> *நறவு நொடை நெல்லின் நாள் மகிழ் அயரும்”*[2]

> *“மதனுடை வேழத்து வெண் கோடு கொண்டு,*
> *பொன்னுடை நியமத்துப் பிழி நொடை கொடுக்கும்”*[3]

> *“வேந்து ஊர் யானை வெண் கோடு கொண்டு,*
> *கள் கொடி நுடங்கும் ஆவணம் புக்கு உடன்*
> *அருங் கள் நொடைமை தீர்ந்த பின்”*[4]

*எனவரும் சங்கப் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. கடலில் பல்வகை மீன்களைப் பிடிக்கும் மீனவர்கள் மீன்களுடன் முகந்துவந்த சிப்பியினைக் கள்ளிற்கு விலையாகக் கொடுப்பதை, “பல் மீன் கொள்பவர் முகந்த இப்பி நார் அரி நறவின் மகிழ் நொடைக் கூட்டும்”*[5] *என அகநானூற்றுப் பாடலொன்று குறிப்பிடுகிறது.*

### *3.9.1.4. பாணர்கள்*

*பாண்மகளிர் ஆறு, ஏரி, குளம் போன்ற நீர் நிலைகளில் வலைகளைக் கொண்டும் தூண்டிலைக் கொண்டும் மீன்பிடித்து அவற்றை ஊரில் கொண்டு சென்று நெல்லுக்கும் பயற்றுக்கும் மாற்றியதை,*

> *“முள்ளெயிற்றுப் பாண்மக ளின்கெடிறு சொரிந்த*
> *அகன்பெரு வட்டி நிறைய மனையோள்*
> *அரிகாற் பெரும்பயறு நிறைக்கும்”*[6]

> *“வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்*
> *வராஅல் சொரிந்த வட்டியுண் மனையோள்*
> *யாண்டுகழி வெண்ணெ னிறைக்கும்”*[7]

> *“அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்*
> *சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்”*[8]

*எனவரும் ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன.*

### *3.9.1.5. பரதவர்*

*நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவர்கள் தாங்கள் பிடித்த மீனையும், தங்களின் உப்பளங்களில் விளைவித்த உப்பையும் நெல்லுக்குப் பண்டமாற்று செய்தனர். இதனை, “திமிலோன் தந்த கடுங் கண் வய மீன்,....விழவு அயர் மறுகின் விலை எனப் பகரும் கானல் அம் சிறுகுடி”*[9]*, “பசு மீன் நொடுத்த வெண் நெல் மாஅத் தயிர் மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே”*[10]*, “இனிது பெறு பெரு மீன் எளிதினின் மாறி”*[11]*, “மீன்*

---

[1] *அக.245:8-13*
[2] *அக. 61:9-10*
[3] *பதி. 30:11-12*
[4] *பதி. 68:9-11*
[5] *அக. 296:8-9*
[6] *ஐங். 47:1-3*
[7] *ஐங். 48:1-3*
[8] *ஐங். 49:1-2*
[9] *அக. 320:2-5*
[10] *அக. 340:14-15*
[11] *நற். 239:3*

நொடுத்து நெல் குவைஇ"[1] எனவும், "யாயும் உப்பை மாறி வெண்ணெல் தரீஇய உப்பு விளை கழனிச் சென்றனள்"[2], "உப்பு நொடை நெல்லின் மூரல் வெண் சோறு"[3] எனவும் வரும் பாடலடிகள் உணர்த்தும்.

### 3.9.1.6. உமணர்

உமணர்கள் பண்டமாற்று வணிகத்தில் ஈடுபட்டதை, "உமணர் தந்த உப்பு நொடை நெல்லின்"[4], "வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி நெல்லொடு வந்த வல் வாய்ப் பஃறி"[5], உவர் விளை உப்பின் கொள்ளை சாற்றி, அதர் படு பூழிய சேண் புலம் படரும் ததர் கோல் உமணர்"[6], "நெல்லும் உப்பும் நேரே; ஊரீர்! கொள்ளீரோ" எனச் சேரிதொறும் நுவலும்"[7], "தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து, பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி"[8] எனவரும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இவ்வாறு பரிமாறிக்கொள்ளப்படும் பொருட்களின் மதிப்பு யாதாயினும் அவை சமமதிப்பிலானவை என்றே எண்ணப்பட்டது. இதனை, "நெல்லின் நேரே வெண்கல் உப்பு"[9], "நெல்லும் உப்பும் நேரே"[10] எனவரும் அடிகள் குறிப்பிடுகின்றன.

இத்தகையப் பண்டப் பரிமாற்றம் சமூக வளர்ச்சிக்கும் காரணமாக அமைந்ததைத் குறித்து விளக்கும் வீ. மாணிக்கம், "தம்மிடம் உபரியாக உள்ள உணவு, கருவி உள்ளிட்ட எப்பொருளையும் தொல்குடிமக்கள் இவ்விதமாகப் பரிமாறிக் கொண்டனர். கருவிகள் பரிமாற்றம் கருவித் தொழில்நுட்பத்தின் பரவலுக்கும், உணவுப் பொருட்களின் பரிமாற்றம் சத்தான உணவைப் பெறுவதற்கு வழிவகுத்தன"[11] என்பார்.

### 3.9.2. வணிக நோக்கிலான பண்டப் பரிமாற்றம்

சமூக வளர்ச்சிக்கட்டத்தில் தேவையின்பொருட்டுப் பரிமாறிக் கொள்ளப்பட்ட பண்டங்கள் வணிகநோக்கில் பரிமாறிக்கொள்ளப்பட்டன. இச்சூழலில்தான் வணிகர்கள் தோற்றம் பெறுகின்றனர். இவ்வணிகர்களும் மேற்குறித்தவாறு உபரி உற்பத்தியைத் தமக்குள் பரிமாறிக்கொண்ட மக்களுள் சிலரே வணிகராக மாற்றம் பெற்றனர் எனக் கருதலாம். அவ்வகையில் உழுதொழிலில் ஈடுபட்ட வேளாண் சமூகத்தினருள் சிலர் வணிகராக மாறியிருக்க வாய்ப்புண்டு. நெய்தல் நிலப் பரதவர் சிலர் வணிகர்களாக மாறியிருக்கலாம் என்பதை, "நெய்தல் நிலத்தின் பரதவருள் ஒரு பிரிவினர் தொன்மையான மீன்வேட்டையைத் தொடர்ந்திருப்பினும், சூழல் காரணமாக அளவர்(உப்பளம்), உமணர், முத்துக்குளிப்போர் எனும் தனித்திறன் பெற்ற குழுக்களாக மாற்றம் பெற்றனர். இவர்கள் மீன் பிடித்தலில் பயன்படுத்திய படகு பண்டப் போக்குவரத்திற்கும் பயன்படுத்தப்பட்டது. எனவே, பரதவருள் சிலர் திறன்பெற்ற வணிகர்களாக மாற்றம் பெற்றனர்"[12] எனக் குறிப்பிட்டுள்ள கருத்தும் மனங்கொள்ளத்தக்கது.

சமூக வளர்ச்சியில் எந்த ஒரு சமூகப் பிரிவினரும் ஆதியிலிருந்தே தனித்தனியே தோன்றி வளர்ந்தவர்களல்லர் ஒன்றிலிருந்து ஒன்று கிளைத்தே

[1] புற. 343:1
[2] குறு. 269:4-6
[3] அக. 60:4
[4] நற். 254:6
[5] பட். 29-30
[6] அக. 390:1-3
[7] அக. 390:8-9
[8] நற். 183:1-2
[9] அக. 140
[10] அக. 390
[11] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல், ப. 466
[12] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல் , ப. 469

*தோன்றியிருக்க வாய்ப்புண்டு என்ற அடிப்படையில் மேற்குறித்த கருத்துக்கள் வணிகர்களின் தோற்றம் குறித்த புரிதலை எற்படுத்துகின்றன.*

*மருத நிலப்பகுதியும் நெய்தல் நிலப்பகுதியும் பொருள் உற்பத்தியிலும் வணிகத்திலும் சிறந்து விளங்கியது. எனவே அப்பகுதி மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வுடையதாகக் காணப்பட்டது. இதன் அடிபடையிலேயே "பட்டணங்களிலும் பட்டினங்களிலும்தான் அக்காலத்துத் தமிழரின் நாகரிகம், பண்பாடு, கலைகள் எல்லாம் வளர்ந்தன"[1] என்பார் மயிலை சீனி. வேங்கடசாமி.*

### *3.10. அயல்நாட்டு வாணிகம்*

*பழந்தமிழகத்தில் கிழக்கு மற்றும் மேற்குக் கரைகளில் இருந்த துறைமுகங்களின் வாயிலாக அயல்நாட்டு வாணிகம் மிகச் சிறப்பாக நடைபெற்று வந்ததைச் சங்கப்பாடல்களினூடே அறியமுடிகிறது. எயிற்பட்டினம், அரிக்கமேடு, காவிரிப்பூம்பட்டினம், தொண்டி, மருங்கூர்ப் பட்டினம், கொற்கை ஆகிய துறைமுகங்கள் கிழக்குக் கரைகளில் இருந்தன. இவைமட்டுமின்றி கொல்லத்துறை என்னும் துறைமுகமொன்றும் அக்காலத்து இருந்ததாக மயிலை சீனி. வேங்கடசாமி சான்றுகாட்டிக் குறிப்பிடுகிறார்.[2]*

*இவற்றுள் எயிற்பட்டினத்திலிருந்த துறைமுகத்தின் வாயிலாகச் சாவக நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட அகிலினைக்குறித்து அறிந்துகொள்ள முடிகிறது.[3] மேலும், இத்துறைமுகத்தில் வானுயர்ந்த கலங்கரை விளக்கம் அமைந்திருந்ததையும் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.[4] இக்கலங்கரை விளக்கங்களின் உதவியால் இரவுவேளைகளிலும் மரக்கலங்கள் துறைமுகங்களைச் சென்றடைந்தன. இக்கலங்கரை விளக்கத்தினை அகநானூறு 'மாடவொள்ளெரி'[5] எனக் குறிப்பிடுகிறது.*

*அரிக்கமேட்டில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வு அப்பகுதியில் துறைமுகம் ஒன்று இருந்ததையும், அத்துறைமுகம் கி.பி. முதல் நூற்றாண்டளவில் யவனருடைய பண்டகசாலையாக இருந்ததையும் உறுதிப்படுத்துகிறது. இதனை அப்பகுதியில் அகழ்வாய்வு மேற்கொண்டபோது கிடைத்த சிவப்புக் களிமண்ணால் செய்யப்பட்ட யவன விளக்கின் துண்டுகளைக்கொண்டும், அப்பகுதியில் கிடைத்த பிராமி எழுத்தில் எழுதப்பட்ட மட்பாண்ட ஓட்டுத் துண்டுகளைக்கொண்டும்,[6] சங்கப் பாடல்களில் வரும், "யவனர் நன்கலம்தந்த தண்கமழ் தேறல்"[7], "யவனர் இயற்றிய வினைமாண் பாவை"[8], "யவனர் ஓதிம விளக்கு"[9] எனவரும் குறிப்புகளைக் கொண்டும் அறிந்துகொள்ளலாம்.*

*காவிரியாறு கடலில் கலக்கின்ற இடத்தில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த துறைமுகத்தில் கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் உரோமாபுரியிலிருந்து வந்த யவன வணிகர், சாவக நாட்டு வணிகர், வட இந்திய வணிகர் முதலானோர் இத்துறைமுகத்தைப் பயன்படுத்தி கடல்வழி வாணிகத்தில் ஈடுபட்டனர்.*

---

[1] *மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப. 11*
[2] *சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், பக். 73-75*
[3] *சிறு. 152-155; பெரு. 320-323*
[4] *பெரு. 346-350*
[5] *அக. 255:6*
[6] *மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், பக். 79-81*
[7] *புற. 56:18*
[8] *நெடு. 101*
[9] *பெரு. 316-317*

இத்துறைமுகத்திற்கு வரும் ஏற்றுமதி இறக்குமதிப் பொருட்களுக்குச் சோழநாட்டில் சுங்கம்(உல்கு) வசூலிக்கப்பட்டு புலிமுத்திரை பதிக்கப்பெற்றதைப் பட்டினப்பாலை கூறுகிறது.[1] மேலும், இத்துறைமுகத்தையடுத்த மருவூர்ப் பாக்கத்தில் பலமொழி பேசுவோர்(வணிகர்) தங்கியிருந்ததை,

> "மொழி பல பெருகிய பழி தீர் தேஎத்துப்
> புலம் பெயர் மாக்கள் கலந்து, இனிது, உறையும்,
> முட்டாச் சிறப்பின், பட்டினம்"[2]

எனக் குறிப்பிடக் காணலாம். இத்துறைமுகத்தின் வழியாக நடைபெற்ற கடல் வணிகத்தில் குதிரைகள், மிளகு, மணிகள், பொன், சந்தனம், அகில், பவளம் முதலியனவும், கங்கைக் கரையில் விளைந்த பொருட்கள், காவிரிக் கரையில் விளைந்த பொருட்கள், ஈழ நாட்டுப் பொருட்கள், கடாரத்திலிருந்து கொண்டுவரப்பட்ட பொருட்கள், சீனநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட பொருட்கள் எனப் பலவும் இத்துறைமுகத்தில் இறக்குமதி செய்யப்பட்டதைப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.[3]

பாண்டி நாட்டின் கிழக்குக் கரையில் தொண்டித் துறைமுகம் இருந்ததை அகநானூறு குறிப்பிடுகிறது.[4] இத்துறைமுகத்திலிருந்து அகில், சந்தனம், பட்டு, வாசனைப் பொருட்கள் போன்றவற்றைச் சாவக நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.[5]

பாண்டி நாட்டின் கிழக்குக் கரையிலிருந்த மற்றொரு துறைமுகம் மருகூர்ப் பட்டினத்தில் அமைந்திருந்தது. இத்துறைமுகத்தைக் குறித்து அகநானூற்றிலும்(220, 227), நற்றிணையிலும்(258) மதுரைக்காஞ்சியிலும்(75-88) குறிப்பிடப்பட்டுள்ளது. இத்துறைமுகத்திலிருந்து முத்து, சங்கு வளையல், நவதானியங்கள், உப்புக்கண்டம் ஆகியவற்றை நாவாய்களில் ஏற்றிச் சென்று அயல்நாடுகளில் விற்று அந்நாடுகளிலிருந்து குதிரை முதலானவற்றை ஏற்றிக் கொண்டுவந்தனர்.[6]

### 3.11. ஆண்-பெண் தொழில் பாகுபாடுகள்

அன்றாட வாழ்க்கை சார்ந்த, சமூகப்பொருளாதாரச் செயல்பாடுகளில் ஆணும் பெண்ணும் எந்த வகையில் பங்காற்றுகின்றனர் என்ற அடிப்படையில் அவர்கள் மேற்கொண்ட தொழில்களைக் கீழ்காணும் மூன்று நிலைகளில் பகுத்துக் காணலாம்.

1. ஆண்கள் மட்டும் பங்கேற்கும் தொழில்கள்
2. பெண்கள் மட்டும் பங்கேற்கும் தொழில்கள்
3. ஆண் பெண் இருவரும் பங்கேற்கும் தொழில்கள்

இப்பகுப்பு தொழிலை மேற்கொள்பவரின் உடல்திறன், கருவிகளின் பயன்பாடு, தொழில்நுட்ப அறிவு, அதற்கான மூலப்பொருட்கள் கிடைக்கும் இடம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைவதை உற்றுநோக்கப் புலப்படும்.

'மனித இன வரலாற்றில் தொடக்கத்தில் பணிப்பங்கீடு *(division of labour)* நடைமுறையில் இல்லை; கூட்டுழைப்பில் அனைத்து மக்களும் அனைத்துப் பணிகளையும் மேற்கொண்டனர். காலப்போக்கில் கடினமான ஆபத்து நிறைந்த

---

[1] பட். 120-136
[2] பட். 216-218
[3] பட். 185-193.
[4] அக. 10:13
[5] சிலம்பு. ஊர்காண் காதை, 106-112
[6] மது. 315-324

*பணிகளை ஆண்களும், எளிதான, ஆபத்துக்குறைந்த பணிகளைப் பெண்களும் மேற்கொள்ளும் பணிப்பங்கீட்டு முறை அறிமுகமானது"*[1] *எனச் சிங்காரவேலு குறிப்பிடுகிறார்.*

*சங்கப் பாடல்களின் வாயிலாக அறியலாகும் பல்வேறு தொழில் நடவடிக்கைகளைக் குறித்துக் காண்கின்றபோது அதிக ஆற்றலைக்கொண்டு செய்ய வேண்டிய கடினமான தொழில்களையும், சுற்றித் திரியும் தொழில்களையும் ஆண்கள் மேற்கொண்டனர்.*

*ஆண்கள் மட்டும் மேற்கொண்ட தொழில்களாக இரும்புத் தொழில், தச்சுத் தொழில், மட்பாண்டத் தொழில், வேட்டைத்தொழில், மீன்பிடித்தல், போர்த்தொழில், காவல்தொழில், ஆறலைத்தல், மேய்ச்சல் தொழில், வணிகம் முதலானவற்றைக் குறிப்பிடலாம்.*

*பெண்கள் மட்டும் மேற்கொண்ட தொழில்களாகப் பூ விற்றல், கள் விற்றல், பால்படு பொருட்களை விற்றல், கூடை முடைதல், ஆடை வெளுத்தல், மீன் உணங்கல், மற்றும் வீடுசார் பணிகளை மேற்கொள்ளுதல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.*

*ஆண்பெண் இருபாலரும் மேற்கொண்ட தொழில்களாக உழவுத்தொழில் நெசவு, உப்பு விற்றல் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.*

*"ஆண்களை நோக்கும்போது பெண்கள் எளிமையான வேலையைச் செய்பவர்கள் என்றும், எளிமையான கருவிகளை மட்டுமே பயன்படுத்தக் கூடியவர்கள் என்றும் ஒரு மதிப்பீடு உள்ளது. அதோடு சாதியடுக்கின் வரிசையில் கீழே செல்லச் செல்ல பெண்களின் பங்கேற்பு மிகுதியாகிக் கொண்டே செல்கிறது என்ற மதிப்பீடும் உள்ளது"*[2] *என்ற கருத்தின் படிச் சங்கப் பாடல்களை நோக்கும்போது ஆண்களைக் காட்டிலும் குறைந்த ஆற்றலைக்கொண்டு எளிய கருவிகளைப் பயன்படுத்திச் செய்யக்கூடிய தொழில்களைப் பெண்கள் மேற்கொண்டதை அறியமுடிகிறது.*

*தினைப்புனக் காவலில் கூட ஆண்கள் இரவு வேளைகளில் வலிமை வாய்ந்த விலங்குகளான யானை, பன்றி போன்றவற்றை விரட்டுவதையும், பெண்கள் பகல் பொழுதுகளில் கிளி, குருவி போன்ற வலிமையற்ற பறவைகளை விரட்டுவதையும் கொண்டு இதனை உணரலாம்.*

*காட்டினை எரித்துத் தினைப்புனத்தை உருவாக்குதல், அவற்றில் தினை முதலான பயிர்களை விதைத்தல், தேனெடுத்தல், வில், ஈட்டி போன்ற கருவிகளைக் கொண்டு நெடுந்தூரம் அலைந்து திரிந்து யானை, மான், முயல், முள்ளம்பன்றி, பன்றி முதலிய விலங்குகளை வேட்டையாடுதல் போன்ற கடினமான தொழிலை மேற்கொள்ள, பெண்கள் கிழங்கு அகழ்தல், மலைப்பகுதிகளில் விளைவித்துக் கொண்டுவரப்பட்ட தினைப் பயிரினைப் பாறைகளில் உலர்த்துதல்*[3]*, உணவு சமைக்கத் தேவையான நெல்லைக் குறறுதல்,*[4] *உணவு சமைத்தல், கள் அடுதல்,*

---

[1] *வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல், ப. 446. (மேற். S. சிங்காரவேலு, Social life of the Tamils, உ. த. ஆ. நிறுவனம், 2001)*

[2] *பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 317*

[3] *குறு. 335*

[4] *நற். 373:3-4*

*ஆண்கள் வேட்டையாடிக் கொண்டுவந்த விலங்கின் தசையைத் தம் குழுவிலுள்ள அனைவருக்கும் பகுத்துத் தருதல் போன்ற வீடுசார்ந்த பணிகளை மேற்கொண்டனர்.*

*முல்லை நிலம் சார்ந்த கால்நடை மேய்ச்சல் தொழிலிலும் புலம்விட்டுப் புலம்பெயர்ந்து மழை, குளிர் போன்றவற்றைப் பொருட்படுத்தாது இரவில் தங்கள் கால்நடைகளைக் கவர்ந்து உண்ணவரும் நரி போன்ற கொடிய விலங்குகளிடமிருந்து காவல் காக்கும் பணிகளை ஆண்கள் மேற்கொள்ள, பெண்கள் தங்கள் வீடுகளுக்கு அருகாமையில் உள்ள மேய்ச்சல் புலங்களில் கன்றுகளை மேய்த்தல், பால்படு பொருட்களான தயிர், மோர், வெண்ணெய் ஆகியவற்றைப் பண்டமாற்றுக்கு விற்றுவருதல் போன்ற எளிய பணிகளை மேற்கொண்டனர்.*

*உழவுப் பணிகளிலும்கூட விலங்குகளைப் பயன்படுத்திக் கலப்பையின் துணைகொண்டு மேற்கொள்ளப்பட்ட கடினமான பணிகளை ஆண்கள் மேற்கொள்ள, பெண்கள் விதைத்தல், நாற்றுநடுதல், களையெடுத்தல், அறுவடை செய்தல் போன்ற எளிய பணிகளை மேற்கொண்டனர். மகளிர் பூ விற்கும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். பூவை நெல்லுக்குப் பண்டமாற்று செய்தனர். இதனைப் பின் வரும் நற்றிணைப் பாடலடிகள் காட்டும்.*

> *"துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு*
> *பித்திகை விரவுமலர் கொள்ளீ ரோவென*
> *வண்டுசூழ் வட்டியள் திரிதரும்*
> *தண்டலை உழவர் தனிமட மகளே"*[1]

> *"துகிலிகை அன்ன, துய்த் தலைப் பாதிரி*
> *வால் இதழ் அலரி வண்டு பட ஏந்தி,*
> *புது மலர் தெருவுதொறு நுவலும்*
> *நொதுமலாட்டி ……"*[2]

*நெய்தல் நிலம் சார்ந்த மீன்பிடி தொழிலை எடுத்துக்கொண்டாலும் ஆண்கள் கடலுக்குள் சென்று மீன் பிடித்தல், உப்பு விளைத்தல் போன்ற கடினமான பணிகளை மேற்கொள்ள, பெண்கள் மீன் உணக்கல், அவற்றை உண்ணவரும் பறவைகளை விரட்டுதல் போன்ற எளிய பணிகளை மேற்கொண்டனர்.*

*பாலை நிலத்தை எடுத்துக்கொண்டாலும் எயினர்கள் எனப்பட்ட ஆறலை கள்வர்கள் கொள்ளையடித்தல், கால்நடைகளைக் கவர்ந்து வருதல் போன்ற பணிகளை மேற்கொள்ள, எயிற்றியர் புல்லரிசி எடுத்தல், வீடுசார் பணிகளை மேற்கொள்ளல் போன்ற பணிகளை மேற்கொண்டனர்.*

### *3.12. கைவினைஞர்கள்*

*சங்க காலச் சமூகத்தில் நேரடியான உணவு உற்பத்தியிலிருந்து விலகி உணவு உற்பத்தி சார்ந்த தொழில்களில் ஈடுபட்ட குடிமக்களுக்கான கருவிகளையும், புழங்கு பொருட்களையும் உருவாக்கித்தந்த தொழில்பிரிவினர் சமூக வளர்ச்சியிலும் உற்பத்திப் பெருக்கத்திலும் முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகத் திகழ்ந்தனர். இவர்கள் சேவைக் குடிகளாகத் திகழ்ந்தனர்.*

---

[1] *நற். 97:6-9*

[2] *நற். 118:8-11*

கருவிகளின் வரலாறும் மனித இன வளர்ச்சி வரலாறும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. ஒவ்வொரு சமூகத்திலும் பயன்படுத்தப்பட்ட கருவிகளுக்கு ஏற்ப அச்சமூகத்தின் வளர்ச்சி கூடியும் குறைந்தும் காணப்பட்டது.

நானிலச் சமூகத்தில் வாழ்ந்த மக்கள் அனைவருக்கும் தொழில் செய்யத் தேவைப்படும் கருவிகளைச் செய்து தந்தவர்கள் கம்மியர், தொழுவர் என்ற பொதுப்பெயரால் சங்கப் பாக்களில் குறிப்பிடப்படுகின்றனர். இப்பெயர் தச்சர், கொல்லர், குயவர், பொன்செய் கம்மியர், நெசவாளர் எனப்பட்ட தொழில் செய்வோர்களைக் குறித்து நின்றது.

சமூக வளர்ச்சியில் பல்வேறு பணிகளைச் செய்யவேண்டிய நிலைக்கு மனிதர்கள் ஆளானபோது குறிப்பிட்ட பணிகளையும் கருவிகளையும் செய்யும் நுண்திறன் பெற்ற கைவினைஞர்கள் தோன்றி உற்பத்தி உறவுகளில் பெரும் மாற்றம் தோன்ற காரணமாக அமைந்தனர்.

கைவினைஞர்களின் பொருளாதார நடவடிக்கைகளைக் (உற்பத்தி உறவு) குறித்து வீ. மாணிக்கம், “கொல்லர், தச்சர் போன்ற தனித்திறன் பெற்ற கைவினைஞர்கள் அனைத்துக் குடியிருப்புகளுக்கும் கிட்டாத நிலையில் ஒரு குடியிருப்பின் தேவையைப் பிறிதொரு குடியிருப்பின் கைவினைஞரிடம் ஒப்படைக்கும் நிலை தோன்றியது. இந்நடைமுறை நடமாடும் கைவினைஞர் *(mobile artisans)* குழுக்கள் தோன்ற வழிவகுத்தது. இத்தகு கைவினைஞர்கள் உற்பத்தி உறவுகளில் மாற்றம் தோன்றக் காரணமாயினர்”[1] என்றும், “ஒரு குடியிருப்பின் கைவினைஞர்கள் அக்குடியிருப்பைச் சார்ந்தவராக இருப்பின் சமூகத்தின் கூட்டுரிமை, கூட்டுழைப்பு, கூட்டுண்ணல் ஆகிய நடைமுறைகளிலும் அவர் உரிமை பெற்றிருப்பர். ஆனால், அந்நியரான நடமாடும் கைவினைஞர்களுக்கு இவ்வுரிமைகள் அளிக்கப்பட வாய்ப்பு இல்லை”[2] என்றும் குறிப்பிடும் கருத்து கூர்ந்து நோக்கப்படவேண்டிய ஒன்று.

மேற்குறித்த வீ. மாணிக்கத்தின் கருத்திற்கு ஒப்ப சங்கப் பாடலில் கொல்லரைக் குறித்த குறுந்தொகைப் பாடற் குறிப்பு ஒன்றில்,

> “ஏழ்ஊர்ப் பொதுவினைக்கு ஓர்ஊர் யாத்த
> உலைவாங்கு மிதிதோல் போல”[3]

எனக் குறிப்பிடப்படுகிறது. இப்பாடலில் ஏழு ஊர்களுக்குப் பொதுவான கொல்லன் ஒருவன் இருந்ததையும், அவன் அவ்வேழூர் மக்களுக்குத் தேவையான பொருள்களைச் செய்துதரும் பொருட்டு உலைக்களத்தின் துருத்தி எப்போதும் இயங்கிக்கொண்டே இருந்ததையும் குறிப்பிடுகிறது.

இத்தகைய கைவினைஞர் எத்தகைய பொருளாதார நடவடிக்கைகளில் உறவு கொண்டனர் என்ற கேள்விக்கு விடைதரும் விதமாக வீ. மாணிக்கம், “தொல்குடிச்சமூகத்தின் உறுப்பினராயிராத நடமாடும் கைவினைஞர்களுக்குக் கூட்டுண்ணலில் பங்கு பெறும் உரிமையை வழங்க இயலாது. ஆனால் அவர்களது பணிக்கு ஈடாக ஏதாகினும் வருவாய் அளிக்கப்பட வேண்டும். இதனால் அவர்களது பணிக்கேற்ப உணவும் தானியமும் வழங்கும் நடைமுறை தொடங்கியது”[4] எனக்

---

[1] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல், ப. 447
[2] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல், ப. 447
[3] குறு. 172:5-6
[4] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல், ப.447

குறிப்பிடுகிறார். ஆனால், தொல்குடிச் சமூகத்தினரால் இக்கைவினைஞர்களுக்குத் தாழ்வான சமூகத் தரமே வழங்கப்படும் என்றும், இந்நடைமுறை காலப்போக்கில் அனைத்துக் கைவினைஞர்களையும் தாழ்வான சமூகத்தரம் பெற்றவராகக் கருதும் போக்கிற்கு வழிவகுத்தது[1] என்றும் குறிப்பிடுவது மனங்கொள்ளத்தக்கதாக இல்லை. சங்கப் பாடல்களில் இதற்குப் போதிய சான்றுகள் இல்லை.

### 3.12.1. கொல்லர்

கொல்லர்களின் சமூக இருப்பினைக்குறித்து இவ்வாய்வேட்டின் இரண்டாம் இயலில் விவரிக்கப்பட்டுள்ளது. இவர்கள் நானிலச் சமூகத்தின் பல்வேறு ஊர்களில் வாழும் மக்களின் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான இரும்புக் கருவிகளைச் செய்து தரும் பணியினை மேற்கொண்டிருந்தனர். இதனை,

> "ஏழ்ஊர்ப் பொதுவினைக்கு ஓர்ஊர் யாத்த
> உலைவாங்கு மிதிதோல் போல"[2]

எனக் குறிப்பிடுவது கொண்டு ஏழு ஊர்களுக்குப் பொதுவான கொல்லன் ஒருவன் இருந்ததையும், அவ்வூர் மக்களுக்குத் தேவையான பொருள்களைச் செய்துதரும் பொருட்டு உலைக்களம் எப்போதும் இயங்கிக்கொண்டிருந்ததையும் குறுந்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது.

இவர்களில் கொல்லர்கள் கடினமான உடல் உழைப்புப் பணியில் ஈடுபட்டிருந்தமையின் உறுதியான உடலினைக் கொண்டவர்களாகக் காணப்பட்டதை, "இரும்பு வடித்தன்ன மடியா மென்தோல் கருங்கை வினைஞர்"[3], "கருங்கைக் கொல்லன்"[4], "இரும்புபயன் படுக்கும் கருங்கைக் கொல்லன்"[5], "கருந்தொழில் வினைஞர்"[6] எனக் குறிப்பிடுவன கொண்டு அறியலாம்.

இவர்கள் இரும்பினைக் காய்ச்சி வடிப்பதற்கு உலைக்களங்களை வைத்திருந்ததை, "கொல்லன் எறிபொன் பிதிர்"[7], "கொல்லன் ஊது உலை"[8], "இரும்பு செய் கொல்லன் வெவ்உலை"[9], "மிதிஉலைக் கொல்லன்"[10] எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன. இத்தகைய உலைக் கூடம் ஊருக்கு நடுவே அமைந்திருந்தது.

இவர்கள் இரும்பினைக் காய்ச்சி வடித்துப் பொருட்களைச் செய்யும் காரணத்தால் 'இரும்பு செய்கொல்லன்'[11] எனப்பட்டனர். வேல் வடித்துக் கொடுத்தல் இவர்களின் முக்கியக் கடமையாக இருந்ததை, "வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே"[12] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

போர்க்கருவிகளான வேல்,[13] வாள், ஈட்டி முதலானவற்றையும் போரில் ஈடுபடுத்தப்பட்ட யானைகளின் தந்தங்களில் பொருத்துவதற்குரிய பூண்களையும் அவற்றைக் கட்டுவதற்குரிய சங்கிலிகளையும் செய்தமை குறித்துச் சங்கப் பாடல்களில் அறிந்துகொள்ள முடிகிறது.[14] மேலும், குறும்பிடி[15](வளைவுக்கத்தி),

[1] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல், ப.447
[2] குறு. 172:5-6
[3] பெரு. 222-223
[4] புற. 36:6, 180:12; பெரு. 437
[5] புற. 170:15
[6] சிறு. 257
[7] நற். 13:5-6
[8] நற். 125:3-4; அக. 55:7
[9] நற். 133:9; அக. 72:3-5
[10] பெரு. 207
[11] பெரு. 437
[12] புற. 312:3
[13] புற. 180:13, 312:3
[14] புற. 95, 312; பெரு. 382
[15] மது. 637

நவியம்[1](கோடரி), மழு[2](கோடரி), ஊசி,[3] கேடயத்தில் கட்டப்படும் மணி,[4] தச்சர்களுக்குரிய கருவியாகிய உளி,[5] யானைப் பாகருக்கான குத்துக்கோல்[6] (கவைமுட்கருவி), இரும்பினால் செய்யப்பட்ட விளக்கு,[7] அறுவடை செய்யும் உழவர்களுக்கான அரிவாள்(குயம்),[8] ஏரின் கொழு(ஏர்)[9] ஆகியனவும், அம்பு நுனிகள், கத்திரிகை, சம்மட்டி, எறியுளி, கணிச்சி முதலான பிறவும், இவர்களால் செய்யப்பட்ட கருவியாக அறியமுடிகிறது. மேற்குறித்த இவைகளேயன்றி மக்கள் புழங்குவதற்குரிய ஏராளமான பொருட்கள் கொல்லர்களாலேயே உருவாக்கப்பட்டன என்பது வெளிப்படை. இத்தகைய கருவிசார்ந்த பல்வேறு பொருள் உற்பத்தியில் கொல்லர்கள் ஈடுபட்டிருந்தனர். எனினும் இவர்களின் தொழில் தொடர்பான பொருளாதார நடவடிக்கைகளை அறிந்துகொள்ள சங்கப் பாடல்களில் போதிய சான்றுகளில்லை.

### 3.12.2. தச்சர்

மரத்தாலான பொருட்களைச் செய்தமையின் இவர்கள் 'மரங்கொல் தச்சன்' எனப்பட்டனர். இவர்கள் உழுகுடி மக்களுக்குத் தேவையான உலக்கை, கட்டில் போன்ற பயன்பாட்டுப் பொருள்களையும், கலப்பை, தளம்பு எனப்பட்ட பறம்படிக்கும் கருவி, வண்டி முதலான உழுகருவிகளையும், தேர்[10] முதலிய ஊர்திகளையும் செய்து தந்ததைக் குறித்துச் சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன. மேலும் யாழ் போன்ற இசைக்கருவிகளையும் இவர்களே செய்தனர்.

### 3.12.3. செம்புக் கம்மியர்

செம்பு நிறை கொண்மர்,[11] கம்மியர்[12] எனப்பட்ட செம்புக் கைவினைஞர்கள் அக்காலத்தில் செம்பு உலோகத்தைக்கொண்டு பொருட்களைச் செய்தவர்களாவர். மதுரைக் கடைத்தெருவில் செம்பு நிறுத்து வாங்கப்பட்டது குறித்தும்,[13] செம்புக் கலன்களைக் கடைகின்றபோது மின்னல் போல் ஒளி தோன்றும்[14] என்றும், மதுரை நகரில் அரண்மனை மற்றும் சமணப்பள்ளிகளின் சுவர்கள் செம்பு நிறத்தில் காட்சியளித்தன[15] என்றும் சங்கப்பாக்கள் கூறுவனகொண்டு செம்புக் கம்மியர்களையும் அவர்தம் தொழிலையும் அறியலாம்.

### 3.12.4. பொன் ஆபரணங்கள் செய்வோர்

பொன்னை நெருப்பில் உருக்கி அணிகலன்களைச் செய்யும் கம்மியர்கள் ஆபரணங்கள் செய்வோர்; பொன்னுரை காண்போர் என இரு நிலைப்பட்டவர்களாக இருந்தனர்.[16]

சங்கப் பாடல்களில் செம்பினை வாங்கி அவற்றை உருக்கிக் கலங்களைச் செய்வோரும்,[17] முத்து மணி போன்றவற்றைத் தூய்மை செய்வோரும்,[18]

[1] புற. 36:7
[2] புற. 206:12
[3] அக. 199:8
[4] பெரு. 120
[5] சிறு. 252
[6] முல். 35
[7] நெடு. 42
[8] பொரு. 242
[9] பொரு. 117
[10] புற. 87
[11] மது. 514
[12] நற். 153:2-3
[13] மது. 514
[14] நற். 153
[15] மது. 485; நெடு. 112-114
[16] மது. 512-513; நற். 363:4-6
[17] நற். 153:2-3
[18] நற். 94:4-5

நெய்தல்(நெசவு) தொழில் செய்வோரும்[1] பொதுவில் கம்மியர் என்றே குறிப்பிடப்படுகின்றனர்.

### 3.12.5. சங்கு அறுப்போர்

சங்கப் பாடல்களில் பெண்கள் சங்குவளையல்கள் அணிந்ததைப்பற்றி அறியமுடிகிறது. வாள் அரத்தால் சங்கினை அறுத்து வளையல்களைச் செய்யும் தொழிலினை 'வேளாப் பார்ப்பான்' என்போர் செய்தனர்.[2] இவர்களை "கோடுபோழ் கடைநர்"[3] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

மன்னர்க்குரிய அரண்மனைகளை அமைப்போர்,[4] கண்ணுள் வினைஞர் எனப்பட்ட ஓவியர்கள்,[5] மடைத் தொழிலாளர் எனப்பட்ட உணவு சமைப்போர் இருந்தனர். இவர்களுள் பெண்பாலர் 'அடுமகள்'[6] எனப்பட்டனர். ஊரிலுள்ள மக்களின் ஆடைகளைத் தூய்மை செய்யும் தொழிலை மேற்கொண்டவர்கள் புலைத்தியர் எனப்பட்டனர்.

### 3.12.6. குயவர்

வீடுசார் புழங்குபொருட்களான கலன், தசும்பு, குழிசி, அகல், மண்டை, தடவு, அடுப்பு, தாழி, சாடி போன்ற மட்பாண்டங்களையும், இறந்த உடல்களை அடக்கம் செய்வதற்குரிய தாழிகளையும் செய்து தந்த குயவர்களின் பணி சமூகத்தின் இன்றியமையாத ஒன்றாகத் திகழ்ந்தது. ஈமச் சடங்கிற்குரிய தாழிகளைச் செய்ததால் சடங்கியல் முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகவும்,[7] வழிபாட்டுச் சடங்குகளைச் செய்வதால் பூசாரி என்னும் மற்றொரு பரிமாணத்தைப் பெற்றவராகவும் திகழ்ந்தனர்.[8] இவர்கள் செய்த பொருட்களைக் குறித்துப் புழங்குபொருளும் பண்பாடும் இயலிலும், இவர்களின் தொழில் குறித்து குடிகளும் சமூக இரும்பும் இயலிலும் விரிவாகப் பேசப்பட்டுள்ளது.

இவர்கள் நிலத்தில் தங்கள் உழைப்பைத் தந்து விளைச்சலை ஊதியமாகப் பெற்ற உற்பத்தியாளர்களிடமிருந்து வேறுபட்டுத் தங்கள் அறிவுசார் பணிகளையும், உடல் உழைப்பு சார்ந்த சேவைப் பணிகளையும் ஆளும் வர்க்கத்திற்குத் தந்து அதற்கு உபகாரமாகப் பெற்ற பொருட்களைக்கொண்டு வாழ்ந்தவர்கள்.

### 3.12.7. பொற்கொல்லர்

பழங்காலத் தமிழகத்தில் அணிகலன் தயாரிக்கும் தொழிலில் தனித்திறன் பெற்ற ஒரு பிரிவினர் இருந்தனர். இவர்களைச் சங்க இலக்கியப் பாக்கள் "இழைபுனைநர்"[9], "பொன்செய் கம்மியன்"[10] எனக் குறிப்பிடுகின்றன. மதுரை நகரத் தெருக்களில் பல்வேறு தொழில் செய்வோருக்கு இடையில் நின்று சுடப்பட்ட பொன்னால் விளங்கும் அணிகலன்களைச் செய்யும் தட்டாரும் நின்று வணிகம் செய்ததை, "சூடு உறு நன்பொன் சுடர் இழை புனைநரும்"[11] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. இவர்கள் பொற்காசுகளால் அமைந்த மேகலை,[12] பொன், பவளம், முத்து, மணி ஆகியவற்றைக் கோவைப்படுத்தி உருவாக்கிய அணிகலன்,[13]

---

[1] மது. 521
[2] அக. 24:1-2
[3] மது. 511
[4] நெடு. 76-78
[5] மது. 516-518
[6] புற. 399:1
[7] புற. 228, 238:1, 256
[8] நற். 200:4, 293:1-5
[9] மது. 512
[10] நற். 313:2
[11] மது. 512
[12] புற. 353:1-2
[13] புற. 218:1-4

போன்றவற்றைச் செய்தனர். கொடுமணம் என்ற ஊர் அணிகலன்களைச் செய்வதில் மாட்சிமைப் பெற்றுத் திகழ்ந்தது.[1] இவர்களில் ஒரு பிரிவினர் பொன்னின் தரத்தை உரைகல்லில் உரசிப்பார்த்து மதீப்பீடு செய்யும் பணியில் ஈடுபட்டனர். இவர்களைப் 'பொன் உரை காண்மார்'[2] எனக் குறிப்பிடுகிறது மதுரைக்காஞ்சி.

### 3.13. ஆளும் வர்க்கத்தின் ஏவலர்கள்

அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதர், ஒற்றர், நீதி வழங்குவோர், மெய்க்காப்பாளர், நாழிகைக் கணக்கர், அரண்மனைப் பணிப்பெண்கள், சூதர், மாகதர், வேதாளிகர், முரசறைவோர், காவலர், குதிரைப்படை வீரர், யானைப் படை வீரர், காலாட்படை வீரர் இவர்கள் அடிப்படையில் உணவு உற்பத்தியிலிருந்து விலகி ஆளும் வர்க்கத்திற்குச் சேவைசெய்யும் குடிமக்களாவர். இத்தகைய அரசு சார்ந்த பணியாளர் பிரிவானது சமூகத்தில் வர்க்க பேதம் தோன்றிவிட்டமைக்கான அடிப்படை ஆதாரமாக அமைகிறது.

### 3.14. கலைஞர்கள்(பாணர் குடியினர்)

ஆடல், பாடல், இசை போன்றவற்றில் தேர்ச்சி பெற்ற நிகழ்த்துக் கலைஞர்கள் அனைவரும் ஒரு குழுவாக இயங்கினர். இவர்கள் அரசர்களிடமும் குறுநில மன்னர்களிடமும், ஊர்கள்தோறும் சென்றும் தங்கள் கலைத்திறனைக் காட்டி அதன்மூலம் பெற்ற பொருள்கொண்டு வாழும் வாழ்க்கை முறையைக் கொண்டவர்களாகத் திகழ்ந்தனர். பாணர், கூத்தர், பொருநர், பாடினியர், விறலியர் மற்றும் யாழ், தண்ணுமை, ஊதுகொம்பு, முழுவு, மத்தளம் போன்ற இசைக் கருவிகளை இயக்கும் இயவர் முதலானோர் இக்குழுவினுள் அடங்குவர்.

இக்குழுவில் ஆண்பெண் இருபாற் கலைஞர்களும் இடம்பெற்றிருந்தனர். இவர்களின் வாழ்க்கை அலைந்து திரியும் நாடோடித் தன்மையுடையதாக இருந்தது. இவர்கள் மன்னர் அவைகளிலும், விழாக் காலங்களிலும் தங்கள் கலைத்திறனைக் காட்டி மன்னர் மற்றும் மக்கள் ஆதரவைப் பெற்றவர்களாகத் திகழ்ந்துள்ளனர்.

இக்கலைஞர்கள் நேரடியான உணவு உற்பத்தியில் ஈடுபடாமல் தங்கள் கலைத்திறத்தை நுகர்பொருளாக்கி மக்களையும் மன்னர்களையும் மகிழ்வித்து அதன்மூலம் பொருள் பெற்று வாழும் பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தனர். இக்கலைஞர்கள் எப்பொழுதும் வறுமையில் வாடியவர்களாகவே ஆற்றுப்படை நூல்கள் சித்திரிக்கின்றன. இவர்கள் மக்களைக் காட்டிலும் மன்னர்களிடமிருந்தே மிகுதியான பொருளைப் பெற்றனர்.

இவர்கள் ஆற்றிய கலைப்பணிக்குத் தரப்பெற்ற ஊதியம் பரிசில் என்ற பெயரால் வழங்கப்பட்டது. அதாவது நுகர்வோனால் விரும்பி வழங்கப்பட்டது. எனவே இவர்கள் நிலையான பொருளாதாரத்தைப் பெற்றிருக்கவில்லை. எனவே இவர்கள் வாழ்க்கை ஏற்றஇறக்கங்களைக்கொண்டு அமைந்திருந்தது.

"சமூகத்தில் சார்ந்திருக்கும் நிலை (dependence) எங்கெல்லாம் காணப்படுகிறதோ அங்கெல்லாம் பரிமாற்றம் சமச்சீரற்ற நிலையில் அமைகிறது. தாங்கள் பெறும் அன்பளிப்புக்கேற்ப மீளப் பொருள்கள் கொடுத்து ஈடுசெய்ய முடியாதவர்கள் சமூகத்தில் உள்ளனர். இவர்கள் மீள் பரிவர்த்தனை செய்ய முடியாதவர்கள் என்பதால் தங்களுடைய பணிவு, விசுவாசம், ஊழியம் மூலம்

[1] பதி. 74:4

[2] மது. 513

பரிவர்த்தனையை ஈடுகட்டுவர்"[1] என்ற கருத்திற்கு ஏற்ப இக்கலைஞர்கள் தாங்கள் பெற்ற பரிசில் என்னும் கொடைக்குத் தங்கள் நன்றிக்கடனாக பரிசில் வழங்கிய மன்னர்களைச் சிறப்பித்து ஊர்ஊராகச் சென்று அவர்களை உயர்வாகப் பாடினர். மக்களுக்கும் மன்னனுக்குமான இணைப்புப் பாலமாக விளங்கினர்.

காலமாற்றத்தில் இத்தகைய பாணர்களை ஆதரிப்போர் இன்மையால் பாணர்கள் செல்வத்தில் திளைத்த ஆடவர்க்குப் பரத்தையரைத் தேடித்தரும் இழிநிலைக்கும் விறலியர் பரத்தையராகும் பரிதாப நிலைக்கும் தள்ளப்பட்டனர். இதனைக் கலித்தொகைப் பாக்கள் நன்கு உணர்த்துகின்றன.

இங்கு மன்னர்க்கும் பாணர்க்கும் இடையில் நடந்த எந்த நடவடிக்கையும் இனாமாக நடந்துவிடவில்லை, ஆனாலும் அவர்களுக்குத் தரப்பட்ட பொருளைப் பரிசில் எனக் குறிப்பிடப்படுவது உடமை வர்க்கம் தோன்றி நிலைபெற்றுவிட்டமைக்கான நிலையினைப் புலப்படுத்துகிறது. இது அக்காலத்தில் கலைக்கும் கலைஞர்களுக்கும் இருந்த மதிப்பு எத்தகையது என்ற கேள்வியை எழுப்புகிறது.

### 3.15. அடிமை முறை

போர்க் கைதிகளை அடிமைகளாக்கிக் கொள்ளும் முறையும் வழக்கத்திற்கு வந்துவிட்டது. அவர்களுள் பெண்கள் "கொண்டி மகளிர்"[2] எனப்பட்டனர். அரசனால் சிறைப்படுத்திக் கொண்டுவரப்பட்ட பகை மன்னர்களின் உரிமை மனைவியர் அம்பலங்களைத் தூய்மைப்படுத்துதல், விளக்கேற்றுதல் போன்ற பணிகளில் ஈடுபடுத்தப்பட்டனர்.[3] இத்தகைய கொண்டி மகளிர் குறித்துக் கருத்துரைக்கும் வீ. மாணிக்கம், "அரச குடும்பத்துப் பெண்டிருக்குச் சில தனித்த மதிப்பிழப்புகளும் உண்டு. போர்க்காலத்தில் அவர்கள் கொண்டி மகளிராகச் சிறைப்பிடிக்கப்பட்டு பகைவரின் நாட்டில் அடிமையாக, பரத்தையராக வாழும்நிலைக்கு ஆளாகலாம். அரண்மனைகளில் பொற்கலத்தில் ஆட்சியாளனுக்கும் விருந்தினருக்கும் மதுபரிமாறும் பணியை மேற்கொண்டனர்"[4] என்பார். ஆனால் சங்கப் பாடல்களில் இவர்கள் பரத்தையராக வாழ்ந்தனர் என்றோ, மதுபரிமாறும் பணியை மேற்கொண்டனர் என்றோ குறிப்பிடும்படியான நேரடிச் சான்றுகள் இல்லை. இது மேலும் ஆயத்தக்கது.

### 3.16. உற்பத்தி உறவுகளில் பெண்கள்

தொல்குடிச் சமுதாயத்தில் கூட்டுழைப்பே வழக்கத்தில் இருந்தது. ஆண்பெண் என்ற பால் வேறுபாடின்றி இருவருமே உணவு சேகரிக்கும் பணிகளை மேற்கொண்டிருந்தனர். மனித சமூகம் உணவு சேகரித்தல் என்ற நிலையிலிருந்து உணவு உற்பத்தி(வேளாண்மை) என்னும் நிலைக்குச் சிறுகச்சிறுக மாற்றமடையத் தொடங்கியது. அதாவது வேட்டையும் எரிபுனச் சாகுபடியும் என்ற தொடக்கநிலை, கால்நடை வளர்ப்பும் மென்புல வேளாண்மையும் என்ற வளர்ச்சி நிலை, நில நீர் வளமிக்க மென்புல வேளாண்மையைக்கொண்ட தன்னிறைவு நிலை என்ற அடிப்படையில் சமூகமானது வளர்ச்சி பெற்றது. இத்தகைய வளர்ச்சிப் படிநிலைகளில் உற்பத்திக் கருவிகளில் ஏற்பட்ட மாற்றம் அதன் மூலம் கிடைத்த

[1] ஜான் மோனகன், பீட்டர்ஜஸ்ட், சமூக – பண்பாட்டு மானிடவியல், ப. 163
[2] பட். 246
[3] பட். 246-250
[4] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல், ப. 420

உபரி, கால்நடைப் பொருளாதாரத்தில் கிடைத்த செல்வம் ஆகியன மெல்லமெல்லப் பெண்களை உற்பத்தியிலிருந்து பின்னுக்குத் தள்ளியது. இதனால் பெண்கள் ஆணைச் சார்ந்து இயங்கும் நிலைக்கு ஆளாயினர்.

வேளாண்மையை அடிப்படையாகக்கொண்ட மென்புலத்தில் வாழ்ந்த மேல்தட்டு வர்க்கத்தைச் சார்ந்த பெண்கள் முற்றிலும் உற்பத்தியிலிருந்து விளக்கப்பட்டு அவர்கள் ஆண்களுக்கான நுகர்ச்சிப் பொருளாக மாற்றப்பட்டனர். எனவே பொருளாதார ரீதியாக இவர்கள் ஆணைச் சார்ந்திருக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டனர். இதனை அகநானூற்றுத் தொகுப்பில் அமைந்த ஓரம்போகியாரின் மருதத்திணைப் பாடல் தெளிவாகவே குறிப்பிடுகின்றது.

"பரத்தைமை தாங்கலோ இலென்" என வறிது நீ
புலத்தல் ஒல்லுமோ? மனை கெழு மடந்தை!
அது புலந்து உறைதல் வல்லியோரே,
செய்யோள் நீங்க, சில் பதம் கொழித்து,
தாம் அட்டு உண்டு, தமியர் ஆகி,
தேமொழிப் புதல்வர் திரங்கு முலை சுவைப்ப,
வைகுநர் ஆகுதல் அறிந்தும்,
அறியார் அம்ம, அஃது உடலுமோரே!"[1]

இப்பாடலில், தலைவனின் பரத்தமையை ஏற்றுக்கொள்ளாது வெறுத்து அவனோடு ஊடல் கொள்ளும் பெண்கள், தம்மிடத்துத் திருமகள் விலகிச் செல்ல, நொய் அரிசியை முறத்தால் புடைத்துத் தாமே சமைத்து உண்டு தனிமையை மேற்கொண்டவராய், இனிய மொழிபேசும் குழந்தைகள் பால் இன்றி உலர்ந்த முலையைச் சுவைத்துப் பார்த்துப் பெரிதும் வருந்தி இருப்பர் என்பதை அறிந்து வைத்தும், அவரது பரத்தமை குறித்து மாறுபாடு கொள்வோர் அறிவிலாதவரே ஆவர்; ஆதலின், ஊடலைக் கைவிடுக'[2] என்று தோழி ஒருத்தித் தலைவிக்கு அறிவுரை கூறுகிறாள். இது உற்பத்தியிலிருந்து முற்றும் விலகிவிட்ட வேளாண் சமூகத்துப் பெண்கள் நிலைக்குச் சான்றாகத் திகழ்கின்றது.

மேல்தட்டு நிலையில் வாழ்ந்த பெண்கள் நிலை மேற்குறித்தவாறு பொருளாதார அடிப்படையில் ஆணைச் சார்ந்ததாக இருக்க, வன்புலப் பகுதியான குறிஞ்சிநிலப் பெண்களும், முல்லை நிலத்தில் வாழ்ந்த கால்நடைப் பொருளாதாரத்தில் ஈடுபட்ட பெண்களும், மருதநிலத்தில் உழவுப் பணிகளில் ஈடுபட்டப் பெண்களும், நெய்தல் நிலத்தில் உப்பு விளைத்தல், மீன் உணக்கல் முதலிய பணிகளில் ஈடுபட்ட பெண்களும் ஆண்களுக்குச் சமமாகவே மதிக்கப்பட்டனர்.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவர் குலப் பெண்கள் தினைப்புனக் காவல் உள்ளிட்ட வேளாண் பணிகளில் ஈடுபட்டனர்.[3] ஆடவர்களால் அம்பெய்திக் கொன்று கொண்டுவந்த மான், பன்றி போன்றவற்றைத் தம் குடியிலுள்ள பலருக்கும் பகுத்துத் தரும் பொறுப்புடையவர்களாக மதிக்கப்பட்டனர்.[4]

---

[1] அக. 316:10-17
[2] அக .316:8-17
[3] நற். 306
[4] நற். 85

முல்லை நிலப் பெண்கள் தம் இருப்பிடத்திற்கு அருகாமையிலிருந்த தோட்டக் கால்களில் கால்நடைகளை மேய்த்தனர். பால்படு பொருட்களான தயிர், மோர், வெண்ணெய் போன்றவற்றை விற்றும், பண்டமாற்று செய்தும் வந்தனர். அதன் மூலம் கிடைத்த பொருளைக்கொண்டு பால் வளம் மிக்க எருமைகளை வாங்கினர்.

உமணப் பெண்கள் நெல்லுக்கு மாற்றாக உப்பு விற்கும் தொழிலில் பங்கேற்றனர். மென்புலப் பகுதியைச் சார்ந்த உழத்தியர்கள் விதைத்தல், நடவு செய்தல், களையெடுத்தல், அறுவடை செய்தல் போன்ற வேளாண் பணிகளில் ஈடுபட்டனர். நெய்தல் நிலத்தைச் சார்ந்த பரதவப் பெண்கள் மீன் விற்றல், மீன் உணக்கல், உப்பு விற்றல் போன்ற தொழில்களில் ஆடவர்க்குத் துணையாக வேலைகளில் பங்கெடுத்துக் கொண்டனர்.

இவர்களேயன்றிக் கள் விற்கும் மகளிர், ஆடை வெளுக்கும் புலைத்தியர் போன்றோரும் பொருளாதாரத்தை ஈட்டும் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தனர்.

### *3.17.* புரப்போரும் இரப்போரும்

தனியுடைமை தோன்றிவிட்ட காலத்தில் சொத்து எவ்வளவு முக்கிய அங்கமாக இருந்தது என்பதை, "உடற் சக்தியும், மனவலிமையும் தவிர தனிச்சொத்தும் முக்கிய அங்கமாகிவிட்டது. இப்பொழுது ஆட்சியாளரிடம் தமது அடியாட்களுக்கு உணவு, உடை அளிக்கவும் பரிசுகள் வழங்கவும் நிறைய பொருள் வசதிகள் இருந்தன. ஏழை வர்க்கத்தினரை அவர்கள் இவ்வாயுதம் கொண்டே தமது வலையில் சிக்க வைத்துக்கொண்டிருந்தனர்."[1] என்ற கருத்து இங்கு நோக்கத்தக்கது.

தொகைநூல் காலத்திலேயே இனக்குழுக் கட்டமைப்பு உடைந்து சொத்துடைமை தோன்றி, இருப்பவர் இல்லாதவர் என்ற வர்க்க பேதங்கள் தோற்றம் பெற்றுவிட்டதைக் கொடை, இரத்தல் என்னும் சொல்லாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

இத்தகைய இரவலர்களைச் சேர, சோழ, பாண்டியர் எனப்பட்ட வேந்தர்களுள் பலரும் ஆதரித்ததை எட்டுத்தொகை நூல்களான புறநானூறும் பதிற்றுப்பத்தும் குறிப்பிடுகின்றன. இவர்களைப் போன்றே குறுநில மன்னர்களும், வள்ளல்களும், படைத் தலைவர்களும் இரவலர்களை ஆதரித்து வந்தமையையும் மேற்குறித்த புறநூல்கள் தெளிவுபடுத்துகின்றன. பத்துப்பாட்டில் வரும் ஆற்றுப்படைநூல்களும் பாண்கலைஞர்கள் வள்ளல்களால் போற்றிப் புரக்கப்பட்டமை குறித்து அறியத் துணை நிற்கின்றன. இக்கால கட்டத்தில்தான் தொன்மைச் சமூகத்தின் பகுத்தல் மரபு ஈதல் மரபாக மாற்றமடைந்தது என்பது நோக்கத்தக்கது.

மேற்குறித்த தொகைநூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள இரந்தோர், இரப்போர், இரவல்மாக்கள், இரவலர் என்னும் சொல்லாட்சிகள் அசமத்துவச் சமூகத்தைக் காட்டும் சான்றாகத் திகழ்கின்றன. இத்தகைய நிலையினை மார்க்சியக் கண்ணோட்டத்தில் நோக்குவோர், "நாகரிகம் முன்னேற முன்னேற அது கட்டுப்பாடான முறையில் தன்னால் உண்டான மோசமான நிலைமைகளை (வறுமை முதலியவைகளை) தான, தருமங்களைக்கொண்டு மூடி மறைத்து, அவற்றைப் பொறுத்துக் கொள்ளும்படியாகச் செய்துவிடுகிறது. அல்லது

---

[1] ராகுல் சாங்கிருத்யாயன், மனித சமுதாயம், ப. 88.

அம்மோசமான நிலைமைகளையே மறுத்துவிடுகிறது''[1] எனக் குறிப்பிடுவார் ராகுல் சாங்கிருத்யாயன். இக்கருத்திற்கு ஒப்பவே பரிசில் கருதி புரவலர்களைப் போற்றிப் பாடப்பட்ட புலவர்தம் பாடல்கள் விளங்குகின்றன. தாம் பெற்ற செஞ்சோற்றுக் கடனுக்காக மக்கள் தம் உயிரையும் தருவதற்கு ஏற்ற காலம் இன்னும் வரவில்லையே என்று ஏங்குவதாகவும்,[2] புலவர்கள் பரிசில் என்னும் கொடைக்கு நன்றியாக பரிசில் வழங்கிய மன்னர்களைச் சிறப்பித்து ஊர்ஊராகச் சென்று உயர்வாகப் பாடியமையும் இதற்குச் சான்றாகத் திகழ்கின்றன.

சேரமன்னர்களைப் பாடிய புலவர்களுக்குத் தரப்பெற்றதாகப் பதிற்றுப்பத்துப் பதிகம் குறிப்பிடும் பரிசுகள் அடிப்படைத் தேவையான உணவு, உடை என்பவைகளைத் தாண்டி உம்பற்காடு நிலப்பகுதியிலிருந்த ஐந்நூறு ஊர்களைக் கொடையாகத் தந்ததுடன், தன் ஆட்சிக்குட்பட்டிருந்த தென்னாடு நிலப்பகுதியிலிருந்து வரும் வருவாயின் ஒரு பகுதியைப் புலவருக்கு வழங்கியது. நாற்பது நூறாயிரம் பொற்காசு கொடுத்தது, உம்பற்காடு நிலப்பகுதி வருவாய் முழுவதையும் தந்தது. ஒன்பது கா என்னும் நிறையளவு பொன் கொடுத்ததுடன் நூறாயிரம் காணம் காசு கொடுத்தது, நூறாயிரம் காணம் கொடுத்ததுடன் 'நன்றா' என்னும் குன்றின்மேல் ஏறிநின்று கண்ணுக்கெட்டிய தூரம் வரையுள்ள நாட்டைக் கொடுத்தது. ஒன்பது நூறாயிரம் காணம் கொடுத்ததுடன் அரசுக் கட்டிலையும் பரிசாகக் கொடுத்தது.[3] எனத் தேவைக்கு மிகுதியாகத் தரப்பெற்றுள்ளமை கவனிக்கத்தக்கது. இது பொருள் வளமும் அதிகாரமும் மையத்தை நோக்கி குவிந்திருந்தமையைக் காட்டுகிறது. மன்னர்கள் நிலை இத்தகையது எனில் அவர்களைச் சார்ந்திருந்தோரின் நிலை எத்தகைய வளமுடையதாக இருந்திருக்கும் என ஊகிக்க இடம்தருகிறது. இவ்வாறு சமூகத்தில் ஒருபுறம் செல்வக் குவிப்பும் மறுபுறம் வறுமையும் இருந்த நிலை அக்காலச் சமூகத்தில் வர்க்க பேதங்கள் தோன்றிவிட்டதை உறுதிப்படுத்துகின்றது.

### 3.18. கொள்ளைப் பொருளாதாரம்

தொகைநூற்காலச் சமூகத்தில் கொள்ளைப் பொருளாதாரம்(கொண்டி) மிக மிக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது. ஒரு குழுவிலுள்ள கால்நடைகள் மற்றொரு குழுவினரால் கொள்ளையடிக்கப்பட்டன. கவர்ந்து வரப்பட்ட கால்நடைகள் குழுவிலுள்ளவர்களால் பகிர்ந்துகொள்ளப்பட்டன. இதனை, வெட்சிப்போர் எனவும் பாதீடு எனவும் இலக்கண நூல்கள் குறிப்பிடுகின்றன. பிறநாட்டைக் கொள்ளையிட்டுக் கொண்டுவந்த பொருளைக்கொண்டு பாண்டியன் இரவலர்க்கு அளித்தான்.

> ''இன்னா ஆகப் பிறர் மண் கொண்டு
> இனிய செய்தி, நின் ஆவர்வலர் முகத்தே''[4]

எனப் புறநானூறு குறிப்பிடுவதைக்கொண்டு பிற நாட்டைக் கொள்ளையிட்டுப் பொருள் ஈட்டும் வழக்கம் நடைமுறையில் இருந்ததை அறியமுடிகிறது. இராஜன். குருக்கள் இத்தகைய பொருளாதார நிலையினை, ''மூவேந்தர் அரசுகள் கொண்டிப்

---

[1] ராகுல் சாங்கிருத்யாயன், மனித சமுதாயம், ப. 103
[2] புற. 286, 290
[3] பதிற்றுப்பத்து பதிகங்கள் 2-9
[4] புற. 12:4-5

பொருளையே முக்கிய வருவாய் இனமாகக் கொண்டு இயங்கின"[1] எனக் குறிப்பிடுகிறார்.

வேந்தர்கள் தங்கள் பொருளாதாரத்தை உயர்த்துவதற்குப் பிறநாட்டைக் கொள்ளையிட்ட அதே வேளையில் அந்நாட்டைப் பொருளாதார நிலையில் பாழ்படுத்தும் நோக்கில் விளைநிலங்களுக்கு எரியூட்டுவது, நீர்நிலைகளை அழிப்பது போன்ற செயல்களிலும் ஈடுபட்டனர். மனித வளத்தைச் சிதைக்கும் நோக்கில் படைவீரர்கள் கொன்று குவிக்கப்பட்டனர்.

### 3.19. இயல் முடிவுகள்

சங்கப் பாடல்கள் காட்டும் நானிலச் சமூகத்தின் உற்பத்தி முறைகளிலும் உற்பத்தி உறவுகளிலும் நிலப்பின்னணி(இயற்கை வளம்) முக்கியக் கூறாக விளங்கியது. உணவைத் தேடித்திரிந்த நிலையிலிருந்து படிப்படியே உணவை உற்பத்தி செய்தல் என்ற நிலைக்கு மனிதசமூகம் மாற்றமடைந்திருந்தது. இதற்கு அந்தந்தச் சமூகத்தவர்களால் பயன்படுத்தப்பட்ட உற்பத்திக் கருவிகளும் தொழில்நுட்ப அறிவும் பிற நிலத்தவர்களுடனான ஊடாடலும் அடிப்படைக் காரணங்களாக அமைந்தன.

உணவு சேகரித்தல் கட்டத்தைச் சார்ந்தவர்களாக குறிஞ்சி நிலத்தின் ஒருசாராரும், உணவு உற்பத்திக் கட்டத்தைச் சார்ந்தவர்களாகக் குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த மற்றொருசாராரும், முல்லைநில ஆயர்களும், மருதநில உழவர்களும் காணப்பட்டனர்.

குறிஞ்சி நிலத்தவர்கள் தங்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களைத் தாங்களே உற்பத்தி செய்துகொண்டனர். நிலம் அனைவருக்கும் பொதுவாக இருந்தது. மக்கள் கூட்டுழைப்பு, கூட்டுண்ணல், பகிர்வு என்ற நிலைகளில் அனைவரும் குழுவாக இணைந்து வாழ்ந்தனர். எனவே இச்சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகளோ, தனியுடைமையோ, வர்க்க பேதங்களோ தோன்றவில்லை. இவர்கள் பயன்படுத்திய கருவிகள் சாதாரணமானவை தொழில்நுட்பத்தில் எளியவை. இவர்கள் தங்களின் அத்தியாவசிய உணவுத் தேவைக்காகப் பிற நிலத்தவர்களுடன் தேவை நோக்கிலான பண்டப் பரிமாற்றத்தில் தங்கள் தேவைகளை நிறைவேற்றிக் கொண்டனர்.

முல்லை நிலத்தவர்களின் உற்பத்திச் சாதனங்களாகக் கால்நடை வளர்ப்பும், வன்புல வேளாண்மையும் விளங்கின. ஆண்கள் மேய்த்தல் தொழிலோடு வேளாண்மையிலும் நுழைந்து உற்பத்திச் சக்திகளின் மீது ஆதிக்கம் செலுத்தினர். பெண்கள் வீடுசார்ந்த பணிகளில் இயங்கவேண்டிய நிலையில் இருந்தனர். இவர்கள் பால்படு பொருட்களைப் பண்டமாற்றுச் செய்து பொருள் ஈட்டும் நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்.

முல்லை நிலத்தவர்களின் நிலையான குடியிருப்பும் கால்நடைவளர்ப்புடன் கூடிய வேளாண்மையும் சமூகத்தில் சொத்துடைமை தோன்ற அடித்தளமிட்டது. கால்நடைகள் இவர்களின் முக்கியச் சொத்தாக இருந்தது. பொருளாதாரப் பெருக்கத்தில் அவை இன்றியமையாத இடத்தைப் பெற்றிருந்தது. ஆணின் சொத்துடைமையை நிலைநாட்டுவதற்காகப் பெண்ணுக்குக் கற்பொழுக்கம்

---
[1] வீ. மாணிக்கம், தமிழர் வாழ்வியல்,(மேற்.) ப. 445

*என்னும் ஒழுக்கநெறி கற்பிக்கப்படுவதற்கான சூழல் உருவானது. இதற்கு ஆண்பெண் இடையிலான உற்பத்தி உறவு காரணமாக அமைந்தது.*

*மருதநிலப் பகுதியின் நீர்வளமும் நிலவளமும் தொடர்ச்சியான வேளாண்மைக்கு வித்திட்டுப் பொருளாதார மேம்பாட்டுக்குக் காரணமானது. உபரி உற்பத்தி ஏற்பட்டுச் சொத்துடைமை தோன்ற அடித்தளமிட்டது. பிற தொழில்களின் தோற்றத்திற்கு வழிகோலியது. சமூகத்தில் புரவலன் இரவலன் என்ற வர்க்க பேதங்கள் தோன்ற ஆரம்பித்தது. உற்பத்திக் கருவியாக விளங்கிய நிலம் தனிஉடைமையாக மாறியது. அரசுருவாக்கம் தோன்றக் காரணமாக அமைந்தது.*

*நெய்தல் நிலத்தவர்கள் கடல்சார் தொழில்களான மீன்பிடித்தல், கடலில் மூழ்கி முத்தெடுத்தல், சங்கெடுத்தல் மற்றும் உப்பு விளைத்தல் போன்ற தொழில்களைச் செய்து வந்தனர். உப்பை உமணர்களிடம் கொடுத்து நெல்லைப் பண்டமாற்றாகப் பெற்றுக்கொண்டனர். பரதவப் பெண்களும் உப்பை நெல்லுக்குப் பண்டமாற்று செய்யும் பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். கடல் கடந்த அயல்நாட்டு வணிகம் செழிப்பதற்கும் நகரங்கள் உருவாவதற்கும் நெய்தல் நிலத்தின்கண் அமைந்த துறைமுகங்கள் காரணமாக அமைந்தன.*

*வறண்ட பாலை நிலப்பகுதியில் வாழ்ந்த எயினர், ஆறலைகள்வர் என்போர் வழிப்போக்கர்களிடமிருந்தும், வணிகக் குழுக்களிடமிருந்தும் அவர்களைத் துன்புறுத்தியும் கொன்றும் அவர்களிடமிருந்து பொருட்களைக் கொள்ளையடித்தும், கால்நடைகளைக் கொள்ளையடித்தும் வாழ்வது இவர்களின் முக்கியத் தொழிலாக இருந்தது. போர்களிலும் இவர்கள் படை உதவிக்காகப் பயன்படுத்திக் கொள்ளப்பட்டனர்.*

*நானிலச் சமூகத்தில் தேவை நோக்கிலான பண்டப் பரிமாற்றமும், வணிகநோக்கிலான பண்டப் பரிமாற்றமும் உற்பத்தி உறவுக்குப் பாலம் அமைத்துத் தந்தது.*

*சங்ககாலச் சமூகத்தில் நேரடியான உணவு உற்பத்தியிலிருந்து விலகி உணவு உற்பத்தி சார்ந்த தொழில்களில் ஈடுபட்ட குடிமக்களுக்கான கருவிகளையும், புழங்கு பொருட்களையும் உருவாக்கித்தந்த தொழில்பிரிவினர் தோற்றம் பெற்றனர். இவர்கள் சமூக வளர்ச்சியிலும் உற்பத்திப் பெருக்கத்திலும் முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகத் திகழ்ந்தனர். இவர்களில் ஒரு பிரிவினர் சேவைக் குடிகளாகவும் திகழ்ந்தனர். உற்பத்தி உறவுகளில் பெரும் மாற்றம் தோன்றக் காரணமாக அமைந்தனர்.*

*அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதர், ஒற்றர், நீதி வழங்குவோர், மெய்க்காப்பாளர், நாழிகைக் கணக்கர், அரண்மனைப் பணிப்பெண்கள், சூதர், மாகதர், வேதாளிகர், முரசறைவோர், காவலர், குதிரைப்படை வீரர், யானைப் படை வீரர், காலாட்படை வீரர் முதலானோர் அடிப்படையில் உணவு உற்பத்தியிலிருந்து விலகி ஆளும் வர்க்கத்திற்குச் சேவைசெய்யும் குடிமக்களாவர். இத்தகைய அரசு சார்ந்த பணியாளர் பிரிவானது சமூகத்தில் வர்க்க பேதம் தோன்றிவிட்டமைக்கான அடிப்படை ஆதாரமாக அமைகிறது.*

*ஆடல், பாடல், இசை போன்றவற்றில் தேர்ச்சி பெற்ற நிகழ்த்துக் கலைஞர்கள் அனைவரும் ஒரு குழுவாக இயங்கினர். இவர்கள் அரசர்களிடமும் குறுநில மன்னர்களிடமும், ஊர்கள்தோறும் சென்றும் தங்கள் கலைத்திறனைக் காட்டி*

அதன்மூலம் பெற்ற பொருள்கொண்டு வாழும் வாழ்க்கை முறையைக் கொண்டவர்களாகத் திகழ்ந்தனர். நிலையற்ற பொருளாதாரத்தைக் கொண்டிருந்த இவர்கள் வறுமைப்பட்டவர்களாகவே இருந்தனர்.

போர்க் கைதிகளை அடிமைகளாக்கிக்கொள்ளும் முறை வழக்கத்தில் இருந்தது. அவர்களுள் பெண்கள் "கொண்டி மகளிர்" எனப்பட்டனர். அரசனால் சிறைப்படுத்திக் கொண்டுவரப்பட்ட பகை மன்னர்களின் உரிமை மனைவியர் அம்பலங்களைத் தூய்மைப்படுத்துதல், விளக்கேற்றுதல் போன்ற பணிகளில் ஈடுபடுத்தப்பட்டனர்.

உற்பத்திக் கருவிகளில் ஏற்பட்ட மாற்றமும் அதன் மூலம் கிடைத்த உபரியும் பாணர், விறலி முதலிய இசைக் கலைஞர்களை மதிப்பிறக்கம் செய்தது. பரத்தைமை நிறுவனப்படுத்தப்பட்டது. பெண்கள் உற்பத்தியிலிருந்து பின்னுக்குத் தள்ளப்பட்டனர். இதனால் பெண்கள் ஆணைச் சார்ந்து இயங்கும் நிலைக்கு ஆளாயினர்.

மேல்தட்டு வர்க்கத்தைச் சார்ந்த பெண்கள் முற்றிலும் உற்பத்தியிலிருந்து விளக்கப்பட்டு அவர்கள் ஆண்களுக்கான நுகர்ச்சிப் பொருளாக மாற்றமடைவதற்கும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் நிலங்களில் வாழ்ந்த விளிம்புநிலைப் பெண்கள் ஆண்களுக்கு இணையாக உணவு சேகரித்தல், கால்நடை வளர்த்தல், உப்பு விளைத்தல், மீன் உணக்கல் முதலிய பணிகளில் ஈடுபட்டிருந்ததால் ஆண்களுக்குச் சமமாக மதிக்கப்பட்டதற்கும், உற்பத்தி உறவுகளில் பெண்களின் பங்களிப்பு காரணமாக அமைந்தது.

புரப்போர் இரப்போர் என்னும் நிலைகளைக் கொண்டு தொன்மைச் சமூகத்தின் பகுத்தல் மரபு ஈதல் மரபாக மாற்றமடைந்ததை அறியமுடிகிறது. இது பண்டையச் சமூகத்தில் வர்க்க பேதம் கால்கொண்டுவிட்டதைக் காட்டுகிறது.

அரசின் வருவாயில் கொண்டிப்பொருள் மிகமுக்கியமான வருவாயாகத் திகழ்ந்தது.

## *4. சடங்குகளும் நம்பிக்கைகளும்*

### *4.1. சடங்குகள்*

*உலகில் வாழும் அனைத்துச் சமூகத்தவர்களும் தங்களுக்கென சில தனித்த சடங்கு முறைகளைப் பின்பற்றுகின்றனர். அவை பலநிலைப் பட்டவையாக ஒவ்வொரு சடங்கும் ஒவ்வொரு காரணத்துக்காக நிகழ்த்தப்படுகின்றன. சடங்குகளுக்கு உட்படாத மனித வாழ்க்கையைக் காண்பது அரிது என்கிற அளவுக்கு அவை முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன. "ஓர் இனத்தின் வாய்மொழி வழக்காறுகளிலும், சடங்குகளிலும், பழக்கவழக்கங்கள் மற்றும் தட்டுமுட்டுச் சாமான்களிலும் அதன் சமூகப் பண்பாட்டு வரலாற்றுக்கான சான்றுகள் காணப்படுகின்றன"[1] எனக் குறிப்பிடுவது சடங்குகள் ஒரு மக்களினத்தின் பண்பாட்டைக் கணிப்பதில் எந்த அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்குகின்றன என்பதை உணர்த்துகிறது.*

*மனித வாழ்க்கை ஒரு நிலையிலிருந்து அடுத்தநிலைக்கு மாறும் போதெல்லாம் சடங்குகள் செய்யப்படுகின்றன. இதனை "ஒவ்வொரு வாழ்க்கை வட்டச் சடங்கும் மக்களை ஒரு தகுதி நிலையிலிருந்து பிரித்து, அவர்களை நிலைமாற்றம் செய்து, மறு தகுதிநிலைக்கு அறிமுகப்படுத்துகிறது"[2] என்ற வான் கென்னப் என்ற மானிடவியல் அறிஞர் கூற்றோடு ஒப்புநோக்கலாம்.*

*ஆழ்ந்து நோக்குவோமேயானால் சடங்குகள் தாயின் கருவிலிருந்தே தொடங்கிவிடுகின்றன. வளைகாப்புச் சடங்கு, பிறப்புச் சடங்கு, காதுகுத்துதல், பூப்புச் சடங்கு, திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு என மனித வாழ்வில் சடங்குகளின் பட்டியல் நீண்டுகொண்டே போகிறது. இத்தகைய சடங்குகளில் ஆண்களைக் காட்டிலும் பெண்களே மிகுதியும் சடங்கு வயப்படுத்தப்படுகின்றனர் என்பது கவனிக்கத்தக்கது. மேலும் இத்தகைய சடங்குகள் நாட்டார் பண்பாட்டு மரபோடும் சமயத்தோடும் பெரிதும் தொடர்பு கொண்டுள்ளன என்பதும் நோக்கத்தக்கது. வாழ்க்கையின் ஒவ்வொரு உயிரியல் நிலைமாற்றமும் சடங்குகளால் பண்பாட்டு வயப்படுகின்றன.*

*சடங்கு குறித்த பல்வேறு வரையறைகளை அறிஞர்கள் முன் வைக்கின்றனர். ரோத்தன் பூலர் என்னும் மானிடவியலார், "சடங்கென்பது சிரத்தைக்குரிய வாழ்வில் குறியீட்டளவில் உந்துதலைப் பெற அல்லது நேரடியாகப் பங்கெடுத்துக் கொள்ள பொருத்தமான நடத்தை முறைகளுடன் தன்னார்வமாக நிகழ்த்தும் ஒரு நிகழ்வாகும்"[3] எனக் குறிப்பிடுகிறார். இத்தகையச் சடங்குகளை மானிடவியல் அறிஞர்கள் பல்வேறு நிலைகளில் வகைப்படுத்துவதைப் பக்தவத்சல பாரதி தம் மானிடவியல் கோட்பாடுகள் என்னும் நூலில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.*

*அர்னால்டு வான் கென்னப், மக்களின் வாழ்வியற் சடங்குகளை ஆராய்ந்து அவற்றை வாழ்க்கை வட்டச் சடங்குகள் என்றும், அவற்றைப் 1. பிரித்தல் சடங்குகள், 2. நிலைமாற்றும் சடங்குகள், 3. இணைத்தல் சடங்குகள் என்றும் பாகுபடுத்துகிறார்.*

---

[1] *ச. பிலவேந்திரன், சனங்களும் வரலாறும், ப .8.*

[2] *பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப . 273*

[3] *பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப . 272*

அந்தோணி குட் வாழ்க்கை வட்டச் சடங்குகளை 1. மங்களமானது, 2. அமங்களமானது, 3. தூய்மை சார்ந்தது, 4. தீட்டு சார்ந்தது எனப் பாகுபடுத்துகிறார்.

எமிலி துர்க்ஹைம் 1. ஆக்கநிலைச் சடங்குகள், 2. எதிர்நிலைச் சடங்குகள் என வகைப்படுத்துகிறார்.

டாய் 1. உடலின் வரைதல் கலை சார்ந்தது, நோய் நீக்குதல் சார்ந்தது, 2. பொருளியல், 3. தீமை நீக்குதல், 4. பூப்பு, ஏற்புச் சடங்கு என வகைப்படுத்துகிறார்.

அந்தோணி வாலஸ் 1.தொழில் நுட்பச் சடங்குகள், 2. கருத்தியல் சடங்குகள் என இரண்டாக வகைப்படுத்துகிறார்.

ரொனால்டு கிரிம்ஸ் 1. நிலைப்படுத்தும் சடங்குகள், 2. நிலைமாற்றும் சடங்குகள் என வகைப்படுத்துகிறார்.

மேற்குறித்த வகைப்பாடுகளையெல்லாம் கருத்தில்கொண்டு சங்க இலக்கியங்களில் அறியலாகும் சடங்குகளையும் அவற்றின் ஊடாக வெளிப்படும் பண்பாட்டு அடையாளங்களையும் அறிந்துகொள்வதற்காகச் சடங்குகளைப் பின் வருமாறு பகுத்து விளக்கும் முயற்சி இவ்வியலில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

1. காப்புச் சடங்குகள்
2. வளமைச் சடங்குகள்
3. திருமணச் சடங்குகள்
4. நோய்நீக்கும் சடங்குகள்
5. மழைச் சடங்குகள்
6. மந்திரச் சடங்குகள்
7. பலிச் சடங்குகள்
8. வழிபாட்டுச் சடங்குகள்
9. இறப்புச் சடங்குகள்

### 4.1.1. காப்புச் சடங்குகள்

பழந்தமிழரிடையே வெண்சிறு கடுகின் புகைக்குத் தீயன விலகும் என்ற நம்பிக்கை காணப்பட்டது. குறிப்பாக, வெண்சிறு கடுகைப் புகைத்தால் போரில் புண்பட்டோரையும் ஈன்ற மகவினையும் பேய்கள் அண்டாது எனக் கருதினர்.

'போர்க்களத்தில் புண்பட்டு வீழ்ந்த வீரனைப் பேய்கள் வந்து தொடாதவாறு காப்பதற்காகப் பெண்கள், 'இரவமரத்தின் தழையையும், வேப்பமரத்தின் தழையையும் வீட்டில் செருகி, யாழிசையோடு சேர்ந்த பல இசைக்கருவிகளும் முழங்க, மையிட்டு, வெண் சிறு கடுகைத் தூவி, ஆம்பல் குழலை ஊதி, மணி முதலியவற்றை ஒலித்து காஞ்சிப்பண் பாடி, மனையின் கண் அகில் முதலியவற்றைப் புகைத்தனர்'[1] என்பதையும், 'போரில் புண்பட்டு வரும் வீரர்களைப் பேய்கள் தீண்டாதவாறு காப்பதற்காக வேம்பின் தழையை உடைய கிளைகளை ஒடிப்பதிலும் காஞ்சிப்பண் பாடுவதிலும் நெய்யையுடைய கையராய் வெண்சிறு கடுகைப் புகைப்பதிலுமாக எல்லா மனைகளும் கல்லென்ற ஆரவாரம் உடையனவாய் உள்ளன'[2] என்பதையும் கூறும் புறநானூற்றுப் பாடல்கள்

---

[1] புற. 281 [2] புற. 296

அக்காலத்தில் பேய்களிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்வதற்காக அவர்கள் செய்த சடங்குகளைப்பற்றி விவரிக்கின்றன.

மேலும், "வெண்சிறு கடுகின் புகைக்கு அஞ்சாத எமனைப்போல அதியமான் பகைநாட்டை அழிக்க வந்தான்"[1] எனக் கூறுவதுகொண்டு, வெண்சிறு கடுகின் புகைக்குக் கூற்றுவனும் அஞ்சுவான் என்ற அக்கால மக்கள் நம்பிக்கையைக் காணமுடிகிறது. பேய்களிடமிருந்து காத்துக்கொள்வதற்காக மட்டுமின்றி, மகப்பேறு நிகழ்ந்த வீடுகளிலும் தீய ஆவிகள் தீண்டாதவாறு காப்பதற்காக நெய்யுடன் கலந்த வெண்சிறுகடுகை மனையெங்கும் பூசி வைத்தனர்[2]. அரண்மனையின் கோபுர வாயில்களில் தெய்வம் உறைவதால் அவற்றிற்கு நெய்யும், வெண்சிறு கடுகும் இட்டு வழிபட்டனர்.[3] குறமகள் முருகனை வேண்டி செய்யும் வெறியாட்டுச் சடங்கிலும் நெய்யையும் வெண்சிறு கடுகையும் அப்பி வழிபட்டனர்[4]. என்னும் செய்திகள் சங்கத் தொகைநூல்காலச் சமூகத்தில் மேற்கொள்ளப்பட்ட காப்புச் சடங்குகளைக் குறித்து அறியத் துணைநிற்கின்றன.

#### 4.1.2. வளமைச் சடங்கு

பண்டைக் காலத் திருமண முறைகளைப்பற்றிக் குறிப்பிடும் அகநானூற்றுப் பாடல், முதிய மங்கள மகளிர் நீரால் மணமகளை நீராட்டிப் பூக்களை நெல்லுடன் கலந்து அவள் தலைமேல் தூவியதை, "நீரொடு சொரிந்த ஈர் இதழ் அலரி, பல் இருங் கதுப்பின் நெல்லொடு தயங்க"[5] எனக் குறிப்பிடுகிறது. இங்கு நீர் செழிப்புத்தன்மை தரக்கூடியது என்பதையும், அத்தகைய நீருடன் நெல்லும் சேர்ந்து முளைவிடுதல் போல மணமகள் பிள்ளைப்பேற்றினைப் பெறுவாள் எனக்கருதியும் இத்தகைய வளமைச் சடங்கினைப் பெண்கள் நிகழ்த்தினர் எனக் கருதலாம். இது பயிர்ப்பெருக்கத்தை மனித இனப்பெருக்கத்தோடு இயைபுபடுத்திப் பார்த்த எண்ணத்தால் தோன்றிய வளமைச் சடங்காகக் கருதலாம்.

இதே பாடலில் பிள்ளைப்பேறு பெற்றவர்கள் வாழ்த்தினர்[6] என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனையும் பிள்ளைப்பேறு பெற்றவர்கள் வாழ்த்தினால் மணப்பெண்ணுக்கும் பிள்ளைப்பேறு உண்டாகும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் வளமை கருதி மேற்கொள்ளப்பட்ட சடங்காகவே கருதலாம்.

குறிஞ்சி நிலத்தவர்கள் தினைப்புனக் காவலுக்குத் தங்கள் இளம்பெண்களை அனுப்பியதும் ஒருவகையில் இத்தகைய வளமைகருதியே என ஊகிக்கமுடிகிறது.

வையையில் நீராடி வழிபடும் மக்கள் நத்தை, நண்டு, இறால்மீன், வாளைமீன் போன்றவற்றைப் புதுநீரில் காணிக்கைப் பொருள்களாகப் போட்டு நாட்டில் விளைச்சல் பெருகி உலகம் தழைக்க வேண்டும் என வேண்டுவதை,

> "நத்தொடு, நள்ளி, நடை இறவு வய வாளை
> வித்தி அலையில், விளைக! பொலி!"[7]

எனப் பரிபாடல் குறிப்பிடுவதும், நெய்தல் நிலப்பெண்கள் கொற்கைப் பட்டினத் துறைமுகத்தில் முத்துக்களோடு வலம்புரிச்சங்கினைத் சொரிந்து குளிர்ந்த நீர்த்துறையில் தெய்வத்தைப் பரவி வழிபட்டதை,

---

[1] புற. 98:15-17
[2] நற். 370:2-4
[3] நெடு. 86-87
[4] திரு. 228
[5] அக. 86:15-16
[6] அக. 86:9-16
[7] பரி. 10:85-86

“புகழ் மலி சிறப்பின் கொற்கை முன்துறை,
அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து,
தழை அணிப் பொலிந்த கோடு ஏந்து அல்குல்
பழையர் மகளிர் பனித் துறைப் பரவ”[1]

என அகநானூறு குறிப்பிடுவதும் ஒருவகையான வளமைச்சடங்கு என்றே கருதலாம்.

***4.1.3. திருமணச் சடங்குகள்***

மனித வாழ்வை சடங்குகளே இயக்குகின்றன. உலக மக்கள் இனங்களில் சடங்குகளைப் பின்பற்றாத மக்களினத்தைக் காண்பது அரிது. மனித வாழ்வின் ஒவ்வொரு நிலைமாற்றமும் சடங்குகளோடு தொடர்புடையனவாகவே காணப்படுகின்றன. “சடங்கென்பது சிரத்தைக்குரிய வாழ்வில் குறியீட்டளவில் உந்துதலைப்பெற அல்லது நேரடியாகப் பங்கெடுத்துக்கொள்ள, பொருத்தமான நடத்தைமுறைகளுடன் தன்னார்வமாக நிகழ்த்தும் ஒரு நிகழ்வாகும்”[2] என்பார் மானிடவியல் அறிஞர் ரோத்தன் பூலர்.

இச்சடங்குகள் சமூகத்தின் கூட்டு முயற்சியால் உருவாக்கப்பெற்று சமூக ஏற்பினைப்பெற்று நிலைபேறடைந்து பின்வரும் தலைமுறைகளால் வழிவழி பின்பற்றப்படுகின்றன. இச்சடங்குகளை மக்களினம் கேள்விக்குட்படுத்தாது மரபுவழி பின்பற்றி வருகிறது.

டச்சு நாட்டு மானிடவியல் அறிஞரான வான் கென்னப், “ஒவ்வொரு வாழ்க்கை வட்டச் சடங்கும் மக்களை ஒரு தகுதி நிலையிலிருந்து பிரித்து, அவர்களை நிலைமாற்றம் செய்து, மறு தகுதிநிலைக்கு அறிமுகப்படுத்துகிறது”[3] எனக் குறிப்பிடுவார். திருமணம் என்னும் நிகழ்வும் அதில் மேற்கொள்ளப்படும் சடங்குகளும் மனிதனை வாழ்க்கையின் அடுத்த படிநிலைக்கு அழைத்துச் செல்கிறது.

குடும்பம் என்னும் சமூக நிறுவனம் மணவுறவுகளால் கட்டமைக்கப்படுகிறது. சடங்குகளே ஆணையும் பெண்ணையும் இணைத்து அவர்கள் ஒன்றாகக் கூடி வாழ்வதற்குரிய அங்கீகாரத்தைச் சமூகம் வழங்குகிறது.

திருமணச் சடங்கைத் தொல்காப்பியம் ‘கரணம்’ என்ற சொல்லால் குறிப்பிடுகிறது. இச்சடங்கு சமூகத்தில் பொய்யும் குற்றமும் தோன்றிவிட்ட காரணத்தினால் ஐயர் எனப்பட்ட பெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டதை,

“பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்,
ஐயர் யாத்தனர் கரணம் என்ப”[4]

என்ற நூற்பா குறிப்பிடுகிறது. ஆயினும் அச்சடங்குகள் எத்தகையவை என்பதை அறிந்துகொள்ள இயலவில்லை. சங்க காலத்தில் நடைபெற்ற திருமணம் குறித்தும், அதில் மேற்கொள்ளப்பட்ட சடங்குகள் குறித்தும், அகநானூற்றின் 86, 136 ஆகிய இருபாடல்கள் தெளிவாக விளக்குகின்றன.

---

[1] அக. 201:4-7
[2] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், (மேற்.) ப. 272
[3] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், (மேற்.) ப. 273
[4] தொல். பொருள். கற். நூற். 143

உழுந்தம் பருப்புடன் கூட்டிச் சமைத்த, பொங்கலும்,[1] இறைச்சியுடன் சேர்த்து ஆக்கிய சோறும்[2] திருமணத்தில் கலந்துகொண்டவர்களுக்கு வழங்கப்பட்டது. திருமண வீட்டில் கள் தரப்பெற்றது.[3]

திருமணம் நிகழும் வீட்டில் முற்றத்தில் வரிசையாகக் கால்களை நட்டுப் பந்தல் அமைத்து அதில் மணலைப் பரப்பினர். நன்கு அலங்கரிக்கப்பட்ட புறச்சுவரில் செம்மண் பூசினர், மாலைகளைத் தொங்கவிட்டு வீட்டை அழகுபடுத்தினர்.[4]

மனையின்கண் விளக்கினை ஏற்றி மலர் மாலைகளைத் தொங்கவிட்டனர். திருமணம் தீய கோள்கள் நீங்கப் பெற்று, திங்களை உரோகிணி கூடும் நாளில் நடைபெற்றது. விடியல் பொழுதில் திருமண வினைகள் தொடங்கப்பெற்றது.

வேங்கை மலரும் பருவம் திருமணத்திற்கு உரிய காலமாகக் கருதப்பட்டது.[5]

புதுமணப்பெண் புதுச்சோறு சமைப்பதைக் குறித்தும் அகநானூறு குறிப்பிடுகிறது.[6]

திருமணத்தின்போது மேற்கொள்ளப்பட்ட சடங்குகளாகப் பின்வருவனவற்றை அறிந்துகொள்ளமுடிகிறது.

மணவினைகளை முதிய மங்கல மகளிர் நிகழ்த்தினர். தலையில் நன்நீர்க் குடத்தினைத் தாங்கியும், கையில் மண்டை எனப்பட்ட அகன்ற பாத்திரத்தை ஏந்திக் கொண்டும், முன்னே தருவனவற்றையும் பின்னே தருவனவற்றையும் முறையாக எடுத்துத் தந்தனர்.

மகப்பேறு வாய்க்கப்பெற்ற மங்கல மகளிர் நால்வர் கூடிநின்று "கற்பு நெறியின்றும் வழுவாது நல்ல பலவற்றினும் உதவியாக இருந்து, நின்னை மனைவியாகப் பெற்ற நின் கணவனைப் பேணிக் காக்கும் பெருவிருப்பத்தை உடையை ஆகுக" எனக்கூறி வாழ்த்தினர்.

நீருடன் குளிர்ந்த இதழ்களை உடைய மலர்களை நெல்லுடன் கலந்து மணமகளின் தலையில் தூவினர். இச்சடங்கு குறித்து கா. சுப்பிரமணியன், "நீருடன் நெல்லுஞ்சேர்ந்து முளைவிடுதல் போல மணமகளும் பிள்ளைப்பேறு அடைவாள் என ஒத்த மந்திரமாக நெல்லும் பூவும் தூவப்பட்டன. இது மனித இனவிருத்தியும் பயிர்ச்செழிப்பும் அக்காலத்தில் தொடர்பு பட்டிருந்ததற்குச் சான்றாகும். பிள்ளைப் பேறுடையவர்கள் வாழ்த்தினால் பிள்ளைப் பேறுண்டாகும் என்பதனைத் தொத்து மந்திரமாகவும் கொள்ளலாம்"[7] எனக் குறிப்பிடுவது மனங்கொள்ளத்தக்கது.

புள் நிமித்தம் பார்த்தனர், கடவுளை வழிபட்டனர், மணவினையின்போது மணமுழவுடன் முரசு முழங்கப்பட்டது, மங்கல மகளிர் தலைவிக்கு மண நீராட்டினர். வாகை மரத்தின் இலையையும் அறுகம் புல்லினது கிழங்கையும்

[1] அக. 86
[2] அக. 136
[3] அக. 221:1-4
[4] அக. 86, 195:3-4
[5] அக. 232:7; கலி. 38:25-26
[6] அக. 141:14-15
[7] கா. சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், ப. 34

*சேர்த்துக் கட்டிய வெண்மையான காப்பு நூல் மணப்பெண்ணுக்குக் கட்டப்பட்டு, புத்தாடை அணிவிக்கப்பட்டது.*[1]

*திருமண வினையில் முக்கிய நிகழ்வாக, பெண்ணின் சுற்றத்தார் தலைவியின் முன்கையைப் பற்றி ஊரிலுள்ள அனைவரும் அறிய தலைவனிடம் தரும் வழக்கமிருந்ததை, "நேர் இறை முன்கை பற்றி, நுமர் தர, நாடு அறி நல் மணம் அயர்கம்"*[2] *எனக் குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகிறது.*

*பெண்ணின் இல்லத்தில் நடைபெற்ற வதுவைச்சடங்கில் ஆடவன் பெண்ணின் கூந்தலில் மலர் சூட்டினான்.*[3]

*ஆயர்களின் திருமணச் சடங்குகளாகப் பின்வருவனவற்றை அறிந்துகொள்ளமுடிகிறது. ஆயர் பண்பாட்டில் திருமணம் பெண்வீட்டில் நடத்தப்பெற்றது. திருமணத்தின்போது புதுமணல் பரப்பியும், செம்மண் பூசியும் வீட்டை அழகுபடுத்தினர். பெண் எருமையின் கொம்பினை நட்டுவைத்து அதனைத் தெய்வமாக வழிபட்டனர். இதனை,*

> *"தரு மணல் தாழப் பெய்து, இல் பூவல் ஊட்டி,*
> *எருமைப் பெடையோடு, எமர் ஈங்கு அயரும்*
> *பெரும் மணம்"*[4]

> *"…………………………அகன் கண்*
> *வரைப்பில் மணல் தாழப் பெய்து, திரைப்பில்*
> *வதுவையும் ஈங்கே அயர்ப"*[5]

*எனவரும் கலித்தொகைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. அகநானூற்றுப் பாடல் காட்டும் திருமணச் சடங்குகளில் குறிப்பிடப்படாத தீ வலம் வருதல் என்னும் நிகழ்வு தொகைநூல்களில் காலத்தால் பிற்பட்டதாகக் கருதப்படும் கலித்தொகையில்,*

> *"காதல் கொள் வதுவைநாள் கலிங்கத்துள் ஒடுங்கிய*
> *மாதர் கொள் மான்நோக்கின் மடந்தைதன் துணையாக*
> *ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான் போல்"*[6]

*எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனைப் பிற்கால வழக்கு எனத் துணியலாம். திருமணச் சடங்குகளைப் பெண்கள் நிகழ்த்தினர். இவ்வழக்கத்தைத் தாய்வழிச் சமூகத்தின் எச்சம் எனக்கருதலாம்.*

### *4.1.3.1. சிலம்புகழி நோன்பு*

*சங்ககாலத்தில் பெண்ணின் திருமணச் சடங்கிற்கு முன்பாக அவள் காலில் அணிந்திருக்கும் சிலம்பைக் கழற்ற சடங்கு நிகழ்த்தப்படும். இதனைச் 'சிலம்புகழி நோன்பு' எனக் குறிப்பிடுவர். பொதுவாக இச்சடங்கு பெண்ணின் இல்லத்திலேயே நிகழ்த்தப்படும். ஆனால் பெண்ணானவள் உடன்போக்கு சென்றுவிட்ட சூழலில் இச்சடங்கு உடன் அழைத்துச் சென்ற ஆடவனின் இல்லத்தில் நிகழ்த்தப்பட்டது.*

---

[1] அக. 136
[2] குறி. 231-232
[3] ஐங். 294:4-5
[4] கலி. 114:12-14
[5] கலி. 115:18-20
[6] கலி. 69:3-5

இச்சடங்கு குறித்துப் பல சங்கப்பாக்கள் குறிப்பிட்டிருப்பினும்[1] அச்சடங்கின் நுட்பங்களைக் குறித்து அறிந்து கொள்ள இயலவில்லை.

> "ஏதில் வறுமனைச் சிலம்பு உடன் கழீஇ
> மேயினள் கொல்? என நோவல் யானே"[2]

> "அதர் உழந்து அசையின கொல்லோ - ததர்வாய்ச்
> சிலம்பு கழீஇய செல்வம்
> பிறருணக் கழிந்தஎன் ஆயிழை அடியே"[3]

> "நும் மனைச் சிலம்பு கழீஇ அயரினும்,
> எம் மனை வதுவை நல் மணம் கழிக' எனச்
> சொல்லின் எவனோ மற்றே வென் வேல்"[4]

என்ற மேற்குறித்த பாடலடிகள், திருமணத்துக்கு முன் தலைவியின் இல்லத்தில் நடத்தப்படவேண்டிய சிலம்புகழி நோன்பு தன் மகளை உடன் அழைத்துச் சென்ற தலைவனின் இல்லத்தில் நடந்திருக்குமோ என தாய் வருந்துவதையும்; தன் மகளுக்குச் சிலம்பினைக் கழற்றுதற்குச் செய்யும் விழாச்சிறப்பைத் தான் கண்டு மகிழாது பிறர்கண்டு மகிழும்படி தன் மகள் அரிய சுரவழியில் சென்றுவிட்டதையும்; உடன் கொண்டுபோன தலைமகன் மீண்டும் தலைவியை அவள் இல்லத்துக்கு அழைத்துவந்தபோது, அவளின் தாய், சிலம்புகழி நோன்பு தலைவனின் இல்லத்தில் நடத்தப்பெற்றுத் திருமணம் நிகழ்த்தப்பெற்றாலும், மீண்டும் தன் இல்லத்தில் அச்சடங்கினை நிகழ்த்திப் பார்க்க எண்ணியதையும் குறிப்பிடுகின்றன.

மேலும், இச்சிலம்புகழி நோன்பைக் குறித்த சிந்தனைக்கிடையே திருமணத்திற்கு முன்பு இளம்பெண்களுக்குச் சிலம்பு அணிவிக்கப்பட்டதின் நோக்கம் குறித்த சிந்தனைக்கும் சங்கப் பாடல் இடமளிக்கின்றது. இளம்பெண்ணொருத்தி தன் காலடிச் சிலம்போசை தான் செல்லும் உடன்போக்கைத் தாய்க்குக் காட்டிக்கொடுத்துவிடுமோ என அஞ்சி சிலம்பைக் கழற்றி வைத்துவிட்டு தன் காதலனுடன் உடன்போக்கு மேற்கொண்டதை,

> "அரி பெய்து பொதிந்த தெரிசிலம்பு கழீஇ
> யாய் அறிவுறுதல் அஞ்சி,
> வேய் உயிர் பிறங்கல் மலை இறந்தோளை"[5]

என்ற செவிலித்தாயின் கூற்று, அக்காலத்தில் மணமாகாத கன்னிப்பெண்களைக் கண்காணிக்கக் கால்களில் சிலம்புகளை அணிவித்தனரோ என்ற ஐயத்தை ஏற்படுத்துகிறது. இதுகுறித்த சிலம்பு நா.செல்வராசு, "திருமணம் வரை களவு வாழ்வில் ஈடுபடாதிருக்கத் தலைவி கால்களில் சிலம்பு அணிவிக்கப்பெற்றது. திருமணத்திற்குப் பின் அது தேவையில்லை. ஆதலால் நீக்கப்பெற்றது. திருமணத்திற்கு முன்பு களையப்பெறும் சிலம்பு இதுவரையும் மணமகள் தூய கற்பினளாக இருந்தாள் என்பதை அறிவிப்பதாகக் கருதப் பெற்றிருக்க வேண்டும்"[6] எனக் குறிப்பிடுவதும் மனங்கொள்ளத்தக்கது. ஆகவே, திருமணத்துக்கு முன்

---

[1] அக. 117:8-9, 315:7-15, 383:11-14, 385:15-18

[2] அக. 369:25-26

[3] நற். 279:8-10

[4] ஐங். 399:1-3

[5] அக. 321:15-17

[6] சிலம்பு நா. செல்வராசு, பண்டைத் தமிழர் திருமண வாழ்க்கை, ப. 56.

சிலம்பணிவது பெண்ணின் நடமாட்டத்தை பெற்றோர் கண்காணிப்பதற்காகவும் இருக்கலாம் என்ற எண்ணத்தை ஏற்படுத்துகிறது.

மேலும், இச்சடங்கினைக் குறித்தும் அதன் நோக்கம் குறித்தும், "மணப்பருவம் எய்திய நிலையில் மங்கையின் கால்களில் அணிவிக்கப்பட்ட சிலம்புகள், மணமாகும் வரை கால்களில் கிடந்து அவளது கன்னித் தன்மைக்குச் சான்று பகர்ந்தன. பெண் இன்னும் கன்னியாகவே இருக்கிறாள் என்பதை ஊருக்கு உணர்த்தவே சிலம்புகள் பெண்ணின் கால்களில் கிடந்து ஒலித்தன. பெண்ணின் கன்னித்தன்மைக்கு அவளது தாயும் தந்தையும் அளிக்கும் உத்தரவாதத்தின் அடையாளமாக இருந்து வந்த சிலம்புகள் திருமணத்தின்போது தான் நீக்கப்பட்டன"[1] என்ற வெ. பெருமாள்சாமியின் கருத்தும் இச்சடங்கு குறித்த ஆழ்ந்த புரிதலைத் தருகின்றது.

### 4.1.4. நோய் நீக்கும் சடங்குகள்

#### 4.1.4.1. கட்டு பார்த்தல்

தன் மகள் உற்ற நோயின் உண்மைக் காரணத்தை அறிய இயலாத தாய், அதனை அறிய விரும்பிக் கட்டுப்பார்ப்பது பண்டைய வழக்கம். கட்டுவிச்சி முறத்தில் நெல்லையிட்டு எண்ணி அதனால் புலப்படும் நிமித்தங்களை அறிந்து கூறுவாள். இதனையே கட்டு பார்த்தல் எனக் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு கட்டு வைத்து குறி சொல்பவள் கட்டுவிச்சி எனப்பட்டாள். இவளை 'அகவன் மகள்'[2] என்றும் அழைத்தனர்.

'கட்டு' என்பதற்கு "சேரியின் முதுபெண்டாகிக் குறிசொல்லுமாதரை மனையகத்துக் கொணர்ந்துவைத்து முறத்திலே பிடிநெல்லையிட்டு எதிரே தலைமகளை நிறுத்தித் தெய்வத்துக்குப் பிரப்பிட்டு வழிபாடு செய்து அந்நெல்லை நந்நான்காக எண்ணி எஞ்சியவை ஒன்றிரண்டு மூன்றளவும் முருகணங்கெனவும் நான்காயின் பிறிதொரு நோயெனவுங் கூறப்படுவது" (நற். 288) என விளக்கமளிக்கிறது பின்னத்தூரார் உரை.

மேற்குறித்த உரைக்கு ஏற்பப் பெண்ணின் உடல் வேறுபாடு கண்டு காரணம் அறிய தாய் ஒருத்தி வீட்டின்கண் கட்டுவிச்சியை அழைத்து நெல்லைப் பரப்பி கட்டுவைத்து அக்கட்டுகளுக்கு எதிரே தன் பெண்ணை நிறுத்திக் குறிகேட்பதை,

> "நல்நுதல் பரந்த பசலை கண்டு, அன்னை
> செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇ
> கட்டின் கேட்கும் ஆயின்"[3]

என்ற நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது.

#### 4.1.4.2. வெறியாட்டுச் சடங்கு

அறிவு வளர்ச்சி பெறாத பழங்காலச் சமூகத்தில் திருமணமாகாத கன்னிப் பெண்களை சூர், அணங்கு, போன்றவைத் தீண்டித் துன்புறுத்தும் என மக்கள் நம்பினர். இத்தீண்டித் துன்புறுத்தும் சூர், அணங்கு என்பவற்றைப் போன்றே இளம்பெண்களை முருகு(முருகன்) என்னும் தெய்வமும் அணங்கித்

---

[1] வெ. பெருமாள்சாமி, சங்க இலக்கிய காட்சிகள், ப. 96.
[2] குறு. 23
[3] நற். 288:5-7

துன்புறுத்தியதை, ‘நெடுவேள் அணங்குறு மகளிர்’[1], ‘முருகன் ஆர் அணங்கு’[2], ‘நெடுவேள் அணங்கிற்று’[3] எனவரும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இத்தகைய முருகினால் அணங்கப்பட்ட பெண்ணை விடுவிப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட சடங்கு ‘வெறியாட்டு’ எனப்பட்டது.

பெற்றோரும் சுற்றத்தாரும் அறியாது இளம்பெண் ஒருத்தி ஆண் ஒருவனோடு களவொழுக்கத்தில் ஈடுபட்டுவந்த நிலையில் அவ்வுறவின் காரணமாகவோ அல்லது அந்த ஆடவனின் பிரிவு காரணமாகவோ அந்தப் பெண்ணுக்கு ஏற்படும் உளப்போராட்டத்தின் வெளிப்பாடான உடல் மெலிதலின் உண்மைக் காரணத்தை அறியாது, அப்பெண்ணின் தாயும், செவிலித்தாயும் தம் பெண்ணின் உடல்மெலிவிற்கு முருகன் தீண்டியதே காரணம் எனத் தவறாகக் கருதி வெறியாட்டுச் சடங்கை நிகழ்த்த எண்ணுகின்றனர். இம்மருளாட்டுச் சடங்கு முருகனின் பூசாரியான வேலன் என்பவனால் முருகு ஆற்றுப்படுத்தல்,[4] முருகு அயர்தல்,[5] வெறி,[6] வெறியயர்தல்,[7] வெறியாட்டு (தொல். 63, 109) என்ற பெயர்களால் நிகழ்த்தப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

முருகனுக்கு வெறியாட்டுச் சடங்கினை நிகழ்த்தி வழிபாடு செய்தால் பெண் துன்பம் தணியப் பெறுவாள் என்று அறிவு வாய்க்கப்பெற்ற பெண்கள்(கட்டுவிச்சி) கூறினர்[8]. வெறியாட்டுச் சடங்கு நிகழ்த்துவதற்கு முன்பு தலைவியின் நோய்க்கான காரணம் கட்டுபார்த்தல், கழங்கு பார்த்தல் ஆகியவற்றின் மூலம் குறி பார்க்கப்பெற்றுத் தலைவியின் மெலிவிற்கு முருகு அணங்கியதே காரணம் என அறிந்த பின்பு வெறியாட்டுச் சடங்கு நிகழ்த்தப்பெற்றது. வெறியாட்டுச் சடங்கு குறித்த சங்கப் பாடல்களைத் தொகுத்துப் பார்க்கின்றபோது,

> வெறியாட்டு என்னும் சடங்கு அக்காலத்தில் நடு இரவில் வேலன் எனபட்ட பூசாரியினால் நிகழ்த்தப்பெற்றது.[9]
>
> முருகக் கடவுள் ஏந்திய வேலினைத் தன் கையில் ஏந்தி வெறியாட்டாளன் கழங்கினைக்கொண்டு தலைவியின் நோய்க்கான காரணத்தை ஆராய்ந்தான்.[10]
>
> வெறியாடும் களத்தினை வேலன் என்பவனே அமைத்தான்.[11]
>
> கார்காலத்தில் மலர்கின்ற நறுமணமுள்ள கடம்பமாலையைச் சூடி வேலன் வேண்ட முருகன் வெறியாடு களத்திற்குப் பலிபெற வருவான்.[12]
>
> வெறியாடும் களம் மணலாலும் மலர்மாலைகளாலும்[13] பிறவற்றாலும் அழகுறுத்தப்பட்டது. இது செந்நெல்லின் வெள்ளிய பொரியைச் சிதறினாற் போன்ற தோற்றத்தைத் தரும்.[14]

---

[1] குறி. 174-175
[2] அக. 98:10
[3] நற். 288:10
[4] அக. 22:11
[5] குறு. 362:1
[6] ஐங். 243:2; நற். 273:4; பரி. 5:15
[7] அக. 182:17-18
[8] அக. 22:6-7, 98:9-10
[9] அக. 138:9-13; ஐங். 246:1
[10] ஐங். 248;நற். 47:8-10, 282:5-6
[11] ஐங். 249:1-2, நற். 268:8-9
[12] நற். 34:8-9
[13] அக. 114:1-2, 182:16-17
[14] குறு. 53:3-4

முருகக் கடவுளை வேண்டி நிகழ்த்தப்பெற்ற இவ்வெறியாட்டில் முருகக் கடவுளின் வேலிற்கு மாலை சூட்டப்பெற்றது. அக்கடவுளை வாழ்த்திப் பாடப்பெற்றது.[1]

ஆட்டுக்குட்டியை அறுத்து உயிர்பலி தரப்பெற்றது. பலியிடப்பெற்ற ஆட்டின் குருதியோடு தினையினைக் கலந்து தூவி முருகனை அழைத்து வழிபாடு நிகழ்த்தப்பெற்றது.[2]

வெறியாட்டுக் களம் மறி அறுத்தலால் குருதி பரவிக் காணப்பட்டது.[3]

பலியிடப்பெற்ற ஆட்டுக்குட்டியின் குருதி பெண்ணின் நெற்றியில் தடவப்பெற்றது.[4]

தலைவியினை வேலன் முன் நிறுத்தி அவள் கூந்தல் பூவை எடுத்து வீசுமாறு பரவுக்கடன் செய்யப்பெற்றது.[5]

வீட்டின்கண் அமைக்கப்பெற்றிருந்த வெறியாட்டுக் களத்தில் பல்வேறு இசைக்கருவிகள் ஒலிக்கப்பெற்றன. அங்கு அமைக்கப் பெற்றிருந்த பெரிய பந்தலிலே, வேலன் பனந்தோட்டினைக் கடம்ப மலரோடு சூடி, முருகக் கடவுளின் பெருமையினைத் தாளத்தோடு கூடிய இனிய பாடலைப்பாடித் துதித்தான்.[6]

என்ற செய்திகளை அறிந்துகொள்ளமுடிகிறது. மேற்குறித்தப் பாடற் கருத்துக்களை நோக்கும்போது தலைவியோ தோழியோ தலைவியை முருகு அணங்கியதான நிகழ்வை எங்கும் எந்தச் சூழ்நிலையிலும் ஏற்றுக்கொள்வதாகக் காட்டப்படவில்லை. எனினும் இச்சடங்கைப் புலவர்களின் புனைவு என்று புறந்தள்ள முடியாது. தொல் சமூகத்தில் அத்தகையதொரு வழக்கு இருந்துள்ள நிலையினையே புலவர்கள் குறித்துள்ளனர் எனக் கொள்வதே பொருத்தமெனத் தோன்றுகிறது.

பலியிடப்பெற்ற ஆட்டுக்குட்டியின் கழுத்திலிருந்து பெருகி வழியும் குருதியை எடுத்து வெறியாட்டு நிகழ்த்தப்பெறும் பெண்ணின் நெற்றியில் வேலன் தடவுவதாக குறுந்தொகைப் பாடல்[7] குறிப்பிடுகிறது. இச்சடங்கின் எச்சமே இக்கால நாட்டார் வழிபாட்டில் பெண்ணின் நெற்றியில் பூசாரி குங்குமம் இடுவது எனக் கருதலாம்.

மானிடவியல் அறிஞர்கள், வெறியாடலை ஒத்த நிகழ்ச்சி இன்றும் பல இனக்குழுச் சமூகங்களில் காணப்படுவதாகக் குறிப்பிடுகின்றனர். இதனை உணர்ச்சிவயமுற்று ஆடுகின்ற ‘சாமனிசம்’ என்ற தொன்மையான வழிபாட்டு நடத்தை முறையோடு ஒப்பவைத்து நோக்குவது எண்ணத்தக்கது. இவ்வெறியாட்டுச் சடங்கினைத் துன்புறுத்தும் தெய்வத்தை அமைதிப்படுத்த அது விரும்பும் பொருள்களைக் கொடுத்துப் பரிகாரம் செய்வதுபோன்றதொரு சாந்திச் சடங்கு எனக் கருதலாம்.

---

[1] அக. 242:7-12

[2] அக. 22: 8-11, 242:7-12, 292:1-6; நற். 47:8-10; திரு. 218

[3] குறி. 169-175

[4] குறு. 362:1-5

[5] நற். 51:6-7

[6] நற். 322:10-12; அக. 98:14-21

[7] குறு. 362

### *4.1.4.3. குறமகள் வெறியாட்டு*

*வேலன் என்னும் ஆண் பூசாரியால் நிகழ்த்தப்பட்ட வெறியாட்டேயன்றி வளமை வேண்டி குறமகளால் நிகழ்த்தப்பட்ட வெறியாட்டுச் சடங்கினைக் குறித்து திருமுருகாற்றுப்படை,*

> *"தெய்வமாடும் குறப்பெண், மாட்சிமையுடைய தலைமைசான்ற கோழிக்கொடியோடு பொருந்துமாறு அமைத்து, நெய்யையும் வெண்சிறு கடுகையும் அப்பி, ஓதும் மந்திரத்தை மறைவாக ஓதி வழிபட்டுக் கொழுவிய மலர்களைத் தூவி கைகூப்பி வணங்கி, மாறுபட்ட வடிவினையுடைய இருவேறு ஆடைகளை உள்ளொன்றும் புறம்பொன்றுமாக உடுத்துச் சிவந்த நூலைக் கையிலே காப்புக்கட்டி, வெண்பொரி தூவி, வலிமிக்கதும், பெரிய காலையுடையதும் ஆகிய கொழுத்த கிடாயினது குருதியோடே பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறு பலியாக இட்டுப் பலி இடத்தில் வைத்து, சிறிய பசுமஞ்சளோடே நறிய சந்தன முதலியவற்றைத் தெளித்துப் பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையையும், ஏனைய நறிய குளிர்ந்த மாலைகளையும் இணைஒக்க அறுத்துப் பந்தலில் அசையும்படி தொங்கவிட்டுச் செறிந்த மலைப்பக்கத்துள்ள நல்ல ஊர்களைப் 'பசியும் பிணியும் பகையும் நீங்குக' என்று வாழ்த்தி, நறிய மணப்பொருளைப் புகைத்து அந்நிலத்திற்குரிய குறிஞ்சிப்பண்ணைப் பாடி, முழங்குகின்ற ஓசையையுடைய அருவியோடே இனிய இசைக்கருவிகளும் முழங்க, சிவந்த நிறத்தினையுடைய பல பூக்களையும் தூவி, அச்சம் உண்டாகும்படி குருதி கலந்த சிவந்த தினையினையும் பரப்பி, முருகப்பெருமான் உவக்கும் இசைக்கருவிகளை முழங்கப் பண்ணி, முருகு ஆற்றுப்படுத்தினாள்"[1] எனக் குறிப்பிடுகின்றது.*

### *4.1.5. மழைச்சடங்கு*

*மக்கள் தங்கள் வளமைக்காக வேண்டி பல்வேறு சடங்குகளைச் செய்கின்றனர். அவற்றுள் மழை வேண்டி செய்யப்பட்ட சடங்குகள் மிகுதியானவை. அவை ஒவ்வொரு வட்டாரத்திற்கும் ஏற்ப மாறுபடுகின்றன. மழைச் சடங்குகளைக் குறித்து ஆ. சிவசுப்பிரமணியன், "பொதுவாக, மழைச்சடங்குகள் என்பன மந்திரச் சடங்குகள் (Magical Rituals) ஆகும். இங்கே அது ஒத்த மந்திரச் சடங்காக (Imitative Magic)அல்லது பாவனை மந்திரச் சடங்காக நிகழ்த்திக் காட்டப்படுகிறது. ஒத்தது ஒத்ததை உருவாக்கும் என்பதே இம்மந்திரச் சடங்கின் அடிப்படையாகும். அதாவது, ஏற்பட வேண்டிய விளைவும் அதனை அடையச் செய்யும் செயலும் ஒத்திருக்கும்"[2] எனக் குறிப்பிடுகிறார்.*

*இன்றும் நாட்டுப்புறங்களில் மழைச் செம்புஎடுத்தல், மழைக்கஞ்சி காய்ச்சுதல், கொடும்பாவி கட்டி எரித்தல், ஒப்பாரி வைத்தல், கழுதைகளுக்கு மணம் செய்து வைத்தல் போன்ற பல்வேறு சடங்குகளைச் செய்து வருகின்றனர். பழங்காலத்திலும் இவ்வாறு மழைவேண்டிச் செய்யப்பட்ட பல்வேறு சடங்குகளைச் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது.*

*நாட்டுப்புறவியல் அறிஞர் நா.வானமாமலை அவர்கள், "வேட்டைக்காலத்தில் சடங்காசாரங்களின் விளைவாக நடனம் தோன்றியது. மழைவாழ் மக்கள் மழை வேண்டிச் செய்த மந்திரச் சடங்குகள் பல இடிபோல்*

---

*[1] திரு. 227-244*

*[2] ஆ. சிவசுப்பிரமணியன், மந்திரமும் சடங்குகளும், ப. 3*

இடிப்பதற்குத் தங்கள் வேட்டையாடிக்கொன்ற விலங்குகளின் தோலாலும் நரம்பாலும் செய்த பறைகள், கிணைகள் போன்றவற்றை முழங்கி ஆடினர். இது உலகம் முழுவதும் காணப்பட்டதோர் மழைச்சடங்கு தற்காலத்திலும் ஆப்பிரிக்க இனக்குழு மக்கள் இத்தகைய சடங்குகளை மழை வேண்டிச் செய்கின்றனர். மழை பெய்தால்தான் காட்டில் தாவரங்கள் வளரும், விலங்குகள் பெருகும் எனவே மழைச்சடங்குகள் நிகழ்த்தப்பட்டன''[1] எனக் குறிப்பிடுகிறார். இவர் குறிப்பிடுவதைப்போன்றே குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவர்கள் மலைவளம் செழிக்க மழைவேண்டி பல பாவனைச் சடங்குகளைச் செய்துள்ளனர். வானத்தை நோக்கி ஆரவாரம் செய்தால் மேகமானது மழையைப் பொழியும் என நம்பிக்கை கொண்டிருந்ததை,

> ''குன்றக் குறவன் ஆர்ப்பின், எழிலி
> நுண் பல் அழி துளி பொழியும் நாட!''[2]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இதைப்போன்றே, குறவர்கள் மழையற்ற காலத்தில் மலையை மழை வந்து சூழ்க என்று, பலியைத்தூவி வேண்ட, மிகுதியான மழை பெய்ததையும், மழை மிகுதியாகப் பெய்ததால் அதனை நிறுத்த வேண்டி, முகில் மேலே போவதாக என்று வேண்ட, மழை இடம்மாறிப் பெய்ததையும் பற்றி

> ''மலைவான் கொள்கஎன !, உயர்பலி தூஉய்,
> மாரி ஆன்று, மழைமேக்கு உயர்கஎனக் !
> கடவுட் பேணிய குறவர் மாக்கள்''[3]

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இத்தகைய மழைச் சடங்கை பாவனைச் சடங்கு எனக் குறிப்பிடுவார் கா. சுப்பிரமணியன். அவர் முண்டா என்ற இனக்குழு மக்களிடம் இத்தகைய பாவனைச் சடங்கு காணப்படுவதை, ''முண்டாக்கள் மழை பெய்ய மலை உச்சியிலேறிக் கற்களை உருட்டினர்: அது இடியோசையாகும். புகையெழுப்பினர்; அது மேகமாகும். நீர் சிந்தினர்; அது மழையாகும். இவ்வாறு பாவனை செய்தால் மழை பெய்யும் என நம்பினர்''[4] எனக் குறிப்பிடுகிறார்.

நாட்டுப்புற வழக்காற்றில் மழையை நிறுத்துவதற்காக மேற்கொள்ளப்பட்ட சடங்கு ஒன்றைப் பற்றி ''தஞ்சை மாவட்டத்தின் சில பகுதிகளில் அளவுக்கு அதிகமான மழை பெய்தால், மழையை நிறுத்த வேண்டியும் சில சடங்குகள் செய்யப்படுகின்றன. அப்போது பெண்கள் விளக்குமாறுகளை வானத்தை நோக்கிக் காட்டுகின்றனர்''[5] எனத் தே. லூர்து குறிப்பிடுவதும் இங்கு மனங்கொள்ளத்தக்கது.

வையையில் நீராடி வழிபடும் மக்கள் நத்தை, நண்டு, இறால்மீன், வாளைமீன் போன்றவற்றைப் புதுநீரில் காணிக்கைப் பொருள்களாகப் போட்டு நாட்டில் விளைச்சல் பெருகி உலகம் தழைக்க வேண்டும் என வேண்டுவதை,

> ''நத்தொடு, நள்ளி, நடை இறவு வய வாளை
> வித்தி அலையில், விளைக! பொலி! என்பார்''[6]

---

[1] http://alagappamani.blogspot.in/2015/08/blog-post_19.html
[2] ஐங். 251:1-2
[3] புற. 143:1-3
[4] கா. சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப. 21
[5] தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், தொகுதி 1, பக் 229
[6] பரி. 10:85-86

எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது இதுவும் ஒருவகையான மழைச் சடங்கு என்றே கருதலாம். இதனை ஒரு வகையில் தொத்து மந்திரச் சடங்காகவும் கொள்ளலாம். "ஒரு முறை தொடர்பு கொண்டால் தொடர்ந்து தொடர்பு கொண்டிருக்கும்"[1] என்ற நம்பிக்கையில் ஈன்ற பசுவின் இளங்கொடியை பால்மரங்களில் கட்டினால் பால் வளம் சுரக்கும் என்று கருதுவதைப்போல நீரோடு தொடர்புடைய சிப்பி, சங்கு, நத்தை போன்றவற்றை ஆற்றில் விட்டால் நீர் வளம் பெருகுவதற்குக் காரணமான மழையை பெய்விக்கும் என்ற அடிப்படையில் இச்சடங்கு மேற்கொள்ளப்பட்டது எனலாம்.

ஆமானின் மார்பிடத்தே பாய்ந்து தங்காது குறிதவறி நீங்கிவிட்ட அம்பின் போக்கை நினைந்து கானவன் தம் அம்பு பிழைத்தமைக்குக் கடவுளே காரணமெனக் கருதி அதன் வீறு மழைபெய்தால் தணியும் என மழை வேண்டி கூட்டாகச் சேர்த்து பலிநேர்ந்து வழிபட்டதை,

"அமர்க் கண் ஆமான் அரு நிறம் முள்காது
பணைத்த பகழிப் போக்கு நினைந்து, கானவன்,
அணங்கொடு நின்றது மலை, வான் கொள்க எனக்
கடவுள் ஓங்கு வரை பேண்மார், வேட்டு எழுந்து,
கிளையொடு மகிழும் குன்ற நாடன்[2]"

என்ற நற்றிணைப் பாடலொன்று குறிப்பிடுகிறது. இது பலிநேர்ந்தால் மழைபெய்யும் என்றும், மழை தெய்வத்தின் சீற்றத்தைத் தணிக்கும் என்றும் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையைப் புலப்படுத்துகிறது.

### 4.1.6. மந்திரச்சடங்கு

சமயங்கள் அனைத்திற்கும் ஆதியாக விளங்குபவை மந்திரங்கள். மந்திரங்களும் அவற்றை அடிப்படையாகக்கொண்டு இயங்கிய சடங்குகளும் தொன்மைச் சமுதாய மக்களின் வாழ்க்கையில் இன்றியமையாத பங்கு வகித்தன."பொதுவாகப் பண்டைய மக்கள் தாம் வாழ்ந்த இயற்கைச் சுற்றுச்சூழலைத் தம்முடைய கண்ணோட்டத்திலேயே புரிந்துகொள்ள முற்பட்டனர். அறிவியல் கண்டுபிடிப்புகள் எவையும் அற்ற ஒரு காலத்தில், தமது கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டவையும், புரிந்து கொள்வதற்கு இயலாதவையும், புதிர்மைத் தன்மை உடையவையுமான இடி, மின்னல், புயல், வெள்ளப்பெருக்கு, கடல் சீற்றம், முதலிய இயற்கைச் சக்திகள், வலிமை மிக்க விலங்குகள் போன்றவற்றைப்பற்றித் தத்தம் அனுபவ அளவிலேயே புரிந்துகொள்ள முற்பட்டனர். அவ்வாறு புரிந்துக்கொள்வதற்கும் கட்டுப்படுத்தவும் மேற்கொள்ளப்பட்ட மனித நடத்தைகளே பண்டைக் காலத்தில் மந்திரமாகவும், சமயமாகவும் தோற்றம் பெற்றன"[3] என ஆ. தனஞ்செயன் கருதுவார்.

அறிவியலிலும் தொழில்நுட்பத்திலும் வளர்ச்சி பெறாத பழஞ்சமூகத்தில் இயற்கையின் அதீத ஆற்றல்களைக்கண்டு அஞ்சிய மனிதக்கூட்டம் அதைத் தன்வயப்படுத்த முயற்சி செய்தது. அதன்பொருட்டு அம்மக்களால் கண்டுபிடிக்கப்பட்ட ஒன்றுதான் மந்திரங்களும் அதனூடான சடங்குகளுமாகும். "மக்கள் தம்முடைய சக்தியை அடிப்படையாகக்கொண்டு தமக்குப் புறம்பாக உள்ள

---

[1] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 246

[2] நற். 165:1-5

[3] ஆ. தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும், ப. 143.

இயற்கையிலும் அச்சக்திகளைக் கண்டு அவற்றை உபயோகித்து அடக்கக்கண்ட கருவியே மந்திரம் ஆகும்"[1] என க. கைலாசபதி குறிப்பிடுவார்.

சில மந்திரங்களை உச்சரிப்பதன் மூலம் ஒரு குறிப்பிட்ட ஆற்றலைக் கட்டுப்படுத்தலாம் என மக்கள் எண்ணினர். இவ்வாறு தோற்றம் பெற்றவையே மந்திரச் சடங்குகளாகும். இத்தகைய மந்திரங்களைக் குறித்துக் குறிப்பிடும் பக்தவத்சல பாரதி, "இது உண்மையில் தொன்மை மக்களின் தொழில்நுட்பப் பற்றாக்குறையைப் போக்கத் தோன்றிய ஒரு கற்பனைத்(போலி) தொழில்நுட்பமாகும்; கற்பனைக்கலை(*pseudo art*) என்றே சொல்லலாம்"[2] எனக் குறிப்பிடுகிறார்.

மந்திரச் சடங்குகளை மக்கள் தங்கள் வாழ்க்கையின் அனைத்துத் தேவைகளையும் நிறைவேற்றிக் கொள்வதற்காக மேற்கொண்டனர். மந்திரச் சடங்குகள் வாழ்க்கை வட்டச் சடங்குகள் எனப்பட்ட பிறப்புச் சடங்கு, பூப்புச் சடங்கு, திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு போன்றவற்றின்போதும், மறுசுழற்சிச் சடங்குகளான மழைச் சடங்கு, வேட்டைச் சடங்கு, வளமைச் சடங்கு, விதைப்புச் சடங்கு போன்றவற்றின்போதும் செய்யப்பட்டன. பல நேரங்களில் இச்சடங்குகள் நிகழ்த்தப்படுவது கூட்டு முயற்சியாகவே இருந்துள்ளது. இச்சடங்குகள் சடங்கு செய்வோருக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் தருவதாக இருந்தது. மழைவேண்டியும், வேட்டையில் விலங்குகள் கிடைக்க வேண்டியும், நிலம் செழிக்க வேண்டியும், போரில் வெற்றி வேண்டியும் பல்வேறு சடங்குகளைச் செய்வதைச் சங்கப் பாடல்களில் காண முடிகிறது. அத்தகைய சடங்குகள் பலவற்றில் மந்திரங்களை உச்சரித்தல் என்பதும் மேற்கொள்ளப்பட்டதைச் சங்கப்பாடல்கள் சில வெளிப்படையாகக் குறிப்பிடுகின்றன. சடங்குகளை அடியொற்றியே மந்திரங்கள் இயங்குவதால் இவை ஒன்றுடன் ஒன்று தொடர்புடையனவாக விளங்குகின்றன.

பொருளாதாரப் பலனே தொடக்கக் கால மந்திரங்களின் நோக்கம்[3] என்ற கருத்துடைய பிரேசர் என்னும் மானிடவியலார் மந்திரத்தை, ஒத்த மந்திரம்(*homeopathic magic*) தொத்து மந்திரம்(*contagious magic*) என்று இரண்டாகப் பாகுபடுத்தி விளக்குவார். இதில் ஒத்த மந்திரம் 'ஒத்தது ஒத்ததை உருவாக்குகிறது' என்றும், தொத்து மந்திரம், 'ஒருமுறை தொடர்பு கொண்டது தொடர்ந்து தொடர்பு கொண்டேயிருக்கும்' என்றும் விளக்கப்படுகிறது.[4]

மேற்குறித்த பிரேசரின் பாகுபாடேயன்றி மந்திரங்களைத் தூய மந்திரம், தீயமந்திரம், உற்பத்தி மந்திரம், பாதுகாப்பு மந்திரம், அழிப்பு மந்திரம் என்றும் பாகுபடுத்துகின்றனர்.

### *4.1.6.1.* ஒத்தமந்திரம்

எத்தகைய விளைவு ஏற்படவேண்டும் என மனிதமனம் விருப்பப்படுகிறதோ அதற்கெற்றார்போல் அதற்காகச் செய்யப்படும் செயலும் ஒத்ததாக இருக்கும் இதன் அடிப்படையில் செய்யப்படுவதே ஒத்தமந்திரமாகும்.

---

[1] க. கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 73.

[2] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 245.

[3] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 247

[4] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 246

சங்கத் தொகைநூல் காட்டும் சமூகத்தில் இத்தகைய ஒத்தமந்திரச் சடங்குகள் நடைமுறையில் இருந்ததைப் பின்வரும் சான்றுகள் விளக்குகின்றன.

வலிமை வாய்ந்த இளங்காளைகள் இரண்டினைத் தம்முள் சண்டையிடச் செய்து, அவற்றில் வென்ற காளையினுடைய தோலையும் வீரத்தில் சிறந்த காளையினுடைய தோலையும் மயிர் சீவாது போர்த்தி உறுதியாகக் கட்டப்பட்டு போர் முரசு செய்யப்பட்டதை,

> "மண் கொள வரிந்த வைந்நுதி மருப்பின்
> அண்ணல் நல்ஏறு இரண்டு உடன் மடுத்து
> வென்றதன் பச்சை சீவாது போர்த்த
> திண் பிணி முரசம்"[1]

> "கொல் ஏற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த
> மாக்கண் முரசம்"[2]

எனவரும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இதில் வென்ற காளையின் தோலால் போர்த்தப்பட்ட முரசு போரில் வெற்றியைத் தரும், வீரத்தில் சிறந்த காளையின் தோலால் போர்த்தப்பட்ட முரசு வீரத்தை மிகுவிக்கும் என்கிற அடிப்படையில் அதாவது ஒத்தது ஒத்ததை உருவாக்குகிறது என நம்பப்பட்டது. இத்தகைய முரசுகளுக்குத் தினையினை இரத்தத்தோடு கலந்து தூவி குருதிப் பலியிட்டு நீராட்டப்பெற்றது.[3] எனவே இதனைப் பழஞ்சமூகத்தில் மேற்கொள்ளப்பட்ட ஒத்த மந்திரச் சடங்காகக் கருதலாம்.

### 4.1.6.2. தொத்து மந்திரம்

பண்டைத் தமிழர் திருமணத்தின்போது நீருடன் குளிர்ந்த இதழ்களை உடைய மலர்களை நெல்லுடன் கலந்து மணமகளின் தலையில் தூவினர். இச்சடங்கு குறித்து கா. சுப்பிரமணியன், "நீருடன் நெல்லுஞ்சேர்ந்து முளைவிடுதல் போல மணமகளும் பிள்ளைப்பேறு அடைவாள் என ஒத்த மந்திரமாக நெல்லும் பூவும் தூவப்பட்டன. இது மனித இனவிருத்தியும் பயிர்ச்செழிப்பும் அக்காலத்தில் தொடர்பு பட்டிருந்தற்குச் சான்றாகும். பிள்ளைப் பேறுடையவர்கள் வாழ்த்தினால் பிள்ளைப் பேறுண்டாகும் என்பதனைத் தொத்து மந்திரமாகவும் கொள்ளலாம்"[4] எனக் குறிப்பிடுவது இங்கு மனங்கொள்ளத்தக்கது. மேலும் "கொற்றவையாக எயினர் குலக்குமரி கோலங்கொண்டாள். அவளுக்குரிய அணிகலன்களான புலிப்பல், பன்றித்தந்தம், புலித்தோல், பாம்புக்கயிறு, யானைத்தோல் ஆகியவை தொத்து மந்திரத்தால் அவளது ஆற்றலை மிகுவிப்பவையாகும். இவை, மூர்க்கமிக்க அவ்விலங்குகளின் ஆற்றலைக் கண்டு எடுக்கப்பட்டவை. அவ் ஆற்றல் இவற்றை அணிந்திருப்போருக்கு வந்து சேரும் என்னும் நம்பிக்கையின் அடிப்படையாகும்"[5] என்ற தொத்துமந்திரம் தொடர்பான கருத்தும் கவனிக்கத்தக்கது.

### 4.1.6.3. தூய மந்திரம்

தூய மந்திரம் தனிமனிதன் நலனுக்காகவும் சமுதாயத்திலுள்ள அனைவரின் நலனுக்காகவும் பயன்படுத்தப்படுகிறது. விலங்குகள் கிடைக்கவும், விளைச்சல்

---

[1] புற. 288:1-4
[2] மது. 732-733
[3] பதி. 19:6-7
[4] கா. சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், ப. 34
[5] கா. சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், ப. 23

பெருகவும், போரில் வெற்றி பெறவும், நோய்களைத் தீர்க்கவும் தூய மந்திரம் பயன்படுத்தப்படுகிறது.[1] எனக் குறிப்பிடுவர். இத்தகைய சடங்கு நிகழ்வுகளைச் சங்கப் பாடல்களில் காணலாம்.

ஆமானின் மார்பிடத்தே பாய்ந்து தங்காது குறிதவறி நீங்கிவிட்ட அம்பின் போக்கை நினைந்து கானவன் "இம்மலையில் தெய்வம் தோன்றி நின்றது. மழை பெய்தால் அத்தெய்வத்தின் வீறு தணியுமாகலின் மலையை மழைவந்து சூழ்வதாக" என்று சுற்றத்தோடு வழிபடும் பொருட்டு கடவுளுக்குப் பலி இட்டான்.[2] எனக் குறிப்பிடும் நற்றிணைப் பாடல் கருத்து வேட்டையில் விலங்குகள் கிடைக்கவேண்டும் எனக் கருதி சமூக நன்மைக்காக மேற்கொள்ளப்பட்ட தூய மந்திரமாகக் கருதலாம்.

#### 4.1.6.4. பாதுகாப்பு மந்திரம்

இயற்கையின் கொடூரங்களிலிருந்து பாதுகாத்துக்கொள்ள பாதுகாப்பு மந்திரம் பயன்படுத்தப்படுகிறது. போரில் புண்பட்ட வீரனைப் பேய்கள் அனுகாதவாறு காப்பதற்காக இரவ மரத்தின் தழையுடன் வேம்பின் இலையைச் சேர்த்து வீட்டில் செருகினர். யாழிசையோடு கூடிய பல இசைக் கருவிகளை முழக்கினர். மையினை இட்டனர், வெண் சிறு கடுகைத் தூவினர், குழலை ஊதினர், மணியை ஒலித்தனர், காஞ்சிப்பண் பாடினர், அகில் முதலான வாசனைப் பொருட்களைப் புகைத்தனர் எனப் புறநானூறு[3] பேய்களை விரட்டுவதற்காகச் செய்த சடங்குபற்றி குறிப்பிடுகிறது. இச்சடங்கும் பாதுகாப்பு கருதி செய்யப்பட்ட மந்திரச் சடங்கு எனக் கருதலாம்.

#### 4.1.6.5. உற்பத்தி மந்திரம்

பசுக்கூட்டத்தைக் கவர்ந்து கொண்ட வெட்சிவீரர்கள் தெய்வம் உறைவதாகக் கருதிய பருத்த அடிமரத்தைக் கொண்ட வேப்பமரத்தடியில், கவர்ந்துகொண்டு வந்த பசுக்களுள் கொழுத்த பசுவைக் கொன்று, அதன் குருதியை மரத்தின்மேல் தெளித்துப் பலியிட்டதை அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது.[4] இது ஒரு குழுவின் பொருளியலோடு தொடர்புடையதாக இருப்பதால் இதனை உற்பத்தி மந்திரமாகக் கொள்ளலாம்.

#### 4.1.6.6. மந்திரம் உச்சரித்தல்

திருமுருகாற்றுப்படையில் தெய்வமாடும் குறப்பெண் தான் நிகழ்த்தும் வெறியாட்டுச் சடங்கில் மந்திரத்தை மறைவாக ஓதியதைப்பற்றி,

> "நெய்யோடு ஐயவி அப்பி, ஐதுஉரைத்து,
> குடந்தம் பட்டு, கொழுமலர் சிதறி"[5]

எனவரும் திருமுருகாற்றுப்படை அடிகளில் 'ஐதுரைத்து' என்பது தான் வழிபடுதற்குரிய மந்திரத்தைத் தோன்றாமல் உரைத்து எனக் குறிப்பிடப்படுவது நோக்கத்தக்கது.

---

[1] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 247
[2] நற். 165:1-5
[3] புற. 281
[4] அக. 309:1-6
[5] திரு. 228-229

முரசுறை கடவுளை வழிபடுவோன் பிண்டச் சோற்றினைக் கையில் வைத்துக்கொண்டு மந்திரத்தைச் சினத்தோடு உச்சரித்தான் என்பதை,

> "கடுஞ் சினம் கடாஅய், முழங்கும் மந்திரத்து
> அருந் திறல் மரபின் கடவுள் பேணியர்,
> உயர்ந்தோன் ஏந்திய அரும் பெறல் பிண்டம்"[1]

எனவரும் பதிற்றுப்பத்துப் பாடலடிகளும் குறிப்பிடக் காணலாம். அந்தணர் இயற்றும் வேள்விகளிலும் மந்திரம் உச்சரிக்கப்பட்டதை,

> "மந்திர விதியின் மரபுளி வழாஅ
> அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே"[2]

எனவரும் திருமுருகாற்றுப்படை அடிகளும் குறிப்பிடுகின்றன. இது மந்திரச்சடங்குகள் அனைத்துப் பண்பாட்டைச் சேர்ந்த மக்களிடமும் காணப்பட்ட ஒன்று என்பதை அறியத் துணைநிற்கின்றது.

### 4.1.6.7. பிற

"ஆரம்பத்தில் குரவை, துணங்கை ஆகிய கூத்துக்களும் மந்திரச் சடங்குகளாக இருந்து இருக்கவேண்டும். நாளடைவில் அவற்றோடு தொடர்புடைய மந்திரம் மறைந்து வெறும் சடங்குகளாகக் குழு நடனங்களாகக் காட்சி அளித்திருக்க வேண்டும்"[3] என்ற ம. பார்வதியம்மாளின் மந்திரச்சடங்கு தொடர்பான கூற்றும் மனங்கொள்ளத்தக்கது. இக்கூற்றிற்கு ஏற்ப சங்கப் பாடல்களில் ஆணும் பெண்ணுமாய் பல்வேறு நிகழ்வுகளில் குரவையாடுவதாகக் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது.[4]

பழங்காலத்தில் மழை வேண்டியும், வளமை வேண்டியும் செய்யப்பட்ட பல்வேறு சடங்குகளில் ஆண்களைவிடப் பெண்களே முதன்மை பெற்றிருந்தனர். இதற்கு, வெறியாட்டு நிகழ்த்தும் குறமகள்,[5] தெய்வமேறி ஆடும் புலைத்தி,[6] திருமணச் சடங்குகளை நிகழ்த்தும் பெண்கள்[7] ஆகியோரைச் சான்றாகக் கூறலாம்.

### 4.1.7. பேய்விரட்டும் சடங்கு

பேய்பற்றிய நம்பிக்கை சமூகத்தில் நீண்டநெடுங்காலமாகவே நிலவிவருகிறது. இந்நம்பிக்கை சங்க இலக்கியம் காட்டும் சமூகத்திலும் இருந்தது. பழந்தமிழ் மக்கள் போரில் புண்பட்டவர்களைப் பேய்கள் தீண்டாவண்ணம் காக்க இரவமரத்தின் தழையுடன் வேம்பின் இலையைச் சேர்த்து வீட்டில் செருகினர். மைவிழுது கொண்டு வீட்டை ஒப்பனை செய்தனர். யாழிசையோடு கூடிய பல்வேறு இசைக்கருவிகளை முழக்கினர். வெண்சிறு கடுகைத் தூவினர். ஆம்பல் குழல் ஊதினர். மணியை ஒலித்தனர். காஞ்சிப்பண் பாடினர். அகில் முதலானவற்றைப் புகைத்தனர் என இச்சடங்கினைப்பற்றிப் புறநானூறு[8] குறிப்பிடுகிறது.

---

[1] பதி. 30:33-35
[2] திரு. 95-96
[3] மா. பார்வதியம்மாள், அகநானூறு காட்டும் மக்கள் வாழ்க்கை, ப. 158.
[4] அக .118:1-4, 232:9-10
[5] திரு. 227-244
[6] புற .259:5-6
[7] அக. 86:1-17
[8] புற. 281

#### *4.1.8. பலிச் சடங்குகள்*

*மனித சமூகத்தில் மிகத் தொன்மையான காலம்தொட்டு பலியிடல் என்னும் வழக்கம் உலகின் பல்வேறு பகுதிகளில் வாழும் பல இனத்தைச் சார்ந்த மக்களிடம் இருந்துவருகின்றது. இவ்வழக்கம் ஒரு குறிப்பிட்ட மதம், சாதி, இனம், குலம் என்ற குறுகிய எல்லைகளையும் வேறுபாடுகளையும் கடந்து உலகில் வாழும் அனைத்து மனித சமூகத்தவர்களாலும் பின்பற்றப்பட்ட ஒன்றாக இன்றும் இருந்து வருகின்றது. குறிப்பாக நாட்டார் சமய வழிபாட்டில் இவ்வழக்கம் இன்றும் நடைமுறையில் இருப்பது கவனிக்கத்தக்கது.*

*பொதுவாக உயிர்பலி இடுதல் பற்றிய நம்பிக்கை, தாம் வணங்கும் தெய்வங்களைத் திருப்திப்படுத்துவதற்காகவும், அவற்றின் சீற்றத்தைத் தணிப்பதற்காகவும், தீய ஆவிகளைக் கட்டுப்படுத்துவதற்காகவும், அவற்றின் பாதிப்பிலிருந்து காத்துக்கொள்வதற்காகவும், தம் எண்ணம் ஈடேற வேண்டும் என்பதற்காகவும், தங்கள் ஆற்றலைப் புதுப்பித்துக் கொள்வதற்காகவும் மக்களால் பின்பற்றப்பட்ட வழக்கமாக இருந்துவருகிறது.*

*சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி ‘பலி’ என்னும் சொல்லிற்கு, யாகம் முதலியவற்றில் தேவர், பிதிரர் முதலியோரை உத்தேசித்து இடும்உணவுப்பொருள்; பலியிடுதற்குரிய பிராணி முதலியன; காக்கை முதலிய பிராணிகள் உண்ண இடுஞ் சோறு; பிச்சை; சோறு; பூசையில் அர்ச்சிக்கும் பூ முதலியன; சாம்பல்; திருநீறு; கப்பம்; கிராமதேவதைகளுக்குப் பலியிடுவதன்பொருட்டு விடப்பெற்ற மானியம் எனப் பொருளுரைக்கின்றது.*

*சங்கப் பாடல்களில் ‘பலி’ என்னும் சொல் பலிச்சோறு, காக்கைக்கு இடும் பலிச்சோறு, கடவுள் பூசையில் அர்ச்சிக்கப்படும் பூ, தெய்வங்களுக்கு இடப்பெறும் படையல், தெய்வத்திற்குப் பலியிடப்படும் விலங்கு ஆகியவற்றைக் குறித்து பயின்று வந்துள்ளதை அறிய முடிகிறது.*

*மேற்குறித்தவாறு சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள பலி குறித்தான செய்திகள் அனைத்தும் தெய்வ வழிபாட்டோடு தொடர்புடையவையாகக் காணப்படுகின்றன. அத்தகைய தெய்வ வழிபாட்டில் மலர், தேன், கள், விலங்கு முதலியன பலியிடப்பட்டதையும் அவை காட்டுகின்றன.*

*அதுமட்டுமின்றி பலிச் சடங்குகளில் ஆணினம் பலிகொடுக்கப்படுவது குறித்து பக்தவத்சல பாரதி, “தமிழ் மண்ணுக்கான பண்பாட்டுப் படிமலர்ச்சியில் தந்தைத் தலைமைச் சமூகத்தில் ஆண் வக்கிரத்தின் ஒடுக்குதல் குறியீடாய்ப் பெண்கள் மாறினர். சமூக ஒடுக்குதலில் ஆவேச நிலையில் தெய்வமடைந்த பெண்கள் தங்களின் ஒடுக்கப்பட்ட ஆழ்மன வெளிப்பாடாக ஆண் குறியீடுகளை உயிர்ப்பலிகளாகப் பெற்றனர். ஆண்மகன்(மனிதப்பலி), ஆண் எருமை, ஆண் ஆடு(கிடா), ஆண் கோழி(சேவல்) என்ற வரிசையில் ஆண்கள் குறியீடாய்ப் பலிகொள்ளப் பட்டனர்”[1] எனக் குறிப்பிடுவது இங்கு நோக்கத்தக்கது.*

#### *4.1.8.1. பலியுணவு*

*மக்கள் தெய்வங்களுக்குப் படையலிடுவதை மிகத் தொன்மைக் காலத்திலிருந்தே பின்பற்றி வருகின்றனர். பலியுணவைக் காக்கைகளுக்கு இடுவது பெரு வழக்காக இருந்தது.[2] சங்க இலக்கியப் பாடல்களில் ஆலமரத்தில் உறையும்*

---

*[1] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், பக்.294- 295*

*[2] குறு. 210; பொரு. 183-184*

கடவுளுக்குப் படையலிட்டுவைத்த பலியுணவைக் காக்கைகள் உண்பதைக் குறித்தும்,[1] அவ்வாறு தெய்வத்திற்கு இட்ட பலியுணவு கருணைக்கிழங்கின் பொரியலோடு செந்நெல்லாற் சமைத்த வெண்மையான சோற்றுணவாக இருந்ததையும்[2] அவற்றில் ஊன் துண்டங்களும் கலந்திருந்ததை,

> “நல்வகை மிகுபலிக் கொடையோடு உகுக்கும்
> அடங்காச் சொன்றி, அம் பல் யாணர்
> விடக்குடைப் பெருஞ் சோறு”[3]

எனக் குறிப்பிடப்படுவனவற்றைக்கொண்டு அறியமுடிகின்றது.

தெய்வங்கள் பலி பெறும் தன்மையுடையன என மக்கள் நம்பினர். “பலிபெறு கடவுட் பேணி”[4], “கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப் பலிகண் மாறிய பாழ்படு பொதியில்”[5] எனவரும் பாடலடிகள் இதனைக் காட்டும். ஊரின் வாயிலிடத்து தெய்வம் உறைவதாக நம்பிய மக்கள் அவற்றுக்குப் பலியிட்டனர்.[6] சுவரில் சித்திரமாக எழுதப்பெற்ற கடவுளுக்கும் பலியிடப்பெற்றது.[7] மலையில் உறையும் அணங்குக்குச் சிறுகுடியில் உள்ளோர் பலியிட்டனர்.[8]

#### 4.1.8.2. பலியிடப்பட்டதன் நோக்கம்

மக்கள் பயன் கருதி பலி(படையல்) இட்டனர். படையல்கள் விடியல் பொழுதில் இடப்பெற்றதை, “நாட்பலி”[9] என்றே பல இடங்களிலும் குறிப்பிடப்படுகின்றன .மலைப்பகுதிகளில் வாழ்ந்த குறவர்கள் மழையற்ற காலத்தில் தெய்வத்திற்குப் பலிதூவி மழையை வேண்டினர். இதனை,

> “மலை வான் கொள்க! என, உயர் பலி தூஉய்
> மாரி ஆன்று, மழை மேக்கு உயர்க!' எனக்
> கடவுள் பேணிய குறவர் மாக்கள்”[10]

எனச் சுட்டப்படுவது கொண்டு தெளியலாம். போரில் மாண்ட வீரனின் நடுகல்லிற்கு விடியற்காலையில் பலியைத் தந்து வழிபட்டதை, “புடைநடு கல்லின் நாட்பலி ஊட்டி”[11] எனப் புறநானூறும், ஆறலை கள்வர் நடுகல் தெய்வத்திற்கு நாட்பலியிட்டு வழிபாடு செய்ததை, “நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்”[12] என அகநானூறும் குறிப்பிடுகிறது. மேலும் மன்னர்கள் போரில் வெற்றிவேண்டித் தங்கள் அரண்மனை முற்றத்தில் சோற்றுத்திரளைத் தூவித் தெய்வத்தை வழிபட்டதைப் புறநானூறு, “காவல் மன்னர் கடைமுகத்து உகுக்கும் போகுபலி வெண்சோறு”[13] எனக் குறிப்பிடுகிறது.

பேய்கள் பலி கொள்ளும் இயல்பின[14] என மக்கள் கருதினர். அத்தகைய பேயினால் பற்றப்பட்டோர் அது தன் உயிரைக் கொள்ளாமல் இருக்க வேண்டி பலி இட்டனர். அப்பலியினை ஏற்றுக்கொண்டு பேய் நீங்கியதை, “பலி கொண்டு பெயரும் பாசம் போல”[15] என்ற பதிற்றுப்பத்துப் பாடலடி சுட்டுகிறது.

சூள் பொய்த்தால் தெய்வங்கள் வருத்தும் என நம்பினர். அத்தகைய வருத்தும் தெய்வங்களிடமிருந்து தம்மைக் காத்துக்கொள்ள வேண்டி கடவுளுக்குப் பலிதூவி வணங்கினர்.[16]

---

[1] நற். 343:4-5, 281:1
[2] நற். 367:1-5
[3] நற். 281:4-6
[4] நற். 251:8
[5] புற. 52:12-13
[6] அக. 166:7; பட். 179
[7] அக. 167:15-16, 369:8
[8] கலி. 52:9-10
[9] அக .287:6
[10] புற. 143:1-3
[11] புற. 392:9
[12] அக. 289:3
[13] புற. 331:11-12
[14] கலி. 65:17-18
[15] பதி. 71:23
[16] நற். 358:1-7

தலைவியின் நோய் தணிய, நீர்துறையில் நிலைபெற்ற கடவுளுக்கு வெள்ளாட்டுக் கிடாய் பலியிடப்பட்டதை அகநானூற்றுப் பாடல் கூறுகின்றது[1]. மணநாள் விரைந்து வருவதற்காக வேண்டி மனையுறை தெய்வத்திற்குப் படையல் இடப்பெற்றதை,

> "வல்லே வருக, வரைந்த நாள்!" என,
> நல் இறை மெல் விரல் கூப்பி,
> இல் உறை கடவுட்கு ஆக்குதும், பலியே!"[2]

என்றும், போர் முனையில் பகைவரை வென்று அவர்தம் பசுக்கூட்டத்தை ஆனேறுடன் கவர்ந்துகொண்டு வந்தமைக்காக விடியற்காலத்தில் கள்ளினைப் பலியாகக் கொடுக்கப்பட்டதை,

> "இகல் முனைத் தரீஇய ஏறுடைப் பெரு நிரை
> நனை முதிர் நறவின் நாட் பலி கொடுக்கும்"[3]

என்றும் வரும் அகநானூறுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. வான் பொய்த்தமையால் தினமும் விடியற் காலப் பொழுதில் இடுகின்ற விடியற் காலப் பலியை இடாது மறந்தனர் என்றும், அதனால் பலிபீடம் பொலிவின்றிப் பாழ்பட்டுக் கிடந்தது[4] என்றும் அகப்பாடலொன்று அன்றாடம் பலியிட்டுப் படையல் செய்த வழக்கத்தைக் குறிப்பிடுகிறது.

இத்தகைய பலிச் சடங்கை நிகழ்த்துவோர் குறித்து, இழிபிறப்பாளனால் இறப்புச் சடங்கில் உப்பு இல்லாமல் வேகவைத்த சோறு படையலாகப் படைக்கப்பெற்றதையும்,[5] வயது முதிர்ந்த குயவன் நொச்சி மாலைசூடிப் பலியிடும் சடங்கை மேற்கொண்டதையும், பொது மன்றத்தில் அவன் இடுகின்ற பலியை உண்ணுதற்காகத் தெய்வங்களையும் காக்கைகளையும் அழைப்பதையும்"[6] சங்கப் பாக்கள் தெரிவிக்கின்றன.

#### 4.1.8.3. முரசுக்குப் பலியிடல்

முரசிற்குப் பலியிடப்பெற்றது, இதனை, "பலிபெறு முரசம்"[7] என்றும், அம்முரசிற்குத் தரப்பெற்ற பலி குருதிப் பலியாக இருந்ததை, "குருதிவேட்கை உருகெழு முரசம்"[8] என்றும் புறநானூறு குறிப்பிடுகிறது.

முரசிற்கு அரிய பலிக்குரிய பொருள்களைத் தூவி வணங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.[9] என்றும், முரசுறை கடவுளை வணங்கும் பொருட்டு, வழிபடுவோன் பெறுதற்கரிய பிண்டத்தினைத் தன் கையில் ஏந்தி நின்றான். அதனைக் கண்டு பேய்மகள் நடுங்கியது, எறும்பும் மொய்க்காத முரசுறை கடவுளுக்குப் பலியாக இட்ட பிண்டத்தைக் காக்கையும் பருந்தும் உண்டன.[10] என்றும் பதிற்றுப்பத்து முரசுறைக் கடவுளுக்குப் பலியிடப்பட்டது குறித்துக் குறிப்பிடுகிறது.

#### 4.1.8.4. உயிர்ப்பலி இடுதல்

தொடக்கத்தில் படையல் அல்லது படையலிடப்படும் பொருளைக் குறித்த பலி என்ற சொல் பிற்காலத்தில் உயிர்ப்பலி என்பதைக் குறிப்பிடுவதாக அமைந்துவிட்டது. உயிர்ப்பலி இடுகின்ற முறையே தொடக்கக்காலத்தில்

---

[1] அக15-156:14 .
[2] அக. 282:18
[3] அக. 213:6-7
[4] அக .287:5-6
[5] புற. 363:10-15
[6] நற் .293
[7] புற. 362:3
[8] புற. 50:5
[9] பதி. 17:3-7
[10] பதி. 30:33-40

தெய்வத்தின் சீற்றத்தைப் போக்கக் கையாண்ட வழிபாட்டு முறைகளில் தொன்மையானது என மானிடவியல் ஆய்வாளர்கள் குறிப்பிடுவர்.

முருகு அணங்கியதால் நேர்ந்த நோய் நீங்கவேண்டி வேலன் நிகழ்த்தும் வெறியாட்டுச் சடங்கில் துடி முதலிய இசைக்கருவிகள் ஒலிக்கப் பலவகையான பூக்களைத்தூவித் துதித்து ஆட்டினைப் பலியிடுவதை,

> ''நல் நுதல் பசந்த படர் மலி அரு நோய்
> அணங்கு என உணரக் கூறி, வேலன்
> இன் இயம் கறங்கப் பாடி,
> பல் மலர் சிதறிப் பரவுறு பலிக்கே''[1]

என்ற நற்றிணைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இத்தகைய வெறியாட்டுச் சடங்கில் பல்வேறுபட்ட பண்ணியப் பொருள்களைத் தினை அரிசிச் சோற்றுப்பலியுடன் ஆட்டுக்குட்டியைக் கொன்று அதன் குருதியை முருகு அணங்கிய பெண்ணின் நெற்றியில் தடவி வழிபாடு நிகழ்த்தியதை,

> ''பல் வேறு உருவின் சில் அவிழ் மடையொடு,
> சிறு மறி கொன்று, இவள் நறு நுதல் நீவி,
> வணங்கினை கொடுத்திஆயின்''[2]

> ''மத வலி நிலைஇய மாத் தாள் கொழு விடைக்
> குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
> சில் பலிச் செய்து''[3]

> ''களம் நன்கு இழைத்து, கண்ணி சூட்டி,
> வள நகர் சிலம்பப் பாடி, பலி கொடுத்து,
> உருவச் செந்தினை குருதியொடு தூஉய்,
> முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு நடு நாள்''[4]

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இவ்வழிபாட்டில் உயிர்ப்பலியாக ஆட்டின்குட்டி பலியிடப்பட்டதை, ''சிறுமறி கொன்று''[5] எனச் சுட்டப்படுவது கவனிக்கத்தக்கது. இவ்வாறு வெறியாட்டில் பலியிடுதல் தெய்வத்தின் சீற்றத்தைத் தணிப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட சடங்குமுறையாகக் கருதலாம்.

பகைவரின் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துவந்த இவர்கள் தம்மோடு போரிட்ட கரந்தை வீரர்களை வாள்கொண்டும் அம்பு தொடுத்தும் நெடுந்தொலைவு விரட்டியபின்னர், தெய்வம் வாழும் பருத்த அடிமரத்தைக்கொண்ட வேப்பமரத்தடியில், கவர்ந்துவந்த பசுக்களுள் கொழுத்த பசு ஒன்றைக் கொன்று அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்துப் பலியிட்டு, அதன் புலாலைச் சமைத்து உண்டனர்.[6] இது தமது வெற்றிக்குக் காரணமான தெய்வம் அம்மரத்தில் உறைவதான நம்பிக்கையில் அவர்கள் மேற்கொண்ட வழிபாட்டுச்சடங்கு என்பதை அறியமுடிகிறது.

---

[1] நற். 322:9-12
[2] குறு. 362:3-5
[3] திரு. 232-234
[4] அக. 22:8-11
[5] குறு. 362:4
[6] அக. 309:1-6

மேற்குறித்த வெறியாட்டுச் சடங்கு முருகனுக்குப் பலியிட்டுப் பாடிப் பரவுக்கடன் செய்தால் நோய் நீங்கும் என்ற நம்பிக்கையின்பாற்பட்ட ஒன்றாக இருந்ததை அறியமுடிகிறது.

மறவர்கள் நடுகல் தெய்வத்தை வழிபடுவதற்காக அக்கல்லில் மயிற்றோகைகளைச் சூட்டி, துடியை முழக்கி நெல்லால் ஆக்கிய கள்ளோடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுத்தனர். இதனை, "தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்"[1] என அகநானூறு சுட்டுகிறது.

#### 4.1.8.5. மலர்ப்பலி

மனித நாகரிக வளர்ச்சியில் உயிர்ப்பலியிடுதல் என்ற நிலைமாறி மலர்ப்பலியாக மாற்றம் பெற்றது. பழமையான மன்றங்களில் உறையும் தன்மையுடைய பேய்கள்[2] மலர்ப்பலி உண்பதற்காகத் தான் வாழும் பாழான மன்றத்தை இடித்துக்கொண்டு எழும் என்பதை,

> "வேனில் முருக்கின் விளை துணர் அன்ன
> மாணா விரல வல் வாய்ப் பேஎய்
> மல்லல் மூதூர் மலர்ப் பலி உணீஇய"[3]

எனச் சுட்டுவதைக்கொண்டும், கடவுளுக்குப் பூவை பலியாகப் போட்டு அர்ச்சிப்பதை "பூப்பலி விட்ட கடவுள்"[4] என்றும், முருகனுக்கு எடுக்கும் வெறியாட்டுப் பூசையில் அர்ச்சிக்க பூக்கள் பயன்படுத்தப்பெற்றதை, "விரவுப்பூம் பலியொடு விரைஇ"[5] என்றும் குறிப்பிடுவதைக்கொண்டு அறியமுடிகிறது.

#### 4.1.8.6. தேன் பலி

குறமகள் வேங்கை மரத்தின் மலர்களைப் பறித்து அவற்றைத்தூவி, மலையை உறைவிடமாகக்கொண்ட தம் குடித்தெய்வத்திற்குத் தேனாகிய பலியைக் கொடுத்து வழிபட்டனர்[6] என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

#### 4.1.8.7. அவிப்பலி

அவிப்பலி என்றால் உயிரைப் பலியாகக் கொடுத்தல் என்பது பொருள். ஆவிப்பலி என்பது முதல் குறுகி அவிப்பலி என ஆனது என்பர். மனித உயிர் பலியிடப்பட்டது குறித்து புறப்பொருள் வெண்பாமாலை, வாகைப்படலம்

> "வெள்வாள் அமருள் செஞ்சோறு அல்லது
> உள்ளா மைந்தர் உயிர்ப்பலி கொடுத்தன்று"[7]

எனக் கடுமையான வாட்போரில் அரசனுக்காகச் செஞ்சோற்றுக் கடன் கழித்தலை அன்றிப் பிறவற்றை நினைக்காத வீரர்கள் தம் உயிரைப் பலியாகக் கொடுத்தல் என்பதைப்பற்றிக் குறிப்பிடுகிறது. சங்க இலக்கியத்தில் பதிற்றுப்பத்து[8] அயிரை மலையில் வாழும் கொற்றவைக்கு வீரர் தம் மார்பினைக்கிழித்து இரத்தத்தைப் பலியாக இட்டதைக் குறிப்பிடுகிறது.

---

[1] அக. 35:9
[2] மது. 161-163
[3] நற். 73:1-3
[4] கலி. 93:24
[5] அக. 232:12
[6] ஐங். 259:1-4
[7] புறப்பொருள் வெண்பாமாலை, வாகைப்படலம், கொளு. 29
[8] பதி. 79:16-18

பாலைநிலத்தில் வாழ்ந்த எயினர்கள் கொற்றவை தந்த வெற்றிக்கு நன்றிக்கடனாகத் தங்களையே பலிகொடுத்த நிகழ்வைச் சிலப்பதிகாரத்தில் வரும் வேட்டுவரிப்பாடல்கள்

> "அடல் வலி எயினர் நின் அடி தொடு கடன் இது
> மிடறு உகு குருதி; கொள், விறல் தரு விலையே"[1]

> "கண நிரை பெறு விறல் எயின் இடு கடன் இது,
> நிணன் உகு குருதி; கொள், நிகர் அடு விலையே"[2]

> "துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய
> வெடிபட வருபவர் எயினர்கள் அரையிருள்
> அடுபுலி யனையவர் குமரிநின் அடிதொடு
> படுகடன் இதுவுகு பலிமுக மடையே"[3]

எனக் குறிப்பிடுவதைக் கொண்டு அறியமுடிகிறது. போரில் பாண்டவர்கள் வெற்றி பெறுவதற்குக் காளி அருள் வழங்க வேண்டும் என்பதற்காக அரவான் தன்னையே பலி கொடுத்ததை மகாபாரதமும் குறிப்பிடுகிறது.

"பண்பாட்டுப் படிமலர்ச்சியின் ஒரு கட்டத்தில் முதன்மைக் கூறாகத் திகழ்ந்த கூறுகள் வேறு படிமலர்ச்சிக் கட்டங்களைக் கடக்கும்போது எச்சக் கூறுகளாக மாறி இறுதியில் அற்றுப்போகும் நிலையும் அடையும்"[4] என்ற நிலையைச் சங்க இலக்கியங்களில் கூறப்படும் உயிர்ப்பலி குறித்தான சடங்குகளில் காண முடிகிறது. ஒரு காலத்தில் மனித உயிர் பலியிடப்பட்டதற்கு மாற்றாக வேறு ஒரு காலக் கட்டத்தில் சடங்குப் பொருள்களில் ஏற்பட்ட மாற்றத்தால் மனித உயிருக்குப் பதிலாக விலங்குகளின் உயிர் பலியிடப்பட்டதை ஒரு படிநிலை மாற்றமாக உணரமுடிகிறது. இதனை மேற்குறித்த சான்றுகள் விளக்கும்.

### 4.1.9. உயிர்ப்பாற்றல் வழிபாடு

தமிழர்கள் தங்களுக்கெனத் தனித்த வழிபாட்டு மரபைக்கொண்டு திகழ்கின்றனர். இம்மரபு காலந்தோறும் பல்வேறு மாற்றங்களுக்கு உட்பட்டு இன்றுவரை தொடர்ந்து வருகிறது. சமயம் நிறுவனப்படுத்தப்படாத காலத்தில் இயற்கையையும், அச்சத்தை விளைவித்த உருவப் பொருட்களையும் அருவப் பொருள்களையும் பேராற்றல் படைத்தனவாகக் கருதி மக்கள் வழிபடத் தொடங்கினர்.

"இயற்கைப் பொருட்களிலும் பௌதிகப் பொருட்களிலும் உறைந்துள்ள ஆவிகள் ஆற்றல் மிகுந்தவை; அவையே மனித வாழ்வுக்குக் காரணமாக அமைகின்றன எனத் தொல்பழங்கால மக்கள் நம்பி ஆவிகளை வழிபட்டனர் என்றும் இவ் ஆவி வழிபாடே சமயம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தது" என்று E.B. டைலர் என்ற மானிடவியலறிஞரும், "பௌதிகப் பொருட்களில் எப்போதாவது வந்து தற்காலிகமாகச் சிலகாலம் உறைந்து ஊக்கப்படுத்தும் உயிர்ப்பாற்றலை (animatism) மக்கள் வழிபட்டனர். இவ்வழிபாடே சமயம் தோன்றுவதற்குக் காரணம்" என்று ஆர்.ஆர். மாரட் என்ற மானிடவியல் அறிஞரும்

---

[1] சிலம்பு. வேட்டுவ வரி, 6:17:3-4
[2] சிலம்பு. வேட்டுவ வரி, 6:18:3-4
[3] சிலம்பு. வேட்டுவ வரி, 6:19
[4] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 288

குறித்துள்ளனர். மேலும், இயற்கையில் பேராற்றல் பெற்று விளங்கிய சூரியன், நிலவு, மலை, ஆறு, கடல், மழை, மரம் போன்றன மனித வாழ்வில் வழிபாட்டிற்குரியதாக விளங்கின. தொல் குடிகள் மேற்கொண்ட இத்தகைய 'இயற்கை வழிபாட்டிலிருந்தே தொல் சமயம் தோன்றியது என மேக்ஸ் முல்லரும் குறிப்பிடும் சமயத்தின் தோற்றம் குறித்தான கருத்திற்கு ஏற்ப உலகில் பல்வேறு தொல்குடிச் சமூகங்களுக்கிடையே காணப்பெற்ற இத்தகைய வைதீகச் சார்பற்ற தொல் சமய உயிர்ப்பாற்றல் வழிபாடு பண்டைத் தமிழர்களால் 'அணங்கு', 'சூர்' என்னும் பெயர்களால் சுட்டப்பெற்று வழிபடப்பெற்று வந்துள்ளன.

#### 4.1.9.1. அணங்கு, சூர் – விளக்கம்

தமிழ் இலக்கியங்களில் அணங்கு என்னும் சொல் தீண்டிவருத்தும் தெய்வப்பெண்; தெய்வப்பெண்; பத்திரகாளி; தேவர்க்காடும்கூத்து; அழகு; விருப்பம்; மயக்கநோய்; அச்சம்; வருத்தம்; கொலை; கொல்லிப்பாவை; பெண்; வடிவு என்ற பொருளிலும், சூர் என்னும் சொல், அச்சம்; துன்பம்; நோய்; கடுப்பு; வஞ்சகம்; கொடுமை; கொடுந்தெய்வம்; தெய்வப்பெண்; மிளகு; வால்மிளகு; சூரபதுமன்; வீரம்; அஞ்சாமை; சூரியன் என்ற பொருளிலும் எடுத்தாளப்பெற்று வந்துள்ளன. இங்குச் சங்கப்பாக்களில் பயின்று வந்துள்ள தீண்டிவருத்தும் இயல்புடைய தெய்வம் என்ற பொருண்மையில் அமைந்த 'அணங்கு', 'சூர்' என்பன கவனத்துக்குள்ளாக்கப் பெற்றுள்ளன.

#### 4.1.9.2. அணங்கின் இயல்பு

அணங்கு, சூர் என்னும் தெய்வங்கள் உயிர்களைத் தீண்டி வருத்தும் இயல்புடையன. எனவே இது 'அருள் இல் அணங்கு'[1] எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தெய்வங்களால் அணங்கப்பெற்று ஆவேசம் வரப்பெற்றோர் துள்ளி ஆடுபவர்களாகவும், நடுக்குற்று நிற்பவர்களாகவும் காணப்பட்டதை, 'முருகு மெய்ப்பட்ட புலைத்தி போல, தாவுபு தெறிக்கும் ஆன்'[2], 'சூர் நசைந்தனையையாய் நடுங்கல் கண்டே'[3], 'சூர் உறு மஞ்ஞையின் நடுங்க'[4], 'சூர்பனிப்பு'[5] எனவரும் சங்கப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

#### 4.1.9.3. உறையுமிடங்கள்

தொல்குடி மக்கள் ஆரம்ப காலத்தில் மலையுச்சிகளிலும், காடுகளிலும் நீர்நிலைகளை ஒட்டியும் வாழ்ந்த காலத்தில் இயற்கையின் அதீத ஆற்றலைக் கண்டு அஞ்சி அவற்றில் தெய்வங்கள்(அணங்கு, சூர்) உறைவதாக நம்பி வழிபட்டனர்.

அணங்கும் சூரும் நீர்த்துறைகளில் உறைவதை, 'உண்துறை அணங்கு இவள்'[6], 'அணங்குடை முந்நீர்'[7], 'அணங்குடைப் பனித்துறை'[8], 'பெருங்கடல் பரப்பின் அமர்ந்துறை அணங்கோ'[9], 'சூர் சுனை'[10], 'நிறைசுனை உறையும் சூர்மகள்'[11] என வருவனவும், மலைகளில் உறைவதை, 'அணங்குடை நெடுவரை'[12], 'அணங்குடைக் கவான்'[13], 'அணங்குடைச் சிலம்பு'[14], 'அணங்குடை வரைப்பு'[15], 'அணங்குடை நெடுங்கோடு'[16], 'அணங்குடைச் சாரல்'[17], 'அணங்கு சால் அடுக்கம்'[18],

---

[1] பரி .8:66
[2] புற .259:5-6
[3] குறு .52:2
[4] குறி .169
[5] அக .304:3
[6] ஐங் .28:1
[7] அக.207:1;220:1
[8] ஐங் .28:1, 174:1; அக .240:8
[9] நற் .155:6
[10] அக .91:4
[11] அக .198:16-17
[12] அக .22:1
[13] அக .72:11
[14] அக .198:14
[15] அக .266:19
[16] அக .272:3; புற .52:1
[17] பெரு .494
[18] புற .151:11

‘கடு திறல் அணங்கின் நெடு பெரு குன்றம்’[1], ‘சூர்மலை’[2], ‘சூருடை அடுக்கம்’[3], ‘சூர் உறை வெற்பன்’[4], ‘சூருடைச் சிலம்பு’[5], ‘சூர்புகல் அடுக்கம்’[6], ‘நெடுவரைக் கவாஅன் சூரர மகளிர்’[7], ‘சூர் ததும்பு வரை’[8] என வருவனவும். காட்டிலும் மரத்திலும் உறைவதை, ‘சூர்முதல் இருந்த ஓமைஅம் புறவு’[9], ‘அணங்குடைக் கடம்பு’[10] என்பனவும், அணங்கு போர்க்களங்கள்தோறும் உறைவதை, ‘அணங்குடை மரபின் இருங்களந்தோறும்’[11] என்றும், வெறியாட்டு எடுக்கும் களங்களில் உறைவதை, ‘அணங்கு அயர் வியன் களம் பொலிய’[12] என்றும் சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அதேபோல் பழமையான ஊரின் பல இடங்களில் தாக்கி வருத்தும் அணங்குகள் காணப்பட்டதை, ‘மூப்புடை முதுபதி தாக்கு அணங்கு உடைய’[13] என்றும், மகளிர் முலையிடையே வாழ்கின்ற தெய்வமாக அணங்கு கருதப்பட்டதை, ‘சுணங்கு சூழ் ஆகத்து அணங்கு என உருத்த நல்வரல் இளமுலை’[14] என்றும், ‘சுணங்கு அணி வனமுலை அணங்கு கொளத் திமிரி’[15] என்றும் சங்கப்பாக்களில் சுட்டுவதுகொண்டு அறியமுடிகிறது. (இது பெண்ணின் வளமையைக் குறிப்பிடும் குறியீடுகளில் ஒன்றான முலைகளில் இத்தகைய அணங்கு உறைவதாக அக்கால மக்கள் நம்பிய நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றிய கருத்தெனக் கருதலாம்).

#### 4.1.9.4. அணங்கு வெளிப்படும் காலம்

அணங்கு, சூர் என்னும் உயிர்ப்பாற்றல் மீவியல் காலமான நண்பகலிலும், நள்ளிரவிலும் திரிந்து அச்சத்தை ஏற்படுத்தும் இயல்புடையனவாக இருந்ததை ‘அணங்குகால் கிளரும் மயங்கிருள் நடுநாள்’[16], ‘பானாள் கொண்ட கங்குல் இடையது பேயும் அணங்கும் உருவு கொண்டு’[17] எனவரும் அடிகள் சுட்டுகின்றன.

#### 4.1.9.5. அணங்கின்மீது சூளுரைத்தல்

களவுக் காலத்தில் தலைவன் அணங்கின் மீதும் சூரரமகளிர் மீதும் சூளுரைத்துத் தலைவியைத் தேற்றுவதை ‘கழைவளர் சாரல் துஞ்சும் நாடன், அணங்குடை அருஞ்சூள் தருகுவன் எனநீ’[18] எனவும், ‘எக்கர் நண்ணிய எம்ஊர் வியன்துறை, நேர்இறை முன்கை பற்றி, சூரர மகளிரோடு உற்ற சூளே’[19] எனவும் உரைப்பது கொண்டு தொல்தமிழர் சமூகத்தில் அணங்கு பெற்றிருந்த முக்கியத்துவத்தை அறியலாம். சூள் பொய்ப்பின் தெய்வம் தண்டிக்கும் என்ற மக்களின் நம்பிக்கை இங்குக் கவனிக்கத்தக்கது.

#### 4.1.9.6. பரிணாம வளர்ச்சி

சூர், அணங்கு என்னும் உயிர்ப்பாற்றல் மனிதன், விலங்கு போன்ற உயிர்களின் மீதோ அல்லது ஒரு குறிப்பிட்ட இடத்திலோ தற்காலிகமாக உறையும் தன்மையுடையனவாக அக்கால மக்களால் நம்பப்பட்டது. இத்தகைய உயிர்ப்பாற்றல் தொடக்கத்தில் பால்சாரா நிலையில் இருந்து பின்னாளில் பால்சார்ந்த நிலையையும், மனித உருவேற்றத்தையும் பெற்றுள்ளன.

---

[1] அக .378:22
[2] குறு .105:5; ஐங் . 249:4
[3] குறு .376:2; நற் . 359:9
[4] அக .98:5
[5] அக .158:8; நற் .373:5
[6] அக .359:11
[7] அக .162:24-25
[8] பரி .18:31
[9] அக .297:11
[10] பதி .88:6
[11] புற .392:8
[12] அக .282:6
[13] அக .7:4
[14] அக .161:12-13
[15] நற் .9:5-6
[16] நற் .319:6
[17] மது .631-632
[18] நற் .386:5-6
[19] குறு .53:5-7

*சங்கப் பாக்கள் இத்தகைய உயிர்ப்பாற்றல்களுக்கு எந்த ஒரு குறிப்பிட்ட வண்ணத்தையோ வடிவத்தையோ குறிப்பிட்டுக் காட்டவில்லை. அவை சில வேளைகளில் தான் விரும்பிய உருவத்தை எடுத்துக்கொண்டு வெளிப்படும் என்ற கருத்து, 'சூருடைச் சிலம்பில், சுடர்ப்பூ வேய்ந்து, தாம்வேண்டு உருவின் அணங்குமார் வருமே'[1] எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், அவை மக்களைத் தீண்டி வருத்தும் இயல்பினால் 'தாக்கு அணங்கு'[2] என்றும், பேரச்சத்தை ஏற்படுத்தியதால் 'உருகெழு தெய்வம்'[3] என்றும் சங்கப் பாக்களில் பல்வேறு இடங்களில் சுட்டிக் கூறப்பெற்றுள்ளன.*

*அணங்கு, சூர் என்னும் சொல் ஆண் பெண் தெய்வங்களுக்குப் பொதுப் பெயராய் விளங்கினாலும், சங்கப் பாக்களில் சிறுபான்மை ஆண் தெய்வத்தையும் பெரும்பான்மை 'சூரரமகளிர்', 'சூர்மகள்' எனப் பெண்தெய்வத்தையும் சுட்டுவதைக் காணமுடிகிறது.*

*சூரரமகளிர் பின்னாளில் மனித உருவேற்றம் பெற்றதை, 'இந்திர கோபத்தை ஒத்த செந்நிறம் வாய்ந்த துகிலினையும், பொன்னால் ஆன ஆபரணங்களையும், இடையில் மேகலையினையும், கால்களில் சதங்கைகளையும் அணிந்து, சிறிய பாதங்களையும், கணைக்காலையும், வளைந்து நுடங்கும் இடையினையும், பருத்த தோளினையும் கொண்டவர்களாக இம்மகளிர் கைபுனைந்து இயற்றா கவின்பெறு வனப்பினைக்கொண்டு விளங்கினர்[4] எனத் திருமுருகாற்றுப்படை சுட்டுவது கொண்டு அறிந்துகொள்ளலாம்.*

### *4.1.9.7. பராவுதலும் உயிர்ப்பலி தருதலும்*

*தொல்குடி மக்களால் அச்சம் தரும் இயல்புடையவையாகவும் தீண்டி வருத்தும் இயல்புடையவையாகவும் கருதப்பெற்ற அணங்கு, சூர் என்னும் தெய்வங்கள் மக்களை அணங்கும்போதும், அவற்றின் உக்கிர ஆற்றலிலிருந்தும், சீற்றத்திலிருந்தும் தங்களைத் தற்காத்துக் கொள்வதற்காகவும் அவற்றை விரட்டுவதற்காகச் செம்மறியாட்டினை அறுத்துக் குருதிப்பலி கொடுத்து வழிபட்டனர். இதனை, சூர் எனப்பட்ட தெய்வத்திற்குக் கருணைக் கிழங்கின் பொரியலோடு செந்நெல்லாற் சமைத்த சோற்றுப்பலியைப் படைத்தனர்[5] என்றும், கானவன் தன் அம்பு பிழைத்தமைக்குக் காரணம் மலையுறைக் கடவுளே (அணங்கு) என்றும், மழை பெய்தால் அத்தெய்வத்தின் வீறு தணியும் எனக் கருதி மலையுறைக் கடவுளை வழிபடும் பொருட்டுப் பலியிட்டு அத்தெய்வத்தைச் சுற்றத்தோடு வழிபட்டான்.[6] என்றும், தீண்டி வருத்தும் அணங்கினை வழிபட்டதை, 'அணங்கெனப் பராவலின்'[7] என்றும் குறிப்பிடுவதும் கொண்டு தெளியலாம்.*

*மனிதனின் அச்ச உணர்வே வழிபாடு தோன்றக் காரணமாக அமைந்தது. தொல் பழங்காலத்தைச் சார்ந்த அவர்கள் அச்சத்தை ஏற்படுத்திய இயற்கையின் மீவியல்பாற்றல்களை வழிபாட்டுக்குரியவைகளாகக்கொண்டு வணங்கத் தலைப்பட்டனர். காரணகாரியத் தொடர்பு காணமுடியாத இத்தகைய மீவியல்பாற்றல்களுக்கு அக்கால மக்கள் எந்த ஒரு குறிப்பிட்ட வடிவத்தையும் தராமல் அவற்றின் அதீத ஆற்றல் ஒன்றையே வழிபடுவதற்குரிய காரணியாகக் கொண்டனர். மக்களுக்குத் துன்பத்தையும் கொடுமையையும் புரிந்த அத்தகைய*

---

[1] *அக .158:8-9*
[2] *ஐங் .23:4; அக .7:4; பரி .11:122*
[3] *நற் .398:1*
[4] *திரு .12-41*
[5] *நற் .367*
[6] *நற் .165:1-5*
[7] *பதி .71:20-24*

கடவுள்களை வழிபடுவதால் அவற்றால் ஏற்படும் துன்பத்திலிருந்து தற்காத்துக் கொள்ளலாம் என எண்ணினர். எனவே அணங்கு, சூர், பேய் போன்ற உயிர்ப்பாற்றல்களை மகிழ்விப்பதற்காகப் பல்வேறு சடங்குகளை மேற்கொண்டனர். இவ்வழிபாடு அக்கால மக்களுக்கு ஆறுதலையும் நம்பிக்கையையும் தந்தது.

### *4.1.10. இறப்புச் சடங்கு*

*பழங்காலமக்கள், மனிதனின் இறப்பிற்குப் பிறகும் வாழ்க்கை உண்டு என நம்பினர். எனவே, இறந்தவர்கள் நற்கதி அடைவதற்காகவேண்டி பல்வேறு சடங்குகளைச் செய்தனர். சங்க காலச் சமூகத்தில் மேற்கொள்ளப்பட்ட இறப்புச் சடங்குகளைக் குறித்த பல்வேறு செய்திகளை அக்காலப் புலவர்கள் தங்கள் பாடல்களினூடே குறிப்பிட்டுள்ளனர்.*

*ஆதி மனிதர்களிடம் முதன்முதலில் தோன்றிய சடங்குகள் ஈமச் சடங்குகளே என்று கூறுவதுண்டு. இறந்தோரைப் புனிதப் படுத்துவதற்காகவும் இறந்தோரால் எவருக்கும் எத்தகைய தீங்கும் விளையக் கூடாது என்பதற்காகவும் இறப்புச் சடங்குகள் கடைப்பிடிக்கப்படுகின்றன எனலாம்.*[1]

*இறந்த கணவனுக்காக வேண்டி அவனது மனைவி சிறிய இடத்தில் பெண்யானையின் அடியைப் போன்ற வட்ட வடிவில் மெழுகி தருப்பைப் புல் பரப்பி அதன்மேல் பிண்ட உணவை வைத்துப் படைத்தாள் என்றும், இறந்த கணவனுக்கு உணவு படைக்க வேண்டி முறத்தின் அளவான இடத்தைத் தன் கண்ணீருடன் பசுஞ்சாணத்தைக்கொண்டு மெழுகினாள் என்றும், கூறுவதை முறையே,*

*“பிடியடி அன்ன சிறுவழி மெழுகி*
*தன்அமர் காதலி புல்மேல் வைத்த*
*இன்சிறு பிண்டம் யாங்கு உண்டனன் கொல்”*[2]

*“அடங்கிய கற்பின், ஆய் நுதல் மடந்தை,*
*உயர் நிலை உலகம் அவன் புக*
*நீறு ஆடு சுளகின் சீறிடம் நீக்கி,*
*அழுதல் ஆனாக் கண்ணள்,*
*மெழுகும், ஆப்பி கண் கலுழ் நீரானே”*[3]

*என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. இவ்வாறு படைக்கப்பட்ட உணவை இறந்தவர் உண்பர் என்பது அக்கால மக்களின் நம்பிக்கை.*

*பாழிடமான சுடுகாட்டில் கள்ளி ஓங்கி வளர்ந்துள்ள களர்நிலத்தின் அருகில் பாடையை நிறுத்திய பின்னர், பிணத்தைப் புல்மீது கிடத்தி, கள்ளுடனே சிலசோறாகிய உணவைப் புலையன் படைப்பான்*[4] *என்றும், கள்ளிச் செடிகள் பரந்து மூடிய முள்ளிச் செடிகள் நிறைந்த சுடிகாட்டிற்கு பாடையைக் கொண்டுபோனபின், இறந்தவருக்கு உப்பின்றி வேகவைத்த சோற்றைப் பலி உணவாகப் படைத்து, அச்சோற்றைப் பின்புறம் பாராது நின்று புலையன் மண்ணில் விட்டெறிவான்*[5] *என்றும் குறிப்பிடும் புறநானூற்றுப் பாடல் கருத்துக்கள் அக்காலத்தில்*

---

[1] *http://www.tamilvu.org/courses/degree/a061/a0614/html/a0614113.htm*

[2] *புற.234:2-4*

[3] *புற. 249:10-14*

[4] *புற. 360:16-19*

[5] *புற. 363:10-18*

செய்யப்பட்ட ஈமச் சடங்குகளைப் பற்றி அறிந்துகொள்ள உதவுகின்றன. ஈமச் சடங்கில் இறந்த உடலுக்குத் தூய வெள்ளை நிற ஆடை போர்த்தப்பட்டதை, “கால் கழி கட்டிலில் கிடப்பி, தூவெள் அறுவை போர்ப்பித்திலதே!”[1] எனக் குறிப்பிடப்பட்டுள்ளதும் கவனிக்கத்தக்கது.

மேலும், இறந்த முன்னோர்க்கு நீர்க்கடன் முதலியவற்றைச் செய்ய புதல்வரைப் பெறல் அவசியமாகக் கருதப்பட்டதை, “தென் புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும் பொன் போல் புதல்வர்ப் பெறாஅதீரும்”[2] என்ற புறநானூற்று அடிகளும், உதியன் சேரலாதன் தன் முன்னோர்க்குத் தென்புலக் கடனைச் செய்து பெருஞ்சோற்றைப் பலியாகப் படைத்தபொழுது பேய்களின் சுற்றங்கள் அதனை உண்பதற்குக் கூடின[3] என்ற கருத்தினைக் குறிப்பிடும் அகநானூற்றுப் பாடலும் அக்காலத்தில் மேற்கொள்ளப்பட்ட இறப்புச் சடங்குகளுக்குச் சான்று கூறுகின்றன.

மன்னர்களிடம், போர்க்களத்தில் இறத்தவர்களுக்கே துறக்க உலகம் கிட்டும் என்ற நம்பிக்கை காணப்பட்டது. எனவே நோய் முதலான காரணங்களால் இறக்க நேரிட்டாலும், துறக்கப் பேற்றை வேண்டி, இறந்த மன்னனின் உடலைத் தருப்பைப் புல்லில் கிடத்தி, போரில் இறந்துபட்ட வீரர்செல்லும் உலகத்தை இவரும் அடைவாராக என்று கூறி, அந்தணர், வாளால் மன்னன் உடலைப் பிளந்து அடக்கம் செய்வர்.[4] அதேபோல் குழந்தை இறந்து பிறந்தாலும், தசைப்பிண்டமாக வந்து பிறந்தாலும் அவற்றையும் வாளால் வடுப்படுத்தி அடக்கம் செய்தனர். இதனை, “குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும், ஆள் அன்று என்று வாளின் தப்பார்”[5] என்ற புறநானூறுப் பாடல் இயம்புகிறது. இதனை ஆரியமயப்படுத்தப்பட்ட ஈமச்சடங்கு எனக் கருதலாம். இறந்தவர் உடலை புதைத்த இடத்தில் மண்ணால் மனித உருச் செய்து அதை வாளால் கீறி சடங்குகள் நிகழ்த்துவதை இன்றும் காட்டுமன்னார்க்கோயில், அரியலூர் வட்டாரப் பகுதி மக்களிடையே காணமுடிகிறது. இது வாளால் வடுப்படுத்தி புதைக்கும் பண்டை வழக்கின் எச்சமெனலாம்.

மேற்குறித்த இறப்புச்சடங்குகளில் பல இன்றைய காலத்தில் இறத்தவர்களுக்குச் செய்யப்படும் ஈமச்சடங்குகளில் பின்பற்றப்படுகிறது. அவற்றுள் இறந்தவரின் மீது வெள்ளைத் துணியைப் போர்த்துதல், சாராயத்தைப் படைத்தல், பிண்டம் வைத்தல், இறந்த முன்னோர்க்கு மாதந்தோறும் அமாவாசையன்று நீத்தார் கடன்களை மேற்கொள்ளுதல் போன்றன இன்றும் வழக்கிலுள்ள சடங்குகளாகும்.

### *4.1.11. குலக்குறி வழிபாடு*

சங்ககால இனக்குழுச் சமூகத்தில் காணப்பட்ட பல்வேறு வழிபாட்டு மரபுகளுள் குலக்குறி வழிபாடும் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது. “தாவரங்கள், விலங்குகள், சடப்பொருட்கள் ஆகியவற்றோடு தனிமனிதரோ ஒரு வர்க்கத்தினரோ கொண்டிருக்கும் குறியீட்டுத் தொடர்பினைக் குறிக்கும் சொல்தான் குலக்குறியியல்”[6] என மானிடவியல் கலைக்களஞ்சியம் விளக்கமளிக்கிறது.

---

[1] புற. 286:4-5
[2] புற. 9:3-4
[3] அக. 233:7-10
[4] புற. 93
[5] புற. 74:1-2
[6] ஆ. தனஞ்செயன், குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும், (மேற். ), ப. 4.

இனக்குழுச் சமுதாயத்தில் மனித இனக்குழுக்கள் ஒவ்வொன்றும் தம்மை ஏதேனும் ஒரு விலங்கு அல்லது தாவரத்துடன் தொடர்புபடுத்திக்கொண்டன. தொடர்பு படுத்திக் கொண்ட உயிரினத்தைத் தமது தொன்மவியல் மூதாதையாராகக் காட்டி அதன் மீது சடங்கியற் சார்ந்த நம்பிக்கைகளும் வைத்திருந்தன. இவ்வாறு ஓர் இனக்குழு மூதாதையர் உறவு வைத்துக்கொள்ளும் உயிரினமே 'குலக்குறி' (totem) என வரையறுக்கப்படுகின்றது.[1]

குலக்குறியாகக் கருதப்படும் உயிரினங்கள், சடங்கியல் தன்மை பெற்று, புனிதப் படுத்தப்பட்டு வழிபாட்டுக்குரியனவாகக் கருதப்பட்டன. அத்தகைய உயிரினத்தின் அழிவு அதனைக் குலக்குறியாகக்கொண்ட இனக்குழுவின் அழிவாகக் கருதப்பட்டது. "தொன்மைக் குடியினர் தங்கள் உயிரை விலங்கின் உடலிலோ, தாவரங்களிலோ வைக்க இயலும் எனக் கருதினர். அங்ஙனம் வைத்துவிட்டால் தங்களை அழிக்க இயலாது. ஆயின் அப்பொருள் அழிக்கப்பட்டால் அவர்களும் அழிவர் என நம்பினர். அப்பொருளைக் குலக்குறியாகக் கொண்டு அதற்குத் தீங்கிழைக்காது, கொல்லாது, உண்ணாது காத்து வந்தனர்"[2] என ஃபிரேஸர் என்னும் மானிடவியலாரும் குறிப்பிடுகிறார்.

பாரி காட்டு வழியில் எத்தனையோ தாவரங்கள் வாடிக்கிடக்க முல்லைக்கு மட்டும் தேர் ஈந்ததும்,[3] பேகன் மயிலுக்குப் போர்வை தந்ததும்,[4] நன்னன் சாதாரண மாங்கனிக்காகப் பெண்ணை கொன்றதும்[5] கொடைத் தொழிலோ கொலைத் தொழிலோ அல்ல. அவை குலக்குறிப் பொருள்களின் மேல் உள்ள மதிப்பையே காட்டுகின்றன என ஆய்வாளர்கள் பலரும் கருதுகின்றனர்.

மேலும் மேற்குறித்த பாரி, பேகன், நன்னன் மூவரும் இனக்குழுத் தலைவர்கள் என்பதும் அத்தகைய இனக்குழு காலச் சமூகத்திலேயே இத்தகைய குலக்குறி தொடர்பான நம்பிக்கை நிலவியது என்பதும் கவனிக்கத்தக்கது. இவை மட்டுமின்றி வேந்தர்களின் காவல் மரங்களாகத் திகழ்ந்தவற்றையும்,[6] அடையாளப் பூக்களாகத் திகழ்ந்தவற்றையும் இனக்குழு வாழ்வின் குலக்குறி வழிபாட்டின் எச்சங்களாகவே கருதலாம்.

நெய்தல் நில மக்கள் சுறாவின் கோட்டினை நட்டு வழிபடும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர்.[7] இதனையும் குலக்குறி வழிபாடாகக் கருதலாம் என்பதை, ஆ. தனஞ்செயன், "பொதுவாக இனக்குழு மக்கள் தத்தம் உணவுத் தேவைக்காக எந்த விலங்கினை வேட்டையாடுகிறார்களோ அவ்விலங்கின் எலும்பு, கொம்பு, தோல் முதலிய உறுப்புகளைத் தம்முடைய வழிபாட்டு மையத்தில் இடம்பெறச் செய்து, சடங்கியற்றுவது வழக்கமாக இருந்திருக்கிறது. அத்தகைய சடங்கு, மந்திரம் அல்லது வளமை நம்பிக்கையையோ, ஆவி நம்பிக்கை அல்லது குலக்குறி நம்பிக்கையையோ பிரதிபலிக்கும். அவ்வகையில் பட்டினப்பாலை விவரிக்கும் சுறாமுள் வழிபாட்டில் கூட, குலக்குறியியல் என்னும் தொடக்கநிலைச் சமய வடிவத்தின் இயல்பினைக் காணமுடிகிறது"[8] எனக் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது.

[1] பா. ஆனந்தகுமார், பண்டைத் தமிழர் சமய மரபுகள், ப. 76
[2] பா. ஆனந்தகுமார், பண்டைத் தமிழர் சமய மரபுகள், ப. 77
[3] சிறு. 88-91
[4] சிறு. 84-87; புற. 141:10-12, 145:1-3
[5] குறு. 292:1-5
[6] புற. 23:8-10, 36:6-9, 57:9-10, 162: பதி. 11:12-14
[7] பட். 83-87
[8] ஆ. தனஞ்செயன், சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும், ப. 144

*4.2. நம்பிக்கை*

*ஒரு சமூகத்தின் பண்பாட்டை அறிந்துகொள்வதற்கு அச்சமூகத்தின் மரபுவழிப்பட்ட நம்பிக்கைகள் பெரிதும் துணைபுரிகின்றன. நம்பிக்கைகள் மனித வாழ்வுக்கு ஊக்கமளிக்கின்றன. அவை உளவியலோடு தொடர்புடையன. மனித மனம் இயற்கைக்கும் தனக்கும் தொடர்புண்டு எனக்கருதி அவற்றைத் தன்வயப்படுத்தும்போதும். இயற்கையின் அதீத ஆற்றல் மீதான அச்ச உணர்வும், தான் மேற்கொள்ளும் செயலில் நன்மை விளைய வேண்டும் என்ற எதிர்ப்பார்ப்பும், தீமைகளிலிருந்து பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்ற தற்காப்பு உணர்வும் நம்பிக்கைகள் தோன்றுவதற்குக் காரணமாக அமைகின்றன.*

*நம்பிக்கைகள் ஒரு குறிப்பிட்ட காலச் சூழலில் தோற்றம்பெற்று அவை மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு சமூகத்தில் நிலைபேறு அடைகின்றன. இவ்வாறு நிலைபெற்ற நம்பிக்கைகள் ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குக் காலங்காலமாகக் கடத்தப்பட்டு வருகின்றன.*

*நம்பிக்கைகளை இன்றைய அறிவியல் கண்கொண்டு பார்க்கும்போது சிலவற்றை மூடநம்பிக்கைகள் எனக் கருதுகிறோம். இதனை அச்சமூகத்தின் அறிவு வளர்ச்சியைப் பொறுத்து தீர்மானிக்கின்றோம். ஆனால் தொடக்ககாலச் சமூகத்தில் இவ்வாறு நோக்குவதற்கு வாய்ப்பில்லை. அனைத்து நம்பிக்கைகளுமே மனித வாழ்வுக்கு ஊக்க சக்தியாக விளங்கின.*

*நம்பிக்கை என்பதற்கு, "நம்பிக்கை (belief) என்பது ஒரு உளவியல் சார்ந்த விடயமாகும். ஒருவர் அல்லது ஓரமைப்பு, ஒன்றின் மீது அல்லது ஒருவரின் மீது வைக்கும் மிகுந்தப் பற்று அல்லது கூடிய விருப்பு போன்றவற்றின் அடிப்படையில் அதனை உண்மை என நம்பும் நிலையிலேயே நம்பிக்கை மனித மனங்களில் ஏற்படுகின்றது. அது சரியானதாகவோ தவறானதாகவோ இருக்கலாம். உண்மையானதாகவோ உண்மையற்றதாகவோ கூட இருக்கலாம். ஆனால் அது அறிவியலின் அடிப்படையில் ஏற்றுக்கொள்ளக்கூடிய உண்மையாக இருக்க வேண்டும் என்பதில்லை. பெரும்பாலும் "நம்பிக்கை" என்பது அறிவிற்கு அப்பால் ஒருவரின் அல்லது ஒன்றின் மிகுந்தப் பற்றாலும் கூடிய விருப்பினாலும் ஏற்படுபம் உளம் சார்ந்த வெளிபாடாகவெ இருக்கும். அதனாலேயே ஒருவர் கொண்ட நம்பிக்கையினை இன்னொருவர் அல்லது இன்னொரு அமைப்பு கேள்விக்குள்ளாக்கும்போது அதன் சரி பிழைகளை ஏற்கும் அல்லது பகுத்துப் பார்க்கும் மனநிலையை அநேகமான மனிதர்கள் இழந்து விடுகிறார்கள். மாறாக கேள்விக்குள்ளாக்கும் நபர் அல்லது அமைப்பின் மீது வன்மமாக எதிர்க்கும் மனநிலைக்கும் தள்ளப்பட்டுவிடுகிறார்கள்"[1] என விளக்கமளிக்கப்படுகிறது.*

*மனித சமூகம் பிறந்தது முதற்கொண்டு இறப்பு வரையிலும் இன்னும் ஒருபடி மேலே சென்று இறப்பிற்குப் பிறகான வாழ்க்கை குறித்த சிந்தனை வரையிலும் பல்வேறு நம்பிக்கைகளைக் கொண்டுள்ளது. அந்த நம்பிக்கைகள் ஒருவகையில் மனித நடத்தைகளைத் தீர்மானிப்பதில் முக்கியப் பங்காற்றுகின்றன. எடுத்துக்காட்டாக, சுவர்க்க உலகம் உண்டென்றும், இறப்பிற்குப் பிறகு அங்கு செல்லவேண்டுமானால் நற்செயல்களைச் செய்ய வேண்டும் என்றும்*

---

*1 http://ta.wikipedia.org/s/27zv*

குறிப்பிடப்படும் நம்பிக்கை ஒரு மனிதனை ஒழுக்க நெறியில் வாழ வலியுறுத்துவதைக் குறிப்பிடலாம்.

மனிதன் மனத் தடுமாற்றத்தில் இருக்கும்போது உடன்நிகழும் செயல்களைக் கொண்டு மன நிம்மதியடைகிறான். இதனை நிமித்தங்களின் அடிப்படையில் தோன்றிய நம்பிக்கையாகக் கருதலாம். படித்தவன் பாமரன் என்ற வேறுபாடு இல்லாமல் அனைவரிடமும் தொன்றுதொட்டு இன்றுவரை நம்பிக்கைகள் சமூகத்தில் இயங்கி வருகின்றன.

ஒரு சமூகத்தில் வாழும் மக்களின் நம்பிக்கைகளைக் குறித்து அறிந்துகொள்வதற்குச் சமூகவியல், உளவியல், மானிடவியல் போன்ற பல்துறை அறிவு இன்றியமையாததாக விளங்குகிறது. இங்குப் பாட்டும் தொகையும் எனக் குறிப்பிடப்படும் சங்க இலக்கியங்கள் காட்டும் சமூகத்தில் நிலவிய நம்பிக்கைகளைக் குறித்து நோக்குவதில் இவ்வியல் கவனம் கொள்கிறது. இந்நம்பிக்கைகளை

1. நாள்பற்றிய நம்பிக்கைகள்
2. கோள் – நாள்மீன் பற்றிய நம்பிக்கைகள்
3. நிமித்தம் பற்றிய நம்பிக்கைகள்
4. கனவுபற்றிய நம்பிக்கைகள்
5. ஊழ்பற்றிய நம்பிக்கைகள்
6. கடவுள்பற்றிய நம்பிக்கைகள்
7. இம்மை – மறுமை பற்றிய நம்பிக்கைகள்
8. மழைபற்றிய நம்பிக்கைகள்
9. கற்பு பற்றிய நம்பிக்கைகள்
10. பிற நம்பிக்கைகள்

### 4.2.1. நாள்பற்றிய நம்பிக்கை

மனிதர்கள் தாங்கள் மேற்கொள்ளும் செயல் வெற்றிபெற வேண்டி நன்நாள் பார்த்து அச்செயலைச் செய்யத் தொடங்கினர். மேற்கொண்ட செயலில் வெற்றியைத் தரும் ஆற்றல் நாள் நேரம் போன்றவற்றிற்கு உண்டு என மக்கள் நம்பினர்.

#### 4.2.1.1. உழவும் நாளும்

குறவர்கள் பன்றி உழுத புழுதியில் நல்லநாள் பார்த்து உழாமலே தினையை விதைத்தனர். இதனை,

> "கடுங் கண் கேழல் உழுத பூழி,
> நல் நாள் வரு பதம் நோக்கி, குறவர்
> உழாஅது வித்திய பரூஉக் குரல் சிறு தினை"[1]

எனப் புறநானூறு குறிப்பிடுகின்றது.

---

[1] புற. 168:4-6

#### *4.2.1.2. நாளும் செயலும்*

*நாளும் நல்ல நாள் அன்று; புள் நிமித்தமும் தீதாகத் தோன்றி இடைப்பட்டுத் தடுத்தாலும் மலையமானைப் பாடியவர்கள் பரிசில் பெறாமல் வெறுங்கையுடன் திரும்பமாட்டார்கள் எனக் கபிலர் பாடுவதை, "நாள் அன்று போகி, புள் இடை தட்ப, பதன் அன்று புக்கு, திறன் அன்று மொழியினும்"[1] எனவரும் புறநானூற்றுப்பாடல் குறிப்பிடுகிறது.*

*வல்வில் ஓரியைக் கழைதின் யானையார் பாடிய பாடலில், இரவலர் தாம் பரிசிலை எதிர்நோக்கிச் செல்லுமிடத்தில், தாம் கருதிச்சென்ற புரவலர் பரிசில் மறுப்பினும், அவரைப் பழிக்காது, அதற்கு மாறாகத் தம் வழியிடையே எதிப்பட்ட நிமித்தத்தையும், புறப்பட்ட நேரத்தையுமே பழிப்பர். அதைப்போல நீ வழங்கவில்லையாயினும் நான் உன்னை வெறுக்கமாட்டேன் எனக்குறிப்பிடுவதை, "புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை, உள்ளிச் சென்றோர்ப் பழியலர்"[2] எனப் புறநானூற்றுப் பாடல் குறிப்பதும் நாள் பற்றிய நம்பிக்கையைக் காட்டுகிறது.*

#### *4.2.1.3. விழாவும் நாளும்*

*மனிதனது வாழ்க்கையினை விண்கோள்களின் நிலைமைகள் கட்டுப்படுத்துகின்றன என்ற கருத்தின் அடிப்படையில் மக்கள் நல்ல நாளும் நல்ல கோள்களின் சேர்க்கை கூடிவரும் நேரத்தில் விழாக்களைத் தொடங்குகின்றனர். பழந்தமிழரிடமும் இவ்வழக்கம் இருந்துள்ளது. இதனை விழாக்களைப் பெரும்பாலும் வளர்பிறை மற்றும் மதிநிறைந்த நாட்களில் தொடங்கியுள்ளமை தெளிவுபடுத்தும். இதன் அடிப்படையில் கார்த்திகைத் தீப விழா முழுமதி நாளில் தொடங்கியதை அகநானூறும்,[3] தைந்நீராடல் வளர்பிறையில் தொடங்கியதைப் பரிபாடலும் சுட்டக் காணலாம்.[4]*

*நன்மை மற்றும் வளர்ச்சி வேண்டி ஆற்றப்படும் முக்கியமான நிகழ்ச்சிகள் அனைத்தும் வளர்பிறையில் நிகழ்த்துவதனையே இன்றைக்கும் தமிழர்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர் என்பது கவனிக்கத்தக்கது.*

#### *4.2.1.4. நன்நாளும் திருமணமும்*

*திருமணம் நல்லநாள் பார்த்து நிகழ்த்தப்பெற்றதை, "நல் நாள் வதுவை கூடி"[5] என்ற நற்றிணைப் பாடலடி சுட்டுகிறது. வேங்கை மலரும் நாள் மணவினைக்குரிய நன்நாளாகக் கருதப்பட்டது. இதனை, "நல் நாள் வேங்கையும் மலர்கமா, இனி"[6], "நல்நாள் வேங்கைவீ நன்கனம் வரிப்ப"[7] "நாட்பூ வேங்கை நறுமலர் உதிர"[8] எனவரும் அகப்பாடலடிகள் உணர்த்துகின்றன.*

*திங்கள் உரோகிணியோடு சேர்ந்த நாளை, மணவினைக்கு ஏற்ற நாளாகக் கருதியதை, "திங்கட் சகடம் மண்டிய துகள் தீர் கூட்டத்து"[9], "கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள், கேடு இல் விழுப் புகழ் நாள் தலைவந்தென"[10] எனவரும் அகநானூற்று அடிகள் காட்டுகின்றன.*

---

*[1] புற. 124:1-2*
*[2] புற. 204:10-11*
*[3] அக. 141:6-11*
*[4] பரி. 11:76-79*
*[5] நற். 125:7*
*[6] நற். 206:7*
*[7] அக. 133:4*
*[8] அக. 205:20*
*[9] அக. 136:4-5*
*[10] அக. 86:6-7*

*நன்னாளில் மணமுடிக்கப் பெற்ற தலைவனும் தலைவியும் எக்காரணத்தை முன்னிட்டும் பிரிந்து விடாதபடி நாள்மீன் தடுத்து வைக்கும் என்னும் குறிப்பொன்று கலித்தொகையில் காணப்படுகிறது.*[1]

### *4.2.1.5. ஊனமும் நேரமும்*

*ஒருவன் ஊனமாய் பிறந்ததற்குக் காரணம் அவன் பிறந்த நேரம் காரணம் என நம்பினர். கலித்தொகைப் பாடலொன்றில் கூனி என்பவள், குறளன் என்பவனை நோக்கி "கண்ணால் பார்க்கத் தகுதியில்லாத குறளாய்ப் பிறத்தற்கு ஏதுவாகிய நாழிகையின் முகூர்த்தத்தே, ஆண்டலைப் புள்ளுக்குத் தன்பெடை ஈன்ற பறழாய மகனே"*[2] *எனக் குறிப்பிடுவது கொண்டு அறியமுடிகிறது.*

### *4.2.2. கோள் – விண்மீன் பற்றிய நம்பிக்கை*

*விண்ணில் காணப்படும் கோள்கள் மற்றும் விண்மீன்களின் நிலைக்கு ஏற்ப உலக இயக்கத்திலும் தனிமனித வாழ்விலும் மாற்றங்கள் ஏற்படுவதாகக் கருதினர். அதன் அடிப்படையில் பல்வேறு நம்பிக்கைகளைப் பண்டைத் தமிழர்கள் கொண்டிருந்தனர். இந்நம்பிக்கைகள் தோற்றம் பெறுவதற்குத் தாம் மேற்கொண்ட செயலில் நன்மை கிடைக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பும் தீமை நேராது தற்காத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணமுமே அடிப்படைக் காரணிகளாக அமைகின்றன.*

> *ஒருவர் பிறந்த நாளில் திங்களை அடுத்து எந்த மீன் நிற்கின்றதோ அதுவே அவரது நாள்மீன் எனப்படும். அதற்கு ஏற்பவே அவர்களது வாழ்வில் நல்லவை கெட்டவை விளையும் என்ற சோதிட நூலார் கருத்திற்கு ஏற்பத் 'தேரினை உடைய செழியனே! உனக்கு உரிய நாள்மீன் நிலைக்கட்டும். உன் பகைவர்தம் நாள்மீன் பட்டழிந்து போகட்டும்'*[3] *என்பதைக் குறிப்பிடும் புறநானூற்றுப் பாடல் கருத்து அக்காலத்து மக்களின் விண்மீன் குறித்தான நம்பிக்கையை வெளிப்படுத்துகிறது.*
>
> *கதிர்வீசும் சூரியன் நான்கு திக்கிலும் தோன்றுதலும் விளங்கிய கதிரையுடைய வெள்ளிமீன் தென் திசைக்கண் செல்லுதலும் மழை பொழியாது வறண்டு போகச் செய்யும் தீய நிமித்தங்களாகும்.*[4]
>
> *வெள்ளி தன் நிலை பெயர்தலும், சனிமீன் புகைவதும் தீய குறிகளாகக் கொள்ளப்பட்டன.*[5]
>
> *வானத்தில் எரிமீன் மிகுதியாகத் தோன்றுதலும், குளமீனும் நாள்மீனும் ஆகிய விண்மீன்கள் புகைந்து தோன்றுதலும் வறுமையைத் தரும் தீய நிமித்தங்களாகும்.*[6]
>
> *வெம்மையான கதிர்களை உடைய சூரியன் தென்திசையில் தோன்றுதல் தீய நிமித்தமாகும்.*[7]
>
> *மழைக்கோளாகிய வெள்ளி(சுக்கிரன்) சிறிது வடக்கே தாழ்ந்தால் மழை பெய்யும்*[8]*, தெற்கே நின்றால் மழை பொய்க்கும்*[9]

---

[1] *கலி. 5:1-9*
[2] *கலி. 94:5-6*
[3] *புற. 24:24-25*
[4] *புற. 35:6-7, 41:6, 388:1-2*
[5] *புற. 117:1-2*
[6] *புற. 395:34-35*
[7] *புற. 397:24-25*
[8] *பதி. 13:25-26, 24:24-25, 69:13-14*
[9] *பட். 1-2*

*பங்குனி மாதத்தில் மீன் வீழ்ந்தால் இராச பீடை.*[1]

*மக்கள் தம் வாழ்நாளின் அளவை அறிய அருந்ததியைப் பார்ப்பர் என்றும், அது அவருக்குத் தெரிந்தால் அவர் மேலும் வாழ்வரென்றும், தெரியாதாயின் அவர் வாழ்வின் முடிவு நெருங்கிவிட்டதென்றும் சோதிடநூல் கூறும்.*[2]

என்ற மேற்குறித்த சங்கப் பாடல் தரும் சான்றுகள் பண்டைத் தமிழரின் கோள்- மீன் தொடர்பான நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றன.

***4.2.3. நிமித்தம்(புள்)***

இலக்கியங்கள் அவ்வக்கால மக்களின் உள்ளத்து உணர்வுகளைப் பொதிந்துவைத்துள்ள கருத்துப்பெட்டகம். அவை மக்கள் வாழ்வின் மரபார்ந்த செயல்பாடுகளை இனங்காணப் பெரிதும் துணைபுரிகின்றன. அத்தகைய வாழ்வியல் மரபுகளில் ஒன்றாக நிமித்தங்களும் அவை சார்ந்த நம்பிக்கைகளும் விளங்குகின்றன. இத்தகைய நிமித்தங்களையும் அவை தொடர்பான நம்பிக்கைகளையும் சங்கப் பாடல்களினூடே நோக்குவது அக்கால மக்கள் பண்பாட்டைப் புரிந்துகொள்ளப் பெரிதும் உதவுகின்றன.

நிமித்தங்கள் எதிர்கால நிகழ்ச்சிகளை முன் கூட்டியே அறிவிக்கும் அறிகுறியாக மக்களால் தொன்றுதொட்டு இன்றுவரை நம்பப்பட்டு வருகின்றன. அதாவது நிமித்தம் என்பது வாழ்வில் பின்நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில நிகழ்ச்சியின் வாயிலாக உணர்த்துவதாகும். இவை பெரும்பாலும் அச்சத்தின் அடிப்படையில் தோன்றியிருக்கலாமென்பர். மனிதன் தான் செய்ய நினைக்கும் செயலின்பால் எதிர்பார்க்கும் முடிவுகளுக்கும் இயற்கையில் நடைபெறும் நிகழ்வுகளுக்கும் ஒருவித தொடர்பு இருப்பதாக நினைக்கத் தொடங்கிய காலகட்டத்தில் மனித வாழ்வில் நிமித்தங்கள் சிறப்பிடம் பெற்றிருக்கக் கூடும் எனலாம். பின்னர் காலப்போக்கில் சமுதாயத்தில் தொடர்ச்சியாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளோடு அவ்வியற்கை நிகழ்வுகள் இயைந்து நோக்கப்பட்ட நிலையில் அவை நிமித்தங்களாக மாறியிருக்க வேண்டும் என விளக்கம் கொள்ளலாம்[3].

நிமித்தம், சகுனம் என்பவற்றைக் குறித்து, “சகுனம் வேறு, நிமித்தம் வேறு. நிமித்தம் என்பது தான் வரப்போவதை ஏதோ ஒரு தினுஸில் அடையாளம் காட்டுவதற்குப் பொதுப் பெயர். அதில் ஒரு வகையே சகுனம். சகுனம் என்பதற்கு 'பக்ஷி' என்பது அர்த்தம். பக்ஷிகளால் ஏற்படும் நிமித்தங்களுக்குத்தான் சகுனம் என்று பெயர். உலகத்தில் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாத வஸ்து ஒன்றும் இல்லை. நடக்கும் காரியங்களும் அப்படியே. ஸரியான கணக்குத் தெரிந்தால் எல்லாம் தெரிந்து கொள்ளலாம். உலகத்தில் நடப்பவை எல்லாம் ஒரே ஒருவருடைய ஆக்ஞையால்தான் நடக்கின்றன;ஒரே கணக்காக நடக்கின்றன. அதனால் ஒரு காரியத்தைக் கொண்டு மற்ற எல்லாவற்றையும் கண்டு பிடிக்கலாம். கை ரேகை, ஆரூடம், க்ரஹநிலை முதலிய எல்லாம் ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் உடையனவாகவே இருக்கின்றன. எல்லாம் நிஜம்தான். இவற்றில் ஒன்றே நிமித்தம். அதில் ஒரு அங்கமே சகுனம்”[4] என்ற கருத்தும் மனங்கொள்ளத்தக்கது. மேலும்,

[1] புற. 229 மூலமும் உரையும், என்.சி.பி.எச்., ப. 324

[2] பதி. 89:17-18, பதிற்றுப்பத்து

[3] http://ta.wikipedia.org/s/2aio

[4] http://www.kamakoti.org/tamil/Kural91.htm

*“எப்பொழுதாவது நிகழ்வதே நிமித்தம் எனப்படும். எப்பொழுதும் நிகழ்வன நிமித்தமாகா”*[1] என்ற கூற்றும் நிமித்தம் குறித்த கூடுதல் புரிதலைத் தருகிறது.

இன்றைக்கு இது சகுனம் பார்த்தல் என்ற பெயரால் சமூகத்திலுள்ள மக்களால் பின்பற்றப்பட்டுவரும் நம்பிக்கையோடு ஒத்திருப்பது நோக்கத்தக்கது. மனித வாழ்வில் நிமித்தங்கள் ஒரு புறம் தீய குறியீடுகளைக் காட்டி மனதளவிலும் செயலளவிலும் சோர்வை ஏற்படுத்தினாலும், ஒருபுறம் மனிதமனம் முடிவெடுக்கமுடியாத சூழல்களில் அவனுக்கு நம்பிக்கையைத் தருவதாகவும் அமைகின்றன.

நிமித்தம் என்ற சொல்லுக்கு அகராதிகள் “காரணம்; சகுனம்; அடையாளம்; இலக்கு; பொருட்டு”[2] என விளக்கமளிக்கின்றன. சங்க இலக்கியத்தில் நிமித்தம் என்ற சொல் எங்கும் பயின்றுவரவில்லை.[3] ஆயினும் ‘புள்’ என்னும் சொல் நிமித்தம்[4] என்ற பொருளில் பலவிடங்களில் பயின்று வந்துள்ளது. பண்டைக் காலத்தில் பறவைகள் நிமித்தக் காரணியாகப் பயன்பட்டதைக்கொண்டும், புள் என்ற சொல் பொதுவாக பறவைகளைக் குறிப்பதாலும் பறவைகளே தொடக்கக் காலத்தில் நிமித்தக் காரணியாக அக்கால மக்களால் கருதப்பெற்று பிற்காலத்தில் நிமித்தக் காரணிகள் அனைத்தையுமே ‘புள்’ என்ற பெயரால் குறிப்பிடப்பெற்று அச்சொல்லே சமூகத்தில் நிலைபேறடைந்துவிட்டது. மேலும், “நிமித்தம் புள்ளெனக் கூறப்படுகின்றது. முதலில் பறவைகளால் நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்டானமையின் அப்பறவைகளைக் குறிக்கும் புள்ளென்னும் பெயரால் அது வழங்கப்பெற்று, அப்பால் வேறு பலவகை நிமித்தங்களுக்கும் அதுவே பெயராக வழங்கலாயிற்று என்று தோன்றுகின்றது”[5] என்று உ.வே.சா. தம் பத்துப்பாட்டு பதிப்பில் குறிப்பிடுவதும் ஒப்புநோக்கத்தக்கது.

சங்க இலக்கியத்தில் பறவைகள் மட்டுமின்றி, நாள், கோள், விண்மீன், விலங்கு, மரம், மாந்தர் போன்ற பலவற்றையும் நிமித்தக் கருவிகளாகப் பயன்படுத்தியுள்ளனர். பல்லி[6](கணிவாய்ப் பல்லி[7]), நல்லோர் வாய்ச்சொல்[8] போன்ற பிறவும் நிமித்தம் காணப் பயன்பட்டுள்ளன. பாலைவழியில் செல்பவர்க்கு ஓந்தி நிமித்தம் காணப் பயன்பட்டது.[9] ஆயினும் இவற்றையும் புள் என்றே குறிப்பிட்டுள்ளனர்.

திருமணச் சடங்கில் புள்நிமித்தம் பார்க்கப்பட்டது.[10]

உப்பினை எடுத்துச் சென்று விற்கும் உப்பு வணிகர்கள் நன்னிமித்தம் பார்க்கின்ற வழக்கத்தினை உடையவராய் இருந்தனர்.[11]

காலையில் பயணம் செல்வோர் நிமித்தம் பார்த்துப் பயணம் மேற்கொண்டனர்.[12]

கொற்றவை வழிபாட்டின்போது புள்நிமித்தம் பார்க்கப்பெற்றது.[13]

---

[1] குறுந்தொகை மூலமும் உரையும், என்.சி.பி. எச்., ப.606.
[2] http://agarathi.com/word/நிமித்தம்.
[3] பார்க்க: பெ. மாதையன், சங்க இலக்கியச் சொல்லடைவு.
[4] குறு. 140
[5] பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும், உ.வே.சா. (ப. ஆ.), ப. 651.
[6] அக. 351:14-17
[7] அக. 151:11-15
[8] முல். 17-21
[9] குறு. 140:1-3
[10] அக. 136:3
[11] அக. 207:1-4
[12] மலை. 448
[13] குறு. 218:3

*போருக்குப் புறப்படும் முன்னர் 'புள் நிமித்தம்' பார்க்கின்ற வழக்கத்தைப் பண்டைத் தமிழர் மேற்கொண்டிருந்தனர்[1] (சோழன் நலங்கிள்ளியினுடைய வீரர்கள் பகை வந்தபோது புள்நிமித்தம் தீயவாயினும் 'சாவோம் யாம்' என வீறுகொண்டு எழுவர்)*

*உன்ன மரம் என்பது நிமித்தம் பார்க்கும் மரம். நிமித்தம் பார்க்கும்போது இம்மரம் தழைத்திருந்தால் வெற்றி கிட்டும் என்றும், கரிந்திருந்தால் தோல்வி கிட்டும் என்றும் நம்பினர்.[2]*

*என்ற மேற்குறித்த சங்கப் பாடல் கருத்துக்கள் அக்கால மக்களிடம் காணப்பட்ட நிமித்தம் பார்ப்பதின் மீதான நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றன.*

*நிமித்தக் குறிகளின் அடிப்படையில் நிமித்தங்களை நன்னிமித்தம், தீநிமித்தம் என இரண்டாகப் பகுத்துக் காணலாம்.*

### *4.2.3.1. நன்நிமித்தம்*

*மனிதர்கள் தங்கள் சிந்தனை அல்லது செயலில் எதிர்பார்க்கும் முடிவுகளுக்கும், இயற்கையில் சாதாரணமாக நடைபெறும் நிகழ்வுகளுக்கும் ஒருவிதத் தொடர்பு இருப்பதாகக் கருதி தங்கள் சிந்தனை அல்லது செயலுக்கு இணையான கூறுகளை இயற்கை நிகழ்வுக் கூறுகளோடு ஒப்பிட்டுப் பார்த்து பொருந்தி இருப்பின் நன்மையாய் முடியும் என்றும் முரண்பட்டிருப்பின் தீமையாய் முடியும் என்றும் நம்பினர். இத்தன்மையில் நன்னிமித்தமாய்க் கருதப்பட்ட நிகழ்வுகளைச் சங்கப் பாக்கள் பலவற்றிலும் காணலாம்.*

*புள்ளினங்கள் கரைந்து ஒலியெழுப்புவது காதலிக்குத் தலைவனின் வரவை உணர்த்தும் நன்நிமித்தமாக அமைந்தது.[3] பரிசில் பெறப் புரவலனை நாடிச் செல்லும் பாணர்க்குழுவிற்குப் பரிசில் பெற்று வரும் பாணர் குழு எதிர்ப்படுதல் நன்நிமித்தமாக உணரப்பட்டது.[4]*

*தலைவனின் வரவை எண்ணிக் காத்திருக்கும் தலைவிக்குத் தலைவனின் வரவை உறுதிப்படுத்தும் வகையில் அவள் இருந்த இடத்தில் நற்குறிகள் பலவும் தோன்றியதோடு சுவரிலுள்ள பல்லியும் தம் பக்கத்திலிருந்து ஒலித்தும் மனைக்கு வேலியாக அமைந்த நொச்சியின் கிளையில் குயில் கூவியும் நன்னிமித்தமாக அமைந்தது.[5] என நற்றிணையும், "நுண்ணிய அழகுடைய என் கண்ணும் துடிக்கிறது. அத்துடன் முன்கையில் அணியப்பெற்ற வளையல்களும் செறிக்கின்றன இது தலைவன் உன்னை வரைந்துகொள்வதற்கு ஏற்ற நிமித்தமாய் அமைந்தது"[6] எனத் தோழி குறிப்பிடுவதாக ஐங்குறுநூறும் குறிப்பிடுகிறது.*

*பொருள்வயிற் பிரிந்த தலைவன் திரும்பி வருவதற்கு ஏற்ற நன் நிமித்தங்களாக, 'நம்மனையிடத்துப் பல்லியும் நன்றாகிய இடத்தே அவர் வரவுக்குப் பொருந்திக் கூறின; இடக்கண்ணும் துடித்தது'[7] என்றும், 'ஆயர்கள் மாலை நேரத்தில் குழலினை ஊதுகின்றனர். இது தலைவனைப் பெறுதற்கேற்ற நன்னிமித்தமாக ஒலித்தது'[8] என்றும் குறிப்பிடும் தலைவியைத் தோழி தேற்றுவதாக அமைந்த கலித்தொகைப் பாடல்களும், காலமல்லாக் காலத்தில் நீர் நிலத்து மேய்ந்த*

---

[1] *புற. 68:11-12*
[2] *பதி. 61:5-6*
[3] *நற். 161:8-12; அக. 141:3*
[4] *மலை. 64-66*
[5] *நற். 246:1-7*
[6] *ஐங். 218*
[7] *கலி. 11:20-22*
[8] *கலி. 101:34-35*

குருகுகளும், தத்தம் இருப்பிடம் நோக்கி ஆகாயத்தில் பறத்தல், புதர்களில் உள்ள போதுகள் வண்டுகள் ஊதுதலால் இதழ்விரிதல், தலைவியின் மெலிந்த தோள்கள் வளையொடு செறிதல் போன்றவை தலைவிக்குத் தலைவனின் வரவை உணர்த்தும் நன்னிமித்தமாய் அமைந்ததைக் குறுந்தொகைப் பாடலும்[1] சங்ககால மக்களிடம் காணப்பட்ட நன்நிமித்த நிகழ்வு பற்றிய நம்பிக்கைகளாக அறியமுடிகிறது.

### 4.2.3.2. தீநிமித்தம்

போர்மேற்கொண்டு செல்லும் மன்னனுக்கு, 'எட்டுத்திசைகளிலும் எரிகொள்ளி எரிந்து விழுவது; பெரிய மரத்தின் இலையில்லாத பெரிய கிளை உலர்ந்து போவது; வெம்மையான கதிர்களையுடைய ஞாயிறு பலவிடங்களில் செறிந்து தோன்றுவது; அச்சம் தரும் பறவைகள் ஒசையெழுப்புதல்'ஆகியனவும், 'பல் பூமியில் விழுந்தது போலவும், எண்ணெயினைத் தலையில் தடவியது போலவும், ஆண்பன்றிமீது ஏறுவது போலவும் ஆடையைக் களைந்தது போலவும் படைக்கருவி கட்டிலோடு கீழே கவிழ்வது போலவும் அரசன் கனவு காண்பது' ஆகியனவும் தீய குறிகளாய் அமைந்தன[2].

மார்பில் புண்பட்டுக் கணவன் இறக்கும் நிலையில் இருக்கும்போது, அவன் மனைவிக்கு, "நண்பகலில் வந்து வண்டுகளும் ஒலித்தல், ஏற்றி வைத்த விளக்குகள் அணைந்து போதல், உறக்கமின்றி கிடந்த கண்கள் உறக்கத்தை விரும்புதல், கேட்பார்க்கு அச்சம் உண்டாக கூகை குரலெடுத்து அலறுதல், நெல்லும் நீரும் தூவி விரிச்சி கேட்கும் முது பெண்டின் சொற்கள் நன்மையாக இல்லாமை"[3] போன்றன தீய நிமித்தங்களாகத் தோன்றின.

தன் தலைவனைக் காணச் செல்லும் பாணனுக்குத் தான் மீட்டிய யாழின் பண் இரங்கற் பண்ணாகிய விளரியைச் சென்று அடைதல், விரிந்த கூந்தலையுடைய பெண் ஒருத்தி எதிர்ப்படுதல்[4] ஆகியன தீய நிமித்தங்களாக அமைந்தன. இவற்றைப்போன்றே கன்று இல்லாத பசு குறுக்கிடுவதை[5] மக்கள் தீய நிமித்தமாகக் கருதினர்.

ஒரு நாட்டுக்குப் புதுப்புள் வருவதும், பழம்புள் போவதும் அந்நாட்டுக்கு வரவிருக்கும் தீமையை உணர்த்தும் நிமித்தமாகக் கொள்ளப்பட்டது.[6]

இரவலர் மன்னனை நாடிப் பொருள் வேண்டிப் புறப்படும்போது நல்லநாள் பார்த்தும், புள் நிமித்தம் பார்த்தும் செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். நாளும் புள்ளும் நன்னிமித்தமாக இல்லையாயின் பெறக் கருதும் பரிசிலும், மேற்கொண்ட பயணமும் வெற்றியடையாது எனக் கருதினர். இதனை மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடிய புறநானூற்றுப் பாடலில் 'நாளும் நல்லநாள் அன்று; புள் நிமித்தமும்(பறவைச் சகுனமும்) தீதாகத் தோன்றி இடைநின்று தடுக்கிறது. எனவே மன்னனைச் சென்று காண்பதற்குரிய காலம் இதுவன்று'[7] எனக் குறிப்பிடுவதைக் கொண்டும், வல்வில் ஓரியைக் கழைதின் யானையார் பாடிய பாடலில் 'இரவலர் தாம் பரிசிலை எதிர்நோக்கிச் செல்லும் இடத்தில், தம்மால் கருதிச் செல்லப்பட்டோர் பரிசில்தர மறுப்பினும், அவரைப் பழியார்; மாறாகத் தம்

---

[1] குறு. 260:1-4
[2] புற. 41:4-13
[3] புற. 280:2-7
[4] புற. 260
[5] குறு. 260:7
[6] புற. 20:18-19
[7] புற. 124:1-2

*வழியிடையே எதிர்ப்பட்ட புள் நிமித்தத்தையும், புறப்பட்ட முழுத்தத்தையும் பழிப்பர்'[1] எனக் குறிப்பிடுவதைக் கொண்டும் அறிந்துகொள்ளலாம்.*

மேற்குறித்தவாறு தீச்சகுனங்கள் தோன்றியபோது தீங்கு விலக வேண்டித் தெய்வத்தை வழிபடும் வழக்கமும் இருந்துள்ளது. இதற்கு 'விரித்த கூந்தலை உடைய பெண் ஒருத்தி எதிர்ப்பட இத்தீச்சகுனத்தை விலக்குதல் வேண்டி களர் நிலத்திலுள்ள கள்ளிமர நிழலின் கீழ் உண்டான தெய்வத்தை வணங்கியதாகப் புறநானூற்றுப் பாடலொன்று[2] சான்றுரைக்கின்றது.

### *4.2.3.3. பல்லி நிமித்தம்*

*பல்லி ஒலித்தலைச் சகுனமாகக் கொள்ளுதல் தொன்றுதொட்டு இன்று வரை மக்கள் வழக்கில் இருந்துவருகிறது. சங்ககாலத்தில் பல்லிநிமித்தம் காணும் வழக்கமிருந்ததைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.*

> *தலைவனின் வரவுக்காக உயர்ந்த மாளிகையில் நின்றிருந்த தலைவி பல்லி சொல்லுந்தொறும் அதனை வாழ்த்தினாள்.[3]*
>
> *பன்றி தினைக்கதிரை உண்பதற்குப் பல்லி நிமித்தம் பார்த்துச் செல்லுதல் உண்டு.[4]*
>
> *சிவந்த நாவினையும், மணியோசையைப் போன்ற தெளிந்த குரலினையும் கொண்ட கள்ளிச் செடியின் அடியில் வாழும் பல்லி, பாலை வழிச் செல்வார்க்குப் பின்வருவனவற்றை முன்னதாக அறிந்து கூறும் வாயினை உடையது.[5]*
>
> *பொருள் தேடும் பொருட்டுப் பிரிந்து செல்கின்ற தலைவன், தனது பிரிவினால் பிளந்த வாயினையுடைய பல்லி ஒலிக்கும் பொழுதெல்லாம் தெய்வத்தைத் தொழுது, 'நற்சொல் கூறுக' என அதனை வேண்டி, மனம் நடுங்கித் துன்புற்று தலைவி வருந்துவாளோ?[6]*
>
> *பல்லியானது சிறிது தடை செய்யினும், யானை மீது செல்லும் உயர்ந்தோராயினும் அவ்விடத்தினின்றும் மேலும் செல்ல நினைக்காது திரும்பிச் செல்வர்.[7]*
>
> *தினைப்புனத்தில் மேயக் கருதிய பன்றி பல்லி ஓசையைக் கேட்டு அங்குச் சென்றால் துன்பம் நேறும் என உணர்ந்து பின்னோக்கிச் சென்றது.[8]*
>
> *வினைவயின் சென்ற தலைவன் வினைமுடித்துத் திரும்புதலை எண்ணிக் காத்திருக்கும் தலைவிக்கு, அவளின் துன்பம் தீர தலைவனின் வருகைக்கு அறிகுறியாகப் பல்லி முன்னரே ஒலி செய்து அவன் வருகையைத் தெரிவிக்குமோ?[9]*

---

[1] புற. 204:10-11
[2] புற. 260:4-5
[3] அக. 9:18-20
[4] அக. 88:1-4
[5] அக. 151:11-15
[6] அக. 289:13-17
[7] அக. 387:14-16
[8] நற். 98:1-7
[9] நற். 169:1-3

> தலைவனின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தபோது அவ்விடத்தில் இனிய நிமித்தம் உண்டாகும்படி நெடிய சுவரிலுள்ள பல்லி அவர்களின் பக்கத்திலே ஒலித்துத் தேற்றியது.[1]

> நடு இரவில் தலைவனை நினைக்குந்தோறும் ஒலித்து அவன் வரவைக் குறித்தமையால் பல்லியின் குரல் தலைவியின் விருப்புக்குரியதாயிற்று.[2]

> பொருள்வயிற் பிரிந்த தலைவனின் வரவைத் தலைவியின் மனையிடத்து நன்றாகிய இடத்தே உள்ள பல்லி ஒலித்துக் கூறியது.[3]

என்ற மேற்குறித்த சங்கப்பாடல் கருத்துக்களைக்கொண்டு பார்க்கின்றபோது, பல்லி ஒலித்தல் என்பது, பின் நிகழவிருக்கும் நன்நிகழ்விற்கு நம்பிக்கை தருவதாகவும், தீமையைக் கூறி எச்சரிப்பதாகவும் அமைகிறது. அதன் வருவதுணர்த்தும் ஆற்றலை ‘முதுவாய்ப்பல்லி’[4], ‘கணிவாய்ப் பல்லி’[5] எனச் சுட்டுவதுகொண்டு தெளியலாம்.

#### *4.2.3.4. ஓந்தி நிமித்தம்*

சங்கப்பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள ஓதி(ஓந்தி) பழங்காலத்தில் நிமித்தம் உணர்த்தும் உயிர்களில் ஒன்றாகக் கருதப்பட்டது. ஓந்தி என்னும் சொல்லுக்கு அகராதிகள்[6] ஓணான், பச்சோந்தி எனப் பொருளுரைக்கின்றன. இது வெம்மை மிகுந்த வறட்சியுற்ற சுரத்திடையே வாழும் இயல்புடையதாகவும்[7], மாறிமாறி நிறம் வேறுபடும் தன்மையுடையதாகவும் இருந்ததை, “கானம் வெம்பிய வறம் கூர் கடத்திடை, வேனில் ஓதி நிறம் பெயர் முது போத்து”[8] என்ற நற்றிணைப் பாடலடி குறிப்பிடுகிறது. குறுந்தொகையில் அமைந்த பாலைத் திணைப் பாடல் ஒன்று பாலை வழியில் செல்பவர்க்கு ஓந்தி நிமித்தம் காணப் பயன்பட்டதை, “வேதின வெரிநின் ஓதி முது போத்து, ஆறுசெல் மாக்கள் புள்கொள”[9] எனச் சுட்டுகிறது.

### *4.2.4. கனவு*

தொல்பழங்காலம் தொடங்கி இன்று வரை மக்கள் கனவுகளைப் பற்றிப் பல்வேறு நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர். வாழ்வில் பின்னர் நிகழப்போவதைக் குறிப்பால் முன்கூட்டியே உணர்த்தும் ஒன்றாகக் கனவு நம்பப்படுகிறது. உளவியல் அறிஞர்கள் கனவினை அடக்கி வைக்கப்பட்ட மனவிருப்பத்தின் மறைமுகமான வெளிப்பாடு என்பர்.

சங்கப் பாடல்களில் கனவு குறித்து நிரம்பக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவற்றில் கனவின் விளைவு பற்றிப் பண்டைய தமிழர்கள் கொண்டிருந்த நம்பிக்கையை ஓரிரு பாடல்களில் மட்டுமே காணமுடிகிறது. “பல் பூமியில் விழுந்தது போலவும், எண்ணெயினைத் தலையில் தடவியது போலவும், ஆண்பன்றிமீது ஏறுவது போலவும் ஆடையைக் களைந்தது போலவும் படைக்கருவி கட்டிலோடு கீழே கவிழ்வது போலவும் அரசன் கனவு காண்பது தீய

---

[1] நற். 246:1-2
[2] நற். 333:10-12
[3] கலி. 11:19-22
[4] அக. 387:16
[5] அக. 151:15
[6] http://agarathi.com/word/ஓந்தி
[7] நற். 92:1-2
[8] நற். 186:4-5
[9] குறு. 140:1-2

குறிகளாய்க்(சகுனம்) கருதப்பட்டதைப் புறநானூறு[1] குறிப்பிடுகிறது. பெரும்பாலும் கனவுகள் தீமைகளையே முன் உணர்த்துகின்றன.

பண்டைத் தமிழர்களிடம்(புலவர்), காக்கை இறா மீனைப் பிடித்து உண்பதாகக் கனாக் காணும்[2], வண்டுகள் யானையின் கன்னத்தினின்று ஒழுகும் மதநீரைப் பருகி மகிழ்வதாகக் கனாக் காணும்[3], யானை கனவில் வேங்கையைக் கண்டதாகக் கனாக் காணும்[4], மான் தாம் நீரருந்திய அருவியையும் நரந்தம்புல்லையும் கனவில் காணும்[5] எனக் குறிப்பிடுவது அக்காலப் புலவரின் நம்பிக்கையில் எழுந்த வியப்பிற்குரிய கருத்தாகும்.

### 4.2.5. வினைப்பயன்

சங்கத் தமிழர்கள் ஊழ்(வினைப்பயன்) குறித்து மிகுந்த நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தனர். மனித வாழ்வின் அனைத்துச் செயல்பாடுகளுக்கும் அவரவர் செய்த வினையின் பயனே காரணமாகின்றன என்பதே அந்நம்பிக்கை. ''இப்பிறவியில் செய்த வினைகளின் பயன்கள் இப்பிறவியில் அடைவதே ஊழ் ஆகும்''[6] என்பார் அ.கி. நாயுடு.

ஊழ் குறித்து, ''ஊழில் நம்பிக்கையுடையவர்கள் நம் முன்னையோர். மக்கள் எய்தும் இன்ப துன்பங்களுக்கு அவரவர் முன்னைப் பிறப்புக்களிற் செய்த இருவினைகளே காரணம் என்பதும், அவை தத்தம் பயன்களைத்தர உருப்பெறுங்கால், ஊழெனப்பெறும் என்பதும், இம்மையிற் செய்யும் முயற்சிகளெல்லாம் அவ்வூழுக்கு உறுதுணையாய் அமைவனவே என்பதும் அவர் கொண்ட முடிவுகளாகும்''[7] என்ற மு. அருணாசலம் பிள்ளை கூறியுள்ள கூற்றும் நோக்கத்தக்கது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தை அடிப்படையாகக்கொண்டு, பிறவிகள் தோறும் தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் கண்டு காதல் கொள்வதற்குக் காரணமாக இருப்பது ஊழ்தான் என்பதை, ''பிறப்பு முதலிய பல வகையால் ஒற்றுமையுடைய தலைவன் தலைவியர் மனம் ஒற்றுமைப்பட்டு அன்பு மிகுவதற்கு ஏதுவாகிய ஊழ்வினைத் தெய்வத்தின் கட்டளைப்படி ஒருவரையொருவர் தாமாக எதிர்ப்படுவர்''[8] என கா. சுப்பிரமணியப்பிள்ளையும், ''ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டுக் காதல் கொள்ளுவதற்குக் காரணம் ஊழ்வினைதான்''[9] என சாமி சிதம்பரனாரும் கூறியுள்ள கருத்துக்கள் பண்டைத்தமிழ் மக்கள் ஊழின் மீது கொண்டிருந்த நம்பிகையைப் புலப்படுத்துகின்றன.

சங்கப்பாக்களை உற்றுநோக்கும்போது முற்பிறப்பில் செய்த வினைப்பயனுக்கு ஏற்பவே இப்பிறப்பில் வாழ்க்கை அமையும், இப்பிறப்பில் செய்யும் வினைக்கு ஏற்பவே மறுபிறப்பு, சுவர்க்கம், வீடுபேறு ஆகியன அமையும் என்ற உறுதியான நம்பிகையைப் பண்டைத் தமிழர்கள் கொண்டிருந்தனர். இதனைப் பெ. சுப்பிரமணியன், ''சங்க இலக்கியங்களில் பால்[10], நற்பால்[11],

---

[1] புற. 41:8-11
[2] அக. 170:10-12
[3] அக. 132:10-14
[4] கலி. 49:1-6
[5] பதி. 11:21-22
[6] அ.கி. நாயுடு, தொல்காப்பியர் கண்ட தமிழர் சமுதாயம், ப. 70
[7] மு. அருணாசலம்பிள்ளை, ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள், பக். 89-90.
[8] கா. சுப்பிரமணிய பிள்ளை, பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியப் பொருளதிகாரக் கருத்து, ப. 60
[9] சாமி சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், பக். 111-112.
[10] குறு. 299, 366; ஐங். 110; புற. 75, 176, 236
[11] குறு. 246

நோய்ப்பால்[1], அறனில்பால்[2], முறை[3], அறவினை[4], இருமைவினை[5], செய்வினை[6], தொல்வினை[7], தொல்வினைப்பயன்[8], நல்வினை[9], பழவினை[10], முன்னியவினை[11], வினை[12], வினையின் விழுப்பயன்[13] ஆகிய சொற்கள் ஊழ்க்கோட்பாட்டினை உணர்த்துகின்றன.''[14] எனச் சுட்டிக்காட்டியுள்ளது உளங்கொள்ளத்தக்கது.

சங்கத் தமிழரின் ஊழ்பற்றிய நம்பிகைக்குப் பின்வரும் சங்கப்பாடல் கருத்துக்கள் சான்று கூறுகின்றன.

> வழிவழிவரும் அரச உரிமையானது அரசனுக்குப்பின் அவன் மக்களுக்கு ஊழின் காரணமாகத் தரப்படுவதாக நம்பப்பட்டதை, ''பால் தர வந்த பழ விறல் தாயம்''[15] என்ற புறநானூற்றுப் பாடலடி குறிப்பிடுகிறது.
>
> மலையமான் திருமுடிக்காரி அவன் செய்த நல்வினையாகிய நல்லறத்தின் பயனைத் தெய்வலோகத்துக்குச் சென்று நுகரும் பொருட்டுப் போயினான்.[16]
>
> நன்மையும் தீமையும் அவரவர் வினைப்பயனால்(ஊழ்) தாமே வரினல்லது பிறரால் வருவதன்று; ஆகையால் உயிர்கள் அனைத்தும் தாம்தாம் செய்த வினைக்கேற்ப இன்பமும் துன்பமும், உயர்வும் தாழ்வும், செல்வமும் வறுமையும் எய்தும்.[17]
>
> பாரி இறந்தபின் அவன் பிரிவினால் வருந்திய கபிலர், 'இப்பிறப்பில் நீயும் நானும் கூடி இன்பமாய் இருந்தவாறு போல மறுபிறவியிலும் உன்னுடன் கூடி வாழ்வதை உயர்ந்த விதி சேர்க்குமாக' என்று வேண்டுகிறார்.[18]
>
> வினைப்பயனின் காரணமாகவே ஒருவனுக்குப் பொருட் செல்வம் அமையும்.[19]
>
> ஒருவன் ஈட்டக் கருதிய பொருள் அவன் செயலால் அன்றி, அவன் செய்த நல்வினையால் ஊழின் காரணமாக வாய்க்கக் கூடியது.[20]
>
> மன்னன் அறம் வழுவாமல் குடிமக்களைக் காப்பானாகில் அவன் தான் செய்த தொல்வினைப் பயனைத் துய்க்க மேலுலகத்திற்கு விரும்பிச் செல்ல முடியும்.[21]
>
> செய்த நல்வினையின் பயனாக ஒருவன் விண்ணுலகம் அடைந்தாலும் அவன் செய்த தீவினையின் பயனை அவனுக்கு ஊழ் தராமல் போகாது.[22]
>
> இறைவனை அடைவதற்கும், அவன் அருளைப் பெறுவதற்கும் முன்செய்த நல்வினைப் பயன் வேண்டும்.[23]

---

[1] நற். 107; குறு. 128
[2] ஐங். 376
[3] புற. 192
[4] புற. 357
[5] பரி. 13
[6] நற். 210; புற. 27, 38
[7] நற். 88
[8] கலி. 118; அக. 243
[9] நற். 107; அக. 400; புற. 174, 214, 367
[10] கலி. 21
[11] புற. 363; திரு. 66
[12] கலி. 149
[13] பரி. தி. 1
[14] பெ. சுப்பிரமணியன், பழந்தமிழ் நூல்களில் ஊழ், ப. 53.
[15] புற. 75:2
[16] புற. 174
[17] புற. 192
[18] புற. 236
[19] நற். 210:5-6
[20] கலி. 21:10-11
[21] கலி. 118:1-3
[22] கலி. 149:11
[23] திரு. 62-66

வையையில் நீராடும் பேற்றினை முற்பிறப்பில் செய்த தவத்தினால் இப்பிறப்பில் பெற்றோம்.[1]

என மேற்குறித்த இவை மட்டுமின்றி, இம்மை மறுமை, துறக்கம் நரகம், வீடுபேறு, இன்பம் துன்பம் போன்ற அனைத்திற்கும் ஊழே காரணம் என மக்கள் நம்பினர்.

### 4.2.6. தெய்வம்

ஆதிகாலத்தில் மக்கள் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஆற்றலைக் கண்டு அச்சம் கொண்டனர். அத்தகைய அதீத ஆற்றல் கொண்ட சக்திகளைச் சடங்குகள் செய்து வழிபடுவதின் மூலம் தங்களைத் தற்காத்துக் கொள்ளலாம், தேவையானவற்றை வேண்டிப் பெறலாம் என எண்ணினர். இத்தகைய எண்ணத்தின் அடிப்படையில் உருவானவையே தெய்வம் பற்றிய நம்பிக்கையாகும். சங்கப் பாடல்களில் கடவுள் அல்லது தெய்வம் எனக் குறிப்பிடப்படுபவை, அணங்கு, சூர், பேய், தெய்வ கணங்கள், கொற்றவை, இந்திரன், வருணன், முருகன், சிவன், திருமால் போன்ற பல தெய்வங்களையும் குறிப்பிடுவனவாக உள்ளன. அவை உருவுடையன - உருவமற்றன, காக்கும் தெய்வங்கள் – வருத்தும் தெய்வங்கள், நன்மைதருவன – தீமை தருவன, ஆண்தெய்வம் - பெண்தெய்வம் என்ற பல்வேறு தன்மைகளில் வழிபடப்பட்டன. இத்தெய்வங்களின் உறைவிடங்களாக மலை, மரம், தூண், பாழிடம், கோயில் என்ற பல்வேறு இடங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

#### 4.2.6.1. நோக்கம்

சங்ககால மக்கள் பல்வேறு நோக்கங்களுக்காகத் தெய்வத்தை வழிபட்டனர். தெய்வத்தை வேண்டினால் எண்ணியது நடக்கும் என நம்பினர். அதற்காக வேண்டி நேர்த்திக் கடன்களையும் செய்தனர். தெய்வத்தை வழிபட்டால் நோய்கள் தீரும், மழை வளம் பெருகும், வாழ்நாள் சிறக்கும், தமக்குக் காவலாகத் துணை நிற்கும், வழிபாடு நிகழ்த்தினால் தெய்வத்தின் சீற்றம் தணியும், பிள்ளைப்பேறு வாய்க்கும், மேற்கொண்ட செயல்கள் தடையின்றி முடியும். எனப் பல்வேறு நம்பிக்கைகள் கடவுளை மையமாகக்கொண்டு அக்கால மக்கள் மனத்தில் வலுப்பெற்றிருந்தன.

கடவுளை வழிபட்டால் தன்நிலை உயரும் என நம்பினர். இதனை, “நிலை உயர் கடவுட்குக் கடம்பூண்டு”[2] எனக் குறிப்பதுகொண்டு அறியமுடிகிறது.

ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழும் வாழ்க்கைக்குக் கடவுளே காரணம் எனக்கருதியதை, “உடன் உறை வாழ்க்கைக்கு உதவி உறையும் கடவுளர்”[3] எனக் கலித்தொகை சுட்டுகிறது.

மணநாள் விரைவில் வரவேண்டும் எனப் பெண்கள் இல்லுறை தெய்வத்திற்குப் பலியிட்டு கைகுவித்து வணங்குவதை, “வல்லே வருக, வரைந்த நாள்!’ என, நல்இறை மெல்விரல் கூப்பி, இல்உறை கடவுட்கு ஆக்குதும், பலியே!”[4] என அகநானூறு குறிப்பிடுகிறது.

---

[1] பரி. 11:137-140 [2] கலி. 46:16 [3] கலி. 93:6-7 [4] அக. 282:16-18

திருமண வினையின்போது கடவுளை வழிபட்டனர்.[1] மன்னன் நீண்டநாள் வாழவேண்டி தெய்வத்தை வழிபட்டனர்.[2] தலைவியின் நோய் கடவுளை வழிபட்டால் தீரும் என நம்பினர்.[3]

தெய்வம் சினம் மிக்கது என்றும், அத்தெய்வத்தின் சினத்தை யாழிசைத்துத் தணிக்கமுடியும் என்றும் பாணர்கள் நம்பிக்கைகொண்டிருந்ததை, "தெறல் அருங் கடவுள் முன்னர், சீறியாழ் நரம்பு இசைத்தன்ன"[4] என நற்றிணை குறிப்பிடுகிறது.

குன்றத்தின்கண் வாழும் குறவன் தன் குடித்தெய்வமான முருகனை வழிபட்டு, குறையிரந்து வேண்டி, பெண் மகவினைப் பெற்றதை, "குன்றக் குறவன் கடவுட் பேணி இரந்தனன் பெற்ற எல் வளைக் குறுமகள்"[5] எனக் குறிப்பது கொண்டு தெய்வத்தை வேண்டினால் பிள்ளைப்பேறு வாய்க்கும் என்ற நம்பிக்கை அக்கால மக்களிடம் நிலவியதை உணரமுடிகிறது.

தெய்வத்திற்குப் பூசை செய்து வழிபட்டால் வேண்டியதைப் பெறலாம் என நம்பினர். இதனை, "கரு வயிறு உறுக எனக் கடம்படுவோரும், செய் பொருள் வாய்க்க எனச் செவி சார்த்துவோரும், ஐ அமர் ஆடுக என அருச்சிப்போரும்"[6] எனவரும் பரிபாடல் அடிகள் காட்டுகின்றன.

### 4.2.6.2. நடுகல் தெய்வம்

ஒருநாடு அல்லது ஒரு குழுவின் நன்மைக்காகப் போரிட்டு இறந்த வீரனின் ஆற்றலையும் தியாகத்தையும் போற்றும் விதமாக அக்காலத்தில் நடுகற்களை நட்டுப் பெருமைப்படுத்தியுள்ளனர். நாளடைவில் அந்நடுகற்களுக்குப் பல்வேறு சடங்குகளைச் செய்து கடவுளாக வழிபடப்பட்டனர்.

ஒரு காலத்தில் நினைவுச் சின்னங்களாகக் கருதி போற்றப்பட்ட நடுகற்கள் காலப்போக்கில் நடுகள் வழிபாடாக மற்றம் மாற்றம் பெற்றது. இதற்கு ஆவிபற்றிய நம்பிக்கையே அடிப்படையாக அமைந்தது எனலாம். பிரேசர் என்ற மானிடவியலாளர் இத்தகைய நம்பிக்கை சமூகத்தில் நிலவுவதற்குரிய காரணமாக,"இறந்தவனது ஆன்மாவைச் சில சடங்குகள் மூலம் ஓர் குறிப்பிட்ட இடத்திற்கு வரவழைக்கலாம். அங்குள்ள ஓர் பொருளில் நுழைந்து கொள்ளச் செய்யலாம் என்ற நம்பிக்கை உலகமெங்கும் பண்டைய மக்களின் பண்பாட்டில் காணப்படுகிறது"[7] எனக் குறிப்பிடுவார்.

> கரந்தை வீரர்கள் தம் வலிய ஆண்மைக்கு அறிகுறியான மணற் குன்றின் மேலுள்ள நடுகல் தெய்வத்தை வழிபடுவதற்காக அக்கல்லில் மயில் தோகைகளைச் சூட்டினர்.[8]
>
> போரில் இறந்துபட்டவனுக்கு வைக்கப்பட்டுள்ள நடுகல்லில் தெய்வமாய் நின்றவனை வழிபடுதலன்றி நெல்லைத் தூவி வணங்கப்படும் கடவுளர் இவ்வூரில் இலர்.[9]
>
> மாமர நிழலில் நடுகல்லாகிய கடவுள் நடப்பட்டிருக்கும்.[10]

---

[1] அக .136:6
[2] கலி. 103:76, 105:1-7
[3] நற். 351:1-4
[4] நற். 189:3-4
[5] ஐங். 257:1-2
[6] பரி. 8:106-108
[7] நா. வானமாமலை, நடுகற்களும் நம்பிக்கைகளும், ப. 10
[8] அக. 35:7-8
[9] புற. 335:11-12
[10] மலை. 396

என வரும் சங்கப்பாடற் கருத்துக்கள் இதனைத் தெரிவிக்கின்றன. இந்நடுகல் வழிபாடு இறந்த வீரனின் ஆற்றலைத் தானும் பெறலாம் என்ற நம்பிக்கையில் தோன்றிய ஒன்றாகக் கருதலாம்.

### 4.2.6.3. மலை உறை தெய்வம்

மலைகளில் தெய்வம் உறைவதாகக் கருதும் நம்பிக்கை பழங்காலந்தொட்டு இன்று வரையிலும் தொடர்வதைக் காணமுடிகிறது. முருகன், திருமால், சிவன் போன்ற கடவுள்களுக்கு மலைமீது கோயில் அமைத்து வழிபடப்பட்டு வருவதே இதற்குச் சான்றாகும். பெயரோ உருவமோ சுட்டப்படாத நிலையில் சங்கப் பாடல்களில் பல்வேறு இடங்களில் மலைகளில் தெய்வம் உறைவதாகக் குறிப்பிடப்படுவதை, "கடவுள் கற்சுனை"[1], "கடவுள் ஓங்கு வரை ,[2]""தெய்வம் காக்கும் தீதுதீர் நெடுங் கோடு"[3], "தன் மலைத் தெறல் அரு மரபின் கடவுட் பேணி, [4]" "சினமிகு முருகன் தண்பரங்குன்றம்"[5], "கடவுள் ஓங்குவரைக்கு ஓக்கி"[6], "கறி வளர் சிலம்பிற் கடவுட் பேணி"[7], "மலை உறை கடவுள் குல முதல் வழுத்தி"[8], "அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமை, பெருங்கல் நாடன் பேகன்"[9], கடவுள் நிலைஇய கல் ஓங்கு நெடு வரை, "[10]"கடவுள் அயிரையின் நிலைஇ"[11], "பிறங்கு மலை மீமிசைக் கடவுள் வாழ்த்தி"[12], "பேர் இசை நவிரம் மேஎய் உறையும், காரி உண்டிக் கடவுள்"[13] என வரும் அடிகள் உணர்த்துகின்றன. இவை மட்டுமின்றி முருகன், திருமால், பலராமன் போன்ற கடவுளர்களும் மலைகளில் உறைவது பற்றிப் பரிபாடல்[14] குறிப்பிடுகிறது.

### 4.2.6.4. நீர்த்துறை உறை தெய்வம்

நீர்த்துறையிடத்து தெய்வம் உறைவதான நம்பிக்கை தொன்றுதொட்டு நிலவிவரும் வழக்கமாகும். இன்றும் நாட்டுப்புறப் பகுதிகளில் வாழும் மக்கள் குளக் கரையிலும், ஏரிக்கரையிலும் அமைந்துள்ள தெய்வங்களை வழிபடுகின்றனர். இது நீர்த்துறையில் தெய்வம் உறைவதான பழங்கால நம்பிக்கையின் நீட்சியாகும்.

தன் மகளுக்கு ஏற்பட்ட நோய் தணியவேண்டி தாய் ஒருத்தி நீர்த்துறையிடத்து நிலைபெற்ற கடவுளுக்குக் கள்ளையும் மாலையையும் வெள்ளாட்டுக் கிடாயினையும் சேர்த்துக் காணிக்கைப் பொருள்களாகத் தந்து வழிபட்டாள்[15] என்றும், ஏறுதழுவும் இளைஞர்கள் நீர்த்துறையிலும், ஆலமரத்தின் கீழும், பழைய வலிமையுடைய மரங்களின் கீழும் உறையும் தெய்வங்களை முறையாகப் பரவி வழிபட்டபின்னர் தொழுவினுள் புகுந்தனர்[16] என்றும், நீர்த்துறைக்கண் உறையும் தெய்வமொன்று தம் மகளை அணங்கியிருத்தல் கூடுமெனத் தலைவியின் பெற்றோர் தெய்வக்கடன் இறுக்க முயன்றனர்[17] என்றும், இத்தகைய தெய்வங்கள் அங்குள்ள பழமையான மரங்களில் தங்கி உறைவதாகவும்[18] குறிப்பிடப்பட்டுள்ள சங்கப் பாடற்கருத்துக்கள் நீர்த்துறைக்கண் தெய்வம் உறைவதான பண்டைத் தமிழரின் நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றன.

---

[1] நற். 34:1
[2] நற். 165:4
[3] நற். 201:6
[4] அக. 13:2-3
[5] அக. 59:11
[6] அக. 348:8
[7] ஐங். 243:1
[8] ஐங். 259:3
[9] புற. 158:11-12
[10] பதி. 43:6
[11] பதி. 79:18
[12] குறி. 208-209
[13] மலை. 82-83
[14] பரி. 15
[15] அக. 156:13-17
[16] கலி. 101:13-14
[17] ஐங். 182
[18] நற். 83:1-2

### *4.2.6.5. கடல் தெய்வம்*

*கடலில் தெய்வம் உறைவதாக நம்பினர். இதனைத் தலைவியொருத்தி தன் கணவனைக் காதற்பரத்தை தன்னிடமிருந்து பிரித்தாள் எனக் கருதி புலந்தபோது, தான் அவ்வாறு செய்யவில்லை; அவ்வாறு செய்துள்ளேன் ஆயின் அத்தவறுக்குத் தண்டமாகக் கடல் தெய்வத்தால் துன்புறுத்தப்படுவேனாகுக எனப் பரத்தை சூள் உரைப்பதை, "தண்பெரும் பௌவம் அணங்குக – தோழி!"[1] எனக் குறிப்பிடுவது கொண்டும், "அணங்குடை முந்நீர்"[2] எனக் குறிப்பிடுவதுகொண்டும் அறியமுடிகிறது.*

### *4.2.6.6. மரங்களில் உறையும் தெய்வம்*

*மரவழிபாடு மிகத் தொன்மையானது. மரங்களில் தெய்வம் உறைவதாகக் கருதி வழிபாடு செய்யும் நம்பிக்கை உலகம் முழுதும் காணப்படுகிறது. இன்றும் வேப்பமரம், அரசமரம், ஆலமரம் போன்றன வழிபடப்பட்டு வருகின்றன. கோயில்களில் தலவிருட்சம் என்ற அடிப்படையில் மரங்கள் வழிபாட்டுக்குறியனவாக விளங்குகின்றன. சிந்துவெளி முத்திரைகளிலும் அரசமரம் குறிப்பிடத்தக்கதாக விளங்குகின்றது. பழங்குடி மக்களின் குலமரபுச் சின்னங்களாக மரங்களே கருதப்பட்டு வழிபாட்டுக்குறியனவாக விளங்குகின்றன. பனை, ஆத்தி, வேம்பு போன்றன மூவேந்தர்களின் குலமரபுச் சின்னங்களாக விளங்கியதும் நோக்கத்தக்கது. கோயில் அமைத்துத் தெய்வங்களை வழிபடுவதற்கு முன்பு, தெய்வ வழிபாடு முதன்முதலில் மரங்களின் அடியில்தான் தோற்றம் பெற்றது.*

### *4.2.6.6.1. ஆலமரம்*

*சங்ககால மக்களிடம் ஆலமரத்தில் தெய்வம் உறைவதான நம்பிக்கை காணப்பட்டதை, ஏறுதழுவும் இளைஞர்கள் 'நீர்த்துறையிலும், ஆலமரத்தின் கீழும், பழைய வலிமையுடைய மரங்களின் கீழும் உறையும் தெய்வங்களை முறையாகப் பரவி வழிபட்டபின்னர் தொழுவினுள் புகுந்தனர்'[3] எனக் கலித்தொகையும், 'நெடிய விழுதுகளிறங்கிய ஆலமரத்தில் உறையும் கடவுளுக்குப் படைத்து வைத்த பலியுணவைச் சேர்ந்த விரல்களையுடைய காக்கைகள் உண்ணும்'[4] என நற்றிணையும் குறிப்பிடுவதோடு, 'கடவுள் ஆலத்து'[5], "ஆல் அமர் கடவுள்"[6] என வரும் பாடலடிகளும் புலப்படுத்துகின்றன.*

### *4.2.6.6.2. பனை*

*பனை மரங்களில் தெய்வம் உறைவதான நம்பினர். 'நெய்தல் நிலத்தில் நெடுநாட்களாக வாழ்கின்ற தெய்வம் தங்கப்பெற்ற பருத்த அடியை உடைய ஊர்ப்பொதுவிலே உள்ள பனைமரத்தின் மடலில் அன்றில் பறவை கூடுகட்டி இருந்தது,'[7] என நற்றிணைப் பாடலொன்று குறிப்பிடுகிறது. இதுகுறித்து பின்னத்தூரார், "தம் குலதெய்வத்தையும் ஊர்ப்பொதுத் தெய்வத்தையும் பனையிலேற்றுவித்து வணங்கி வருவது தொன்று தொட்டு வரும் நெய்தல் நிலத்து*

---

[1] குறு. 164:4
[2] அக. 207:1
[3] கலி. 101:13-14
[4] நற். 343:4-5
[5] புற. 199:1
[6] புற. 198:9
[7] நற். 303:3-4

வழக்கு"[1] எனக் குறிப்பிடுவதும் மேற் குறித்த பனையில் தெய்வம் உறைவதான நம்பிக்கையைப் புலப்படுத்துவதாக அமைகிறது.

#### 4.2.6.6.3. வாகை

'வீரர் பனங்குருத்தோடு சேர்த்துத் தொடுத்த வெற்றிக்குக் காரணமான கொற்றவை வாழ்தலையுடைய வாகை மரத்தினது பூக்களையுடைய மலர் மாலையை அணிந்திருந்தனர்,[2] எனப் பதிற்றுப்பத்து வாகை மரத்தில் தெய்வம் உறைவதைப்பற்றிக் குறிப்பிடுகிறது.

#### 4.2.6.6.4. வேம்பு

'பால் தரும் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துகொண்ட வெட்சி வீரர்கள், தெய்வம் வாழும் பருத்த அடிமரத்தைக்கொண்ட வேப்பமரத்தடியில், கவர்ந்து கொண்டு வந்த ஆக்களுள் கொழுவிய ஆவினைக் கொன்று, அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்துப் பலியிட்டு, அதன் புலாலைச் சமைத்து உண்டனர்'[3] என வேப்பமரத்தில் தெய்வம் உறைவதைப்பற்றி அகநானூறு சுட்டுகிறது.

#### 4.2.6.6.5. கடம்பு

'ஊர்மன்றத்தில் உள்ள கடம்ப மரத்தில் உறைகின்ற, பழமை வாய்ந்த கடவுள் கொடுமையுடையாரைக் கொல்லும்'[4] எனக் கடம்பமரத்தில் தெய்வம் உறைவதைப் பற்றிக் குறுந்தொகை குறிப்பிடுகின்றது. இவை மட்டுமின்றி வேங்கை, கள்ளி, போன்ற மரங்களில் கடவுள் உறைவதை முறையே "எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்"[5], "கள்ளி நீழற் கடவுள்"[6], எனச் சுட்டுவதோடு, 'கடவுள் முது மரத்து உடன் உறை பழகிய'[7], "கடவுள் மரத்த"[8] எனப் பல்வேறு மரங்களிலும் தெய்வம் உறைவதான அக்கால மக்களின் நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றது.

### 4.2.6.7. தூண்

தூண்களில் தெய்வம் உறைவதாக மக்கள் நம்பியதை, சுரவழியில் புற்றுக்களைக்கொண்ட சுவரினை உடைய அம்பலத்தில், வழிபடுவார் இல்லாமையால் தெய்வம் போய்விட்ட வலிய அடிப்பகுதியினைக் கொண்ட தூண் இருந்ததை, "புற்றுடைச் சுவர புதல்இவர் பொதியில், கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து"[9] என அகநானூறும், பாண்டியனால் எதிர்க்கப்பட்ட பகைவர் நாடு பாழ்பட்டு வழிபடுவார் இன்மையால் தூண்களில் உறையும் தெய்வங்கள் அகன்றுவிடும் என்பதை, "கலிகெழு கடவுள் கந்தம் கைவிட"[10] எனப் புறநானூறும் குறிப்பிடுவதுகொண்டு அறியலாம்.

### 4.2.6.8. கற்புடைப் பெண்கள்

கற்புடைய பெண்கள் தெய்வ ஆற்றல் பொருந்தியவர்களாகக் கருதப்பட்டுள்ளனர். இதனைச் சங்கப் பாக்கள் 'கடவுள் சான்ற கற்பு'[11] எனப் பலவிடங்களிலும் குறிப்பிடுகிறது. இங்கும் கடவுள் பற்றிய நம்பிக்கை குறிப்பிடப்படுவது நோக்கத்தக்கது.

---

[1] நற்றிணை மூலமும் உரையும், என்.சி.பி.எச்., ப. 558
[2] பதி. 66:14-15
[3] அக. 309:1-6
[4] குறு. 87:1-2
[5] நற். 216:6
[6] புற. 260:5
[7] நற். 83:2
[8] அக. 270:12
[9] அக. 307:11-12
[10] புற. 52:12
[11] புற. 198:3; குறு. 252:4; அக. 184:1, 314:15

*4.2.6.9. முரசு*

*கிணை,[1] முரசு[2] போன்ற தோல் இசைக் கருவிகளிலும் தெய்வம் உறைவதாக மக்கள் நம்பினர். அக்கடவுளை வணங்கும்பொருட்டுப் பலியிட்டு வழிபாடு நிகழ்த்தப்பட்டது.*

*4.2.6.10. வாயில்*

*அரண்மனை வாயிலிடத்தும், ஊர் வாயிலிடத்தும் காவல் தெய்வங்கள் உறைவதாக நம்பினர். அவற்றுக்குப் பலியிட்டு வழிபட்டனர். இதனைக் 'கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன அடையா வாயில்'[3] என்றும், 'வேளூர் வாயில்.... உயர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்'[4] என்றும் சங்கப் பாடல்கள் சுட்டக் காணலாம்.*

*4.2.6.11. காடு*

*தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு குறித்து ஆராய்ந்த பி. எல். சாமி, "சங்க இலக்கியங்களில் தாய்த்தெய்வம் காட்டில் உறைபவளாகவே கூறப்பட்டுள்ளது மிகவும் முக்கியமான செய்தியாகும்"[5] எனக் குறிப்பிடுகிறார். அக்கால மக்களும் காடுகளில் தெய்வம் உறைவதாக நம்பினர். இதனை, சேர வேந்தனின் நாட்டில் பெரிய காடுகளெல்லாம் கடவுளர் விரும்பி உறையும் கோயில்களாக ஆயின என்பதை 'காடே கடவுள் மேன'[6] எனப் பதிற்றுப்பத்தும், பாடினி காட்டகத்தே உறையும் தெய்வங்கள் மனமகிழும்படி அவற்றிற்குச் செய்யும் முறைமைகளைச் செய்து வழிபட்டதை, "காடுஉறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை"[7] எனப் பொருநராற்றுப்படையும் குறிப்பிடுகின்றன.*

*4.2.7. மறுமை*

*சங்ககாலச் சமூகத்தில் மேலுலகம்(மறுமை) பற்றிய நம்பிக்கையும், மறுபிறப்புப் பற்றிய நம்பிக்கையும், வினைப்பயன் பிறவிகள்தோறும் தொடர்வது பற்றிய நம்பிக்கையும் மக்களிடையே முக்கியத்துவம் பெற்ற ஒன்றாக விளங்கியது. விண்ணுலக வாழ்வான சொர்க்க உலகத்தை அடைய வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளைக் குறித்த கருத்தாக்கங்களும் அக்கால மக்களிடம் மேலோங்கி இருந்தன. சங்க இலக்கியத்தில் 'மறுமை' என்னும் சொல் மேலுலகம், மறுபிறப்பு என்ற இருபொருளில் பயின்றுவந்துள்ளது.*

*"மண்ணுலகில் வாழும் காலத்தில் நல்லறங்களைச் செய்து வாழ்ந்தால் அவ்வறத்தின் பயனைத் தேவலோகத்துக்குச் சென்று நுகரும் பேறு கிடைக்கும்"[8], "புதல்வரைப் பெற்றோர் இவ்வுலக வாழ்விலும் புகழோடு விளங்கி மறுமை உலக வாழ்வையும் எய்துவர்"[9], "பேகன் அளவில்லாமல் கொடுத்தது அவன் மறுமைப்பயன் நோக்கி அன்று, இரவலரின் வறுமைத் துன்பத்தைப் போக்குவதை மட்டுமே நோக்கமாகக் கொண்டது"[10] என வரும் சங்கப் பாடல் கருத்துக்கள் பழந்தமிழ் மக்களிடம் நிலவிய மேலுலகம் பற்றிய நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றன.*

---

[1] புற. 399:24-26
[2] பதி. 30:33-38
[3] சிறு. 205-206
[4] அக. 166:4-7
[5] பி. எல். சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு, ப. 4
[6] பதி. 13:20
[7] பொரு. 52
[8] புற. 174:19-20
[9] அக. 66:1-4
[10] புற. 141:14-15

*மறுபிறவிபற்றிய நம்பிக்கையும் பண்டைத் தமிழர்களிடம் வேரூன்றி இருந்தது. "செம்மையான வழிகளில் இருந்து மாறுபட்டுச் சென்று பொருள் தேடுவார்க்கு அப்பொருள் இப்பிறவியிலும் மறுபிறவியிலும் பகையாக விளங்கும்"[1], "காதலன் பிரிவால் இறந்து போக அஞ்சவில்லை; அங்ஙனம் இறந்து மறுபிறப்பு எய்தினால் அமையும் மறுபிறப்பு மனிதப் பிறப்பன்றி வேறாய்ப் பிறந்து என் காதலனை மறந்துவிட நேருமோ என்றே அஞ்சுகிறேன்"[2], "இப்பிறவியில் செய்த அறச்செயல் மறுபிறப்பிற்கு உதவும்"[3], "இப்பிறப்பு மாறி, மறுபிறப்பு வருவதாயினும், நீயே என் கணவனாய் ஆகவேண்டும், உன் மனத்திற்கு ஒத்தவள் நானாகவே இருக்கவேண்டும்"[4], "தலைவியோடு தான் கொண்ட நட்பு மறுமை உலகத்திலும் தொடரும்"[5], "கொல்லும் தன்மையுடைய ஏற்றின் கொம்புக்கு அஞ்சுகின்றவனை ஆயமகள் மறுபிறப்பிலும் தழுவமாட்டாள்"[6] எனவரும் சங்கப் பாடல் கருத்துக்களைக்கொண்டு இதனை அறியலாம்.*

#### *4.2.7.1.* **இம்மை**

*இவ்வுலக வாழ்வில் பிறர்க்கு நன்மை செய்து வாழ்வோர்க்கு என்றும் தீமை வருவதில்லை என்ற நம்பிக்கை சங்கப் பாடல்கள் காட்டும் சமூகத்தில் இருந்தது. இதனை,*

> "………. 'இம்மை
> நன்று செய் மருங்கில் தீது இல்' என்னும்
> தொன்றுபடு பழமொழி"[7]

*என்ற அகநானூற்றுப் பாடலடிகள் உணர்த்தும். மேலும், இது மிகத்தொன்மையான நம்பிக்கையாகப் பண்டைச் சமூகத்தில் இருந்ததை, 'தொன்றுபடு பழமொழி' என்ற தொடர் உணர்த்துகிறது.*

#### *4.2.7.2.* **துறக்கம்(சுவர்க்கம்)**

*சங்கப் பாடல்களில் 'உயர்நிலை உலகம்'[8], 'உயர் உலகு'[9], 'பெரும்பெயர் உலகம்'[10], 'உயர்நிலை உலகம்'[11], 'அரும்பெறல் உலகம்'[12], 'தேவர் உலகம்'[13], 'அரிது செல் உலகம்'[14], 'மேலோர் உலகம்'[15], 'உடம்பொடு வாரா உலகம்'[16] என்பன தேவர்கள் வாழ்வதாகக் கருதப்படும் சுவர்க்க உலகத்தைப்பற்றிக் குறிப்பிடுவன. இவை பழந்தமிழர்களிடம் காணப்பட்ட சுவர்க்கம் குறித்த நம்பிக்கைக்குச் சான்றுரைக்கின்றன.*

*துறக்க உலகம் பற்றிய நம்பிக்கை சங்ககால மக்களிடத்துக் காணப்பட்டதை, 'புகாரின் கடற்கரைப் பகுதிகளில் கட்டப்பட்ட மாடங்கள், துறக்க உலகு போல் அழகுடனும் ஒளியுடனும் காணப்பட்டன'[17], 'துறக்கவுலகமாகிய வானுலகின் அழகினை வையைத் தனது நீரின் நிழலிலே காட்டும்'[18], 'உயிர்கள் தம் முயற்சியால் மேலுலகத்தை அடைவது அரிது. அதனை எளிதாகப் பெறுவதற்கு உரிமை வழங்கும் சிறப்பினைக் கொண்டது திருமாலிருங்குன்றம்'[19], 'திருமாலை வழிபடுவோர் அவன் விரும்பி உறைகின்ற திருவைகுந்தமாகிய வானுலகம்*

---

[1] கலி. 14:14-15
[2] நற். 397:7-9
[3] புற. 134:1
[4] குறு. 49:3-5
[5] குறு. 199:8
[6] கலி. 103:63-64
[7] அக. 101:1-3
[8] கலி. 139:36
[9] கலி. 138:31
[10] குறு. 83:2
[11] குறு. 361:2
[12] அக. 213:18
[13] புற. 228:11
[14] புற. 260:21
[15] புற. 240:6
[16] புற. 341:14-15
[17] பட். 104-105
[18] பரி. 12:84
[19] பரி. 15:16-17

அவர்க்கு உரிமையாதலை உடையது'[1], 'பெறுதற்கு அரிய அமிழ்தமே உண்ணும் உணவாகப் பெரும் புகழையுடைய துறக்க உலகத்தையே அன்னை பெறுவாளாக'[2], 'அன்னைக்கு எல்லாப்பேற்றினும் உயர்ந்த நிலைத்த உலகமான வீடு பேறும் சிறிது கைம்மாறாகத்தான் அமையும்'[3], 'வானுலகில் வாழும் தேவர் தலைவனாகிய இந்திரன்'[4] எனக் குறிப்பிடப்பட்டுள்ளவற்றைக்கொண்டு அறிந்துகொள்ளலாம்.

துறக்க உலகப் பேறானது, அறம், நல்வினை, தவம், கணவன் மேல் கொண்ட உண்மையான பற்று, போரில் உயிர் துறத்தல், வடக்கிருத்தல் போன்ற நற்செயல்களால் கிட்டும் என அக்கால மக்கள் நம்பியதை, 'மன்னன் தான் செய்த அறத்தின் பயனைத் துய்ப்பதற்காகச் சுவர்க்கத்தை விரும்பிச் சென்றான்'[5], 'நல்வினை செய்தால் வானுலக வாழ்க்கை கிட்டும்'[6], 'மன வேட்கை அடங்குதலினாலே அரிய தோற்றத்தை உடைய செயற்கரிய தவத்தை முயன்றோர், தம்முடைய உடம்பை இவ்வுலகிலேயே ஒழித்து, உயர்ந்த சுவர்க்க உலகத்தைப் பெற்றார்'[7], 'தவம் செய்வதால் உயர்ந்த நிலை உடைய சுவர்க்கத்தை அடையலாம்'[8], 'கணவர் மேலுள்ள வேட்கையோடு இறந்துபட்டவர்கள் குற்றம் இல்லாத சுவர்க்கத்தே சென்று அவர்கள் விரும்பியவற்றை விரும்பியாங்கு பெறுவர்'[9], 'போரில் இறந்துபட்ட வீரன் தேவர் உலகத்திற்குச் செல்வான்'[10], 'பெருஞ்சேரலாதன் வடக்கிருந்து உயிர் துறந்த செய்தியைக் கேட்ட சான்றோர் பலரும் பெறுதற்கரிய துறக்கத்திற்கு அவனோடு தாமும் செல்லும் பொருட்டுத் தத்தம் உயிரினை நீத்தனர்'[11] எனச் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

அதேபோல் தீவினை புரிதல், பெண் கொலை புரிதல் போன்றன நரகத்தை அடைய வழிவகுக்கும் என்பதை, 'பெண் கொலை புரிந்த நன்னனைப் போல மீண்டு வர இயலாத நரகத்துக்கு அன்னை செல்வாளாக'[12], 'அருளையும் அன்பையும் ஒழித்துத் தீவினை புரிதலான் நரகத்திலிருந்து நீங்காது இருக்கும் தன்மையை அடைபவர் சிலர்'[13] எனவரும் பாடல் கருத்துக்கள் புலப்படுத்துகின்றன.

#### *4.2.8. மழைபற்றிய நம்பிக்கை*

பழங்காலமக்கள் இயற்கையைச் சில சடங்குகளின் மூலம் கட்டுப்படுத்தமுடியும் என நம்பினர். எனவே தாம் செய்வதைப் பார்த்து இயற்கையும் அவ்வாறே திரும்பச் செய்யும் எனக் கருதி சில பாவனைச் சடங்குகளை மேற்கொண்டனர். அத்தகைய பாவனைச் சடங்குகளைச் சங்ககாலக் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவர் இன மக்கள் மேற்கொண்டதைச் சங்கப்பாடல்கள் காட்டுகின்றன.

குன்றத்தின்கண் வாழும் குறவர்கள் 'ஆரவாரம் செய்தால் மேகம் மழை பெய்யும்'[14] என நம்பினர். இங்குக் குறிப்பிடப்படும் ஆரவாரம் இடியொலியை ஒத்தது எனக் கருதலாம். இடியொலியைப் போல முரசுகளைக் கொண்டு ஒலி எழுப்பினால் மேகம் மழையைத் தரும் என்பது அவர்கள் நம்பிக்கை. மேலும், 'பலி தூவி கடவுளை வழிபட்டதால் மிகுதியான மழை பெய்தது, அதனை நிறுத்தல் வேண்டி, மழை மேலே போவதாக என்று வேண்ட, மழை இடம்மாறிப் பெய்தது'[15]

---

[1] பரி. 13:13
[2] குறு. 83:1-2
[3] குறு. 361:1-2
[4] பரி. 5:69
[5] கலி. 118:3
[6] புற. 214:6-10
[7] கலி. 138:30-31
[8] கலி. 139:33-36
[9] கலி. 143:45-47
[10] புற. 260:21
[11] அக. 55:10-14
[12] குறு. 292:5-6
[13] புற. 5:5-6
[14] ஐங். 251:1-2
[15] புற. 143:1-4

*என்றும் வரும் கருத்துக்கள் அக்காலத்தில் குறவர் கொண்டிருந்த மழைபற்றிய நம்பிக்கையைக் காட்டுகிறது.*

*இக்காலத்தும் தஞ்சை மாவட்டத்தின் சில நாட்டுப்புறப் பகுதிகளில் அளவுக்கு அதிகமான மழை பெய்தால், மழையை நிறுத்த வேண்டி பெண்கள் விளக்குமாறுகளை வானத்தை நோக்கிக் காட்டுவர்*[1] *என்பது மேற்குறித்த மழைச் சடங்கோடு ஒப்புநோக்கத் தக்கது.*

*வானப்பாடிப் பறவை மேகத்தைச் சிறப்பித்துப் பாடினால் மழை பெய்யும் என நம்பிக்கை கொண்டிருந்ததை, "துளி நசை வேட்கையான் மிசைபாடும் புள்ளின்"*[2] *எனக் குறிப்பிடுவதால் உணரலாம்.*

*தென்திசைக்கண் வெள்ளிமீன் சென்றால் மழை பெய்யாது*[3] *என்றும், மேகம் தென்திசைக்கண் சென்றால் மழை குறையும்*[4] *என்றும் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர்.*

*ஆமானின் மார்பிடத்தே பாய்ந்து தங்காது குறிதவறி நீங்கிவிட்ட அம்பின் போக்கை நினைந்து கானவன் தம் அம்பு பிழைத்தமைக்குக் கடவுளே காரணமெனக் கருதினான். எனவே அதன் வீறு மழைபெய்தால் தணியும் எனக்கருதி மழை வேண்டி பலிநேர்ந்ததை,*

> *"அமர்க் கண் ஆமான் அரு நிறம் முள்காது*
> *பணைத்த பகழிப் போக்கு நினைந்து, கானவன்,*
> *அணங்கொடு நின்றது மலை, வான் கொள்க எனக்*
> *கடவுள் ஓங்கு வரை பேண்மார், வேட்டு எழுந்து,*
> *கிளையொடு மகிழும் குன்ற நாடன்"*[5]

*என்ற நற்றிணைப் பாடலொன்று குறிப்பிடுகிறது. இது பலிநேர்ந்தால் மழைபெய்யும் என்றும், மழை தெய்வத்தின் சீற்றத்தைத் தணிக்கும் என்றும் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையைப் புலப்படுத்துகிறது. அதேபோல் நடுகல்லை வழிபட்டால் மழைபெய்யும் என மக்கள் நம்பினர்.*[6]

### *4.2.9. கற்பு*

*கற்பு என்பது தாய்வழிச் சமூகம் தந்தைவழிச் சமூகமாக மாறிய தனியுடைமைச் சமூகத்தில் சொத்துரிமையைப் பாதுகாக்க ஆண்களால் ஏற்படுத்தப்பட்ட கற்பிதம். இக்கற்பிதத்தைக்கொண்டு உடலளவிலும் கருத்தளவிலும் பெண்களைக் கட்டுப்படுத்த 'கற்பு' என்னும் பட்டம் சூட்டப்பட்டு அக்காலத்தில் சுரண்டலுக்கு ஆட்படுத்திய நிலையினை 'முல்லை சான்ற கற்பு'*[7]*, 'அடங்கிய கற்பு'*[8]*, 'ஆறிய கற்பு'*[9]*, 'மறுஅறு கற்பு'*[10]*, 'மாசு இல் கற்பு'*[11]*, 'மாண் கற்பு'*[12]*, 'வணங்குறு கற்பு'*[13]*, 'ஆன்ற கற்பு'*[14]*, 'அறம் சால் கற்பு'*[15]*, 'அருங் கற்பு'*[16]*, 'செயிர் தீர் கற்பு'*[17] *எனப் பெண்கள் போற்றப்பட்டனர். எனினும், கற்புக் கோட்பாடு*

---

*[1] http://tamil.oneindia.com/art-culture/essays/2011/tiruneelakandan-article-on-moodevi1-aid0090.html*
*[2] கலி. 46:19-20*
*[3] புற. 117:2; பட். 1-2*
*[4] நற். 5:5-6*
*[5] நற். 165:1-5*
*[6] புற. 263*
*[7] நற். 142:10; அக. 274:13; சிறு. 30*
*[8] குறு. 338:7; புற. 249:10*
*[9] பதி. 16:10, 90:49*
*[10] பரி. 5:46*
*[11] அக. 6:13, 114:13*
*[12] அக. 33:2; புற. 163:2*
*[13] அக. 73:5*
*[14] அக. 198:12*
*[15] பதி. 31:24*
*[16] புற. 166:13*
*[17] புற. 3:6*

நிலைப்பேறாக்கம் பெற்றுவிட்ட பண்டைச் சமூகத்தில் அது சார்ந்த நம்பிக்கைகளும் வலுப்பெற்றிருந்ததைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

கற்புடைய பெண்கள் தெய்வ ஆற்றல் பொருந்தியவர்களாகக் கருதப்பட்டுள்ளனர். இதனைக் 'கடவுள் சான்ற கற்பு'[1] எனச் சங்க இலக்கியங்களில் பலவிடங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகையக் கற்புடையப் பெண்கள் உலகம் வறட்சியுற்ற காலத்தில் மழையைப் பெய்விக்கும் ஆற்றல் பொருந்தியவர்களாக விளங்கினர் என நம்பினர். இதனை, "வறன் ஓடின் வையகத்து வான்தரும் கற்பினாள்"[2] என்றும், "என் தோழி அருமழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையளே"[3] என்றும் கலித்தொகை குறிப்பிடுகிறது.

'நொதுமலர் வரைவு வேண்டி வந்தவிடத்து, சிறுகுடியிலுள்ளாரும் தம் பெண்ணைக் கொடுக்க எண்ணினர் இத்தகைய அறமல்லாதனவற்றைச்(கற்பு நெறிக்கு மாறானவற்றை) செய்தால் வள்ளிக்கொடியின்கீழ் கிழங்குகள் உண்டாகாது; மலை முகட்டில் தேன் கூடுகள் உண்டாகாது; தினைக் கொல்லையில் கதிர்கள் வளமாகத் தோன்றாது'[4] என்றும், 'தத்தம் கணவரைத் தப்பாராய் அவர்களையே தெய்வமென்று தொழும் குறவர் இனப்பெண்கள் பிழை செய்யார் ஆதலின் அவர்கள் ஐயன்மார்(மூத்தோர்) கணையினைக் குறி தப்பாது செலுத்தும் ஆற்றல் உடையவர்களாய் ஆயினர்'[5] என்றும் குறிப்பிடுவது கொண்டு ஆண்களின் ஆற்றலுக்குப் பெண்களின் கற்பொழுக்கமே காரணம் என மலைவாழ்க் குறமக்கள் நம்பியதைக் கலித்தொகைப் பாக்கள் காட்டுகின்றன.

கற்புக்குரிய கடவுளாக வடமீனாகக் குறிப்பிடப்படும் அருந்ததி திகழ்வதாக நம்பினர். இதனை "பெருநல் வானத்து வடவயின் விளங்கும், சிறுமீன் புரையும் கற்பின், நறுநுதல்"[6], "வடமீன் புரையும் கற்பின், மடமொழி, அரிவை"[7], "வடமீன் போல் தொழுதுஏத்த வயங்கிய கற்பினாள்"[8], "அருந்ததி அனைய கற்பின், குரும்பை மணிப் பூண் புதல்வன் தாயே"[9], "அறம் சால் கற்பின்....செம்மீன் அனையள்"[10], "மீனொடு புரையும் கற்பின்,வாள் நுதல் அரிவை"[11], "காமர் கடவுளும் ஆளும் கற்பின்"[12] என வரும் சங்கப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

#### 4.2.10. பிற

##### 4.2.10.1. காக்கை

இயற்கையோடு இயைந்த பழந்தமிழர் வாழ்க்கையில் விலங்குகளும் பறவைகளும், தாவரங்களும் அவர்கள் வாழ்க்கை இயக்கத்துக்கு இன்றியமையாததாக விளங்கின. காக்கைக் கரைவதைச் சகுனமாகக் கொள்ளும் நம்பிக்கை தொன்றுதொட்டு இன்றுவரையிலும் தொடர்கிறது. இந்நம்பிக்கை, பின்னர் நிகழவிருப்பதை முன்னரே அறிந்து அறிவிக்கும் தொலையுணர்வாற்றலும், புனிதத்தன்மையும் மனிதர்களைக் காட்டிலும் சில பறவைகளுக்கும் விலங்குகளுக்கும் இருப்பதாக மக்கள் நம்பியதால் தோற்றம் பெற்ற ஒன்றாகும்.

வீட்டின் முற்றத்தில் காக்கை தொடர்ந்து கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை பழங்காலந்தொட்டு இன்றுவரை நிலவிவருகிறது. சங்க காலத்து

[1] புற. 198:3; குறு. 252:4; அக. 184:1, 314:15
[2] கலி. 16:20
[3] கலி. 39:5-6
[4] கலி. 39:11-14
[5] கலி. 39:16-18
[6] பெரு. 302-303
[7] புற. 122:8-9
[8] கலி. 2:21
[9] ஐங். 442:3-5
[10] பதி. 31:24-28
[11] பதி. 89:19-20
[12] பதி. 65:9

*மக்களிடம் இந்நம்பிக்கை காணப்பட்டதை, ‘விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே’[1] என்ற குறுந்தொகைப் பாடலடி குறிப்பது கொண்டும், ‘தலைவனுடன் உடன்போக்குச் சென்றுவிட்ட தன்மகள் அவள் காதலனுடன் தன்னில்லத்திற்குத் திரும்பவேண்டுமென்று விரும்பி அதற்கு நன்னிமித்தமாகக் காக்கையைக் கரையுமாறு நற்றாய் வேண்டுவதாகக் கூறும் ஐங்குறுநூற்றுப் பாடல் கொண்டும்[2] அறிந்துகொள்ளலாம்.*

### *4.2.10.2.* **விரிச்சி கேட்டல்**

*ஒன்றைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கையில் அல்லது ஒரு செயலைத் தொடங்குகையில் பிறர்கூறும் சொற்களைச் சகுனமாகக் கொள்ளுதல் மக்கள் வழக்கு. அவ்வகையில் அருகிலுள்ளோர் பேசும் சொற்கள் தம் சிந்தனைக்கு இயைபுடையதாக இருப்பின் நன்மை என்றும், எதிர்மறையாக இருப்பின் தீமை என்றும் கருதினர். இதனைச் சங்க காலத் தமிழர் விரிச்சி எனச் சுட்டுகின்றனர். இதனை நற்சொல் கேட்டல் என்றும் குறிப்பிடுவர். இதனை ‘நல்லோர் வாய்ப்புள்’[3] என்றும் முல்லைப்பாட்டு சுட்டுகிறது. இதற்கு, ‘வாய்ச்சொல்லாகிய நன்னிமித்தம், நன்னிமித்தம்’ என அகராதிகளும்[4] பொருளுரைக்கின்றன.*

*விரிச்சி(நற்சொல்) கேட்டல் என்பது பழந்தமிழ் மக்களிடம் நிலவிய ஒரு நம்பிக்கை ஆகும். தாம் விரும்பி மேற்கொள்ளும் செயல் நன்கு முடிதலை விரும்பி, அதற்கான நன்னிமித்தம் பெறும் வகையில், ஊரின் புறத்தே, படியில் நெல்லும், மலரும் கொண்டுசென்று தெய்வத்தை வழிபட்டு நிற்பர்; அப்பக்கம் செல்வோர் கூறும் சொல் தமக்கு ஏற்றதாக இருப்பின், தாம் மேற்கொள்ளும் செயல் இனிது நிறைவேறும் என நினைப்பது அக்கால மக்களின் நம்பிக்கையை உணர்த்துவதாகும்.[5]*

*விரிச்சி கேட்டல் சங்கப் பாடல்களில் அகம், புறம் என்ற இருநிலைகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. போருக்குச் சென்ற தலைவனின் நிலைகுறித்து அறிந்துகொள்ள விரிச்சி கேட்கப்பட்டதை, “நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும் செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா”[6] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.*

*வினையின் பொருட்டுப் பிரிந்து சென்றிருக்கும் தலைவனை நினைந்து ஆற்றாளாகிய தலைவியை ஆற்றுவித்து ஆறுதல் கூறும் பொருட்டுப் பெருமுது பெண்டிர் மலர்ந்த முல்லைப் பூக்களை நாழியில் கொண்ட நெல்லொடு தூவி, தெய்வத்தை வணங்கி நற்சொல்கேட்டு நின்றனர். அப்போது, இடையர்குலப் பெண்ணொருத்தி பாலுண்ணாமையால் ஏற்பட்ட கன்றின் பசிவருத்தத்தைக் கண்டு அக்கன்றுகளை நோக்கி, ‘கோவலர் பின்நின்று செலுத்த, மேய்ச்சலை முடித்துக்கொண்டு இப்பொழுதே வந்துவிடுவர் நின் தாயர், வருந்த வேண்டாம்’ என்று கூறிய நற்சொற்களை நாங்கள் கேட்டோம். அதனால் போர் மேற்சென்ற தலைவனும் பகைவென்று விரைந்து திரும்புதல் உறுதி’[7] என முல்லைப்பாட்டில் விரிச்சி கேட்கப்பட்ட முறை விவரிக்கப்பட்டுள்ளது.*

*“தோழி! பிரிந்து சென்ற தலைவர் நம்மை நினையாதும், உரிய நேரத்தில் திரும்பிவந்து நம் உயிரைக் காவாதும் விட்ட தலைவனின் பொருட்டு*

---

*[1] குறு. 210:6*
*[2] ஐங். 391*
*[3] முல். 18*
*[4] http://agarathi.com/word/விரிச்சி*
*[5] பத்துப்பாட்டு மூலமும் உரையும்(தொகுதி.1), என்.சி.பி.எச்., பக். 333-334*
*[6] புற. 280:6-7*
*[7] முல். 8-20*

மேற்கொள்ளப்படும் வழிபாட்டில் விரிச்சி முதலியனவற்றைக் கேட்டு கடவுளை வழிபடுவதால் என்ன பயன் விளையப்போகிறது"[1] எனக் கூறுவதாக அமைந்த பாடலின் வழி தெய்வத்திற்குச் செய்யப்படும் வழிபாட்டுச் சடங்கில் விரிச்சி கேட்டல் வழக்கில் இருந்துள்ளதைக் குறுந்தொகைப் பாடல் காட்டுகிறது.

விரிச்சி கேட்டல் தன் எண்ணம் அல்லது செயல் நன்மையாகத்தான் முடியவேண்டும் என்ற மனித மனவிழைவால் தோற்றம் பெற்றுத் தன் செயலுக்கும் எண்ணத்துக்கும் ஊக்கத்தைத் தருவதாக அமைகிறது. எனவே சங்ககாலத்து மக்கள் விரிச்சி கேட்பதைச் சமூகவழக்காகக் கொண்டிருந்தனர் என்பது போதரும். விரிச்சி கேட்டலில் பெண்கள் மட்டுமே ஈடுபட்டதை, 'திருந்து இழை மகளிர் விரிச்சி நிற்ப'[2], 'நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும் செம்முது பெண்டு'[3], 'பெருமுது பெண்டிர், விரிச்சி நிற்ப'[4] என வரும் அடிகள் சுட்டுகின்றன.

### 4.2.10.3. கூற்றம்

மனித உயிரை உரிய காலத்தில் கூற்றம் என்ற ஒன்று உடலிலிருந்து கொண்டு சென்றுவிடும் என்ற நம்பிக்கை பண்டைக்கால மக்களிடம் நிலவியதைச் சங்கப் பாடல்களில் உள்ள கூற்றம்(கூற்று) குறித்தான பதிவுகள் உணர்த்துகின்றன.

கூற்றம் உயிர்பறிக்கும் தன்மையுடையது என்பதை, "உயிர் உண்ணும் கூற்றமும் போன்ம்!"[5], "ஆர்உயிர்க்கு அலமரும் ஆராக் கூற்றம்"[6], "கூற்றம் இன் உயிர் உய்த்தன்று"[7] எனவரும் அடிகளும்; அது சீற்றம் மிக்கது என்பதை, "கூற்று வெகுண்டு வரினும்"[8], "கூற்று ஒத்தீயே, மாற்று அருஞ் சீற்றம்"[9] என வரும் அடிகளும்; அது யாரிடமும் பரிவு காட்டாது என்பதை, "அறன் இல் கூற்றம்"[10], "நயன் இல் கூற்றம்"[11], "வெந்திறல் கூற்றம்"[12] என்ற அடிகளும் சான்று பகர்கின்றன.

கூற்றத்தை இயமனின் ஏவலன் என்றும்[13], அது உயிர்களைப் பிடித்துச் செல்வதற்காகத் தன் கையில் வலை வைத்திருப்பதாகவும்[14] நம்பினர்.

### 4.2.10.4. பேய்பற்றிய நம்பிக்கை

சங்ககால மக்கள் பேய்கள் இருப்பதாக நம்பினர். அவை போர்க்களத்தில் திரியும்,[15] பிணங்களைத் தின்னும்,[16] யாமப் பொழுதில் சுற்றித் திரியும்,[17] போர்க்களத்தில் துணங்கைக் கூத்தாடும், இறந்த வீரர்களின் தலை, குருதி, கை போன்றவற்றைக் கொண்டு கூழ் சமைக்கும்.[18] அதன் அச்சம் பொருந்திய தோற்றத்தை "உருகெழு பேய்மகள்"[19], "உருஇல் பேய்மகள்"[20], "கருங்கட் பேய்மகள்"[21] என வருவன உணர்த்தும். அவை, மயிரை விரித்து ஆடியும், பிணத்தைத் தின்றும் வளைந்த கால்களைக்கொண்டும் விளங்கியதை,

> "கணம் கொள் கூளியொடு கதுப்பு இகுத்து அசைஇ
> பிணம்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்;
> கொடுங்கால் மாடத்து நெடுங்கடைத் துவன்றி"[22]

---

[1] குறு. 218:1-4
[2] நற். 40:4
[3] புற. 280:6-7
[4] முல். 11
[5] கலி. 105:38; புற. 4:12
[6] புற. 361:2
[7] புற. 221:8
[8] பதி. 14:10; புற. 42:23
[9] புற. 56:11
[10] புற. 210:8, 230:11, 237:9, 255:4
[11] புற. 227:1
[12] புற. 238:10
[13] பரி. 3:21
[14] பதி. 51:35-36
[15] புற. 373:36-39
[16] புற. 369:15
[17] மது. 632; அக. 311:4
[18] மது. 25-35
[19] புற. 371:26
[20] பதி. 67:11
[21] பதி. 22:37, 30:36
[22] பட். 259-261

எனப் பட்டினப்பாலை குறிப்பிடுகிது. பேயின் கண்கள், முரசின் நடுவிடம் போன்ற தோற்றம் கொண்டிருந்ததை, ''பேய்க்கண் அன்ன பிளிறுகடி முரசம்''[1] என்றும், அவை நுனி பிளந்த தலை முடியினையுடையதாகக் காணப்பட்டதை, ''கவைத் தலைப் பேய்மகள்''[2] என்றும், பிளவுபட்ட அடிகளையும், கடிய பார்வையினையும் கொண்டு விளங்கியதை, ''கவை அடிக் கடு நோக்கத்துப் பேய் மகளிர்''[3] என்றும் குறிப்பிடுவன அதன் தன்மையைக் காட்டும்.

பேய்கள், ''போர்க் களத்தில் மடிந்த வீரர்களின் புண்களைத் தோண்டிக் குருதி படர்ந்த தம் கையினால் தமது மயிரைக் கோதும், பறையின் தாளத்திற்கு ஏற்ப ஆடும்''[4] எனப் புறநானூறும், பெரிய காட்டிடத்திலுள்ள கொற்றவைக்கு நொடி சொல்வதாகப் ''பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித்தாங்கு''[5] எனக் கலித்தொகையும் குறிப்பிடுவது அக்கால மக்களிடம் காணப்பட்ட பேய்பற்றிய நம்பிக்கைக்குச் சான்றுகளாக அமைகின்றன.

#### 4.2.10.5. சூளுரைத்தல்

சொன்னசொல் தவறாது நடந்துகொள்வேன் என்று தெய்வத்தை முன்னிறுத்திச் சூளுரைக்கும்(சத்தியம் செய்யும்) வழக்குப் பண்டைக் காலந்தொடங்கி இன்று வரை காணப்படுகிறது. சூளுரைத்ததற்கு மாறாக நடந்துகொண்டால் தெய்வம் தண்டிக்கும் என்ற நம்பிக்கையில் சூளுரைகளை மக்கள் ஏற்றுச் சொல்தவறாது நடந்தனர்.

சங்ககாலச் சமூகத்தில் இந்நம்பிக்கை மக்களிடம் காணப்பட்டதை, சங்க அகப்பாடல்களில் தலைவன் தலைவியின் முன்கையைப் பற்றி 'உன்னைப் பிரியேன்' என்று தெய்வத்தின் மீது சூளுரைத்ததை, ''தெறல்அருங் கடவுள் முன்னர்த் தேற்றி மெல்இறை முன்கைப் பற்றிய சொல்இறந்து''[6], ''பிரிவு இல்லாய் போல, நீ தெய்வத்தின் தெளித்தக்கால்''[7], ''பெருங் கடற்தெய்வம் நீர் நோக்கித் தெளித்து, என் திருந்திழை மென்தோள் மணந்தவன் செய்த அருந்துயர்''[8], ''தெய்வத்தின் தேற்றித் தெளிப்பேன்''[9] என வரும் சங்கப்பாடலடிகள் காட்டுகின்றன.

வருண தெய்வத்தின்முன் தோழி ஒருத்தி செவிலிக்கு அறத்தோடு நின்றதை, ''கொடுஞ் சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கி, கடுஞ்சூள் தருகுவன், நினக்கே''[10] என அகநானூற்றிலும், தலைவன் ஒருவன் காமக் கிழத்தியிடம், 'தான் தீதற்றவன் என்பதைத் தெய்வத்தைச் சான்றாகக்கொண்டு தெளிவிப்பேன்'[11] எனக் கலித்தொகையிலும், சூளுரைத்தத் தலைவன், பொருள் காரணமாகச் சொன்ன சொல் மாறி சூள் தவறி தலைவியைப் பிரிந்தான். இவ்வாறு பிரிந்த அவனைத் தெய்வம் வருத்தக்கூடாது எனக் கருதிய தலைவி கடவுளுக்குப் பலி தூவி வணங்கியதை,

> ''கணங் கெழு கணவுட்கு உயிர்ப்பலி தூஉய்
> பரவினம் வருகம் சென்மோ தோழி''[12]

---

[1] பட். 236
[2] பதி. 13:15
[3] மது. 161-163
[4] புற. 62:1-5, 370:24-25
[5] கலி. 89:8
[6] அக. 396:6-8
[7] கலி. 124:18
[8] கலி. 131:1-3
[9] கலி. 98:32
[10] அக. 110:1-5
[11] கலி. 91:6-8
[12] நற். 358:6-7

*என நற்றிணையிலும் குறிப்பிடுவது சூளுரைத்தலின் மீது அக்காலச் சமூகம் கொண்டிருந்த நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றன.*

### *4.2.10.6. பிறை தொழுதல்*

*சங்க காலத்தில் பிறை தொழுதல் என்பது மகளிரிடையே பெருவழக்காக இருந்ததொரு நம்பிக்கை. அக்காலச் சமூகம் பிறையைத் தெய்வமாகக் கருதியது. திருமணமாகாத இளம் பெண்கள் தங்களுக்கு நல்ல கணவன் வாய்க்கவேண்டும் என்பதற்காக நோன்பிருந்து பிறையைத் தொழுதனர். இதனை,*

> *"ஒள்இழை மகளிர் உயர்பிறை தொழூஉம்*
> *புல்லென் மாலை"[1]*

> *"தொழுதுகாண் பிறையின் தோன்றி"[2]*

> *"வளை உடைத்தனையது ஆகி, பலர் தொழ,*
> *செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி*
> *இன்னாப் பிறந்தன்று பிறையே"[3]*

*எனவரும் சங்கப் பாடலடிகள் காட்டுகின்றன. மேலும் பிறை பாண்டிய குல மரபினரால் தொழப்பட்டதை, "குடமுதல் தோன்றிய தொன்று தொழு பிறை"[4] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.*

*தோழி, தலைவிக்குத் தலைவன்பாலுள்ள உறவை அறிய தலைவியைப் பிறைதொழ அழைப்பாள். தலைவியோ ஒருவனைக் காதலித்துவிட்டதால், நல்ல கணவன் வாய்க்க வேண்டி மேற்கொள்ளப்பட்ட பிறைதொழும் வழிபாட்டைத் தவிர்ப்பதாகக் காட்டுகிறது அகப்பொருள் இலக்கண மரபு.*

### *4.2.10.7. கழுவாய்*

*மக்கள் தாங்கள் செய்த பாவங்களுக்கு ஏற்ற கழுவாயினைச் செய்தால் அப்பாவங்களிலிருந்து விடுபடலாம் என நம்பினர். இதனை,*

> *"ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்*
> *மாண்இழை மகளிர் கருச் சிதைத் தோர்க்கும்*
> *பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்*
> *வழுவாய் மருங்கில் கழுவாயும் உள"[5]*

*என்ற புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. ஆனால் அக்கழுவாய் எத்தகையது என்பதை அறிய இயலவில்லை.*

### *4.2.10.8. தைந் நீராடல்*

*கன்னிப்பெண்கள் தைத்திங்களில் குளிர்ந்த நீரில் நீராடி நோன்பு மேற்கொண்டால் தாங்கள் விரும்பியவாறே அவர்களுக்கு நல்ல கணவன் கிடைப்பான் என்பது பண்டைத் தமிழர் மரபு. மார்கழி முழுமதி நாள் தொடங்கித் தை முழுமதி நாள் வரை விடியற் காலையில் நீராடி இந்நோன்பினை மணமாகாத பெண்கள் மேற்கொள்வர். இந்நாளில் தைந்நீராடும் மகளிர் பிறர் மனைக்கண்*

---

[1] *அக. 239:9-10*
[2] *குறு. 178:5*
[3] *குறு. 307:1-3*
[4] *மது. 193*
[5] *புற. 34:1-4*

*சென்று பாடி, ஐயம் ஏற்றுக்கிடைத்தவற்றைப் பிறர்க்குக் கொடுக்கும் வழக்கத்தையும் கொண்டிருந்தனர்.*[1]

*இத்தகைய நம்பிக்கை பண்டைத் தமிழர்களிடம் இருந்ததை, "தைஇத் திங்கள் தண்கயம் படியும் பெருந்தோள் குறுமகள்"*[2]*, "நீ தையில் நீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ?"*[3]*, "நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும் தைஇத் தண் கயம் போல"*[4]*, "தாய் அருகா நின்று தவத் தைந் நீராடுதல்?"*[5] *எனவரும் சங்கப் பாடலடிகள் கொண்டு அறியலாம்.*

#### *4.2.10.9.* **புனித நீராடல்**

*பரதவர்கள், தங்கள் தீவினைகள் நீங்குவதற்காகக் காவிரி, கடலோடு கலக்கும் இடத்தில் நீராடியதை, "தீது நீங்க, கடல் ஆடியும்"*[6] *என்று பட்டினப்பாலை குறிப்பிடுகிறது. இது கடலாடினால் தீவினை நீங்கும் என்ற அக்கால மக்களின் நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றது.*

#### *4.2.10.10.* **வலம் இடம்**

*பண்டைக் காலத்தில் வலப்பக்கத்தைச் சிறந்ததாகக் கருதும் நம்பிக்கை நிலவியது. இதனைச் சங்க இலக்கியத்தில் பயின்று வரும் 'வலம்' என்ற சொல்லாட்சி உணர்த்துகிறது. "மக்கள் தங்கள் உடம்பின் வலது பக்கத்தில் நல்ல சக்தி உறைவதாகவும் இடப்பக்கத்தில் தீய சக்தி உறைவதாகவும் கருதினர்."*[7] *என்றும், "மனித உடலில் வலது பக்கத்தில் தெய்வம் உறைவதாக நம்புவதும் அதுவே மனிதனை நற்செயல்களாற்றும்படி தூண்டுகிறது"*[8] *என்றும் குறிப்பிடும் கருத்துக்கள் உலக அளவில் மக்கள் 'வலம்' குறித்து கொண்டிருந்த நம்பிக்கையைக் காட்டுகின்றன.*

*வைதிகச் சடங்குகளை மிக நுட்பமாக ஆராய்ந்த வீணா தாஸ் என்ற மானிடவியல் அறிஞரும், திருமணம், வளைகாப்பு (சூல்), ஏற்புச் சடங்கு(initiation), காலச் சுழற்சியோடு(passage of time) இணையும் சடங்குகள் வலப்பக்கத்திற் குரியவையாகவும், இறப்பு, முன்னோர் வழிபாடு, அசுரன், ஆவிகளுக்குச் செய்யும் சடங்குகள், நாகத்திற்குச் செய்யும் சடங்குகள் அனைத்தும் இடப்பக்கத்திற்குரியவை என்றும் கூறுவது இங்கு நோக்கத்தக்கது.*[9]

*சங்க இலக்கியத்தில் 'வலம்' என்ற சொல் வெற்றி மற்றும் வலப்பக்கமாகச் சுற்றி வருதல் என்ற பொருளில் பயின்று வந்துள்ளது. "வலம்படு வாய்வாளேந்தி"*[10]*,*

---

[1] *கலி. 59:16-17*
[2] *நற். 80:7-8*
[3] *கலி. 59:12-13*
[4] *ஐங். 84:4-5*
[5] *பரி. 11:91*
[6] *பட். 99*
[7] *The people thought that the good spirits lived on the right side of the body and the evil ones on the left.*
- *The new Book of Knowledge; Vol. 17; p. 475.*

[8] *It is thought by many islanders that the human body is inhabited by both god and the devil; God rests on the right side and urges the person to do good deeds, while the devil rests on the left and tempts the person to commit sins.*
- *Folklore And Folklife; Sankar Sen Gupta; p. 228.*

[9] *பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 287.*
[10] *புற. 91:1*

*“வலம்படு வேட்டம்”[1], “வலம்படு வென்றி”[2], “வலம்படு தானை”[3] எனவரும் சங்கப்பாடலடிகள் வலம், வெற்றியையும் ஆக்கத்தையும் தரும் என்ற பழந்தமிழர் நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றன.*

### *4.2.10.11.* வேள்வி

*ஆரியப் பண்பாட்டின் தாக்கம் தமிழ் நிலப்பரப்பில் பரவி இருந்ததாலும், மன்னர்களின் செல்வாக்கை அந்தணர்கள் பெற்றுவிட்ட காரணத்தினாலும் வேத வழிபாட்டு முறைகள் தமிழ்ச் சமூகத்தில் கலந்துவிட்டன. எனவே வேள்வி செய்வதின் வாயிலாக விரும்பியதை அடையலாம் என்ற ஆரியரின் நம்பிக்கையை ஏற்று பண்டைக் காலத்தில் மன்னர்கள் பலர் வேள்விகள் பல செய்ததைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.*

*“வேள்வியின் முக்கிய நோக்கம் இயற்கைச் சக்திகளை ஆள்வதும் அவற்றை வேள்வி செய்பவருக்கு நன்மை பயக்குமாறு செய்வதுமாக இருந்தது”[4] வேள்வி பயன் கருதி நிகழ்த்தப்பட்டதை அகநானூறு “பயம் கெழு வேள்வி”[5] என்று குறிப்பிடுவது இங்குக் கவனிக்கத்தக்கது. மகப்பேறு வேண்டி சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை தன் மனைவியோடு வேள்வி செய்ததைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.[6]*

*வேள்வி செய்தால் சுவர்க்கம் புகலாம் என்ற நம்பிக்கை காணப்பட்டதை, “ஆவுதி மண்ணி, அவிர் துகில் முடித்து, மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல”[7] என்ற மதுரைக்காஞ்சியடிகளாலும் அறியலாம். இவ்வாறு வேள்வி செய்து வழிபட்டால் தெய்வம் வேண்டியதைத் தரும் என்ற நம்பிக்கை சங்கப் பாடல்களில் வரும் வேள்வி குறித்த செய்திகளைத் தொகுத்துக் காண்கிறபோது வெளிப்படக் காணலாம்.*

### *4.3.* இயல் முடிவுகள்

*மனித வாழ்வில் பின்பற்றப்பட்டு வரும் சடங்குகளை மானிடவியலார் அமைப்பியல் அடிப்படையிலும் இயங்கியல் அடிப்படையிலும் பல்வேறு வகைகளில் பாகுபடுத்திப் பார்க்கின்றனர். அவர்கள் சடங்குபற்றிக் குறிப்பிட்டுள்ள வரையறைகளையும் கருத்துக்களையும் அடிப்படையாகக்கொண்டு சங்க இலக்கியத்தை நோக்கும்போது அக்காலச் சமூக இயக்கத்தையும் பண்பாட்டையும் புரிந்துகொள்ள முடிகிறது.*

*மக்கள் தங்கள் வாழ்வின் வளமைக்காக நம்பிக்கை அடிப்படையில் பல்வேறு சடங்குகளைச் செய்தனர். திருமணம், பிள்ளைப்பேறு, பயிர் விளைச்சல், மழை போன்றவற்றை வேண்டி வளமைச் சடங்குகளைச் செய்துள்ளதைச் சங்கப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.*

*திருமண வினைகளைப் புதல்வரைப் பெற்ற மங்கல மகளிர் நால்வர் கூடி நிகழ்த்துதல், இச்சடங்கில் நெல்லும் மலரும் தூவி மணமக்களை வாழ்த்துதல் என்பது, நிலைமாற்றும் சடங்காகவும் இயங்கியல் அடிப்படையில் பார்க்கும்போது வளமைச் சடங்காகவும் மேற்கொள்ளப்பட்டதை அறிந்துகொள்ளமுடிகிறது.*

---

[1] *அக. 252:1*
[2] *அக. 389:22*
[3] *புற. 116:18*
[4] *கலைக்களஞ்சியம், தொகுதி-5, ப. 462*
[5] *அக. 13:11*
[6] *பதி. 74:17-21*
[7] *மது. 494-495*

சங்கப்பாடல்களில் திருமண வினைக்கு முன்பு நிகழ்த்தப்பட்டதாக அறியப்படும் சிலம்புகழிச் சடங்கும் ஒருவகையில் நிலைமாற்றும் சடங்கெனக் கருத வேண்டியுள்ளது.

மகள் உற்ற நோயின் காரணத்தை அறிய தாய் கட்டுவிச்சியை அழைத்து சடங்கு நிகழ்த்தி காரணம் அறிய முற்படுவது மந்திரச் சடங்காக அமைகிறது.

பெண்ணைப் பிடித்திருக்கும் சூர், அணங்கு போன்ற தீய சக்திகளை விரட்டுவதற்காக நடத்தப்பட்ட வெறியாட்டுச் சடங்கை, தீய ஆவியை விரட்டுவதற்காகச் செய்யப்பட்ட தொழில்நுட்பச் சடங்காகக் கருதமுடிகிறது. இதனை ஒரு வகையில் பேய்விரட்டும் சடங்கெனவும், துன்புறுத்தும் தெய்வத்தை அமைதிப்படுத்தச் செய்யப்படும் சாந்திச் சடங்கெனவும் கருதலாம்.

திருமுருகாற்றுப்படை குறிப்பிடும் குறமகள் வெறியாட்டுச் சடங்கு சமூக நன்மைக்காகச் செய்யப்பட்ட வளமைச் சடங்காக அறிந்துகொள்ள முடிகிறது.

வளமை வேண்டி செய்யப்பட்ட மழைச்சடங்கு மந்திரச்சடங்காக அமைவதையும், அது ஒத்த மந்திரச் சடங்காகவும் பாவனை மந்திரச் சடங்காகவும் நிகழ்த்தப்பட்டதை அறியமுடிகிறது.

வென்ற காளையின் தோலால் போர்த்தப்பட்ட முரசு போரில் வெற்றியைத் தரும், வீரத்தில் சிறந்த காளையின் தோலால் போர்த்தப்பட்ட முரசு வீரத்தை மிகுவிக்கும் என்கிற அடிப்படையில் வென்ற காளையின் தோல் முரசுக்குப் போர்த்தப்பட்டதை ஒத்த மந்திரச் சடங்கெனக் கொள்ளலாம்.

வேட்டையில் விலங்குகள் கிடைக்கவும், விளைச்சல் பெருகவும், போரில் வெற்றி பெறவும், நோய்களைத் தீர்க்கவும், தெய்வத்தின் சீற்றம் தணிக்கவும் தூய மந்திரம் பயன்படுத்தப்பட்டதை அறியமுடிகிறது.

போரில் புண்பட்ட வீரனைப் பேய்கள் அணுகாதவாறு காப்பதற்காகச் சடங்குகளைச் செய்தனர். இதனைப் பாதுகாப்பு கருதி செய்யப்பட்ட மந்திரச் சடங்காக அறியமுடிகிறது.

பசுக்கூட்டத்தைக் கவர்ந்து கொண்ட வெட்சிவீரர்கள் தெய்வம் உறைவதாகக் கருதிய வேப்பமரத்தடியில், கவர்ந்துகொண்டு வந்த பசுக்களுள் கொழுத்த பசுவைக் கொன்று, அதன் குருதியை மரத்தின்மேல் தெளித்துப் பலியிட்டதை அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. இது ஒரு குழுவின் பொருளியலோடு தொடர்புடையதாக இருப்பதால் இதனை உற்பத்தி மந்திரமாகக் கொள்ளலாம். மேற்குறித்தவாறு சடங்குகளை நிகழ்த்தும்போது மந்திரங்கள் உச்சரிக்கப்பட்டது சான்றுகளுடன் நிறுவப்பட்டுள்ளது.

சங்க இலக்கியங்கள் காட்டும் சமூகத்தில் உயிர்ப்பலி இடுதல் பற்றிய நம்பிக்கை, தாம் வணங்கும் தெய்வங்களைத் திருப்திப்படுத்துவதற்காகவும், அவற்றின் சீற்றத்தைத் தணிப்பதற்காகவும், தீய ஆவிகளைக் கட்டுப்படுத்துவதற்காகவும், அவற்றின் பாதிப்பிலிருந்து காத்துக்கொள்வதற்காகவும், தம் எண்ணம் ஈடேற வேண்டும் என்பதற்காகவும், தங்கள் ஆற்றலைப் புதுப்பித்துக் கொள்வதற்காகவும் மக்களால் பின்பற்றப்பட்ட வழக்கமாக இருந்ததை அறியமுடிகிறது. அத்தகைய தெய்வ வழிபாட்டில் மலர்,

தேன், கள், விலங்கு, முதலியன மட்டுமின்றி நரபலியும் கொடுக்கப்பட்டதைச் சங்கப்பாக்கள் காட்டுகின்றன.

மரம், மலை ஆகியவற்றில் உறையும் தெய்வங்களுக்கும், போரில் மாண்ட வீரனின் நடுகல்லிற்கும், மன்னர்கள் போரில் வெற்றிவேண்டித் தங்கள் அரண்மனை முற்றத்திலும், பேயினால் பற்றப்பட்டோர் அது தன் உயிரைக்கொல்லாமல் இருக்க வேண்டியும், வருத்தும் தெய்வங்களிடமிருந்து தம்மைக் காத்துக்கொள்ள வேண்டியும், நோய் தணியவும், மணநாள் விரைந்து வருவதற்காக வேண்டியும் பல்வேறு பலிச் சடங்குகளைச் செய்தனர்.

அணங்கு, சூர், பேய் போன்ற உயிர்ப்பாற்றல்களை மகிழ்விப்பதற்காகப் பல்வேறு சடங்குகளை மேற்கொண்டனர்.

சங்ககால இனக்குழுச் சமூகத்தில் காணப்பட்ட பல்வேறு வழிபாட்டு மரபுகளுள் குலக்குறி வழிபாடும் மிக முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தது.

செயலின் வெற்றிக்கு நாள் காரணம் என நம்பினர். பயிரிடுதல், வழிபாடு, விழாக்கள், திருமணம் முதலான சடங்குகள் போன்றவற்றை நல்லநாள் பார்த்தே தொடங்கினர். ஒருவன் ஊனமாய்ப் பிறந்ததற்கு அவள் பிறந்த நேரமும் காரணம் என நம்பினர்.

ஒருவரின் நாள்மீனுக்கு ஏற்பவே நல்லவை கெட்டவை நடக்கும் என்றும், மழை பெய்யாது வறண்டு போவதற்கும், மழை பொழிவதற்கும், வறுமைக்கும், வாழ்நாள் சிறப்பதற்கும் கோளும் நட்சத்திரங்களுமே காரணம் என எண்ணினர். சோதிடத்தின் மீதும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

நிமித்தம் பார்ப்பதில் நம்பிக்கை இருந்தது. பறவைகள் மட்டுமின்றி, நாள், கோள், விண்மீன், விலங்கு, மரம், மாந்தர், பல்லி, ஓந்தி, நல்லோர் வாய்ச்சொல் போன்ற பலவற்றையும் நிமித்தக் கருவிகளாகப் பயன்படுத்தியுள்ளனர்.

திருமணச் சடங்கு, வணிகம், பயணம், வழிபாடு, போர் போன்றவற்றில் நிமித்தம் பார்த்துச் செயல்படுவதை நம்பிக்கையாகக் கொண்டிருந்தனர்.

காதலர்க்குப் புள்ளினங்கள் ஒலியெழுப்புவதும், பாணர்க்குழுவிற்குப் பரிசில் பெற்று வரும் பாணர் குழு எதிர்ப்படுதலும் நன்நிமித்தமாக உணரப்பட்டது.

தலைவன் வரவை உறுதிப்படுத்தும் நற்குறிகளாகப் பல்லி ஒலித்தல், குயில் கூவுதல், கண்துடித்தல், வளை செறித்தல், குழல் ஊதுதல், குருகுகள் தம் இல்லம் திரும்புதல், வண்டுகள் ஊதுதல் ஆகியவற்றை நன்நிமித்தமாகக் கருதியதை அறியமுடிகிறது.

எரிகொள்ளி எரிந்து விழுவது; பெரிய மரத்தின் இலையில்லாத பெரிய கிளை உலர்ந்து போவது; வெம்மையான கதிர்களையுடைய ஞாயிறு பலவிடங்களில் செறிந்து தோன்றுவது; அச்சம் தரும் பறவைகள் ஒசையெழுப்புதல், நண்பகலில் வந்து வண்டுகள் ஒலித்தல், ஏற்றி வைத்த விளக்குகள் அணைந்து போதல், உறக்கமின்றி கிடந்த கண்கள் உறக்கத்தை விரும்புதல், கேட்பார்க்கு அச்சம் உண்டாக கூகை அலறுதல், விரிச்சி நன்மையாக இல்லாமை, யாழின் பண் இரங்கற் பண்ணாக அமைதல், விரிந்த கூந்தலையுடைய பெண் எதிர்ப்படுதல், புதுப்புள்

*வருதல், பழம்புள் போதல் ஆகியனவற்றைத் தீமையை உணர்த்தும் நிமித்தமாகக் கருதினர். இத்தீச்சகுனங்கள் தெய்வத்தை வழிபட்டால் தீரும் என நம்பினர்.*

*பல் பூமியில் விழுந்தது போலவும், எண்ணெயினைத் தலையில் தடவியது போலவும், ஆண்பன்றிமீது ஏறுவது போலவும் ஆடையைக் களைந்தது போலவும் படைக்கருவி கட்டிலோடு கீழே கவிழ்வது போலவும் அரசன் கனவு காண்பது தீய சகுனம் என நம்பினர்.*

*இரவலர் மன்னனை நாடிப் பொருள் வேண்டிப் புறப்படும்போது நல்லநாள் பார்த்தும், புள் நிமித்தம் பார்த்தும் செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.*

*பல்லி ஒலித்தல் என்பது, பின் நிகழவிருக்கும் நன்நிகழ்விற்கு நம்பிக்கை தருவதாகவும், தீமையைக் கூறி எச்சரிப்பதாகவும் நம்பினர்.*

*மனித வாழ்வின் அனைத்துச் செயல்பாடுகளுக்கும் அவரவர் செய்த வினையின் பயனே காரணம் என நம்பினர். தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் கண்டு காதல் கொள்வதற்குக் காரணமாக இருப்பது ஊழ்தான் என நம்பினர். முற்பிறப்பில் செய்த வினைப்பயனுக்கு ஏற்பவே இப்பிறப்பில் வாழ்க்கை அமையும், இப்பிறப்பில் செய்யும் வினைக்கு ஏற்பவே மறுபிறப்பு, சுவர்க்கம், வீடுபேறு ஆகியன அமையும் என்ற உறுதியான நம்பிக்கையைப் பண்டைத் தமிழர்கள் கொண்டிருந்தனர்.*

*நன்மையும் தீமையும் அவரவர் வினைப்பயனால் வருவது என்றும், வினைப்பயனின் காரணமாகவே ஒருவனுக்குப் பொருட் செல்வம், மேலுலகம், இறையருள் ஆகியன கிட்டும் என்றும் நம்பினர்.*

*தெய்வத்தை வேண்டினால் எண்ணியது நடக்கும், நோய்கள் தீரும், மழை வளம் பெருகும், வாழ்நாள் சிறக்கும், தமக்குத் துணை நிற்கும், பிள்ளைப்பேறு வாய்க்கும், மேற்கொண்ட செயல்கள் தடையின்றி முடியும் என்றும், வழிபாடு நிகழ்த்தினால் அவற்றின் சீற்றம் தணியும் என்றும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.*

*மலை, நீர்த்துறை, கடல் ஆகிய இடங்களிலும், ஆலம், பனை, வாகை, வேம்பு, கடம்பு முதலிய மரங்களிலும், தூண்களிலும், முரசு, அரண்மனைவாயில், ஊர்வாயில் ஆகிய இடங்களிலும், காடுகளிலும் தெய்வங்கள் உறைவதாக நம்பினர். கற்புடைப் பெண்களிடமும் தெய்வ ஆற்றல் இருப்பதாக நம்பினர்.*

*சங்ககாலச் சமூகத்தில் மேலுலகம் பற்றிய நம்பிக்கையும், மறுபிறப்புப் பற்றிய நம்பிக்கையும், வினைப்பயன் பிறவிகள்தோறும் தொடர்வது பற்றிய நம்பிக்கையும் மக்களிடையே நிலவியது. மண்ணுலகில் வாழும் காலத்தில் நல்லறங்களைச் செய்து வாழ்ந்தால் அவ்வறத்தின் பயனைத் தேவலோகத்துக்குச் சென்று நுகரும் பேறு கிடைக்கும் என்றும் புதல்வரைப் பெற்றோரும், இரவலரின் வறுமைத் துன்பத்தைப் போக்குபவர்களும் மேலுலகத்தை அடைவர் என நம்பினர்.*

*மறுபிறவிபற்றிய நம்பிக்கையும் பண்டைத் தமிழர்களிடம் வேரூன்றி இருந்தது. துறக்க உலகப் பேறானது, அறம், நல்வினை, தவம், கணவன் மேல் கொண்ட உண்மையான பற்று, போரில் உயிர் துறத்தல், வடக்கிருத்தல் போன்ற நற்செயல்களால் கிட்டும் என்றும் தீவினை புரிதல், பெண் கொலை புரிதல் போன்றன நரகத்தை அடைய வழிவகுக்கும் எனவும் நம்பினர்.*

பழங்காலமக்கள் இயற்கையைச் சில சடங்குகளின் மூலம் கட்டுப்படுத்தமுடியும் என நம்பினர். குறவர்கள் ஆரவாரம் செய்தால் மேகம் மழை பெய்யும் என நம்பினர். தென்திசைக்கண் வெள்ளிமீன் சென்றால் மழை பெய்யாது என்றும், மேகம் தென்திசைக்கண் சென்றால் மழை குறையும் என்றும் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். பலிநேர்ந்தால் மழைபெய்யும் என்றும், தெய்வத்தின் சீற்றத்தை மழை தணிக்கும் என்றும் நடுகல்லை வழிபட்டால் மழைபெய்யும் என்றும் மக்கள் நம்பினர்.

கற்புடையப் பெண்கள் உலகம் வறட்சியுற்ற காலத்தில் மழையைப் பெய்விக்கும் ஆற்றல் பொருந்தியவர்கள் என நம்பினர். ஆண்களின் ஆற்றலுக்குப் பெண்களின் கற்பொழுக்கமே காரணம் எனக் குறவர்கள் நம்பினர். கற்புக்குரிய கடவுளாக அருந்ததி திகழ்வதாக நம்பினர்.

வீட்டின் முற்றத்தில் காக்கை தொடர்ந்து கரைந்தால் விருந்தினர் வருவர் என்னும் நம்பிக்கை பண்டு தொட்டு இன்றுவரை நிலவி வருகிறது. விரிச்சி கேட்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். விரிச்சிக்கு ஏற்பவே எண்ணம் ஈடேறும் என்று நம்பினர்.

கூற்றுவனை இயமனின் ஏவலன் என்றும் அது உயிர்களைப் பிடித்துச் செல்வதற்காகத் தன் கையில் வலை வைத்திருப்பதாகவும் நம்பினர்.

பேய்கள் இருப்பதாக நம்பினர். அவை போர்க்களத்தில் திரியும், பிணங்களைத் தின்னும், யாமப் பொழுதில் சுற்றித் திரியும் என நம்பினர்.

சூளுரைத்ததற்கு மாறாக நடந்துகொண்டால் தெய்வம் தண்டிக்கும் என்று நம்பினர். திருமணமாகாத பெண்கள் பிறையைத் தொழுதால் தங்களுக்கு நல்ல கணவன் வாய்ப்பான் என்று நம்பினர்.

மக்கள் தாங்கள் செய்த பாவங்களுக்கு ஏற்ற கழுவாயினைச் செய்தால் அப்பாவங்களிலிருந்து விடுபடலாம் என நம்பினர்.

கன்னிப்பெண்கள் தைத்திங்களில் நீராடி நோன்பு மேற்கொண்டால் நல்ல கணவன் கிடைப்பான் என்று நம்பினர். காவிரி, கடலோடு கலக்கும் இடத்தில் நீராடினால் தீவினைகள் நீங்கும் என்று நம்பினர்.

வலப்பக்கத்தைச் சிறந்ததாகக் கருதினர். வேள்வி செய்தால் விரும்பியதை அடையலாம் என்றும், மகப்பேறு வாய்க்கும் என்றும், சுவர்க்கம் புகலாம் என்றும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

மேற்குறித்த முடிவுகள் சங்க இலக்கியம் காட்டுகின்ற சமூகமானது இனக்குழுத் தன்மையைப் பெற்றிருந்ததைக் காட்டுகிறது. மொத்தத்தில் சங்கால மக்களின் வாழ்க்கையைச் சடங்குகளும் நம்பிக்கைகளுமே இயக்கின என்பதை இவ்வியல் தெளிவுபடுத்தியுள்ளது.

## *5. புழங்குபொருட்களும் பண்பாடும்*

***5.1*** *உலகில் வாழும் பல்வேறு உயிரினங்களுள் மனிதனைமட்டும் தனித்துவம் மிக்கவனாகப் பிரித்துக்காட்டுவது 'பண்பாடு' எனக் குறிப்பிடப்படும் ஒன்றாகும். உலகில் வாழும் அனைத்து மக்கள் சமூகமும் தனக்கெனத் தனித்த அடையாளங்களைக்கொண்டு விளங்குகின்றன. அவற்றைப் பண்பாடு என்ற சொல்லால் குறிப்பிடுகிறோம். இத்தகைய பண்பாடு என்னும் சொல்லுக்கு உலகிலுள்ள அறிஞர்கள் பலரும் பல்வேறு விதமாக விளக்கம் தந்திருப்பினும், மானிடவியலறிஞர் எட்வர்ட் பர்னட் டைலர் என்பார், "பண்பாடு என்பது அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், வழக்கம் முதலானவையும், மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினராக இருந்து கற்கும் பிற திறமைகளும், பழக்கங்களும் அடங்கிய முழுமைத் தொகுதியாகும்"[1] என பண்பாடு என்னும் சொல்லை வரையறுக்கிறார். மானிடவியல் அறிஞர்கள் அவற்றைப் பொருள்சார் பண்பாடு(material culture) என்றும், பொருள்சாராப் பண்பாடு(non-material culture) என்றும் இருவகைகளாகக் குறிப்பிடுகின்றனர்.*

*ஆ. சிவசுப்பிரமணியன், "மக்களுடன் பிணைந்து நிற்கும் பண்பாடானது பல்வேறு அடையாளங்கள் வாயிலாக வெளிப்பட்டு நிற்கும். இதனையே, பண்பாட்டு அடையாளம் என்று குறிக்கலாம். இப்பண்பாட்டு அடையாளம் உடை-அணிகலன் போன்ற புழங்கு பொருளாகவோ, கல்வி – தத்துவம் – மருத்துவம் போன்ற அறிவுத் துறையாகவோ அமையலாம். இவற்றோடு மட்டுமின்றி பயன்படுத்தும் சொற்கள்; சொற்களின் தொனி; முகபாவனைகள்; சைகைகள் வாயிலாகவும்கூட பண்பாட்டு அடையாளம் வெளிப்படும்"[2] எனக் குறிப்பிடுவார்.*

*ஒரு மக்கள்சமூகத்தின் பண்பாட்டைப் பல்வேறு கூறுகளைக்கொண்டு உய்த்தறியமுடியும். இதனை, "ஓர் இனத்தின் வாய்மொழி வழக்காறுகளிலும், சடங்குகளிலும், பழக்கவழக்கங்கள் மற்றும் தட்டுமுட்டுச் சாமான்களிலும் அதன் சமூகப் பண்பாட்டு வரலாற்றுக்கான சான்றுகள் காணப்படுகின்றன"[3] என்ற கருத்து மெய்ப்பிக்கிறது.*

*ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் உருவாக்கப்படும் பயன்பாட்டுப் பொருள் அச்சமூகத்தின் சூழலோடும் இயற்கை வளத்தோடும் பெரிதும் தொடர்புடையது என்பர். எனவே பொருள்சார் பண்பாட்டைக் குறித்து நோக்கும்போது நிலவியல் பின்னணியையும் கவனத்தில்கொள்ள வேண்டியது மிக முக்கியமான ஒன்றாகும். நாட்டார் வழக்காற்றியல் அறிஞர் தே. லூர்து, "மானுடச் சமூகங்கள் எல்லாம் தாம் வாழும் சுற்றுச் சூழலுக்கும் காலத்திற்கும் ஏற்ப வாழ்ந்தாக வேண்டும். இந்தப் படிமுறையில் தத்தம் சொந்த நோக்கத்திற்கேற்ப இயற்கை உலகை வடிவமைக்கப் பல்வேறு தந்திரோபாயங்களையும் அணுகுமுறைகளையும் வளர்த்தெடுத்துள்ளன. இயற்கை வளங்களைப் பண்பாட்டுப் படைப்புக்களாகவும் கலைப் படைப்புக்களாகவும் (artefacts) மாற்றிக்கொள்வதையே புழங்குபொருள்சார் பண்பாடு(material culture) என்கிறோம்"[4] என்று புழங்குபொருள் பண்பாட்டில் சூழலின் தாக்கம் குறித்துக் குறிப்பிட்டுவது இங்குக் கவனிக்கத்தக்கது.*

---

*[1] பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 152*

*[2] ஆ. சிவசுப்பிரமணியன், அடித்தள மக்கள் வரலாறு, ப. 31*

*[3] ச. பிலவேந்திரன், சனங்களும் வரலாறும், ப. 8.*

*[4] தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல்: சில*

*அந்தவகையில் இயற்கைச் சூழலுக்கு முக்கியத்துவம் தந்து இயற்றப்பட்டுள்ள சங்கக்கவிதைகளினூடே அக்காலச் சமூகத்தின் பொருள்சார் பண்பாட்டை(material culture) அறிந்துகொள்வதற்குக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனப் பகுக்கப்பட்ட நிலவியல் பின்னணி பெரிதும் துணை நிற்கின்றன.*

*ஒரு குறிப்பிட்ட காலத்தின் புழங்குபொருட்களைக்கொண்டு அப்பொருள் சார்ந்த காலகட்டத்தின் பண்பாட்டையும் அக்காலகட்டத்து மக்களின் வாழ்க்கை முறைகளையும் மீட்டுருவாக்கம் செய்ய இயலும் என்பதால் புழங்கு பொருட்கள் பண்பாட்டு வரலாற்றில் முக்கிய அங்கமாகத் திகழ்கின்றது. "பொருட்கள் சாப்பிடுவதற்கு, உடுப்பதற்கு, தங்குவதற்கு நல்லவை என்பதை மறந்துவிடுங்கள். அவற்றின் அன்றாடப் பயனைவிடுத்துப் பொருட்கள் மக்களின் சிந்தனையை வெளிப்படுத்தும் ஊடகங்கள் என எண்ணுங்கள்"[1] என்கிறார் மேரி டக்ளஸ். எனவே புழங்குபொருட்கள் மக்களின் சிந்தனை வாழும் களமாக விளங்கிவருவது நோக்கத்தக்கது.*

*"தமிழர்களின் அரசியல் வரலாறு ஆவணங்களை மையமிட்டு எழுதப்படுகின்றது. ஆனால், சமூக – பண்பாட்டு வரலாறு ஆவணங்களையும் தாண்டியதாகும்"[2] எனப் பக்தவத்சல பாரதி குறிப்பிடுவது புழங்குபொருட்கள் வாயிலாகப் புலப்படும் பண்பாட்டடையாளங்களை உள்ளடக்கியே எனக் கருதலாம்.*

*மக்களின் உணர்வுகள் வாழும் களமாகப் புழங்குபொருட்கள் விளங்குவதால் அவர்கள் பயன்படுத்தும் புழங்குபொருட்கள் அவர்களின் கற்பனை ஆற்றலையும் தொழில்நுட்பத் திறனையும் வெளிப்படுத்தக்கூடியன. எனவே அன்றாட வாழ்வில் மக்கள் பயன்படுத்தும் பொருட்களில் அவர்களின் உணர்வுகள், கருத்துக்கள், மதிப்பீடுகள் ஆகியன ஊடாடி இருப்பதைக் காணலாம். இந்நிலையில் பொருட்கள் எவ்வாறு நுட்பமாகப் பண்பாட்டைப் பிரதிபலிக்கின்றன என்பதை, "ஒரு பண்பாட்டைச் சேர்ந்த பொருள்கள் அதற்கென்ற பொருளையும்(meaning) பயன்பாட்டையும் நிலையாகக் கொண்டு அப்பண்பாட்டில் நிலைபெற்றிருக்கும். மக்களின் தேவைகளுக்காகப் பொருள்கள் ஏற்படுத்தப்பட்டதால் அத்தேவைகள் பண்பாட்டில் நிலைபெற்றுள்ளவரை அப்பொருள்களும் அப்பண்பாட்டில் இருக்கும். பண்பாட்டு மாற்றம் ஏற்பட்டுச் சில குறிப்பிட்ட தேவைகள் அற்றுப்போகுமானால் அவற்றிற்குரிய பொருள்களும் மறைந்து போகும். ஆகவே ஒரு பண்பாட்டைச் சேர்ந்த அனைத்துப் பொருள்களையும் கொண்டு அம்மக்களின் பண்பாட்டைப் பெருமளவு அறியமுடியும்"[3] என்பார் பக்தவத்சல பாரதி.*

*மக்கள் தங்கள் தேவைகளுக்காக உண்டாக்கிய அனைத்து வகையான பொருட்களிலிருந்தும் ஒரு குறிப்பிட்ட மக்கள் கூட்டத்தின் பண்பாட்டை உய்த்தறியலாம். நாட்டுப்புறவியல் அறிஞர் தே. லூர்து, "புழங்கு பொருள் பண்பாடு பற்றிய படிப்பு ஒரு வகையில் தொல்லியலோடு(archaeology) தொடர்புடையது. மக்கள் குழுவொன்று வாழ்ந்துள்ளது என்பதற்குச் சான்றாகப் புழங்கு பொருள் மட்டுமே கிட்டும்போது இது தொல்லியலோடு தொடர்புடையது. மற்றொரு*

---

*அடிப்படைகள், ப. 297*

*[1] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 315.*

*[2] பக்தவத்சல பாரதி, வரலாற்று மானிடவியல், ப. 1*

*[3] பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், பக். 164-165*

வகையில் புழங்குபொருள் பண்பாடு மானிடவியலோடு தொடர்புடையது. கலை, இசை, நடனம், குறியீட்டியல், சடங்கியல் போன்ற பிரிவுகள் சார்ந்த மானிடவியலோடும், தொழில்நுட்ப ஒழுங்கமைப்புகள் சார்ந்த மானிடவியலோடும் தொடர்புடையது''[1] என்பார்.

பக்தவத்சல பாரதி, பண்பாட்டைக் கணிப்பதில் புழங்குபொருட்கள் எவ்வகையில் பங்காற்றுகின்றன என்பதைக் குறித்து, ''ஒவ்வொரு சமூகத்திலும் அதன் நடத்தை முறைகளை ஒழுங்குபடுத்துவதிலும் சமூகச் செயல்களுக்குப் பொருள் விளக்கம் கொடுப்பதிலும் அச்சமூகத்தின் புழங்கு பொருட்களும் பங்குபெறுகின்றன. இதனால் இவற்றைப் 'பொருள் மொழி' என்றும் பண்பாட்டில் இவை 'பேச்சற்ற ஊடகங்கள்' என்றும் கொள்ள வேண்டியுள்ளன''[2] என்றும், அவை எவ்வாறு பண்பாட்டைப் பிரதிபலிக்கின்றன என்பதை, ''பொருட்கள் பண்பாட்டைப் பிரதிபலிக்கும்போது இப்பிரதிபலிப்பின் தன்மை பண்பாட்டில் உருவகமாகக் காணப்படலாம்; குறியீடாகக் காணப்படலாம். அன்றாடச் சூழலில் ஒரு பொருண்மையும் சடங்கு, சமயச் சூழல்களில் வேறொரு பொருண்மையும்கூட வெளிப்படுத்தலாம் அல்லது இயல்பான நிலையிலேயே தன் இருப்பையும் பொருண்மையையும் வெளிப்படுத்தலாம்''[3] என்றும் குறிப்பிடுவார்.

''புழங்கு பொருட் பண்பாட்டைப் (*material culture*) பொறுத்தவரை பொருட்கள் எவ்வாறு உற்பத்தி செய்யப்படுகின்றன? எவ்வாறு/எதற்காகப் பயன்படுத்தப்படுகின்றன? என்ற இரண்டு நிலைகளைப் புரிந்து கொண்டால் புழங்கு பொருட் பண்பாட்டை முழுவதுமாகப் புரிந்து கொள்ளலாம்''[4] என்பார் ஜேம்ஸ் டீட்ஸ்(*james Deetz*). மேற்குறித்த கருத்துக்கள் அனைத்தையும் மனங்கொண்டு சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஒவ்வொரு புழங்குபொருளைக் குறித்தும் அப்பொருள் எதனால் செய்யப்பட்டது?, எவ்வாறு செய்யப்பட்டது?, யாரால் செய்யப்பட்டது?, யாருக்காகச் செய்யப்பட்டது?, அதனைப் பயன்படுத்தியவர் யார்?, என்ன தேவைக்காகப் பயன்படுத்தப்பட்டது?, புழங்கு வெளியில் அதன் பயன்பாடு என்ன? அது ஒரு பொருள் என்பதையும் தாண்டி அப்பொருள் பண்பாட்டுத் தளத்தில் எத்தகைய கருத்தைப் புலப்படுத்துகிறது? என்ற வினாக்களுக்கு விடைதேடுவது இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.

''புழங்கு பொருட்களும் பொருள்சார் பண்பாடும் சங்க இலக்கியத்தில் பரவிக் காணப்படுகின்றன. பேசுவதற்கும் எழுதுவதற்கும் மொழி ஆதாரமாவது போல் புழங்கு பொருட்களும் கலை வடிவங்களும் பண்பாட்டை விளக்கவல்லவையாகும். பொருட்களின் பயன்படும் தன்மையும் அவற்றின் அர்த்தங்களும் பொருட்களின் மொழியாகும். அம்மொழியூடாகப் பொருட்கள் மக்களின் சிந்தனையையும் அவர்களின் அறிதிறனையும் (*cognition*) வெளிப்படுத்துகின்றன''[5] என்பார் பத்தவத்சல பாரதி. எனவே, சங்க இலக்கியத்தின் வழி அறியலாகும் உணவு, உடை, இருப்பிடம், வீடுகளில் பயன்படுத்தப்பட்ட பொருட்கள், அணிகலன்கள், வேளாண் கருவிகள், தொழில்சார் கருவிகள், போர்க்

---

[1] தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல்: சில அடிப்படைகள், பக். 297-298

[2] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், பக். 315-316

[3] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், ப. 315

[4] பக்தவத்சல பாரதி, மானிடவியல் கோட்பாடுகள், பக். 316-317

[5] பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. xiv

கருவிகள், போக்குவரத்துச் சாதனங்கள், ஒப்பனைப் பொருட்கள், இசைக் கருவிகள், கலைப்பொருட்கள் போன்றவைகளின் வழியாகப் பொருள்சார் பண்பாட்டை அறிந்துகொள்ளும் நோக்கில் சங்கப் பனுவலானது உற்றுநோக்கப்படுகிறது.

இங்கு உணவு, உடை, இருப்பிடம் தொடர்பான பொருள்சார் பண்பாட்டுக் கூறுகள் சூழலும் சமூக அமைப்பும் என்ற முதல் இயலிலேயே விளக்கப்பட்டுள்ளமையின் ஆய்வேட்டின் பக்க எல்லை கருதி அவற்றைத் தவிர்த்த பிற கூறுகள் இங்குக் கவனத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டு அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தி இவ்வியல் ஆராய்கிறது.

1. வீடுசார் பொருட்கள்
2. அணிகலன்கள்
3. இசைக் கருவிகள்
4. தொழில் கருவிகள்
5. போர்க் கருவிகள்
6. தோல் பொருட்கள்
7. சடங்குசார் பொருட்கள்
8. ஒப்பனைப் பொருட்கள்
9. அளவைக் கருவிகள்
10. பிற பயன்பாட்டுப் பொருட்கள்

### 5.2. வீடுசார் பொருட்கள்

#### 5.2.1. விளக்கு

வீடுகளில் பயன்படுத்தப்பட்ட மிக முக்கியமான புழங்குபொருள்களுள் ஒன்று விளக்கு. இது சாதாரண வீடுகள் தொடங்கி அரண்மனைகள்[1] வரை எல்லா மக்களாலும் பயன்படுத்தப்பட்ட ஒன்றாக இருந்தது.

அரசனுக்கான பாசறைகளில் பணிபுரியும் மகளிர் பாவை விளக்கில் திரியிட்டு நெய் வார்த்து விளக்கேற்றினர். இதனை, "கைஅமை விளக்கம்"[2], திருமணி விளக்கம்"[3] என முல்லைப்பாட்டு குறிப்பிடுகிறது. பள்ளியறைக் கட்டிலிடத்து விளக்கு ஏற்றி வைத்திருந்ததை, "மென் பூஞ் சேக்கை நிவந்த பள்ளி, நெடுஞ் சுடர் விளக்கத்து"[4] எனச் சுட்டுவது கொண்டு அறியலாம்.

மாலைக் காலத்தில் பெண்கள் நீண்ட ஒளியுடைய விளக்கினை ஏற்றினர். இத்தகைய விளக்கினை "நெடுஞ்சுடர் விளக்கம்"[5] எனக் குறிப்பிடுகிறது மதுரைக்காஞ்சி. விளக்கினை ஏற்றி மாலைப் பொழுதை வரவேற்கும் வழக்கத்தை நற்றிணையும் சுட்டுகிறது.[6] இத்தகைய விளக்குகள் நடுப்பகல் போல் ஒளியைத் தருவதாக இருந்ததை, "பகல்கொள் விளக்கு"[7] எனச் சுட்டுவதால் அறியலாம்.

மீன் பிடிப்பதைத் தொழிலாகக்கொண்ட பரதவர்கள் மீனைத் தேடுவதற்காகத் தம் படகுகளில் விளக்கை ஏற்றிச் சென்றனர்.[8] கடலுக்குச் சென்று பிடித்துவந்த மீன்களை மணலில் குவித்துவைத்து அதற்குக் காவலாக மீன்

---

[1] புற. 280:3
[2] முல். 49
[3] முல். 63
[4] அக. 93:13-14
[5] மது. 556
[6] நற். 58:6
[7] ஐங். 56:1
[8] நற். 372:11-12; அக. 240:5-6

கொழுப்பினால் சமைத்த நெய்யைக் கிளிஞ்சலில் ஊற்றிச் சுடரை ஏற்றி அவ்விளக்கொளியில் துயின்றனர்.[1]

### 5.2.1.1. வழிபாட்டில் விளக்கு

பழங்காலத்தில் விளக்கினை ஏற்றி வைத்து வழிபடும் வழக்கம் இருந்துள்ளது. சூல் கொண்ட மகளிர் பல்வேறு இசைக் கருவிகள் ஒலிக்க விளக்கை ஏற்றிவைத்து தெய்வங்களுக்குப் படையல் தந்து வழிபட்டதை மதுரைக் காஞ்சியும்,[2] மாலைக் காலத்தில் பெண்கள் இல்லுறைத் தெய்வத்திற்கு நெல்லும் மலரும் தூவி, விளக்கேற்றி வழிபட்டதை நெடுநல் வாடையும்[3] குறிப்பிடுகிறது.

கார்த்திகைத் திருவிழாவில் விளக்குகளை ஏற்றி வழிபட்டதையும்,[4] முருகனுக்குரிய திருச்சீரலைவாயிலில் விளக்குகள் ஏற்றி வைக்கப்பட்டிருந்ததையும்[5] அகநானூறு குறிப்பிடுகிறது. திருப்பரங்குன்றத்தில் முருகனிடம் அன்பு பூண்ட அடியவர்கள் அடிக்கின்ற காற்றிலும் அணையாத விளக்கிற்குத் தேவையான நெய், திரி போன்றவற்றை எடுத்துச் சென்று வழிபாடு செய்ததைப்பற்றி பரிபாடலும் சுட்டுகிறது.[6]

### 5.2.1.2. பாண்டில் - விளக்கு

பண்டைக் காலத்தில் பயன்படுத்தப்பட்ட விளக்கு வகைகளுள் ஒன்று பாண்டில் விளக்காகும். இதனைக் கால்விளக்கு என்றும், இது உலோகத்தாலானது என்றும் உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். இது உயரமானதாகக் காணப்பட்டதால் இதன் சுடர் வீடுமுழுவதும் ஒளியைப் பரப்பி இருளை நீக்கும் தன்மையுடையதாக இருந்தது.

இத்தகைய பாண்டில் விளக்குகள் பாசறைகளில் பயன்படுத்தப்பட்டதை, ''பாண்டில் விளக்கில், பரூஉச் சுடர் அழல''[7] என நெடுநல்வாடையும், இப்பாண்டில் விளக்கின் ஒளியில் விறலியர் ஆடியதை,

''சொரி சுரை கவரும் நெய் வழிபு உராலின்
பாண்டில் விளக்குப் பரூஉச் சுடர் அழல,
நல் நுதல் விறலியர் ஆடும்
தொல் நகர் வரைப்பு''[8]

எனப் பதிற்றுப்பத்தும் குறிப்பிடுகிறது. இவ்விளக்குகள் அரண்மனை, பாசறை, வளமனை போன்ற இடங்களில் மட்டுமே பெரிதும் பயன்படுத்தப்பட்டது எனக் கருதலாம்.

### 5.2.2. நெய்உமிழ் சுரை

நெய்யற்ற விளக்குகளுக்கு நெய்யை வார்ப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட குழாயோடு கூடிய கருவி ஒன்று புழக்கத்தில் இருந்தது. இக்கருவியினை ''நெய்உமிழ் சுரை''[9] என முல்லைப்பாட்டு குறிப்பிடுகிறது.

---

[1] நற். 175:3-4
[2] மது. 605-610
[3] நெடு. 41-44
[4] அக. 185:11
[5] அக. 266:20-21
[6] பரி. 8:98
[7] நெடு. 175
[8] பதி. 47:5-8
[9] முல். 48

### *5.2.3. அடுப்பு*

*சங்ககாலத்தில் வாழ்ந்த மக்கள் அனைவரின் வீடுகளிலும் காணப்பட்ட பொருளாக உணவு சமைக்கப் பயன்பட்ட அடுப்பு விளங்கியது. இவ்வடுப்புகள் இரண்டு நிலைப்பட்டனவாகக் காணப்படுகின்றன. நிலையான குடியிருப்புகளில் வாழ்ந்தோர் வீடுகளில் காணப்பட்ட அடுப்புகள் குறிப்பிட்ட இடத்தில் நிலையாக மண்ணாலோ அல்லது கற்களாலோ அமைக்கப்பட்டன. இவை 'கோடு உயர் அடுப்பு'[1], 'பல் கோட்டு அடுப்பு'[2] எனச் சுட்டப்பட்டுள்ளன. இத்தகைய அடுப்பின் விளிம்பில் கொம்மை, கொண்டை எனப்பட்ட மேடான குமிழ் போன்ற உறுப்பு காணப்படும். இக்கொம்மைகள் ஒடிந்த அடுப்பு 'முரி அடுப்பு'[3] எனப்பட்டது. இடையர் வீடுகளில் 'கல் அடுப்பு' பயன்படுத்தப்பட்டது. இதனை, 'களி படு குழிசிக் கல் அடுப்பு ஏற்றி'[4] என அகநானூறு குறிப்பிடுகிறது. வீரர்களின் தலைகளை அடுப்பாகக்கொண்டு பேய்கள் உணவு சமைப்பதாகக் குறிப்பிடும் கற்பனை நிகழ்விலும் அடுப்பு குறிப்பிடப்படுவது.[5] கவனிக்கத்தக்கது.*

*அலைகுடிகளாக வாழ்ந்த மக்கள் பயன்படுத்திய அடுப்புகள் கற்களால் தற்காலிகமாக அமைக்கப்பட்டிருந்தன. உப்பு வணிகர் கூட்டம் இத்தகைய கல்அடுப்பினைப் பயன்படுத்திச் சமைத்து உண்டு கைவிட்டுச் சென்றதை, 'உமண் உயிர்த்து இறந்த ஒழிகல் அடுப்பின்'[6] எனச் சுட்டுவதைக்கொண்டும், அவ்வடுப்பில் மழவர்கள் புழுக்கிய இறைச்சியைச் சமைத்து உண்டதை,*

> *"உமண் சாத்து இறந்த ஒழி கல் அடுப்பில்*
> *நோன் சிலை மழவர் ஊன் புழுக்கு அயரும்"[7]*

*எனக் குறிப்பிடுவதைக்கொண்டும் அறியமுடிகிறது. அடுப்பு ஒரு பொருள் (material) என்பதையும் தாண்டி சமூக வெளியில் அது உணர்த்தும் பொருள்(meaning) மிகுந்த கவனிப்பிற்குரியதாகத் திகழ்கிறது. அவ்வகையில், ஒரு குடும்பத்தின் வளமையையும், வறுமையையும் சுட்டிக் காட்டும் குறியீடாகவும் அடுப்பு விளங்குகிறது.*

*எயிற்றியர் கொம்மைகள் முறிந்த அடுப்பில் உடைந்த பானையில் உலைவார்த்து உணவு சமைத்ததை, 'முரவு வாய்க் குழிசி முரி அடுப்பு ஏற்றி'[8] என பெரும்பாணாற்றுப்படையும், புலவரின் வீட்டில் வறுமையினால் சமைத்தலை ஒழித்த அடுப்பில் காளான் பூத்திருந்ததை, 'ஆடு நனி மறந்த கோடு உயர் அடுப்பின் ஆம்பி பூப்ப'[9] எனப் புறநானூறும் குறிப்பிடுவதைக்கொண்டு அக்காலச் சமூகத்தில் இருந்த பொருளாதார ஏற்றத்தாழ்வையும், சமூக ஏற்றத்தாழ்வையும் காட்டும் அளவுகோலாக அடுப்பு திகழ்கிறது.*

### *5.2.4. அம்மியும் குழவியும்*

*பழங்காலத்தில் அம்மியும் குழவியும் வாசனைப் பொருட்களை அரைப்பதற்காகப் பயன்படுத்தப்பட்டன. அம்மியையும் குழவியையும் கொண்டு வையையில் நீர் விளையாட்டு ஆடும் மகளிர் குங்குமம், அகில், கருப்பூரம் முதலியவற்றைச் சாந்தரைக்கும் அம்மியில் இட்டுக் குழம்பாக அரைத்ததை,*

---

[1] புற. 164:1
[2] அக. 141:15
[3] பெரு. 99
[4] அக. 393:14
[5] புற. 26:8, 372:5; மது. 29
[6] அக. 159:4
[7] அக. 119:8-9
[8] பெரு. 99
[9] புற. 164:1-2

'மறுகுபட அறை புரை அறு குழவியின், அவி அமர் அழலென அரைக்குநர்'[1] எனப் பரிபாடல் குறிப்பிடுவது கொண்டு அறியமுடிகிறது.

**5.2.5. உரல்**

சங்ககாலச் சமூகத்தில் உணவு தானியங்களைச் சமைப்பதற்கு ஏற்ற வகையில் அவற்றை உரலில் இட்டுக் குற்றி, தானியங்களை மூடியுள்ள உமியினை நீக்கினர். இச்செயல்பாட்டின் அடிப்படையில் பார்க்கும்போது இப்பொருள் அக்கால மக்கள் அன்றாட வாழ்வில் இன்றியமையா இடத்தைப் பெற்றிருந்ததை ஊகிக்க முடிகிறது.

இவ்வுரல்கள் சங்ககாலச் சமூகத்தில் வீடுகளின் முற்றத்தில் நிலத்தில் புதைக்கப்பட்ட நிலையில் காணப்பட்டதை, 'எயினர் மகளிர், பார்வைமான் கட்டிநின்ற தேய்ந்த தாளினையுடைய விளவின் நீழலையுடைய தம் முற்றத்தே தோண்டப்பட்ட நிலவுரலிலே அப் புல்லரிசியைச் சொரிந்து குறிய வயிரமேறிய உலக்கையால் குற்றினர்'[2] எனக் குறிப்பிடுவதைக்கொண்டும். உரல்கள் நிலத்திற்கு மேலாகக் காணப்பட்டதை, உமணர்கள் 'பெண் யானையின் முழந்தாளை ஒத்த துளையிடப்பட்ட அறையை உடைய சிறிய உரலை கயிரால் கட்டி வண்டியில் ஏற்றிச் சென்றனர்'[3] என்பதைக்கொண்டும், அறிந்துகொள்ள முடிகிறது.

இவ்வுரல்கள் கற்கலால்(பாறை) செய்யப்பட்டவை என்பதை, 'ஆடு கழை நெல்லை அறை உரலுள் பெய்து'[4] என்றும் 'ஐவன வெண் நெல் அறை உரலுள் பெய்து'[5] என்றும் வரும் கலித்தொகைப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

சந்தன மரத்தாலும் உரல்கள் செய்யப்பட்டதை 'முகைவளர் சாந்து உரல்'[6] என்ற கலித்தொகைப் பாடலடி உணர்த்துகிறது. மேலும் இத்தகைய சந்தன மரத்தாலான உரலில் தினையை இட்டு யானைத் தந்தத்தால் குற்றியதையும் அறியமுடிகிறது.

இவ்வுரல்கள் வட்ட வடிவின என்பதை 'உரல் கால் யானை'[7], 'உரல் புரை பாவு அடி'[8],'உரல் போல் அடிய உடம்பு உயங்கு யானை'[9], 'உரல் போல் பெரும் கால்'[10] என யானையின் கால்களுக்கும்; 'உரல் தலை கேழற் பன்றி'[11] எனப் பன்றியின் தலைக்கும் உவமையாகக் காட்டப்படுவதிலிருந்து விளங்கிக்கொள்ள முடிகிறது.

சங்கப்பாடல்கள் உரலையும் உலக்கையையும் பெண்களால் மட்டுமே கையாளப்பட்ட பொருளாகக் காட்டுவதைக்கொண்டு பெண்ணின் புழங்கு வெளியில் அவளின் உழைப்பு இப்பொருள்களின் வழி வெளிப்படுவதைக் கீழ் வரும் சங்கப் பாடல் கருத்துக்கள் காட்டும்.

> சுரத்தில் பொருந்திய சிற்றூரில் உள்ள பெண்கள் பூண்மாண்ட உலக்கையால் உயர்த்திக் குற்றும் உரலினின்று எழும் ஒலி நீண்ட பக்கமலையில் மாறிமாறி ஒலித்தது.[12]

---

[1] பரி. 10:83-84
[2] பொ. வெ. சோமசுந்தரனார் (உ.ஆ.), http://temple.dinamalar.com/news_detail.php?id=13491
[3] பெரு. 53-54
[4] கலி. 41:3
[5] கலி. 43:4
[6] கலி. 40:4
[7] குறு. 232:4
[8] கலி. 21:1
[9] கலி. 13:6
[10] பதி. 43:3
[11] புற. 152:3-4
[12] அக. 9:10-12

*இடையர் தாய்மார்கள் வரகினை திரிகையில் இட்டுத் திருகி, சுளகினால் புடைத்து, அரிசியாக்கி உரலில் இட்டுத் தீட்டினர்.*[1]

*எயிற்றியர் புல்லரிசையை உரலில் இட்டு உலக்கையால் குற்றினர்.*[2]

*கொடிச்சியர், சந்தன மரத்தால் ஆன உரலில் இட்டு யானைத்தந்தத்தால் ஆன உலக்கையால் தினைக்கதிரைக் குற்றினர்.*[3]

*பெண்கள் உரலில் நெல், சுண்ணம் ஆகியவற்றை வள்ளைப்பாட்டினைப் பாடி இடிப்பர்.*[4]

*விதைப்பதற்கு எனக் கொண்ட தினையை மனையோள் உரலில் பெய்து உணவு ஆக்கித் தருவாள்.*[5]

*மேற்குறித்த கருத்துக்கள் கொடிச்சியர், ஆய்ச்சியர், உழத்தியர், எயிற்றியர் என அனைத்துத் திணைசார் குடியிலும் வாழ்ந்த பெண்கள் அனைவராலும் இவ்வுரல் பயன்படுத்தப்பட்டதைக் காட்டுகிறது. இது வீடுசார் பணிகளில் பெண்களின் பங்களிப்பை அறியத் துணைநிற்கிறது.*

### *5.2.6. உலக்கை*

*சங்கச் சமூகத்தின் புழங்குபொருள் பண்பாட்டை நோக்கும்போது உலக்கை என்னும் பொருள் மக்களின் அன்றாட வாழ்வில் தவிர்க்கமுடியாத இடத்தினைப் பெற்றிருந்ததைக் காணமுடிகிறது.*

*உலக்கைகள் வயிரம் வாய்ந்த மரத்தால் செய்யப்பட்டதையும், அவற்றின் முனைகள் முறியாமல் இருக்கும்பொருட்டு உலோகத்தாலான தொடி எனப்பட்ட பூண்கள் பொருத்தப்பட்டிருந்ததையும் முறையே, 'குறுங்காழ் உலக்கை'[6], 'கருங்காழ் உலக்கை'[7], 'இருங்காழ் உலக்கை'[8] என்றும், 'தொடிமாண் உலக்கை'[9], என்றும் குறிப்பிடப்பட்டுள்ள சங்கப் பாடலடிகளால் அறியமுடிகிறது.*

*குறவர்கள் யானைத் தந்தத்தைக் குற்றுவதற்குரிய உலக்கையாகப் பயன்படுத்தினர் என்பதற்கு 'முத்து ஆர் மருப்பின் வகைசால் உலக்கை'[10], 'வயக் களிற்றுக் கோடு உலக்கையாக'[11] 'கொல்யானைக் கோட்டால் வெதிர் நெல் குறுவாம்'[12] என்ற பாடலடிகள் சான்றுபகர்கின்றன. மேலும் சந்தன மரத்தாலான உலக்கையைப் பற்றி,*

> *"......இனவண்டு இமிர்பு ஊதும்*
> *சாந்த மரத்தின், இயன்ற உலக்கையால்*
> *ஐவன வெண்நெல் அறை உரலுள் பெய்து...."*[13]

*என்ற கலித்தொகைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இத்தகைய உலக்கைகள் நெல்,*[14] *வெண்ணெல்,*[15] *அரிசி,*[16] *தினை,*[17] *வரகு,*[18] *மிளகு,*[19] *புல்லரிசி*[20] *போன்ற*

---

1 அக. 393:8-11
2 பெரு. 95-97
3 கலி. 40:1-5, 41:1-4, 43:1-4
4 குறு. 89
5 புற. 333:12
6 பெரு. 97
7 குறு. 238:1
8 அக. 141:18; சிறு. 193
9 அக. 9:12-13, 393:11; புற. 399:2
10 கலி. 40:4-5
11 கலி. 41:1-2
12 கலி. 42:7
13 கலி. 43:2-4
14 பதி. 24:19-22
15 கலி. 43:1-4; புற. 399:1-3
16 சிறு. 193-195
17 கலி. 40:3-5; கலி. 41:1-4
18 அக. 393:5-12
19 பதி. 41:21
20 பெரு. 95-97

*தானியவகைகளையும் அவலினையும்*[1] *உரலில் இட்டுக் குற்றுவதற்குப் பயன்படுத்தினர்.*

### *5.2.7. திரிமரம்*

*வரகு திரிக்கப் பயன்பட்ட திரிகை 'திரிமரம்' எனப்பட்டது. இது மரத்தால் செய்யப்பட்டது என்பதைத் 'திரிமரம்' என்ற பெயரே உணர்த்தும். யானையின் காலைப் போன்ற வடிவுடைய இத்திரிமரங்கள் முல்லை நிலத்து உழவர் வீடுகளின் முற்றத்தில் கிடந்ததை, 'களிற்றுத் தாள்புரையும் திரிமரப் பந்தர்'*[2] *எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.*

### *5.2.8. முறம்*

*உணவு தானியங்களைப் புடைத்துத் தூய்மை செய்வதற்குப் பயன்படுத்தப்பட்ட வீடு சார்ந்த புழங்குபொருட்களுள் ஒன்று 'முறம்.' இது 'சுளகு' என்ற பெயராலும் சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்கப் பாடல்களில் 'முறம்செவி யானை'*[3]*, 'முறம்செவி வாரணம்'*[4]*, 'முறம்செவி'*[5] *என யானையின் காதுகளுக்கு முறம் உவமையாகக் குறிப்பிடப்பட்டுள்ளதுகொண்டு அதன் வடிவத்தை அறியமுடிகிறது.*

*மூங்கில் நெல்லை உரலுள் பெய்து, யானைக் கொம்பாலான உலக்கையால் குற்றி, சேம்பின் இலையை முறமாகக்கொண்டு புடைத்ததை,*

> *''………வயக் களிற்றுக்*
> *கோடு உலக்கையாக, நல்சேம்பின் இலைசுளகா*
> *ஆடுகழை நெல்லை அறை உரலுள் பெய்து இருவாம்''*[6]

*என்ற கலித்தொகைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இதில் சேம்பின் இலை அக்காலத்தில் முறமாகப் பயன்படுத்தப்பட்டதையும், அது நெல்லைப் புடைத்து உமி நீக்குவதற்குப் பயன்படுத்தப்பட்டதையும் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. அகநானூற்றுப் பாடலொன்று*[7] *திரிகையில் இட்டுத் திருகிய வரகினைப் புடைத்துத் தூய்மை செய்து உரலில் இடுவதற்குச் சுளகு எனப்பட்ட முறம் பயன்பட்டதைக் குறிப்பிடுகிறது.*

*எள்ளானது முறத்தில் உலர்வதைக் கண்டு குறும்பூழ்ப்பறவை உட்கொண்டதைச் 'சுளகிடை உணங்கல் செவ்வி கொண்டு'*[8] *என்ற புறநானூற்று அடி குறிப்பிடுவதிலிருந்து முறம் அக்காலத்தில் சிறு தானியங்களை உலர்த்துவதற்குப் பயன்பட்டதை அறிய முடிகிறது.*

### *5.2.9. மத்து*

*மத்து, மத்தம் என்ற இரு சொற்களும் சங்கப் பாக்களில் தயிர் கடையும் மத்தினைக் குறித்து நின்றன. கால்நடை மேய்த்தலை வாழ்வாதாரமாகக்கொண்ட ஆயர்கள் ஆனிரைகளின் பால், தயிர், மோர், நெய் போன்றவற்றை விற்று அதன்மூலம் வரும் பொருளாதாரத்தில் வாழும் வாழ்க்கையுடையவர்கள். அத்தகைய ஆயர்கள் தயிரிலிருந்து வெண்ணெய்யைப் பிரித்தெடுக்கப்*

---

[1] *குறு. 238:1; பெரு. 225-226*
[2] *பெரு. 187*
[3] *நற். 376:1; புற. 339:13*
[4] *கலி. 42:2*
[5] *கலி. 52:1*
[6] *கலி. 41:1-3*
[7] *அக. 393:9-11*
[8] *புற. 321:3*

பயன்படுத்திய கருவியாக மத்து விளங்கியது. மரத்தால் செய்யப்பட்ட இம்மத்தின் தண்டு நீண்டு இருந்தது. தயிர்த்தாழியில் மத்தின் தண்டில் கயிற்றினைச் சுற்றிக் கலக்க வெண்ணெய் திரண்டது.[1] கயிறு ஆடித் தேய்த்தலால் அம்மத்தின் தண்டு தேய்ந்திருந்தது.[2] பால்படுபொருட்களை மையமாகக்கொண்ட ஆயர் வாழ்வில் இன்றியமையாத புழங்குபொருளாக 'மத்து' விளங்கியதை அறியமுடிகிறது.

### 5.2.10. உறி

பண்டங்களை வைத்து அந்தரத்தில் தொங்கவிடும் கயிற்றுக்கு 'உறி' என்று பெயர். இதனைத் தூக்கு என்ற பெயராலும் சுட்டுவர். ஆனால் சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படும் உறி காவடியைப் போன்றது எனக் கருதலாம். இடையர்கள் இத்தகைய உறியினைப் பால் கறத்தற்குரிய கறவைக் கலங்களையும் பிறவற்றையும் எடுத்துச் செல்லப் பயன்படுத்தினர். இதனை,

> "கழுவொடு சுடு படை சுருக்கிய தோற்கண்,
> இமிழ் இசை மண்டை உறியொடு, தூக்கி"[3]

> "பாணி கொண்ட பல் கால் மெல் உறி
> ஞெலி கோல் கலப்பை அதளொடு சுருக்கி"[4]

என்ற பாடலடிகள் காட்டுகின்றன. கோவலர்கள் இத்தகைய உறியினைத் தண்டில் கட்டி காவடிபோல் தோளில் சுமந்து சென்றதால் அவர்களின் தோள்கள் தழும்புடையனவாகக் காணப்பட்டதை, 'உறிக்கா ஊர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்'[5] என்று பெரும்பாணாற்றுப்படை காட்டுகிறது. அந்தணர்களும் கரகம் எனப்பட்ட கமண்டலத்தை உறியில் வைத்து எடுத்துச் சென்றதை, 'உறித்தாழ்ந்த கரகம்'[6] எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது. மேற்குறித்தவற்றிலிருந்து 'உறி' பொருட்களை நீண்ட தூரத்திற்கு எளிதில் சுமந்து செல்லப் பயன்படுத்தப்பட்டதை அறியமுடிகிறது.

### 5.2.11. அகளம்

அகளம் என்ற சொல்லுக்கு அகராதிகள்[7] தாழி, மிடா, சாடி, யாழின்பத்தர், நீர்ச்சால் ஆகிய பொருள்களைத் தருகின்றன. இப்பொருள் சங்ககாலத்தில் புழக்கத்தில் இருந்ததை, நீர் நிறைந்த சுனைகள் நீர் இறைக்கும் சால் போன்ற வடிவத்தில் இருந்ததை, 'அகளத்து அன்ன நிறை சுனை'[8] என மலைபடுகடாம் சுட்டுவதைக்கொண்டும், யாழின் பத்தர் தாழியைப் போன்ற வடிவுடையதாக விளங்கியதை, 'வயிறுசேர்பு ஒழுகிய வகை அமை அகளத்து'[9] எனச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுவதைக்கொண்டும் அறிய முடிகிறது.

### 5.2.12. குழிசி

சங்ககால மக்கள் சமைக்கும் தேவைக்குப் பயன்படுத்திய பொருள்களுள் மிக முக்கியமானதாக விளங்கியது குழிசி எனப்பட்ட மண் பானைகள். இதனை, 'அட்ட குழிசி'[10], 'ஆடுறு குழிசி'[11] எனச் சங்கப் பாடல்கள் குறிப்பிட்டுள்ளன. இப்பானைகள்

---

[1] நற். 84:6; அக. 101:8
[2] நற். 12:1-3; கலி. 110:10
[3] கலி. 106:1-2
[4] நற். 142:2-3
[5] பெரு. 171
[6] கலி. 9:2
[7] http://agarathi.com/word/அகளம்
[8] மலை. 104
[9] சிறு. 224
[10] புற. 237:7
[11] புற. 371:6

அனைத்து நிலத்தைச் சார்ந்த மக்கள் வாழ்விலும் இன்றியமையாத இடத்தைப் பெற்றிருந்ததைச் சங்க இலக்கியப் பாடல்கள் காட்டுகின்றன.

முல்லைநிலத்து ஆயர்குலப் பெண்கள் வரகு அரிசியைப் பானையில் இட்டு சுனைநீர் ஊற்றி கல்லால் அடுக்கிய அடுப்பில் அப்பானையை ஏற்றிச் சோறு சமைத்தனர்.[1] இப்பானைகள் சோறு சமைப்பதற்கு மட்டுமின்றி தயிரினைச் சேமிக்கவும்,[2] தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்தபின் உள்ள மோரைப் பானையில் ஊற்றிச் சென்று விற்கவும்[3] பயன்படுத்தப்பட்டுள்ளன. அத்தயிர் பானையில் முடைநாற்றம் தீர ஆயர்கள் விளாம்பழத்தினை இட்டுவைத்தனர்.[4]

பாலை நிலத்து எயிற்றியர்கள் தாம் கொண்டுவந்த புல்லரிசியைப் பழைய விளிம்பு உடைந்துபோன பானையில் இட்டு உவரிநீர் வார்த்து, உலையை முரிந்த அடுப்பில் ஏற்றிச் சோறு சமைத்துள்ளனர்.[5] குறிஞ்சி நிலக் குறவர்களும் மானிறைச்சி சமைத்த புலால் நாறும் பானையைக் கழுவாமலேயே, மரையாவின் இனிய பாலை உலைநீராக வார்த்து, சந்தன விறகால் எரியூட்டித் தினையைச் சமைத்துள்ளனர்.[6]

வழிப்போக்கர்களும்,[7] இரவலர்களும் சமைத்தற்குரிய பானையைப் பையில் இட்டு உடன் கொண்டு சென்றனர்.[8] குடவோலைத் தேர்தல்[9] முறைக்கும் இப்பானைகள் பயன்பட்டுள்ளதை அகநானூற்றுப் பாடல் காட்டுகிறது.

மேற்குறித்த சான்றுகளைக்கொண்டு பார்க்கும்போது பானைகள் சமைக்கவும்,[10] பால்,[11] தயிர், வெண்ணெய், நெய், மோர் போன்றவற்றைச் சேமித்து வைக்கவும் அக்காலத்தில் அனைத்துத் தரப்பு மக்களுக்கும் பயன்பட்டு வந்துள்ளதை அறியமுடிகிறது.

### 5.2.13. சாடி

சங்ககாலத்தில் புழக்கத்தில் இருந்த பல்வேறு மட்பாண்ட வகைகளுள் ஒன்று சாடி. இதனை தாழி, சால் என்ற பெயர்களாலும் குறிப்பிடுகின்றனர். சாடிகள் கள்ளினை ஊற்றி வைப்பதற்கும், கள்ளினை அடுதற்கும், நீரை ஊற்றி வைப்பதற்கும் பயன்பட்டுள்ளன.

சாடிகளைக் கள் ஊற்றிவைக்கப் பயன்படுத்தியதை, 'நனைமுதிர் சாடி'[12], 'முதுகள் சாடி'[13], 'கள்ளின் சாடி'[14], 'நனை முதிர் சாடி நறவின் வாழ்த்தி'[15] என்பனவும், கொழியல் அரிசியுடன் நெல்முளையைக் கலந்து கள்ளினை அடுதற்குச் சாடி பயன்படுத்தப்பட்டதைப் பெரும்பாணாற்றுப்படையும்[16] குறிப்பிடுகின்றன.

சாடிகள் நீர் ஊற்றிவைக்கப் பயன்படுத்தப்பட்டதை, 'செங்கண் சில்நீர் பெய்த சீறில் முன்றில் இருந்த முதுவாய்ச் சாடி'[17] எனப் புறநானூறு சுட்டுவதுகொண்டு அறியலாம்.

### 5.2.14. சால்

சங்ககாலத்தில் பயன்படுத்தப்பட்ட மட்பாண்ட வகைகளுள் ஒன்றாகச் சால்

---

[1] அக. 393:8-17
[2] நற். 12:1; புற. 257:12
[3] பெரு. 155-160
[4] நற். 12:1
[5] பெரு. 95-100
[6] புற. 168:8-11
[7] பெரு. 365-367
[8] புற. 371:6
[9] அக. 77:7-8
[10] புற. 237:7; 393:4
[11] புற. 65:2
[12] அக. 166:1
[13] புற. 258:9
[14] நற். 295:7
[15] புற. 297:6
[16] பெரு. 275-281
[17] புற. 319:2-3

*விளங்குகிறது. இது மிடாவினைக் குறிக்கும். ஆய் என்பவன் பரிசிலர்க்கு மிடாச் சோற்றை உண்கலத்தின் குழி நிரம்புமாறு கொடுத்ததை,*

> *"வல்லினும், வல்லார்ஆயினும், சென்றோர்க்குச்*
> *சால் அவிழ் நெடுங் குழி நிறைய வீசும்,*
> *மாஅல் யானை ஆஅய்"[1]*

*என அகநானூறு குறிப்பிடுவதுகொண்டு, சால் எனப்பட்ட மிடாக்கள் சோறு சமைக்கப் பயன்பட்டுள்ளதை அறியலாம்.*

### *5.2.15. தசும்பு*

*சங்கப்பாடல் காட்டும் சமூகத்தில் புழக்கத்தில் இருந்த மட்பாண்டப் பொருட்களுள் ஒன்றாகத் 'தசும்பு' எனப்பட்ட மண்பானைகள் அன்றாடப் பயன்பாட்டில் முக்கிய இடம்பெற்றிருந்தன.*

*இம்மட்பாண்டம் மண்ணால் செய்து சுடப்பட்டது என்பதை நற்றிணைப் பாடலொன்று 'சுடுமண் தசும்பு' எனக் குறிப்பிடுகிறது. சங்க இலக்கிய உரையாசிரியர்கள் தசும்பு என்ற சொல்லுக்குத் தாழி, குடம், பானை, மிடா எனப் பொருளுரைத்துள்ளனர்.*

*இப்பொருளின் பயன்பாட்டைச் சங்கப் பாடல்களினூடே பார்க்கின்றபோது, தயிரினை ஊற்றிவைக்கும் கலமாகவும்,[2] கள்ளினை ஊற்றிவைக்கும் கலமாகவும்[3] பயன்பட்டதை அறிந்துகொள்ளலாம். இதனை, "ஆய்மகள், தயிர் கொடு வந்த தசும்பு"[4], "சேறுபட்ட தசும்பு"[5] எனவரும் சங்கப்பாடலடிகள் உணர்த்தும்.*

*இத்தசும்பு ஆயமகளிரின் வீடுகளில் தயிரினைக் கடைவதற்கும், கடைந்த மோரினைச் சுமந்துசென்று விற்பதற்கும் பயன்பட்டுள்ளது. மன்னர்களின் வெற்றி விழாக்களின்போது இத்தசும்புகளில் கள் நிரப்பி வீரர்களுக்குப் பரிமாறப்பட்டது. இக்கட்குடங்களின் மேல் சந்தனம் பூசப்பெற்று, இஞ்சியும் பூவும் கலந்து தொடுத்த மாலை சூட்டப்பெற்றிருந்தது.[6] மன்னர்களை நாடிவந்த பரிசிலர்க்கும் இரவலர்க்கும் கூத்தர்க்கும் தசும்பு நிறையக் கள் வழங்கப்பட்டது.[7] வலையர் மகளிர் கள்ளினை மிடாவில்(தசும்பு) சுமந்துவந்து களங்கள்தோறும் தந்து நெல்லினைப் பெற்றுச் சென்றனர்[8] எனவரும் செய்திகள், தசும்பு என்ற மட்பாண்டம் கள்ளை ஊற்றிவைக்கப் பயன்பட்டதைக் காட்டுகிறது.*

### *5.2.16. கோய்*

*சங்க இலக்கியத்தில் இப்பாண்டம் கள்ளினை முகந்து வைப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை, 'பேர் ஊர் அட்ட கள்ளிற்கு ஓர் இல் கோயின் தேருமால் நின்னே"[9], 'நல் மரம் குழீஇய நனை முதிர் சாடி பல் நாள் அரித்த கோஒய் உடைப்பின்'[10] எனச் சுட்டப்படுவதுகொண்டு அறியலாம்.*

---

[1] *அக. 152:19-21*
[2] *புற. 33:2-3; நற். 84:6-7*
[3] *புற. 224:2, 239:16, 377:18; பதி. 42:11, 43:34; மலை. 463*
[4] *புற. 33:2-3*
[5] *புற. 377:18*
[6] *பதி. 42:10-11; புற. 224:2*
[7] *புற. 239:16, 377:18; பதி. 43:34*
[8] *மலை. 463-464*
[9] *புற. 300:5-6*
[10] *அக. 166:1-2*

### 5.2.17. தடவுத் தாழி

தடவு என்னும் பாத்திரம் கள்ளினை ஊற்றி வைக்கப் பயன்பட்ட பெரிய தாழியைக் குறிப்பிடுகிறது. இத்தகைய பாண்டத்தில் கள்ளினை ஊற்றி வைத்திருந்ததை, 'கள்ளுடைத் தடவில் புள் ஒலித்து ஓவா'[1] என நற்றிணை சுட்டுகிறது.

### 5.2.18. தாழிகள்

சங்ககால மக்கள் தங்கள் அன்றாடப் பயன்பாட்டிற்காகப் பல்வேறு அளவிலான மட்பாண்டங்களைப் பல்வேறு தேவைகளுக்காகப் பயன்படுத்தியுள்ளனர். அவற்றுள் ஒன்று 'தாழி' எனப்பட்ட மட்பாண்டம். தாழிகள் பிணங்களை அடக்கம் செய்வதற்குமட்டுமல்லாமல் நீர் ஊற்றி வைக்கவும்,[2] பூந்தொட்டியாகவும்[3] பயன்பட்டதை அகநானூற்றுப் பாக்கள் காட்டுகின்றன.

### 5.2.19. நிறை

நிறை என்பது நீரினை ஊற்றிவைக்கும் ஒருவகையான 'சால்' எனப்பட்ட மட்பாண்டத்தைக் குறிக்கும். அளவில் பெரியதாகவும், சிறியதாகவும் அக்கால வீடுகளில் பயன்படுத்தப்பட்ட இது, 'பெருநிறை'[4], 'சிறுநிறை'[5] எனச் சங்கப்பாக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

### 5.2.20. மண்டை

மண்டை என்னும் சொல்லுக்கு அகராதிகள், 'இரப்போர் கலம்'[6] என்று பொருளுரைக்கின்றன, இதனை 'இரவல் மண்டை'[7] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. சங்கத் தொகைநூல் காட்டும் சமூகத்து மக்களான அரசர், பாணர், போர்வீரர், விறலியர், இடையர், வளமனைக் கிழத்தியர் போன்றோர் பயன்படுத்தியுள்ளனர். இவர்களுள் அரசர்களும், வளமனைக் கிழத்தியரும் பயன்படுத்தியவை பொன்னால் ஆனவை என்பது குறிப்பிடத்தக்கது.

உண்ணும் கலமாகப் பயன்பட்ட இது, மண்ணாலும் பொன்னாலும் செய்யப்பட்டது. 'வாயகன்ற மண் பாத்திரம்' என உரைகாரர் உரைப்பதுகொண்டு மண்ணால் செய்யப்பட்டதையும், 'மணி செய் மண்டை'[8], 'பசும் பொன் மண்டை'[9] என உரைப்பதுகொண்டு பொன்னால் செய்யப்பட்டதையும், 'அகல் மண்டை'[10] எனக் குறிப்பிடப்படுவதுகொண்டு இதன் அகன்ற வடிவத்தையும் அறியமுடிகிறது. இப்பாத்திரம் உணவு உண்பதற்கும், கள் அருந்துவதற்கும், மீன்களை இட்டு வைப்பதற்கும், பால் கறப்பதற்கும் பயன்பட்டதைச் சங்கப்பாக்கள் காட்டுகின்றன.

இப்பாத்திரம் கள் அருந்தப் பயன்பட்டதை 'நறவு உண் மண்டை'[11], 'பரூஉக் கள் மண்டை'[12], 'வண்டு படு நறவின் தண்டா மண்டை'[13] என வருவன உணர்த்துகின்றன. போர் செய்யும் வீரர்களுக்கும் மண்டை என்ற உண்கலத்தில் கள் வழக்கப்பட்டது.[14] அரசன் கள்ளுண்ணுவதற்குப் பொன்னாலான மண்டையைப்

---

[1] நற். 227:7
[2] அக. 275:1
[3] அக. 165:11, 369:6
[4] அக. 383:10
[5] அக. 284:6
[6] http://agarathi.com/word/மண்டை
[7] புற. 179:2
[8] அக. 105:5
[9] புற. 289:6
[10] புற. 235:10
[11] அக. 96:1
[12] புற. 125:3
[13] புற. 261:2
[14] புற. 286

பயன்படுத்தியதை, 'தனக்கு முகந்து ஏந்திய பசும்பொன் மண்டை'[1] என்பதால் அறியலாம்.

பாணர்கள் மண்டையில் கள்ளினை உண்டதை, "பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார், வாக்க உக்க தேக்கட் தேறல்"[2] என்பதைக்கொண்டும், உழவர்கள் மீனோடு கள் உண்டதை, 'உழவர் மண்டை இருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து'[3] என்பதைக்கொண்டும் அறியலாம். நிணத்தின் கொழுவிய துண்டங்கள் சொரிந்த தினைச்சோறு, பாகுடன் பாலினை ஊற்றிக் கலந்த அவல் போன்றவற்றை உண்ணவும் இக்கலம் பாணர்க்குப் பயன்பட்டதை அகநானூறு[4] காட்டுகிறது.

'அதியமானை நாடிச் செல்லும் பாணர்க்கு மண்டை என்னும் உண்கலத்தில் ஊன் உணவு வழங்கப்பட்டது.[5] செல்வர் இல்லங்களில் மணிகள் இழைத்துச் செய்த பொற்கலத்தில் இனிய பாலோடு தேன் கலந்து செவிலித்தாயர் உணவு ஊட்டியதை, 'மணி செய் மண்டைத் தீம் பால் ஏந்தி'[6] என்பதால் அறியலாம்.

கோவலர்கள் பால் கறத்தற்குரிய கறவைக் கலனாக மண்டை பயன்பட்டுள்ளது.[7] மீன் பிடிக்கும் பாணர்கள் மீனினை இட்டு வைத்தற்கு இக்கலத்தினைப் பயன்படுத்தியதை, 'பாணர் பசுமீன் சொரிந்த மண்டை'[8] எனக் குறுந்தொகை சுட்டுகிறது.

மணம் செய்து வைக்கும் முதிய மங்கள மகளிர், மணச் சடங்குகளைச் செய்யும் போது மண்டை என்னும் கலத்தினை ஏந்தியவர்களாய் ஒருங்குகூடியதை, 'உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர், பொது செய் கம்பலை முது செம்பெண்டிர்'[9] என அகநானூறு குறிப்பிடுகிறது.

ஒரு பொருளைப் பயன்படுத்துவோர், அதன் பயன்பாட்டு நிலை ஆகியவை, அப்பொருளைத் தாண்டிய அர்த்தங்களைத் தருகின்றன. இதனடிப்படையில், 'கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யார்'[10], 'இலம்படு புலவர் மண்டை'[11], 'ஏலாது கவிழ்ந்த என் இரவல் மண்டை'[12], 'அழல் கான்று அன்ன அரும் பெறல் மண்டை'[13] என்பன அக்காலச் சமூகத்தில் பாணர் பெற்றிருந்த சமூக மதிப்பையும், வறுமை நிலையையும் சுட்டிக் காட்டும் ஊடகமாய் இப்புழங்குபொருள் விளங்குகிறது.

### 5.2.21. குடம்

சங்க காலத்தில் பயன்படுத்தப்பட்ட வீடு சார்ந்த புழங்குபொருட்களுள் குறிப்பிடத்தக்கது குடம். இக்குடங்களை நீர்த்துறையிலிருந்து தண்ணீரை முகந்து செல்ல பெண்கள் பயன்படுத்தினர். அக்குடங்கள் அழகிய வேலைப்பாடு மிக்கதாக அமைந்திருந்ததை, 'நுண்செயல் அம்குடம்'[14] என்றும், திருமணச் சடங்கினை நிகழ்த்தும் பெண்கள், தலையில் நீர்க் குடத்தோடு நின்றதை, 'உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர், பொது செய் கம்பலை முது செம் பெண்டிர்'[15] என்றும் குடத்தின் பயன்பாட்டை அகநானூற்றுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

முல்லை நிலத்து ஆயர்கள் இக்குடங்களைப் பால் கறக்கப் பயன்படுத்தியதை, கலித்தொகை[16] காட்டுகிறது. இக்குடத்தின் வடிவம்

---

[1] புற. 289:6
[2] புற. 115:2-3
[3] புற. 384:8-9
[4] அக. 237:10
[5] புற. 103:9
[6] அக. 105:5
[7] கலி. 106:2
[8] குறு. 169:4
[9] அக. 86:8-9
[10] புற. 103:3
[11] புற. 155:6
[12] புற. 179:2
[13] புற. 398:21
[14] அக. 336:6-7
[15] அக. 86:8-9
[16] கலி. 107:2, 109:3, 113:9

*பலாப்பழத்தைப் போன்று காணப்பட்டதை, ‘முடவுமுதிர் பலவின் குடம்மருள் பெரும்பழம்’[1], ‘குடக் காய் ஆசினி’[2] எனவரும் உவமைகளைக்கொண்டு ஊகிக்கலாம்.*

### *5.2.22. வள்ளம்*

*வட்டில், கிண்ணம் போன்ற உண்ணும் கலங்களை ‘வள்ளம்’ என்ற பெயரால் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இவ்வள்ளத்தினைப் பால் உண்ணவும், கள் உண்ணவும் பயன்படுத்தியுள்ளனர்.*

*வள்ளம் எனப்பட்ட கிண்ணம் கள் அருந்தப் பயன்படுத்தப்பட்டதை, “உறை கழி வள்ளத்து உறு நறவு வாக்குநர்”[3], “கள் அடு மகளிர் வள்ளம் நுடக்கிய”[4] எனக் குறிப்பிடப்படுவனவற்றைக்கொண்டு அறிந்துகொள்ளலாம்.*

*வள்ளம் பால் உண்ணப் பயன்படுத்தப்பட்டதை, “சேடு இயல் வள்ளத்துப் பெய்த பால் சில காட்டி”[5], “பொன் செய் வள்ளத்துப் பால் கிழக்கு இருப்ப”[6] எனச் சுட்டுவனவற்றைக்கொண்டு அறியலாம். இக்கிண்ணங்கள் பொன்னால் செய்யப்பட்டதை, ‘பொன்செய் வள்ளம்’ எனக் குறிப்பிடுவதுகொண்டு விளங்கிக்கொள்ளலாம். இத்தகைய வள்ளங்களில் பருவமகளிர் பால் அருந்தியதைச் சங்கப்பாக்கள் காட்டுகின்றன. எனவே இதனை வளமனைகளில் புழக்கத்திலிருந்த பொருள் எனக் கருதலாம்.*

### *5.2.23. பொற்கலம்*

*பொற்கலங்கள் தேன் கலந்த பாலுணவை உண்ணப் பயன்பட்டதை, ‘பிரசம் கலந்த வெண் சுவைத் தீம் பால், விரி கதிர்ப் பொற்கலத்து ஒரு கை ஏந்தி’[7] எனக் குறிப்பதைக்கொண்டும், உணவு உண்ணப் பயன்பட்டதை, தாளிப்புச் செய்த கொழுந்துவையோடு கூடிய நெய்யுடை உணவை பொன்னாற் செய்யப்பட்ட சிறிய கலங்களைச் சூழ வைத்துப் பரிசிலர்க்கு குமணன் ஊட்டியதை,*

> *“குய் கொள் கொழுந் துவை நெய்யுடை அடிசில்,*
> *மதி சேர் நாள்மீன் போல, நவின்ற*
> *சிறு பொன் நன் கலம் சுற்ற இரீஇ”[8]*

*என்றும், ஞாயிற்றை ஒத்த தோற்றமுடைய பொன்னால் ஆன உண்கலத்தில் பாணர் விரும்புவனவற்றை அளித்து நல்லியக்கோடன் உண்ணச் செய்ததை,*

> *“இளங்கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து*
> *விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி*
> *ஆனா விருப்பின் தான்நின்று ஊட்டி”[9]*

*எனக் குறிப்பிடுவதைக்கொண்டும், கள்ளினைப் பருகப் பொற்கலங்கள் பயன்பட்டதை, 'பெறல் அருங் கலத்தில் பெட்டாங்கு உண்க' என, பூக் கமழ் தேறல் வாக்குபு தரத்தர’[10], ‘இன்நகை மகளிர், போக்குஇல் பொலங்கலம் நிறைய, பல்கால்,*

---

[1] அக. 352:1; நற். 353:4
[2] நற். 44:9
[3] பரி. 10:75
[4] பெரு. 339
[5] கலி. 72:3
[6] நற். 297:1
[7] நற். 110:1-2
[8] புற. 160:7-9
[9] சிறு. 243-245
[10] பொரு. 156-157

*வாக்குபு தரத்தர'*[1] *எனக் குறிப்பவற்றைக்கொண்டும், பொற்கலங்கள் பால், கள், உணவு முதலியவற்றை உண்ணப் பயன்பட்டதை விளங்கிக்கொள்ளலாம்.*

### *5.2.23.1. வெள்ளிக் கலம்*

*தன்னிடம் பரிசில் நாடி வந்த பாணர்க்குப் பல்வேறு வகையான உணவினை, விண்மீனைப் போன்ற வெள்ளிக்கலங்களைப் பரப்பி தொண்டைமான் இளந்திரையன் உணவளித்ததை, 'மீன் பூது அன்ன வான் கலம் பரப்பி'*[2] *எனப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.*

### *5.2.23.2. மட்கலங்கள்*

*பண்டைக் காலத்தில் உணவு சமைக்க மட்கலங்கள் பயன்படுத்தப்பட்டன. இதனை 'அடு கலம்'*[3] *எனப் புறநானூறு சுட்டுகிறது. மட்கலங்களைச் செய்து தரக் குயவர்கள் எனப்பட்ட தொழிற்பிரிவினர் இருந்தனர். இவர்களை 'கலம்செய்கோ'*[4] *எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. மட்கலங்கள் சக்கரங்களைப் பயன்படுத்தி வனையப்பட்டதை, 'வனை கலம் திகிரி'*[5] *எனச் சுட்டுவதைக்கொண்டும் இவை நெருப்பில் சுடப்படுவதற்கு முன் 'பசுங்கலம்'*[6] *என அழைக்கப்பட்டதையும், இப்பசுங்கலங்கள் சூளையில் இட்டுச் சுடப்பட்டதை, 'கலம் சுடு புகையின் தோன்றும் நாட'*[7] *எனக் குறிப்பதைக்கொண்டும் அறியமுடிகிறது.*

*வன்புலங்களில் வாழும் மக்களின் வீடுகளில் உணவு சமைக்க மட்கலங்கள் பயன்பட்டதையும், அவை பலகாலும் அடுப்பில் வைத்தலால் கரிய நிறமுடையதாக இருந்ததையும், 'பெருங்கட் குறுமுயல் கருங்கலன் உடைய மன்றில் பாயும் வன்புலம்'*[8] *எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. புளியங்காய், நெல்லிக்காய் முதலியவற்றால் ஆன காடியினை ஊறவைப்பதற்கு மிடா எனப்பட்ட மட்கலன் பயன்படுத்தப்பட்டது.*[9]

### *5.2.23.3. பிற கலன்கள்*

*கலங்கள் பால் உண்ணப் பயன்பட்டதை, 'தீம் பால் உண்பவர் கொள் கலம்'*[10] *என்றும், பால் கறக்கப் பயன்பட்டதை, 'தீம் பால் கறந்த கலம்'*[11] *என்றும், வரியோர் பிச்சை ஏற்கப் பயன்பட்டதை, 'குறையோர் கொள் கலம்'*[12] *என்றும், உணவுண்ணப் பயன்பட்டதை, 'வறும் கலம் நிறைப்போன்'*[13]*, 'உண்ட நல் கலம்'*[14] *என்பனவும் சுட்டுகின்றன. இவை உணவு சமைக்கப் பயன்பட்டதை, 'உள்ளில் வறும் கலம் திறந்து அழக் கண்டு'*[15] *என்றும், இரவலர்க்கு மீன் முகக்கப் பயன்பட்டதை, 'இரந்தோர் வறுங் கலம் மல்க வீசி'*[16] *எனக் குறிப்பதைக்கொண்டும் அறிந்துகொள்ளலாம்.*

*வெள்ளியை உருக்குவதற்கு மட்கலங்கள் பயன்பட்டதை, 'வெள்ளி உருக்குறு கொள் கலம்'*[17] *என நற்றிணை சுட்டுகிறது.*

*பரத்தையால் நலம் நுகரப்பட்ட தலைவனைத் தீண்டுதல் கலங்கழித் தெறிந்த தாழி முதலியவற்றைத் தீண்டிய தன்மையைப் போலாகும் என்பதை, 'ஆசு இல்*

---

[1] *பொரு. 85-87*
[2] *பெரு. 477*
[3] *புற. 32:1*
[4] *புற. 228, 256*
[5] *மலை. 474*
[6] *நற். 308:9; குறு. 29:2*
[7] *அக. 308:6*
[8] *புற. 322:5-6*
[9] *பெரு. 57*
[10] *கலி. 133:17*
[11] *கலி. 111:1*
[12] *அக. 142:6*
[13] *புற. 171:5*
[14] *புற. 384:21*
[15] *புற.160:21*
[16] *அக. 30:9*
[17] *நற். 124:7*

*கலம் தழீஇயற்று*[1] எனத் தலைவி குறிப்பிடுவதை நற்றிணைப் பாடல் காட்டுகிறது. இங்குக் குறிப்பிடப்படும் கலம் கழிப்புச் சடங்குகளில் பயன்படுத்தப்பட்ட மட்கலத்தைக் குறிக்கிறது எனக் கருதலாம். இது மேலும் ஆய்வுக்குரியது.

பண்டைக் காலத்தில் மாத விலக்கான காலத்தில் பெண்கள் வீட்டிலுள்ள பாண்டங்களைத் தீண்டுவது தூய்மையற்றதாகக் கருதப்பெற்றது. அத்தகைய பெண்கள் 'கலம் தொடா மகளிர்'[2] எனப்பட்டனர்.

### 5.2.24. சிரகம்

நீர் உண்ணுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட கலம் 'சிரகம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நீர் வேட்கையால் தண்ணீர் வேண்டி வந்தவனுக்கு இளம்பெண்ணொருத்தி 'சிரகம்' என்ற கலத்தில் நீரினைத் தந்ததை, 'அடர் பொற் சிரகத்தால் வாக்கி, சுடரிழாய்! உண்ணு நீர் ஊட்டி வா' என்றாள்'[3] என்ற கலித்தொகை அடிகள் சுட்டக் காணலாம். இது பொன்னால் செய்யப்பட்டிருந்ததை, 'அடர் பொற் சிரகம்' என்பதைக்கொண்டு ஊகிக்க முடிகிறது.

### 5.2.25. சேமச் செப்பு

சங்ககால மக்கள் பனிக்காலப் பருவத்தில் வெந்நீரை அதன் வெப்பநிலை மாறாமல் சேமித்து வைத்து, பருகப் பயன்படுத்திய கலம் 'சேமச் செப்பு'[4] எனக் குறிப்பிடப்படுகிறது.

### 5.2.26. கன்னல்

கன்னல் எனக் குறிப்பிடப்படும் இக்கலம் நீருண்ணப் பயன்படுத்தப்பட்டதை, "தொகுவாய்க் கன்னல் தண்ணீர் உண்ணார்"[5] என்ற நெடுநல்வாடைப் பாடலடி சுட்டக் காணலாம்.

### 5.2.27. வட்டி

உணவுப்பொருட்கள், தானியங்கள், விற்பனைப் பொருட்கள் போன்றவற்றைக் கொண்டு செல்வதற்காகப் பனையோலையால் பின்னப்பட்ட பெட்டிகள் தொகைநூல் காலத்தில் வட்டி என்ற பெயரால் வழங்கப்பட்டு புழக்கத்தில் இருந்துள்ளது. அதனைக் கடகப்பெட்டி என்று பிற்கால உரையாசிரியர்கள் குறித்துள்ளனர். இவ்வட்டிகள் அதன் வடிவ அளவுக்கேற்ப 'அகன் பெருவட்டி[6]', 'குறுவட்டி[7]', 'அகல்வட்டி[8]' என்ற பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளன.

கானவர்கள் தேன், கிழங்கு, ஊன், பன்றியின்தசை போன்றவற்றை வட்டியினுள் வைத்துச் சுமந்து சென்றுள்ளனர்[9]. வேட்டுவர்கள், மான்தசையைச் சுமந்து சென்ற வட்டியில் உழவர்மகளிர் தந்த வெண்ணெல்லைச் சுமந்து சென்றுள்ளனர்.[10] ஆயர்குலப் பெண்கள் தயிர், நெய் போன்றவற்றை விற்றுப் பெற்ற பலநிறங்கொண்ட நெல்லை இவ்வட்டியில் சுமந்து சென்றனர்.[11]

மருதநிலத்து உழவர்கள், நெல்லறுத்து நீங்கப்பெற்று, மீண்டும் உழுத ஈரவயல்களில் விதைக்கும் பொருட்டு விதைகளை இவ்வட்டியில் சுமந்து சென்று

---

[1] நற். 350:9
[2] புற. 299:7
[3] கலி. 51:7-8
[4] குறு. 277:4-5
[5] நெடு. 65
[6] ஐங். 47:2
[7] குறு. 155:1
[8] அக. 391:3
[9] மலை. 152-155
[10] புற. 33:1-5
[11] கலி. 109:13-14

திரும்புகையில் மீன்[1], மலர் அரும்பு[2] போன்றவற்றை இவ்வட்டியுள் இட்டுக் கொண்டுவந்துள்ளனர்.

பாணர் குடிப்பெண்கள் பெரிய வட்டி நிறையுமாறு மீன்களை எடுத்துச்சென்று உழவர் இல்லங்களில் வயலில் விளைந்த பெரும்பயற்றுக்கும்,[3] நெல்லுக்கும்[4] பண்டமாற்று செய்து வந்துள்ளனர்.

விலைஞர் எனப்பட்ட பூவிற்போர் காட்டுமல்லிகை மலர்களை வைத்தும்,[5] உழவர் இளம்பெண்கள் பலவகை மலர்களை இவ்வட்டியுள் இட்டுவைத்தும்[6] பூவிற்றுள்ளனர்.

வீட்டுப் பயன்பாட்டிற்காகவும், வேளாண் பயன்பாட்டிற்காகவும், பண்டமாற்றுத் தேவைக்காகவும், கானக மக்களாலும், மருதநில உழவர்களாலும், முல்லைநில ஆயர்களாலும், பாணர் உள்ளிட்ட பிற மக்கள் அனைவராலும் பயன்படுத்தப்பட்ட, இவ்வட்டி எனப்பட்ட பனையோலைப் பெட்டிகள் சங்ககால மக்கள் பயன்பாட்டில் தவிர்க்க இயலாத பொருளாக இருந்துள்ளது.

### 5.2.28. கண்ணாடி

முகம் பார்ப்பதற்காகக் கண்ணாடி பயன்படுத்தப்பட்டது. இக்கண்ணாடியினை, "நிழல் காண் மண்டிலம்"[7] எனப் பரிபாடலும், "ஆடி"[8] எனக் குறுந்தொகையும் குறிப்பிடுகின்றன.

### 5.2.29. இலை

சங்ககால மக்களின் வாழ்க்கை இயற்கையோடு இயைந்ததாக இருந்தது. அவர்கள் தங்களின் அன்றாட வாழ்வில் மரங்களிலிருந்தும், தாவரங்களிலிருந்தும் கிடைத்த ஏராளமான பொருட்களைப் பயன்படுத்தினர். அவற்றில் ஒன்று இலை. இத்தகைய இலைகள் அவற்றின் தன்மைக்கு ஏற்ப ஆடையாகவும், உணவினை இட்டு உண்ணவும்[9], மாலை தொடுக்கவும், கூரை வேயவும், முறமாகவும் எனப் பல்வேறு தேவைகளுக்குப் பயன்படுத்தப்பட்டன.

#### 5.2.29.1. முறமாக

குறவர்கள் சேம்பின் இலையை முறமாகப்(சுளகு) பயன்படுத்தியுள்ளனர். இதனை, 'நல்சேம்பின் இலைசுளகா'[10] எனக் கலித்தொகை சுட்டுகிறது.

#### 5.2.29.2. மாலையாக

இலைகள் மாலைகளாகத் தொடுத்து அணியப்பெற்றன. மலைநாடன் வேங்கையின் இலைகலந்த மாலையை அணிந்ததை, "அரும்பு முதிர் வேங்கை ஒள் இலைத் தொடலை தைஇ"[11] என்றும், வேலன் வெறியாடும்போது வேம்பினது இலைகளைச் சூடியதை, "வெறி கொள் பாசிலை நீலமொடு சூடி"[12] என்றும், இடையன் பசுமையான தழைகளைக் கொண்டமைந்த மாலையை அணிந்ததை, "பாசிலைத் தொடுத்த, உவலைக் கண்ணி.... மடி வாய் இடையன்"[13] என்றும்

---

[1] நற். 210:1-4
[2] குறு. 155:1
[3] ஐங். 47:1-3
[4] ஐங்.48:1-3
[5] அக. 391:1-3
[6] நற். 97:6-8
[7] பரி. 21:23
[8] குறு. 8:5
[9] அக. 110:12
[10] கலி. 41:2
[11] அக. 105:1-2
[12] அக. 138:5
[13] புற. 54:10-11

குறிப்பிடுவன இதனை மெய்ப்பிக்கின்றன. இலைகள் ஆடையாகவும்(தழையாடை) பயன்படுத்தப்பட்டன.

**5.2.29.3. தேக்கிலை**

உணவு உண்பதற்குத் தேக்கிலைகளைப் பயன்படுத்தியுள்ளனர். எயிற்றியர்கள் தாம் சமைத்த புல்லரிசிச் சோற்றைக் கருவாட்டோடு சேர்த்து, தெய்வத்திற்குப் பலியிடுமாறு போலத் தேக்கிலையில் குவித்துத் தந்ததை, "தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ"[1] எனக் குறிப்பிடுவதைக்கொண்டும், வம்பலர் எனப்பட்ட வழிப்போக்கர்கள் புலியால் அடித்துக் கொல்லப்பட்ட மானின் இறைச்சியை நெல்லரிசியுடன் கூட்டித் தயிரை இட்டுச் சமைத்த உணவைத் தேக்கின் அகன்ற இலையில் வைத்து உண்டதை,

> "வால் நிணம் உருக்கிய வாஅல் வெண்சோறு
> புகர்அரைத் தேக்கில் அகல்இலை மாந்தும்"[2]

என்றும், பாலைவழி வருவோரைப் பேணிக் காக்கும் பண்பினைப் பெற்ற ஆயர்கள், இளைய எருதுகளின் கழுத்தில் கட்டிய மூங்கிற் குழாயுள் அடைத்து வைத்த சுவைமிக்க புளிச்சோற்றினைத் தேக்கின் இலையில் இட்டுப் பசி நீங்கக் கொடுத்ததை,

> "வருவழி வம்பலர்ப் பேணி, கோவலர்
> மழ விடைப் பூட்டிய குழாஅய்த் தீம் புளி
> செவி அடை தீரத் தேக்கிலைப் பகுக்கும்"[3]

என்றும், காட்டில் வாழ்வோர் தேக்குமரத்தின் அகன்ற இலையில் குவித்து வைக்கப்பட்ட நன்கு வதக்கிய ஊனினை உண்டதை, "தேக்கின் அகல் இலை கவித்த புதல் போல் குரம்பை, ஊன் புழுக்கு அயரும் முன்றில்"[4] என்றும் அகநானூறு சுட்டுவன கொண்டு தேக்கின் இலைகள் உணவுண்ணப் பயன்படுத்தப்பட்டதை அறியலாம்.

**5.2.29.4. வாழையிலை**

உணவு உண்பதற்கு வாழை இலையினையும் மக்கள் பயன்படுத்தினர். குறவர்கள் மரையாவின்(பசு) பாலை உலைநீராக வார்த்துத் தினையைச் சமைத்து தன் வீட்டின் முற்றத்தில் வாழை இலையிலே பகுத்து உண்டதை, "கூதளம் கவினிய குளவி முன்றில், செழுங் கோள் வாழை அகல் இலைப் பகுக்கும்"[5] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

**5.2.29.5. ஆம்பலிலை**

ஆம்பல் இலைகளையும் உணவினை உண்பதற்காகப் பயன்படுத்தினர். பாண்மகளிர் அவரவர் கணவன்மார்க்கு ஆம்பலது அகன்ற இலையில் சுடுகின்ற சோற்றுத் திரளோடு புளியங்கறியை இட்டு விடியற் காலையில் உண்பித்ததை, "ஆம்பல் அகல் இலை, அமலை வெஞ் சோறு தீம் புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து, விடியல் வைகறை இடூஉம்"[6] என அகநானூறு சுட்டக் காணலாம். ஆம்பல்

---

[1] பெரு. 104
[2] அக. 107:9-10
[3] அக. 311:9-11
[4] அக. 315:15-18
[5] புற. 168:12-13
[6] அக. 196:5-7

அடை(இலை) கள் அருந்தவும் பயன்பட்டதை, “ஆம்பல் அகல் அடை அரியல் மாந்தி”[1] எனப் புறநானூறும் சுட்டக் காணலாம்.

### 5.2.29.6. கூரை வேய

சிலவகையான இலைகளைக் கூரை வேய்வதற்குப் பயன்படுத்தியுள்ளனர். எயிற்றியர் குடிசைகள் ஈந்தின் இலையால் வேயப்பட்டதை, ‘ஈந்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை’[2] எனப் பெரும்பாணாற்றுப்படையும், பாலைநில வீடுகளின் குடில்களின் கூரை சில வகையான இலைகளால் வேயப்பட்டிருந்ததை, ‘இலை வேய் குரம்பை’[3] என மதுரைக்காஞ்சியும் குறிப்பிடுவதுகொண்டு கூரையை வேய இலைகள் பயன்படுத்தப்பட்டதை அறியமுடிகிறது.

### 5.2.30. புட்டில்

புட்டில் என்பது பனை ஓலையால் முடையப்பட்ட கூடையைக் குறிப்பதாகவும் சங்கப் பாக்களில் பயின்று வந்துள்ளது. இப்புட்டிலை ஆயமகளிர் பயன்படுத்தியதையும், இதனைப் புலைத்தி விலையின் பொருட்டு ஆயமகள் ஒருத்திக்கு முடைந்து தந்ததையும்,

“மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்தது ஓர்
போழின் புனைந்த விரிப்புட்டில்”[4]

எனக் குறிப்பிடுகிறது. இப்புட்டிலில் ஆயமகளிர் காட்டிடத்தே இருந்து முல்லைப் பூக்களைப் பறித்து வந்ததைக் கலித்தொகை சுட்டுகிறது.[5] இன்றும் பனை ஓலையால் செய்யப்பட்ட புட்டில்கள் சில கிராமப்புறப் பகுதிகளில் பயன்பாட்டில் உள்ளன. வணிகரீதியில் ‘புட்டிவெல்லம்’ எனப்பட்ட பனை வெல்லத்தினை இத்தகைய புட்டில்களில் அடைத்து இன்றைய காலத்திலும் விற்பனை செய்துவருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

### 5.2.31. பிழா

பிழா என்ற சொல்லுக்கு அகராதிகள் கொள்கலம், இறைகூடை, தட்டுப்பிழா, ஓலைக்கலம்[6] எனப் பொருளுரைக்கின்றன. பெருமழைப்புலவர் இதனை, ‘ஒருவகைத் தட்டம்’ எனக் குறிப்பிடுகிறார். அகன்ற வாயையுடைய இப்பாண்டம் கள் அடுதலின்போது குற்றாத கொழியலரிசியைக் களியாகத் துழாவிச் சமைத்தக் கூழை உலர்த்துவதற்குப் பயன்படுத்தியதை, “அவையா அரிசி அம் களித் துழவை மலர் வாய்ப் பிழாவில் புலர ஆற்றி”[7] எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

### 5.2.32. பிடகை

பிடகை என்பது பூந்தட்டினைக் குறிக்கும். நாளங்காடியில் இத்தகைய பூந்தட்டுக்களில் பூக்களைப் பரப்பி வைத்தும், மாலையாகத் தொடுத்தும் பூ விற்பனை செய்ததை, “பிடகைப் பெய்த கமழ் நறும் பூவினர், பலவகை விரித்த எதிர்பூங் கோதையர்”[8] என மதுரைக்காஞ்சியும், வீட்டில் செம்முல்லையின் அரும்புகளை, இத்தகைய பூந்தட்டுகளின் இட்டு வைத்திருந்தமையை, “பிடகைப்

---

[1] புற. 209:3-4
[2] பெரு. 88
[3] மது. 310
[4] கலி. 117:7-8
[5] கலி. 117:8-11
[6] http://agarathi.com/word/பிழா
[7] பெரு. 275-276
[8] மது. 397-398

*பெய்த செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து"*[1] என நெடுநல்வாடையும் குறிப்பிடுகின்றன.

### *5.2.33. பறி - மீனை வாரிஎடுக்கப் பயன்பட்ட கூடை*

*மீன் பிடிக்கும் வலைஞரின் குடிலில் மீனை வாரி எடுக்கும் பறிகள் வைக்கப்பட்டிருந்தன. இதனை "குறியிறைக் குரம்பை, பறியுடை முன்றில்"*[2] என பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. மீன் வேட்டையில் வல்ல பரதவர்கள் விடியற்காலையில் கடலுக்குச் சென்று வலைகொண்டு மீன்களைப் பிடித்து அவற்றைப் பறிகொண்டு வாரி எடுத்து நுண்ணிய மணற்பரப்பில் காயவைப்பர் என்பதை,

> *"நாள் வலை முகந்த கோள் வல் பரதவர்*
> *நுணங்கு மணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்,*
> *பறி கொள் கொள்ளையர் ....."* [3]

என்ற அகநானூற்றுப் பாடலடிகளும் குறிப்பிடுகின்றன.

### *5.2.33.1. பறி - ஓலைப்பாய்*

*முல்லைநில இடையர்கள் மேய்ச்சலுக்குச் செல்லும்போது ஓலைப்பாயை பிறபொருள்களோடு கட்டி முதுகில் எடுத்துச் சென்றதை, "பறிப் புறத்து இட்ட பால் நொடை இடையன்"*[4], *"பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய"*[5], *"மறித் துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்"*[6] எனச் சுட்டுவனகொண்டு அறியலாம்.

### *5.2.34. குதிர், கூடு*

*சங்கப் பாக்களில் குறிப்பிடப்பட்டுள்ள 'குதிர்', 'கூடு' என்ற இரு சொற்களும் நெற்கூடு என்ற ஒரு பொருளைச் சுட்டுகிறது. இந்நெற்கூடுகள் நீர் வளமும், நிலவளமும் வாய்ந்த மருத நிலத்துப் பகுதிகளில் புழக்கத்தில் இருந்த பொருளாக இருந்துள்ளன. குறிப்பாக மருத நிலத்து ஊர்களின் வளத்தைக் காட்ட சங்கப் புலவர்கள் "கூடு விளங்கு வியல் நகர்"*[7], *"நெடுங் கூட்டுப் பிண்ட நெல்லின் தாய் மனை"*[8] என நெற்கூடுகளை வளமையின் அடையாளமாகக் குறித்துள்ளனர். மேலும், இந்நெற்கூடுகள் தனியொருவனின் பொருளாதார வளத்தைக் காட்டுவதாகவும் அமைவதை, 'பெருநெற் பல்கூட்டு எருமை உழவ!'*[9] என்பதைக்கொண்டு அறியமுடிகிறது.

*மருதநிலத்து ஊர்களில் இருந்த இல்லங்களில் இந்நெற்கூடுகள் நெல்லால் நிரப்பப்பட்டு, ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினைக் கொண்டதாக இருந்ததை,*

> *"ஏணி எய்தா நீள் நெடு மார்பின்,*
> *முகடு துமித்து அடுக்கிய பழம் பல் உணவின்,*
> *குமரி மூத்த கூடு ஓங்கு நல் இல்"*[10]

எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

---

[1] நெடு. 39-40
[2] பெரு. 265
[3] அக. 300:1-3
[4] நற். 142:4
[5] குறு. 221:2
[6] அக. 94:4
[7] புற. 148:4
[8] நற். 26:3-4
[9] நற். 60:1-2
[10] பெரு. 245-247

நெற்கூடுகளின் உயரம் மலையைச் செய்து வைத்தது போன்று காணப்பட்டதை, “மலை கண்டன்ன நிலை புணர் நிவப்பின் பெருநெற் பல்கூட்டு எருமை உழவ!”[1] என்பதைக்கொண்டும், அதன் பருமன் பெண் யானைக் கூட்டம் போன்று காணப்பட்டதை, “பிடிக்கணத்து அன்ன குதிருடை முன்றில்”[2] என்பதைக் கொண்டும் அறிந்துகொள்ளலாம்.

வந்தவாசி, போளூர் வட்டார கிராமத்து வீடுகளில் மேற்குறித்த இந்நெற்குதிர்களைப் போன்றே ஏணி வைத்து ஏறும் உயரமுள்ள ‘உறை’, ‘நெல்லுறை’ என்ற பெயரிலான குதிர்கள் சமீபகாலம் வரை புழக்கத்தில் இருந்து வருகின்றன. இவை மண்ணால் செய்யப்பட்டு நெருப்பில் சுடப்பட்டவை. இவற்றை நெல், கேழ்வரகு போன்ற தானியங்களைச் சேமித்துவைக்கப் பயன்படுத்துகின்றனர்.

### 5.2.35. ஏணி

உயரமான இடங்களில் ஏறுவதற்காகப் பண்டைக் காலத்தில் ஏணிகள் பயன்படுத்தப்பட்டன. ‘மருத நிலத்து ஊர்களில் ஏணிக்கும் எட்டாத அளவுக்கு உயரமான நெற்கூடுகள் இருந்தன’[3] என்றும், ‘கடற்கரைப் பட்டினத்தில் ஏணி சாத்தியும் ஏறுதற்கு அரிய தலையினை உடையதாய் கலங்கரைவிளக்கம் காணப்பட்டது’[4] என்றும் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுவதுகொண்டு பண்டைக் காலத்தில் உயரமான இடங்களில் ஏறுவதற்கு ஏணிகளைப் பயன்படுத்தியதை அறியமுடிகிறது.

பகைவர் தாக்குதலினின்றும் காத்துக்கொள்வதற்காக அக்கால மதிலகத்து அமைக்கப்பட்ட உறுப்புகளில் ஒன்றாக ஏணி விளங்கியது.[5] குறவர்கள் தேன் கூடுகளை அழித்தற்கு மூங்கிலின் கணுக்களில் கால் வைத்து ஏறும்படி ஒழுங்கு செய்யப்பட்ட ஏணிகளைப் பயன்படுத்தியதைக் கலித்தொகை[6] சுட்டுகிறது. இதனைக் “கண்ணேணி”[7] என்பார் நச்சினார்க்கினியர்.

### 5.2.36. கட்டில்

ஊசியின் மூலம் வாரைச் செலுத்தி கட்டில் பின்னப்பட்டது. அக்கட்டில் பின்னுவோன் ‘கட்டில் நிணக்கும் இழிசினன்’[8] எனக் குறிப்பிடப்படுகிறான். ‘சேரன் தனக்கு அடங்காமல் எதிர்த்துப் போர் செய்த பகை அரசருடைய முரசின் கண்ணைக் கிழித்தும், அவருடைய பட்டத்து யானை வருத்தத்தாற் கதறும்படி அதனுடைய கொம்பை அறுத்து அதனால் தெய்வத்தன்மையுடைய இயல்பைப் பெற்ற கட்டில் செய்தான்’[9] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.

செல்வர் மனைகளில் கட்டில்கள் காணப்பட்டதை, மாலை வேளையில் வீட்டின் முற்றத்தின்கண் உயரம் குறைந்த கால்களை உடைய கட்டிலில், தலைமகன், தன் மனைவி துணையிருக்கத் தன் புதல்வன் தன்மேல் ஏறி ஊர மகிழ்ந்திருந்ததை,

“மாலை முன்றில் குறுங்கால் கட்டில்
மனையோள் துணைவி ஆக, புதல்வன்

---

[1] நற். 60:1-2
[2] பெரு. 186
[3] பெரு. 245-247
[4] பெரு. 346-349
[5] புற. 305, 343:13-14
[6] கலி. 39:9
[7] http://tamilvu.org/slet/l1260/l1260exp.jsp?x=219&y=228&z=39
[8] புற. 82:3
[9] பதி. 79:11-14

*மார்பின் ஊரும் மகிழ்நகை"*[1]

*என ஐங்குறுநூறும், நிலவொளியில் குறுகிய கால்களையுடைய கட்டிலின்மேல் விரிக்கப்பட்ட மணம் கமழும் மலர்ப்படுக்கையில் தலைவன் தன்னுடைய புதல்வனைத் தழுவியவாறு இருந்ததை,*

*"மாலை விரிந்த பசு வெண் நிலவின்*
*குறுங் காற் கட்டில் நறும் பூஞ் சேக்கை,*
*பள்ளி யானையின் உயிர்த்தனன் நசைஇ,*
*புதல்வற் தழீஇயினன் விறலவன்"*[2]

*எனக் குறுந்தொகையும் குறிப்பிடுவதைக்கொண்டு அறிந்துகொள்ளலாம். மேற்குறித்த பாடல்களில் 'குறுங்காற் கட்டில்' என்பது அக்கட்டிலின் கால்கள் குறுகியதாக இருந்ததையும், 'நறும் பூஞ்சேக்கை' என்பது கட்டிலின் மேல் மலர்ப்படுக்கையிடும் வழக்கத்தையும் உணர்த்துகிறது.*

### *5.2.37. அணை*

*சங்கப்பாக்களில் அணை என்பது தலையணை, சாயணை போன்றவற்றையும் படுக்கையையும் குறிப்பிடுகிறது. இவற்றை அரசர்களும், வளமனைகளில் வாழ்ந்த செல்வந்தர்களும் பயன்படுத்தியுள்ளனர். அரசர்களின் அரண்மனைகளில் கட்டிலின் மேல் அமைந்த படுக்கை, அன்னத்தின் தூவிகளாலும், நறுமணமிக்க மலர்களாலும், மணமேற்றப்பட்ட தூய மடியினை விரித்தும், அதன் மீது அணைகளை இட்டுவைத்தும் காணப்பட்டதை,*

*"துணை புணர் அன்னத் தூ நிறத் தூவி*
*இணை அணை மேம்படப் பாய், அணை இட்டு,*
*காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்*
*தோடு அமை தூ மடி விரித்த சேக்கை"*[3]

*என நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. வளமனைகளில் வாழ்ந்தவர்களும் இத்தகைய மென்மையான படுக்கைகளை உறங்குவதற்குப் பயன்படுத்தியதை, "ஆர் இருட் கங்குல் அணையொடு பொருந்தி"*[4]*, "இரும் பல் கூந்தல், சேயிழை, மடந்தை, கனை இருள் நடு நாள், அணையொடு பொருந்தி"*[5] *என வரும் அகநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இத்தகைய படுக்கையில் பூக்கள் சேர்க்கப்பட்டதை, "நெகிழ் நூல் பூச்சேர் அணை"*[6] *என்றும், இவ்வணைகள் நுண்மையான இழைகளால் போர்த்தப்பட்டிருந்ததை, "நுண் இழை அணை"*[7] *என்றும் சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன.*

*படுக்கையில் உறங்குவதற்குத் தலையணைகள் பயன்படுத்தப்பட்டதை, தலைவனின் பிரிவால் மெலிவுற்று வாடும் தலைவி ஒருத்தி படுக்கையில் தலையணை மீது வருந்தி வீழ்ந்து கிடப்பதை,*

*"திருந்துஇழை முன்கை அணல் அசைத்து ஊன்றி,*
*இருந்து அணை மீது, பொருந்துழிக் கிடக்கை"*[8]

---

[1] *ஐங். 410:1-3*
[2] *குறு. 359:2-5*
[3] *நெடு. 132-135*
[4] *அக. 82:16*
[5] *அக. 373:10-11*
[6] *குறு. 253:2-3*
[7] *கலி. 56:19*
[8] *அக. 351:13-14*

எனக் குறிப்பிடுவதைக்கொண்டும், இத்தகைய தலையணைகள் அன்னத்தின் தூவியினாலானதாகக் காணப்பட்டதை, “இணைபட நிவந்த நீல மென் சேக்கையுள், துணை புணர் அன்னத்தின் தூவி மெல் அணை அசைஇ”[1], “மைஅற விரிந்த படை அமை சேக்கை ஐ மென் தூவி அணை சேர்பு அசைஇ”[2] எனக் குறிப்பனவற்றைக்கொண்டும், அறிந்துகொள்ளலாம்.

### 5.2.38. மணிகள்(bell)

மணிகள்(bell) தேர்களிலும், குதிரை, யானை, பசு, எருது, எருமை, ஆடு போன்றவைகளின் கழுத்தில் கட்டவும், கடவுள் வழிபாட்டின் போது மணி ஒலிக்கவும் பயன்படுத்தப்பட்டன.

மணிகள் தேர்களில் கட்டப்பட்டிருந்ததை, “இனமணி நெடும்தேர்”[3], “வடிமணி நெடும்தேர்”[4], “ஆய்மணி நெடும்தேர்”[5], “கறங்குமணி நெடும்தேர்”[6] எனச் சுட்டுவன கொண்டும், மணிகள் யானைகள் கழுத்தில் கட்டப்பட்டிருந்ததை, “படுமணி யானை”[7], “மணி அணி யானை”[8], “குருமணி யானை”[9], “இனமணி யானை”[10] எனச் சுட்டுவன கொண்டும் அறியலாம்.

குதிரைகளின் கழுத்தில் மணிகள் கட்டப்பட்டிருந்ததை, “இனமணிப் புரவி”[11], “நிரைமணிப் புரவி”[12] எனச் சுட்டுவன கொண்டும், பசுக்களின் கழுத்தில் மணிகள் கட்டப்பட்டிருந்ததை, “ஓர்ஆன் தெள்மணி”[13],”படுமணி இனநிரை”[14] என்பனவும், எருதுகளின் கழுத்தில் மணி கட்டப்பட்டிருந்ததை, “கறங்குமணி துவைக்கும் ஏறு உடைப் பெருநிரை”[15] என்பனவும், எருமைகளின் கழுத்தில் மணி கட்டப்பட்டதை, “திரிமருப்பு எருமை இருள்நிற மைஆன் வருமிடறு யாத்த பகுவாய்த் தெள்மணி”[16] என்பனவும் குறிப்பிடுகின்றன. வேசரி எனப்பட்ட கோவேறு கழுதைகளின் கழுத்திலும் மணி கட்டப்பட்டதைப் பரிபாடல்[17] குறிப்பிடுகிறது.

ஆடுகளின் கழுத்திலும் மணிகள் கட்டப்பட்டிருந்ததை, “புருவை பாடு இன் தெள் மணித் தோடு தலைப்பெயர”[18] என நற்றிணையும், அரண்மனை வாயில் முற்றத்தில் ஆராய்ச்சி மணிகள் கட்டப்பட்டிருந்ததை, “மணிகிளர் முன்றில் தென்னவன் மருகன்”[19] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

தேரில் கட்டப்பட்ட மணிகள், இரும்பை உருக்கி, அரக்கினால் வடிவமைக்கப்பட்ட அச்சுக்களில் ஊற்றி உருவாக்கப் பெற்றதை, “மெழுகு ஆன்று ஊது உலைப் பெய்த பகுவாய்த் தெள் மணி”[20] என குறுந்தொகைப் பாடல் குறிப்பிடக் காணலாம். இத்தகைய மணிகள் கொல்லர்களால் வடித்துச் செய்யப்பட்டதால் “வடிமணி”[21] எனவும், வடிவில் வளைந்து காணப்பட்டதால் “கொடு மணி”[22] எனவும், அவை தரும் தெளிந்த ஓசையினால் “தெள்மணி”[23] எனவும் குறிப்பிடப்படுகின்றன.

---

[1] கலி. 72:1-2
[2] அக. 289:13-14
[3] நற். 19:6
[4] ஐங். 468:4
[5] ஐங். 490:4
[6] புற. 200:11
[7] நற். 227:5
[8] பரி.தி. 2:69
[9] பரி.தி. 2:71
[10] கலி. 99:7
[11] அக. 80:10
[12] அக. 190:14
[13] நற். 37:2
[14] அக. 321:7
[15] மலை. 573
[16] குறு. 279:1-2
[17] பரி. 22:24
[18] நற். 321:1-2
[19] புற. 388:13
[20] குறு. 155:3-4
[21] ஐங். 468:4; அக. 350:7
[22] திரு. 246
[23] நற். 37:2, 69:7

*மணியில் மோதி ஒலியெழுப்புவதற்காக அவற்றின் நடுவில் நா (நாக்கு) எனப்பட்ட உலோகத்துண்டு பொருத்தப்பட்டுக் காணப்பட்டதை, "நெடுநா ஒண் மணி"*[1], *"சிறுநா ஒண்மணி"*[2] *என்பன உணர்த்துகின்றன.*

*படைக் கருவியான கேடயங்களில் மணிகள் கட்டப்பெற்றிருந்ததை, "பலகையும் பீலி சூட்டி மணி அணிபவ்வே"*[3], *"வடிமணிப் பலகையொடு நிரைஇ"*[4] *என்பன காட்டுகின்றன.*

### *5.2.38.1. காவலரும் மணியும்*

*காவல் காப்போர் மணிகளைப் பயன்படுத்தியதை, "நெடுநா ஒண்மணி கடிமனை இரட்ட"*[5], *"யாமங் கொள்பவர் நெடுநா ஒண்மணி"*[6] *என குறிப்பிடுவனவற்றைக்கொண்டு அவதானிக்கலாம்.*

### *5.2.38.2. மணியும் வழிபாடும்*

*கடவுளர் வழிபாட்டின்போது பல்வேறு வகையான இசைக்கருவிகளுடன் மணியினையும் அடித்து ஒலியெழுப்பி வழிபாடு நிகழ்த்தப்பட்டது. திருமால் வழிபாட்டில் மணியினை அடித்து ஒலி எழுப்பியதை, "தெள் உயர் வடி மணி எறியுநர்"*[7] *என்று பதிற்றுப்பத்தும், திருப்பரங்குன்றத்து முருகன் திருக்கோயிலில் தொங்கவிட்டிருந்த மணியினை அடித்துப் பெண் ஒருத்தி வழிபட்டதை, "அருள் வயினான் தூங்கு மணி கையால் தாக்கி"*[8] *எனப் பரிபாடலும், வெறியாட்டுக் கலத்தில் முருக பூசையின்போது மணி அடிக்கப்பட்டதை, "கோடு வாய்வைத்துக் கொடு மணி இயக்கி"*[9] *எனத் திருமுருகாற்றுப்படையும் குறிப்பதைக்கொண்டு மணி பெற்றிருந்த முக்கியத்துவத்தை அறியலாம்.*

### *5.2.39. மூங்கிலாலான பொருட்கள்*

*பழங்காலத்தில் மக்களின் அன்றாட வாழ்வில் பனை மரங்களைப் போல மூங்கில்களும் பல்வேறு நிலைகளில் பயன்பட்டுள்ளன. வீடுகட்டுவதற்குரிய மூலப்பொருள், கோல், கழி, நீர்முகக்கும் பொருள், தட்டை என்னும் கிளிகடி கருவி, குழாய், ஏணி, தூண்டில் கோல், மை இட்டுவைக்கும் பொருள், புல்லாங்குழல் என அதன் பயன்பாடு பல வடிவங்களில் இருந்துள்ளது. இத்தகைய மூங்கில்கள் மது, உணவு போன்றவற்றை அடைத்து எடுத்துச் செல்வதற்கும் பயன்பட்டுள்ளது.*

*அகலமான உட்துளையுள்ள மூங்கில்கள் அவற்றின் உறுதித்தன்மை, அமைப்பு போன்றவற்றின் காரணமாக அவை கணுக்களுக்கிடையே அறுக்கப்பட்டு உணவுப்பொருட்களை இட்டு எடுத்துச் செல்வதற்கும், மதுவை அடைத்து வைப்பதற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது. மதுவை அடைத்து வைக்கப் பயன்பட்டதை, "குறவர் மாக்கள் வாங்கு அமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து"*[10], *"நீடுஅமை விளைந்த தேக்கண் தேறல்"*[11] *"வாங்கு அமைப் பழுநிய நறவு உண்டு"*[12] *என வரும் அடிகள் உணர்த்தும்.*

*கோவலர்கள் புளிச்சோற்றை மூங்கில் குழாயுள் அடைத்து எருதுகளின் கழுத்தில் கட்டிக் கொண்டு சென்றதை, "கோவலர் மழ விடைப் பூட்டிய குழாஅய்த்*

---

[1] நற். 40:1, 132:9, 361:5; அக. 24:13
[2] நற். 267:9; குறு. 336:3
[3] நற். 177:5-6
[4] பெரு. 120
[5] நற். 40:1
[6] நற். 132:9
[7] பதி. 31:5
[8] பரி. 8:88
[9] திரு. 246
[10] புற. 129:1-2
[11] திரு. 195
[12] நற். 276:9

*தீம்புளி”[1], “நல்ஏற்றுத் தழூஉப்பிணர் எருத்தம் தாழப் பூட்டிய அம்தூம்பு அகல்அமைக் கமஞ்செலப் பெய்த துறுகாழ் வல்சியர்”[2] எனவரும் அகநானூற்று அடிகள் காட்டும்.*

### *5.2.39.1. வேழத்தண்டு*

*அஞ்சனம் எனப்பட்ட கண் மையைப் பெய்து வைக்க மூங்கில் குழாயினை மகளிர் பயன்படுத்தினர். இதனை, “ஓங்கு பூ வேழத்துத் தூம்புடைத் திரள்கால் சிறு தொழுமகளிர் அஞ்சனம் பெய்யும்”[3] என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.*

### *5.2.40. அம்பணம்*

*அம்பணம் என்பது அரண்மனை மாடங்களிலிருந்து மழைநீர் கீழிறங்கி விழுவதற்காக அமைக்கப்பட்ட குழாய்களைக் குறிக்கும். இத்தகைய குழாய் மகர மீனின் வாய்போலப் பிளந்த வடிவினை உடையனவாய்க் காணப்பட்டதை, “கிம்புரிப் பகுவாய் அம்பணம்”[4] என நெடுநல்வாடை குறிப்பிடுகிறது.*

### *5.2.41. கழங்கு*

*கழங்கு என்பது கழற்சிக்காயைக் குறிக்கும். இக்கழங்கினைக்கொண்டு மகளிர் விளையாடும் விளையாட்டு ‘கழங்கு விளையாட்டு’ என்றும், இக்கழங்கினைப் பயன்படுத்தி வெறியாடும் வேலன் குறி பார்த்தல் ‘கழங்கு பார்த்தல்’ என்றும் குறிப்பிடப்படுகிறது.*

*வளமனை மகளிர் யானைத் தந்தத்தைக் கடைந்து செய்யப்பட்ட கழற்சிக் காய்களைக் கழங்கு ஆடுவதற்குப் பயன்படுத்தியதை, “கோடுகடை கழங்கு”[5] எனச் சுட்டுவதைக்கொண்டும், பொன்னாலாகிய கழற்சிக் காய்களைப் பயன்டுத்தியதை, “பொலம்செய் கழங்கு”[6], “பொற்கழங்கு”[7] எனக் குறிப்பவற்றைக்கொண்டும் அறியலாம். இது நெல்லிக்காய் அளவினதாகக் காணப்பட்டதை, “நெல்லித் தீஞ்சுவைத் திரள்காய் வட்டக் கழங்கின் தாஅய்”[8] என அகநானூறு சுட்டுகிறது. எண்ணிக் கணக்கிடுவதற்கும் கழற்சிக் காய்கள் பயன்படுத்தப்பட்டன.[9]*

### *5.2.42. குடை*

*குடை என்ற பெயரில் சங்கப் பாடல்களில் அரசச் சின்னமாக விளங்கிய வெண்கொற்றக் குடை, மக்கள் நிழலுக்காகப் பயன்படுத்திய குடை, பனையோலையால் செய்யப்பட்டு, நீர் எடுப்பதற்கும், பருகுவதற்கும், உணவுப்பொருள்களை வைப்பதற்கும் பயன்படுத்திய குடை என்ற மூன்று நிலையிலான குடைகளைக் காண முடிகிறது.*

### *5.2.42.1. வெண்கொற்றக்குடை*

*அரசனுக்கு உள்ள பல்வேறு அரசச் சின்னங்களுள் குறிப்பிடத்தக்கது குடை. இது ஆட்சியின் சின்னமாகக் கருதப்பட்டது. மன்னனின் ஆட்சியின் கீழ் வாழ்தலை ‘குடைநிழலில்’ வாழ்தல் என்றே குறிப்பிடப்படுகிறது. சூரியனின் வெம்மை தாக்காதவாறு குடை தடுத்தல் போல, குடிமக்களுக்கு வரவிருக்கும் துன்பத்தைத்*

---

[1] அக. 311:9-10
[2] அக. 253:13-16
[3] ஐங். 16:1-2
[4] நெடு. 96
[5] அக. 135:9
[6] புற. 36:4
[7] பெரு. 335
[8] அக. 241:13-14
[9] பதி. 15:5

*தடுத்து நிறுத்திக் காப்பதாக மன்னனின் குடை(ஆட்சி) இருத்தல் வேண்டும் என்பதன் குறியீடாகவே குடை போற்றப்பட்டுள்ளதை,*

> *"கண் பொர விளங்கு நின் விண் பொரு வியன் குடை*
> *வெயில் மறைக் கொண்டன்றோ? அன்றே; வருத்திய*
> *குடி மறைப்பதுவே; கூர்வேல் வளவ!"*[1]

*என்ற புறநானூற்றுப் பாடல் உணர்த்துகிறது. இதைப்போன்றே, ஒரு மன்னனின் ஆட்சியின் வன்மை மென்மைகள் அவனது குடையைக்கொண்டே குறிப்பிடுவதும் எண்ணத்தக்கது. மேலும், மன்னரின் ஆட்சியின் கீழ்ப்பட்டு நடக்கும் அரசர்கள் தாங்கள் அடிபணிந்து நடத்தலைத் தங்கள் குடைதாழ்த்தி வணங்குவதின் மூலம் தெரிவித்ததை, 'ஒன்னாத் தெவ்வர் உயர் குடை பணிந்து'*[2] *எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. மன்னனின் தோல்வியைக் 'குடை வீழ்ந்தது' என்றே குறிப்பிடப்படுவதை, 'தாம் மாய்ந்தனரே குடை துளங்கினவே'*[3] *என்று குறிப்பிடுவதுகொண்டு தெளியலாம்.*

*முருகக் கடவுளுக்குச் செய்யும் வழிபாட்டில் பொன்னால் செய்ததும், பவழம் பதிக்கப்பட்டதுமான காம்பினை உடையதும், பொன் துகிலால் போர்த்தப்பட்டதுமான குடையினை யானையின் மீது ஏந்திச் சென்றதை, 'பொன் பவழப் பூம் காம்பின் பொன் குடை ஏற்றி'*[4] *எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது. குடைபிடித்துச் செல்லும் இத்தொன்மரபு இன்றும் வைதீக வழிபாட்டில் கடவுளர் வீதிவலம் வரும்போது பின்பற்றப்படுவது கவனிக்கத்தக்கது.*

*இத்தகைய குடைகள் 'விண் பொரு வியன் குடை'*[5]*, 'விண்பொரு நெடும் குடை'*[6]*, 'வான்தோய் நீள்குடை'*[7] *என உயர்ந்து விளங்கியதையும், வெண்மை நிறத்தில் காணப்பட்டதை, 'மதிமருள் வெண்குடை'*[8] *என்றும் புலவர்களால் போற்றப்பட்டுள்ளன.*

### *5.2.42.2. நிழலுக்குப் பயன்படுத்திய குடை*

*வெயிலிலிருந்து மக்கள் தங்களைக் காத்துக் கொள்வதற்குக் குடைகளைப் பயன்படுத்தினர். இதனை, அந்தணர் ஒருவர் வெயிலின் கதிர்கள் தம்மீது படாதவாறு குடைபிடித்துச் சென்றதை, 'எறித்தரு கதிர் தாங்கி ஏந்திய குடை நீழல்....அந்தணீர்'*[9] *எனக் கலித்தொகையும், முல்லைக் காட்டிடை நடந்து சென்ற புதிய வழிப்போக்கர்கள் தங்கள் தலைக்கு மேல் குடை பிடித்துச் சென்றதை, 'உச்சிக் கொண்ட ஓங்கு குடை வம்பலீர்'*[10] *என நற்றிணையும் குறிப்பிடுவது கொண்டு அறியலாம்.*

### *5.2.42.3. உணவுண்ணப் பயன்படுத்திய குடை*

*பனை ஓலையால் செய்யப்பட்ட குடைகள் நீர், கள் போன்றவற்றை உண்ணப் பயன்பட்டன. இதனை, பனங்குடையிலிட்டு உண்ணும் கள்ளினால் பாரியின் பறம்புமலையிலுள்ளோர் மகிழ்ச்சியுடன் காணப்பட்டதை, 'பல் குடைக் கள்ளின் வண் மகிழ்ப் பாரி'*[11] *என நற்றிணையும், கடாவிடும் உழவர்கள் மாவடு சேர்த்த*

---

[1] புற. 35:19-21
[2] புற. 387:31
[3] புற. 62:8
[4] பரி. 19:87
[5] புற. 35:19
[6] புற. 175:6
[7] புற. 266:7
[8] புற. 174:15
[9] கலி. 9:1-4
[10] நற். 374:4
[11] நற். 253:7

புளித்த பதனை வெய்யிலில் பதப்படுத்தி எடுத்த பனையோலைக் குடைகளால் குளத்தில் மண்டிய கடாக்களைப் போலக் குடித்ததை,

> "வெயில் வெரிந் நிறுத்த பயில் இதழ்ப் பசுங் குடைக்
> கயம் மண்டு பகட்டின் பருகி"[1]

என அகநானூறும், நீர் வேட்கை கொண்டவர்கள் தண்ணீரைக் கோலி எடுத்துக் குடிப்பதற்குப் பனங்குடைகளைப் பயன்படுத்தியதையும், அவை ஒருமுறை பயன்படுத்தப்பட்டபின் தூக்கி எறியப்பட்டதையும், 'தோள்நலம் உண்டு துறக்கப்பட்டோர் வேள் நீர் உண்ட குடை ஓரன்னர்'[2] என்ற கலித்தொகைப் பாடல் காட்டும் உவமையாலும் அறியமுடிகிறது. இத்தகைய குடைகள் உள்ளங்கையைக் குவித்தார் போன்ற வடிவுடையதாக இருந்ததை, 'உட்கை சிறுகுடை கோலி'[3] எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது.

தாழையின் கூம்பிய அரும்புகள் சோற்றைச் சொரிகின்ற குடைபோல இருந்ததை, 'முள் இலைத் தாழை சோறு சொரி குடையின் கூம்பு முகை அவிழ'[4] என்று குறிப்பிடுவதுகொண்டு, குடை சோற்றினைச் சொரிந்து வைக்கவும் பயன்பட்டதை அறியமுடிகிறது.

பசிய பனையோலையால் ஆகிய குடை செம்முல்லை அரும்புகளை இட்டுவைக்கப் பயன்பட்டதை, 'மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை இரும்பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து'[5] என்பதைக்கொண்டும், மகளிர் பள்ளமாகச் செய்யப்பெற்ற பசிய ஓலைக் குடையில் புதலிடத்தே மலர்ந்த முல்லைப் பூக்களைப் பறித்ததை,

> "அவல்வகுத்த பசுங்குடையான்,
> புதல்முல்லைப் பூப்பறிக்குந்து
> ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்"[6]

எனக் குறிப்பிடுவது கொண்டும், இக்குடைகள் பூக்களைச் சொரிந்து வைக்கப் பயன்பட்டதை அறிந்துகொள்ளலாம்.

### 5.2.42.4. ஓலைக் குடை

வீரன் ஒருவன் தன் தலைவனை நோக்கி எறியும் வேலை, மழைபெய்யுமிடத்து மழைத்துளிகள் மேலே விழாதபடிக் காக்கும் பனை ஓலைக் குடை போலத் தாங்குவான் என்பதை, 'உறைப்புழி ஓலை போல மறைக்குவன்'[7] எனப் புறநானூறு குறிப்பிடுவதுகொண்டு அக்காலத்து மக்கள் மழையின்போது பனையோலைக் குடைகளைப் பயன்படுத்தியதை அறியலாம்.

### 5.2.43. கோல் எரி

கோல் எரி என்பது தீவத்தியைக் குறிக்கும். இத்தகைய தீவத்தியைக் கையில் ஏந்திக்கொண்டு முருக வழிபாட்டிற்குச் செல்லும் அடியவர்கள் சென்றதை, "கோல் எரி கொளை நறை புகை கொடி ஒருங்கு எழ"[8] எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது. பரிமேலழகர் இதனைத் தீபம் என்பார்.

---

[1] அக. 37:10-11
[2] கலி. 23:8-9
[3] குறு. 60:3
[4] நற். 335:4-5
[5] குறு. 168:1-2
[6] புற. 352:3-5
[7] புற. 290:7-8
[8] பரி. 17:6

### *5.2.44. சாந்தாற்றி*

*சாந்தாற்றி[1] என்பதற்குச் சிற்றாலவட்டம், பீலிவிசிறி என அகராதிகள் பொருளுரைக்கின்றன. இத்தகைய விசிறிகள் அக்காலத்தில் புழக்கத்தில் இருந்ததை மயிலின் விரிந்த தோகைக்கு உவமையாக, “மிசைபடு சாந்தாற்றி போல”[2] என பரிபாடல் சுட்டுவதிலிருந்து அறியமுடிகிறது.*

### *5.2.45. சிவிறி, துருத்தி, எக்கி*

*சிவிறி, துருத்தி, எக்கி என்பன ஒரே கருவியைக் குறிக்கும் சொற்களாகும். இது நீராட்டின்போது நீரை அடைத்துப் பீச்சியடித்தற்குப் பயன்பட்டுள்ளது. இவை மூங்கில் குழாய்களாலும், கொம்புகளாலும் செய்யப்பட்ட கருவிகளாகும். இதனைப் “பூநீர் வட்டம்”[3] என்றும் குறிப்பர். மலர்மணம் கொண்ட அரக்கு நீர் சொரிந்து வைக்கப்பட்ட நீர் விளையாட்டுக் கருவியினை வையையில் நீராடுவோர் ஒருவர் மற்றவர்மீது ஊற்றி விளையாடப் பயன்படுத்தியதைப் பரிபாடல்[4] குறிப்பிடுகிறது.*

### *5.2.46. தூபமூட்டி*

*பண்டைக் காலத்தில் குளிர்காய்வதற்காக இந்தளம் எனப்பட்ட தூபமூட்டிகள் பயன்படுத்தப்பட்டதை அறியலாம். இதனைக் ‘கணப்புச்சட்டி’[5] என்றும் அகராதிகள் குறிப்பிடுகின்றன. இதனைத் ‘தடவு’ என நெடுநல்வாடை குறிப்பிடுகிறது.*

*சிறிய மழைத் துளியோடு கூடிய வாடைக்காற்று வீசும் கூதிர்ப் பருவத்தில் மக்கள் குடத்திலுள்ள குளிர்ந்த நீரைக் குடிக்காமல் அகன்ற வாயையுடைய இந்தளத்தின்(தூபமூட்டி) மூட்டிய சிவந்த நெருப்பின் வெம்மையை விரும்பி நுகர்ந்ததை, “தொகுவாய்க் கன்னல் தண்ணீர் உண்ணார் பகுவாய்த் தடவில் செந்நெருப்பு ஆர”[6] என நெடுநல்வாடை சுட்டுகிறது.*

### *5.2.47. அகல்*

*அகல் என்னும் சொல்லுக்குச் சட்டி, விளக்குத் தகழி எனச் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி[7] விளக்கம் தருகிறது. இவ்விரு பொருள்களையும் குறித்துச் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.*

### *5.2.48. அப்பச் சட்டி*

*அப்ப வணிகர்கள் அப்பம் செய்வதற்குச் சட்டிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை, “கார் அகல் கூவியர் பாகொடு பிடித்த இழை சூழ் வட்டம் பால் கலந்தவை போல்”[8] என்ற பொருநராற்றுப்படை அடிகளால் அறியலாம். இங்கு அகல் எனப்பட்ட சட்டி அப்பம் செய்வதின் பொருட்டு அடுப்பில் தொடர்ந்து இடப்படுவதால் கரிய நிறமுடையதாகக் காணப்பட்டது. எனவே இது ‘கார்அகல்’ எனப்பட்டது.*

---

*[1] https://agarathi.com/word/சாந்தாற்றி*
*[2] பரி. 21:30*
*[3] பரி. 21:42*
*[4] பரி. 6:34, 7:51-52, 10:12, 22:18*
*[5] http://agarathi.com/word/தடவு*
*[6] நெடு. 65-66*
*[7] http://agarathi.com/word/அகல்2*
*[8] பெரு. 377-378*

### *5.2.49. தகழி*

*பாவைகள் கைகளில் ஏந்தியுள்ளவாறு அமைந்த, யவன நாட்டினரால் செய்யப்பட்ட பாவை விளக்குகள் அரண்மனைகளில் காணப்பட்டதை,,*

*"யவனர் இயற்றிய வினை மாண் பாவை*
*கை ஏந்து ஐ அகல் நிறைய நெய் சொரிந்து"*[1]

*என நெடுநல்வாடை சுட்டுவதுகொண்டு அறிந்துகொள்ள முடிகிறது. தனிமைத் துன்பத்தில் இருக்கும் தலைவி ஒருத்தி தான் ஏற்றி வைத்த பொன் தகட்டாலான அகல் விளக்கைத் துணையாகக்கொண்டு வருந்திக்கிடந்ததை,, 'அடர்செய் ஆய் அகல் சுடர் துணை ஆக, இயங்காது வதிந்த நம் காதலி'*[2] *எனச் சுட்டுவதுகொண்டு வீடுகளில் விளக்கேற்றுவதற்கு அகல் பயன்படுத்தப்பட்டதையும், இவ்வகல்கள் பொன்னால் செய்யப்பட்டதையும் அறியமுடிகிறது.*

### *5.2.50. செம்பு*

*செம்பு என்பது சங்ககாலத்துப் புழக்கத்திலிருந்த செம்பினாலான பாத்திரவகைகளையும், 'செம்பு' என்னும் உலோகத்தையும் குறித்தது. இது 'செப்பு' என்ற சொல்லாலும் குறிப்பிடப்பட்டுள்ளது.*

*அக்காலத்து மதில்கள் செம்பினால் உருவாக்கப்பட்டது போன்ற தோற்றத்தைக் கொண்டு விளங்கியதை, "செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடுஞ்சுவர்"*[3]*, "செம்பு இயன்றன்ன செஞ்சுவர் புனைந்து"*[4]*, "செம்பு உறழ் புரிசை"*[5] *என்ற அடிகள் விளக்குகின்றன. மேலும், இருப்பை மரங்களின் தளிர்கள் செப்புத் தகடுகள் போன்று இருந்ததை "செப்பு அடர் அன்ன செங்குழை"*[6] *என்ற பாடலடி உணர்த்தும். மேற்குறித்த உவமைகள் அக்காலத்தில் செப்பு உலோகம் புழக்கத்தில் இருந்ததைக் காட்டுகிறது.*

*பெண்ணின் பருத்த முலைகளுக்கு ஒப்பான வடிவமும் அளவும் கொண்டதாக செப்புப் பொருளொன்று விளங்கியதை "முலையும் சூழி மென்முகம் செப்புடன் எதிரின"*[7]*, "கொம்மை வரிமுலை செப்புடன் எதிரின"*[8] *எனச் சுட்டுவனவற்றைக் கொண்டு அறியமுடிகிறது.*

*இச்செப்புப் பாத்திரத்துள் மலர், பொன், பவளம், பண்டம்*[9] *போன்றவற்றை இட்டு வைத்ததனை, "பவளச் செப்பில் பொன் சொரிந்தன்ன"*[10]*, "வரிச் செப்பினுள் வைகிய கோதையேம்"*[11]*, "செப்பு இடந்தன்ன நாற்றம்"*[12]*, "மடைமாண் செப்பில் தமிய வைகிய பெய்யாப் பூவின்"*[13] *எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன.*

*இச்செப்பினை வாங்கும் வணிகர்களைப் பற்றி "செம்பு நிறை கொண்மரும்"*[14] *என மதுரைக்காஞ்சியும், இச்செப்பினைக்கொண்டு கம்மியன் செப்புப்பானை செய்ததை "கம்மியர் செம்பு சொரி பானையின் மின்னி"*[15] *என்ற நற்றிணையும் குறிப்பிடுகின்றன.*

---

*[1] நெடு. 101-102*
*[2] அக. 19:17*
*[3] நெடு. 112*
*[4] மது. 485*
*[5] அக. 375:13; புற. 37:11, 201:9*
*[6] அக. 9:4*
*[7] அக. 315:2*
*[8] குறு. 159:4*
*[9] மது. 421-422*
*[10] அக. 25:11*
*[11] கலி. 68:15*
*[12] நற். 337:6*
*[13] குறு. 9:2-3*
*[14] மது. 514*
*[15] நற். 153:2-3*

### *5.2.51. பேழை*

*பேழைகள் செல்வர் மனைகளில் பொற்காசுகளை இட்டு வைக்கப் பயன்பட்டன. இதனை 'கவலைக் கிழங்கினைத் தோண்டி எடுத்த குழியில் கொன்றை மலர்கள் வீழ்ந்து நிரம்பி இருக்கும் காட்சி, செல்வர்கள், பொற்காசுகளை இட்டு வைத்திருக்கும் பெட்டியின் மூடியைத் திறந்து வைத்ததுபோல் தோன்றியதை, 'சிறுகுழி கொன்றை ஒள்வீ தாஅய், செல்வர் பொன்பெய் பேழை மூய் திறந்தன்ன'[1] எனக் குறுந்தொகை உவமை கொண்டு அறியமுடிகிறது.*

### *5.2.52. பை*

*எதிர் காலத்தில் நடக்கவிருப்பதை முன்னரே அறிந்து கூறும் வேலன் என்னும் ஆண்பூசாரி பையைப் பயன்படுத்தியதை, "சிறுபை நாற்றிய பல்தலைக் கொடுங்கோல், ஆகுவது அறியும் முதுவாய், வேல!"[2] எனக் குறிப்பது கொண்டும், இடையர்கள் தங்கள் மேய்த்தல் தொழிலுக்கான தீக்கடைகோல், கிட்டி முதலான கருவி பலவற்றையும் உடைய தோற்பையைக் கொண்டிருந்ததை, "ஞெலிகோல் கலப்பை அதளொடு சுருக்கி பறிப்புறத்து இட்ட பால் நொடை இடையன்"[3] எனக் குறிப்பிடுவதுகொண்டும் பண்டைக் காலத்தில் பொருட்களை எடுத்துச் செல்வதற்குப் பைகள் பயன்படுத்தப்பட்டதை அறியலாம்.*

### *5.2.53. முகவை*

*முகவை என்னும் நீர் முகக்கும் கருவி கிணற்றிலிருந்து நீரை முகந்து பசுக்களின் நீர் வேட்கையைத் தணிக்க நீண்ட கயிற்றைப் பிணித்து பயன்படுத்தப்பட்டதை,*

> *"பொன் செய் கணிச்சித் திண் பிணி உடைத்துச்*
> *சிரறு சில ஊறிய நீர் வாய்ப் பத்தல்,*
> *கயிறு குறு முகவை மூயின மொய்க்கும்*
> *ஆ கெழு கொங்கர் நாடு அகப்படுத்த"[4]*

*என்ற பதிற்றுப்பத்துப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.*

### *5.2.54. சங்கிலி*

*சங்கிலி சங்கப் பாக்களில் தொடர் என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளது. யானை, நாய் போன்றவற்றைச் சங்கிலியால் பிணித்து வைக்கும் வழக்கு இக்காலத்தைப் போன்றே சங்ககாலத்தும் இருந்துள்ளது. இதனை,*

> *"கோலோர்க் கொன்று மேலோர் வீசி*
> *மென்பிணி வன்தொடர் பேணாது, காழ் சாய்த்து*
> *கந்து நீத்து உழிதரும் கடாஅ யானையும்"[5]*

*என்ற மதுரைக் காஞ்சியடிகள் காட்டுகின்றன. எயினர் அரணில் உள்ள வீடுகளின் முற்றத்தில் சங்கிலியால் கட்டிவைக்கப்பெற்ற நாய்கள் இருந்ததை, "தொடர்நாய் யாத்த துன்அருங் கடிநகர்"[6] எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. போரில் தோற்ற அரசர்கள் நாயைச் சங்கிலியால் பிணிப்பதைப் போலப் பிணித்துத்*

---

[1] *குறு. 233:1-3*
[2] *அக. 195:13-14*
[3] *நற். 142:3-4*
[4] *பதி. 22:12-15*
[5] *மது. 381-383*
[6] *பெரு. 125*

துன்புறுத்தப்பட்டதை, “தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய”[1] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

### 5.2.55. கயிறு

சங்க இலக்கியத்தில் நாண் எனக் குறிப்பிடப்பட்ட கயிறு, தூண்டில் கயிறாகப் பயன்பட்டதை, “நாண் கொள் நுண் கோலின் மீன் கொள் பாண்மகள்”[2], “நிலையோர் இட்ட நெடு நாண் தூண்டில்”[3], “நெடும் கழைத் தூண்டில் நடுங்க நாண் கொளீஇ”[4] எனக் குறிப்பிடுவனவற்றைக்கொண்டு அறியமுடிகிறது.

நாண், வில்லில் கட்டப்பெறும் நாண்கயிறாகப் பயன்படுத்தப்பட்டதை, “அம் சிலை வல்வில் புரிநாண்”[5], “முடிநாண் சாபம்”[6], “விசைப்புறு வல் வில் வீங்கு நாண்”[7] எனக் குறிப்பிடுவனவற்றைக்கொண்டும், ஆபரணங்களைக் கோத்தற்குரிய நூலாகப் பயன்பட்டதை, “புது நாண் நுழைப்பாள் நுதி மாண் வள் உகிர்ப் பொலங்கல ஒருகாசு ஏய்க்கும்”[8] எனச் சுட்டுவதைக்கொண்டும் அறியமுடிகிறது.

### 5.2.56. நார் பொருட்கள்

சங்ககால மக்கள் பயன்படுத்திய பொருட்களுள் நார்(Fibre) குறிப்பிடத்தக்கது. பல்வேறு செடிகளிலிருந்தும், மரங்களிலிருந்தும் உரித்தெடுக்கப்பெற்ற நார் பூக்களைத் தொடுப்பதற்கும், கயிறு திரிப்பதற்கும், நாரினைப்பின்னி உடுக்கை(உடை) தயாரிப்பதற்கும் பயன்பட்டுள்ளது.

#### 5.2.56.1. பூத்தொடுத்தல்

ஆத்தி, மரல், நறைக்கொடி போன்றவற்றின் நாரினைக்கொண்டு பூக்கள் தொடுக்கப்பட்டன. நறைக் கொடியின் நாரினால் கட்டப்பட்ட வேங்கை மலர் மாலையை வேட்டுவன் சூடியதை, “நறை நார்த் தொடுத்த வேங்கை அம்கண்ணி”[9] என்றும், இரவலன் அரும்பு மலர்ந்த அலரிப் பூக்களை நாரால் தொடுத்து தலையில் சூடிக்கொண்டதை, “போது அவிழ் அலரி நாரின் தொடுத்து”[10] என்றும், கூத்தர்கள் கடம்பின் மலரையும், யாமரத்தின் மலரையும் மரல் நாரினால் நெருங்கக் கட்டி கண்ணியாகச் சூடியதை, “திரங்கு மரல் நாரில் பொலியச் சூடி”[11] என்றும் குறிப்பிடுவன இதனைக் காட்டும்.

பாணர் உள்ளிட்ட இரவலர்க்கு வெள்ளி நாரினால் தொடுத்த பொற்றாமரைகள் பரிசிலாக வழங்கப்பட்டன. “வெள்ளி நாரால் பூப் பெற்றிசினே”[12], “வால் நார்த் தொடுத்த கண்ணி”[13] என்ற புறநானூற்று அடிகள் இதற்குச் சான்றாகத் திகழ்கின்றன.

#### 5.2.56.2. நார்க் கயிறு

நாரினைக்கொண்டு கயிறு திரித்துப் பயன்படுத்தினர். வேடர்கள் ‘வெண் கடம்பின் கொம்பினைப் பிளந்து, அதனின்றும் உரித்தெடுத்த வெண்மையான நார்க் கயிற்றால் யானைக்கன்றினை இறுகக்கட்டி, கள்ளுக்கு விலையாகக்

---

[1] புற. 74:3
[2] அக. 216:1
[3] மலை. 456
[4] பெரு. 285
[5] கலி. 15:1-2
[6] பெரு. 120-121
[7] புற. 369:8
[8] குறு. 67:3-4
[9] புற. 168:15; அக. 282:9
[10] புற. 371:3
[11] மலை. 428-431
[12] புற. 11:18
[13] புற. 153:8

கொடுப்பதற்காகக் கடைத் தெருக்களுக்குக்கொண்டு செல்வர்.'[1] என அகநானூறு நார்க்கயிற்றின் பயன்பாட்டைப்பற்றிக் குறிப்பிடுகிறது.

### 5.2.56.3. நார் உடை

நாரினைப் பயன்படுத்தி உடை தயாரித்தனர். மலைப் பகுதியில் வாழ்ந்த குறவர் மரல் நாரினாலே பின்னிய உடையினை உடுத்தினர். ''மரல் நார் உடுக்கை மலை உறை குறவர்''[2] என்ற நற்றிணைப் பாடலடி இதனைக் காட்டுகிறது.

### 5.2.56.4. நார் உணவு

நார் உணவாகவும் பயன்பட்டுள்ளது. வறுமையின் காரணமாக இரவலர்கள் பனையின் நாரையும், அதன் குருத்தையும் உண்டனர். இதனை, ''நாரும் போழும் செய்து உண்டு''[3] எனப் புறநானூறும், பாலை நிலத்தில் வாழும் ஆறலை கள்வர்கள் மரத்தின் பட்டையை(நார்) மென்று நீர் வேட்கையைத் தணித்துக் கொண்டதை, ''வருநர்ப் பார்க்கும் வன்கண் ஆடவர், நீர்நசை வேட்கையின் நான் மென்று தணியும்''[4] எனக் குறுந்தொகையும் சுட்டுவதுகொண்டு அறியலாம்.

### 5.2.56.5. பன்னாடை

கள்ளினை வடிகட்டுவதற்குப் பன்னாடைகள் பயன்படுத்தப்பட்டன. ''நார்அரி நறவு''[5], ''நார்அரி தேறல்''[6] என்பன இதனை விளக்கும்.

### 5.2.57. தேர்

பண்டைக்காலத்தில் மக்கள் பயணத்தின் பெரும்பகுதி கால்நடையாக நடந்துசெல்வதாகவே இருந்தது. மக்கள் இடம்விட்டுஇடம் பயணம் செய்வதற்கான பொதுவான போக்குவரத்துச் சாதனங்கள் வளராத காலகட்டத்தில் தேர்கள் அரசர்களாலும், பொருள் வளம்படைத்தவர்களாலும் பயன்படுத்தப்பட்டுள்ளன. அக்காலத்தில் தேர்கள் படைப்பிரிவுகளுள் ஒன்றாக விளங்கியதும் சிந்திக்கத்தக்கது.

தேர்கள் 'திண் தேர்', 'நெடுந்தேர்', 'பொன்தேர்', 'இயல்தேர்', 'கொடித்தேர்', 'கடும்தேர்', 'நல்தேர்' என அத்தேரின் தன்மைக்கு ஏற்பப் புலவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளன. சங்கப் பாடல்களில் வேந்தர்களும், அரசர்களும், குறுநில மன்னர்களும் தேரினைக் கொண்டவர்களாக விளங்கியதை,

> ''கொடித் தேர் வேந்திர்''[7], ''இயல் தேர்ப் பொருநன்''[8], ''நெடும் தேர்க் குட்டுவன்''[9], ''நெடுந் தேர்க் கோதை''[10], ''திண்தேர் நள்ளி''[11], ''நெடுந்தேர்க் காரி''[12], ''இயல்தேர் நன்னன்''[13], ''கடும்தேர் அவியன்''[14], ''தேர் வண் பாரி''[15], ''தேர்வேள் ஆய்''[16]

எனச் சுட்டுவனகொண்டு அறியலாம்.

---

[1] அக. 83:6
[2] நற். 64:4
[3] புற. 370:2, 375:5
[4] குறு. 274:4-5
[5] பதி. 11:15, 88:19; பரி. 6:49; அக. 36:17, 216:3, 296:9; புற. 232:3, 297:5, 304:2, 400:14
[6] புற. 367:7
[7] புற. 367:14
[8] அக. 36:19
[9] நற். 395:4; அக. 270:9
[10] அக. 93:20
[11] குறு. 210:1
[12] அக. 35:15
[13] அக. 173:16; பதி.40:14
[14] புற. 383:23; அக. 271:12
[15] புற. 118:5
[16] புற. 133:7

தேர் போர்களில் பயன்படுத்தப்பட்டதோடு, அத்தேர்களைக் கொண்டே எதிரி நாட்டு விளைவயல்களும் பாழாக்கப்பட்டன,[1] வேந்துவிடு தொழிலின்போதும், பொருள் தேடிச் செல்லும்போதும், களவுக்காலத்தில் காதலியைப் பகலிலும் இரவிலும் சந்திக்கச் செல்லும்போதும், பரத்தையரை நாடிச் செல்லவும், அவர்களைத் தேரில் ஏற்றிக் கொண்டுவரவும்[2] உயர்குடித் தலைவர்களால் தேர்கள் பயன்படுத்தப்பட்டன. தேர்களை இயக்க 'வலவன்', 'பாகன்' எனப்பட்ட தேரோட்டிகள் இருந்தனர்.

தேர்களை இழுத்துச் செல்ல குதிரைகள் பயன்படுத்தப்பட்டன. தேர்கள் இரவலர்க்குத் தரப்பட்ட பரிசில் பொருட்களுள் ஒன்றாகக் காணப்பட்டதை, "தேர் ஈயும் வண் கையவன்"[3], "யார்க்கும் எளிதே தேர் ஈதல்லே"[4] என வருவன இதனைக் காட்டுகின்றன.

இத்தேர்கள் தச்சர்களால் செய்யப்பட்டதை, "எண் தேர் செய்யும் தச்சன்"[5], "தச்சன் செய்த சிறுமா வையம்"[6] எனக் குறிப்பவற்றைக்கொண்டும், இவை சிறந்த வேலைப்பாடு உடையனவாகத் தச்சர்களின் தொழில்திறன் விளங்கச் செய்யப்பட்டதை, "மாண் வினை நெடும் தேர்"[7], "நல் வினை நெடுந் தேர்"[8], "செய்வினை நெடும் தேர்"[9] என வருவனவற்றைக்கொண்டும் அறியமுடிகிறது.

### 5.2.58. யானைத் தந்தமும் கலைப்பொருட்களும்

பண்டைக் காலத்தில் யானைத் தந்தம் மதிப்புமிக்க பொருளாக இருந்துள்ளது. இக்காரணத்தினாலேயே யானைகள் வேட்டையாடப்பட்டன.[10] வேட்டையாடப்பட்ட யானைத் தந்தங்கள் கள்ளுக்கு விலையாகத் தரப்பெற்றன.[11] கானவர் யானையின் கொம்பை விற்று, அதன் விலையால் பெறப்படும் உணவை உண்டு வாழ்ந்தனர். இதனை,

> "காந்தள்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென
> கடுங்கண் வேழத்துக் கோடு நொடுத்து உண்ணும்"[12]

> "அண்ணல் யானை வெண் கோடு கொண்டு
> நறவு நொடை நெல்லின் நாள் மகிழ் அயரும்"[13]

எனவரும் சங்கப் பாடலடிகள் காட்டுகின்றன. இத்தந்தங்களைக் கொண்டு பல்வேறு வகையான கலைப்பொருட்கள் செய்யப்பட்டதை, "கோடு கடைந்து அன்ன கொள்ளை வான் பூ"[14] எனச் சுட்டுவதைக்கொண்டு அறியலாம். பட்டத்து யானை வருத்தத்தாற் கதறும்படி அதனுடைய கொம்பை வெட்டி அதனால் தெய்வத்தன்மையுடைய இயல்பைப் பெற்ற கட்டில் செய்யப்பட்டதை,

> "அரசு உவா அழைப்பக் கோடு அறுத்து இயற்றிய
> அணங்குடை மரபின் கட்டின்"[15]

எனப் பதிற்றுப்பத்தும், யானையினது கொம்பை உலக்கையாகப் பயன்படுத்தியதை, "வயக் களிற்றுக்கோடு உலக்கை ஆக"[16] என கலித்தொகையும்,

---

[1] புற. 15:6
[2] அக. 316:8, 336:10-12
[3] கலி. 42:21
[4] புற. 123:2
[5] புற. 87:3
[6] குறு. 61:1
[7] புற. 39:16
[8] அக. 204:9
[9] நற். 221:7
[10] நற். 65:5-6; அக. 21:24, 282:3
[11] அக. 245:9-11
[12] குறு. 100:3-4
[13] அக. 61:9-10
[14] அக. 331:2
[15] பதி. 79:13-14
[16] கலி. 41:1-2

யானையின் தந்தத்தினைக் கடைந்து கழற்சிக் காய்களைச் செய்ததை, “கோடு கடை கழங்கின்”[1] என அகநானூறும் குறிப்பிடுவதுகொண்டு அறியமுடிகிறது.

### 5.3. அணிகலன்கள்

#### 5.3.1. மக்களுக்கானவை

##### 5.3.1.1. உத்தி

சங்கத் தொகைப் பாடல்களில் ‘உத்தி’ என்ற சொல், ‘சுட்டி’ என்னும் மகளிர் தலையணியைக் குறிப்பிடுகிறது. இவ்வணியினைப் பரத்தையர் தங்கள் தலையில் அணிந்திருந்ததைக் கலித்தொகை[2] காட்டுகிறது. உத்தியில் திருமகள் உருவம் பொறித்திருந்ததை, ‘தெய்வ உத்தி’[3] எனத் திருமுருகாற்றுப்படை சுட்டுகிறது.

##### 5.3.1.2. சுரிதகம்

சுரிதகம்[4] என்ற சொல்லுக்கு ஒருவகைத் தலையணி என அகராதிகள் விளக்கம் கூறுகின்றன. இப்பெயரில் பெண்கள் அணியக்கூடிய ஒரு அணிகலன் புழக்கத்தில் இருந்ததை, “கைவல் வினைவன் தையுபு சொரிந்த சுரிதக”[5] எனவரும் நற்றிணைப் பாடலடிகளைக்கொண்டு அறிந்துகொள்ள முடிகிறது.

##### 5.3.1.3. சூட்டு

சூட்டு என்பது மகளிர் தலையில் அணியும் அணிகளுள் ஒன்று (நெற்றிச்சுட்டி). இதனை வையையில் நீராட்டிற்கு வந்த மகளிர் அணிந்திருந்ததைப் பரிபாடல்[6] குறிப்பிடுகிறது. இதனை, ‘செஞ்சூட்டு ஒண்குழை’[7], ‘ஒண்சூட்டு அவிர்குழை’[8] என குறிப்பது கொண்டு அறியலாம்.

##### 5.3.1.4. தொய்யகம்

தொய்யகம் என்பது மகளிர் அணியும் தலைக்கோலம் என்னும் அணியைக் குறிக்கும். இதனை மகளிர் தங்கள் தலையில் அணிந்ததை, ‘தொய்யகம் தாழ்ந்த கதுப்பு’[9] என கலித்தொகையும், இவ்வணியினை வையை நீர்விளையாட்டில் ஈடுபட்டிருந்த மகளிர் அணிந்திருந்ததை பரிபாடலும்[10] குறிப்பிடுகிறது.

##### 5.3.1.5. மகர வலயம்

மகர வலயம் என்பது மகர மீனின் வடிவமுடைய தலையணி. மகளிர் இவ்வணியினை நெற்றியில் அணிந்திருந்ததை, ‘எறி மகர வலயம் அணி திகழ் நுதலியர்’[11] எனப் பரிபாடலும், ‘திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல் மகரப்பகுவாய் தாழ’[12] எனத் திருமுருகாற்றுப்படையும் குறிப்பிடுகின்றன. இது பொன்னாற் செய்யப் பெற்றிருந்ததை, ‘பொலம் புனை மகரவாய்’[13] எனக் கலித்தொகைச் சுட்டக் காணலாம்.

##### 5.3.1.6. குழை

சங்ககால மக்கள் பயன்படுத்திய அணிகலன்களுள் காதில் அணியப்பட்ட

---

[1] அக. 135:9
[2] கலி. 96:13, 97:14
[3] திரு. 23
[4] https://agarathi.com/word/சுரிதகம்
[5] நற். 86:5-6
[6] பரி. 20:30
[7] அக. 86:27
[8] அக. 253:26
[9] கலி. 28:6
[10] பரி. 7:46
[11] பரி. 10:77
[12] திரு. 24-25
[13] கலி. 54:6

அணிகலன் 'குழை' என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வணிகலனை மிகுதியும் பெண்களே அணிந்துள்ளனர்.

இவ்வணிகலன் செய்யப்பட்ட முறை குறித்து நோக்கும்போது, இவை நெருப்பிலிட்டுச் சுடப்பட்டதை, 'சுடு நீர் வினைக் குழை'[1] என்பதைக்கொண்டும், பொன்னால் செய்யப்பட்டதை, 'பொலம் குழை'[2], 'பொன் செய் பூம் குழை'[3] என குறிப்பிடுவது கொண்டும், அவற்றின் ஒளிவிடும் தன்மையினை, 'அவிர் குழை'[4], 'ஒண் குழை'[5], 'ஒள் குழை'[6], 'மின்னு நிமிர்ந்து அன்ன கனம் குழை'[7] என்பவற்றைக் கொண்டும், அவை கனத்துக் காணப்பட்டதை, 'கனம் குழை'[8] எனக் குறிப்பிடுவது கொண்டும், அவை வடிவில் வளைந்து காணப்பட்டதை, 'கொடும் குழை'[9] எனக் குறிப்பிடுவது கொண்டும் அறியமுடிகிறது.

இவ்வணிகலன் காதில் அணியப்பட்டதை, 'ஒண் குழை வண் காது துயல்வர'[10], 'அவிர் குழை ஆய் காது வாங்க'[11], 'காதில் கனம் குழை வாங்கி'[12] எனச் சுட்டுவனகொண்டு தெளியலாம். இக்குழையினை அரசியர்,[13] திணைநிலைத் தலைவியர்,[14] பரத்தையர்[15], பாடினி[16] உள்ளிட்ட மகளிர் அணிந்தனர்.

அரசனைப் பிரிந்திருந்த அரசி தன் காதில் மகரக்குழை களைந்து ஒப்பனை நீங்கிக் காணப்பட்டதை, 'நெடு நீர் வார் குழை களைந்தென'[17] எனக் குறிப்பிடுவது கொண்டு உணரலாம். இது கணவனைப் பிரிந்திருக்கும் வேளையில் பெண்கள் தங்களை ஒப்பனை செய்துகொள்ளாத வழக்கத்தைக் காட்டுகிறது.

செல்வவளம் வாய்ந்த மகளிர், நெல்லைத் தின்னும் கோழியைத் தாம் காதுகளில் அணிந்திருந்த பொன்னால் செய்த மகரக்குழையை வீசி விரட்டியதை, 'கோழி எறிந்த கொடும் கால் கனங் குழை'[18] எனப் பட்டினப்பாலை காட்டுகிறது. இது(குழை) செல்வர் மனைகளின் வளமையைக் காட்டும் குறியீடாய்த் திகழ்வது நோக்கத்தக்கது.

### 5.3.1.7. தோடு

தோடு என்னும் சொல் குறிக்கும் பல பொருள்களுள் ஒன்று காதணி (Ear-jewel). இவ்வணியினைப் புனலாடு விழாவுக்குச் சென்ற மகளிர் அணிந்ததைப் பரிபாடல், 'தோள் அணி, தோடு, சுடர் இழை, நித்திலம்'[19] எனக் குறிப்பிடுகிறது.

### 5.3.1.8. கடிப்பு

கடிப்பு என்பது மகளிர் காதினை வளர்த்துக்கொள்ள அணியும் ஒருவகைக் காதணி (Ear ornament). கடிப்பு கொண்டு வளர்த்த காதில் மகளிர் பொன்னாலான தோட்டினை அணிந்ததை, 'கடிப்பு இகு காதில் கனம் குழை தொடர'[20] எனப் பரிபாடல் திரட்டு குறிப்பிடுகிறது.

---

[1] பரி. 12:87
[2] அக. 351:12
[3] பதி. 86:11
[4] கலி.92:36
[5] மது. 448
[6] மது. 709
[7] அக. 158:3
[8] நற். 16:9, 316:3
[9] பதி. 14:15
[10] அக. 86:27
[11] கலி. 92:36
[12] கலி. 80:22
[13] பதி. 14:15
[14] நற். 16:9
[15] அக. 6:7
[16] பொரு. 30
[17] நெடு. 139
[18] பட்டி. 23
[19] பரி. 10:115
[20] பரி.தி. 1:33

### *5.3.1.9. வீழ்*

*வீழ் என்னும் சொல்லுக்குத் தாலிநாண்*[1] *என அகராதிகள் விளக்கம் அளிக்கின்றன. இத்தகைய அணியினை அரசி அணிந்திருந்ததை, "ஆரம் தாங்கிய அலர் முலை ஆகத்துப் பின் அமை நெடுவீழ் தாழ"*[2] *என நெடுநல்வாடை குறிப்பிடுகிறது.*

### *5.3.1.10. கட்டுவடம்*

*கட்டுவடம் என்ற இவ்வணிகலனை, கழுத்தணி எனக் கலித்தொகை நச்சினார்க்கினியர் உரையும்,*[3] *காலணி என்பதை, 'கட்டு வடக் கழலினர்'*[4] *எனப் பரிபாடலும் குறிப்பிடுகின்றன.*

### *5.3.1.11. பூண்*

*சங்ககால மக்கள் அணிந்த அணிகலன்கள் 'பூண்' என்ற பெயராலும் குறிப்பிடப்பட்டுள்ளன. இப்பூணினை ஆண், பெண் என்ற இருபாலரும் அணிந்துள்ளனர்.*

*அரசியர், வளமனைப் பெண்கள், பரத்தையர்,*[5] *விறலியர்,*[6] *முதலானோர் இதனை மார்புப் பகுதியில் அணிந்ததை, 'பூண் தாங்கு இள முலை'*[7]*, 'கூர் எயிற்றார் குவி முலைப் பூண்'*[8]*, 'பூண் தாங்கு இள முலை'*[9]*, 'மாண் இழை மகளிர் பூண் உடை முலை'*[10] *என்பன உணர்த்துகின்றன.*

*எழினி, நன்னன், கிள்ளி, திரையன், எவ்வி, வளவன் முதலான அரசர்கள்*[11] *உள்ளிட்ட ஆண்கள் இதனை மார்புப் பகுதியில் அணிந்ததை, 'சுடர்ப் பூண் விளங்கும் ஏந்து எழில் அகலம்'*[12]*, 'பசும் பூண் மார்ப பாடினி வேந்தே'*[13]*, 'ஆண் கடன் இறுத்த நின் பூண் கிளர் வியல் மார்பு'*[14] *எனவருவன காட்டுகின்றன.*

*குழந்தைகளும், சிறுவர்களும் பூண் எனப்பட்ட இவ்வணியினை அணிந்ததை, 'பைம் பூண் புதல்வன்'*[15]*, 'உமட்டியர் ஈன்ற கிளர் பூண் புதல்வரொடு'*[16] *'நுண் பூண் மார்பின் புன் தலைச் சிறாஅர்'*[17] *என்பன காட்டுகின்றன.*

*'பொலம் பூண்'*[18]*, 'பசும் பூண்'*[19]*, 'பைம் பூண்'*[20] *என்பன அவை பொன்னால் செய்யப்பட்டவை என்பதையும், 'பெரும் பூண்'*[21] *எனக் குறிப்பன அவை பேரணிகலன் என்பதையும், 'கொடும் பூண்'*[22] *என வருவன அவை வளைந்து காணப்பட்டதையும், 'நுண் பூண்'*[23] *என வருவன அவற்றின் நுண்ணிய வேலைப்பாடமைந்த தொழிற் திறத்தையும், 'சுடர்ப் பூண்'*[24] *என வருவன அவற்றின் ஒளிவிடும் தன்மையையும், 'அழல் அவிர் மணிப் பூண்'*[25]*, 'அணி மணிப் பைம் பூண்'*[26]*, 'சுடர் மணிப் பெரும் பூண்'*[27]*, 'விளங்கு மணிக் கொடும் பூண்'*[28] *என்பன அவற்றில் மணிகள் பதிக்கப்பெற்று விளங்கியதையும் காட்டுகின்றன.*

---

*[1] https://agarathi.com/word/வீழ்*
*[2] நெடு. 136-137*
*[3] கலி. 96 (நச். உரை)*
*[4] பரி. 12:24*
*[5] கலி. 81:30; அக. 16:9*
*[6] சிறு:26*
*[7] ஐங். 250:5*
*[8] பரி. 8:118*
*[9] அக. 16:9*
*[10] அக. 99:4*
*[11] அக. 36:16, 199:20, 205:10, 340:6, 366:12; புற. 397:22*
*[12] ஐங். 353:2*
*[13] பதி. 17:14*
*[14] பதி. 31:14*
*[15] நற். 269:2*
*[16] சிறு. 60-61*
*[17] புற. 373:16*
*[18] பதி. 64:2*
*[19] நற். 227:5*
*[20] நற். 269:2*
*[21] குறு. 89:4*
*[22] நற். 187:9*
*[23] குறு. 147:3*
*[24] ஐங். 353:2*
*[25] ஐங். 232:3*
*[26] பரி. 3:53*
*[27] அக. 69:18*
*[28] புற. 200:8*

### *5.3.1.12. முத்து*

*சங்ககாலத்தில் கடல்படு பொருட்களுள் மிகவும் மதிப்புவாய்ந்த ஒன்றாக முத்து இருந்துள்ளது. முத்துக்கள் மாலைகளாகக் கோத்துப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பொற்சிலம்பினுள் பரல்களாக இடப்பெற்றும் முத்துக்கள் பயன்படுத்தப்பட்டதை 'முத்து அரிப் பொன் சிலம்பு ஒலிப்ப'[1], 'சுடு பொன் ஞெகிழத்து முத்து அரி சென்று ஆர்ப்ப'[2] என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.*

*முத்துக்கள் தென் கடல் பகுதியில் விளைந்ததை, 'முத்துப் படு பரப்பின் கொற்கை முன்துறை'[3], 'கொற்கை அம் பெருந்துறை முத்தின் அன்ன'[4], 'தென் கடல் முத்தும்'[5], 'தென் பவ்வத்து முத்து'[6] எனச் சுட்டுவனகொண்டு அறியமுடிகிறது.*

*முத்துக்கள் கடலிலுள்ள சிப்பியில் மட்டுமல்லாது, முதிர்ந்த யானையின் மருப்பிலும் கிடைப்பதாக, 'முத்து உடை மருப்பின் மழ களிறு பிளிற'[7], 'முத்துஆர் மருப்பின் இறங்குகை கடுப்ப'[8] என வருவன குறிப்பிடுகின்றன. அதேபோல், வெடிப்புண்ட மூங்கில் கணுக்களிலிருந்து கழங்கினைப் போன்ற உருவினைக் கொண்ட கழுவப்படாத முத்துக்கள் வெளிப்பட்டதை,*

> *"..... நெடுவேய்க்*
> *கண் விட தெறிக்கும் மண்ணா முத்தம்*
> *கழங்குஉறழ் தோன்றல."[9]*

*என்ற அகநானூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன.*

*புரவலர்களால் விறலி, பாடினி, உள்ளிட்ட இரவலர்களுக்கு முத்துமாலைகள் பரிசாகக் கொடுக்கப்பட்டதை, 'ஒளி திகழ் முத்தம் விறலியர்க்குக் ஈத்து'[10], 'வால் ஒளி முத்தமொடு பாடினி அணிய'[11] என்றவடிகள் சான்று பகர்கின்றன. கைத்தொழில் வல்ல கம்மியர்களால் முத்து மாலைகள் அழகுபெறக் கழுவித் தூய்மை செய்யப்பட்டன.[12]*

#### *5.3.1.12.1. முத்துமாலை*

*ஆரம் என்பது கழுத்தில் அணியப்பெறும் அணிகலன் என்பதைக் குறித்தாலும், ஆரம் என்பது மிகுதியும் முத்துமாலையையே அடையாளப்படுத்துவதை, 'முத்து ஆரம்'[13], 'முத்து அணி ஆரம்'[14], 'முத்தின் ஆரமும்'[15] என முத்தையும் ஆரத்தையும் இணைத்தே சங்கப் பாக்கள் குறிப்பிடுவதுகொண்டு அறியலாம். இதனை ஆண், பெண் என்ற இருபாலரும் தங்கள் மார்பில் தவழும் அளவுக்கு நீளமுடையதாக அணிந்துள்ளனர். இதனை "நித்தில மதாணி"[16] (முத்துப்பதக்கம்) எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது.*

*பெண்கள் முத்தாரம் அணிந்ததை, 'பூண் ஆரம் நோக்கிப் புணர் முலை பார்த்தான்'[17], 'காழ் விரி கவை ஆரம் மீவரும் இள முலை'[18], 'ஆரம் தாங்கிய அலர் முலை ஆகத்து'[19], 'அணி முலைத் துயல்வரூஉம் ஆரம்'[20] எனவரும் பாடலடிகளும்,*

---

[1] நற். 110:5
[2] பரி. 21:18
[3] நற். 23:6
[4] அக. 27:9
[5] பட். 189
[6] புற. 380:1
[7] பதி. 32:3
[8] குறி. 36
[9] அக. 173:13-15
[10] புற. 170:11
[11] பொரு. 162
[12] நற். 94:4-5
[13] பரி. 21:61
[14] கலி. 79:12
[15] அக. 13:1
[16] பரி. 2:30-31
[17] பரி. 12:55
[18] கலி. 4:9
[19] அக. 75:12, 206:9; நெடு. 136
[20] சிறு. 2

ஆண்கள் முத்தாரம் அணிந்ததை, ‘நெடு வேள் மார்பின் ஆரம் போல’[1], ‘கழூஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே’[2], ‘ஆரம் தாழ்ந்த அணி கிளர் மார்பில்’[3] எனவரும் பாடலடிகளும் குறிப்பிடுகின்றன. ‘அரவு உறழ் ஆரம்’[4], ‘அருவி உருவின் ஆரம்’[5] என்பனகொண்டு அதன் வடிவத்தையும் ‘நிலவுத் திகழ் ஆரம்’[6] என்பதுகொண்டு அதன் வெள்ளிய நிறத்தையும் விளங்கிக்கொள்ளலாம்.

தம் மனைவியர் அணிந்திருந்த ஆரத்தை அவள் அறியாத வண்ணம் தன் காதற் பரத்தைக்குக் தந்து ஆடவர்கள் இன்பம் துய்த்துள்ளனர்.[7] இரவலர்கள் தங்கள் புரவலர்களிடமிருந்து முத்தாரத்தைப் பரிசிலாகப் பெற்றுள்ளனர்.[8]

#### 5.3.1.13. இடையணிகள்

சங்ககாலத்தில் பெண்கள் தங்கள் இடைப்பகுதியில் அணிந்த அணிகலன்களை மேகலை, ஏணிப்படுகால், காசு, காஞ்சி, கோவை, பாண்டில் என்ற பெயர்களால் அணியமுடிகிறது.

##### 5.3.1.13.1. மேகலை

மேகலை மகளிர் இடையில் அணியும் அணிவகை. இச்சொல்லுக்கு மகளிர் இடையிலணியும் ஏழு கோவையுள்ள அணிவகை, மாதர் இடைக்கட்டு, இடையணியுளொன்று என அகராதிகள்[9] விளக்கமளிக்கின்றன. சங்ககாலப் பெண்கள் இம்மேகலையினைத் தங்கள் இடைப்பகுதியில் அணிந்ததை, பரிபாடலும்,[10] கலித்தொகையும்[11] குறிப்பிடுகின்றன.

##### 5.3.1.13.2. ஏணிப்படுகால்

ஏணிப்படுகால் என்பது மகளிர் இடையில் அணியும் மேகலையினைக் குறிக்கும். “மேகலையில் இருகோவை முதல் முப்பத்திரண்டு கோவை வரை உண்டு. கோவைகள் ஒவ்வொன்றும் ஏணிப்படிபோல் ஒன்றனுக்கு ஒன்று வடம் உயர்ந்து காணப்படுவதால் இதனை ஏணிப்படுகால் என்பர்.”[12] வையையில் புனலாடும் பொருட்டுச் சென்ற மகளிர் இத்தகைய மேகலையினை அணிந்திருந்ததைப் பரிபாடல்[13] காட்டுகிறது.

##### 5.3.1.13.3. காசு

காசு சங்ககால மகளிர் அணிந்த அணிகளுள் ஒன்று. இவ்வணிகலன் பல மணிகளைக்கொண்டு கோர்த்துச் செய்யப்பட்டுப் பெண்களின் இடைப்பகுதியில் மேகலையாக அணியப்பட்டதை ‘பல் காசு நிரைத்த கோடு ஏந்து அல்குல்’[14], ‘பொலம் காசு நிரைத்த கோடு ஏந்து அல்குல்’[15] என்பனவற்றைக் கொண்டும், வட்டவடிவாக அமைந்த பொற்காசுகளைக் கோர்த்துச் செய்யப்பட்ட அணிகலன் என்பதை, ‘பொலம் பசும் பாண்டில் காசு நிரை அல்குல்’[16]எனக் குறிப்பதைக்கொண்டும் அறியமுடிகிறது. காசுகள் வரிசையாகக்

[1] அக. 120:1
[2] புற. 19:18
[3] புற. 59:1
[4] புற. 368:18, 398:27
[5] பரி. 13:11
[6] புற. 372:13
[7] பரி. 20:33
[8] புற. 368:18, 372:13, 398:27
[9] http://agarathi.com/word/மேகலை
[10] பரி. 7:47, 22:30
[11] கலி. 96:15
[12] பரிபாடல் மூலமும் உரையும், என்.சி.பி.எச்., ப. 274
[13] பரி. 10:9
[14] அக. 75:19
[15] அக. 269:15
[16] ஐங். 310:1

கோர்க்கப்படுவதை, 'காழ் பெய் அல்குல் காசு முறை திரியினும்'[1] என்ற நற்றிணைப் பாடலடி காட்டுகிறது.

குழந்தைக்கு அணிவிக்கப்பெற்ற பல்வேறு அணிகலன்களில் இத்தகைய பொற்காசினால் ஆன அணியும் ஒன்றாக விளங்கியதை, 'கைவினைப் பொலிந்த காசு அமை பொலம் காழ்'[2] எனக் கலித்தொகை சுட்டுகிறது. மேலும், குழந்தைக்கு அணிவிக்கப்பெற்ற கிண்கிணி எனப்பட்ட சதங்கையில் இக்காசுகள் பரல்களாக இடப்பெற்றிருந்ததை, 'பொலம்செய் கிண்கிணிக் காசின் அன்ன போது ஈன் கொன்றை'[3] எனக் குறிப்பது கொண்டு அறியலாம்.

### 5.3.1.13.4. காஞ்சி

மகளிர் இடையில் அணியும் அணிகளுள் ஒன்று காஞ்சி. இவ்வணிகலனை மகளிர் அணிந்திருந்ததைப் பரிபாடல்[4] சுட்டுகிறது. இது எண்வடமாய் ஆடையின் மேலே அணியும் அணி எனப் பரிமேலழகரின் பரிபாடல் உரை குறிப்பிடுகிறது.

### 5.3.1.13.5. கோவை

பெண்கள் இடைப்பகுதியில் அணிந்த அணிகலனுக்குக் கோவை என்று பெயர். இதனை மேகலை எனவும் குறிப்பிடுகின்றனர். இது பலவடங்கலாகக் கோத்து அணியும் அணி என்பதால் கோவை எனப்பட்டது. சங்க காலப் பெண்கள் இதனை இடைப்பகுதியில் அணிந்ததை, 'பசுங்காழ்க் கோவை அகல்அமை அல்குல்'[5] என அகநானூறு சுட்டுகிறது.

### 5.3.1.13.6. பாண்டில்

சங்கப் பாடல்களில் பாண்டில் என்பது, பாண்டில் விளக்கை மட்டுமின்றி, பாண்டில் என்னும் பெயருடைய அணிகலனையும் குறிப்பிடுவதை அறியமுடிகிறது. பாண்டிலாவது வட்ட வடிவிலான காசு என்றும், பாண்டிலென்னும் பெயருடைய ஓர் அணியென்றும் உரையாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். இது இடுப்பைச்சுற்றி அணியப்பெறும் அணிகலன் என்பதை, "பொலம் பசும் பாண்டிற் காசு நிரை அல்குல்"[6] எனச் சுட்டுவதைக் கொண்டும், இது வட்ட வடிவினது என்பதை, "மீன் பூத்தன்ன விளங்குமணிப் பாண்டில்"[7] எனச் சுட்டுவதைக்கொண்டும் துணியலாம். கஞ்சதாளம் எனப்பட்ட ஒருவகை அணிகலனைக் குறிப்பதாகவும் பாண்டில் என்னும் சொல் விளங்குகிறது.[8]

### 5.3.1.14. வாகுவலயம்

தோளில் அணியும் அணிகலன் வாகுவலயம் எனக் குறிப்பிடப்படுகிறது. இது தோளில் அணியப்பட்டதை, 'தோள் அணி வலயம்'[9] எனச் சுட்டப்பட்டுள்ளதுகொண்டு தெளியலாம். வையைப் புனலில் நீராடியோர் இதனை அணிந்திருந்ததைப் பரிபாடல்[10] குறிப்பிடுகிறது.

### 5.3.1.15. தொடி

தொடி என்ற சொல் சங்கப் பாக்களில் மகளிரும் ஆடவரும் அணிந்த அணிகலனையும், போரில் ஈடுபடுத்தப்பட்ட யானைகளின் மருப்புகள் சிதையாமல்

---

[1] நற். 66:9
[2] கலி. 85:3
[3] குறு. 148:2-3
[4] பரி. 7:47
[5] அக. 385:12-13
[6] ஐங். 310:1, 316:1-2
[7] பதி. 90:35
[8] மலை. 4; அக. 376:9
[9] பரி. 13:52
[10] பரி. 7:47

இருக்கும்பொருட்டு அவற்றின் முனைகளில் அணிவிக்கப்பெற்ற பூணினையும், நெல், தினை போன்ற தானியங்களைக் குற்றப் பயன்படுத்தப்பட்ட உலக்கைகளின் முனைகள் முறியாமல் இருக்கவேண்டி பொருத்தப்பட்ட பூணினையும் குறிப்பிடுவதை அறியமுடிகிறது. தொடியினை அக்காலத்தில் கைம்பெண்களைத் தவிர்த்து ஆண், பெண் என இருபாலரும் அணிந்துள்ளனர். பெண்ணின் உடல்மெலிவைத் தொடி கழல்வதைக்கொண்டே குறிப்பால் உணர்த்துகின்றனர்.

அகராதிகள் தொடி என்ற சொல்லுக்கு வளைவு; கைவளை; தோள்வளை; வீரவளை; சுற்றுவட்டம்; பூண் எனப் பலபொருளைத் தருகின்றன.[1] இதனை சங்கஇலக்கிய உரைகளிலும் காணமுடிகிறது. சங்க இலக்கியத்தில் குறுந்தொடி அணிந்தவர்களாகக் குறிப்பிடப்படுபவர்கள் பெண் எனில் கைவளை என்றும், ஆண் எனில் வீரவளை என்றும் உரையாசிரியர்களால் உரைசெய்யப்பட்டுள்ளன.

இத்தொடி பொன் உலோகத்தால் செய்யப்பட்டதைப் 'பொலந்தொடி', 'பொற்றொடி' எனப் பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளதைக்கொண்டு அறிந்துகொள்ள முடிகிறது. இதனை, ''பொலம் தொடி தெளிர்ப்ப முயங்கியவர்''[2], ''பொலம் தொடி தெளிர்ப்ப வீசி''[3], ''பொலம் தொடிக் குறு மகள்''[4] எனவரும் பாடலடிகள் விளக்குகின்றன. இவை அளவில் சிறியனவாய் இருந்ததைக் 'குறுந்தொடி' என்றும், பளபளப்பாகவும், ஒளிவிடும் தன்மை வாய்ந்தனவாகவும் இருந்ததை 'ஒண்டொடி'[5], 'சுடர்த்தொடி'[6], 'அவிர்தொடி'[7] என்றும் சுட்டுவனகொண்டு அறியமுடிகிறது.

ஆம்பல் தண்டினாலும் மகளிர் வளைசெய்து அணிந்தனர். இதனை, 'கழனி ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்'[8] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

இத்தொடி கையில் அணியும் அணிகலன் என்பதை, 'தொடிக் கை மகளிர்'[9], 'கழல் தொடித் தடக்கை'[10] , 'தொடி உடைத் தடக்கை'[11], 'தொடி பிறழ் முன்கை'[12], 'இறைத்தொடி'[13], 'தொடித் தோள் மகளிர்'[14] எனக் குறிப்பனகொண்டு அறியமுடிகிறது.

### 5.3.1.15.1. கைம்பெண் தொடி நீக்குதல்

சங்ககாலச் சமூகத்தில் கணவனை இழந்த பெண்கள் தங்கள் அணிகலன்களைத் துறந்து வாழும் வழக்கத்தைக் கொண்டவர்களாய் இருந்துள்ளனர். இதனை, வெளிமான் என்பவன் இறந்தபின் அவன் பிரிவால் தொடிநீக்கி அவனது உரிமைமகளிர் பொலிவழிந்திருந்ததை, ''தொடி கழி மகளிரின் தொல்கவின் வாடி''[15] என்றும், மயிரைக் கத்தரித்தும், வளையல்களை நீக்கியும், அல்லியரிசியாலாகிய உணவினை உண்டும் வாடிய பெண்ணைப்பற்றி,

> ''கூந்தல் கொய்து, குறுந்தொடி நீக்கி,
> அல்லி உணவின் மனைவியொடு……
> ………………………………………………
> முனித்தலைப் புதல்வர் தந்தை

---

[1] http://agarathi.com/word/தொடி
[2] ஐங். 24:4
[3] அக. 117:8
[4] அக. 219:9
[5] ஐங். 38:4
[6] நற். 371:6
[7] ஐங். 314:1
[8] புற. 63:11-12, 352:5
[9] புற. 63:12
[10] புற. 91:2
[11] புற. 370:23
[12] புற. 350:10
[13] கலி. 84:31
[14] புற. 339:6
[15] புற. 238:6

தனித் தலைப் பெருங்காடு முன்னிய பின்னை''[1]

என்றும் வரும் புறநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

### 5.3.1.16. வளை

சங்ககாலப் பெண்கள் அணிந்த பல்வேறு வகையான அணிகலன்களில் 'வளை' எனப்பட்ட வளையல் குறிப்பிடத்தக்க ஒன்று. இவ்வளை கைம்பெண்களைத் தவிரத்து, அனைத்துப் படிநிலைகளிலும் வாழ்ந்த பெண்களால் அணியப்பட்டது.

காதலனையோ கணவனையோ பிரிந்து தனித்திருக்கும் பெண்களின் உடல் மெலிவை அவர்களின் வளை நெகிழ்வே சுற்றத்தார்க்குப் புலப்படுத்தியது. இதனை, 'இலங்கு வளை நெகிழ'[2], 'செறி வளை நெகிழ'[3], 'ஆய் வளை ஞெகிழ'[4] என்றவாறு பலவிடத்தும் சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன.

இவ்வளைகளைப் பெண்கள் தங்கள் முன்கையில் அணிந்திருந்ததை, 'வளை அணி முன்கை'[5], 'வளை ஆர் முன்கை'[6], 'தொகு வளை முன்கை'[7], 'நிரை வளை முன்கை'[8] என வருவன குறிப்பிடுகின்றன.

வளையல்கள் கடலில் தோன்றிய வெண்மையான சங்கினை அறுத்துச் செய்யப்பட்டதை, 'கடல் கோடு அறுத்த அரம் போழ் அவ் வளை'[9], 'கோடு ஈர் எல் வளை'[10], 'கடல் கோடு செறிந்த வளை'[11], 'கோடு ஈர் இலங்கு வளை'[12], 'சுரி வளை'[13] என்பனவும், சங்குகளை அரத்தால் அறுத்து வளையல்கள் செய்ததை, 'அரம் போழ் அவ் வளை நிலை நெகிழ்த்தோரே'[14], 'வாள் அரம் பொருத கோள் நேர் எல் வளை'[15], 'அரம் போழ்ந்து அறுத்த கண் நேர் இலங்கு வளை'[16] என்பனவும் சுட்டுகின்றன. இவ்வளைகள் வெள்ளியாலும் செய்யப்பட்டதை, 'நீர்த்திரள் கடுக்கும் மாசுஇல் வெள்ளிச் சூர்ப்புறு கோல் வளை செறித்த முன்கை'[17] என்றும், பவளத்தால் ஆன வளைகுறித்து 'பவள வளை செறித்தாள்'[18] எனப் பரிபாடலும் குறிப்பிடுவதைக்கொண்டு அறியலாம்.

சங்குகளைக் கூர்மையான வாளால் அறுத்து வளைகளைச் செய்யும் தொழிலை வேதங்களைப் பயிலாத ஊர்ப்பார்ப்பான் எனப்பட்ட வேளாப்பார்ப்பனர் மேற்கொண்டதை, ''வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த வளை''[19] எனக் குறிப்பிடுவதைக்கொண்டு அறியமுடிகிறது. மேலும் இவ்வளையல்களைத் தொழில் ரீதியில் விற்பனை செய்யும் விலைஞர்கள் அக்காலத்தில் இருந்ததை, 'சிறியவும் உள ஈண்டு விலைஞர் கை வளையே'[20] என்ற குறுந்தொகைப் பாடலடி சுட்டுகிறது.

வளைகளின் தோற்றத்தை, 'எல் வளை'[21], 'வால் வளை'[22] என வருவனவும், அவை தெரிவுசெய்து அணியப்பட்டதை, 'ஆய் வளை'[23], 'தெரி வளை'[24] என வருவனவும், அவை சிலவாகவும் பலவாகவும் அணியப்பட்ட தன்மையினை, 'செறி

[1] புற. 250
[2] குறு. 125:1
[3] குறு. 190:2
[4] குறு. 316:1
[5] நற். 71:2
[6] நற். 323:5
[7] குறு. 15:6
[8] குறு. 335:1
[9] ஐங். 194:1
[10] ஐங். 196:1
[11] ஐங். 191:1
[12] குறு. 11:1
[13] குறு. 260:3
[14] அக. 251:20
[15] நற். 77:9
[16] மது. 316
[17] அக. 142:16-17
[18] பரி. 11:101
[19] அக. 24:1-2
[20] குறு. 117:6
[21] ஐங். 20:5
[22] குறு. 189:6
[23] குறு. 316:1
[24] அக. 175:8

வளை'[1], 'சில் வளை'[2], 'தொகு வளை'[3], 'நிரை வளை'[4] என வருவனவும் சுட்டக் காணலாம்.

பரத்தையர், தம்மை விரும்பும் ஆடவர் தன்னைப் பிரிந்து வேறொருத்தியிடம் சென்றுவிட்டால் தம் வளையல்களை உடைத்துத் தாம் கொண்ட வெறுப்பினை வெளிக்காட்டினர். இதனை, 'செறி வளை உடைத்தலோ இலனே'[5] என்றும், 'ஆரியர் படையின் உடைக, என் நேர்இறை முன்கை வீங்கிய வளையே'[6] என்றும் அகநானூறு சுட்டுகிறது.

கணவன் இறந்தால் பெண்கள் தங்கள் வளையினைக் களைந்துவிடும் வழக்கம் பண்டுதொட்டு இன்றுவரை காணப்படும் வழக்கமாகவே உள்ளது. இவ்வழக்கத்தினை, வெளிமான் என்னும் மன்னன் இறந்தபோது அவனுக்காக அழும் மகளிர் தம் வளைகள் வாழைப்பூப் போல சிதறி விழுந்ததை, 'வாழைப் பூவின் வளை முறி சிதற'[7] என்றும், போரில் கணவனை இழந்த பெண்ணொருத்தி, வளையல் இல்லாத வெறுங்கையைத் தலைமேல் வைத்து வருந்துவதை,

> "பைங் கழை பொதி களைந்தன்ன விளர்ப்பின்,
> வளை இல் வறும் கை ஓச்சி"[8]

என்றும், போரில் மார்பில் புண்பட்டு இடைச் சுரத்து வீழ்ந்து கிடந்த வீரனின் மனைவி வளை கழித்து வெறுங்கையைத் தலைமேல் வைத்துக்கொண்டு புலம்பியதை, 'இடைச் சுரத்து இறுத்த மள்ள! விளர்த்த வளை இல் வறுங் கை ஓச்சி'[9] என்றும் குறிப்பிடும் புறநானூற்றுப் பாடல்களைக்கொண்டு அறிந்து கொள்ளலாம்

### 5.3.1.17. விரலணிகள்

சங்கப் பாடல்களில் விரலில் அணியப்பட்ட அணிகலனாக, தாழ், விளக்கம், ஆழி என்ற பெயர்களால் சுட்டப்படும் மோதிரங்களைக் குறித்து அறியமுடிகிறது.

பண்டைக் காலத்தில் வளமனைகளில் வாழ்ந்த பெண்களிடம் விரல்களில் மோதிரம் அணியும் வழக்கமிருந்ததைச் 'சிறு தாழ் செறிந்த மெல் விரல்'[10] என்ற நற்றிணைப் பாடலடி காட்டுகிறது.

மன்னன் முத்துமாலை, மலர்மாலை, வீரவளை ஆகியவற்றோடு பொன்னால் செய்யப்பட்ட மணிகள் பதிக்கப்பட்ட மோதிரத்தை விரலில் அணிந்திருந்ததை மதுரைக்காஞ்சியும்,[11] வாளை மீனின் பிளந்த வாயைப் போன்ற வடிவத்தில் விளங்கும் மோதிரத்தை அரசி அணிந்திருந்ததை நெடுநல்வாடையும்[12] குறிப்பிடுகிறது. வையைப் புனலைக் காணவந்த மகளிர் 'ஆழி' எனப்பட்ட மோதிரத்தை அணிந்திருந்ததை, 'கைவளை, ஆழி, தொய்யகம், புனைதுகில்'[13] எனப் பரிபாடல் காட்டுகிறது.

### 5.3.1.18. சிலம்பு

சங்ககாலச் சமூகத்தில் பெண்கள் அணிந்த பல்வேறு அணிகலன்களுள் ஒன்று சிலம்பு. இச்சிலம்பு காலில் அணியப்பட்டதை, 'மெல் அடி மேலவும் சிலம்பே'[14],

---

[1] கலி. 127:13
[2] அக. 19:15
[3] குறு. 15:6
[4] குறு. 335:1
[5] அக. 186:17
[6] அக. 336:22-23
[7] புற. 237:11
[8] புற. 253:5
[9] புற. 254:3-4
[10] நற். 120:4
[11] மது. 719
[12] நெடு. 144
[13] பரி. 7:46
[14] குறு. 7:2

‘சேவடிச் சிலம்பு’[1], ‘சிலம்பு ஆர் சீறடி’[2], ‘அரியார் சிலம்பின் சீறடி’[3] என்பன சுட்டுகின்றன.

சிலம்புகள் பொன்னால் செய்யப்பட்டதை, ‘முத்து அரிப் பொன் சிலம்பு’[4], ‘செம் பொன் சிலம்பு’[5], ‘தமனியப் பொன் சிலம்பு’[6], ‘தெள் அரிப் பொன் சிலம்பு’[7] என்பன காட்டுகின்றன. இச்சிலம்புகளுக்குள் ஒலி எழுப்புவதற்காகப் பரல்கற்கள் இடப்பெற்றிருந்ததை, ‘தெள் அரிச் சிலம்பு ஆர்ப்ப’[8], ‘அரி பெய் சிலம்பு’[9], ‘அரிச் சிலம்பு ஒலிப்ப’[10] என்பன விளக்குகின்றன. சிலம்பினுள் முத்துக்களும் பரல்களாக இடப்பெற்றிருந்ததை, ‘முத்து அரிப் பொன் சிலம்பு’[11] என நற்றிணை சுட்டுகிறது. திருமணத்திற்கு முன் சிலம்பினை நீக்குதல் முக்கியமான சடங்காக இருந்துள்ளது. இது குறித்து இயல் நான்கில் ‘சிலம்புகழி நோன்பு’ என்ற தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது.

### 5.3.1.19. மணிகள்

மக்கள் அணிந்த அணிகலன்களுக்கு அணி சேர்க்கும் மணிவகைகள் பலவும் காடு, மலை, வயல் என நிலத்தின் பல பகுதிகளிலிருந்து இயற்கையாகவே கிடைத்தன. மலைப் பகுதிகளில் மணிகள் கிடைத்ததை, ‘மாமலை பயந்த காமரு மணி’[12], ‘மலை பயந்த மணி’[13], ‘வடமலைப் பிறந்த மணி’[14] என்பன காட்டுகின்றன.

காட்டுப் பகுதிகளில் மணிகள் கிடைத்ததை, ‘கல் உயர் கடத்து இடைக் கதிர் மணி பெறூஉம்’[15], ‘கடறு மணி கிளரச் சிதறு பொன் மிளிர’[16] எனவரும் அடிகள் குறிப்பிடுகின்றன.

#### 5.3.1.19.1. அரவும் மணியும்

மலையில் இரைதேடும் பொருட்டு ஒளிவேண்டி தன்னிடமுள்ள மணியைப் பாம்பு உமிழ்வதை, ‘திரு மணி உமிழ்ந்த நாகம்’[17], ‘மேய் மணி இழந்த பாம்பின்’[18], ‘திருமணி அரவுத் தேர்ந்து உழல’[19], ‘அரவு உமிழ் மணி’[20] என்பன குறிப்பிடுகின்றன. இத்தகைய மணிகள் அருவியால் அடித்துக் கொண்டுவரப்பெற்றதை, ‘அருவி தந்த அரவு உமிழ் திரு மணி’[21] என அகநானூறு குறிப்பிடுகிறது.

இயற்கையில் கிடைத்த மணிகள் கழுவித் தூய்மை செய்யப்பட்டதை, ‘மாசு அற மண்ணுற்ற மணி’[22], ‘மண்ணுறு மணி’[23], ‘மண் ஆர் மணி’[24] என்றும், கழுவாத மணிகள் ‘மண்ணா மணி’ என்றும் குறிப்பிடப்படுகின்றன. மணிகள் கோர்த்துக் கட்டுவதற்கு ஏதுவாக துளையிடப் பட்டன. இதனை, ‘கோடு போழ் கடைநரும் திரு மணி குயினரும்’[25] என மதுரைக்காஞ்சி கூறுகிறது.

#### 5.3.1.19.2. அணியும் மணியும்

பலவகையான மணிகள் பொன் அணிகலன்களில் பதித்துப் பயன்படுத்தப்பட்டதை, ‘மாண உருக்கிய நல் பொன் மணி உறீஇ’[26], ‘பொன்னொடு மணி மிடை அல்குல் மடந்தை’[27], ‘இலங்கு மணி மிடைந்த பொலம் கலத் திகிரி’[28],

---

[1] அக. 117:8-9
[2] அக. 17:9
[3] அக. 257:3
[4] நற். 110:5
[5] அக. 96:11
[6] பெரு. 332
[7] மது. 444
[8] கலி. 69:8
[9] அக. 6:1
[10] அக. 49:17
[11] நற். 110:5
[12] புற. 218:2
[13] புற. 377:16
[14] பட். 187
[15] பதி. 21:22
[16] புற. 202:3
[17] அக. 138:17
[18] அக. 372:13
[19] நற். 255:10
[20] புற. 294:8
[21] அக. 192:11
[22] கலி. 77:16
[23] குறு. 367:6; பரி. 1:62
[24] பரி. 10:89
[25] மது. 511
[26] கலி. 117:1
[27] குறு. 274:6-7
[28] பதி. 14:18

*'மணி மிடை பொன்'*[1], *'பொன் படு மணி'*[2] எனக் குறிப்பிடப்படுவனவற்றைக் கொண்டு அறியலாம்.

பூண் எனப்பட்ட அணிகலன்களில் மணிகள் பதிக்கப்பெற்று விளங்கியதை, *'அணிமணிப் பைம்பூண்'*[3], *'சுடர் மணிப் பெரும் பூண்'*[4], *'விளங்கு மணிக் கொடும் பூண்'*[5] என்பனவும், ஆரம் எனப்பட்ட அணிகலன்களில் மணிகள் பதிக்கப்பெற்றதை, *'விரவுமணி ஒளிர்வரும் அரவுஉறழ் ஆரம்'*[6] என்றும், முத்துவடத்துடன் மணிகள் காணப்பட்டதை, *'மணிகிளர் ஆரம்'*[7] என்றும், கிரீடங்கள் எனப்பட்ட மணிமுடிகளில் மணிகள் பதிக்கப்பெற்று விளங்கியதை, *'முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி'*[8] என்றும் குறிப்பிடுவதுகொண்டு பல வகையான அணிகலன்களில் மணிகள் பதிக்கப்பெற்று விளங்கியதை அறியமுடிகிறது.

விறலியர் தங்கள் மார்பில் ஒளிவிடும் மணியினை அணிந்திருந்ததை, *'திறல் விடு திரு மணி இலங்கு மார்பின்'*[9] என்றும், சேர அரசி ஒருத்தி தன் தோளில் மணி அணிந்திருந்ததை, *'நலம் பெறு திரு மணி கூட்டும் நல் தோள்'*[10] என்றும், பொன்னாற் செய்த புலிப்பல்லோடு கோத்த தனி மணித் தாலியினைக் கானவன் மகளொருத்தி அணிந்ததை, *'புலிப் பல் கோத்த புலம்பு மணித் தாலி'*[11] என்றும், பெருமாடங்களில் வாழ்ந்த வளையணிந்த மகளிர், ஒளிவீசும் மணிகளைக்கொண்டு விளங்கியதை, *'கதிர் விடு மணியின் கண் பொரு மாடத்து இலங்கு வளை மகளிர்'*[12] என்றும், ஆயமகளொருத்தி மயிலினது கழுத்தனைய அழகிய நீலமணியினைக் கழுத்திலே புரளும்படி அணிந்திருந்ததனை, *'மயில் எருத்து உறழ் அணி மணி நிலத்துப் பிறழ'*[13] என்றும் குறிப்பிடுவன மகளிர் அனைவராலும் மணிகள் விரும்பி அணியப்பட்டதை உணர்த்துகின்றன.

மணிகள் இழைத்துப் பொற்கலங்கள் செய்யப்பட்டதை, *'மணி செய் மண்டைத் தீம் பால் ஏந்தி'*[14] என அகநானூறு காட்டுகிறது. மணிகள் பண்டமாற்றாகப் பெறப்பெற்று அயல்நாட்டுப் பண்டங்கள் வணிகர்களால் விற்பனை செய்யப்பட்டதை, *'பல்வேறு திரு மணி முத்தமொடு பொன் கொண்டு சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்'*[15] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

### 5.3.1.20. கழல்

சங்ககால ஆண் மக்களால் காலில் அணியப்பட்ட அணிகலனுக்குக் கழல் என்று பெயர். *'காலன கழலே'*[16], *'கழல் புனை திருந்து அடி'*[17], *'காலன புனை கழல்'*[18] எனச் சங்கப்பாக்கள் சுட்டுவது கொண்டு இதனை உணரலாம்.

இக்கழல்கள் பொன்னால் செய்யப்பட்டதை, *'பொலம் கழல்'*[19], *'ஈகை வான் கழல்'*[20] என வருவனவும், அவற்றில் பூவேலைப்பாடுகள் பொறிக்கப் பெற்றிருந்ததை, *'பூம் பொறிக் கழல்'*[21] எனச் சுட்டுவதைக்கொண்டும் விளங்கிக் கொள்ளலாம்.

---

[1] நற். 304:6
[2] ஐங். 189:2
[3] பரி. 3:53
[4] அக. 69:18
[5] புற. 200:8
[6] புற. 398:27
[7] கலி. 135:18
[8] திரு. 84
[9] பதி. 46:3
[10] பதி. 74:16
[11] அக. 7:18
[12] புற. 53:2-3
[13] கலி. 103:59
[14] அக. 105:5
[15] மது.505-506
[16] குறு. 7:1
[17] அக. 61:11
[18] புற. 100:1
[19] பதி. 31:31
[20] பதி. 42:1
[21] புற. 281:9

இது அணிகலன் என்ற அளவில் மட்டும் இல்லாமல் வீரத்தோடு தொடர்புடையதாக வீரக்கழல் என்றே சுட்டப்படுவது நோக்கத்தக்கது. அரசர்கள் அணிந்த வீரக்கழல்கள் பகை மன்னனின் மணிமுடியினை(கீரிடம்) உருக்கிச் செய்யப்பட்டதை, "முடி புனைந்த பசும் பொன் நின் அடி பொலியக் கழல் தைஇய"[1] எனப் புறநானூறு சுட்டுகிறது. போரில் செய்த அரிய செயல்களைத் தம் கழலில் பொறித்துக் கொள்ளுதலைப் பண்டையோர் மரபாகக் கொண்டிருந்ததை, 'ஒண்பொறிக் கழற்கால்'[2] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.

இக்கழலினைக் குழந்தைப் பருவத்தைக் கடந்த இளவயது ஆண்மக்கள் காலில் அணிந்ததை, 'கிண்கிணி களைந்த கால் ஒள் கழல் தொட்டு'[3] எனச் சுட்டுவதுகொண்டும், இது ஆண்களின் வளர்நிலையைச் சுட்டும் அடையாளமாகவும் திகழ்வதை, 'திருந்து கழல் காளையொடு அரும் சுரம் கழிவோள்'[4] எனக் குறிப்பிடுவதைக்கொண்டும் அறியலாம்.

இக்கழலினை அரசர்கள் அணிந்ததை, 'புனை கழல் கால் தென்னவன்'[5], 'புனை கழல் பிட்டன்'[6], 'கழல் கால் புல்லி'[7], 'கழல் புனை திருந்து அடிக் காரி'[8], 'கழல் கால் பேகன்'[9], 'கழல் புனை திருந்து அடிக் கடு மான் கிள்ளி'[10] என்பனவும், வீரர்கள் அணிந்திருந்ததை, 'கழல் கால் மாறா வயவர்'[11], 'தொடு கழல் மறவர்'[12], 'கழல் கால் மழவர்'[13] என்பனவும் குறிப்பிடுகின்றன.

### 5.3.1.21. முடி(கிரீடம்)

அரசர்கள் தலையில் முடி எனப்பட்ட கீரீடத்தை அணிந்திருந்தனர். பகை மன்னர்களின் மணிமுடியினை(கீரிடம்) உருக்கி அரசர்கள் வீரக்கழல்கள் செய்து அணிந்துகொண்டதை, "முடிபுனைந்த பசும்பொன் நின் அடி பொலியக் கழல் தைஇய"[14] எனப் புறநானூறும் சேர அரசர்கள் பலர் ஏழு அரசர்களை வென்று அவர்கள் தரித்திருந்த மணிமுடிகளை ஆரமாகச் செய்து அணிந்துகொண்டதை "எழுமுடி கெழீஇய திருஞெமர் அகலத்து"[15] எனப் பதிற்றுப்பத்தும் குறிப்பிடுகின்றன.

## 5.3.2. குழந்தைகளுக்கானவை

### 5.3.2.1. முஞ்சம்

குழந்தையின் தலை உச்சியிலணிவிக்கப்படும் அணிவகைக்கு முஞ்சம் என்று பெயர். வையையின் நீர் வரவைக் காணச் சென்ற சிறுவர்கள் இதனை அணிந்திருந்ததை, 'திணை பிரி புதல்வர் கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇ'[16] எனப் பரிபாடல் சுட்டுகிறது.

### 5.3.2.2. தாலி

தாலி என்னும் அணிகலன் சிறுவயதுப் பிள்ளைகளுக்குக் கழுத்திலோ இடுப்பிலோ அணிவிக்கப்பெற்ற அணிகலன்களில் ஒருவகை எனக் கருதலாம். இதனை ஆண் பெண் என்ற இருபாற்பட்டவர்களும் அணிந்துள்ளனர்.

---

[1] புற. 40:4
[2] பதி. 30:40, 34:2
[3] புற. 77:1
[4] ஐங். 382:2
[5] கலி. 98:30
[6] அக. 143:12
[7] அக. 295:13
[8] புற. 122:2
[9] புற. 142:4
[10] புற. 167:10
[11] பதி. 19:3
[12] அக. 75:6
[13] மது. 395
[14] புற. 40:3-4
[15] பதி. 14:11, 16:17, 40:13, 45:6
[16] பரி. 16:7- 8

ஆண்குழந்தைகளுக்குத் தாலி அணிவிக்கப்பெற்றதை, 'பொன் உடைத் தாலி என் மகன் ஒற்றி'[1], 'புலிப்பல்தாலிப் புதல்வன் புல்லி'[2], 'புலிப்பல் தாலிப் புன் தலைச் சிறாஅர்'[3] என்பவற்றைக்கொண்டும், இத்தாலி ஒரு குறிப்பிட்ட பருவத்திற்குப்பின் நீக்கப்படும் வழக்கமிருந்ததை, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் சிறுவதிலேயே போருக்குச் சென்றதை, 'தாலி களைந்தன்றும் இலனே'[4] எனக் குறிப்பிடுவதைக்கொண்டு அறியமுடிகிறது. இங்குத் 'தாலி' என்னும் அணிகலன் ஆண்களின் பருவ வளர்ச்சியைக் காட்டும் குறியீடாகவும் விளங்குவது கவனிக்கத்தக்கது.

பெண்குழந்தைகளுக்குத் தாலி அணிவிக்கப்பெற்றதை, பேதைப் பருவத்திலிருந்து பெதும்பைப் பருவத்திற்கு வளர்ச்சியுற்ற சிறுபெண் ஒருத்தி புலிப்பல்தாலி அணிந்ததை, 'பொன்னொடு புலிப் பல் கோத்த புலம்பு மணித் தாலி'[5] என அகநானூறு குறிப்பிடுகிறது.

வேட்டைச் சமூகத்தில் வாழ்ந்த மக்கள் தாங்கள் வேட்டையில் வீழ்த்திய புலியின் பல்லைக் கயிற்றில் கோத்து அணிந்தனர் எனலாம். இத்தகைய புலிப்பல்லை அணிவது மறக்குடியின் அடையாளமாகவும், தீய ஆவிகளிடமிருந்து தங்கள் குழந்தைகளைக் காப்பதற்காகவும், புலிப்பல்லை அணிவதால் புலியின் ஆற்றல் தங்கள் பிள்ளைகளுக்கும் கிடைக்கும் என்ற நம்பிக்கையின் காரணமாகவும் அணியப்பட்டது எனக் கருதலாம்.

#### *5.3.2.3. கிண்கிணி*

கிண்கிணி காலில் அணியப்பெற்ற அணிகலன். இதனைச் சதங்கை என்றும் குறிப்பிடுகின்றனர். இவ்வணிகலனைச் சிறுவயது ஆண் குழந்தைகள்[6] பெரும்பாண்மையாக அணிந்ததைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. சில பாக்கள் இளம் பெண்களும்[7], அரசியரும்[8], பரத்தையரும்[9] அணிந்ததைக் குறிப்பிடுகின்றன. இக்கிண்கிணிகள் பொன்னை உருக்கி, இரண்டு வடங்களாக ஆக்கிப் பின்னி, நெருப்பிலிட்டுச் செய்யப்பட்டதை, "காலவை, சுடு பொன் வளைஇய ஈர்அமை சுற்றொரு பொடி அழற் புறம் தந்த செய்வுறு கிண்கிணி'[10] என்ற கலித்தொகை அடிகள் வழி அறியமுடிகிறது.

செல்வச் சிறார்களுக்கு அணிவிக்கப்பெற்ற பொன்னால் செய்யப்பட்ட கிண்கிணி தவளை, தேரை ஆகியவற்றின் வாய்களின் வடிவைப்போன்று இருந்ததை, 'தவளை வாய பொலம்செய் கிண்கிணி'[11],'தோலை வாய்க் கிண்கிணி ஆர்ப்ப'[12] என்பதைக் கொண்டும், அதனுள் உருண்டையான காசுகள் ஒலியெழுப்புவதற்காகப் பரல்களாக இடப்பெற்றிருந்ததை, 'கிண்கிணிக் காசின் அன்ன போது ஈன் கொன்றை'[13], 'அரி பெய் கிண்கிணி ஆர்ப்ப'[14], 'அரி பொலி கிண்கிணி ஆர்ப்பு'[15] என்பவற்றைக் கொண்டும் அறிய முடிகிறது.

#### *5.3.2.4. புட்டில் - கெச்சையணி*

சங்கப் பாக்களில் புட்டில் என்பது 'கெச்சை' என்னும் அணியினையும், பனை ஓலைக் கூடையினையும் குறிப்பிடுகிறது. புட்டில் எனப்பட்ட

---

[1] அக. 54:18
[2] குறு. 161:3
[3] புற. 374:9
[4] புற. 77:7
[5] அக. 7:17-18
[6] புற. 198:5
[7] அக. 254:3; திரு. 13
[8] பதி. 52:19-20
[9] கலி. 74:13, 96:17
[10] கலி. 85:1-2
[11] குறு. 148:2
[12] கலி. 86:9
[13] குறு. 148:3
[14] நற். 250:2
[15] கலி. 81:6

கெச்சையைக் காலில் ஒலிக்கும்படியாகக் குழந்தைக்கு அணிவித்ததை, ‘அரிபுனை புட்டிலின் ஆங்கண் ஈர்த்து ஈங்கே வருக!- எம்பாக மகன்’[1] என்றும் குதிரைக்கு அணிவிக்கப்பட்டதை, ‘அரிபெய் புட்டில் ஆர்ப்பப் பரிசிறந்து’[2] எனக் குறிப்பிடுவதைக்கொண்டும் அறியமுடிகிறது. இவற்றில் பரல்கள் இடப்பெற்றிருந்ததை, ‘அரிபுனை புட்டில்’, ‘அரிபெய் புட்டில்’ என்பன உணர்த்துகின்றன. இது சதங்கையைப் போன்றதொரு அணி எனலாம்.

### *5.3.3. பிற அணிகலன்கள்*

#### *5.3.3.1. இழை*

*சங்க காலத்தில் மக்கள் பல்வேறு அணிகலன்களை அணிந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டனர். அத்தகைய அணிகலன்களைப் பொதுவாக ‘இழை’ என்ற பெயரால் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். ஆண்பெண் என்ற இருபாலருமே அணிகலன்களால் தங்களை அழகுபடுத்திக்கொண்டாலும், ‘இழை’ எனக் குறிப்பிடப்பெறும் அணிகளைப் பெண்கள் மட்டுமே அணிந்ததைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.*

*இவ்வணிகலன்களைப் பெண்கள் தங்கள் உடலின் மார்பு(கழுத்து), இடை, கை போன்ற பகுதிகளில் அணிந்துள்ளனர். ‘திருந்து இழைத் தொய்யில் வன முலை’[3], ‘இழை அணி ஆகம் வடுக் கொள முயங்கி’[4], ‘அலர் முலை ஆயிழை நல்லாய்’[5] எனக் குறிப்பனகொண்டு சங்க காலப் பெண்கள் தங்கள் மார்புப் பகுதியில் தவழுமளவுக்கு அணிகலன்களைப் பூண்டிருந்ததை அறியமுடிகிறது.*

*மகளிர் சில அணிகலன்களைத் தங்கள் இடைப் பகுதியில் அணியும் வழக்கத்தைக் கொண்டிருந்ததை, ‘திருந்து இழை அல்குற்குப் பெரும் தழை உதவி’[6], ‘இழை அணி அல்குல் என் தோழியது கவினே’[7], ‘இழை அணிப் பொலிந்த ஏந்து கோட்டு அல்குல்’[8] என வருவன கொண்டு தெளியலாம்.*

*பெண்கள் தங்கள் கைகளில் அணிகலன்களை அணிந்ததை, ‘திருந்து இழை முன்கை’[9] என்று அகநானூறு குறிப்பிடுகிறது. இங்கு குறிப்பிடப்படும் இழை தொடி, வளையல் முதலிய அணிகலன்களைக் குறிப்பதாகக் கருதலாம்.*

*மகளிர் இத்தகைய இழைகளைப் புனைந்து தங்களை அழகுபடுத்திக் கொள்ளும் காரணத்தினாலேயே ‘ஆயிழை’[10], ‘சேயிழை’[11], ‘தெரியிழை’[12], ‘புனையிழை’[13], ‘அணியிழை’[14], ‘சுடரிழை’[15], ‘ஒள்ளிழை’[16], ‘திருந்திழை’[17] எனப் பெண்கள் புலவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளனர்.*

*இழை எனப்பட்ட இவ்வணிகலன்கள் அதன் தன்மைகளுக்கு ஏற்பப் புலவர்களால் பலவாறு அடைதந்து குறிப்பிடப்பட்டுள்ளன. அணிகலன்களின் ஒளிவிடும் தன்மையால், ‘அவிர் இழை’[18], ‘ஒள் இழை’[19] என்றும், அணிகலன்களின் அழகு காரணமாக, ‘அணி இழை’[20], ‘இலங்கு இழை’[21], ‘நேர் இழை’[22], ‘புனைஇழை’[23] என்றும், அணிகலன்களின் சிறப்புக் காரணமாக, ‘ஆய் இழை’[24],*

---

[1] கலி. 80:8-9
[2] அக. 122:19
[3] நற். 225:6-7
[4] நற். 229:7
[5] கலி. 60:15
[6] குறு. 214:4
[7] கலி. 50:24
[8] புற. 89:1
[9] அக. 351:13
[10] புற. 34:7, 138:8
[11] நற். 24:6
[12] அக. 316:8
[13] நற். 109:4, 252:12
[14] ஐங். 359:4
[15] கலி. 138:12
[16] கலி. 138:20
[17] பதி. 24:11
[18] நற். 221:9
[19] நற். 155:1
[20] அக. 172:16
[21] பரி. 8:59
[22] நற். 191:2
[23] ஐங். 467:1
[24] அக. 3:16

‘தெரி இழை’[1], ‘மாண் இழை’[2] என்றும், செய்நேர்த்தி காரணமாக, ‘திருந்து இழை’[3], ‘நுணங்கு இழை’[4], ‘மெல் இழை’[5] என்றும் குறிப்பிடப்படுவது நோக்கத்தக்கது.

இவ்வணிகலன்கள் நெருப்பிலே சுட்டு செய்யப்பட்டதை, ‘அழல் அவிர் வயங்கு இழை’[6] என்பதைக்கொண்டும், இவை பொன்னால் செய்யப்பட்டதை, ‘பொன் செய் புனை இழை’[7], ‘பசும்பொன் அவிர் இழை’[8] என்பனவற்றைக்கொண்டும் அறியமுடிகிறது.

கணவன் இறந்தால் மனைவியர் தாங்கள் அணிந்திருந்த அணிகலன்களை நீக்கிவிடும் வழக்கு அக்காலத்தில் இருந்ததைக் கரிகாற் பெருவளத்தான் இறந்தபோது அவனது உரிமை மகளிர் தங்கள் இழைகளைக் களைந்ததை, ‘மெல் இயல் மகளிரும் இழை களைந்தனரே’[9] என்ற புறநானூற்றுப் பாடலடி சுட்டுகிறது.

களவுக் காலத்தில் காதலனைப் பிரியும்போதும், திருமணத்திற்குப் பிறகு தலைவன் போர், தூது, பொருள்தேடல், பரத்தமை போன்றவற்றின் காரணமாகப் பிரியும்போதும் மகளிர்க்கு உளநிலையில் ஏற்படும் ஏக்கத்தால் தோன்றும் உடல் மெலிவை மகளிரின் இழை நெகிழ்வே அளவீடாய் நின்று உணர்த்துவதை, ‘திருந்து இழை நெகிழ்ந்தன தட மெல் தோளே’[10], ‘திருந்து இழை நெகிழ்ந்து பெருங் கவின் சாய’[11], ‘விளங்கு இழை நெகிழ விம்மி’[12] என்பன காட்டுகின்றன.

தேர்கள் இழை எனப்பட்ட அணிகளால் ஒப்பனை செய்யப்பெற்று விளங்கியதை, ‘இழை அணி நெடும் தேர்’[13], ‘இழை கிளர்நெடும் தேர்’[14], ‘மாண் இழை நெடுந் தேர்’[15] எனச் சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன.

யானைகள் அணிகலன்களால் ஒப்பனை செய்யப்பெற்றதை, ‘இழை அணி யானை’[16], ‘இழைப் பொலிந்த களிறு’[17] என்பன காட்டுகின்றன. இங்குக் குறிப்பிடப்பெறும் இழை, யானையின் நெற்றிப்பட்டம், பூண் முதலியன எனக் கருதலாம்.

#### 5.3.3.2. கலம் என்ற பெயரால் அறியப்படும் அணிகலன்கள்

சங்க இலக்கியத்தில் அணிகலன்களையும், பொற்கலங்களையும், மட்பாண்டங்களையும், மரக்கலங்களையும் குறிப்பிடுவனவாக, ‘கலம்’, ‘கலன்’ என்ற இரு சொற்களும் பயின்று வந்துள்ளன. தாழி, குழிசி, குடம், மண்டை, மடா, மிடா எனக் குறிப்பிடப்படும் பலவகையான பாண்டங்களும், தொடி, பூண், வளை, ஆரம் எனவரும் பல்வேறு அணிகலன்களும், கலம் என்ற பொதுச் சொல்லால் சுட்டப்படுகிறது.

##### 5.3.3.2.1. அணிகலன்

பேரரசர்கள் தங்கள் அடிபணிந்து வாழும் அரசர்களிடம் ஏராளமான அணிகலன்களையும், யானைகளையும் திறையாகப் பெற்றனர். இதனை, ‘விருந்தின் மன்னர் அருங் கலம் தெறுப்ப’[18], ‘நல் கலம் களிற்றொடு நண்ணார் ஏந்தி’[19], ‘பணி திறை தந்த பாடு சால் நல் கலம்’[20], ‘பெரும் களிற்று யானையொடு

[1] ஐங். 253:3
[2] அக. 176:16
[3] நற். 93:7
[4] ஐங். 174:2
[5] புற. 271:3
[6] கலி. 137:5
[7] பதி. 23:7
[8] ஐங். 74:2
[9] புற. 224:17
[10] அக. 206:16
[11] அக. 255:17
[12] நற். 208:1
[13] நற். 10:5
[14] நற். 394:4
[15] அக. 50:4
[16] அக. 208:7
[17] பதி. 22:18
[18] அக. 54:1
[19] அக. 124:1
[20] அக. 127:7

அரும் கலம் தராஅர்'[1], 'தாள் நிழல் வாழ்நர் நல் கலம் மிகுப்ப'[2], 'களிறொடு கலம் தந்து'[3] என வரும் அடிகள் காட்டுகின்றன.

பகை நாட்டின்மேல் போர் தொடுத்துச் சென்றவர்கள் அந்நாட்டிலிருந்து பல்வேறு வகையான அணிகலன்களைக் கவர்ந்தும் திறையாகப் பெற்றும் கொண்டுவந்ததை, 'நல் கலம் தரூஉம் மண் படு மார்ப'[4], 'வென்று கலம் தரீஇயர் வேண்டு புலத்து இறுத்து'[5], 'நாடு கெட எருக்கி நல் கலம் தரூஉம்'[6], 'ஒன்னார் வாட அரும் கலம் தந்து'[7], 'அவ் எயில் கொண்ட செய்வுறு நன்கலம்'[8], 'நாடு படு நல் கலம் தரீஇயர்'[9], 'பலர் புறங்கண்டு அவர் அரும் கலம் தரீஇ'[10] என வருவன உணர்த்துகின்றன.

மன்னர் திறையாகப் பெற்ற அணிகலன்களையும் பிற நாட்டினர் மேல் போரிட்டுக் கொண்டுவந்த அணிகலன்களையும் தம்மை நாடிவரும் பாணர், பாடினியர், விறலியர், கூத்தர் போன்ற பரிசிலர்க்கும், அந்தணர்க்கும் வழங்கியதை, 'பரிசிலர்க்கு அரும் கலம் நல்கவும் குரிசில்'[11], 'நசையின் வாழ்நர்க்கு நல் கலம் சுரக்கும்'[12], 'பாணர் ஆர்ப்பப் பல கலம் உதவி'[13], 'கலம் பெறு கண்ணுளர்'[14], 'கலம் பெறு விறலி ஆடும் இவ் ஊரே'[15], 'சென்மோ பாடினி நல் கலம் பெறுகுவை'[16], 'அந்தணர் அரும் கலம் ஏற்ப'[17] என வருவன சுட்டுகின்றன. இத்தகைய அரிய அணிகலன்கள் பொன், பவளம், முத்து, மணி முதலியவற்றைக் கோவைப்படுத்திச் செய்யப்பெற்றதை,

> "பொன்னும், துகிரும், முத்தும், மன்னிய
> மாமலை பயந்த காமரு மணியும்,
> இடைபடச் சேய ஆயினும், தொடை புணர்ந்து,
> அரு விலை நன் கலம் அமைக்குங்காலை"[18]

எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. தம்மனைவியைப் பிரிந்து இத்தகைய அணிகன்களை ஈட்டி வருவதற்காகவே ஆடவர்கள் வேற்றுதேயங்களுக்குச் சென்றதை அகநானூறும்,[19] இத்தகைய அரிய அணிகலன்களைக் கொள்ளையிடுவதற்காகக் கள்வர்கள் சுற்றித்திரிந்ததை, 'கலன் நசைஇக் கொட்கும் கண்மாறு ஆடவர்'[20] என மதுரைக்காஞ்சியும் குறிப்பிடுகின்றன. மேலும் இத்தகைய அணிகலன்களைக் கொள்ளை அடிப்பதற்காகவே பாலைநில ஆறலை கள்வர்கள் வழிச்செல்வோரைக் கொன்றனர்.[21] என்பதும் கவனிக்கத்தக்கது.

#### 5.3.3.3. பொன்

சங்க காலத்தில் பயன்படுத்தப்பட்ட உலோகங்களில் குறிப்பிடத்தக்க மிதிப்புவாய்ந்த உலோகம் பொன். இதனைப் "பொலம்" என்ற பெயராலும் அறியலாம். இப்பொன்னைக்கொண்டு அணிகலன்கள், பாத்திரங்கள் போன்றன செய்யப்பட்டன.

---

[1] பதி. 71:21
[2] புற. 161:30
[3] பதி. 90:7
[4] பதி. 21:19
[5] பதி. 53:1
[6] பதி. 83:7
[7] புற. 198:15
[8] புற. 6:15
[9] ஐங். 463:4
[10] மலை. 71
[11] புற. 14:10
[12] அக. 143:11
[13] அக. 331:11
[14] மலை. 50
[15] நற். 328:11
[16] பதி. 87:1
[17] பதி. 64:5
[18] புற. 218:1-4
[19] அக. 3:12, 93:6
[20] மது. 641-642
[21] அக. 375:3-4

தொடி, வளை, சிலம்பு, காசு, பூண், தேர், பொற்றாமரை என பல பொருட்கள் பொன்னால் செய்யப்பட்டுள்ளதை, “பொலம் காசு நிரைத்த கோடு ஏந்து அல்குல்”[1], “பொன்செய் ஓடை”[2], “பொன்செய் வள்ளம்”[3], “பொன்செய் பாவை”[4], “பொன்புனை திகிரி”[5], “பொலம்தேர்”[6], “செம்பொன் கழல் தொடி”[7], “பொன்தொடி”[8], “பொலம் குழை”[9], “பொலம் தாமரைப் பூ”[10], “பொலம் செய் கிண்கிணி”[11],”பொலம் கழல் நோன் தாள்”[12], “பொலம்செய் மழூ”[13], “பொலம்செய் கழங்கு”[14], “பொலம்புனை வினை மலர்”[15],”புனைவினைப் பொலம்கோதை”[16], “பொலம் புனை இதழ் அணி”[17], “பொலம் புனை அவிர் இழை”[18], “பொலம் புனை புகழ் நேமி”[19], “விரிகதிர்ப் பொன் கலம்”[20] என வரும் அடிகள் குறிப்பிடுகின்றன.

பொன்னாலான அணிகலன்களை வேந்தர் முதலிய பலரும் அணிந்திருந்ததை, “பொலம் பூண் வேந்தர்”[21],”பொலம் பூண் எழினி”[22],”பொலம் பூண் நன்னன்”[23] ,”பொலம் பூண் கிள்ளி”[24],”பொலம் பூண் திரையன்”[25],”பொலம் பூண் எவ்வி”[26], “பொலம் பூண் நன்னன்”[27],”பொலம் பூண் வளவன்”[28], “பொலம் பூண் ஐவர்”[29], “பொலம் பூண் சேஎய்”[30], “பொலம் தார்க் குட்டுவ”[31], “பொலம் தார் அஞ்சி”[32] என்பன காட்டுகின்றன.

### 5.3.4. விலங்குகளுக்கானவை

#### 5.3.4.1. குதிரை அணிகள்

குதிரைகளுக்கு உளை, கண்டிகை, கவரி, சாமரை, வல்லிகை, உத்தி என்ற பெயர்களால் பல்வேறு அணிகலன்கள் பூட்டி ஒப்பனை செய்துள்ளனர்.

##### 5.3.4.1.1. உளை

“உளையாவது குதிரையின் தலையில் அணியும் கவரி போலும் அணிவகை. அது குடுமி போன்றது. ஓடும்பொழுது ஆடி அழகு சேர்ப்பது. அது தலையாட்டம் என்றும் சொல்லப்படும். பழையவுரையாசிரியர் வெண்கவரி என்கிறார். நெற்றியில் தாழ்ந்துகிடந்து அசைவது என்பாரும் உளர்”[33] என இவ்வணிகலன் குறித்து உரையாசிரியர்கள் விளக்குகின்றனர்.

குதிரைகளுக்கு இவ்வணி அணிவிக்கப்பெற்றதை, ‘விரிஉளை நல்மா’[34], ‘வால் உளைக் கடும்பரிப் புரவி’[35], ‘ஆடுஇயல் உளை அவிர் கலிமா’[36] எனக் குறிப்பிடப்படுவனவற்றைக்கொண்டு அறிந்துகொள்ளலாம்.

##### 5.3.4.1.2. கண்டிகை

இவ்வணி இனம் ஒத்த மணிகளால் மூவடமாய் செய்யப்பெற்று ஒளி வீசும் தன்மையுடன் விளங்கியதை,

---

[1] அக. 269:15
[2] நற். 296:3; புற. 326:15
[3] நற். 297:1
[4] குறு. 292:4
[5] அக. 69:11
[6] ஐங். 200:2
[7] நற். 212:8
[8] நற். 258:5; அக. 356:6
[9] திரு. 86
[10] மது. 103; புற. 361:12
[11] குறு. 148:2
[12] பதி. 31:31; புற. 3:15
[13] கலி. 86:3
[14] புற. 36:4
[15] பரி. 1:15
[16] பரி.11:65
[17] பரி.13:35
[18] பரி. 16:6; திரு. 18
[19] கலி. 104:9
[20] நற். 110:2
[21] பதி. 64:2
[22] அக. 36:16
[23] அக. 199:20
[24] அக. 205:10
[25] அக. 340:6
[26] அக. 366:12
[27] அக. 396:2
[28] புற. 397:22
[29] மது. 775
[30] திரு. 271
[31] பதி. 23:10
[32] புற. 91:4
[33] ஐங்குறுநூறு மூலமும் உரையும் (புத்தகம் – 1), என்.சி.பி.எச்.,ப. 32
[34] ஐங். 488:3
[35] பதி. 41:25-26
[36] பதி. 42:15

'நேர் மணி நேர் முக்காழ்ப் பல்பல கண்டிகை'[1] எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது.

### *5.3.4.1.3. கவரி, சாமரை*

குதிரையை ஒப்பனை செய்ய அவற்றின் தலையில் 'கவரி' சூட்டப்பெற்றதை, 'ஆயமயிர்க் கவரிப் பாய்மா'[2] எனப் பதிற்றுப்பத்து சுட்டுகிறது. இக்குதிரைகளுக்குச் சூட்டும் கவரி விளைந்த நெல்லின் இளங்கதிர்களைப் போலத் தோற்றம் கொண்டிருந்ததை, 'புரவிச் சூட்டும் மூட்டுறு கவரி தூக்கி யன்ன செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்'[3] என அகநானூறு குறிப்பிடுகிறது. யானையினை ஒப்பனை செய்வதற்காகவும் அவற்றின் செவிகளில் கவரியினை அணிவித்ததை, "நின யானைச் சென்னி நிறம் குங்குமத்தால் புனையா, பூ நீர் ஊட்டி, புனை கவரி சார்த்தா"[4] எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது. குதிரைக்கு அணிவிக்கப்பட்ட அணிகளுள் ஒன்று சாமரை[5]. இதனைக் கன்ன சாமரை என்பர்.

### *5.3.4.1.4. வல்லிகை*

வல்லிகை என்பது குதிரையின் கழுத்தணியினைக் குறிக்கும். இவ்வல்லிகை என்னும் அணியினை நீலமணியினைத் தோலிலே வைத்துத் தைத்துக் கட்டுவடமாக குதிரையின் கழுத்தில் அணிவித்ததை, 'நீலமணிக் கடிகை வல்லிகை'[6] எனக் கலித்தொகை சுட்டுகிறது.

### *5.3.4.1.5. உத்தி*

உத்தி என்னும் பெயர்கொண்ட அணிகலனும் குதிரைக்கு அணிவிக்கப் பெற்றிருந்ததை அகநானூறு[7] குறிப்பிடுகிறது.

### *5.3.4.2. யானைகளுக்கானவை*

### *5.3.4.2.1. ஓடை*

யானைக்கு அணிவிக்கப்பெற்ற நெற்றிப்பட்டம் (முகபடாம்) 'ஓடை'[8] எனச் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது பொன்னால் செய்யப்பெற்று யானையின் நெற்றியில் அணிவிக்கப்பெற்றதை, 'பொன் செய் ஓடை'[9], 'பொலம் புனை ஓடை அண்ணல் யானை'[10] எனச் சுட்டக் காணலாம். பகைவர் யானையின் நெற்றிப்பட்டத்து பொன்னைக்கொண்டு பாணர்க்குச் சூட்டும் பொற்றாமரைப் பூக்கள் செய்யப்பட்டன.[11] இதனைச் 'சூழி'[12] என்ற பெயரால் பரிபாடல் சுட்டுகிறது.

### *5.3.4.2.2. தொடி, பூண்*

போரில் பயன்படுத்தப்பட்ட யானைகள் பகை நாட்டு மதில் கதவினைத் தம் தந்தங்களால் குத்தும்போது அவை சிதையாமலிருக்கும் பொருட்டு அவற்றின் கொம்புகளில் தொடி எனப்பட்ட பூண்கள் மாட்டப்பட்டிருந்தன. இதனை, "ஒளிறு முகத்து ஏந்திய வீங்குதொடி மருப்பின் களிறும் கடிமரம் சேரா"[13], "தொடி சிதை மருப்பு"[14], "நீள் மதில் அரணம் பாய்ந்தெனத் தொடி பிளந்து"[15], "தொடியுடைத்

---

[1] கலி. 96:14
[2] பதி. 90:36
[3] அக. 156:1-3
[4] பரி. 19:85-86
[5] கலி. 96:11
[6] கலி. 96:10
[7] அக. 400:5
[8] பதி. 11:17, 34:6
[9] நற். 296:3
[10] புற. 287:5
[11] புற. 126:1-4
[12] பரி. 21:14
[13] புற. 336:3-4
[14] அக. 99:12, 164:12
[15] ஐங். 444:2

தடமருப்பு”[1], “குழூஉக் களிற்றுக் குறும்பு உடைத்தலின், பரூஉப் பிணிய தொடி கழிந்தனவே”[2], “கடி மதில் கதவம் பாய்தலின் தொடி பிளந்து”[3] என்பன காட்டுகின்றன.

யானையின் கோடுகளுக்கு இப்பூணினைச் சமட்டியால் அடித்துச் செறிக்கும் வேலையைக் கொல்லன் மேற்கொண்டிருந்தனர்.[4] இப்பூண்கள்(தொடி) இரும்பால் செய்யப்பட்டவை என்பதை, ‘பெருங் கதவு பொருத யானை மருப்பின், இரும்பு செய் தொடியின்’[5] என்ற அகநானூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

### *5.4. இசைக் கருவிகள்*

#### *5.4.1.1. யாழ்*

பண்டைக் காலத்தில் புழக்கத்தில் இருந்த நரம்பு இசைக் கருவி யாழ். சங்கப் பாக்களில் ஏழு நரம்புகளைக்கொண்ட சீறியாழ் பற்றி “ஏழ் புணர் சிறப்பின் இன் தொடைச் சீறியாழ்”[6] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. ஏழு நரம்புகளைக் கட்டி யாழ் வாசித்ததை, “ஏழும் தம் பயன் கெட, இடை நின்ற நரம்பு அறூஉம் யாழினும்”[7] என்றும், ஏழு நரம்பாற் கூட்டிய யாழின் இன்னிசையை, “ஏழ் புணர் இன் இசை முரல்பவர்க்கு அல்லதை, யாழுளே பிறப்பினும், யாழ்க்கு அவைதாம் என் செய்யும்?”[8] என்றும் வரும் கலித்தொகை அடிகளும் குறிப்பிடுகின்றன.

பிற்காலத்தில் யாழ் அதிலுள்ள நரம்புகளின் எண்ணிக்கைக்கும் வடிவத்திற்கும் ஏற்ப வில் யாழ், செங்கோட்டியாழ், பேரி யாழ், சகோட யாழ், மகர யாழ் என பலவகையினதாக இருந்ததை அறியமுடிகிறது. யாழின் அமைப்பு பத்தல், வறுவாய், யாப்பு, பச்சை, போர்வை, துரப்பமை ஆணி, உந்து, நரம்பு, கவைக்கடை, மருப்பு, துவவு எனப் பல்வேறு உறுப்புக்களைக்கொண்டு விளங்கியதை பெரும்பாணாற்றுப்படையின் 1 முதல் 15 வரையிலான அடிகளும், பொருநர் ஆற்றுப்படையின் 4 முதல் 22 வரையிலான அடிகளிலும் மிக நுட்பமாக விவரிக்கப்பட்டுள்ளது.

பொன்னைக்கொண்டு புனைந்தாற் போன்ற முறுக்கு அடங்கின நரம்பைக் கொண்டு இனிய குரல் எழுப்புவதாக சிறிய யாழ் காணப்பட்டதை, “பொன் புரை நரம்பின் இன் குரல் சீறியாழ்”[9], “பொன்வார்ந் தன்ன புரிஅடங்கு நரம்பின் இன்குரல் சீறியாழ்”[10] என வரும் அடிகளும், அவை விரலால் தடவி மீட்டப்பட்டதை, “விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்”[11] எனவரும் அடிகளும் உணர்த்தும்.

தங்கள் கலைத்திறனை வெளிப்படுத்திப் பாடிப் பொருள் பெற்று வாழும் வாழ்க்கையை உடையவர்களான பாணர் குழுவினர் அவர்கள் புரவலரை நாடிச் செல்லும்போது பல்வேறு இசைக் கருவிகளை உடன்கொண்டு சென்றனர். அவற்றுள் தலையானதாக யாழ் இசைக்கருவி இருந்தது. பாணர் யாழ் வாசிப்பதில் சிறந்து விளங்கியதை, “அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப் பாணர் ஆர்ப்ப”[12], “கை வல் சீறியாழ்ப் பாண!”[13] எனவரும் அடிகள் புலப்படுத்தும்.

[1] அக. 159:17; பதி. 36:6
[2] புற. 97:9-10
[3] அக. 24:11
[4] பெரு. 436-437
[5] அக. 26:6-7
[6] மது. 559
[7] கலி. 8:10-11
[8] கலி. 9:18-19
[9] நற். 380:7
[10] சிறு. 34-35
[11] நற். 335:9
[12] அக. 331:10-11
[13] ஐங். 472:1

யாழின் இசை வண்டு எழுப்பும் ஒலி, "யாழிசை இனவண்டு ஆர்ப்ப"[1], "சுரும்பு யாழ்போல இசைப்பவும்"[2], "யாழ்போல வண்டு ஆர்க்கும்"[3] எனப் பலவிடங்களிலும் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. இத்தகைய யாழின் இசை பிரிந்தார்க்குத் துன்பம் தருவதாக இருந்தது.[4] பாகனின் அங்குசத்துக்கு அடங்காத யானையும் யாழ்இசை கேட்டு அடங்கும்,[5] யாழ்ப்பயிற்சி மனத்தைப் பண்படுத்தி இனிமை உடையதாக்கும்.[6] ஆறலை கள்வரையும் தம் படைக்கலனைக் கைவிடச் செய்து மனத்தை மாற்றும் தன்மையுடையது பாலையாழ்.[7] எனவரும் செய்திகள் யாழிசையின் சிறப்பைப் புலப்படுத்துகின்றன.

வருத்துகின்ற தெய்வத்தின் சினம் தணிய அத்தெய்வத்தின் முன்பு பாணர் சிறிய யாழின் நரம்பை இசைத்தனர். இதனை, "தெறல் அருங் கடவுள் முன்னர், சீறியாழ் நரம்பு இசைத்தன்ன"[8] என நற்றிணை சுட்டுகிறது. பாணர்கள் வளமனைகளிலும்,[9] பரத்தையர் இல்லங்களிலும்[10] யாழ் மீட்டிப் பாடினர்.

போரில் புண்பட்ட வீரன் ஒருவனைப் பேய்கள் தொடாதவாறு காப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட சடங்கில் யாழிசையோடு கூடிய பல இசைக்கருவிகள் முழக்கப்பட்டது.[11] வீரன் ஒருவனின் கைவேலுக்கு நீராட்டி விழா எடுக்கும் காலத்து மாலை சூட்டப்பெற்று யாழிசை ஒலிக்க வீதிகளில் எடுத்துவரப்பெற்றது.[12] எனவரும் புறநானூற்றுச் செய்திகளும், பரங்குன்றில் முருகனை வழிபடச் செல்லுவோர் யாழை மீட்டிச் சென்றனர்.[13] என்ற பரிபாடல் குறிப்பும், சூல்கொண்ட மகளிர், தேவராட்டியுடன் தெய்வங்களுக்குப் படையல் தந்து வழிபடும் வழிபாட்டில், யாழில் செவ்வழி என்னும் பண்ணைப் பாடுவர்.[14] முருகனுக்கும் பிற தெய்வங்களுக்கும் எடுக்கக்கூடிய விழாக்களில் குழல், யாழ், முழவு, முரசு முதலியன முழங்க வழிபாடு செய்யப்பட்டது.[15] எனப் பத்துப்பாட்டு நூல்களில் குறிப்பிடப்படும் செய்திகளும் சடங்குகளிலும் தெய்வ வழிபாட்டிலும் யாழ் பெற்றிருந்த முக்கியத்துவத்தைக் காட்டுகின்றன.

**5.4.1.2. பிரமம்**

பிரமம் என்னும் சொல் குறிக்கும் பல்வேறு பொருட்களுள்[16] வீணை என்பதும் ஒன்று. இதனைத் தெய்வப் பிரமம் எனப் பரிபாடல்[17] குறிப்பிடுகிறது.

**5.4.1.3. குழல்**

சங்க இலக்கியம் காட்டும் சமூகத்தில் இசைக்கலை நன்கு வளர்ச்சி பெற்றிருந்தது. ஆடல் பாடல் போன்ற கலைகளும் இசையோடு இயைந்ததாகவே இருந்தன. அத்தகைய இசைக் கருவிகளுள் மிகவும் தொன்மை வாய்ந்ததாக விளங்குவது காற்று இசைக் கருவியான குழல். இக்குழலினை ஆனிரை மேய்க்கும் கோவலர்கள் மிகுதியும் பயன்படுத்தினர். இக்குழல்கள் மூங்கில்களை நெருப்பினால் சுட்டுத் துளையிட்டு உருவாக்கப்பட்டதைப் பெரும்பாணாற்றுப்படை,

"ஞெலிகோல் கொண்ட பெரு விறல் ஞெகிழிச்

[1] முல். 8
[2] கலி. 34:16
[3] கலி. 32:9
[4] அக. 214; நற். 335:9-10
[5] கலி. 2:26-27
[6] திரு. 141
[7] பொரு. 21-22
[8] நற். 189:3-4
[9] அக. 14
[10] அக. 346:13-14; கலி. 70:21-23
[11] புற. 281:2
[12] புற. 332
[13] பரி. 19:42
[14] மது. 605
[15] பட். 156
[16] http://agarathi.com/word/பிரமம்
[17] பரி. 19:40

செந் தீத் தோட்ட கருந் துளைக் குழலின்''[1]

எனக் குறிப்பிடுகிறது. எனவே இது 'புல்லாங்குழல்', 'வேய்ங்குழல்' என்று குறிப்பிடப்படுகிறது. வற்றலாகிவிட்ட காய்ந்த கொன்றைப் பழங்களைக் கொண்டும் புல்லாங்குழல் செய்யப்பட்டதை, ''கோல்கைக் கோவலர் கொன்றைஅம் குழலர் பின்றைத் தூங்க''[2], ''ஒழுகிய கொன்றைத் தீங்குழல் முரற்சியர்''[3] எனவரும் அடிகள் உணர்த்துகின்றன.

குழல் தனியே வாசிக்கப்பட்டதோடு அமையாது பிற இசைக் கருவிகளோடு இயைந்தும் வாசிக்கப்பட்டதை, ''தட்டைத் தண்ணுமைப் பின்னர் இயவர் தீங்குழல் ஆம்பலின் இனிய இமிரும்''[4], ''குழல் அளந்து நிற்ப; முழவு எழுந்து ஆர்ப்ப;''[5] எனவரும் அடிகள் காட்டுகின்றன.[6]

மாலையில் கோவலர் ஊதும் குழலின் ஓசை காதர்களுக்கு மிகுந்த துன்பம் தருவதாக இருந்தது.[7] ஆயர் ஊதும் குழலோசை இளம்பெண்களுக்குக் கணவனைத் தரும் நன்னிமித்தமாக அமைவதைக் கலித்தொகை குறிப்பிடுகிறது.[8] வெறியாட்டுச் சடங்கின்போது வேலன் புல்லாங்குழல் வாசித்ததைக் குறித்துத் திருமுருகாற்றுப்படை, ''குழலன், கோட்டன், குறும்பல் லியத்தன்''[9] எனக் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது.

#### 5.4.1.3.1. ஆம்பல்

அகராதிகள் ஆம்பல்[10] என்ற சொல்லிற்கு மூங்கில்; ஓரிசைக்குழல்; ஊதிடுகொம்பு; பண்வகை என்றும், ஆம்பற்குழல்[11] என்ற சொல்லிற்கு குமுதவடிவாக அணைசுபண்ணிச் செறித்த ஓர் இசைக்கருவி என்றும் பொருளுரைக்கின்றன. காதலர் தம் குறியிடம் சுட்ட ஆம்பல் குழல் ஊதினர்.[12] மேய்ச்சல் தொழில் செய்த இடையர்கள், ஆம்பல் என்னும் பண்ணினைத் தம் குழலில் அமைத்துத் தெளிந்த ஓசையை எழுப்பினர்.[13] ஆம்பல் குழல் தனித்து இயக்கப்படுவது மட்டுமின்றி பிற இசைக் கருவிகளுடன் இயைத்தும் ஊதப்பெற்றது.[14] போரில் புண்பட்ட வீரனைப் பேய்கள் தொடாதவாறு காக்க வெண் சிறு கடுகைத் தூவி ஆம்பல் குழல் ஊதும் வழக்கத்தைப் புறநானூறு குறிப்பிடுகிறது.[15]

#### 5.4.1.4. தூம்பு

தூம்பு என்பது ஒரு காற்று இசைக் கருவி, இது மூங்கிலின் கணுக்களை அறுத்துச் செய்யப்படுவதை, 'கண் அறுத்து இயற்றிய தூம்பு'[16] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. அளவில் சிறியது குறுந்தூம்பு என்றும், பெரியது நெடுஞ்தூம்பு என்றும் பழங்காலத்தில் வழக்கில் இருந்துள்ளது. இது வங்கியம் எனவும் குறிப்பிடப்படும்.

'தொகுசொற் கோடியர் தூம்பு'[17] என அகநானூறு, இக்கருவியினைக் கூத்தர்கள் பயன்படுத்தியதாகத் தெரிவிக்கிறது. இது பிற இசைக்கருவிகளோடு

---

[1] பெரு. 178-179
[2] அக. 54:11
[3] கலி. 106:3
[4] ஐங். 215:3-4
[5] பரி. 7-79
[6] பட். 156-158
[7] அக. 74:17; ஐங். 306:4; கலி. 129:16, 130:15, 143:37
[8] கலி. 101:35
[9] திரு. 209
[10] http://agarathi.com/word/ஆம்பல்
[11] http://agarathi.com/word/ஆம்பற்குழல்
[12] முல். 108:62
[13] குறி. 222
[14] ஐங். 215:4; நற். 113:11
[15] புற. 281
[16] பதி. 41:4
[17] அக. 111:9

சேர்ந்து இசைக்கப்படுவதை, 'இயம்புணர் தூம்பு'[1] எனச் சுட்டப்பட்டுள்ளது. இது யானை துதிக்கையை உயர்த்திப் பிளிறினாற் போன்ற வடிவுடையதை, 'கண் விடு தூம்பின் களிற்று உயிர் தொடுமின்'[2], 'கண் இடை விடுத்த களிற்று உயிர்த் தூம்பின்'[3] எனக் குறிப்பனகொண்டு அறியமுடிகிறது.

இத்தூம்பிலிருந்து வரும் ஒலி, கலைமான் கூட்டம் தாழ ஒலிக்கும் இசைபோன்றிருந்ததை, 'கணக்கலை இகுக்கும் கடுங்குரற் தூம்பு'[4] என்றும், யானை பிளிறினாற் போன்று இருந்ததை, 'ஓய்களிறு எடுத்த நோயுடை நெடுங்கை தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும்'[5] என்றும் குறிப்பிடும் அகநானூற்றுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

### 5.4.1.5. ஊது கொம்பு

சங்க இலக்கியத்தில் 'கோடு' என்னும் சொல் ஊது கொம்பினைக் குறிப்பிடுகிறது. இதனை மேய்த்தல் தொழிலை மேற்கொண்ட ஆயர்களும், வேட்டைத் தொழிலை மேற்கொண்ட வேட்டுவர்களும் பயன்படுத்தியுள்ளனர்.

பாலை நிலத்திற் சென்று புகுந்த பசுக்கூட்டத்தை அவ்விடத்தினின்றும் விலக்கிக் கொன்றை மரத்தின் நிழலில் தங்கச் செய்வதற்காக ஆயர்கள் ஊதுகொம்பினை ஊதியதை, "பாடுஇன் தெண்மணி, பயம்கெழு பெருநிரை வாடுபுலம் புக்கென, கோடுதுவைத்து அகற்றி"[6] எனக் குறிப்பிடுவதைக்கொண்டு ஆயர்கள் மேய்ச்சல் தொழிலில் ஊதுகொம்பைப் பயன்படுத்தியதை அறியலாம்.

வேடர்கள் காட்டில் வேட்டைக்குச் செல்லும்போது வேட்டையில் பிரிந்து சென்ற வேட்டுவர்களையும், நாய்களையும் அழைப்பதற்கு ஊதுகொம்பினை ஊதி அழைப்பொலி செய்ததை, "வேட்டொடு வேய்பயில் அழுவத்துப் பிரிந்தநின் நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே!"[7] என அகநானூறும்,

"கோடு துவையாக் கோள் வாய் நாயொடு
காடு தேர்ந்து அசைஇய வயமான் வேட்டு
வயவர் மகளிர்"[8]

என நற்றிணையும் சுட்டுவதைக் கொண்டு வேட்டைத் தொழிலிலும் ஊதுகொம்பு பயன்பட்டதை அறியமுடிகிறது.

### 5.4.1.6. வயிர்

வயிர் என்பது ஊதுகொம்பு என்னும் இசைக் கருவியைக் குறிக்கும். அரசர்கள் பகைவரை வென்று வெற்றி பெற்றுத் தன் படையோடு திரும்புப்போது வெற்றிக்கொடி உயர்த்தி, ஊதுகொம்பு, சங்கு முதலியவை முழங்க வருவர்.[9]

திருச்சீர் அலைவாயிலில் முருகன் எழுந்தருளும்போது சங்கு, முரசு போன்ற இசைக் கருவிகளோடு சேர்த்து முழக்கப்பட்டது[10] கொண்டு இது வழிபாட்டின்போது முழக்கப்பட்டதை அறியலாம்.

---

[1] ஐங். 377:2
[2] புற. 152:15
[3] மலை. 6
[4] அக. 82:5
[5] அக. 111:8-9
[6] அக. 399:8-9
[7] அக. 318:13-15
[8] நற். 276:1-3
[9] முல். 89-92, மது. 181-185, பதி. 65:5-6
[10] திரு. 119-125

தைத்திங்கள் நாட்களில் நீராடி வண்டற் பாவையை நீர் உண்ணும் துறையில் கொண்டுவந்து வைத்துக் குரவைக் கூத்தாடும்போது ஊதுகொம்பினை முழங்கினர்.[1]

இவ்வூதுகொம்பின் ஒலி மயில்கள் தம் இனத்தை அழைக்கும் ஓசையைப்போன்றும்,[2] அன்றில் பறவைகள் தம் பேடுகளை அழைக்கும் ஓசையைப் போன்றும்,[3] கிளிகள் தங்கள் இனங்களை அழைப்பதைப்போன்றும்,[4] நாரை ஒலிப்பதைப் போன்றும்[5] இருந்தது. இதனை இசைப்பவர் வயிரியர் எனப்பட்டனர்.

### 5.4.1.7. சங்கு

சங்க இலக்கியத்தில் கோடு என்னும் சொல் சங்கு என்ற பொருளில் பயின்றுவந்துள்ளது. இச்சங்குகள் முரசு முதலிய இசைக்கருவிகளோடு சேர்ந்து ஊதப்பெற்றதை, 'முரசு முதல் கொளீஇய மாலை விளக்கின் வெண்கோடு இயம்ப'[6], 'கோடு முழங்கு இமிழ் இசை எடுப்பும்'[7] என்பன காட்டுகின்றன.

### 5.4.1.8. முரசு

சங்க காலத்தில் காணப்பட்ட பல்வேறு வகையான தோலிசைக் கருவிகளுள் ஒன்று முரசு. இவை போரின் பொருட்டு வீரர்களை ஆயத்தப்படுத்தவும், போரின் நடுவே வீரர்களுக்கு எழுச்சியூட்டவும், போரில் வென்று வெற்றிக்களிப்பில் ஈடுபட்டபோதும், அரண்மனை முற்றங்களிலும், வழிபாட்டிலும், மணவிழாக்களிலும்[8] முரசுகள் முழக்கப்பட்டன.

முரசு அரசச் சின்னங்களுள் ஒன்றாகவும் விளங்கியது. இதனை, 'முரசு கெழு தாயத்து அரசு'[9], 'முரசு கெழு வேந்தர்'[10] என்பனவும்,

> "வரைய சாந்தமும், திரைய முத்தமும்,
> இமிழ் குரல் முரசம் மூன்றுடன் ஆளும்
> தமிழ் கெழு கூடல் தண் கோல் வேந்தே"[11]

எனச் சுட்டுவதும் கொண்டு அறியமுடிகிறது. இத்தகைய முரசினைப் போரில் கைக் கொள்ளுதல் போர் மரபாகும். இதனை, 'அரைசு பட அமர் உழக்கி உரை செல முரசு வெளவி'[12], 'பிணியுறு முரசம் கொண்ட காலை'[13] எனப் புறநானூறும், 'அரசுபட அமர் உழக்கி, முரசு கொண்டு களம் வேட்ட'[14] என மதுரைக்காஞ்சியும், சேரன் மோகூர் மன்னனின் முரசினைக் கைக்கொண்டதை, 'மோகூர் மன்னன் முரசம் கொண்டு'[15] எனப் பதிற்றுப்பத்தும் பிறவும்[16] குறிப்பிடுவனகொண்டு அறிந்துகொள்ளலாம். இத்தகைய முரசின் கண் கிழிவது தீச்சகுனமாகக் கருதப்பட்டது.[17]

முரசின் தோலைக் கிழித்தல் அவமதிப்பாகக் கருதப்பட்டது. சேரன் தனக்கு அடிபணிந்து நடக்காதவனுடைய முரசின் தோலைக் கிழித்து அவனைத் தோற்கடித்ததை, 'கோலின் வாரா வெல்போர் வேந்தர் முரசு கண் போழ்ந்து'[18] எனச் சுட்டுவதுகொண்டு அறியலாம்.

---

[1] அக. 269:14-20
[2] நெடு. 98-99; அக. 177:10-11, 378
[3] குறி. 219-220
[4] நற். 304:3
[5] அக. 40:14-15
[6] நற். 58:6-7
[7] பதி. 50:25
[8] பரி. 8:30
[9] புற. 73:3
[10] புற. 75:12
[11] புற. 58:11-13
[12] புற. 26:6-7
[13] புற. 25:7
[14] மது. 128-129
[15] பதி. 44:14
[16] அக. 36:21-22; புற. 72:8-9, 179:4-5
[17] புற. 229
[18] பதி. 79:11-12

முரசு போர்களில் பயன்படுத்தப்பட்டதை, ‘முரசு உடைப் பெரும் சமத்து’[1], ‘முரசு உடைப் பெரும் சமம் ததைய ஆர்ப்பு எழ’[2], ‘செரு வேட்டு இமிழ் குரல் முரசு’[3], ‘திண் பிணி முரசம் இடைப் புலத்து இரங்க’[4] என்பனவும், போர் வெற்றியினைக் கொண்டாட முரசு முழக்கப்பெற்றதை, ‘சீர் பெறு கலி மகிழ் இயம்பும் முரசின்’[5], ‘வென்று எறி முரசின் விறல் போர்ச் சோழர்’[6], ‘வென்று எறி முரசின் வேந்தர்’[7] என்பனவும் காட்டுகின்றன.

முரசு அரசனின் மாளிகை முற்றத்தில் ஒலிக்கப்பெற்றதை, ‘முனிவு இல் முற்றத்து இனிது முரசு இயம்ப’[8], ‘நாள் முரசு இரங்கும் இடன் உடை வரைப்பு’[9], ‘முரசு எழுந்து இரங்கும் முற்றம்’[10] எனக் குறிப்பிடுவனவற்றைக்கொண்டு அறியலாம்.

போரில் முழக்கப்படும் முரசு வெற்றியைத் தேடித்தரும் என நம்பப்பட்டது. இதனை, ‘விறல் முரசம்’[11], ‘வலம் படு முரசம்’[12], ‘வலன் இரங்கு முரசின் தென்னவர்’[13], ‘வலம்படு முரசில் சேரலாதன்’[14], ‘வலன் இரங்கு முரசின் வாய் வாள் வளவன்’[15], ‘வலம்படு முரசின் வெல்போர் வேந்தன்’[16] என்றெல்லாம் குறிப்பிடப்படுவனவற்றைக் கொண்டு அறியமுடிகிறது. இத்தகைய முரசுகளுக்குத் தினையினை இரத்தத்தோடு கலந்து தூவி குருதிப் பலியிட்டு நீராட்டப்பெற்றதை,

> ‘உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
> மண்ணுறு முரசம்’[17]

எனப் பதிற்றுப்பத்து சுட்டுவதைக்கொண்டும், ‘குருதிப் பலிய முரசு முழக்கு ஆக’[18], ‘பலி பெறு முரசம் பாசறைச் சிலைப்ப’[19] எனப் புறநானூறு சுட்டுவதுகொண்டும் அறியமுடிகிறது.

படையின் உறுப்பாக முரசு விளங்கியதை, ‘முரசு முழங்கு தானை’[20], ‘கடல் போல் தானைக் கடும் குரல் முரசம்’[21], ‘முரசு முழங்கு தானை மூவரும் கூடி’[22], ‘முரசு முழங்கு தானை நும் அரசும் ஓம்புமின்’[23] என்பனவும், ‘இரை முரசு ஆர்க்கும் உரை சால் பாசறை’[24], ‘பாசறைப் படுகண் முரசம் காலை இயம்ப’[25] என்பனவும் சுட்டக் காணலாம்.

முரசுகள் பகை மன்னரின் காவல் மரங்களை வெட்டிச் செய்யப்பட்டன. இதனை, பெரும் படையையுடைய நெடுஞ்சேரலாதன் கடலின்கண் வந்தெதிர்த்த பகைவர்களைப் புறங்காட்டி ஓடச் செய்து அவரது காவல் மரமாகிய கடம்பினை வெட்டி முரசினைச் செய்ததை,

> “மால் கடல் ஓட்டி, கடம்பு அறுத்து, இயற்றிய
> பண் அமை முரசின் கண் அதிர்ந்தன்ன”[26]

என அகநானூறு சுட்டக் காணலாம். இவ்வாறு செய்யப்பட்ட முரசில், பெருமை மிக்க இளங்காளைகள் இரண்டினைத் தம்முள் சண்டையிடச் செய்து, அவற்றில் வென்ற காளையினுடைய தோலை மயிர் சீவாது போர்த்தி உறுதியாகக்

---

[1] பதி. 41:19
[2] பதி. 43:9
[3] புற. 99:9
[4] புற. 288:4
[5] பதி. 15:20
[6] அக. 137:5
[7] புற. 112:4, 351:5
[8] புற. 29:8
[9] புற. 161:29
[10] புற. 174:7
[11] பதி. 80:3
[12] பதி. 56:4
[13] பரி. 7:6
[14] அக. 127:3
[15] புற. 60:10
[16] புற. 304:9
[17] பதி. 19:6-7
[18] புற. 369:5
[19] புற. 362:3
[20] புற. 35:4
[21] பதி. 69:3
[22] பொரு. 54; பெரு. 33
[23] புற. 301:5
[24] புற. 371:12
[25] மது. 231-232
[26] அக. 347:4-5

*கட்டப்பட்டு போர் முரசு செய்யப்பட்டது.*[1] *இதனை, 'விசித்து வினை மாண்ட மயிர்க் கண் முரசம்'*[2] *எனப் புறநானூறும், 'கொல் ஏற்றுப் பைந்தோல் சீவாது போர்த்த மாக்கண் முரசம்'*[3] *என மதுரைக்காஞ்சியும் சுட்டுகிறது. தோல் வாரினால் முரசில் பிணித்துக் கட்டப்பட்டிருந்ததை, 'பிணியுறு முரசம்'*[4]*, 'திண் பிணி முரசம்'*[5]*, 'விசி பிணி முரசம்'*[6] *என்பன உணர்த்துகின்றன.*

*முரசிலிருந்து எழும் ஒசை, இடியோசையைப் போன்று இருந்ததை, 'இடி முரசு இயம்ப'*[7]*, 'இடி என முழங்கும் முரசின்'*[8]*, 'கார் இடி உருமின் உரறு முரசின்'*[9]*, 'உருமின் முரசு எழுந்து இயம்ப'*[10] *எனவாறு பலவிடத்தும் சுட்டப்படுவது கொண்டு அறியலாம்.*

### *5.4.1.8.1. குணில்*

*முரசினை அடித்து ஒலியெழுப்புவதற்குக் 'குணில்', 'கடிப்பு' எனப்பட்ட குறுந்தடிகள் பயன்படுத்தப்பட்டதை, 'ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்ப'*[11]*, 'குணில்வாய் முரசு'*[12]*, 'குணில் பாய் முரசு'*[13] *என்றும், 'விழுக் கடிப்பு அறைந்த முழுக் குரல் முரசம்'* [14] *எனச் சுட்டுவனவற்றைக்கொண்டு அறியலாம்.*

### *5.4.1.8.2. வழிபாட்டில் முரசு*

*மகளிர் முருகனுக்கு எடுக்கும் வெறியாட்டு விழாவில் இசைக்கப்பட்ட பல்வேறு இசைக் கருவிகளுள் ஒன்றாக முரசும் விளங்கியதை, ''குழல் அகவ, யாழ் முரல, முழவு அதிர, முரசு இயம்ப''*[15] *எனப் பட்டினப்பாலை சுட்டுவதைக்கொண்டும், முருகன் எழுந்தருளும்போது முரசு முழங்கியதை, 'உரும்இடி முரசமொடு'*[16] *என திருமுருகாற்றுப்படை சுட்டுவதைக்கொண்டும் வழிபாட்டில் முரசு முழக்கப்பட்டதை அறிந்து கொள்ளலாம்.*

### *5.4.1.9. முழவு*

*சங்ககாலத்தில் புழக்கத்தில் இருந்த தோல் இசைக் கருவிகளுள் ஒன்று முழவு. இது மத்தளம் என்றும் தண்ணுமை என்றும் குறிப்பிடப்படுகிறது. இது வாரினால் இழுத்துக் கட்டப்பெற்று மார்ச்சனை என்னும் மண் தடவப்பெற்றிருந்ததை, 'வார் உற்று விசி பிணிக்கொண்ட மண்கனை முழவு'*[17]*, 'விசிபிணி மண் ஆர் முழவு'*[18] *எனவாறு பலவிடத்தும் சுட்டுவனவற்றைக் கொண்டு அறியமுடிகிறது.*

*இதன் ஓசை அருவி கொட்டுவதைப் போன்றும், இடியின் ஒலியைப் போன்றும், கடலின் ஆர்ப்பைப் போன்றும் இருந்ததை, 'முழங்குகடல் முழவின்'*[19]*, 'பாணி முழவு இசை அருவிநீர் ததும்ப'*[20]*, 'முழவு அதிர்ந்து அன்ன முழக்கத்து ஏறோடு'*[21] *என்பன சுட்டுகின்றன.*

*முழவினைப் பாணர், பாடினி, விறலி, கூத்தர் முதலிய இசைக் கலைஞர்கள் பயன்படுத்தியுள்ளனர். இதனை, 'மண்கனை முழவின் பாடினி'*[22]*, 'மண் அமை முழவின், வயிரியர்'*[23] *என்பன சுட்டுகின்றன.*

---

[1] *புற. 288:1-4*
[2] *புற. 63:7*
[3] *மது. 732-733*
[4] *புற. 25:7*
[5] *புற. 93:1*
[6] *புற. 179:4*
[7] *பரி. 4:19*
[8] *புற. 17:39*
[9] *பதி. 33:10*
[10] *புற. 126:19*
[11] *அக. 186:11*
[12] *குறு. 328:3*
[13] *புற. 143:9*
[14] *புற. 366:1*
[15] *பட். 156-157*
[16] *திரு. 121*
[17] *புற. 15:23-24*
[18] *அக. 346:13-14*
[19] *புற. 343:10*
[20] *பரி. 21:36*
[21] *அக. 328:2*
[22] *புற. 15:24*
[23] *புற. 164:12*

அக்காலத்தில் ஊர்களில் நடைபெற்ற திருவிழாக்களில் முழக்கப்பட்ட பல்வேறு இசைக்கருவிகளுள் முழவு இசை முதன்மையானதாக விளங்கியது. இதனை, 'விசிப்பிணி முழவுக் கண் புலரா விழவு உடை ஆங்கண்'[1], 'விழவும் முழந்தன்று முழவும் தூங்கின்று'[2], 'விழவு அறுபு அறியா முழவு இமிழ் மூதூர்'[3], 'முழவு இமிழ் மூதூர் விழவுக் காணூஉப் பெயரும்'[4], 'முழவு முகம் புலரா விழவு உடை வியல் நகர்'[5] என்பன உணர்த்துகின்றன. இது குழல், யாழ், முரசு, பதலை என பிற இசைக் கருவிகளோடு இயைந்து முழக்கப்பட்டது.

திருமணம் போன்ற மங்கள நிகழ்வுகளில் இம்முழவு முழக்கப்பட்டதை,, 'ஓர் இல் நெய்தல் கறங்க, ஓர் இல் ஈர்ந் தண் முழவின் பாணி ததும்ப'[6] என்ற புறநானூற்றுப் பாடல் சுட்டுவதுகொண்டு அறியலாம்.

### 5.4.1.10. துடி

சங்கப் பாடல்கள் குறிப்பிடும் பல்வேறு தோல் இசைக் கருவிகளுள் ஒன்று துடி. இத்துடிக்கு உடுக்கை, குறிஞ்சிநிலப்பறை, பாலைநிலப்பறை என அகராதி விளக்கமளிக்கிறது.[7]

'துடி அடிக் குழவிய பிடி'[8], 'துடிஅடி அன்ன தூங்குநடைக் குழவி'[9], 'துடி அடிக் கயந்தலை'[10] என யானைக் கன்றின் காலடிக்கும் 'வராஅல் துடிக்கண் கொழுங்குறை'[11], 'கொழுமீன் குறைஇய துடிக்கண் துணியல்'[12], 'வராஅல் துடிக்கண் அன்ன குறை'[13] என மீனின் தசைத்துண்டுக்கும் 'துடி' உவமையாகக் கூறப்படுவதுகொண்டு அது அளவில் சிறியதாகவும், வட்டவடிவினதாகவும் இருந்ததை உய்த்துணரலாம்.

இத்துடியின் ஓசை கோட்டான் ஒலிப்பதைப்போல் இருந்ததை 'குடிஞைத் துடிமருள் தீம்குரல்'[14] எனச் சங்கப் பாடல்கள் பலவும் குறிப்பிடுகின்றன. வேடர்கள் மகிழ்ச்சியின்போது இதனை இயக்கிக் கள்ளருந்திக் களியாட்டம் போட்டுள்ளனர்.[15] ஆனிரைகளைக் கவரச் செல்லும் வீரர்கள் துடிகொட்டிச் சென்றனர்.[16] இதனை, 'கொடுவில் ஆடவர் ஆடுகொள் பூசலின் பாடுசிறந்து எரியும் பெருந்துடி'[17] என்பதைக் கொண்டும், கவர்ந்து சென்ற ஆனிரைகளை மீட்டுவந்து வெற்றிச் செருக்கில் துடிகொட்டி அத்தாளத்திற்கேற்ப ஆடி மகிழ்ந்ததை,

> "வடிஉறு பகழிக் கொடுவில் ஆடவர்
> அணங்குடை நோன்சிலை வணங்க வாங்கி
> பல்ஆன் நெடுநிரை தமீஇ, கல்லென
> அருமுனை அலைத்த பெரும்புகல் வலத்தர்
> கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி"[18]

என்ற அகநானூற்றுப் பாடலடிகளைக்கொண்டும் அறிந்துகொள்ளலாம்.

வழியிடைச் செல்லும் மக்களிடமும், வணிகரிடமும் பொருள் பறிக்கும் மறவர்கள் இத்துடியினைக் கொட்டி ஆரவாரம் செய்பவர்களாய் இருந்துள்ளனர்.[19]

---

[1] நற். 220:6
[2] நற். 320:1
[3] பதி. 15:18
[4] பதி. 30:20
[5] அக. 206:11, 397:3
[6] புற. 194:1-2
[7] Miron Winslow - A Comprehensive Tamil and English Dictionary, http://agarathi.com/word/துடி
[8] புற. 369:26
[9] பொரு. 125
[10] கலி. 11:8
[11] அக. 196:2-3
[12] மது. 320
[13] மலை. 458
[14] புற. 370:6; பொரு. 210; அக. 19:4-5
[15] அக. 261:14-15
[16] புற. 269
[17] அக. 372:11-12
[18] அக. 159:5-9
[19] அக. 79:13, 89:14; கலி. 15:4

மேலும், கொடிய வில்லினைக்கொண்ட எயினர்கள் துடியை முழங்கிச் சென்று நெற்கூடுகளை கொள்ளையிட்டதைப்பற்றிப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது. இத்தகைய எயினர் வீடுகளில் துடிகள் பந்தரில் தொங்கவிடப்பட்டிருந்ததைக் 'கடுந்துடி தூங்கும் கணைக்காற் பந்தர்'[1] எனப் பெரும்பாணாற்றுப்படை சுட்டுகிறது.

கூத்தரும்[2] விறலியரும்[3] தங்கள் ஆடல் தொழிலுக்கு இத்துடியினைப் பயன்படுத்தி அதன் தாளகதிக்கு ஏற்ப ஆடியதைச் சங்கப்பாடல்கள் காட்டுகின்றன. நடுகல் வழிபாட்டிலும் இத்துடி முழக்கப்பட்டது.[4]

நெற்கதிரை அறுத்து அடுக்கி வைத்திருந்த அரிகளின்மீது மிகுதியான வெள்ளம் பெருகிப் பரந்ததை அறிவிக்கத் துடிகளை முழக்கியதாக பரிபாடல்[5] குறிப்பிடுவது கொண்டு பொது அறிவிப்புகளுக்கும் இத்துடி பயன்படுத்தப்பட்டதை அறியமுடிகிறது.

துடி கொட்டுவோர் துடியர்[6] எனப்பட்டனர். இவர்களைப் புலையர் என்றும் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. இவர்கள் துடி முழக்கியதைத் 'துடி எறியும் புலைய!'[7], 'புலையன் பெருந்துடி கறங்க'[8], 'இழி பிறப்பாளன் கருங்கை சிவப்ப, வலி துரந்து சிலைக்கும் வன்கண் கருந்துடி'[9] எனவரும் அடிகள் உணர்த்துகின்றன.

### 5.4.1.11. பறை

சங்ககால மக்களின் அன்றாட வாழ்க்கையில் பயன்பட்ட இன்றியமையாத இசைக்கருவிகளில் ஒன்றாகப் 'பறை' என்ற தோல் இசைக்கருவி விளங்குகிறது. பறை இசைக்கருவியைப் பற்றிய சங்கப்பாடல்கள் அக்கருவியின் வடிவம், ஓசை, பயன்பாடு போன்றவற்றை அறிந்துகொள்ள உதவுகிறது.

இக்கருவி வட்ட வடிவத்தைக் கொண்டதாக இருந்ததை மயில் தோகையின் கண்கள்[10], களிற்றின் காலடி[11], சுனை நீர்[12] போன்றவற்றிற்கு உவமையாகப் பறை குறிப்பிடப்படுவதிலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது. செல்வந்தர் வீட்டுப் பிள்ளைகள் தம் தோள்களில் மாட்டியிருந்த பறையின் கண்களில் குருவியின் வடிவத்தை எழுதியிருந்தனர்[13] என்பது அக்கருவியின் கலைநயத்தைக் காட்டுகிறது.

இப்பறை இசைக்கருவி அருவி[14](பறை இசை அருவி), அலை[15](திரை ஒலி பறையாக), தேரை[16], சுனையில் படிந்த மேல்காற்று[17], மேகம்[18](பறைக் குரல் எழிலி), வாகைமர நெற்று[19], கூகைஒலி[20](கூர் உகிர் வாய்ப் பறை) ஆகியவற்றின் ஒலிக்கு உவமையாகக் காட்டப்படுவதிலிருந்து இது எத்தகைய ஓசையைத் தந்தது என்பதைக் காட்டுகிறது. பறையொலியின் வீச்சு ஊர் முழுக்கக் கேட்கக் கூடியதாக இருந்ததைக் காதலர்களைக் குறித்த அலருக்கு உவமையாகக் காட்டப்படுவதிலிருந்து அறிய முடிகிறது[21].

---

[1] பெரு. 124
[2] பரி. 21:60, 21:64, 22:42
[3] பரி. 21:19-20
[4] அக. 35:8
[5] பரி. 7:28
[6] புற. 269:6, 280:8, 285:2, 291:1, 335:7
[7] புற. 287:1
[8] நற். 77:1-2
[9] புற. 170:5-6
[10] அக. 15:14
[11] புற. 263:2; அக. 211:3
[12] அக. 178:3, 324:6
[13] நற். 58:2
[14] புற. 126:8, 229:14, 398:30; பதி. 70:24
[15] கலி. 149:1
[16] அக. 364:3
[17] அக. 321:3
[18] அக. 23:2
[19] குறு. 7:4; அக. 45:2, 151:10
[20] நற். 83:4
[21] அக. 281:13

இத்தோலிசைக் கருவி கூத்தர்களும் கூத்தியர்களும் ஆடும் ஆடுகளத்திலும்[1] கூத்தர்கள் கூடி மன்னனை வாழ்த்தும்போதும்[2], கழைக்கூத்தர்கள் மூங்கில் மேல் கட்டிய கயிற்றில் ஏறிநின்று ஆடும்போதும்[3], பாணர்[4] உள்ளிட்ட இரவலர் தன் வறுமையை எடுத்துரைத்து புரவலரை வாழ்த்திப் பாடும்போதும்[5] ஒலிக்கப்பெற்றது.

போர்,[6] போர் அறிவிப்பு,[7] வெற்றி அறிவிப்பு,[8] ஏறுதழுவல்,[9] மணவிழா,[10] வெள்ள அபாய எச்சரிக்கை,[11] வீதியில் வரும் யானையின் வருகையை உணர்த்த[12] எனப் பல்வேறு நிலைகளில் இக்கருவி பயன்படுத்தப்பட்டது.

நெல் அறுத்தல்,[13] களையெடுத்தல்[14] போன்ற வேளாண் பணிகள் நடைபெறும் போதும், கதிர்களை உண்ண வரும் பறவையினங்களை விரட்டவும்,[15] கிழங்கு போன்ற விளை பொருள்களை உண்ண வரும் பன்றிகளை விரட்டவும்,[16] பறை முழக்கப்பட்டது.

### 5.4.1.12. பதலை

பதலை என்பது ஒரு புறத்தே அடிக்கப்படும் தோல் இசைக்கருவி. இதனை, 'பதலை ஒருகண் பையென இயக்குமின்'[17] என்ற புறநானூற்றுப் பாடலடி குறிப்பிடுகிறது. இது ஒலியளவின் தன்மையை மிகவும் நுட்பமாகக் காட்டவல்லது என்பதை, 'நொடி தரு பாணிய பதலையும்'[18] எனக் குறிப்பிடுகிறது மலைபடுகடாம்.

பாணர், விறலியர் போன்ற இசைக்கலைஞர்கள் தாம் உடன் கொண்டு சென்ற பல்வேறு இசைக்கருவிகளில் ஒன்றாக இப்பதலை எனப்பட்ட தோலிசைக் கருவியும் விளங்கியதை,

> "நல் யாழ், ஆகுளி, பதலையொடு சுருக்கி,
> செல்லாமோதில் சில் வளை விறலி!"[19]
>
> "ஒரு தலைப் பதலை தூங்க, ஒரு தலைத்
> தூம்பு அகச் சிறு முழாத் தூங்கத் தூக்கி"[20]
>
> "பண் அமை முழவும் பதலையும், பிறவும்,
> கண் அறுத்து இயற்றிய தூம்பொடு சுருக்கி,
> காவில் தகைத்த துறை கூடு கலப் பையர்"[21]

என வரும் பாடலடிகளும், கூத்தர்கள் ஏந்திச் செல்லும் பல்வேறு இசைக்கருவிகளில் ஒன்றாக இது விளங்கியதை மலைபடுகடாமும் குறிப்பிடுவது கொண்டு[22] அறிந்துகொள்ளலாம்.

இத்தோற்கருவியினைப் பாணர் முதலிய பல்வேறு இசைக் கலைஞர்கள் வாசித்ததைப் 'பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்'[23] எனக் குறிப்பிடுவது கொண்டு உணரலாம்.

---

[1] அக. 45:2, 151:10, 364:3; மலை. 236
[2] அக. 76:5; மது. 523
[3] குறு. 7:4
[4] நற். 46:5-8
[5] புற. 371; 388
[6] பதி. 75:9
[7] புற. 279
[8] புற. 225:10
[9] கலி. 104:29
[10] குறு. 15
[11] பதி. 22:28; பரி. 6:22-24, 10:7, 20:14
[12] கலி. 56:32-33; பொரு. 171-173
[13] மது. 261-262
[14] அக. 194:7-8
[15] புற. 396:3-4
[16] மலை. 343-344
[17] புற. 152:17
[18] மலை. 11
[19] புற. 64:1-2
[20] புற. 103:1-2
[21] பதி. 41:3-5
[22] மலை. 1-13
[23] குறு. 59:1

### 5.4.1.13. தடாரி

'தடாரி'[1] என்பது சங்ககால இசைக் கலைஞர்களால் பயன்படுத்தப்பட்ட தோல் இசைக் கருவியாகும். இது 'தெடாரி'[2] என்றும் சங்கப் பாடல்களில் பயின்றுவந்துள்ளது. இக்கருவியினைப் பாணர், பொருநர் போன்றோர் பயன்படுத்தினர்.

இப்பறை இசைக்கருவி நிலவைப்போன்றும், ஆமையைப் போன்றும், யானையின் கால்களைப் போன்றும் வட்ட வடிவினதாக இருந்ததை 'மதியத்து அன்னஎன் விசிஉறு தடாரி'[3], 'அரிக்குரல் தடாரியின் யாமை மிளிர'[4], 'கடாஅ யானைக் கால்வழி அன்னஎன் தெடாரி'[5] என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

இது வாரினால் பிணித்து விசித்துக் கட்டப்பட்டிருந்ததைச் 'சிதாஅர் வள்பின் சிதர்ப்புறத் தடாரி'[6], 'விசிஉறு தடாரி'[7], 'விசிப்பிணி தடாரி'[8] என்றும், அதன் கண் அகன்று காணப்பட்டதை 'அகன்கண் தடாரி'[9], 'கண்அகன் தடாரி'[10] என்றும், அது அரித்து எழும் ஓசையைத் தரவல்லது என்பதை 'அரிக்குரல் தடாரி'[11] என்றும் குறிப்பிடுவனவற்றைக்கொண்டு அறிந்துகொள்ளலாம்.

இத்தடாரிப்பறை பரிசில் நாடிச் செல்லும் பாணரும், பொருநரும் புரவலரின் வாயில் முன் பரிசில் வேண்டி நிற்கும்போதும்,[12] போர்க்களத்துச் சென்று பரிசில் வேண்டி நிற்கும்போதும்[13] அறைந்து ஒலியெழுப்ப இரவலர்களால் பயன்படுத்தப்பட்டது.

பாணர் பொருநர் போன்ற இரவலர்கள் தங்கள் வருகையைப் புரவலர்க்கு உணர்த்தவும், அரசர்களின் கொடைத்திறனையும் போர்த்திறனையும் போற்றிப் பாடவும் இக்கருவி பின்னணி இசைக்கருவியாக இருந்தது. விறலியர் ஆடும்போது இசைக்கப்படும் பல்வேறு இசைக்கருவிகளில் ஒன்றாகவும் இத்தடாரி இருந்துள்ளது.[14]

### 5.4.1.14. தட்டை – தோல் இசைக்கருவி

தட்டை என்னும் சொல் சங்க இலக்கியத்தில் கிளிகடி கருவியை மட்டுமல்லாது, பல்வேறு இசைக் கருவிகளோடு சேர்த்து இசைக்கப்பட்ட தோல் இசைக்கருவியையும் குறிப்பிடுகிறது. இதனை மலைபடுகடாம், கூத்தர்கள் பையிலிட்டு எடுத்துச் சென்ற பலவகை வாத்தியங்களுள் ஒன்றாகக் குறிப்பிடுகிறது.[15] 'தட்டை என்னும் தண்ணுமைக்கருவி வாசிப்பவனின் பின் நின்று ஆம்பல் குழல் ஊதப்பட்டது'[16] என ஐங்குறுநூற்றுப் பாடலும் இது குறித்துக் குறிப்பிடுகிறது.

இத்தோல் இசைக்கருவியினைக் 'கரடிகை' எனவும் சங்க இலக்கிய உரையாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். "தாளத்தின் அளவிற்கு ஏற்ப தவளையின் குரலைப்போல ஒலிக்கும் தட்டைப்பறை"[17] என்றும், 'சுனையின்கண் உளவாகிய

---

[1] பொரு. 70; பரி. 12:41; புற. 249:4, 369: 21,370:18, 371:17, 372:1, 381:12, 385:4, 390:8, 398:12, 395:25, 398:12
[2] புற. 368:15, 376:4
[3] புற. 371:17-18, 398:12
[4] புற. 249
[5] புற. 368:15-16
[6] புற. 376:4, 381:12
[7] புற. 371:17
[8] புற. 372:1
[9] புற. 370:18
[10] பொரு. 70
[11] புற. 249:4, 369:21, 385:4, 390:8, 398:12, 395:25
[12] புற. 381:11-15, 385:1-7, 390, 395:24-27, 398:12-14
[13] புற. 369:19-22, 370:18-21, 371:17-18, 372, 381
[14] பரி. 12:41
[15] மலை. 1-14
[16] ஐங். 215
[17] பத்துப்பாட்டு மூலமும் உரையும்,

தேரைகள், கரடிகை எனும் பறைபோல ஒலிக்கும்'[1] என்றும், இது தரும் ஓசையை ஒப்புமைப்படுத்திக் காட்டியுள்ளனர்.

### 5.4.1.15. ஆகுளி

ஆகுளி என்பது ஒருவகைச் சிறுபறையைக் குறிக்கும். கூத்தரும், விறலியரும், இரவலரும் பாடியும் ஆடியும் வள்ளல்களை நாடிப் பரிசில் பெறச் சென்றபோது இதனை உடன் கொண்டு சென்றனர்.

கூத்தர்கள் ஆகுளி உள்ளிட்ட பலவகை வாத்தியங்களைப் பையிலிட்டு எடுத்துச் சென்றதை, 'திண் வார் விசித்த முழவொடு, ஆகுளி'[2] என மலைபடுகடாமும், விறலியோடு சென்று புரவலனைக் கண்டு பரிசில் பெற விரும்பிய இரவலன் யாழினையும், சிறுபறையையும், பதலையையும் பையில் இட்டுச் சுருக்கி எடுத்துச் செல்ல எண்ணுவதை, 'நல் யாழ், ஆகுளி, பதலையொடு சுருக்கி, செல்லாமோதில் சில் வளை விறலி!'[3] எனப் புறநானூறும் குறிப்பிடுவதைக்கொண்டு கூத்திலும் ஆடலிலும் ஆகுளி எனப்பட்ட இச்சிறுபறை இயக்கப்பட்டதை அறியலாம்.

வறுமைத் துன்பத்தால் வாடிய இரவலன், வேந்தனின் வெற்றிச் சிறப்பைப் பாடிப் பொருள்பெற வந்தபோது, வாராற் கட்டப்பட்ட தடாரிப்பறையையும், சிறுபறையையும் கொட்டியதை, 'அகன் கண் அதிர, ஆகுளி தொடாலின்'[4] எனப் புறநானூறு சுட்டுவதுகொண்டு அறியலாம்.

சூல் கொண்ட மகளிர், தேவராட்டியுடன் தெய்வங்களுக்குப் படையல் தந்து வழிபடும் வழிபாட்டின்போது, யாழ், முழவு, போன்றவற்றுடன் ஆகுளியும் ஒலித்ததை, 'குரல் புணர் நல் யாழ் முழவோடு ஒன்றி, நுண் நீர் ஆகுளி இரட்ட'[5] எனக் குறிப்பிடுவது கொண்டு வழிபாட்டிச் சடங்குகளில் இச்சிறுபறை இயக்கப்பட்டதை உணரலாம்.

பேராந்தையின் பேடும் சேவலும் தம்முள் மாறிமாறி ஒலி எழுப்புவது, விரலைத் தீண்டி அடிக்கப்பெறும், முழங்கும் கண்ணையுடைய சிறுபறையான ஆகுளியைப் போன்று இருந்ததை, 'விரல் ஊன்று படு கண் ஆகுளி கடுப்ப'[6] எனச் சுட்டுவது கொண்டு இது தரும் ஓசையை உணரலாம்.

### 5.4.1.16. எல்லரி

தாளத்தின் தன்மைக்கு ஏற்ப ஒலிக்கும் தன்மை உடையது எல்லரி என்னும் ஒரு வகைப் பறை. இது சல்லிகை என்றும் குறிப்பிடப்படுகிறது. கூத்தர்கள் மூட்டைகளாகக் கட்டிக்கொண்டு சென்ற பல்வேறு இசைக் கருவிகளில் ஒன்றாக எல்லரியும் குறிப்பிடப்படுவதை, 'கடிகவர்பு ஒலிக்கும் வல்வாய் எல்லரி'[7] என்ற மலைபடுகடாம் பாடலடிகளைக்கொண்டும், பாணர் குழுவினர் பல்வேறு வாத்தியங்களோடு எல்லரியையும் வாசித்ததை, 'எல்லரி தொடுமின்'[8] எனப் புறநானூறு சுட்டுவது கொண்டும் அறியலாம்.

---

பகுதி – 2,
என்.சி.பி.எச். ப. 388
[1] குறு. 193:2-3
[2] மலை. 3
[3] புற. 64:1-2
[4] புற. 371:18
[5] மது. 605-606
[6] மலை. 140
[7] மலை. 10
[8] புற. 252:16

### 5.4.1.17. மகுளி

ஆடல் மகளிரிடம் இருந்த இசைக்கருவிகளில் ஒன்றாக 'மகுளி'[1] பரிபாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை ஒரு வகை இழுகு பறை எனப் பழைய உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். பேராந்தைகளின் ஓசை இத்தகைய மகுளியின் ஓசைபோன்று இருந்ததாக அகநானூறு[2] குறிப்பிடுகிறது.

### 5.4.1.18. மத்தரி

மத்தரி என்பது ஒருவகைப் பறை இசைக் கருவி. இது முழவு, தடாரி, தண்ணுமை, மகுளி போன்றவற்றோடு இசைக்கப்பட்டதைப் பரிபாடல்[3] காட்டுகிறது.

## 5.5. தொழில்சார் கருவிகள்

### 5.5.1. வேளாண்கருவிகள்

### 5.5.5.1. ஆம்பி

வயல்களுக்கு நீர் இறைக்கும் ஏற்றத்தோடு இயங்குகின்ற நீர் முகக்கும் கலத்திற்கு ஆம்பி என்று பெயர். இதனை, 'ஏற்றத்தோடு வழங்கும் அகல் ஆம்பியில் கயன் அகைய வயல் நிறைக்கும்'[4] என மதுரைக்காஞ்சி சுட்டுகிறது. இதனைப் பன்றிப் பத்தர் எனவும் குறிப்பர்.

### 5.5.1.2. கலப்பை

நிலத்தை உழுவதற்குப் பயன்படுத்தப்பட்ட உழுகருவியான கலப்பை உழவுத் தொழிலை மேற்கொண்ட மக்கள் அனைவர் வீடுகளிலும் இன்றியமையாக் கருவியாக இருந்தது. இதனை 'நாஞ்சில்'[5] என்றும் சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன.

முல்லை நில உழவரது வீட்டின் முற்றத்தில் இருந்த கொட்டிலில் கலப்பை சார்த்தி வைக்கப்பட்டிருந்ததை, 'குறுஞ்சாட்டு உருளையொடு கலப்பை சார்த்தி நெடுஞ்சுவர் பறைந்த புகைசூழ் கொட்டில்'[6] எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. நாட்டின் வளமைக்குக் கலப்பை என்னும் உழு கருவி அடிப்படையாக இருந்ததை 'நாஞ்சில் அல்லது படையும் அறியா'[7] என்ற புறப்பாடல் குறிப்பிடுகிறது.

இக்கலப்பைகள் மழை அற்றுப்போன காலங்களில் பயன்படாமல் கிடந்ததை 'நாடு வறம் கூர, நாஞ்சில் துஞ்ச'[8], 'நாஞ்சில் துஞ்சி மழைக்கால் நீங்கிய மாக விசும்பில்'[9] எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன. பகைமன்னர்களால் விளைநிலங்கள் குதிரைகள் பூட்டிய தேர்களால் பாழாக்கப்பட்டு இக்கலப்பைகள் உழு தொழிலை மறந்து கிடந்ததை, 'மா ஆடிய புலன் நாஞ்சில் ஆடா'[10], 'களிறு ஆடிய புலம் நாஞ்சில் ஆடா'[11] என்ற

[1] பரி. 12:41
[2] அக. 19:4
[3] பரி. 12:41
[4] மது. 90-92
[5] பெரு. 199; பதி. 19:17
[6] பெரு. 188-189
[7] புற. 20:11
[8] அக. 42:5
[9] அக. 141:5
[10] பதி. 25:1
[11] பதி. 26:2

பதிற்றுப்பத்துப் பாடலடிகள் காட்டுகின்றன. இக்கலப்பையைத் திருமால் பலதேவன் ஆகிய கடவுளரின் ஆயுதமாகப் பரிபாடல் குறிப்பிடுகிறது.[1]

கலப்பைகள் பிடியானையின் வாயையொத்த வடிவுடையதாக விளங்கியதை, 'பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்'[2], 'எழில் வேழம் வறம் உழு நாஞ்சில் போல், மருப்பு ஊன்றி நிலம்சேர'[3], 'தூம்புடைத் தடக்கை வாயொடு துமிந்து, நாஞ்சில் ஒப்ப நிலம் மிசைப் புரள'[4] என்ற பாடலடிகளின் வழி அறியமுடிகிறது.

### 5.5.1.3. தளம்பு

தளம்பு என்பது சேற்றுக்கட்டியை உடைக்கும் கருவி. நிலத்தை நன்றாக உழுத பின்னர் சமமாக இருத்தற்பொருட்டுத் தளம்பு என்னும் கருவிகொண்டு சேற்று வயலைச் சமப்படுத்துவர். இவ்வேளாண் கருவி பண்டைக் காலத்தில் புழக்கத்தில் இருந்ததை, சேற்று வயலில் தளம்பு அடிக்கும்போது அக்கருவியால் வாளைமீன் துண்டிக்கப்பட்டது குறித்துக் குறிப்பிடும் "செறுவின் தளம்பு தடிந்து இட்ட பழன வாளை"[5] என்ற புறநானூறு அடிகளைக்கொண்டு அறியமுடிகிறது.

### 5.5.1.4. துளர்

வேளாண் தொழிலில் பயிர்களுக்கிடையே முளைக்கும் களைகளை நீக்குவதற்காகத் 'துளர்' எனப்பட்ட களைக்கொட்டுக் கருவி பயன்படுத்தப்பட்டது. தினைப் பயிரிடுவதைத் தொழிலாகக் கொண்டிருந்த குறவர்கள் தாங்கள் விதைத்த தினைப் பயிர்களுக்கிடையே முளைத்திருந்த களைகளை நீக்குவதற்கு இத்துளர் எனப்பட்ட களைக்கொட்டினைப் பயன்படுத்தியதை,

> "கடவை மிடைந்த துடவைஅம் சிறு தினைத்
> துளர் எறி நுண் துகள் களைஞர் தங்கை"[6]

எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது. 'கோடு'[7] என்னும் சொல்லும் களைக்கொட்டைக் குறிப்பதை, "கோடுடைக் கையர் துளர்எறி வினைஞர்"[8] எனச் சுட்டுவதுகொண்டு அறியமுடிகிறது. இத்தகைய களையெடுக்கும் தொழிலை மேற்கொண்டோர் 'களைஞர்', 'துளர் எறி வினைஞர்'[9] எனப்பட்டனர்.

### 5.5.1.5. குயம்

சங்கப்பாக்களில் நெல் அரியப் பயன்பட்ட அரிவாள் 'குயம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வரிவாள்களைப் பயன்படுத்தி சோழநாட்டு உழத்தியர் முற்றி விளைந்த நெற்கதிர்களை அரிந்ததை, 'கூனி, குயத்தின் வாய்நெல் அரிந்து'[10] எனப் பொருநராற்றுப்படை குறிப்பிட, பாணர்கள் குயத்தினைப் பயன்படுத்தி நெல்லை அறுத்ததோடு, மீனைச் சீவுவதற்கும் பயன்படுத்தியதைப் புறநானூறு[11] காட்டுகிறது.

---

[1] பரி. 1:5. 4:39
[2] பெரு. 199
[3] கலி. 8:4-5
[4] புற. 19:10-11
[5] புற. 61:3-4
[6] குறு. 392:4-5
[7] அக. 184:13
[8] அக. 184:13
[9] அக. 184:13
[10] பொரு. 242
[11] புற. 348:1-4

### 5.5.1.5.1. அறுவடையில் வாள்

உழுவுத் தொழில் செய்த தொழுவர் எனப்பட்ட உழவர்கள் நெல்லரிவதற்காக வாளினைப் பயன்படுத்தியதை, 'நெல் அரி தொழுவர் கூர் வாள்'[1], 'அரிநர் கொய் வாள்'[2], 'செம் நெல் அரிநர் கூர் வாள்'[3] என்பன குறிப்பிடக் காணலாம். மேலும், காய்கறிகள், ஊன் போன்றவற்றை அரிவதற்கும் வாள் பயன்பட்டுள்ளது[4].

### 5.5.1.6. சாடு

சாடு என்னும் சொல் வண்டியைக் குறிப்பிடுகிறது. இவ்வண்டிகள் உழவு வேலைகளுக்குப் பயன்படுத்தப்பட்டன. முல்லை நிலத்தில் உழதுண்டு வாழ்ந்த உழவர் வீடுகளின் முற்றத்தில் சிறிய வண்டிகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. இதனைக் 'குறுஞ்சாடு'[5] எனப் பெரும்பாணாற்றுப்படை சுட்டுகிறது.

### 5.5.1.7. தட்டை

தினைப்புனக் காவலில் ஈடுபட்ட சங்ககால மக்கள், தினைக்கதிரை உண்ணவரும் கிளிகளை விரட்ட தழல், தட்டை, குளிர் முதலியன பயன்படுத்தப்பட்டதை, 'தழலும் தட்டையும், குளிரும், பிறவும் கிளிகடி மரபின'[6] என்று குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகிறது. தட்டை,[7] அமை, வெதிர், கழை என்ற சொற்களுக்கு மூங்கில் என்று பொருள். இம்மூங்கிலைக்கொண்டு செய்யப்பட்டதால் அக்கருவி 'தட்டை' என்ற பெயரைப் பொற்றிருக்கலாம். இதனை, 'அமை அறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்'[8], 'வெதிர் புனை தட்டையேன்'[9], 'ஒலிகழைத் தட்டை புடையுநர்'[10], என்ற சங்கப் பாடலடிகளைக் கொண்டு ஊகிக்கமுடிகிறது. தட்டையாவது மூங்கிலைக் கண்ணுக்குக்கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி என்றும் உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

குறிஞ்சிநிலக் கானவர்கள் தங்கள் இளம்பெண்களான கொடிச்சியர்களிடம் இத்தட்டையினைக் கொடுத்துத் தினைப்புனக் காவலுக்கு அனுப்பியதை 'ஒலிகழைத் தட்டை புடையுநர், புனந்தொறும் கிளிகடி மகளிர் விளிபடு பூசல்'[11], 'புனவர் தட்டை புடைப்பின்'[12], 'கொடிச்சி! அவ்வாய்த் தட்டையொடு அவணை ஆக! என, ஏயள்மன் யாயும்'[13] என வருவன இதனை உணர்த்தும்.

### 5.5.1.8. தழல்

இது முன்பு குறிப்பிட்ட தட்டையைப் போன்றதொரு கிளிகடி கருவி என்பதை, 'தழலும் தட்டையும், குளிரும், பிறவும் கிளிகடி மரபின'[14] எனக் குறிப்பிடுவது கொண்டு அறிந்துகொள்ளலாம். இதற்குக் "கையால் சுற்றிய காலத்துத் தன்னிடத்துத் தோன்றும் ஓசையால், கிளி முதலியவற்றை ஓட்டும் கருவி"[15] என விளக்கம் தரப்பட்டுள்ளது. தலைவனொருவன் தன் காதலிக்குக்

---

[1] புற. 379:3; நற். 195:6
[2] பதி. 19:22
[3] நற். 275:1
[4] பெரு. 471; நற். 133:2
[5] பெரு. 188
[6] குறி. 43-44
[7] ஐங். 340:4; மது. 305
[8] அக. 388:2
[9] நற். 147:8
[10] மலை. 328
[11] மலை. 328-329
[12] புற. 49:4
[13] நற். 134:4-6, 147
[14] குறி. 43-44
[15] பத்துப்பாட்டு, மூலமும் உரையும், இரண்டாம் பகுதி, என். சி. பி. எச்., ப. 253.

கையுறையாக இத்தழலையும் தட்டையையும் தந்ததையும், குறமகள் ஒருத்தி இத்தழலைத் தினப்புனக் காவலின்போது கிளிகடியப் பயன்படுத்தியதையும்,

"தழலும் தட்டையும் முறியும் தந்து,
இவை ஒத்தன நினக்கு"[1]

"தழலை வாங்கியும், தட்டை ஓச்சியும்
அயலேர் செயலை அம் தளிர் அசைஇயும்,
குறமகள் காக்கும் ஏனல்"[2]

என்ற சங்கப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

### 5.5.1.9. குளிர்

இது தினைப்புனங்களில் தினைக்கதிர்களை உண்ணவரும் கிளிகளை ஓட்டுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட கருவி. இதனைக் 'கிளிகடிகருவி'[3] என அகராதிகள் குறிப்பிடுகின்றன.

இக்கருவியினைக்கொண்டு கொடிச்சியர் எனப்பட்ட குறிஞ்சிநிலக் குறவர் இனப் பெண்கள், தினையை உண்ணவரும் கிளிகளை விரட்டியுள்ளனர். இதனை, "குளிர் படு கையள் கொடிச்சி"[4], "ஏனல் உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே"[5], "படுகிளி கடியும் கொடிச்சி கைக் குளிரே"[6], "குளிர் வாய் வியன் புனத்து எல்பட வருகோ?"[7] எனவரும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இக்கருவியினைக் குறித்து, "தினைப்புனத்தில் கிளி ஓட்டுகின்றவர் மூங்கிலை வில்போல் கட்டித் தெரிக்கும் கருவி"[8] என தஞ்சைவாணன் கோவை உரை குறிப்பிடுகிறது. இது இனிய தாளத்தைத் தரக்கூடியதாக விளங்கியதை,

"படுகிளி கடியும் கொடிச்சி கைக் குளிரே
இசையின் இசையா இன் பாணித்தே"[9]

என்ற குறுந்தொகை அடிகள் குறிப்பிடுகின்றன. இக்கருவி மட்டுமல்லாது தழல், தட்டை என்ற கருவிகளைக்கொண்டும் தினைக்கதிர்களை உண்ண வரும் கிளிகளை விரட்டினர்.[10]

### 5.5.1.10. கவண்

தினையை விதைத்து அப்புனத்தைக் காவல் செய்யும் குறவர் இன மக்கள் தங்களின் தினைப்புனத்தில் விளைந்துள்ள தினைக்கதிர்களை உண்ண வரும் யானை, கிளி முதலியவற்றை விரட்ட 'கவண்' எனப்பட்ட கருவியினைப் பயன்படுத்தினர். இக்கருவியினை அகராதிகள் 'கல்லெறியுங் கருவி'[11] எனக் குறிப்பிடுகின்றன. கவணில் கல்லை எறிவதற்காகக் கயிறு கட்டப்பெற்றிருந்ததையும் அது வண்டியில் எருதைப் பிணைக்கும் பூட்டுக் கயிற்றைப் போன்று இருந்ததையும், 'கவணை அன்ன பூட்டுப் பொருது அசாஅ'[12]

---

[1] குறு. 223:4-5
[2] அக. 188:11
[3] http://agarathi.com/word/குளிர்
[4] நற். 306:3
[5] குறு. 360:5-6
[6] குறு. 291:2
[7] நற். 204:2
[8] பத்துப்பாட்டு மூலமும் உரையும், இரண்டாம்பகுதி, என். சி. பி. எச்., மேற்., ப. 254.
[9] குறு. 291:2-3
[10] அக. 32:5-6; குறி. 43
[11] http://agarathi.com/word/கவண்
[12] குறு. 388:3

என்று சுட்டுவதைக்கொண்டு அறியலாம். கவணில் கல்லை வைத்து எறிவதை, 'கடு விசைக் கவணையில் கல் கை விடுதலின்'[1], 'கடு விசைக் கவணின் எறிந்த சிறு கல்'[2], 'கல் எறியும் கவண் வெரீஇப்'[3], 'கவண் உமிழ் கடுங் கல்'[4] என்பன காட்டுகின்றன.

#### 5.5.1.10.1. யானைகளை விரட்ட

தினைப் புனத்தில் விளைந்த தினைக் கதிர்களை உண்ண வரும் யானைகளைக் கவண் கொண்டு கல் எறிந்து மலை வாழ்மக்கள் விரட்டுவதை,

> "புனிறு போகிய புனம் சூழ் குறவர்,
> உயர்நிலை இதணம் ஏறி, கை புடையூஉ,
> அகல் மலை இறும்பில் துவன்றிய யானைப்
> பகல் நிலை தளர்க்கும் கவண் உமிழ் கடுங் கல்"[5]

எனக் குறிப்பிடுவனவும் பிறவும்[6] இதனை உணர்த்துகின்றன. இக்கவண் ஒலிக்கு யானைகள் அஞ்சியதை, 'ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇக் கான யானை கை விடு பசுங் கழை'[7] எனக் குறுந்தொகை சுட்டுகிறது.

#### 5.5.1.10.2. கிளிகளை விரட்ட

கவண் கருவி தினைப்புனத்தில் தினைக்கதிர்களை உண்ணவரும் கிளிகளை விரட்டப் பயன்படுத்தப்பட்டதை,

> "செவ் வாய்ப் பாசினம் கவரும்' என்று, அவ் வாய்த்
> தட்டையும் புடைத்தனை, கவணையும் தொடுக்க" என
> எந்தை வந்து உரைத்தனனாக"[8]

என்ற நற்றிணைப்பாடல் குறிப்பிடுகிறது. மேலும் இக்கவண் பறவைகளை விரட்டப் பயன்பட்டதையும், அவற்றிலிருந்து வீசி எறியும் கற்களுக்கு அஞ்சிப் பறவைகள் விலகி ஓடியதையும், 'கல் எறியும் கவண் வெரீஇப், புள் இரியும் புகர்ப் போந்தை'[9] எனப் பட்டினப்பாலையும் குறிப்பிடுகிறது.

#### 5.5.1.11. அடார்

விலங்குகளைப் பிடிப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட பெரிய கற்பலகைகளாலான ஒருவகைப் பொறிக்கு "அடார்" என்று பெயர். இது தினைப்புனத்தில் மேய வரும் பன்றியைப் பிடிக்க கானவர்களால் பயன்படுத்தப்பட்டதை,

> "தினை உண் கேழல் இரிய, புனவன்
> சிறு பொறி மாட்டிய பெருங் கல் அடாஅர்"[10]

> "விளை புனம் நிழத்தலின், கேழல் அஞ்சி,
> புழைதொறும் மாட்டிய இருங் கல் அடாஅர்"[11]

---

[1] கலி. 41:10
[2] அக. 292:11
[3] பட். 73
[4] மலை. 206
[5] மலை. 203-206
[6] நற். 108:1-4; அக. 292:7-12,309:12-15, 392:13-15; கலி. 23:1-2, 41:7-10
[7] குறு. 54:2-3
[8] நற். 206:4-6
[9] பட். 73-74
[10] நற். 119:1-2
[11] மலை. 193:194

எனவரும் அடிகளாலும், வேட்டுவர்கள் புலியைப் பிடிப்பதற்காக இதனைப் பயன்படுத்தியதை, “இரும்புலி வேட்டுவன் பொறி அறிந்து மாட்டிய பெருங்கல் அடார்”[1] என்ற புறநானூற்று அடிகளாலும் அறிந்துகொள்ள முடிகிறது.

### 5.5.2. பிற தொழில் கருவிகள்

#### 5.5.2.1. அங்குசம்

யானையை அடக்கும் கருவியான அங்குசம், தோட்டி; தாறு; காழ் அகிய பெயர்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. உரையாசிரியர்களும் அங்குசம், தோட்டி, பரிக்கோல், தாற்றுக்கோல், குத்துக்கோல், யானைப்பரிக்கோல், முட்கோல் என்ற பல பெயர்களால் இக்கருவியினைக் குறித்துள்ளனர். முல்லைப்பாட்டு அங்குசத்தைக் “கவைமுட்கருவி”[2] எனக் குறிப்பிடுகிறது.

பாகர்கள் அங்குசத்தைக்கொண்டு தங்கள் ஏவலின்படி யானைகளை நடத்திச்செல்வர்[3], மதங்கொண்ட யானைகள் அங்குசத்தைப் பொருட்படுத்தாது[4] எனப் பல இடங்களிலும் அங்குசத்தின் பயன்பாட்டைக் குறித்து சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. யானைகளைப் பராமரிக்கும் பாகர்களுக்கு இக்கருவி இன்றியமையாததாக விளங்கியது.

இவ்வங்குசங்கள் வடிவத்தில் வளைந்து காணப்பட்டது என்பதைக் “கொடுந் தோட்டி”[5] என்றும், இது இரும்பால் செய்யப்பட்டது என்பதைப் “பொன் இயல் புனை தோட்டியால்”[6] என்றும் குறிப்பிடுவது கொண்டு அறியமுடிகிறது.

#### 5.5.2.2. தாற்றுக்கோல்

குதிரைகளைச் செலுத்துவதற்கு தாற்றுக்கோல் எனப்பட்ட ஒன்றைப் பயன்படுத்தினர். சங்கப் பாடல்களில் ‘கோல்’ என்னும் சொல் பாகர்கள் குதிரையைச் செலுத்தப் பயன்படுத்திய தாற்றுக்கோலைக்(horse whip) குறிப்பிடுகிறது. இதனை, ‘வலவன் கோல் உற அறியா’[7], ‘கடுமா கடவுறூஉம் கோல்’[8], ‘கோலின் தாறுகளைந்து’[9] என்பன காட்டுகின்றன. உழவர்கள் உழும்போது எருதுகளைப் புடைத்தற்கு பிரம்பினைப்(stick) பயன்படுத்தியதை, ‘செம் சால் உழவர் கோல் புடை மதரி’[10] எனச் சுட்டுவதைக்கொண்டு அறியமுடிகிறது.

#### 5.5.2.3. மத்திகை

மத்திகை என்பது குதிரைச் சவுக்கைக் குறிக்கும். சங்கப் பாடல்களில் நான்கு இடங்களில் இச்சவுக்கைப்பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. ‘மார்பினை அழகு செய்யும் தமது முலையினை இறுக்கிய கச்சினையே சாட்டையாகக்கொண்டு தேவசேனை, வள்ளி இருவரது தோழியரும் போரிட்டுக் கொண்டனர்’[11] என்றும் ‘மாலையையே சாட்டையாகக்கொண்டு எருதினை நையப் புடைத்து’[12] என்றும் பரிபாடல் இம்மத்திகையைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளது. மேலும், ‘குதிரை கண்ணாற் கண்டு அஞ்சும் சாட்டை’[13] எனக் கலித்தொகையிலும், ‘பள்ளி அறையில் இருந்த அரசனுக்குப் பாதுகாப்பாக நின்ற ஊமை மிலேச்சர்களின் ஆடையின்

---

[1] புற. 19:5-6
[2] முல். 35
[3] பதி. 40:27; புற. 14:3; அக. 286:9
[4] குறி. 150; பதி. 53:19; பரி. 10:49; கலி. 55:21, 138:2
[5] பரி. 10:49
[6] புற. 14:3
[7] நற். 78:10
[8] கலி. 50:19
[9] பொரு. 166-167
[10] நற். 340:7
[11] பரி. 9:46
[12] பரி. 20:61
[13] கலி. 96:12

மேலே குதிரைச் சவுக்கு வளைந்து கிடந்தது'[1] என முல்லைப்பாட்டிலும் மத்திகை என்னும் சாட்டையைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. போர் மற்றும் அரசுசார் நடவடிக்கைகளில் குதிரைகளைப் பயன்படுத்திய பாகர்கள் இச்சவுக்கினைப் பயன்படுத்தினர் எனத் துணியலாம்.

### 5.5.2.4. அரம்

அறுக்கவும், அராவிக் கூர்மையாக்கவும் பயன்படும் அரம் என்ற கருவி இரும்பு உலோகத்தால் செய்யப்பட்டது. இக்கருவிக்கு அகராதிகள் அராவுங்கருவி, இரும்பைத் தேய்க்கப் பயன்படும் கருவி எனப் பொருளுரைத்துள்ளன.[2]

சங்கினை அறுத்துப் பிளந்து வளையல்கள் செய்யப்பட்டன. அச்சங்கினை அறுத்துப் பிளக்க 'அரம்' எனப்பட்ட கருவியைச் சங்ககால மக்கள் பயன்படுத்தியதைக் 'கடல் கோடு அறுத்த, அரம் போழ் அவ்வளை'[3], 'கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்த்த'[4] என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

வாளரத்தால் சங்கினை அறுத்து சங்குவளைகளைச் செய்யும் தொழிலை யாகம் செய்தலை விட்டொழித்த வேளாப் பார்ப்பான் எனப்பட்ட, ஊர்ப்பார்ப்பான் எனப்பட்டோர் செய்ததை,

> "வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த
> வளை களைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன"[5]

எனவரும் அகநானூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் கொல்லர்கள் தாங்கள் வடித்துச் செய்த கோடரிகளை அரத்தினால் அராவிக் கூர்மைப்படுத்தினர். இதனை,

> "கருங் கைக் கொல்லன் அரம் செய் அவ்வாய்
> நெடுங் கை நவியம் பாய்தலின்...."[6]

என்ற புறநானூற்றுப் பாடலைக்கொண்டு அறியமுடிகிறது. மேலும் இவ்வரத்தைக் கொண்டு அம்பு,[7] ஊசி,[8] யாழின் சில பாகங்கள்[9] போன்றவற்றையும் அராவிக் கூர்மைப் படுத்தியுள்ளனர். கொல்லர்கள் தங்கள் தொழிலுக்குப் பயன்படுத்திய பல்வேறு கருவிகளில் ஒன்றாக அரமும் விளங்கியதை மேற்குறித்த சான்றுகள் விளக்குகின்றன.

### 5.5.2.5. உளி

தச்சுத் தொழிலிலும், மீன்பிடி தொழிலிலும் 'உளி' என்ற கருவி பயன்பட்டுள்ளது. இவ்வுளிகள் கூர்மையான பருக்கைக் கற்களைப் போன்றும், பருந்தின் அலகினைப் போன்றும் காணப்பட்டதை, "உளிவாய் வெம்பரல்"[10], "உளிமுக வெம்பரல்"[11], "உளிவாய்ப் பேடை"[12] என்பன உணர்த்துகின்றன.

#### 5.5.2.5.1. பரதவர் உளி

மீன் வேட்டைக்குச் செல்லும் பரதவர்கள் கூர்மையான உளியை எறிந்து சுறா

---

[1] முல். 59
[2] http://agarathi.com/word/அரம்
[3] ஐங். 194:1
[4] குறு. 31:5
[5] அக. 24:1-2
[6] புற. 36:6-7
[7] அக. 67:5; பரி. 10:98
[8] அக. 199:8
[9] மலை. 35
[10] அக. 33:10-11
[11] அக. 55:3
[12] ஐங். 321:1

*மீன் பிடித்ததை,*

> *"...வல்வினைப் பரதவர்*
> *கூர்உளிக் கடுவிசை மாட்டலின், பாய்புஉடன்,*
> *கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடுவலை"*[1]

*என அகநானூறு குறிப்பிடுவதைக்கொண்டு மீன்பிடி தொழிலில் உளி பயன்படுத்தப்பட்டதை அறியலாம்.*

**5.5.2.5.2. தச்சர் உளி**

*தச்சன் கூர்மையான உளியைப் பயன்படுத்தி சித்திரத் தொழில் அமையச் செதுக்கி ஆரங்களைத் தைத்தற்குரிய குறட்டினை உருவாக்கியதை, "கூர் உளி பொருத வடு ஆழ் நோன் குறட்டு"*[2] *எனவும், கூரிய உளியால் இலை உருவத்தைச் செதுக்கிக் கட்டிலை உருவாக்கியதை, "வல்லோன் கூர் உளிக் குயின்ற, ஈர் இலை இடை இடுபு"*[3] *எனவும், மரங்களைக் குடைய உளி பயன்பட்டதை, "அறை வாய்க் குறுந் துணி அயில்உளி பொருத"*[4] *எனவும் குறிப்பதைக்கொண்டு, உளி தச்சுத் தொழிலில் பயன்பட்டதை அறியமுடிகிறது.*

**5.5.2.5.3. கல்தச்சர் உளி**

*கற்களில் எழுத்துக்களைச் செதுக்க உளி பயன்பட்டதை, "கூர்உளி குயின்ற கோடுமாய் எழுத்து"*[5] *என அகநானூறும் குறிப்பிடுவதைக்கொண்டு அறியமுடிகிறது.*

**5.5.2.6. ஊசி**

*சங்கப் பாடல்களில் ஊசி போரில் புண்பட்ட வீரர்களின் புண்களைத் தைப்பதற்கும், பூக்களைக் கோத்துக் கட்டுவதற்கும், கட்டில் பின்னுவதற்கும் பயன்பட்டது. நூலைக்கொண்டு ஆடை தைக்கப்பெற்றதை "துன்னற் சிதாஅர்"*[6] *எனப் பொருநராற்றுப்படை சுட்டுகிறது. இதனைக் கொண்டு ஊசி ஆடைகளைத் தைக்கப் பயன்பட்டதை அவதானிக்கலாம்.*

*போரில் வீரர்களுக்கு ஏற்பட்ட புண்னை ஊசியைக்கொண்டு தைத்தனர். புண்ணில் ஊசி நுழைத்து எடுக்கப்பட்ட காட்சி, மீன் கொத்திப் பறவை மீனைப் பிடிப்பதற்கு தன் அலகை கீழ் நோக்கியவாறு மூழ்கி எழும்போது அலகை மேல் நோக்கியவாறு எழுவதைப் போன்று இருந்ததை,*

> *"மீன்தேர் கொட்பின் பனிக் கயம் மூழ்கிச்*
> *சிரல் பெயர்ந்தன்ன நெடு வெள் ஊசி*
> *நெடுவசி பரந்த வடு வாழ் மார்பின்*
> *அம்பு சேர் உடம்பினர்"*[7]

*எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. பூக்களை ஊசியாற் கோத்து மாலையாக அணிந்ததை, "ஊசி போகிய சூழ் செய் மாலையன்"*[8] *என்பதைக்கொண்டும்.*

---

[1] *அக. 340:19-21*
[2] *சிறு. 252*
[3] *நெடு. 119*
[4] *சிறு. 52*
[5] *அக. 343:7*
[6] *பொரு. 81*
[7] *பதி. 2-5*
[8] *அக. 48:9*

*ஊசியைக் கொண்டு கட்டில் பின்னியதை, ''கட்டில் நிணக்கும் இழிசினன் கையது போழ் தூண்டு ஊசி''[1] என்பதைக் கொண்டும் தெளியலாம்.*

*ஊசிகள் அரத்தால் அராவப்பட்டு திரண்ட நுனியினைக்கொண்டு விளங்கியதை, ''அரம் தின் ஊசித் திரள் நுதி அன்ன, திண் நிலை எயிற்ற செந்நாய்''[2] எனச் செந்நாயின் வலிமையான பற்களுக்கு உவமையாகக் காட்டப்பட்டது கொண்டு அறியமுடிகிறது.*

### *5.5.2.7. துருத்தி*

*கொல்லர் உலைத் துருத்திகள் தோலால் செய்யப்பட்டன. இதை 'ஊதுஉலை விசை வாங்கு தோலின்'[3], 'மென்தோல் மதிஉலைக் கொல்லன்'[4] எனவரும் அடிகள் காட்டும்.*

### *5.5.2.8. அம்பி*

*அம்பி என்ற சொல்லுக்கு அகராதிகள் தெப்பம், தோணி, மரக்கலம், கப்பல், ஓடம், தாம்பு, இறைகூடை, கள், காராம்பி, மிடா, ஓர்ஊர், தம்பி எனப் பொருள் விளக்கம் தருகின்றன.[5] இவற்றுள் சங்கப் பாடல்களுக்கு உரை செய்த உரையாசிரியர்கள் தோணி, படகு, ஓடம், தெப்பம், விமானம் முதலிய பொருளில் அம்பி என்ற சொல்லை எடுத்தாண்டுள்ளனர்.*

*பரதவர் தோணிகளை மீன்பிடிப்பதற்காகப் பயன்படுத்தியுள்ளனர்.[6] கடலுக்குச் சென்று திரும்பிய தோணிகள் புன்னை மரங்களில் கட்டப்பெற்றிருந்தன.[7] கடலிடையே பல காலமாக ஓடிப் பழுதுபட்ட ஓட்டுவதற்குரிய தகுதியற்ற தோணிகள் கைவிடப்பட்டு அதற்குத் தூபம் காட்டி ஞாழல் மரத்தோடு சேர்ந்த புன்னையின் நிழலில் கட்டப்பெற்றிருந்ததை நற்றிணைப் பாடல்[8] காட்டுகிறது. மீனுக்கு விலையாகப் பெற்ற நெல்லை ஏற்றிச் செல்லவும்[9] தோணிகள் பயன்படுத்தப்பட்டன.*

*ஆற்றைக் கடப்பதற்கு அம்பி எனப்பட்ட ஓடங்கள் பயன்படுத்தப்பட்டன.[10] இத்தகைய ஓடங்கள் நீர்த்துறையின் இருகரையிலும் உள்ள மக்களை மாறிமாறிக் கொண்டு போய்விடும் அறச்செயலுக்குப் பயன்படுத்தியுள்ளனர்.[11] அம்பி எனப்பட்ட விமானத்தில் வைமானிகர் எனப்பட்ட தேவர்கள் செல்வதாகப் பரிபாடல்[12] குறிப்பிடுகிறது.*

#### *5.5.2.8.1. பிற கலங்கள்*

*சங்ககால நெய்தல்நில மக்கள் மீன்படிப்பதற்கும் வணிக நோக்கத்துக்காகப் பொருட்களை ஏற்றிச் செல்வதற்கும் மேற்குறித்த அம்பிகளை மட்டுமின்றி, தோணி[13], திமில்[14], நாவாய்[15], வங்கம்[16], புணை[17], கலம்[18] எனப்பட்ட பல்வேறு கலங்களைப் பயன்படுத்தியுள்ளனர். இவற்றில் கப்பல், கலம், நாவாய், வங்கம் ஆகியவை பண்டங்களை ஏற்றிச்செல்லவும், புணை, திமில், அம்பி, தோணி*

---

*[1] புற. 82:3-4*
*[2] அக. 199:8-9*
*[3] அக. 96:6-7*
*[4] பெரு. 206-207*
*[5] http://agarathi.com/word/அம்பி*
*[6] நற். 74:1-3; அக. 187:23; கலி. 106:25*
*[7] நற். 354:7*
*[8] நற். 315:1-3*
*[9] புற. 343:1-2*
*[10] அக. 29:18; புற. 261:4*
*[11] புற. 381:23-24*
*[12] பரி. 11:71*
*[13] அக. 50:1*
*[14] நற். 175:1*
*[15] நற். 296:6*
*[16] அக. 255:1*
*[17] அக. 280:9*
*[18] அக. 152:7*

*ஆகியவை மீன் பிடிக்கவும் மக்களை ஏற்றிச் செல்லவும் பயன்படுத்தப்பட்டதைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.*

### *5.5.2.9. இதை(பாய்)*

*இதை என்ற சொல்லுக்குப் பாய் என்று பொருள். நாவாய்களில் கட்டப்பட்ட பாய்களைப்பற்றி சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன.*[1] *காற்றின் ஆற்றலைப் பயன்படுத்தும் தொழில்நுட்பத்தை அறிந்த பழங்கால மக்கள் மரக்கலங்களில் இத்தகைய பாய்களைக் கயிற்றில் பிணித்துக் காற்றின் திசையறிந்து கலங்களைச் செலுத்தினர்.*

### *5.5.2.10. கட்டளைக்கல்*

*பொன்னை உரைத்து மாற்றறியப்(தரம்) பயன்படும் உரைகல்லுக்கு(touchstone) கட்டளைக்கல் என்று பெயர். சங்ககாலத்தில் இக்கட்டளைக்கல் புழக்கத்தில் இருந்ததை, "கட்டளை அன்ன மணி நிறத் தும்பி"*[2]*, "கட்டளை அன்ன கேழல்"*[3]*, "மின்னின் தூவி இருங் குயில், பொன்னின் உரை திகழ் கட்டளை கடுப்ப"*[4] *எனத் தும்பி, பன்றி, குயில் முதலியனவற்றுக்கு*[5] *உவமையாகக் குறிப்பிடப்படுவதிலிருந்து அறிந்து கொள்ள முடிகிறது.*

### *5.5.2.11. தாம்பு*

*ஆடுமாடுகளை முளைகளில் கட்டி வைப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட கயிறு தாம்பு எனப்பட்டது. மேய்த்தல் தொழிலை வாழ்வாதாரமாகக்கொண்ட கோவலர் இல்லங்களிலும், உழவுத்தொழிலை மையமாகக்கொண்ட உழவர் இல்லங்களிலும் காணப்பட்ட ஆடுமாடுகளையும் அவற்றின் கன்றுகளையும், இத்தகைய தாம்புகளினால் பிணித்து வீடுகளின் முற்றங்களில் இருந்த முளைகளில் கட்டினர். இதனை, "மதவு நடைத் தாம்பு அசை குழவி"*[6]*, "சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்"*[7]*, "பகட்டுஆ ஈன்ற கொடுநடைக் குழவிக் கவைத்தாம்பு தொடுத்த காழ்ஊன்று அல்குல்"*[8] *என்ற பாடலடிகள் காட்டுகின்றன.*

*கன்றுகளைத் தாம்பினால் பிணித்து கையில் பற்றிக்கொண்டு அருகிலுள்ள தோட்டத்திற்கு ஓட்டிச் சென்று பிறகு வீடு திரும்புவதையும்,*[9] *வெள்ளாடுகளும், செம்மறியாடுகளும் நீண்ட கயிற்றால் வீட்டின் முற்றத்தேயிருந்த முளைகளில் கட்டப்பட்டிருந்ததையும்*[10] *சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.*

### *5.5.2.12. கழு*

*ஆயர்கள் 'கழு' எனப்பட்ட கருவியினை வைத்திருந்தனர். இதனை, "கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்"*[11] *எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது. இதற்குக் "காளைகளை அடக்க அவற்றின் கழுத்தில் பிணிக்கும் கிட்டி"*[12] *என்றும், "கழுவாவது கறத்தற்கரிய பசுக்களைக் கறத்தற்கு இரண்டு தலையுஞ் சீவி மாலையாகக்கட்டிக் கழுத்தில் இடுவது"*[13] *என்றும் பொருள் விளக்கம்*

---

[1] *மது. 79, 376, 536; பரி. 10:53*
[2] *ஐங். 215:1*
[3] *ஐங். 263:2*
[4] *குறு. 192:3-4*
[5] *நற். 3:2-4; அக. 25:3-4, 178:11; பெரு. 220-221*
[6] *அக. 54:7*
[7] *முல். 12*
[8] *பெரு. 244*
[9] *கலி. 111:1-2, 116:1-2*
[10] *பெரு. 147-154*
[11] *கலி. 106:1*
[12] *நாராயண வேலுப்பிள்ளை, எம்., கலித்தொகை மூலமும் உரையும், ப. 307*
[13] *1. கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், http://www.tamilvu.org/slet/l1260/l1260exp.jsp?x=680&y=635&z=102 2. http://agarathi.com/word/கழு*

தரப்பெற்றுள்ளது. இது குற்றம் செய்தவர்களையும் பகைவர்களையும் தண்டிப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட கழுவினும் வேறானது.

### 5.5.2.13. சுடுபடை

மாடுகளுக்குச் சூடுபோடப் பயன்படுத்தப்பட்ட கோல் ‘சுடுபடை’ எனக் குறிப்பிடப்படுகிறது. இதனைச் சுடுகோல், சூட்டுக்கோல் எனவும் குறிப்பிடுவர். மேய்த்தல் தொழிலை மேற்கொண்டிருந்த கோவலர்கள், மேய்ச்சலுக்குக் கால்நடைகளை ஓட்டிச் செல்லும்போது இதை உடன் கொண்டுசென்றதை, “கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்”[1] எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது.

இச்சூட்டுக்கோல் மாடுகளுக்கு ஏற்படும் நோய்களைக் குணப்படுத்த மாடுகளின் உடம்பில் குறிப்பிட்ட இடத்தில், குறிப்பிட்ட வடிவங்களில் சூடு போடுவதற்காகப் பயன்படுத்தப்படுகிறது. நரம்புகளுக்கு விரைப்புக் கொடுத்து நோயைக் குணமாக்கவே மாடுகளுக்குச் சூடுபோடுகின்றனர். இரும்புக் கம்பியான இக்கோலினை, உருக்கிய இரும்போடு சில மூலிகைகளைச் சேர்த்துத் தயாரிக்கின்றனர்.[2] என்ற நாட்டுப்புறவியல் ஆய்வாளர் கழனியூரனின் பதிவு கவனிக்கத்தக்கது.

மேற்குறித்த செய்தியை அடிப்படையாகக்கொண்டு பார்க்கும்போது கோவலர்கள் தங்கள் கால்நடை மேய்ப்புத் தொழிலில் அவற்றுக்கு ஏற்படும் நோய்களைக் குணப்படுத்தும் மருத்துவ முறைகளையும் தெரிந்துவைத்திருந்தனர் என்பது, ‘சுடுபடை’ என்னும் இக்கருவியை நோக்கப் புலப்படும்.

### 5.5.2.14. கணிச்சி

கணிச்சி என்னும் சொல்லுக்கு மழு, கோடரி, தோட்டி, உளி, குந்தாலி என அகராதிகள்[3] பொருளுரைக்கின்றன. கோவலர்கள் தங்கள் பசுக்கள் நீருண்ண வேண்டி காட்டிடையேயுள்ள வன்னிலங்களில் குழிதோண்டுவதற்குக் கணிச்சி எனப்பட்ட குந்தாலியினைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

> “வெயில் வெய்துற்ற பரல் அவல் ஒதுக்கில்,
> கணிச்சியில் குழித்த கூவல் நண்ணி,
> ஆன் வழிப் படுநர் தோண்டிய பத்தல்”[4]

என்றும், “கணிச்சியின் குழித்த உடைக்கண் நீடு அமை ஊறல்”[5], “பரல் மண் சுவல முரண் நிலம் உடைத்த வல் வாய்க் கணிச்சி”[6] என்றும் வரும் அகப்பாடல்கள் விவரிக்கின்றன. இக்கருவி இரும்பால் செய்யப்பட்டிருந்ததை, “பொன் செய் கணிச்சித் திண் பிணி உடைத்து”[7] எனச் சுட்டுவதைக்கொண்டு அறியமுடிகிறது.

### 5.5.2.15. மழு/நவியம்

மழு, நவியம் என்பன ஒரு பொருள் குறித்த சொற்கள், இவ்விரு சொற்களும் கோடரி என்ற ஒருபொருளைக் குறிக்கின்றன. இவ்விரு சொற்களையும் சங்கப் புலவர்கள் எடுத்தாண்டுள்ளனர்.

---

[1] கலி. 106:1
[2] கழனியூரன், நாட்டர் மாட்டு வாகடம் (எ) பசு வைத்தியம், http://www.uyirmmai.com/ContentDetails.aspx?cid=621
[3] http://agarathi.com/word/கணிச்சி
[4] நற். 240:6-8
[5] அக. 399:6-7
[6] அக. 21:21-22
[7] பதி. 22:12

மேய்த்தல் தொழில் செய்வதைக் குலத் தொழிலாகக்கொண்ட கோவலர்கள் தங்கள் மாடுகளுக்கும், ஆடுகளுக்கும் தேவையான இலை தழைகளை மரத்திலிருந்து வெட்டி முறிக்கவேண்டி முழு எனப்பட்ட கோடரிகளைப் பயன்படுத்தினர். இதனை "விழுத்தண்டு ஊன்றிய மழுத்தின் வன்கை"[1] எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

தச்சர்களும் தங்கள் தொழிலுக்குத் தேவையான மரங்களைக் காட்டிலிருந்து வெட்டிக் கொண்டுவர இம்மழுவினைப் பயன்படுத்தியதை "மரம் கொல் தச்சன் கைவல் சிறாஅர்; மழுவுடைக் காட்டகத்து அற்றே"[2] என்ற புறநானூற்றுப் பாடலடிகள் காட்டுகின்றன.

வீரர்கள் தங்கள் பகைவரின் காவல் மரங்களை வெட்டுவதற்கும் 'நவியம்' எனப்பட்ட கோடரிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.[3] இரும்பினாலான இத்தகைய கோடரிகள் கொல்லனால் உலைக்களத்தில் வடித்து அரத்தினால் அராவி கூர்மையாக்கப்பட்டுச் செய்யப்பட்டதை, "வடி நவில் நவியம்"[4], "கருங்கைக் கொல்லன் அரம்செய் அவ்வாய் நெடுங்கை நவியம்"[5] என்ற பாடலடிகள் உரைக்கின்றன.

### 5.5.2.16. ஆனிரை மேய்த்தலில் வாள்

ஆனிரைகளின் பசி தீரும் பொருட்டுக் கூர்மை மிக்க வாளால் கோவலர்கள் வேங்கை மரத்தின் பூக்கள் உதிருமாறு தழை செறிய அமைந்த கிளைகளை வெட்டிக் கழிப்பதற்காக வாளினைப் பயன்படுத்தியதை,

> "பசித்த ஆயத்துப் பயன் நிரை தருமார்,
> பூ வாள் கோவலர் பூவுடன் உதிரக்
> கொய்து கட்டு அழித்த வேங்கையின்"[6]

என்ற புறநானூற்று அடிகள் விளக்கக் காணலாம்.

### 5.5.2.17. தூண்டில்

சங்கத் தொகை நூல்களில் உணவுத் தேடலிலும், தொழில் முறைப் பணிகளிலும் பயன்படுத்தப்பட்ட எண்ணற்ற கருவிகளுள் வலையும் தூண்டிலும் மீன்படி தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்ட மிகமுக்கியமான கருவிகள். கடலில் சென்று மீன்வேட்டம் செய்யும் பரதவர்களும், ஊர்ப்புற நீர்நிலைகளான ஆறு, ஏரி, குளம், காய்வாய் போன்றவற்றில் மீன் பிடிக்கும் ஊர்ப்புறத்தைத் சார்ந்த வலைஞரும், பிறரும் தூண்டிலைப் பயன்படுத்தி மீன் படித்துள்ளனர்.

பரதவர் கடலுக்குச் செல்லும்போது வலைகளுடன் தூண்டிலையும் கொண்டு சுறா மீன் பிடிக்கச் சென்றதை, "வளை நீர்க் கடுஞ்சுறா எறிந்த கொடுந் திமிற் பரதவர் வாங்கு விசைத் தூண்டில் ஊங்குஊங்கு ஆகி"[7], "வலையும் தூண்டிலும் பற்றி, பெருங்கால் திரை எழு பௌவம் முன்னிய கொலை வெஞ் சிறாஅர்"[8] என்ற நற்றிணைப் பாடலடிகள் காட்டுகின்றன.

---

[1] பெரு. 170
[2] புற. 206:11-12
[3] புற. 23:8-9, 36:6-7
[4] புற. 23:8
[5] புற. 36:6-7
[6] புற. 224:14-16
[7] நற். 199:5-7
[8] நற். 207:10-12

*கிணைமகள், தூண்டிலில் பிடித்த மீனைப் பண்டமாற்றுச் செய்து கிடைத்த பொருளில் புளிங்கூழ் சமைத்ததை,*

> *“நெடுங்கழைத் தூண்டில் விடுமீன் நொடுத்து,*
> *கிணைமகள் அட்ட பாவல் புளிங்கூழ்”[1]*

*என்ற புறநானூற்றுப் பாடலடி தெரிவிக்கிறது. மருதநில நீர்நிலைகளில் உழவர்களும், தூண்டில் வேட்டுவோரும் தூண்டிலைக்கொண்டு வராஅல் மீன்களைப் பிடித்ததை,*

> *“நிலையோர் இட்ட நெடுநாண் தூண்டில்,*
> *பிடிக்கை அன்ன செங்கண் வராஅல்”[2]*
>
> *“தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது,*
> *கயிறு இடு கதச் சேப் போல”[3]*

*எனவரும் பாடலடிகள் காட்டுகின்றன. இரையினைக் கோர்க்கப் பயன்படுத்தப்பட்ட தூண்டில் முள் “கொடுவாய் இரும்பு”[4] என்ற பெயரால் சுட்டுவதை அகநானூறு குறிப்பிடுகிறது.*

***5.5.2.18. மீனவர் வலை***

*நெய்தல் நில மக்களின் வாழ்வாதாரத் தேவைகள் அனைத்தும் மீன்பிடி தொழிலை அடிப்படையாகக்கொண்டே அமைகின்றன. இத்தொழிலை மேற்கொள்ளும் மீனவர்களுக்கு வலை இன்றியமையாத கருவியாகத் திகழ்கின்றது. வலை எனப் பொதுவான பெயரால் குறிப்பிடப்பட்டாலும், ‘பெருவலை’[5], ‘நெடுவலை’[6], ‘நுண்வலை’[7], ‘குறும்கண் அவ்வலை’[8] என்பன மீன்பிடி வலைகளுக்கிடையே உள்ள நுட்பமான வேறுபாடுகளைச் சுட்டிக் காட்டுகின்றன.*

*இத்தகைய வலைகளைக்கொண்டு பரதவர் விடியற்காலையில் கடலுக்குள் சென்று மீன் பிடித்ததை, “நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்”[9], “உரவுக் கடல் உழந்த பெரு வலைப் பரதவர்”[10] என்ற அகப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மீன் பிடித்த வலைகள் குடில்களுக்கு எதிரே இருந்த மணற்பரப்பில் உலர்த்தப்பட்டிருந்ததை, “வலை உணங்கும் மணல் முன்றில்”[11], “அவ்வலைப் பரதவர் கானல்அம் சிறுகுடி”[12] என்றும் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன.*

*பரதவர் வலையும் தூண்டிலும் கொண்டவராய் கடலுக்கு மீன் பிடிக்கச் சென்றதை, “வலையும் தூண்டிலும் பற்றிப் பெரும் கால் திரை எழு பெளவம் முன்னிய”[13] என்றும், அவ்வலை நுண்ணிய தன்மை கொண்டதாக காணப்பட்டதை, “நுண் வலைப் பரதவர்”[14] என்றும் குறிப்பதைக்கொண்டு அறியலாம். இவ்வலைகளைக்கொண்டு பலவகையான மீன்கள் பிடிக்கப்பட்டன. இதனை,*

> *“நெடுங் கயிறு வலந்த குறுங் கண் அவ் வலைக்*
> *கடல் பாடு அழிய, இனமீன் முகந்து”[15]*

---

*[1] புற. 399:15-16*
*[2] மலை. 456-457*
*[3] அக. 36:6-7*
*[4] அக. 36:2*
*[5] நற். 63:1, 74:1*
*[6] அக. 340:21*
*[7] குறு. 184:6*
*[8] அக. 70:3*
*[9] அக. 300:1*
*[10] நற். 63:1*
*[11] பட். 83*
*[12] அக. 250:11*
*[13] நற். 207:10*
*[14] குறு. 186:6*
*[15] அக:30:1-2*

என்றும், இறால் மீன்களோடு பிற மீன் வகைகளையும் பிடித்ததை, "இருங் கழி முகந்த செங்கோல் அவ்வலை முடங்குபுற இறவோடு இனமீன் செறிக்கும்"[1] என்றும், வலைகளைக் கிழிக்கும் பெரிய சுறாக்களைப் பிடித்ததை, "கோட்சுறாக் கிழித்த கொடுமுடி நெடு வலை"[2] என்றும் அகநானூறு குறிப்பிடுகிறது. பாணர்களும் வலைகளைப் பயன்படுத்தி மீன் பிடித்ததை, "வலைவல் பாண்மகன்"[3] என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

### 5.5.2.18.1. வேட்டுவர் வலை

வேடர்கள் விலங்குகளையும், பறவைகளையும் பிடிக்க வில், ஈட்டி முதலியவற்றோடு வலைகளையும் பயன்படுத்தி புறா[4], மயில்[5], கொக்கு[6] போன்ற பறவைகளையும் மான்[7], புலி[8], யானை[9] போன்ற விலங்குகளையும் பிடித்தனர். கானவர்கள் வேலியில் தொடர் வலைகளைக்கட்டி புதர்களிலிருந்து வெளிவரும் முயல்களைப் பிடித்தனர்.[10] பலாப்பழங்களை உண்ணவரும் குரங்குகளிடமிருந்து அவற்றைப் பாதுகாக்க கானவர் வலைகளைப் பயன்படுத்தியதை, "கடியுடை மரம்தொறும் படு வலை மாட்டும்"[11] எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது.

### 5.5.2.19. சகடம்

மக்கள் பயணம் செய்யவும், பொருட்களை ஏற்றிச் செல்லவும் பயன்பட்ட வண்டி 'சகடம்' என்ற பெயரால் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சகடத்தின் தோற்றத்தை "கொழுவிய வட்டையிலே செருகப்பட்டுத் திருந்திய நிலையினையுடைய ஆரம்; மத்தளம் போன்று, முழுமரத்திலே கடையப்பெற்ற உருளி; கணைய மரங்களை இணைத்தாற் போன்ற வலிய பார்; மழைக் காலத்தே மழை முகிலைச் சுமந்தாற் போன்ற தாளிப்பனை ஓலையால் செய்த பாயால் வேயப்பட்ட கூரை இத்தகைய உறுப்புக்களைக்கொண்டு சகடம் காணப்பட்டது"[12] எனப் பொரும்பாணாற்றுப்படை விவரிக்கிறது.

கூத்தர்கள் நீரில் வாழும் முதலையின் அங்காந்த வாயினைப் போன்ற பாயால் வேயப்பெற்ற வண்டியில் அமர்ந்து சென்றதை,"நீர் வாழ் முதலை ஆவித்தன்ன ஆரை வேய்ந்த அறை வாய்ச் சகடத்து"[13] என அகநானூறு குறிப்பிடுகிறது. உமணர்கள் இத்தகைய வண்டிகளில் உப்பை ஏற்றிக் கொண்டுசென்று விற்றதை,

> ".... உமணர்
> வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி
> கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்"[14]

என நற்றிணையும், 'உப்புஓய் சகடம்'[15] எனக் குறுந்தொகையும் குறிப்பிடுகிறது. இத்தகைய உப்பு வண்டிகளை இழுத்துச் செல்ல இளம் எருதுகள் பயன்படுத்தப்பட்டன.[16] காளைகளும், கோவேறு கழுதைகளும் பூட்டப்பட்ட வண்டிகளில் மக்கள் வையை நீராடச் சென்றதைப் பரிபாடல் காட்டுகிறது. மேற்குறித்த சான்றுகள் பண்டைக்காலத்தில் வண்டிகள் பயணம் செய்வதற்கும் பாரம் சுமப்பதற்கும் பயன்பட்டதை உணர்த்துகின்றன.

---

[1] அக.220:16-17
[2] அக. 340:21
[3] ஐங். 48:1ண
[4] நற். 189:7
[5] குறு. 244:5; கலி. 128:16; குறி. 250
[6] அக. 290:4
[7] நற். 190:8; அக. 7:11
[8] கலி. 65:24
[9] கலி. 97:6
[10] பெரு. 113-115
[11] குறு. 342:3
[12] பெரு. 46-50
[13] அக. 301:6-7
[14] நற். 4:7-9
[15] குறு. 165:3
[16] புற. 102:1-4

### *5.5.2.20. கலப்பை*

*இசைக் கலங்களை வைத்துக் கொண்டுசெல்லப் பயன்படுத்தப்பட்ட பை கலப்பை எனப்பட்டது. இப்பையினைப் பாணர், கூத்தர் முதலிய கலைஞர்கள் வைத்திருந்ததால் அவர்கள் 'கலப்பையர்'[1] எனவும் சுட்டப்பட்டுள்ளனர்.*

*இசைக் கலங்களை இட்டுக் கட்டப்பட்ட பைகளைக் காவடி போல் பாணர்கள் தூக்கிச் சென்றதை, 'காவில் தகைத்த துறை கூடு கலப்பையர்'[2] எனப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. கூத்தர்கள் கூத்து முடிந்தவுடன் பலவகை இசைக்கருவிகளையும் பையினுள் இட்டு அதன் தலையினைச் சேர்த்துக் கட்டி எடுத்துச் செல்லுவர். இதனை,*

> *"பல்ஊர் பெயர்வனர் ஆடி, ஒல்லென,*
> *தலைப்புணர்த்து அசைத்த பல்தொகைக் கலப்பையர்"[3]*

*என அகநானூறு குறிப்பிடுகிறது. இவ்வாறு இசைக்கருவிகளைப் பையிலிட்டு முடிச்சுகளாகக் கட்டி காவடிபோல் தூக்கிச் சென்ற காட்சி, பலாமரத்தில் பலாக் காய்கள்களின் கொத்துபோல ஒத்த கனத்தை உடையனவாக இருந்ததை,*

> *"கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப*
> *நேர்சீர் சுருக்கில் காய கலப்பையிர்"[4]*

*என மலைபடுகடாம் குறிப்பிடுகிறது. மேற்குறித்த சான்றுகள் பாண்கலைஞர்கள் இசைக் கருவிகளைத் தாங்கள் செல்லும் இடங்கள்தோறும் கொண்டு செல்ல பைகளைப் பயன்படுத்தியதை உணர்த்துகிறது.*

### *5.5.2.21. கற்கருவிகள்*

*எயிற்றியர் பூண்கட்டிய சிறிய கோலில் செருகப்பட்ட உளிபோலும் வாயை உடைய பாறைகளால் நிலத்தைக் குத்திக் கிளரிப் புழுதியை அளைத்துப் புல்லரிசியை எடுத்ததை,*

> *"இரும்பு தலை யாத்த திருந்து கணை விழுக் கோல்*
> *உளி வாய்ச் சுரையின் மிளிர மிண்டி,*
> *இரு நிலக் கரம்பைப் படு நீறு ஆடி,*
> *நுண் புல் அடக்கிய வெண் பல் எயிற்றியர்"[5]*

*எனக் குறிப்பிடுவதைக்கொண்டு, கூரிய கற்களை எயினர்கள் கருவியாகப் பயன்படுத்தியதை அறியமுடிகிறது.*

### *5.5.2.22. வில் வேட்டைக் கருவி*

*மலைசார்ந்த பகுதிகளில் வாழ்ந்த கானவர் எனப்பட்ட வேட்டுவர்களின் வாழ்வாதாரமாக விளங்கிய வேட்டைத் தொழிலுக்கு முதன்மையான கருவியாக இருந்தது வில். இக்காரணத்தினாலேயே இவர்களை 'வில் உழுது உண்மார்'[6] என்றும் 'வில் ஏர் வாழ்க்கை'[7] உடையவர்கள் என்றும் அக்காலப் புலவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளனர்.*

---

[1] பதி. 15:26, 23:4
[2] பதி. 41:5
[3] அக. 301:21-22
[4] மலை. 12-13
[5] பெரு. 91-94
[6] புற. 170:4
[7] புற. 331:2

இக்கானவர்களின் வாழ்க்கையில் வில் பெற்றிருந்த முக்கியத்துவத்தை 'வல்விற் கானவர்'[1], 'கொடுவிற் கானவர்'[2], 'சிலைவிற் கானவன்'[3], 'வல்வில் வேட்டுவன்'[4], 'கொலைவில் வேட்டுவன்'[5], 'கொடுவிற் கூளியர்'[6] என வரும் அடைமொழிகள் உணர்த்துகின்றன. இவ்விற்படையைக் கொண்டிருந்த காரணத்தினால் ஓரி, 'வல்வில் ஓரி'[7] எனப்பட்டான்.

குறவர்கள் தங்கள் தினைப்புனத்திலுள்ள தினைக்கதிர்களை உண்ண வரும் யானை, பன்றி போன்ற விலங்குகளைத் துறத்த வில்லினைப் பயன்படுத்தினர்.[8] வேட்டுவர்கள் இவ்வில்லைக்கொண்டு இறைச்சிக்காகக் காட்டுப்பசுவினையும், தந்தத்துக்காக யானைகளையும் கொன்று விற்பனை செய்தனர்.[9] புலி, மான், பன்றி, உடும்பு போன்றவற்றையும் வேட்டையாடினர்.[10] வேட்டையில் கிடைத்த பன்றி முதலியவற்றைத் தன் சுற்றத்தார்க்கும் பகிர்ந்தளித்தனர்.[11]

வில்லினின்றும் புறப்பட்ட அம்பின் ஓசை குரங்குகளையும் அஞ்சச்செய்தது[12] என்பதைக்கொண்டு அதன் விசையை உணரலாம். எய்த அம்புகள் மீண்டும் மீண்டும் பயன்படுத்தப்பட்டதால் வில்லில் புலால்நாற்றம் வீசியதையும்[13] சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

#### 5.5.2.22.1. வில் - கொலைக் கருவி

கானவர், எயினர், மறவர் முதலிய பெயர்களால் குறிப்பிடப்படும் ஆறலை கள்வர்கள் வழியிடைச் செல்லும் மக்கள், வணிகர் போன்றோரின் கைப்பொருளைக் கொள்ளையிட்டு அதனால் பெற்ற பொருளைக்கொண்டு வாழும் வாழ்வினராய்த் திகழ்ந்துள்ளனர். இவர்கள் அம்மக்களின் பொருட்களைக் கொள்ளையிடுவதற்காக அவர்களின்மேல் அம்பு எய்து கொன்றனர். இதனை, 'கொடு வில் கானவர் கணை இடத் தொலைந்தோர்'[14], 'இலை மாண் பகழிச் சிலை மாண் இரீஇய அன்பு இல் ஆடவர்'[15], 'செம் கணைச் செறித்த வன்கண் ஆடவர்'[16] என்பன சான்று பகர்கின்றன.

#### 5.5.2.23. வேல்

ஆறலைகள்வர் வழிச்செல்வாரைக் கொல்லுவதற்கு வேலைப் பயன்படுத்தினர். இதனை, "கூற்றத்து அன்ன கொலை வேல் மறவர் ஆற்றுஇருந்து அல்கி வழங்குநர்ச் செகுத்த"[17] எனவரும் குறுந்தொகைப் பாடலடி உணர்த்தும்.

### 5.6. போர்க்கருவிகள்

#### 5.6.1. வில்

சங்ககால மக்கள் பயன்படுத்திய இன்றியமையாத கருவிகளுள் குறிப்பிடத்தக்க ஒன்றாக 'வில்' விளங்கியது. தொடக்கக் காலத்தில் வேட்டைக் கருவியாக இருந்த இது, பிற்காலத்தில் போர்க்கருவியாகப் பரிணாமம் அடைந்தது. இக்கருவியைச் 'சாபம்' என்ற சொல்லாலும் சங்கப்புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

---

[1] அக. 282:2
[2] குறு. 333:1; நற். 75:6
[3] குறு. 385:2
[4] புற. 150:7
[5] பதி. 30:9
[6] மலை.422
[7] புற. 158:5; குறு. 100:5; நற். 6:9
[8] குறு. 333:1-2; நற். 336:1-5
[9] பதி. 30:9-13; நற். 65:5-7; அக. 282:1-3, 388:10-15
[10] புற. 150:7, 152:1-6
[11] நற். 75:6-7, 336:1-5
[12] குறு. 385:2
[13] மது. 142; பதி. 75:15
[14] அக. 231:5
[15] நற். 352:1-2
[16] நற். 329:6
[17] குறு. 283:5-6, 390

சங்ககால மக்கள் பண்பாட்டில் வில்லின் பயன்பாட்டை வேட்டை, போர் என்ற இரண்டு நிலைகளில் பகுத்துக் காணலாம். தொடக்கக் காலத்தில் இனக்குழுச் சமூகமாக வாழ்ந்த மக்கள் உணவுத் தேவைக்காகவும், விலங்குகளிடமிருந்து தற்காத்துக்கொள்ளவும் பயன்படுத்தப்பட்ட வில் உடைமைச் சமூகமாக மாறிய காலகட்டத்தில் போர்க் கருவியாக மாற்றமடைந்தது.

வேட்டைச் சமூகமாகக் காணப்பட்ட குறிஞ்சி நிலப்பகுதிகளில் வில் வேட்டைக் கருவியாகவும், உபரி உற்பத்தி, வணிகம், அரசு, படை, அரண் என்ற நிலைகளில் வளர்ச்சி பெற்றிருந்த மருதநில உடைமைச் சமூகத்தில் வில் போர்க்கருவியாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளதைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

### 5.6.1.1. போர்க் கருவி

முல்லைக் காட்டில் மேயும் ஆனிரைகளுக்கு வில்வீரர்கள் காவலிருந்தனர்.[1] அத்தகைய ஆனிரைகளை வில்லாற்றல் மிக்க வெட்சி வீரர்கள் கவர்ந்து சென்றனர்.[2] மீட்கவந்த கரந்தை வீரர்களை வெட்சி வீரர் வில்லில் அம்பு தொடுத்து விரட்டியதையும்,[3] அப்போர்களில் வீரர்கள் உயிர் நீத்ததையும்[4] குறிப்பிடும் சங்கப் பாடல்கள், விற்படை கொண்டு போரிட்டு இறந்துபட்ட வீரனுக்கு நடுகல் நடப்பட்டதையும்[5] கூறுகின்றது.

சங்ககாலச் சமூகத்தில் விற்படைகளைக் கொண்ட மதில்களும்,[6] அரண்களும்,[7] விற்படை நிலைபெற்ற காவற்காடுகளும்[8] இருந்தன. மேலும், விற்தொழில் அறிந்த வீரர்கள் வில்லைக் கொண்டு போர் புரிந்துள்ளனர்.[9] வலிய வில்லைக் கொண்டவர்களாக ஓரியும்,[10] நன்னனும்,[11] பரதவர் தலைவனும்,[12] விச்சியர் தலைவனும்,[13] குறிப்பிடப்படுகின்றனர்.

சேர அரசர்களின் காவல் ஆயுதமாக வில் குறிப்பிடப்படுகிறது.[14] போரில் இவர்களின் வெற்றி வில்லினால் கிடைத்ததாகக் குறிப்பிடப்படுவதும்[15] இங்கு நோக்கத்தக்கது.

### 5.6.1.2. வில் செய்யப்பட்ட விதம்

வில் சிலை மரத்தால் செய்யப்பட்டது. ‘சிலை விற் பகழிச் செந்துவர் ஆடைக் கொலைவில் எயினர்’[16], ‘அரிமான் இடித்தன்ன, அம் சிலை வல்வில்’[17] என வருவனவற்றைக்கொண்டு இதனை அறியலாம். வில்லினைச் சுற்றிக் கட்டுவதற்கு மயில் தோகையின் நீண்ட வார் பயன்படுத்தப்பட்டது.[18] வேட்டுவச் சிறுவர்கள், உடை மரத்தின் முட்களை, ஊகம்புல்லின் நுனியில் செருகி அம்புகளாகவும், மெல்லிய கொம்புகளாகிய வளாரினை வில்லாக வளைத்தும், பருத்திச் செடிகளுக்கிடையில் மறைந்திருந்து எலிகளைப் பிடித்ததைப் புறநானூறு[19] குறிப்பிடுகிறது.

---

[1] புற. 386:13
[2] புற. 257:4, 258:5, 259:3, 261:11; அக. 372:10; நற். 100:8
[3] அக. 309:1
[4] புற. 263:7, ஐங். 352:1
[5] அக. 387:13-15
[6] மலை. 226
[7] புற. 336:21
[8] பதி. 78:9
[9] நற். 384; குறு. 275:6
[10] அக. 209:13
[11] மலை. 63
[12] புற. 226:7
[13] குறு.328:5
[14] புற. 39:15; அக. 396:17; சிறு. 48
[15] பதி. 70:5
[16] ஐங். 363:1-2
[17] கலி. 15:1
[18] அக. 281:4-7
[19] புற. 324:1-8,322;1-4

### *5.6.2. அம்பு*

*சங்ககாலச் சமூகத்தில் விலங்கு வேட்டையிலும், போர்களிலும் பயன்படுத்தப்பட்ட கருவிகளில் குறிப்பிடத்தக்கது வில். அவ்வில்லோடு இணைந்த கருவியாக விளங்குவது அம்பு. அம்புகள் வில்லினைக் கொண்டு எய்யப் பெற்றதை, 'வில் விசை உமிழ்ந்த வைம்முள் அம்பின்'[1], 'வெறி கொள் சாபத்து எறி கணை'[2], 'வில் உமிழ் கணை'[3], 'வில் உமிழ் கடும் கணை'[4], 'எய் கணை'[5] எனச் சுட்டுவனவற்றைக் கொண்டு அறியலாம். இத்தகைய அம்புகளைச்(arrow) சங்கப்பாக்கள் ஏ, கணை, பகழி, கோல், வாளி என்ற பல பெயர்களில் குறிப்பிடுகின்றன.*

*கோலினைக்கொண்டு அம்புகள் (arrow) செய்யப்பட்டன. இதனை, 'செம் கோல் அம்பு'[6], 'செம் கோல் வாளி'[7], 'வார் கோல் அம்பினர்'[8], என வருவன சுட்டுகின்றன. கோலின்(அம்பு) நுணியில் மட்டும் இரும்பு பொருத்தப்பட்டிருந்ததை, 'பொன் புனை பகழி'[9] எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது. கோலின் முனையில் பொருத்தப்பட்ட அம்பு நன்கு வடித்து உருவாக்கப் பெற்றதை, 'வடி நவில் அம்பு'[10] என உரைக்கப்பெற்றுள்ளது. எய்த அம்புகளை மீண்டும் மீண்டும் பயன்படுத்தினர். இதனை வில்லில் புலால்நாற்றம் வீசியதாகக் குறிப்பிடுவது கொண்டு அறியமுடிகிறது.[11] அம்புகளை எடுத்துச்செல்ல 'தூணி' எனப்பட்ட அம்புக் கூடுகள் பயன்படுத்தப்பட்டன.*

*பகை நாட்டின் மீது போர் தொடுக்கும் போதும். அரண் காத்தலின் போதும் வில்லும் அம்பும் முதன்மையான படைக்கருவிகளாகத் திகழ்ந்தன. கோட்டை வாயில்களில் அம்பினை உடைய படை காணப்பட்டதை, 'எயில் எறி வல் வில்'[12], 'எந்திரத் தகைப்பின் அம்பு உடை வாயில்'[13], 'அம்பு துஞ்சும் கடி அரண்'[14], 'அம்பு உடை ஆர் எயில்'[15], 'கூர் நல் அம்பின் கொடு வில் கூளியர்'[16] என்பனவும், போரில் எய்த அம்பினால் மார்பு புண்பட்டிருந்ததை, 'எய் கணை கிழித்த பகட்டு எழில் மார்பின்'[17] எனச் சுட்டுவதைக்கொண்டு அம்பு படைக் கருவியாகத் திகழ்ந்ததை விளங்கிக்கொள்ளலாம்.*

### *5.6.3. தூணி*

*வீரர்கள் அம்புகளை இட்டுவைப்பதற்குப் பயன்படுத்திய கூடு(புட்டில்) 'தூணி' என்ற பெயரால் குறிப்பிடப்படுகிறது. இதனை, 'வில்லோர் தூணி'[18], 'வல்வில் தூணி'[19], 'கவர்கணைத் தூணி'[20] என சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன. இத்தூணிகளில் பூ வேலைப்பாடு செய்யப்பட்டிருந்ததையும் அதில் அம்புகள் இட்டு வைத்திருந்ததையும் 'பொறி கிளர் தூணி புற்று அடங்கு அரவின் ஒடுங்கிய அம்பின்'[21] என்ற பதிற்றுப்பத்துப் பாடலடிகள் விளங்குகின்றன.*

*இதன் வடிவம் பாலை நிலத்தில் வேனிற்காலத்து மலரும் இருப்பை மரத்தின் அரும்புகளை ஒத்திருந்ததனை 'யாத்த தூணித் தலைதிறந்தவைபோல்,*

---

[1] *பதி. 33:8*
[2] *நற். 228:7*
[3] *குறு. 231:6*
[4] *மலை. 226*
[5] *நற். 46:2*
[6] *குறு. 1:2*
[7] *நற். 164:6; குறு. 272:6*
[8] *அக. 239:4*
[9] *குறு. 16:2*
[10] *புற. 168:16; நற். 48:7*
[11] *மது. 142; பதி. 71:15*
[12] *பதி. 58:10*
[13] *பதி. 53:7*
[14] *புற. 20:16*
[15] *பதி. 20:19*
[16] *புற. 23:5*
[17] *புற. 13:3*
[18] *அக. 9:2*
[19] *முல். 39*
[20] *சிறு. 238*
[21] *பதி. 45:1-2*

பூத்த இருப்பைக் குழைபொதி குவிஇணர்'[1] என்ற அகநானூற்றுப் பாடலடி காட்டுகிறது.

### 5.6.4. வேல்

பழங்கால மக்களால் பயன்படுத்தப்பட்ட மிக முக்கியமான போர் கருவி 'வேல்' இது 'எஃகு' என்ற பெயராலும் சங்கப் பாக்கள் குறிப்பிடுகிறது. இதனை "வேல் மிகு தானை"[2], "வேல் கெழு தானைச் செழியன் பாசறை"[3], "வேந்து பீடு அழித்த ஏந்து வேல் தானை"[4], "வடிவேல் எஃகின் சிவந்த உண்கண்"[5], "எஃகு இருள் அகற்றும் ஏமப் பாசறை"[6]எனவரும் சங்கப் பாடலடிகள் உணர்த்தும்.

காதலியை இரவில் சந்திக்கவரும் காதலன் கையில் வேல் எந்தி வருவதை "மாரி நின்ற ஆர்இருள் நடுநாள், அருவி அடுக்கத்து, ஒருவேல் ஏந்தி"[7], "எல்லிற்று என்னான், வென்வேல் ஏந்தி, நசைதர வந்த நன்ன ராளன்"[8] எனவரும் அகப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. உடன்போக்கில் காதலியை அழைத்துச் செல்லும் ஆடவன் கையில் வேல் வைத்திருந்ததை, "சுடர்வாய் நெடுவேற் காளையொடு மடமா அரிவை போகிய சுரனே"[9], "கூர் வேல் விடலை பொய்ப்பப் போகி"[10] எனவரும் அடிகள் உணர்த்தும். இவ்வாறு ஆடவர் கையில் வேல் வைத்திருப்பது கொடிய விலங்குகளிடமிருந்து பாதுகாத்துக்கொள்ளவும் தற்காப்புக்காகவும் எனக் கருதலாம்.

வேலினை வடித்துத் தரும் தொழிலைக் கொல்லர்கள் மேற்கொண்டதை, "வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே"[11], "கருங்கைக் கொல்லனை இரக்கும் திருந்துஇலை நெடுவேல் வடித்திசின் எனவே"[12] எனவரும் புறப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

### 5.6.5. வாள்

சங்ககாலத்தில் போர்களின்போது பயன்படுத்தப்பட்ட முதன்மையான போர்க்கருவிகளுள் ஒன்று வாள். இது மட்டுமேயல்லாமல் நெல்லரியும் உழவர்கள் பயன்படுத்திய அரிவாள்களும், ஆனிரை மேய்க்கும் கோவலர்கள் இலை தழைகளைக் கால்நடைகளுக்குக் கொய்து தருவதற்காகப் பயன்படுத்திய வாள்களும் வாள் என்ற பெயராலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. எனினும் இவ்வாள்கள் வடிவத்தால் வேறுபாடுடையனவாய் இருத்தல் வேண்டும்.

இரும்பால் செய்யப்பட்ட வாள்கள் உறைகளில் இட்டுவைக்கப்பட்டதை, 'உறை கழி வாள்'[13], 'கழித்து உறை செறியா வாள்'[14] என்பனவும், ஒளிவிடும் தன்மையோடு விளங்கியதை, 'ஒளிறு வாள்'[15] என்றும் சுட்டுகின்றன. வாள்களுக்குத் திண்மையான கைப்பிடிகள் இடப்பெற்றிருந்ததை, 'விண் பெறக் கழித்த திண் பிடி ஒண் வாள்'[16], 'இரவு பகல் செய்யும் திண் பிடி ஒள் வாள்'[17] என்பன காட்டுகின்றன.

---

[1] அக. 225:10-11
[2] புற. 186:4
[3] நற். 387:8
[4] புற. 225:5
[5] புற. 350:9
[6] புற. 397:7
[7] நற். 334:6-7
[8] அக. 362:7-8
[9] குறு. 378:4-5
[10] அக. 315:14
[11] புற. 312:3
[12] புற. 180:12-13
[13] நற். 387:9; அக. 136:24
[14] அக. 24:16
[15] பரி. 22:1; புற. 312:5
[16] அக. 338:17
[17] முல். 46

### 5.6.5.1. போர்களில் வாள்

அக்காலத்தில் அரசர்கள் வாள்படையினைத் தங்கள் படைப்பிரிவுகளுள் ஒன்றாகக் கொண்டிருந்தனர். இதனை, 'ஒள் வாள் மலையன்'[1], 'ஒளிறு வாள் கொங்கர்'[2], 'ஒளிறு வாள் வய வேந்தர்'[3], 'வாய் வாள் சோழர்'[4], 'வாய் வாள் எவ்வி'[5], 'ஓங்கு வாள் மாற'[6], 'வாய் வாள் அண்டிரன்'[7], என்றும், 'பொய்யா வாள் தானைப் புனை கழல் கால் தென்னவன்'[8], 'ஒளிறு வாள் தானைக் கொற்றச் செழியன்'[9], 'வாள் அமர் உழந்த நின் தானையும்'[10], 'தாள் உளம் தபுத்த வாள் மிகு தானை'[11] என்றும் சங்கப்பாக்கள் சுட்டக் காணலாம்.

பகைவர்களை எதிர்த்து வாட்போர் செய்து அவர்கள் தோற்றோடுமாறு யானைப்படையை அழித்து மீளுதல் வீரனின் கடமையாக இருந்ததை, 'ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கி, களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே'[12] என்று குறிப்பதைக் கொண்டு அறியலாம். மேலும், 'ஒளிறுவாள் மறவர்'[13], 'வாள்மிகு மறமைந்தர்'[14], 'திருந்துவாள் வயவர்'[15] என வருவனவும் வீரர்கள் வாட்போரில் ஈடுபட்டமையைத் தெரிவிக்கின்றன.

### 5.6.5.2. அடகுப்பொருளாக வாள்

சங்ககாலத்தில் வீரன் ஒருவன் கைப்பொருள் இன்மையால் வாளை அடமானமாக வைத்து விருந்து உபசரித்ததை, 'இரும்புடைப் பழவாள் வைத்தனன்'[16] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. இங்கு வாள் அடகு வைத்தற்குரிய மதிப்புடைப் பொருளாகத் திகழ்ந்ததையும், பொருட்களை ஈடுவைக்கும் வழக்கம் அக்காலத்து இருந்ததையும் உணர்த்தக் காணலாம்.

மேற்குறித்த சான்றுகளைக்கொண்டு பார்க்கும்போது சங்கப் பாடல்களில் வாள் என்னும் கருவி பலநிலைகளிலும் பயன்பட்டாலும், பெரிதும் போர் நடவடிக்கைகளில் மனிதர்களையும் போரில் ஈடுபடுத்தப்பட்ட விலங்குகளையும் கொல்லவே பயன்பட்டுள்ளது என்பது கவனிக்கத்தக்கது.

### 5.6.6. கவசம்

போரில் பயன்படுத்தப்பட்ட தற்காப்புக் கருவிகளுள் ஒன்று கவசம். இது தோலால் செய்யப்பட்டு அம்புகள் துளைக்காவண்ணம் மார்பில் அணியப்பெற்றதை,

> "புலி நிறக் கவசம் பூம் பொறி சிதைய,
> எய் கணை கிழித்த பகட்டு எழில் மார்பின்"[17]

எனப் புறநானூறு சுட்டுகிறது. இது "தோள்யாப்பு"[18] என்ற பெயராலும் சுட்டப்பட்டது. இதனை, "பூந்தோள் யாப்பின் மிஞிலி, காக்கும் பாரத்து அன்ன – ஆர மார்பு"[19] என்று நற்றிணைப் பாடலொன்று குறிப்பிடுகிறது.

---

[1] நற். 170:7
[2] குறு. 393:6
[3] பதி. 90:6
[4] அக. 213:21
[5] அக. 266:11
[6] புற. 56:21
[7] புற. 131:2
[8] கலி. 98:30
[9] அக. 46:13, 106:10
[10] புற. 161:31
[11] புற. 205:5
[12] புற. 312:5-6
[13] புற. 227:4
[14] மது. 53
[15] அக. 89:13
[16] புற. 316:6
[17] புற. 13:2-3
[18] நற். 265:4-5
[19] நற். 265:4-5

### 5.6.7. பலகை

சங்ககாலப் போர்களில் வேலோடு இணைத்துப் பயன்படுத்தப்பட்ட போர்க் கருவிகளுள் மிகமுக்கியமானது பலகை. சங்க இலக்கிய உரைகளில் இது கேடயம், கிடுகு என்ற பெயரால் குறிப்பிடப்படுகிறது. வேல், எதிரியைத் தாக்குவதற்கும், கேடயம், எதிரி தாக்கும் வேலைத் தடுப்பதற்கும் பயன்படுத்தப்பட்டன.

கேடயங்களில் மணிகள் கட்டப்பட்டிருந்ததை, 'பலகையும் பீலிசூட்டி மணியணி பவ்வே'[1], 'மணிஅணி பலகை'[2], 'வடிமணிப்பலகை'[3] என்பன குறிப்பிடுகின்றன.

போரில் இறந்த வீரனுக்கு நடப்பட்ட நடுகல்லின் முன் அவனைப் போற்றும் வகையில் வேலை ஊன்றி அதன்மீது கேடயத்தைச் சார்த்தி வைக்கப்பெற்றிருந்ததை, 'பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல், வேல் ஊன்று பலகை வேற்று முனை கடுக்கும்'[4] என அகநானூறு குறிப்பிடுகிறது.

### 5.6.8. தோல் (கேடயம்)

தோல் என்ற சொல் தொகைநூல் காலத்தில் போரில் பயன்படுத்தப்பட்ட தற்காப்புக் கருவிகளில் ஒன்றான கேடயத்தைச் சுட்டுகிறது. இது 'பலகை', 'கிடுகு' என்ற பெயராலும் சங்கப்பாக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இக்கேடயங்கள் தோலால் செய்யப்பட்டதை, 'தோல்' என்ற பெயரால் குறிப்பிடப்படுவதே உணர்த்தும். இக்கேடயங்கள் பழங்காலத்து நடைபெற்ற போர்களில் பயன்படுத்தப்பட்டதை, 'மழை என மருளும் மா இரும் பல் தோல்'[5], 'மழை மருள் பல் தோல் மாவண் சோழர்'[6], 'மாரி அம்பின் மழைத் தோல் பழையன்'[7], 'மாரி அம்பின் மழைத் தோல் சோழர்'[8], 'தோல் கழியொடு பிடி செறிப்பவும்'[9], 'தோல் கொண்டு மறைக்கும் சால்பு உடையோனே'[10] என்பன குறிப்பிடுகின்றன.

### 5.6.9. கவண் போர்க் கருவியாக

பகைவரின் மதிலைக் கற்களைக்கொண்டு வீசித் தாக்குவதற்குக் கவண் பொறி பயன்பட்டது. 'ஆர்எயில் அலைத்த கல்கால் கவணை' எனப் பதிற்றுப்பத்து இதனைக் குறிப்பிடுகிறது. இங்கு கவண் ஒரு போர்க் கருவியாகப் பயன்படுத்தப்பட்டது கவனிக்கத்தக்கது.

## 5.7. தோல் பொருட்கள்

### 5.7.1. தோல்

தோல் என்னும் சொல் சங்கப்பாடல்களில் அவை பயின்றுவரும் இடத்தைப் பொறுத்துக் கேடயம், படுக்கை, கொல்லன் துருத்தி, செருப்பு, தோற்பை, உடற்தோல், மான்தோல், பெண்களின் முலை, குதிரைப் பரிசை, யானை முதலிய பல பொருள்களை உணர்த்துகின்றன.

தொழில் நுட்ப அறிவு வளர்ச்சிபெறாத தொடக்கக் காலத்திலேயே விலங்குகளின் தோலை மக்கள் தங்களின் பல்வேறு தேவைகளுக்காகப் பயன்படுத்தியுள்ளனர். தோல், கேடயம் போன்ற போர்க் கருவிகளைச்

---

[1] நற். 177:5
[2] அக. 369:18
[3] பெரு. 120
[4] அக. 67:10-11, 131:11-12
[5] பதி. 62:2
[6] அக. 123:10
[7] அக. 186:15
[8] அக. 336:20
[9] புற. 98:11
[10] புற. 311:7

செய்வதற்கும், மானின் தோல் உடுப்பதற்கும், படுத்து உறங்குவதற்குப் படுக்கையாகவும், முரசு, பறை, துடி போன்ற தோல் இசைக் கருவிகளைச் செய்வதற்கும் எனப் பல்வேறு பயன்பாடுகளைக்கொண்டு விளங்கியதைச் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன.

### 5.7.2. தோற்பை

பொருட்களைச் சுமந்து செல்வதற்குப் பழங்காலத்தில் தோலாலான பைகளைப் பயன்படுத்தினர். இதனை, ஆவினங்களை மேய்க்கும் கோவலர்கள் கழு, சுடுகருவி போன்றவற்றைத் தோற்பையில் இட்டுச் சுருக்கி மேய்ச்சலுக்குப் புறப்பட்டதை, 'கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்'[1] எனக் கலித்தொகையும், மீன் பிடிக்கும் பாணர்கள் தூண்டிலில் மாட்டுவதற்குரிய பச்சை இறைச்சியை வைத்த தோற்பையை தோளில் மாட்டிக்கொண்டு மீன் பிடிக்கச் சென்றதை, 'பச்சூன் பெய்த சுவல் பிணி பைந்தோல்'[2] எனப் பெரும்பாணாற்றுப்படையும் குறிப்பிடுவதுகொண்டு அறியலாம்.

### 5.7.3. உடுக்கை-படுக்கை

மான் தோலைப் படுக்கையாகப் பயன்படுத்தினர். மான் தோல் படுக்கையில் ஈன்ற குழந்தையுடன் எயிற்றி ஒருத்தி முடங்கிக்கிடந்ததை, 'மான் தோல் பள்ளி மகவொடு முடங்கி'[3] எனப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. வேள்வி செய்வோர் மான் தோலைப் போர்த்திக் கொண்டனர்.[4]

### 5.7.4. பறைகளில் தோல்

பறை, முரசு போன்ற தோல் இசைக் கருவிகளில் விலங்கின் தோல் பயன்படுத்தப்பட்டது. ஏற்றின் தோல் மயிர் சீவாமல் முரசில் போர்த்தப்பட்டதை, 'கொல் ஏற்றுப் பைம் தோல் சீவாது போர்த்த'[5] என மதுரைக்காஞ்சியும், மானின் தோல் பறையில் போர்த்தப்பட்டதை, 'மான் தோல் சிறுபறை கறங்க'[6] என மலைபடுகடாமும் இதனைச் சுட்டும்.

### 5.7.5. செருப்பு

சங்க இலக்கியத்தில் கால்களில் அணியும் செருப்பு 'தொடுதோல்' எனச் சுட்டப்படுகிறது. இடையர்,[7] மழவர்,[8] எயினர்,[9] கானவர்,[10] கண்மாறு ஆடவர்[11] எனப்பட்ட கள்வர் ஆகியோர் செருப்பினைப் பயன்படுத்தியுள்ளனர். பண்டைக் காலத்தில் செருப்பு தோலால் தைக்கப்பட்டதைப் பரிபாடல்[12] குறிப்பிடுகிறது. உமணர்கள் இத்தகைய தோல் செருப்பைப் பயன்படுத்தியதை, 'தோல் புதை சிரற்று அடிக் கோல் உடை உமணர்'[13] என அகநானூறு குறிப்பிடுகிறது.

### 5.7.6. பச்சை

பச்சை என்பது தோலைக் குறிக்கும். இது யாழின் மேல் போர்த்தப் பயன்பட்டதை, 'பண் அமை நரம்பின் பச்சை நல் யாழ்'[14], 'விளக்கு அழல் உருவின்

---

[1] கலி. 106:1
[2] பெரு. 283
[3] பெரு. 87
[4] பதி. 74:10-15; புற. 166:10-12
[5] மது. 732
[6] மலை. 321
[7] பெரு. 169
[8] அக. 101:5-10
[9] பட். 265-270
[10] அக. 34:3
[11] மது. 636
[12] பரி. 21:4-7
[13] அக. 191:4
[14] புற. 164:11

*விசி உறு பச்சை'[1] என்பன சுட்டுகின்றன.*

*காளையின் தோல் மயிர்சீவாது முரசில் போர்த்தப் பயன்பட்டுள்ளது. இதனைப் 'பச்சை சீவாது போர்த்த திண் பிணி முரசம்'[2] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. தோலைக்கொண்டு கிடுகு எனப்பட்ட கேடயங்களும் செய்யப்பட்டன.[3]*

### *5.8. சடங்குசார் பொருட்கள்*

#### *5.8.1. மண்டை*

*மணம் செய்து வைக்கும் முதிய மங்கள மகளிர், மணச் சடங்குகளைச் செய்யும் போது மண்டை என்னும் கலத்தினை ஏந்தியவர்களாய் ஒருங்குகூடியதை, 'உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர், பொது செய் கம்பலை முது செம்பெண்டிர்'[4] என அகநானூறு குறிப்பிடுகிறது.*

#### *5.8.2. ஈமத்தாழிகள்*

*இறந்தவர் உடல்களை அகன்ற தாழிகளில் வைத்து இடுகாடுகளில் அடக்கம் செய்யும் வழக்கம் சங்ககால மக்களிடம் இருந்ததைப் பல சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இத்தகைய தாழிகளில் உடல்களை இட்டுப் புதைக்கப்பட்ட வழமையின் காரணமாகவே இதனை, 'ஈமத்தாழி'[5] எனப் புறநானூற்றுப் பாடல் சுட்டுகிறது.*

*வன்னிமரங்களைக் கொண்ட இடுகாட்டில் மன்னர்களை அடக்கம் செய்து கவிழ்த்துவைக்கப்பட்ட தாழிகள் காணப்பட்டதை,*

> *"துளங்கு நீர் வியலகம் ஆண்டு, இனிது கழிந்த*
> *மன்னர் மறைத்த தாழி,*
> *வன்னி மன்றத்து விளங்கிய காடே"[6]*

*என்று பதிற்றுப்பத்தும், குவிந்த மேட்டுநிலப் பகுதிகளில் பிணங்களை இட்டுக் கவிழ்த்த தாழிகள் புதைக்கப்பட்ட இடுகாடு காணப்பட்டதை, 'கவி செந் தாழிக் குவி புறத்து இருந்த...காடு'[7] என்றும், மரப்பொந்துகளிலிருந்து கேட்போர் அஞ்சும்படியாகப் பேராந்தைகள் ஒலிக்கும் பிணங்களைக் கவிக்கும் தாழிகளை உடைய இடுகாடு காணப்பட்டதை,*

> *"முது மரப் பொத்தின் கதுமென இயம்பும்*
> *கூகைக் கோழி ஆனாத்*
> *தாழிய பெருங் காடு ...."[8]*

*என்றும், சோழன் இறந்தபோது அவனை அடக்கம் செய்வதற்குரிய பெரிய தாழியைச் செய்து தருமாறு குயவனை வேண்டியதை, 'கலம் செய்கோவே!....அன்னோற் கவிக்கும் கண் அகன் தாழி வனைதல் வேட்டனை ஆயின்'[9] என்றும் புறநானூற்றுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.*

---

[1] பொரு. 5
[2] புற. 288:2-4
[3] அக. 217:7-8
[4] அக. 86:8-9
[5] புற. 256:5
[6] பதி. 44:21-23
[7] புற. 238:1-5
[8] புற. 364:11-13
[9] புற. 228

*இறந்துபட்ட தன் கணவனுடன் தானும் இறக்க எண்ணிய மனைவி தங்கள் இருவரையும் அடக்கம் செய்வதற்குரிய வகையில் அகலமான தாழியாக வனைவாயாக என்று குயவனை வேண்டியதை,*

> *"வியல் மலர் அகன் பொழில் ஈமத் தாழி*
> *அகலிதாக வனைமோ*
> *நனந் தலை மூதூர்க் கலம் செய் கோவே!"[1]*

*என வரும் புறநானூற்றுப் பாடலும், தலைவனோடு உடன்போக்கு சென்றுவிட்ட மகளைப் பின் தொடர்ந்து சென்று தேடிய தாயொருத்தி, 'இப்படித் தேடுவதற்கு முன்பே என்னைப் பெரிய கரிய தாழியிலிருத்திக் கவிக்கும்படி என்னுயிரைக் கூற்றுவன் கொண்டு செல்லவில்லையே'[2] என வருந்தியதாகக் காட்டும் நற்றிணைப் பாடலும் ஈமத்தாழிகள் பிணங்களை அடக்கம் செய்வதற்குப் பயன்பட்டதையும், அதனைக் குயவர்கள் வனைந்ததையும் காட்டுகின்றன.*

*டி. எஸ். சுப்ரமணியனின் 'தாழிகள் தரும் தகவல்கள் - ஆதிச்ச நல்லூர் அகழ்வாய்வு'[3] என்ற கட்டுரையில், ஆதிச்சநல்லூரில் தொல்லியல் துறையினரால் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வைப்பற்றிக் குறிப்பிடும்போது. அகழ்வாய்வில் கிடைத்த 150 தாழிகளில் சுமார் 50 தாழிகள் உடையாமல் இருந்ததையும் அவற்றில் பல தாழிகளில் முழு மனித எலும்புக்கூடுகள் கிடைத்ததையும், ஒரு தாழிக்குள்ளேயே ஒரு பெரிய எலும்புக்கூடும், ஒரு சிறிய எலும்புக்கூடும் கிடைத்ததையும் குறித்துக் கூறிப்பிடும் அவர், இத்தாழிகள் 2 அடி முதல் 4 அடி வரை விட்டம் கொண்டவையாகக் காணப்பட்டதையும், அத்தாழிகள் சுமார் 2500 ஆண்டுகள் பழைமையானவை என்பதையும் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். இத்தகைய அகழ்வாய்வுச் சான்றுகள் சங்கப் பாடல்கள் குறிப்பிடும் தாழி பற்றிய செய்திகளுக்குக் கூடுதல் வலுசேர்க்கின்றன.*

### *5.8.3. சடங்குகளில் வாள்*

*சங்ககாலச் சமூகத்தில் குழந்தை இறந்து பிறந்தாலும் தசைப் பிண்டமாகப் பிறந்தாலும் அவற்றை வாளால் வடுப்படுத்தி அடக்கம் செய்யும் வழக்கமிருந்ததை,*

> *"குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்,*
> *'ஆள் அன்று' என்று வாளின் தப்பார்"[4]*

*என்று குறிப்பிடுவதைக் கொண்டும், மன்னர்கள் நோயால் இறந்தபோது போரில் வாளால் காயம் படாத குற்றம் நீங்குதற் பொருட்டு அந்தணர் தருப்பைப் புல்லினைப் பரப்பி அதில் மன்னனைக் கிடத்தி 'தமது வீரமே பற்றுக்கோடாகக்கொண்டு போரிலே வீழ்ந்த நெடிய கழலணிந்த வீரர் செல்லும் உலகிற்குச் செல்லுக' என்று கூறி மன்னனின் மார்பை வாளால் பிளந்து அடக்கம் செய்ததை,*

> *"அறம் புரி கொள்கை நான்மறை முதல்வர்*
> *திறம் புரி பசும் புல் பரப்பினர் கிடப்பி,*
> *'மறம் கந்தாக நல் அமர் வீழ்ந்த*

---

[1] புற. 256:5-7
[2] நற். 27
[3] https://groups.yahoo.com/neo/groups/tamilpayani/conversations/topics/66
[4] புற. 74:1-2

*நீள் கழல் மறவர் செல்வுழிச் செல்க!' என*
*வாள் போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர் மாதோ"*[1]

என்றும் குறிப்பிடும் புறநானூற்றுப் பாடல்கள் இரண்டிலும் இறப்புச் சடங்கில் வாள் உடலினைக் கீறி வடுப்படுத்தப் பயன்பட்டதை அறியலாம்.

### *5.8.4. கன்னம்*

கன்னம் என்ற சொல் சங்கப் பாடல்களில் படிமம், தராசுத்தட்டு ஆகிய பொருள்களைச் சுட்டுகிறது. காதல் வயப்பட்டதால் தன் மகளின் மேனியில் தோன்றிய மாற்றத்தை அறியாத தாய் அவள் உற்ற நோய்க்குக் காரணம் முருகனே எனக் கருதி வெறியாட வேலனை அழைத்து. படிமத்தை(கன்னம்) வைத்து வெறியாட்டுச் சடங்கு செய்ததை,

*"பொய்யா மரபின் ஊர் முது வேலன்*
*கழங்கு மெய்ப்படுத்து, கன்னம் தூக்கி,*
*'முருகு' என மொழியும்"*[2]

என்றும், 'பொன் நகர் வரைப்பில் கன்னம் தூக்கி, முருகு என மொழியும்'[3] என்றும் ஐங்குறுநூற்றுப் பாடல்கள் சுட்டுகின்றன. ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை "கன்னம் என்பது, நோய் தணிதற்குப் பண்ணிக் கொடுக்கும் மந்திரத் தகடு உள்ளே வைத்துக் கட்டிய தாயத்து"[4] எனக் கூறுவதும் கவனிக்கத்தக்கது.

### *5.8.5. பிறப்புணர்த்தும் கோல்*

அகவுநர் எனப்பட்ட பாணர்கள், அகவன் மகளிர், வேலன், விறலி ஆகியோர் கையில் கோல் ஒன்றை வைத்திருந்ததாகச் சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன. அந்நுண்கோல் 'மதலை மாக்கோல்[5](பிறப்புணர்த்தும் கோல்)', 'மாத்திரைக் கோல்'[6] எனக் குறிப்பிடப்படுகிறது. 'நுண் கோல் அகவுநர்'[7] எனக் குறிப்பிடுவது கொண்டு பாணர்கள் இக்கோலினை வைத்திருந்ததை அகநானூறும், இதனைத் தம் கையில் பிடித்துக்கொண்டு போர்க்களத்தை வாழ்த்தும் மரபுடையவர்களாக அகவலர் விளங்கியதை, 'கண்டி நுண் கோல் கொண்டு களம் வாழ்த்தும் அகவலன்'[8] எனப் பதிற்றுப்பத்தும் குறிப்பிடுகிறது.

அகவன்மகளிர் எனப்பட்ட பாடல் மகளிர் இத்தகைய கோலினை வைத்திருந்தனர். இக்கோலின் நுனியின் இருமருங்கிலும் வெள்ளிய பூண் இடப்பெற்றிருந்தது. இது அம்மகளிர்தம் சாதிக்குரிய அடையாளமாக விளங்கியது. இதனை, 'வெண்கடைச் சிறு கோல் அகவன் மகளிர்'[9] எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது.

கழங்கு கொண்டு குறிபார்த்து சொல்லும் வேலன் கையில் கோலினைக் கொண்டவர்களாகக் காணப்பட்டதை, 'சிறு பை நாற்றிய பல் தலைக் கொடும்

---

[1] புற. 93:7-11
[2] ஐங். 245:1-3
[3] ஐங். 247:2-3
[4] ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, ப. 552
[5] புற. 152:18
[6] பதி. 43:27-28(உரை என்.சி.பி. எச். ப.139)
[7] அக. 152:4, 208:3
[8] பதி. 43:27-28
[9] குறு. 298:6

*கோல் ஆகுவது அறியும் முதுவாய் வேல!'*[1] என அகநானூறு சுட்டுகிறது.

விறலியரும் தம்கையிலே சிறிய மூங்கில் கோலினைக் கொண்டிருந்ததை, *'நுணங்கு கண் சிறு கோல் வணங்கு இறை மகளிரொடு'*[2] என அகநானூறு குறிப்பிடுகிறது.

**5.8.6. கால்கழி கட்டில்**

உறங்குவதற்காகப் பயன்பட்ட கட்டில்களேயன்றி பிணங்களை இடுகாடுவரை சுமந்துசெல்வதற்காகப் பயன்படுத்தப்பட்ட பாடை 'கால்கழி கட்டில்' எனப்பட்டது. இதனை, அரசனால் மேலாக மதிக்கப்பட்ட தன் மகனுக்கு மண்டை என்னும் உண்கலத்தில் கள்ளை வழங்கி சிறப்பித்தமைக்காக, அதற்கு நன்றிக் கடனாகத் தன் உயிரைத் தந்து கால் இல்லாத கட்டிலாகிய பாடையில் கிடத்தித் தூய வெள்ளாடையை அவன் மீது இன்னும் போர்த்துவதற்குரிய வாய்ப்பு வரவில்லையே என்று மறக்குடிப் பெண் ஒருத்தி ஏங்குவதாக அமைந்த,

> *"தன் ஓரன்ன இளையர் இருப்ப,*
> *பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்*
> *கால் கழி கட்டிலில் கிடப்பி,*
> *தூ வெள் அறுவை போர்ப்பித்திலதே!"*[3]

என்ற ஔவையின் புறநானூற்றுப் பாடல் உணர்த்துவதோடு, சங்க காலத்தில் இறந்த உடல்களை முறையாக அதற்கென ஒதுக்கப்பட்ட இடுகாடுகளுக்குக் கொண்டுசென்று அடக்கம் செய்யும் வழக்கமிருந்ததையும் இது உணர்த்துகிறது.

**5.8.7. மணி**

வீரன் ஒருவனைப் பேய்கள் தொடாதவாறு காக்க மேற்கொண்ட சடங்குகளின்போது மணி ஒலிக்கப்பெற்றதை, *"இசைமணி எறிந்து காஞ்சிபாடி"*[4] எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

**5.8.8. கழங்கு**

கழங்கு என்பது கழற்சிக்காயைக் குறிக்கும். இக்கழங்கினைக்கொண்டு மகளிர் விளையாடும் விளையாட்டு 'கழங்கு விளையாட்டு' என்றும். இக்கழங்கினைப் பயன்படுத்தி வெறியாடும் வேலன் குறி பார்த்தல் 'கழங்கு பார்த்தல்' என்றும் குறிப்பிடப்படுகிறது.

**5.8.9. யாழ்**

போரில் புண்பட்ட வீரன் ஒருவனைப் பேய்கள் தொடாதவாறு காப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட சடங்கில் யாழிசையோடு கூடிய பல இசைக்கருவிகள் முழக்கப்பட்டன.[5]

---

[1] அக. 195:13-14
[2] அக. 97:10
[3] புற. 286:2-5
[4] புற. 281:5
[5] புற. 281:2

### 5.8.10. குழல்

போரில் புண்பட்ட வீரனைப் பேய்கள் தொடாதவாறு காக்க வெண் சிறு கடுகைத் தூவி ஆம்பல் குழல் ஊதும் வழக்கத்தைப் புறநானூறு குறிப்பிடுகிறது.[1]

### 5.8.11. வழிபாட்டில் முரசு

மகளிர் முருகனுக்கு எடுக்கும் வெறியாட்டு விழாவில் இசைக்கப்பட்ட பல்வேறு இசைக் கருவிகளுள் ஒன்றாக முரசும் விளங்கியதை, "குழல் அகவ, யாழ் முரல, முழவு அதிர, முரசு இயம்ப"[2] எனப் பட்டினப்பாலை சுட்டுவதைக் கொண்டும், முருகன் எழுந்தருளும் போது முரசு முழங்கியதை, 'உரும்இடி முரசமொடு'[3] என திருமுருகாற்றுப்படை சுட்டுவதைக்கொண்டும் வழிபாட்டில் முரசு முழக்கப்பட்டதை அறிந்து கொள்ளலாம்.

### 5.8.12. வழிபாட்டில் கண்ணி

வேலன் வெறியாட்டு நிகழ்த்தும்போது முருகனது வேலுக்குக் கண்ணி சூட்டப்பட்டது.[4] நீர்த்துறையிடத்து உறையும் கடவுளுக்குக் காணிக்கைப் பொருளாக கண்ணி சூட்டப்பட்டதை, 'கள்ளும் கண்ணியும் கையுறை யாக... நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி'[5] என அகநானூறு குறிப்பிடுகிறது.

கன்றுடன் கறவை மாடுகளையும் மீட்டுக்கொண்டு வந்து பகைவரை விரட்டிய வீரனுக்கு நடப்பட்ட நடுகல்லுக்குச் சூட்டுவதற்காக மரல் நாரினால் சிவந்த பூக்களைக் கொண்ட கண்ணியைத் தொடுத்ததை,

"மரல் வகுந்து தொடுத்த செம் பூங் கண்ணியொடு
அணி மயிற் பீலி சூட்டி, பெயர் பொறித்து,
இனி நட்டனரே, கல்லும்,.."[6]

என்ற புறநானூற்றுப் பாடல் காட்டுகிறது.

#### 5.8.12.1. வழிபாடு

முருகனுக்கு எடுக்கும் வெறியாட்டுச் சடங்கில் பல்வேறு மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையினை வெறியாடுவோன் சூடியும், முருகனுக்குச் சூட்டியும் வழிபட்டதை,

"உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇ
கடம்பும் களிறும் பாடி, நுடங்குபு
தோடும் தொடலையும் கைக்கொண்டு, அல்கலும்
ஆடினர்........"[7]

"சுனைப் பூக் குற்றும், தொடலை தைஇயும்,
மலைச் செங் காந்தட் கண்ணி தந்தும்,
தன் வழிப் படூஉம்..."[8]

---

[1] புற. 281
[2] பட். 156-157
[3] திரு. 121
[4] அக. 22, 382
[5] அக. 156:13-15
[6] புற. 264:2-4
[7] அக, 138:10 -13
[8] நற். 173:1-3

எனவரும் அகப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இது வழிபாட்டுச் சடங்குகளில் மாலை பெற்றிருந்த முக்கியத்துவத்தை உணர்த்துகின்றது.

### 5.8.13. சந்தனம்

முருக வழிபாட்டில் சந்தனம் பயன்படுத்தப்பட்டது. மலைவாழ் முருக வேளைப் பூசை செய்து குறவர்கள் சந்தனத்தைப் பாண்டியனுக்குக் கொண்டுவந்து தந்ததை, 'தன் மலைத் தெறல் அரு மரபின் கடவுட் பேணி குறவர் தந்த சந்தின் ஆரமும்'[1] என்ற அகநானூற்றுப் பாடலும், அகிலினது புகையும் சந்தனப் புகையும் கமழ்ந்து விளங்க முருகனைப் பூசித்ததை 'எரி உருகு அகிலோடு ஆரமும் கமழும் செரு வேல் தானைச் செல்வ'[2] என்று பரிபாடலும் குறிப்பதுகொண்டு அறியலாம்.

### 5.8.14. துடி

கூத்தரும்[3] விறலியரும்[4] தங்கள் ஆடல் தொழிலுக்கு இத்துடியினைப் பயன்படுத்தி அதன் தாளகதிக்கு ஏற்ப ஆடியதைச் சங்கப்பாடல்கள் காட்டுகின்றன. நடுகல் வழிபாட்டிலும் இத்துடி முழக்கப்பட்டது.[5]

### 5.8.15. ஆகுளி

சூல் கொண்ட மகளிர், தேவராட்டியுடன் தெய்வங்களுக்குப் படையல் தந்து வழிபடும் வழிபாட்டின்போது, யாழ், முழவு, போன்றவற்றுடன் ஆகுளியும் ஒலித்ததை, 'குரல் புணர் நல் யாழ் முழவோடு ஒன்றி, நுண் நீர் ஆகுளி இரட்ட'[6] எனக் குறிப்பிடுவது கொண்டு வழிபாட்டிச் சடங்குகளில் இச்சிறுபறை இயக்கப்பட்டதை உணரலாம்.

### 5.8.16. மான்தோல்

வேள்விச் சடங்கின்போது மானின் தோலைத் தோள்களில் போர்த்தப் பயன்படுத்தினர்.[7] இதனை, 'புலப் புல்வாய்க் கலைப் பச்சை'[8] என புறநானூறு சுட்டுகிறது.

### 5.8.17. வலை

இவ்வணியினைச் சாலேகம் என்று குறிப்பிடுகின்றனர். இது யாகம் நடக்கும் போது பெண்கள் அணிந்த அணியாகக் குறிப்பிடப்படுகிறது. இதனை, ''அறம் புகழ்ந்த வலை சூடி''[9] எனக் குறிப்பிடுகிறது புறநானூறு.

## 5.9. ஒப்பனைப் பொருட்கள்

### 5.9.1. அஞ்சனம்

பெண்களின் கண்ணுக்கு இடப்பட்ட கண்மை அஞ்சனம் எனக் குறிப்பிடப்படுகிறது. இவ் அஞ்சனம் போலக் காயா மலர்கள் மலர்ந்ததை, 'செறிஇலைக் காயா அஞ்சனம் மலர'[10] என முல்லைப்பாட்டும், கண்மை

---

[1] அக. 13:2-4
[2] பரி. 18:53-54
[3] பரி. 21:60, 21:64, 22:42
[4] பரி. 21:19-20
[5] அக. 35:8
[6] மது. 605-606
[7] பதி. 74:10-15
[8] புற. 166:11
[9] புற. 166:14
[10] முல். 93

போலும் நிறம் கொண்டவனாகக் கண்ணன் விளங்கியதை, 'அஞ்சன உருவன்'[1] எனப் புறநானூறும் குறிப்பிடுவது கொண்டு சங்ககாலத்தில் அஞ்சனம் எனப்பட்ட கண்மை புழக்கத்தில் இருந்ததையும் அதனை மகளிர் தங்களை அழகுபடுத்திக் கொள்வதற்காகப் பயன்படுத்தியதையும், அதனால் அவர்களின் கண்களை 'உண்கண்' (மையுண்ட கண்) எனச் சங்கப் புலவர்கள் வர்ணித்ததையும் அறியமுடிகிறது.

அஞ்சனத்தைப் பொருள்வளம் வாய்ந்தோர் பொற்செப்பிலும், எளியோர் வேழத்தண்டிலும் பெய்து வைத்ததை, "ஓங்கு பூ வேழத்துத் தூம்புடைத் திரள்கால் சிறு தொழுமகளிர் அஞ்சனம் பெய்யும்"[2] என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

### *5.9.2. கண்ணி*

உலகில் பல்வேறுபட்ட பண்பாட்டைச் சார்ந்த மக்கள் தங்கள் வாழ்வில் பல்வேறு சூழல்களில் மலர்களைப் பயன்படுத்தி வருகின்றனர். அவ்வகையில் தமிழர் பண்பாட்டில் மலர்கள் அன்றாட வாழ்வின் அங்கமாகத் திகழ்ந்துவருகின்றன. சங்க காலத்தைப் பொறுத்தவரை மலர்களைச் சூடிக்கொள்வதற்கும், வழிபாடு, சடங்கு போன்றவற்றிலும் பயன்படுத்தினர்.

தனிநிலையில் 'பூ', 'மலர்' எனக் குறிக்கப்பட்ட மலர்கள் அவற்றைத் தொகுத்து நாரினால் கட்டி அல்லது கோர்த்துப் பயன்படுத்தும்போது அவற்றிற்குக் கண்ணி, தார், தொடலை, தொடை, கோதை, பிணையல், மாலை என்ற பெயர்களைப் பெறுகின்றன.

சங்ககால மக்கள் பண்பாட்டில் ஆண்பெண் என்ற இருபாலரும் பூச்சூடினர். அவற்றுள் 'கண்ணி' என்பது ஆண்மக்கள் அணியும் தலைமாலை எனவும், 'கோதை' என்பது மகளிர் சூடும் மாலையாகவும் குறிப்பிடப்படுகிறது. இம்மரபினை, "மைந்தர் கண்ணி மகளிர் சூடவும் மகளிர் கோதை மைந்தர் மலையவும்"[3] எனப் பட்டினப்பாலையும், 'மகளிர் கோதை மைந்தர் புனையவும், மைந்தர் தண்டார் மகளிர் பெய்யவும்'[4] எனப் பரிபாடலும் குறிப்பிடுகின்றன.

ஒவ்வொரு மன்னனும் தனக்கென்று ஒரு அடையாள மாலையைக் கொண்டிருந்தனர். சேரனுக்குப் பனம்பூ, சோழனுக்கு ஆத்திப்பூ, பாண்டியனுக்கு வேப்பம்பூ என அடையாள மாலைகள் சுட்டப்பெற்றுள்ளன. புலவர்கள் அவ்வடையாள மாலைகளைச் சுட்டி அம்மன்னர்களைக் குறித்தனர். இதனை,

> "இரும் பனை வெண் தோடு மலைந்தோன்அல்லன்;
> கருஞ் சினை வேம்பின் தெரியலோன்அல்லன்;
> நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்றே; நின்னொடு
> பொருவோன் கண்ணியும் ஆர் மிடைந்தன்றே"[5]

---

[1] புற. 174:5
[2] ஐங். 16:1-2
[3] பட். 109-110
[4] பரி. 20:20-21
[5] புற. 45:1-4

என்ற புறநானூற்றுப் பாடலால் அறியலாம். மேலும், வீரர்கள் எந்நாட்டவர் என இனங்காணும் அடையாள மலையாகவும் இக்கண்ணி பயன்பட்டுள்ளதும் நோக்கத்தக்கது.

நிரைகவரச் செல்வோர் வெட்சிப் பூவும், அதனை மீட்கச் செல்வோர் கரந்தைப் பூவும், பகைவரின் அரணை அழிக்கச் செல்லும்போது உழிஞைப் பூவும், போரிடுவோர் தும்பைப் பூவும், போரில் வெற்றிபெறுவோர் வாகைப் பூவும் என போரின் ஒவ்வொரு நிலைக்கும், நோக்கத்திற்கும் ஏற்ப ஒவ்வொரு வகைப் பூவைக் கண்ணியாகச் சூடிப் போரிட்டதைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

இக்கண்ணியினை அரசர், வீரர், பொதுவர், வணிகர், வேட்டுவர், குறவர், துடியர் எனப் பலரும் தங்கள் தலையில் தலைமாலையாகச் சூடியுள்ளனர்.

### 5.9.2.1. அரசர்

அரசர்கள் பல்வேறு பூக்களால் தொடுக்கப்பட்ட கண்ணியைச் சூடியதை, ‘ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்’[1], ‘வழைப் பூங் கண்ணி வாய் வாள் அண்டிரன்’[2], ‘கூவிளங் கண்ணி, கொடும் பூண், எழினி’[3], ‘பிணை அல் அம் கண்ணிப் பெரும்பூட் சென்னி’[4] எனவரும் அடிகளால் விளங்கிக்கொள்ளலாம். மேலும், அக்கண்ணியை ‘வாழ்க நின் கண்ணி’[5] என வாழ்த்தியதையும் சங்கப் பாக்களில் பலவிடத்தும் காணமுடிகிறது.

### 5.9.2.2. வீரர்

வீரர்கள் பூச்சூடிப் போருக்குச் செல்லுதல் பண்டைய வழக்கம். அவ்வழக்கப்படி, யானையின் துதிக்கையினை வெட்டி வீழ்த்திய வீரர்கள் வஞ்சி மாலையைச் சூடியதையும்[6], மற்றொரு வீரன் கோட்டுப் பூக்களால் தொடுத்த கண்ணியைச் சூடிப் பகைவரால் சூழப்பட்ட தன் தோழனுக்குத் துணையாக நின்றதையும்[7], மயிற் பீலியால் தொடுக்கப்பட்ட கண்ணியை உடைய மறவன் தன் தோள் வன்மையால் எதிர்த்து வென்றதையும்[8] சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன.

### 5.9.2.3. பொதுவர்

கோவலர்கள் காந்தளின் நீண்ட இதழ்களால் கட்டிய கண்ணி[9] முல்லை அரும்பாற் கட்டின கண்ணி[10] என்பன போன்று பல்வேறு மலர்களால் தொடுத்த கண்ணியினைச் சூடியதை, ‘விடரிஅம் கண்ணிப் பொதுவன்’[11], ‘குருந்தம்பூங் கண்ணிப் பொதுவன்’[12], ‘புல்லினத்து ஆயர்மகன் சூடி வந்தது ஓர் முல்லை ஒரு காழும் கண்ணியும்’[13], ‘காயாம்பூங் கண்ணிப் பொதுவன்’[14] முதலிய அடிகள் உணர்த்துகின்றன.

---

[1] புற. 201:15, 202:10
[2] புற. 131:2
[3] புற. 158:9
[4] அக. 44:14
[5] புற. 77:6, 198:11; அக. 314:18
[6] முல். 71
[7] புற. 275:1
[8] புற. 274:2
[9] நெடு. 3-6
[10] கலி. 107:6
[11] கலி. 101:22
[12] கலி. 111:7
[13] கலி. 115:4-5
[14] கலி. 103:52

#### *5.9.2.4. மக்கள்*

*பாலை நிலத்துப் பாதிரிப் பூவினை அலரிப் பூவுடன் கட்டி உப்புவணிகர்களும்[1], கொன்றை மாலையை நெய்தல்நிலத் தலைவனும்[2], பலபூக்களால் தொடுத்த கண்ணியை வேட்டுவனும்[3] சூடியதைப் போல, ஆவிரம்பூவொடு எருக்கின் பூவையும் சேர்த்துக்கட்டிய அழகிய கண்ணியை மடல் ஊர்பவனும் சூடினர். சிறுவர்கள் கண்ணி சூடியதையும்[4] சங்கப் பாக்கள் காட்டுகின்றன.*

*குறவர் தலைவன், காந்தட்பூக் கண்ணியை உடையவனாக விளங்கியதை, 'கோடற் கண்ணி, குறவர் பெருமகன்'[5] என்றும், துடியன், பசிய தழையால் விரவித் தொடுத்த கண்ணியை உடையவனாகக் காணப்பட்டதை, 'உவலைக் கண்ணித் துடியன்'[6] என்றும், மிலேச்சர்கள் தழை விரவிக் கட்டிய மாலையைத் தலையில் அணிந்திருந்ததை, 'படலைக் கண்ணி, பரு ஏர் எறுழ் திணிதோள், முடலை யாக்கை, முழுவலி மாக்கள்'[7] என்றும் குறிப்பிடுவனவற்றைக்கொண்டு அறியலாம்.*

#### *5.9.3. தொடலை*

*தொடலை என்பதற்குத் தொகுக்கப்படுவது என்று பொருள். சங்ககால மக்கள் பூ, தழை போன்றவற்றைத் தொகுத்துத் தொடுத்து மாலையாக அணிந்துகொள்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.*

*நொச்சி, பாதிரி, வேங்கை, ஆம்பல், நெய்தல், குவளை, முல்லை, காந்தள் போன்ற பல்வேறு மலர்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட இம்மாலையை ஆண், பெண் என்ற இருபாலரும் அணிந்துள்ளனர்.*

*இளம் பெண்கள், மாலைகளைத் தொடுத்து அணிந்ததை 'சுனைப்பூக் குற்றுத் தொடலை தைஇ, புனக்கிளி கடியும் பூங்கட் பேதை'[8], 'வேனிற் பாதிரி விரி மலர் குவைஇத், தொடலை தைஇய மடவரல் மகளே'[9], 'வள் இதழ் நெய்தற் தொடலையும் புனையாய்'[10] என்ற அடிகளும், இடையன் பனங்குருத்தோடு முல்லையினை மாலையாகத் தொடுத்து அணிந்ததை, 'வெண்போழ் தைஇய அலங்கல்அம் தொடலை'[11] என்ற அடியும் உணர்த்தக் காணலாம்.*

#### *5.9.3.1. தழையாடை*

*இளம்பொண்கள் பல்வேறு இலைகளையும் பூக்களையும் தொடுத்து தழையாடையாக அணியும் வழக்கத்தை, 'கருங்குரல் நொச்சிக் கண்ஆர் குரூஉத் தழை மெல் இழை மகளிர் ஐது அகல் அல்குல்'[12], 'தொடலை அல்குல் தொடித்தோள் மகளிர்'[13], 'ஏந்துகோட்டு அம்பூந் தொடலை அணித்தழை அல்குல்'[14] எனவரும் அடிகள் புலப்படுத்துகின்றன.*

---

[1] *அக. 191:1-3; பெரு.59-61*
[2] *அக. 370:10*
[3] *அக. 28:6*
[4] *கலி. 83:26; பெரு. 218*
[5] *புற. 157:7*
[6] *புற. 269:6*
[7] *நெடு. 31-32*
[8] *குறு. 142:1-2*
[9] *ஐங். 361:2-3*
[10] *நற். 155:2*
[11] *நற். 169:8*
[12] *புற. 271:2-3*
[13] *புற. 339*
[14] *புற. 341:1-2*

### *5.9.3.2. கையுறை*

*தலைவன் தன் காதலிக்குப் பரிசுப் பொருளாகப் பல்வேறு பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையினைத் தந்ததை, "பாசடைக் கலித்த கணைக் கால் நெய்தல் பூவுடன் நெறிதரு தொடலை தைஇ"[1], "சுனைப்பூங் குவளைத் தொடலை தந்தும்"[2] எனவரும் அடிகள் குறிப்பிடுகின்றன.*

### *5.9.4. சந்தனக் குழம்பு*

*சங்ககாலச் சமூகத்தில் மன்னர்களும்,[3] உயர்நிலையில் இருந்த ஆண்களும் சந்தனக்குழம்பை மார்பில் பூசி மணமூட்டிக்கொள்ளும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். இச்சந்தனக் குழம்பினைச் சந்தனத்தோடு பிற மணப்பொருட்களையும் சேர்த்துத் தயாரித்ததை, 'நுண்ணிதின் கூட்டிய படு மாண் ஆரம்'[4] என்று அகநானூறு குறிப்பிடுகிறது.*

*ஆண்கள் தம் மார்பில் மணம்வீசும் சந்தனக் குழம்பைப் பூசியிருந்ததை, 'ஆரம் நாறும் மார்பினன்'[5], 'ஆரம் கமழும் மார்பினை'[6] , 'நறும் காழ் ஆரமொடு மிடைந்த மார்பில்'[7], 'ஆரம் நீவிய அணி கிளர் ஆகம்'[8] எனவரும் சங்கப் பாக்கள் காட்டுகின்றன.*

*பெண்கள் தங்கள் கூந்தலை அகில், சந்தனம் போன்றவற்றின் புகையால் மணமூட்டியதை, 'கமழ் அகில் ஆரம் நாறும் அறல் போல் கூந்தல்'[9] என்ற குறுந்தொகை அடி குறிப்பிடுகிறது.*

### *5.9.5. தொய்யில்*

*தொய்யில் என்பது சந்தனக்குழம்பினைக் குறிக்கும். சங்க காலத்தே மகளிர் மார்பு, தோள் முதலிய இடங்களில் சந்தனக் குழம்பு கொண்டு வரிக்கோலம் செய்தனர். இதனைத் தொய்யில் எழுதுதல் என்பர். மேலாடை அணியும் வழக்கமில்லாத சங்க காலப் பெண்கள் தங்கள் மார்புப் பகுதியினை அணிகலன்களாலும், இத்தகைய தொய்யில்களாலும் மறைத்துக் கொண்டனர்.*

*பெண்கள் தங்கள் மார்புப் பகுதியில் தொய்யில் எழுதியிருந்ததை, 'தொய்யில் இளமுலை'[10], 'தொய்யில் பொறித்த வனமுலையாய்!'[11], 'தொய்யில் சூழ் இளமுலை'[12] 'பெருந்தோள் தொய்யில் வரித்தும்'[13] என்பன சுட்டுகின்றன.*

*இத்தகைய தொய்யில் இளம்பெண்களின் மார்பிலும், தோளிலும் அவரவரின் காதலரால் எழுதப்பட்டன. இதனை, 'நெடுமென் தோள் பெய்கரும்பு ஈர்க்கவும் வல்லன்; இள முலைமேல் தொய்யில் எழுதவும் வல்லன்'[14] என்றும், 'வரி தேற்றாய் நீ என, வணங்கு இறை அவன் பற்றி, தெரிவேய்த் தோள் கரும்பு எழுதித் தொய்யில் செய்தனைத்தற்கோ'[15] என்றும் வரும் கலித்தொகைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.*

---

*[1] நற். 138:6-7*
*[2] குறு. 346:4*
*[3] மது. 715; புற. 152:10*
*[4] அக. 218:14*
*[5] குறு. 161:6, 198:7*
*[6] நற். 168:10*
*[7] நற். 314:4*
*[8] நற். 344:6*
*[9] குறு. 286:2-3*
*[10] கலி. 54:12*
*[11] கலி. 117:4*
*[12] கலி. 125:7*
*[13] அக. 389:6*
*[14] கலி. 143:31-33*
*[15] கலி. 76:14-15*

### 5.9.6. மெய்க் கலவை

பண்டைக் காலத்தில் உடலில் வாசனைப் பொருட்களைப் பூசிக் கொள்ளும் வழக்கைக் கொண்டிருந்தனர். அதற்கான மணக்கலவை நூலில் சொல்லப்பட்ட விதிப்படி செய்யப்பட்டதையும், அக்கலவை 'மெய்க் கலவை' என்ற பெயரால் சுட்டப்படுவதையும், 'விதி ஆற்றான் ஆக்கிய மெய்க் கலவை போல'[1] எனப் பரிபாடல் சுட்டுவதுகொண்டு அறியலாம்.

## 5.10. அளவைக் கருவிகள்

### 5.10.1. நாழி

நாழி சங்ககாலத்தில் காணப்பட்ட முகத்தல் அளவைக் கருவிகளுள் ஒன்று. "நாழி கொண்ட, நறுவீ முல்லை"[2], "உண்பது நாழி; உடுப்பவை இரண்டே"[3] என்னும் பாடலடிகள் இதற்குச் சான்றுபகர்கின்றன

### 5.10.2. அம்பணம் (மரக்கால்)

அம்பணம் என்பது தானியங்களை அளக்க உதவிய மரக்காலைக் குறிக்கும். சங்ககாலத்தில் இத்தகைய மரக்கால்கள் பயன்பாட்டில் இருந்ததை, 'அம்பணத்து அன்ன யாமை'[4] என ஆமைக்கு உவமையாகக் குறிப்பிட்டுள்ளது கொண்டு அறியலாம்.

### 5.10.3. தராசுத் தட்டு

பொன்னால் செய்யப்பட்ட தராசுத் தட்டுக்கள் அக்காலத்து இருந்ததை, "பொன்செய் கன்னம் பொலிய, வெள்ளி நுண்கோல் அறைகுறைந்து உதிர்வன போல"[5] என அகநானூறு சுட்டுகிறது.

### 5.10.4. துலாக்கோல்

பொருட்களின் எடைகாண உதவும் துலாக்கோல்கள் அக்காலத்துப் புழக்கத்தில் இருந்துள்ளன. இதனை, 'ஞெமன்ன் தெரி கோல் அன்ன செயிர் தீர் செம் மொழி'[6], 'தெரி கோல் ஞமன் போல'[7] என்பன கொண்டும், இத்துலாக் கோலின் கடைப்பகுதி யானையின் வெண்மையான தந்தத்தை வெட்டிக் கடைந்து அமைக்கப் பெற்றிருந்ததை, 'கறைஅடி யானை வால்மருப்பு எறிந்த வெண்கடைக் கோல்நிறை துலாஅம்'[8] எனக் குறிப்பிடுவது கொண்டும் அறிந்துகொள்ளலாம்.

### 5.10.5. குறுநீர்க் கன்னல்

காலத்தினைக் கணக்கிட உதவும் கருவியான குறுநீர்க் கன்னல்[9] என்னும் கருவி 'நாழிகை வட்டில்' எனக் குறிப்பிடப்படுகிறது. 'வட்டிலில் நீரிட்டு ஒரு சிறு துளை வழியாக அந்நீரைச் சிறிது சிறிதாகக் கசியவிட்டு, அந்நீரினை அளந்து காணும் கருவி' என இக்கருவியைப் பற்றி உரையாசிரியர்கள் விளக்கிக் கூறுகின்றனர்.

---

[1] பரி. 7:20
[2] முல். 9
[3] புற. 189:5
[4] ஐங். 43:1
[5] அக. 317:8-9
[6] அக. 349:3-4
[7] புற. 6:9
[8] புற. 39:1-3
[9] முல். 58

இக்கருவி மேகம் கவிந்த இரவு நேரங்களிலும், கதிரவனைக் காணாதவாறு அடைத்து இருண்டு மழை பெய்யும் காலங்களிலும் மக்கள், நேரத்தினைத் தெரிந்துகொள்ள அரண்மனை போன்ற வளமனைகளில் இது பயன்படுத்தப்பட்டுள்ளது. இக்கருவியைக்கொண்டு நாழிகையைக் கணக்கிடும் நாழிகைக் கணக்கர்கள் மன்னர்களிடம் பணியாற்றியதைப் "பொழுது அளந்து அறியும், பொய்யா மாக்கள்"[1] என்றும், "குறுநீர்க் கன்னல் எண்ணுநர்"[2] என்றும் சங்கப்பாக்கள் குறிப்பிடுகின்றன. இதனைக் "குறுநீர்க் கன்னலின் யாமங் கொள்பவர்"[3] என மணிமேகலையும் சுட்டக் காணலாம்.

## 5.11. பிற பொருட்கள்

### 5.11.1. கழு

சங்க காலத்தில் 'கழு' எனப்பட்ட கழுமரங்கள் குற்றம் செய்தவர்களையும் பகைவர்களையும் தண்டிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது. இக்கழுமுனை தாமரை அரும்பைப் போன்று இருந்ததனை, 'கழுநிவந்தன்ன கொழுமுகை'[4] என அகநானூறு சுட்டுகிறது.

இத்தகைய கூர்மையான கழுமரங்கள் எயினர் அரண்களின் வாயிலில் வைக்கப் பெற்றிருந்ததை, 'செந்நிலை நெடுநுதி வயக்கழு நிரைத்த வாயில்'[5] எனப் பெரும்பாணாற்றுப்படை காட்டுகிறது.

### 5.11.2. கோல்

கோல் என்னும் சொல் சங்க இலக்கியத்தில் கம்பு; ஊன்றுகோல்; செங்கோல்; அளவுகோல்; பிரம்பு; சவுக்கு(தாற்றுக்கோல்); அம்பு; துலாக்கோல்; தூண்டில் முதலிய பயன்பாட்டுப் பொருட்களைக் குறிப்பனவாக உள்ளது.

### 5.11.3. செங்கோல்

சங்க இலக்கியத்தில் கோல் என்னும் சொல் அரசச் சின்னமான செங்கோலைக் *(scepter)* குறிப்பதாகவும் பாடல்களில் பயின்று வந்துள்ளது. அரசன் செங்கோல் எனப்பட்ட கோலினை வைத்திருந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. இது கோலை மட்டும் குறிப்பிடாது அரசனின் ஆட்சித் திறத்தையும் குறித்தது. 'கொடிது ஓர்த்த மன்னவன் கோல் போல'[6], 'கொடிது கடிந்து கோல் திருத்தி'[7], 'தமிழ் கெழு கூடல் தண்கோல் வேந்தே'[8], 'அறனொடு புணர்ந்த திறன்அறி செம்கோல்'[9], 'அல்லது கடிந்த அறம்புரி செம்கோல்'[10] என்பன இதை மெய்ப்பிக்கின்றன.

### 5.11.4. பிரம்பு

கோல் எனப்பட்ட பிரம்புகள் தங்கள் பிள்ளைகள் உணவு உண்ண மறுக்கும் போதும், தவறு செய்யும்போதும் அன்னையர்களால் அடித்தற்குப் பயன்படுத்தப்பட்டது. இதனை, தேன் கலந்த பாலுணவைப் பொறகலத்திட்டு தன் மகளை உண்க எனக் கூறி கையில் ஏந்திய பூவொத்த சிறுகோலால் செவிலித்தாய் அடித்ததை, 'புடைப்பின் சுற்றும் பூம் தலைச் சிறு கோல்'[11] எனவும், ஊராரின் பழிச்சொல்லுக்கு ஆளான பெண்ணைத் தாய் அடிப்பதை, 'அம்பல் தூற்ற சிறு கோல்

---

[1] முல். 55
[2] அக. 43:6
[3] மணி. 7:64-65
[4] அக. 176:4
[5] பெரு. 128
[6] கலி. 8:2
[7] புற. 17:5
[8] புற. 58:13
[9] பொரு. 230
[10] பெரு. 36
[11] நற். 110:3

வலந்தனள் அன்னை அலைப்ப'[1] எனவும் குறிப்பிடும் நற்றிணைப் பாக்களைக் கொண்டும், 'அலைக்கும் கோலொடு குறுக'[2], 'செறாஅது ஓச்சிய சிறு கோல்'[3], 'கண்ணுடைச் சிறு கோல் பற்றிக் கதம் பெரிது உடையள் யாய்'[4] எனக் குறிப்பிடுவனவற்றைக் கொண்டும் அறியலாம்.

### 5.11.5. தூண்டில்

மீன்பிடிக்கப் பயன்படுத்தப்பட்ட தூண்டிலும்(angle) கோல் என்றே சங்கப் பாக்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை, 'நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்'[5] என்ற அகநானூற்று அடிகொண்டு அறியலாம்.

### 5.11.6. ஆயர்களின் கோல்

மேய்த்தல் தொழிலை மேற்கொண்ட ஆயர்கள் தங்கள் தொழில் பொருட்டு கோலினை உடையவர்களாய்க் காணப்பட்டனர். இதனை, 'சுவல் மிசைக் கோல் அசைத்த கையன்'[6], 'மேயும் நிரை முன்னர்க் கோல் ஊன்றி நின்றாய் ஓர் ஆயனை அல்லை'[7], 'கொடுங் கோல் கல்லாக் கோவலர்'[8], 'கொடும் கோல் கோவலர்'[9], 'கவர் கோல் கோவலர்'[10] என்பன காட்டுகின்றன. வளைந்த கோலினை(கொடும் கோல்) இடையர் தங்கள் கால்நடைகளுக்கு இலை, தழைகளைப் பறித்துத் தருவதற்காகப் பயன்படுத்தினர். மேலும் அக்கோல் நீர் ஊற்றினைத் தோண்டவும் பயன்பட்டது, இதனை, 'கல்லாக் கோவலர் கோலின் தோண்டிய ஆன் நீர்ப் பத்தல்'[11] எனக் குறிப்பது கொண்டு அறியலாம்.

உமணர்கள் தங்கள் உப்பு வண்டியினை இழுத்துச் செல்லும் எருதுகளை அடித்து ஓட்டிச் செல்வதற்குக் கோலினைப் பயன்படுத்தினர். இதனை, 'கொடும் கோல் உமணர் பகடுதெழி தெள்விளி'[12], 'கதழ்கோல் உமணர்'[13], 'கோல் உடை உமணர்'[14], 'ததர்கோல் உமணர்'[15] என வருவனவற்றைக்கொண்டு உணரலாம்.

### 5.11.7. ஊன்றுகோல்

கோல் என்பது ஊன்றுகோலையும்(staff) குறித்துள்ளது. வயது முதிர்ந்தவர்கள் நடந்து செல்வதற்கு ஊன்றுகோல் தடியைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை, முதிய தாயொருத்தி தன் கையில் பிடித்த கோல்தடியைக் காலாகக்கொண்டு மெதுவாகச் சிறுக அடியிட்டு நடந்ததை,

> "கோல் காலாகக் குறும் பல ஒதுங்கி,
> நூல் விரித்தன்ன கதுப்பினள், கண் துயின்று,
> முன்றில் போகா முதிர்வினள் யாயும்"[16]

எனக் குறிப்பிடும் புறநானூற்று அடிகளைக்கொண்டு அறியமுடிகிறது.

### 5.11.8. குறுந்தடிகள்

பறை, கிணை, முரசு போன்ற தோல் இசைக் கருவிகளை அடித்து ஒலியெழுப்புவதற்குக் குறுந்தடிகள்(stick) பயன்படுத்தப்பட்டன. இதனை, 'நுண்

---

[1] நற். 149:3-4
[2] அக. 66:21
[3] புற. 310:2
[4] நற். 150:10-11
[5] அக. 216:1
[6] கலி. 101:40
[7] கலி. 108:11-12
[8] அக. 74:15-16
[9] நற். 69:8; நெடு. 3; முல். 15
[10] அக. 264:4
[11] ஐங். 304:1-2
[12] அக. 17:13
[13] அக. 140:5
[14] அக. 191:4
[15] அக. 390:3
[16] புற. 159:3-5

கோல் தகைத்த தெள் கண் மாக் கிணை'[1], 'கண் அகத்து யாத்த நுண் அரிச் சிறு கோல்'[2], 'நுண் கோல் சிறு கிணை சிலம்ப ஒற்றி'[3], 'அரிக் கோல் பறையின் ஐயென ஒலிக்கும்'[4], 'வள்வார் விசிபிணித்து யாத்த அரிகோல் தெள்கிணை'[5], 'எறி கோல் கொள்ளும் இழிசின'[6] என்பன காட்டுகின்றன. இக்கோல்கள் 'குணில்', 'கடிப்பு' என்ற பெயரால் சங்கப்பாக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

### 5.11.9. எறிகோல்

எறிகோல் எனப்பட்ட கோல்கள் பாம்புகளிடமிருந்து தற்காத்துக்கொள்ள அவற்றை அடிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டன. இதனை, 'பாம்பு எறி கோல்'[7], 'எறி கோல் அஞ்சா அரவு'[8] என்பன காட்டுகின்றன. இக்குறுந்தடிகள் முயல்களை வேட்டையாடவும் பயன்பட்டதை, 'குறும் கோல் எறிந்த நெடும் செவிக் குறு முயல்'[9] எனச் சுட்டுவதைக் கொண்டு அறியமுடிகிறது.

### 5.11.10. பிற கோல்கள்

கோல் குடைக்காம்பாகவும், மீனவர்கள் வலையில் கட்டுவதற்கும், உயர்ந்து பறக்கும் கொடிகளைக் கட்டுவதற்கும், பாறை உளிகளில் செருகப் பயன்பட்ட காம்பாகவும் பயன்பட்டதை, முறையே, 'அருள் குடை ஆக அறம் கோல் ஆக'[10], 'கொடுந் தொழில் முகந்த செங்கோல் அவ்வலை'[11], 'கோல் நிமிர் கொடி'[12], 'இரும்பு தலை யாத்த திருந்து கணை விழுக் கோல் உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி'[13] என்பன சான்றுரைக்கின்றன. அரண்மனைப் பூம்பொழிலில் மலர் பறிக்கும் குடியான வயவர் என்போர் பூப்பறித்தற்குக் கோலினைப் பயன்படுத்தியதைப் பரிபாடல் 'ஆய்கோல் வயவர்'[14] எனச் சுட்டுகிறது.

### 5.11.11. ஞெலிகோல்

ஞெலிகோல் என்பது தீக்கடைக் கோலைக் குறிக்கும். இதன் பயன்பாட்டைக் குறித்த பதிவுகள் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன. உணவு சமைக்கவும், குளிரிலிருந்து தற்காத்துக் கொள்ளவும், விலங்குகளை விரட்டவும் அவசியமானது நெருப்பு. இந்நெருப்பினை உண்டாக்க அக்காலத்தில் 'ஞெலிகோல் எனப்பட்ட தீக்கடைக் கோலைப் பயன்படுத்தியுள்ளனர். ஞெலி, ஞெகிழ், ஞெகிழி என்ற சொற்களும் இதனோடு தொடர்புடையன. இத்தீக்கடைக்கோல் வீட்டின் முற்றத்தில் செருகப் பட்டிருந்ததையும் அதனைக் கடையும்போது தோன்றும் நெருப்பைப் பற்றியும் புறநானூற்றுப் பாடல்[15] குறிப்பிடுகிறது.

உமணர் கூட்டம் தீக்கடைக் கோலால் தீயை உண்டாக்கிச் சமைத்து உண்டு, விட்டுச் சென்ற நெருப்பில் ஆறலைக் கள்வர்கள் புலியால் கொல்லப்பட்ட யானையின் தசையை அத்தீயில் வாட்டி ஊன்சோறு சமைத்ததையும்,[16] தீக்கடைக்கோலைக் கொண்டு மூட்டிய தீயில் வேட்டுவன் இறைச்சியைச் சுட்டதையும்.[17] கானவர்கள் விறகுக்கு தீ மூட்டியதையும்.[18] சங்கப் பாடல்களின் வாயிலாக அறியமுடிகிறது.

---

[1] புற. 70:3
[2] புற. 382:19
[3] புற. 383:3
[4] அக. 151:10
[5] அக. 249:2-3
[6] புற. 287:2
[7] அக. 322:5
[8] புற. 89:5
[9] புற. 339:4
[10] பரி. 3:74
[11] அக. 60:2
[12] அக. 278:4
[13] பெரு. 91-92
[14] பரி. 11:24
[15] புற. 315:3-7
[16] அக. 169:3-7
[17] புற. 150:12
[18] புற. 247:2

விறகினைக் கடைந்து உண்டாக்கிய தீயில் குளிர் நீங்கும்படி பாணர்குழுவினர் அனைவரும் இனிதாக உறங்கியுள்ளர்.[1] அதேபோல், இடையர்கள் காட்டில் இருக்கும் வேளையில், குளிர் மிகுந்த மழைக் காலத்தில், தீ மூட்டி குளிர்காய வேண்டித் தனது தோற்பையில் தீக்கடைக் கோலைக் கொண்டு சென்றுள்ளனர். இதனை,

> "ஞெலி கோல் கலப் பை அதளொடு சுருக்கி,
> பறிப் புறத்து இட்ட பால் நொடை இடையன்"[2]
> "புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியும்
> கல்லா இடையன் போல,……"[3]

எனவரும் அடிகள் உணர்த்துகின்றன. தீக்கடைக்கோலைக் கையால் கடைந்து உண்டாக்கிய தீயினால் மூங்கிலில் துளையிட்டு புல்லாங்குழலை உண்டாக்கினர். இதனை "ஞெலிகோல் கொண்ட பெருவிறல் நெகிழிச் , செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்"[4] என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் குறிப்பிடக் காணலாம்.

செம்மறியாட்டுக் கூட்டத்தை மேய்க்கும் ஆட்டிடையன், தீக்கடைக்கோலினால் கடைந்தெடுத்த சிறுதீயில் விறகினை எரியுமாறு செய்து குள்ளநரிக் கூட்டத்திடமிருந்து பாதுகாத்ததை "ஆடுதலைத் துருவின் தோடு ஏமாப்ப, கடைகோல் சிறுதீ அடைய மாட்டி"[5] என்ற அகநானூற்றுப் பாடலடி குறிப்பிடுகிறது.

### 5.11.12. எரிகொள்ளி

மறவர்கள் தீக்கொள்ளியையும் நீண்டு திரண்ட அம்புகளையும் கையிற் கொண்டு, இரவு நேரத்தில் பகைவர் ஊரினைப் போரிட்டு அழித்து அங்கிருந்த ஆனிரைகளைக் கவர்ந்து வந்தனர்.[6]

தினைக்கதிரை உண்ண வரும் யானையினை விரட்டக் கானவர்கள் அதன் மீது எரிகொள்ளிகளை எரிந்துள்ளனர்.[7] பொறிவிடுகின்ற அக்கொள்ளிகளின் ஒளி, மேகங்களிடை தோன்றும் மின்னலைப் போன்றிருந்தது.[8]

### 5.11.13. சிவிகை

மனிதனை மனிதர் தூக்கிச் செல்லப் பயன்படுத்திய பல்லக்கு சிவிகை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சுமந்து செல்வதற்குரிய தண்டுகளுடன் கூடிய பல்லக்கைச் செல்வர்கள் பயன்படுத்தியதை, 'தண்டு ஆர் சிவிகை'[9] எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

### 5.11.14. வேந்தர்க்கு வீசும் கவரி

பண்டைக் காலத்தில் வேந்தர்களுக்குக் கவரி வீசும் வழக்கம் இருந்தது. அக்கவரி கரும்பின் வெண்மையான பூக்களைப்போல இருந்ததை,

---

[1] மலை. 446-447
[2] நற். 143:3-4
[3] புற. 331:4-5
[4] பெரு. 176-179
[5] அக. 274:4-5
[6] அக. 239:4
[7] நற். 393:1-5; குறி. 225-226; குறு. 150:1-2, 357:5-7
[8] அக. 108:7
[9] பரி. 10:17

“வேழ வெண் பூ விரிவன பலவுடன்,
வேந்து வீசு கவரியின், பூம் புதல் அணிய”[1]

என்ற நற்றிணைப் பாடலடி குறிப்பிடுகிறது. இக்கவரியின் தோற்றம் கமுகின் பாளை பூத்துத் தொங்கியதைப்போல இருந்தது.[2]

### 5.11.15. கரகம்

கரகம் என்பது நீர் எடுத்துச் செல்லும் கமண்டலத்தைக் குறிப்பிடுகிறது. இக்கமண்டலத்தை உறியிலே வைத்து அந்தணர் எடுத்துச் சென்றதை, ‘உறித்தாழ்ந்த கரகமும், உரைசான்ற முக்கோலும்....கொளைநடை அந்தணீர்’[3] எனக் கலித்தொகை குறிப்பிடுகிறது. சிவன் இத்தகைய நீர் நிறைந்த கரகத்தைக் கொண்டிருப்பதாகக், கலித்தொகையும்,[4] புறநானூறும்[5] குறிப்பிடுகின்றன.

### 5.11.16. கமண்டலம்

நீர் வைத்திருக்கும் பாத்திரத்தைக் ‘கமண்டலம்’ எனச் சங்கப் பா சுட்டுகிறது. இதனைப் பார்ப்பனர்கள் பயன்படுத்தியதை, ‘தண்டொடு பிடித்த தாழ் கமண்டலத்துப் படிவ உண்டிப் பார்ப்பன மகனே’[6] எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது.

### 5.11.17. கரண்டை

நீர் வைக்கும் குண்டிகை என்ற பாத்திரம் கரண்டை எனச் சுட்டப்பட்டுள்ளது. இதனை, சமணத் துறவிகள் பயன்படுத்தினர். சிறிய வாயினை உடைய குண்டிகையைப் பல வடங்களையுடைய நூல் உறியில் சமணத் துறவிகள் தூக்கிச் சென்றதை, “கல் பொளிந்தன்ன இட்டுவாய்க் கரண்டைப் பல்புரிச் சிமிலி நாற்ற”[7] என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

### 5.11.18. ஓலை நறுக்கு

குடவோலைத் தேர்தலில் ஓலைகளில் தகுதியுடையோர் பெயர்களை எழுதி குடத்திலிட்டு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் குடவோலைத் தேர்தல் முறையில் பனையோலைகள் பயன்படுத்தப்பட்டதை, ‘கயிறு பிணிக் குழிசி ஓலை கொண்மார், பொறி கண்டு அழிக்கும் ஆவணமாக்களின்’[8] என அகநானூறு சுட்டக் காணலாம்.

ஆவணங்களை எழுதுவதற்கு ஓலை நறுக்குகள் பயன்பட்டதை, ‘துகள் தபு காட்சி அவையத்தார் ஓலை முகடு காப்பு யாத்துவிட்டாங்கு’[9] எனக் குறிப்பிடுவதைக் கொண்டும், “கூற்றமே! மன்மதன் செய்கின்ற கொடுமைகளை ஓலைச்சுவடியில் எழுதிவைத்துக்கொண்டு அவனைத் தண்டிப்பாயாக”[10] என்றும் குறிப்பிடும் கலித்தொகைப் பாக்களின்வழி அறியலாம்.

பார்ப்பனர் ஓலையினை எடுத்துக்கொண்டு தூது சென்றதை, ‘தூதுஒய் பார்ப்பான் மடிவெள் ஓலை’[11] எனச் சுட்டுவது கொண்டு ஓலைகள் செய்தியை எழுதி அனுப்பப் பயன்பட்டதை அறியலாம்.

[1] நற். 241:5-6
[2] அக. 335:15-19
[3] கலி. 9:2-4
[4] கலி. 133:4
[5] புற. 1:12
[6] குறு. 156:3-4
[7] மது. 482-483
[8] அக. 77:7-8
[9] கலி. 94:42-43
[10] கலி. 147:42-43
[11] புற. 337:7

### *5.11.19. பாண்டில்*

*பாண்டில் என்னும் சொல் விளக்கு, அணிகலன், வட்டவடிவில் அமைந்த கட்டில்[1], கொல்லர்வண்டி[2], கிண்ணி[3], வட்டமாக அறுத்த தோல்[4], தேர்ச் சக்கரம்[5], கண்ணாடி[6] ஆகிய பொருண்மைகளிலும் பயின்று வந்து அப்பொருட்களை உணர்த்தியுள்ளது கவனிக்கத்தக்கது.*

### *5.11.20. மூய்*

*மூய் என்பதற்கு மூடி என்றும், மூடி உடைய பெட்டி என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. முத்துப் போன்ற வெண்ணிறமுடைய பனி நீரொடு கலந்த சந்தனத்தைப் பெட்டியில் வைத்து மூடி எடுத்துச் சென்றதை, 'முத்து நீர்ச் சாந்து அடைந்த மூஉய்த் தத்தி'[7] எனப் பரிபாடல் குறிப்பிடுவது கொண்டு மூடி உடைய பெட்டியையும், 'பொன்பெய் பேழை மூய் திறந்தன்ன'[8] எனக் குறிப்பிடுவது கொண்டு பெட்டியின் மூடியையும் இது குறிப்பிடக் காணலாம்.*

### *5.11.21. எஃகு*

*எஃகு என்னும் சொல் சங்கப் பாடல்களில் வேல், அம்பு, போர்வாள், அரிவாள் என்ற பொருள்களைக் குறிப்பதைக் காண முடிகிறது. இவற்றுள் வேலும் அம்பும் போர்களில் பயன்படுத்தப்பட்ட கருவிகள். அரிவாள் விலங்குகளின் இறைச்சியை அறுக்கப் பயன்படுத்தப்பட்டன. இவற்றை, "வடிவேல் எஃகின் சிவந்த உண்கண்"[9], "எஃகு இருள் அகற்றும் ஏமப் பாசறை"[10], "எஃகு படை அறுத்த கொய் சுவல் புரவி"[11], "எஃகு ஆடு ஊனம்"[12], "எஃகு உறச் சிவந்த ஊனம்"[13], "எஃகு போழ்ந்து அறுத்த வால் நிணக் கொழூம் குறை"[14] என வரும் பாடலடிகள் காட்டுகின்றன.*

### *5.12. இயல் முடிவுகள்*

*சங்ககால மக்கள் தங்கள் தேவைகளுக்காக உருவாக்கிப் பயன்படுத்திய அனைத்து வகையான பொருட்களும் பேசா ஊடகங்களாக இருந்து பழந்தமிழர்ப் பண்பாட்டைப் பறைசாற்றுகின்றன.*

*சங்ககால மக்கள் பயன்படுத்திய பொருளுக்கும் அவர்கள் வாழ்ந்த நில அமைப்பிற்கும் நெறுங்கிய தொடர்பு இருப்பதை அறிந்துகொள்ள முடிகிறது.*

*சங்கப் பாடல்களில் கிடைக்கின்ற தரவுகளுக்கு ஏற்ப இவ்வியலில் விளக்கப்பட்டுள்ள ஒவ்வொரு புழங்குபொருளும் அப்பொருள் எதனால் செய்யப்பட்டது?, எவ்வாறு செய்யப்பட்டது?, யாரால் செய்யப்பட்டது?, யாருக்காக செய்யப்பட்டது?, அதனைப் பயன்படுத்தியவர் யார்?, என்ன தேவைக்காகப் பயன்படுத்தப்பட்டது?, புழங்கு வெளியில் அதன் பயன்பாடு என்ன? அது ஒரு பொருள் என்பதையும் தாண்டி அப்பொருள் பண்பாட்டுத் தளத்தில் எத்தகைய கருத்தைப் புலப்படுத்துகிறது? என்ற கேள்விகளுக்கு விடைதரும் வகையில் அமைந்துள்ளது. அந்தவகையில் பொருளியில், குறியியல், சடங்கியல் என்ற*

---

[1] நெடு. 123
[2] கலி. 109:4
[3] புற. 97:15
[4] பதி. 74:11
[5] நற். 141:8
[6] அக. 217:8
[7] பரி. 10:13
[8] குறு. 233:3
[9] புற. 350:9
[10] புற. 397:7
[11] பதி. 62:3
[12] பதி. 67:17
[13] பதி. 24:21
[14] பதி. 12:16

பல்வேறு நிலைகளில் அப்பொருள் வெளிப்படுத்தும் சிந்தனைகளை இவ்வியல் வெளிப்படுத்தியுள்ளது.

சங்க இலக்கியம் வழி அறியலாகும் பொருட்கள் தோல், மரம், இலை, தழை, ஓலை, மூங்கில், மண், கல், உலோகம் எனப் பலவகையான மூலப்பொருட்களைக் கொண்டு செய்யப்பட்டுள்ளன. அவைகளை நீண்டநாள் பயன்படுத்தக் கூடியவை ஒருமுறை மட்டுமே பயன்படுத்தக் கூடியவை, என்கிற அடிப்படையில் நோக்க ஆண்களால் உருவாக்கப்பட்ட பொருள்கள் நீண்டநாட்பயன்படுத்தக் கூடியதாக இருப்பதையும், பெண்களால் உருவாக்கப்பட்ட பொருட்கள் எளிதில் அழியக்கூடியதாகவும் இருப்பதை ஊகிக்கமுடிகிறது.

காடுசார் மூலப்பொருட்களை அடிப்படையாகக்கொண்டு ஆண்களும், ஊர்ப்புற மூலம்பொருட்களை அடிப்படையாகக்கொண்டு பெண்களும், பொருட்களை உற்பத்தி செய்துள்ளனர்.

ஆண்கள் நெருப்பை அடிப்படையாகக்கொண்ட புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளதையும் பெண்கள் நீரை அடிப்படையாகக் கொண்ட புழங்குபொருள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளதையும் அறியமுடிகிறது.

சாதாரண கருவிகளைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் பொருட்களைப் பெண்களும், கடினமான கருவிகளைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் பொருட்களை ஆண்களும் செய்துள்ளதைச் சங்கப் பாடல்களில் வரும் புழங்குபொருட்களை நோக்கப் புலப்படுகிறது.

அழிவு வேலைகளுக்குப் பயன்படக்கூடிய பொருளை ஆண்களும், ஆக்க வேலைகளுக்குப் பயன்படக்கூடிய பொருட்களைப் பெண்களும் உற்பத்தி செய்துள்ளனர்.

சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள அணிகலன்களை நோக்கும்போது அவற்றை வளமனைகளில் வாழ்ந்த ஆண்களும், பெண்களும், சிறார்களுமே மிகுதியான அளவுக்குப் பயன்படுத்தினர் என்பதை ஊகிக்கமுடிகிறது. அவை முடி முதல் அடிவரை பல்வேறு பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளன.

பெண்கள் தலையணிகளாக உத்தி, சுரிதகம், சூட்டு, தொய்யகம், மகரவலயம் என்பனவும், காதணிகளாகக் குழை, தோடு, கடிப்பு, கட்டுவடம் என்பனவும், மார்பு அணிகலாகப் பூண், வீழ், முத்துமாலை என்பனவும், இடையணிகளாக மேகலை, ஏணிப்படுகால், காசு, காஞ்சி, கோவை, பாண்டில் என்பனவும், தோளணியாக வாகுவலயம் என்பதும், கையணிகளாகத் தொடி, வளை என்பனவும், விரலணிகளாகத் தாழ், விளக்கம், ஆழி என்பனவும், காலணியாகச் சிலம்பும் பயன்பாட்டில் இருந்துள்ளதை அறியமுடிகிறது. கைம்பெண்கள் அணிகலன்களைத் துறந்துள்ளனர்.

ஆண்கள், வீரவளை, தொடி, கழல் எனப்பட்ட அணிகலன்களை அணிந்தனர். மேற்குறித்த இவ்வணிகள் பொன், முத்து, மணி ஆகியவற்றால் செய்யப்பட்டதை அறியமுடிகிறது. குழந்தைக்குரிய அணிகலன்களாக முஞ்சம், தாலி, கிண்கிணி, புட்டில் என்பன இருந்துள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.

*குதிரைகள் உளை, கண்டிகை, கவரி, சாமரை, வல்லிகை, உத்தி எனப்பட்ட அணிகலன்களாலும், யானைகள் ஓடை, தொடி, பூண் எனப்பட்ட அணிகலன்களாலும் அலங்கரிக்கப்பட்டதை அறியமுடிகிறது.*

*வீடுசார் பொருட்களை நோக்கும்போது நிலச்சூழல், பொருளாதார வசதி, தொழில்நுட்ப அறிவு ஆகியவற்றுக்கு ஏற்பப் பயன்படுத்தும் பொருள்கள் இருந்துள்ளதை அவதானிக்க முடிகிறது.*

*உணவு தானியங்களை குற்றித் தூய்மையாக்க உரல், உலக்கை, திரிமரம், முறம் எனப்பட்ட பொருட்களும், சோறு சமைக்க, நீர் ஊற்றிவைக்க, நீர் முகக்க, கள் ஊற்றிவைக்க, கள்முகக்க, கள் குடிக்க, தயிர்க் கடைய, மோர், பால் முதலானவற்றை ஊற்றிவைக்க எனப் வெவ்வேறு தேவைக்காகப் பல்வேறு மட்பாண்டங்கள் புழக்கத்தில் இருந்துள்ளன. அவற்றை அகளம், குழிசி, சாடி, சால், தசும்பு, கோய், தாழி, நிறை, மண்டை, குடம் என்ற பல்வேறு பெயர்களால் அறியமுடிகிறது.*

*அளவைக் கருவிகளைக் குறித்து நோக்கும்போது நாழி, அம்பணம், தராசுத் தட்டு, துலாக்கோல், குறுநீர்க் கன்னல் ஆகியன புழக்கத்தில் இருந்ததை அறியமுடிகிறது.*

*ஏராளமான இசைக்கருவிகள் பயன்பாட்டில் இருந்துள்ளன. யாழ் என்னும் நரம்பு இசைக் கருவியைப் பாணர்கள் பயன்படுத்தியுள்ளனர். குழலை இசைக்கலைஞர்களும் ஆயர்களும் வாசித்துள்ளனர். தூம்பு, ஊது கொம்பு, வயிர் என்பன காற்று இசைக் கருவிகள். இதில் ஊதுகொம்பினை ஆயர்களும், வேட்டைத் தொழிலை மேற்கொண்ட வேட்டுவர்களும் பயன்படுத்தியுள்ளனர். வயிர் எனப்பட்ட ஊதுகொம்பும், சங்கும் அரசர்கள் வெற்றி பெற்று தன் படையோடு திரும்புப்போது முழக்கப்பட்டன.*

*தோல் இசைக் கருவிகளாக முரசு, முழவு, துடி, பறை, பதலை, தடாரி, தட்டை, ஆகுளி, எல்லரி, மகுளி, மத்தரி எனப்பட்ட கருவிகளை அறிந்துகொள்ள முடிகிறது. இவற்றில் முரசு போரிலும், வழிபாட்டிலும், மணவிழாக்களிலும் பயன்படுத்தப்பட்டது. முழவு பாணர் குழவிலும், திருமணச் சடங்குகளிலும் முழக்கப்பட்டது.*

*துடியினை வேடர்கள் மகிழ்ச்சியின்போதும், ஆனிரைகளைக் கவரச் செல்லும்போதும், எயினர்கள் நெற்கூடுகளைக் கொள்ளையிடச் செல்லும்போதும், கூத்தர்கள் தங்கள் ஆடல் தொழிலிலும் பயன்படுத்தியுள்ளனர். துடி முழக்கிப் பொது அறிவிப்புகளை மக்களுக்கு அறிவித்துள்ளனர்.*

*பறையினைக் கூத்தர்களும், கழைக்கூத்தர்களும், பாணர்களும் பயன்படுத்தியுள்ளனர். போர், ஏறுதழுவல், மணவிழா போன்றவற்றிலும் வெள்ள அபாய எச்சரிக்கை, போர் அறிவிப்புகள் ஆகியவற்றுக்காகவும் பறை பயன்பட்டுள்ளது. நெல் அறுத்தல், களையெடுத்தல் போன்ற வேளாண் பணிகள் நடைபெறும்போதும், கதிர்களை உண்ண வரும் பறவையினங்களை விரட்டவும், கிழங்கு போன்ற விளை பொருள்களை உண்ண வரும் பன்றிகளை விரட்டவும், பறை பயன்பட்டுள்ளது. பதலை, தடாரி, தட்டை, ஆகுளி, எல்லரி, மகுளி, மத்தரி எனப்பட்ட கருவிகளைப்பாணர், பொருநர், கூத்தர், விறலியர், முதலியோர் தங்கள் ஆடல் தொழிலில் பயன்படுத்தியுள்ளனர்.*

பண்டைக் காலத்தில் போர்க்கருவிகளாக வில், அம்பு, தூணி, வேல், வாள், கவசம், கேடயம், கவண், ஏணி போன்றவை இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.

வேளாண் கருவிகளாக நீர் முகக்கப் பயன்பட்ட ஆம்பி, உழுவதற்குப் பயன்படுத்தப்பட்ட கலப்பை, சேற்றுக்கட்டியை உடைப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட தளம்பு, களைகளை நீக்கப் பயன்பட்ட களைக்கொட்டு (துளர்), நெல் அரியப் பயன்பட்ட அரிவாள்(குயம்), உழவு வேலைகளுக்குப் பயன்படுத்தப்பட்ட வண்டி(சாடு), தினைக்கதிரை உண்ணவரும் கிளிகளை விரட்டப் பயன்பட்ட தழல், தட்டை, குளிர் என்னும் கருவிகள், தினையை உண்ண வரும் யானை, கிளி முதலியவற்றை விரட்டப் பயன்பட்ட கவண், தினைப் புனத்தில் மேயவரும் பன்றியைப் பிடிக்கக் கானவர்களால் பயன்படுத்தப்பட்ட அடார் ஆகியவற்றைக் குறித்து அறியமுடிகிறது.

யானையை அடக்கும் அங்குசம், குதிரைகளைச் செலுத்தும் தாற்றுக்கோல், அறுக்கவும், அராவிக் கூர்மையாக்கவும் பயன்பட்ட அரம், தச்சுத் தொழிலிலும், மீன்பிடி தொழிலிலும் பயன்பட்ட உளி, கட்டில் பின்னுவதற்கும் பயன்பட்ட ஊசி, கொல்லர் உலைத் துருத்தி, பொன்னின் தரம் காணும் கட்டளைக்கல், ஆடுமாடுகளைக் கட்டி வைப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட தாம்பு, இடையர்கள் பயன்படுத்திய கழு, சுடுபடை, கணிச்சி, மழு மீன்பிடிக்கப் பயனபட்டத் தூண்டில், வலை, உமணர்கள் பயன்படுத்திய வண்டி, இசைக்கலங்களைக்கொண்டு செல்லப் பயன்பட்ட பைகள், எயிற்றியர் புல்லரிசியைத் தோண்டப் பயன்படுத்திய கல்லால் ஆன சிற்றுளி, குறவர்கள் விலங்குகளைத் துறத்தப் பயன்படுத்திய வில், ஆறலை கள்வர் வழிச் செல்வாரைக் கொல்லுவதற்குப் பயன்படுத்திய வேல் ஆகியவற்றைத் தொழில்சார் கருவிகளாக அறிய முடிகிறது.

திருமணச் சடங்கில் பயன்படுத்தப்பட்ட மண்டை, இறந்தவர் உடல்களை அடக்கம் செய்வதற்காகப் பயன்படுத்தப்பட்ட ஈமத்தாழிகள், இறப்புச் சடங்கில் பயன்படுத்தப்பட்ட வாள், வெறியாட்டுச் சடங்கில் பயன்படுத்தப்பட்ட படிமம், குறிசொல்லும் வேலன் பயன்படுத்திய கழங்கு, பிணங்களை சுமந்துசெல்வதற்காகப் பயன்படுத்தப்பட்ட ‘கால்கழி கட்டில்’ எனப்பட்ட பாடை, போரில் புண்பட்ட வீரனைப் பேய்கள் தொடாதவாறு காப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட சடங்கில் இசைக்கப்பட்ட யாழ், மற்றும் ஆம்பற்குழல், வெறியாட்டுச் சடங்கில் இசைக்கப்பட்ட முரசு, நடுகல் வழிபாட்டுச் சடங்கில் இயக்கப்பட்ட துடி, மற்றும் ஆகுளி போன்றவைகளைச் சடங்குசார் புழங்குபொருட்களாக அறியமுடிகிறது.

பெண்கள் கண்ணுக்கு அஞ்சனம் தீட்டிக்கொண்டனர். பூ, தழை போன்றவற்றைத் தொடுத்து மாலையாக அணிந்து ஒப்பனை செய்து கொண்டர். அவற்றைக் கண்ணி, கோதை, தொடலை என்ற பெயர்களால் அறியமுடிகிறது. இளம்பொண்கள் பல்வேறு இலைகளையும் பூக்களையும் தொடுத்துத் தழையாடையாக அணிந்து அழகுபடுத்திக் கொண்டனர். ஆண்கள் சந்தனக்குழம்பை மார்பில் பூசி மணமூட்டிக்கொள்ளும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். பெண்கள் தங்கள் கூந்தலை அகில், சந்தனம் போன்றவற்றின் புகையால் மணமூட்டினர். மகளிர் மார்பு, தோள் முதலிய இடங்களில் சந்தனக் குழம்பு கொண்டு தொய்யில் எழுதிக்கொண்டனர். மக்கள் உடலில் மெய்க்கலவை என்னும் வாசனைப் பொருட்களைப் பூசிக் கொள்ளும் வழக்கத்தைக்

கொண்டிருந்தனர். இவற்றை அக்கால ஒப்பனைப் பொருட்களாக அறிந்துகொள்ள முடிகிறது.

விலங்கின் தோல் கேடயம் போன்ற போர்க் கருவிகளைச் செய்வதற்கும், மானின் தோல் உடுப்பதற்கும், படுத்து உறங்குவதற்குப் படுக்கையாகவும், காலணிகளைச் செய்வதற்கும், முரசு, பறை, துடி போன்ற தோல் இசைக் கருவிகளைச் செய்வதற்கும் எனப் பல்வேறு பயன்பாடுகளைக்கொண்டு விளங்கியதைச் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன.

## துணைநூற் பட்டியல்

### முதன்மை மூலங்கள்


1. *அகநானூறு,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, *1958.*

2. *அகநானூறு, மூலமும் உரையும்,* இரா. செயபால்(உ. ஆ), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, *2011.*

3. *ஐங்குறுநூறு மூலமும் பழைய உரையும்,* டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, *2012.*

4. *ஐங்குறுநூறு,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, *1957.*

5. *ஐங்குறுநூறு மூலமும் உரையும்,* அ. தட்சிணாமூர்த்தி (உ. ஆ), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, *2011.*

6. *கலித்தொகை,* நச்சினார்க்கினியர் உரை, மு. காசிவிசுவநாதன்(ப.ஆ.), தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,சென்னை, *1943.*

7. *கலித்தொகை,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, *1957.*

8. *கலித்தொகை மூலமும் உரையும்,* அ.விசுவநாதன் (உ. ஆ), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, *2011.*

9. *கலித்தொகை மூலமும் உரையும்,* எம். நாராயண வேலுப்பிள்ளை(உ.ஆ), திருமகள் நிலையம், சென்னை, *1999.*

10. *குறுந்தொகை மூலமும் உரையும்,* உ.வே. சாமிநாதையர் (ப.ஆ), டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, *2009.*

11. *குறுந்தொகை,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, *1957.*

12. *குறுந்தொகை மூலமும் உரையும்,* வி. நாகராசன், (உ. ஆ), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, *2011.*

13. *நற்றிணை மூலமும் உரையும்,* எச். வேங்கடராமன்(ப. ஆ), டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, *2013.*

14. *நற்றிணை மூலமும் உரையும்,* கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ. ஆ), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, *2011.*

15. *நற்றிணை மூலமும் உரையும்,* பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர்(உ. ஆ.), தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1962.

16. *நற்றிணை,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, 1957.

17. பதிற்றுப்பத்து *மூலமும் உரையும்,* ஔவை சு. துரைசாமிப்பிள்ளை(உ.ஆ.), தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1968.

18. *பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும்,* டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, 2011.

19. *பதிற்றுப்பத்து,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, 1957.

20. *பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,* அ. ஆலிஸ்(உ. ஆ), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2011.

21. *பத்துப்பாட்டு மூலமும் உரையும்,* பொ. வெ. சோமசுந்தரனார்(உ.ஆ.), தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1980.

22. *பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும்,* உ.வே.சா.(ப.ஆ.), தமிழ்ப்பல்கலைக் கழகம் தஞ்சாவூர், நிழற்படப்பதிப்பு, தஞ்சாவூர். 1986.

23. *பத்துப்பாட்டு,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, 1957.

24. *பத்துப்பாட்டு மூலமும் உரையும்,* இரா. மோகன் (உ. ஆ), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2011.

25. *பரிபாடல்,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, 1957.

26. *பரிபாடல் மூலமும் உரையும்,* பெ. சுப்பிரமணியன், கு.வெ.பாலசுப்பிரமணியன், அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2011.

27. *புறநானூறு மூலமும் உரையும்,* உ. வே. சாமிநாதையர்(ப.ஆ.), தமிழ்ப்பல்கலைக் கழகம், நிழற்படப்பதிப்பு, தஞ்சாவூர், 1985.

28. *புறநானூறு,* பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, 1958.

29. *புறநானூறு மூலமும் உரையும்,* உரையாசிரியர் குழு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2011.

**துணைமை மூலங்கள்**


30. அம்மன்கிளி முருகதாஸ், *சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும்,* குமரன் புத்தக இல்லம், கொழும்பு, 2006.

31. அருணாசலம்பிள்ளை, மு., *ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்,* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1965.

32. அறவாணன், க. ப., *தமிழ்மக்கள் வரலாறு,* தமிழ்க்கோட்டம், சென்னை, 2005.

33. இலக்குவனார், சி. *தொல்காப்பிய ஆராய்ச்சி,* வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, 1971.

34. எட்கர் தர்ஸ்டன், ரத்னம், க.,(மொ. ஆ), *தென்னிந்திய மானிட இன இயல்,* மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2001.

35. கந்தசாமி, ந., *ஆடவரும் பொது மகளிர் நாட்டமும் – ஓர் ஆய்வு,* எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை *(தொகுதி – 1),* இந்தியப் பல்கலைக்கழக தமிழாசிரியர் மன்றம், 1976.

36. கார்ல் மார்க்ஸ், தியாகு (மொ.ஆ), *மூலதனம், முதல் பாகம்,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 1998.

37. கேசவராஜ், வெ., *நடுகல் வழிபாடு,* சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1978.

38. கேசவன், கோ., *மண்ணும் மனித உறவுகளும்,* சரவண பாலு பதிப்பகம், விழுப்புரம், 2001.

39. கைலாசபதி, க., *தமிழ் வீரநிலைக் கவிதை,* குமரன் புத்தக இல்லம், சென்னை, 2006.

40. கைலாசபதி, க., *பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 1966.

41. சண்முகம்பிள்ளை, மு., *தொல்காப்பியம் பொருளதிகாரம், இளம்பூரணம் (இரண்டாம் பகுதி),* முல்லை நிலையம், சென்னை, 2012.

42. சண்முகம்பிள்ளை, மு., *தொல்காப்பியம் பொருளதிகாரம், இளம்பூரணம் (முதற்பகுதி),* முல்லை நிலையம், சென்னை, 2014.

43. சண்முகலிங்கன், என்., பக்தவத்சல பாரதி, (ப. ஆ.), *இலக்கை - இந்திய மானிடவியல்,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2014.

44. சாமி, பி.எல்., *தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2011.

45. சி. என். நடராஜன், *தமிழரின் திருமண முறை*, ஆய்வுக்கோவை, தொகுதி 2, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர், 1969.

46. சிதம்பரனார், சாமி., *தொல்காப்பியத் தமிழர்*, பாரதி பிரிண்டர்ஸ்,சென்னை, 1956.

47. சிலம்பு நா. செல்வராசு, *பண்டைத் தமிழர் திருமண வாழ்க்கை*, காவ்யா பதிப்பகம், சென்னை, 2009.

48. சிவசுப்பிரமணியன், ஆ., *அடித்தள மக்கள் வரலாறு*, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2011.

49. சிவசுப்பிரமணியன், ஆ., *மந்திரமும் சடங்குகளும்*, மக்கள் வெளியீடு, சென்னை, 1999.

50. சிவத்தம்பி, கா., அம்மன்கிளி முருகதாஸ் (மொ. ஆ.), *பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம்*, குமரன் புத்தக இல்லம், கொழும்பு - சென்னை, 2005.

51. சிவத்தம்பி, கா., *பண்டைத் தமிழ்ச் சமூகம்*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2011.

52. சுப்பிரமணிய பிள்ளை, கா., *பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியப் பொருளதிகாரக் கருத்து*, தமிழ்நெறி விளக்கப் பதிப்பகம், சேலம், 1939.

53. சுப்பிரமணியன், கா., *சங்க காலச் சமுதாயம்*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை,1982.

54. சுப்பிரமணியன், பெ., *பழந்தமிழ் நூல்களில் ஊழ்*, குருவருள் பதிப்பகம், தஞ்சாவூர், 1999.

55. செல்வராசு, சிலம்பு. நா., *தொல்காப்பியத்தில் மணமுறைகள் சமூக மானுடவியல் ஆய்வு*, காவ்யா வெளியீடு, சென்னை, 2010.

56. தட்சிணாமூர்த்தி, அ., *சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்*, மங்கையர்க்கரசி பதிப்பகம், தஞ்சாவூர், 2001.

57. *தமிழ்நாட்டு வரலாறு – தொல்பழங்காலம்*, தமிழ்நாடு அரசு வெளியீடு, 1975.

58. தனஞ்செயன், ஆ., *குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும்*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2012.

59. தனஞ்செயன், ஆ., *சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும்,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2010.

60. தனஞ்செயன், ஆ., *தமிழில் இலக்கிய மானிடவியல்,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2014.

61. தனிநாயக அடிகள், பூரணச்சந்திரன். க.,(மொ.ஆ), *நில அமைப்பும் தமிழ்க் கவிதையும்,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2014.

62. தில்லைவனம், சு., *பழந்தமிழர் நாகரிகச் சின்னம் அரிக்கமேடு,* சிவசக்திப் பதிப்பகம், புதுச்சேரி, 2008.

63. தேன்மொழி, மா., *சங்ககாலத் திருமண முறைகள்: இனவரைவியல் நோக்கு,* காவ்யா வெளியீடு, சென்னை, 2014.

64. நக்கீரன், அ., (ப.ஆ.), *பாவாணர் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள்,* தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 2008.

65. நாயுடு, அ.கி., *தொல்காப்பியர் கண்ட தமிழர் சமுதாயம்,* முப்பால் நிலையம்,கோவை, 1962.

66. பகவதி, கு., *தமிழர் ஆடைகள்,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2003.

67. பக்தவத்சல பாரதி, *இலக்கிய மானிடவியல்,* அடையாளம், புத்தாநத்தம், 2014.

68. பக்தவத்சல பாரதி, சிலம்பு நா. செல்வராசு, இரா. சம்பத் (ப.ஆ), *பண்பாட்டியல் நோக்கில் பண்டைத் தமிழர் சமயமரபுகள்,* புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், புதுச்சேரி, 2011.

69. பக்தவத்சல பாரதி, *தமிழர் மானிடவியல்,* மெய்யப்பன் தமிழாய்வகம், சென்னை, 2005.

70. பக்தவத்சல பாரதி, *பண்பாட்டு மானிடவியல்,* மெய்யப்பன் பதிப்பகம், சென்னை, 2003.

71. பக்தவத்சல பாரதி, *பாணர் இனவரைவியல்,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2012.

72. பக்தவத்சல பாரதி, *மானிடவியல் கோட்பாடுகள்,* வல்லினம் வெளியீடு, புதுவை, 2005.

73. பக்தவத்சல பாரதி, *வரலாற்று மானிடவியல்,* அடையாளம், புத்தாநத்தம், 2013.

74. பார்வதியம்மாள், ம., *அகநானூறு காட்டும் மக்கள் வாழ்க்கை*, எம்ஃபில் பட்ட ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1987.

75. பாலசுப்பிரமணியம், கு. மா., *பண்டைத்தமிழ் சமுதாய வளர்ச்சி - ஒரு மார்க்சியப் பார்வை*, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1987.

76. பிலவேந்திரன், ச.(ப.ஆ.), *சனங்களும் வரலாறும்: சொல் மரபின் மடக்குகளில் உறையும் வரலாறுகள்*, வல்லினம், புதுச்சேரி, 2004.

77. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், சாரதா பதிப்பகம், சென்னை. 2012.

78. புலியூர்க்கேசிகன்(உ. ஆ), *சிலப்பதிகாரம் மூலமும் உரையும்*, சாரதா பதிப்பகம், சென்னை. 2014.

79. புலியூர்க்கேசிகன்(உ. ஆ), *புறப்பொருள் வெண்பாமாலை*, பாரிநிலையம், சென்னை, 2009.

80. பெருமாள்சாமி, வெ., *சங்க இலக்கிய காட்சிகள் (மார்க்சிய வெளிச்சத்தில்)*, பாரதி புத்தகாலயம், சென்னை, 2010.

81. பொன்னுசாமி, மு., *சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள்*, இந்து பதிப்பகம், கோயம்புத்தூர், 1990.

82. பொன்னுசாமி, மு., *சங்க இலக்கியத்தில் மெய்ப்பாட்டு இயக்கம்*, இந்து பதிப்பகம், கோயம்புத்தூர், 1998.

83. *மணிமேகலை*, உ.வே.சாமிநாதையர்(ப.ஆ), டாக்டர் உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, 2013.

84. மாணிக்கம், வீ., *தமிழர் வாழ்வியல்*, Clio Publications, Madurai, 2010.

85. மாணிக்கனார், வ. சுப., *தமிழ்க் காதல்*, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2005.

86. மாதையன், பெ., *அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்*, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2009.

87. மாதையன், பெ., *சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்*, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

88. முத்துசாமி ஐயர், வே., *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி*, மதுரைத்தமிழ்சங்க முத்திராசாலை, மதுரை, 1914.

89. மைக்கேல் சரோஜினி, கி., பத்மநாபப் பிள்ளை ப., இராசரத்தினம் வ.(ப.ஆ.), *வளர்தமிழ் ஆய்வு,* வளர்தமிழ் ஆய்வு மன்றம், திண்டுக்கல், 2012.

90. ராகுல் சாங்கிருத்யாயன், *மனித சமுதாயம்,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2013.

91. ராஜ் கௌதமன், *பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்,* தமிழினி, சென்னை, 2006.

92. ராஜ்கௌதமன், *ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும்,* தமிழினி, சென்னை, 2009.

93. லூர்து, தே., *நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், தொகுதி 1,* பாரிவேள் பதிப்பகம்,நெல்லை, 1981.

94. லூர்து, தே., *நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள்,* நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம், பாளையங்கோட்டை, 2008.

95. வரதராசன், மு., (உ.ஆ), *திருக்குறள்,* தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1998.

96. வரதராசன், மு., *இலக்கிய மரபு,* பாரிநிலையம், சென்னை, 2000.

97. வரதராசன், மு., *பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,* பாரி நிலையம், சென்னை, 2011.

98. வரதராசன், வெ., *தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும்,* பண்ணைப் பதிப்பகம், சென்னை, 1973.

99. வானமாமலை, நா., *நடுகற்களும் நம்பிக்கைகளும்,* ஆராய்ச்சி – மலர் 4,துணர் 13.

100. வித்தியானந்தன், சு., *தமிழர் சால்பு,* தமிழ் மன்றம், கண்டி, 1954.

101. வெண்ணிலா, ம., *இலக்கியங்களில் கலப்புத் திருமணங்கள்,* ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 2004.

102. வேங்கடசாமி நாட்டார், ந.மு., (உ. ஆ), *சிலப்பதிகாரம், மதுரைக்காண்டம்,* முல்லை நிலையம், சென்னை, 2005.

103. வேங்கடசாமி, மயிலை சீனி., *பழங்காலத் தமிழர் வாணிகம்,* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 1995.

104. ஜான் மோனகன், பீட்டர்ஜஸ்ட், பக்தவத்சல பாரதி,(மொ. ஆ), *சமூக – பண்பாட்டு மானிடவியல்,* அடையாளம், புத்தாநத்தம், 2005.

**ஆங்கில நூல்கள்**


105. George Thomson, *Studies in Ancient Greek Society,* Lacernce &Wishat, London, 1945.

106. Gurukkal, Rajan., et.al, *Cultural History of Kerala,* Vol. I, Govt. of Kerala, 1999.

107. Kosambi, D.D., *An Introduction to the Study of Indian History,* Popular Prakasam, Bombay, 1993.

108. Pillai, K.K., *A Social History of the Tamils,* Part I, University of Madras, 1969.

109. Sanjeevi, N., *A prime Factor in Ancient Tamil Poetry,* University of Madras, 1969.

110. Sankar Sen Gupta, *Folklore and Folklife,* Indian Publication, Calcutta, 1975.

111. Singaravelu, S., *Social life of the Tamils,* I.I.T.S., Chennai, 2001.

112. *The new Book of Knowledge;* Vol. 17(s), Grolier Incorporated, New York, 1973.

113. Tyler E B, *'Dictionary of Anthropology',* Goyal Publisher & Distributor, New Delhi, 1991.


**அகராதிகள்**


1. *கலைக்களஞ்சியம்,* தொகுதி-5, தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை,1956.

2. *கழகத் தமிழ் அகராதி,* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969.

3. *செந்தமிழ் அகராதி,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2009.

4. *செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி*(மடலங்கள் 1-8), செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு, சென்னை.

5. *தமிழ்ப் பேரகராதி,* சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை,1982.

6. நா. கதிரைவேற்பிள்ளையின், *தமிழ் – தமிழ் அகராதி,* ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ், புதுதில்லி, 1981.

7. *பெப்ரிசியஸ் அகராதி,* சந்தியா பதிப்பகம், சென்னை, 2013.

8. *முல்லை தமிழ் இலக்கிய அகராதி,* முல்லை நிலையம், சென்னை, 2009.

9. *மெய்யப்பன் தமிழ் அகராதி,* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2009.

10. *யாழ்ப்பாண அகராதி,* தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 2005.

11. *வெள்ளிவிழா தமிழ்ப் பேரகராதி,* தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 2005.

**சொல்லடைவுகள்**


1. இராசா, கி., *புறநானூறு அகராதி*, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2010.

2. கண்ணன், இரா., *சங்க இலக்கியத் தொடரடைவு* (தொகுதி 1&2), டுடே பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2013.

3. சீனிவாசன், ச. பொ., *பத்துப்பாட்டு பொருளடைவு*, சேகர் பதிப்பகம், சென்னை, 2013.

4. *பாட்டும் தொகையும்*, பதிப்பாசிரியர் குழு, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை, 1958.

5. மாதையன், பெ., *சங்க இலக்கியச் சொல்லடைவு*, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2007.


**பயன்பட்ட இணைய தளங்கள்**


1. *www.tamilvu.org*
2. *http://temple.dinamalar.com*
3. *https://ta.wikipedia.org*
4. *www.agarathi.com*
5. *http://keetru.com*
6. *http://alagappamani.blogspot.in*
7. *http://www.kamakoti.org*
8. *http://tamil.oneindia.com*
9. *http://www.uyirmmai.com*

# மானிடவியல் நோக்கில் சங்க இலக்கியம்

சென்னைப் பல்கலைக்கழக
முனைவர்(பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்

**ச. நீலமேகன்**



மேற்பார்வையாளர்

**முனைவர் மு. பொன்னுசாமி**

மேனாள் பேராசிரியர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்





தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
மெரினா வளாகம்
சென்னை – 600 005


ஏப்ரல் – 2018

## முடிவுரை

மானிடவியல் நோக்கில் சங்க இலக்கியம் என்ற இவ்வாய்வேட்டின் ஒவ்வொரு இயலிலும் கண்டறியப்பட்ட ஆய்வு முடிவுகள் இயல் முடிவுகளாக அந்தந்த இயலின் இறுதியில் விரிவாகத் தரப்பெற்றுள்ளன. அவற்றின் பிழிவாக இவ்வாய்வேட்டின் முடிவுரை அமைகிறது.

“சங்க இலக்கியம் இனவரைவியல் தகுதி பெற்றது. சூழலும் நிகழ்வுகளும் பாடல்களில் பாடுபொருள்களாக உள்ளன. இப்பாடல்களின் எண்ணற்ற இடங்களில் இனவரைவியல் பண்புக்கூறுகளைக் காணலாம்”[1] என்றும், “சங்க இலக்கியப் புலவர்கள் பெரிதும் ஆற்றல்மிக்கவர்கள். இவர்களின் உற்றுநோக்கல் பாங்கும் எடுத்துரைக்கும் பாங்கும் இனவரைவியலர்கள் செய்வது போலவே உள்ளன. இவர்களில் பலர் இனவரைவியல்(ethnography) விவரிப்புகளை நிறையவே செய்திருக்கிறார்கள்”[2] என்றும் குறிப்பிடும் பக்தவத்சல பாரதி, ஒரு முழுமையான இனவரைவியலை உருவாக்க விரும்பும் இனவரைவியல் ஆய்வாளர் கவனத்தில் கொள்ளக்கூடிய இன்றியமையாத இனவரைவியல் கூறுகளாக 53 பண்பாட்டுக் கூறுகளை நிரல்படுத்திக் காட்டுகிறார்.[3] அவற்றில் நில அமைப்பு, சுற்றுச்சூழல், தாவரங்கள், விலங்குகள், வாழிடங்கள், குடியிருப்பு முறை, புழங்குபொருட்கள், திருமண முறைகள், வாழ்க்கை வட்டச் சடங்குகள், நடத்தை முறைகள், வாழ்க்கைப் பொருளாதாரம், தொழிற்பகுப்பு, பாலினப் பாகுபாடு, உற்பத்தி முறைகள், நுகர்வு முறைகள், பங்கீட்டு முறைகள், பரிமாற்ற முறைகள், உணவு முறை, கைவினைத் தொழில்கள், சமூகக் கட்டுப்பாடு, சமயநம்பிக்கைகள், பல்வகைப்பட்ட தெய்வங்கள், வழிபாட்டு முறைகள், மந்திரம், இசைமரபு, நடனம், கூத்து, அழகியற் சிந்தனைகள், ஆடை அணிகலன்கள், மரபுசார் அறிவு, உலகப் பார்வை, பிரபஞ்சம்பற்றிய அறிவு ஆகியனவும் இன்னபிறவும் இவ்வாய்வேட்டில் விளக்கப்பட்டுள்ளன.

சூழலும் சமூக அமைப்பும் குறித்து நோக்கும்போது நில அடிப்படையில் ஐந்தாகப் பகுத்துப்பார்க்கப்படும் தொகைநூல்காலச் சமூகத்தில் சூழலே மனித வாழ்வை இயக்குவதில் முக்கியப் பங்காற்றியுள்ளதை அறிந்துகொள்ள முடிகிறது.

நீர்நிலவள ஆதாரங்களைப் பொறுத்தே மக்களின் பண்பாட்டு நடத்தை முறைகளான உணவு, உடுத்தும் உடை, வசிக்கும் இடம், பயன்படுத்தும் பொருள், நம்பிக்கைகள், சடங்குகள், திருமண உறவுகள் போன்றனவும்; பொருளியல் நடவடிக்கைகளான உணவு உற்பத்தி, தொழில் ஆகியனவும் அமைந்திருந்ததை அறியமுடிகிறது. அவர்களின் வழிபடு பொருட்களாகப் பெரிதும் நீர்நிலைகளும், மலைகளும், மரங்களும், தாவரங்களும், விலங்குகளும், பறவைகளும் விளங்கியது கவனிக்கத்தக்கது.

[1] பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. xii
[2] பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. Xi
[3] பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், பக். 7-9

சங்ககால மக்கள் சடங்கு வயப்பட்டவர்களாகவும், நம்பிக்கை வயப்பட்டவர்களாவும் இருந்துள்ளனர். அவர்கள் வாழ்க்கையைச் சடங்குகளும் நம்பிக்கைகளுமே இயக்கின என்பதை அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்கள் வழி அறியலாகும் பல்வேறு சடங்குகளைக் குறித்து நோக்கும்போது அவை வைதீகத்தின் தாக்கம் குறைந்த தொல் சமய வழிபாட்டு மரபுகளைக் கொண்டிருப்பதையும், அவை பலியிடல், மந்திரம், ஆவி வழிபாடு, குலக்குறி வழிபாடு, மரவழிபாடு, நடுகல் வழிபாடு, அணங்கு, சூர், பேய் எனப்பட்ட உயிர்ப்பாற்றல் வழிபாடு போன்ற நிலைகளில் இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.

வேதம், வேள்வி போன்றவற்றைப் புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் வரும் அரசர்களைக் குறித்த பாடல்களிலேயே மிகுதியும் காணமுடிகிறது. இது வைதீக சமயமும் சடங்குகளும் உயர் வர்க்கத்தினரால் ஏற்றுப் போற்றப்பட்டமையைக் காணமுடிகிறது. வைதீகக் கடவுளர்களைக் குறித்த செய்திகள் கலித்தொகை, பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகியவற்றிலேயே மிகுதியும் குறிப்பிடப்படுகிறது. இது அந்நூல் பிரதிகள்(text) பிறதொகை நூல்களோடு ஒப்பிடும்போது பிற்காலத்தைச் சார்ந்தவை என்பதைக் கணிக்க உதவுகிறது.

நாள், கோள், விண்மீன், நிமித்தம், கனவு, ஊழ், கடவுள், சுவர்க்கம், மழை, கற்பு முதலியவைகளைக் குறித்த மக்களின் நம்பிக்கைகளை அறியமுடிகிறது.

மேற்குறித்த சடங்கு, நம்பிக்கை ஆகியவற்றின் பின்னணியில் சங்க இலக்கியங்கள் காட்டும் சமூகத்தை நோக்கும்போது அக்காலச் சமூகம் இனக்குழுத் தன்மையையும் அதன் எச்சங்களையும் கொண்டு விளங்கும் சமூகமாக இருந்ததை அறிந்துகொள்ள உதவுகிறது.

மணச்சடங்கு, வெறியாட்டு, கட்டுபார்த்தல், குறிசொல்லல் ஆகிய சடங்குகளில் பெண்கள் பெற்றிருக்கும் இடம் தாய்த்தலைமைச் சமூகத்தின் எச்சங்களைக் காட்டுவதாகவும் இனக்குழுப்பண்பைக் காட்டுவதாகவும் அமைகிறது.

திணைசார் குடிகளான குறவர், கானவர், கொடிச்சியர், ஆயர், ஆய்ச்சியர், உழவர், உழத்தியர், பரதவர், பரத்தியர், வேடர், எயினர், எயிற்றியர் ஆகியோர் அவர்கள் வாழ்ந்த நீர் நில வளத்துக்கேற்ற தொழில்களைச் செய்துவந்ததை அறிந்துகொள்ள முடிகிறது. உபரி உற்பத்திக்கு வாய்ப்பற்ற இனக்குழுச் சமூக அமைப்பைக்கொண்ட குறிஞ்சிநிலச் சமூகத்திலும், கால்நடை வளர்ப்புச் சமூகமான முல்லை நிலத்திலும், பாலைநிலச் சமூகத்திலும், நெய்தல் நிலச் சமூகத்திலும் வாழ்ந்த சாதாரண மக்களிடம் ஆண்பெண் பணிப்பங்கீடு இருந்ததேயன்றி அவர்களுக்கிடையே உயர்வு தாழ்வு கற்பிக்கப்படவில்லை. உடைமைச் சமூகத்துப் பெண்களைப்போல ஒடுக்கப்படவில்லை.

அதிக ஆற்றலும் உடல் வலிமையும் தேவைப்படும் பணிகளை ஆண்களும், வீடுசார்ந்த பணிகள், தோட்ட வேளாண்மை, பண்டமாற்று போன்ற பணிகளைப் பெண்களும் மேற்கொண்டதை அறியமுடிகிறது.

உடைமைச் சமூகத்தில் பெண்ணின் இருப்பு குறித்து நோக்கும்போது, ஆண் தலைமைத்தன்மை பெற்றவனாகவும் பெண் அவனைச் சார்ந்து வாழும் நிலையில் இருந்ததையும் காணமுடிகிறது. உயர் வர்க்கத்தைச் சார்ந்த பெண்கள் உழைப்பிலிருந்து விலகிய நிலையே இத்தகைய ஆண்சார்புத் தன்மைக்குக் காரணமாக அமைந்ததைக் காணமுடிகிறது.

சடங்கு இயற்றும் ஆண் பூசாரிக்கு நிகராக “அகவன்மகள்”, “கட்டுவிச்சி”, “புலைத்தி”, “குறத்தி” முதலிய பெண்களும் சடங்குகளை நிகழ்த்தும் பெண் பூசாரிகளாகச் செயல்பட்டுள்ளனர்.

சங்க அகப்பாடல் முழுமையும் நோக்க பெண்கள் ஆணுக்காக ஏங்கித் தவிப்பவளாகவே சித்தரிக்கப்பட்டுள்ளனர். இது, அவளது இருப்பு ஆண் சார்புத் தன்மையுடையதாக இருந்ததைக் காட்டுகிறது.

கணவன் இறந்தபின் பெண்களால் கடைபிடிக்கப்பட்ட கைம்மை நோன்புகளும், உடன்கட்டை ஏறுதல், வளையல் நீக்குதல், முடிகளைதல், பாயின்றிப் படுத்தல் போன்றனவும் பெண்ணின் மதிப்பிறக்கத்தைக் காட்டுகின்றன. பரத்தை, பரத்தமை என்ற நிலைகளும் பெண்ணுக்கிருந்த இழிநிலையைப் புலப்படுத்துகின்றன.

பெண் தன் கணவன் இல்லாத நேரங்களில் ஒப்பனை செய்துகொள்ளாமை, பெண்ணின் நடவடிக்கை ஆண்களாலும், பெண்களாலும் சமூகத்தில் கண்காணிக்கப்படுதல் என்பனவும் சங்ககாலப் பெண்ணின் சுதந்திரத்தைக் கேள்விக்குள்ளாக்குகிறது.

அந்தணர்கள் மதிப்புமிக்கவர்களாகக் கருதப்பெற்றனர். அரசர்களின் செல்வாக்கைப் பெற்றிருந்தனர். வேதம் ஓதுதலும், வேள்வி செய்வதும் இவர்கள் தொழிலாக இருந்தது.

புலவர்கள் வறுமையில் வாடுபவர்களாக இருந்தாலும், அரசர்களால் போற்றத்தக்கவர்களாக விளங்கினர். அரசர்கள் தவறுசெய்தபோது இடித்துக்கூறி எடுத்துரைத்தனர். அரசர்கள் அப்புலவர் சொல்லுக்கு அடிபணிந்து நடக்குமளவிற்கு மதிப்புடையவர்களாகத் திகழ்ந்தனர். தன்மான உணர்ச்சி மிக்கவர்களாக இருந்தனர்.

ஆளும் வர்க்கத்தினரின் ஏவல் பணியாளர்களாக, யானைப்பாகர், குதிரைப் பாகர், புலைத்தி, துடியர், காவலர், பறையர் என்போர் இருந்துள்ளனர். இவர்கள் நேரடியாக உணவு உற்பத்தியில் ஈடுபடாத சேவைக் குடிகளாவர். இவர்களுள் புலையர், துடியர், பறையர் எனப்பட்டோர் பிறப்பாலன்றி அவர்தம் செய்தொழிலாலேயே இழிந்தவராகக் கருதப்பட்டனர்.

மழவர் எனப்பட்ட பாலைநில வீரர்கள் ஆறலைத்தலையும் ஆனிரை கவர்தலையும் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

அரசர்களும், படைத்தலைவர்களும் மறவர் எனப்பட்ட வீரர்களின் துணையோடே போர்கள் பலவற்றை நிகழ்த்தியுள்ளனர். போரில் இவர்களின் வீரம் போற்றப்பட்டது. இவர்கள் அஞ்சாமையும், மனவலிமையும் மிக்கவர்களாக இருந்தனர்.

இத்தகைய மறவர்களைப் பெற்றவர்கள் வீரத்தாய்மார் எனப் போற்றப்பட்டனர். இவர்கள் போரில் இறந்தால் நடுகல் நாட்டிச் சிறப்பித்தனர்.

பிறர் பொருளைக் கொள்ளைகொண்டு வாழும் வாழ்க்கை உடையவராகக் கள்வர்கள் இருந்துள்ளனர். இது சங்க காலச் சமூகம் பொருளாதார ஏற்றத்தாழ்வுடைய சமூகமாக இருந்ததைக் காட்டுகிறது.

தொல்சமய வழிபாட்டில் வழிபடும் பொருளுக்கும் வழிபடுபவனுக்குமிடையில் ஓர் இணைப்புப்பாலமாக இருந்து சடங்குகளை நிகழ்த்துபவனாக வேலன் எனப்பட்ட பூசாரியையும், பெண் பூசாரியாகக் கட்டுவிச்சி எனப்பட்டவளையும் அறியமுடிகிறது. இவர்கள் பின் நிகழவிருப்பதை முன் கூட்டியே அறிந்துகூறும் மீவியல் ஆற்றல் பெற்றவர்களாக மக்களால் கருதப்பட்டனர்.

புலைத்தியர் ஆடைகளை வெளுக்கின்ற தொழிலை முதன்மையாகக் கொண்டிருந்தனர். கூடை முடைந்து விற்கும் கைத்தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். தெய்வ வழிபாட்டின் பொழுது தெய்வமேறி ஆடும் பெண் பூசாரியாகவும் இருந்துள்ளனர். சில வேளைகளில் காமுற்ற ஆடவர்க்குப் பரத்தையரைத் தேடித்தரும் செயல்களிலும் ஈடுபட்டு வந்ததை அறியமுடிகிறது.

பரத்தையர் மருதநிலச் சமூகத்தில் முக்கிய இடம்பெற்றிருந்தனர். பரத்தமையும், பரத்தையரும் சமூகத்தால் கடிந்து ஒதுக்கப்படவில்லை ஆயினும், அது சமூக ஏற்பினைப் பெறவில்லை என்பதையே சான்றுகள் காட்டுகின்றன.

உமணர்கள் எனப்பட்ட உப்பு வாணிகர்கள் மற்ற நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்குப் பண்டமாற்றாக உப்பினை விற்கும் தொழிலைச் செய்தனர். உப்பு வணிகத்தில் உமணர் பெண்களும் ஈடுபட்டிருந்ததை அறியமுடிகிறது.

குயவர்கள் சங்க காலத்தில் மட்கலங்களையும் இறந்தவர்களை அடக்கம் செய்வதற்குரிய ஈமத் தாழிகளைச் செய்யும் பணியையும் மேற்கொண்டிருந்தனர். திருவிழா குறித்த செய்தியை ஊர்த்தெருக்களில் அறிவிக்கும் பணியையும் குயவர் மேற்கொண்டனர். திருவிழாச் சடங்குகளில் பூசாரியாகவும் செயல்பட்டனர்.

சங்ககாலத்தில் இரும்புக் கருவிகளையும் மக்களுக்குத் தேவையான புழங்குபொருட்களையும் செய்துதரும் தொழில் செய்தவர்களாகக் கொல்லர்களும், மரப்பொருட்களைச் செய்து தருபவர்களாகத் தச்சர்களும் இருந்தனர். சமூக வளர்ச்சிக்கு இவர்களின் தொழில்நுட்ப அறிவு இன்றியமையாததாக இருந்தது.

பொற்கொல்லர், நெசவாளர், செம்புப் பாத்திரம் செய்வோர், முத்தினைத் தூய்மை சேய்வோர், விசிறி செய்வோர் எனத் தொழில்திறன் வாய்ந்த பலரும் மக்களுக்குத் தேவையான பொருட்களை உற்பத்தி செய்தனர். இத்தகைய தொழில் பிரிவுகளைக்கொண்ட சமூகமே வளர்ச்சியடைந்த சமூகமாக இருந்ததைக் காணமுடிகிறது.

பாணர்கள், பொருநர், கூத்தர், விறலியர் , பாடினியர், முழவர், இயவர், கிணைவர் எனப்பட்டோர் பாணர் குழுவில் இடம்பெற்றிருந்த நாடோடிக் கலைஞர்களாவர்.

வறுமைப்பட்ட இவர்கள் புரவலர்களின் ஆதரவில் வாழ்பவர்களாக இருந்தனர். இவர்களில் பாணர், விறலியர் போன்றோர் சமூகமாற்றத்தால் போற்றுவார் இன்மையால் பின்னாளில் பொருள்வளம் படைத்த நிலக்கிழார்களுக்குப் பரத்தையர்களைத் தேடித்தரும் இழிநிலைக்குத் தள்ளப்பட்டதை அறியமுடிகிறது.

சங்கப் பாடல்கள் காட்டும் நானிலச் சமூகத்தின் உற்பத்தி முறைகளிலும் உற்பத்தி உறவுகளிலும் நிலப்பின்னணி முக்கியக் கூறாக விளங்கியது. உணவைத் தேடித்திரிந்த நிலையிலிருந்து படிப்படியே உணவை உற்பத்தி செய்தல் என்ற நிலைக்கு மனிதச்சமூகம் மாற்றமடைந்திருந்தது. இதற்கு அந்தந்தச் சமூகத்தவர்களால் பயன்படுத்தப்பட்ட உற்பத்திக் கருவிகளும் தொழில்நுட்ப அறிவும் பிற நிலத்தவர்களுடனான ஊடாடலும் அடிப்படைக் காரணங்களாக அமைந்ததை அறியமுடிகிறது.

உணவு சேகரித்தல் காலகட்டத்தைச் சார்ந்தவர்களாகக் குறிஞ்சி நிலத்தின் ஒருசாராரும், உணவு உற்பத்திக் காலகட்டத்தைச் சார்ந்தவர்களாகக் குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த மற்றொருசாராரும், முல்லைநில ஆயர்களும், மருதநில உழவர்களும் காணப்பட்டனர்.

குறிஞ்சி நிலத்தவர்கள் தங்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களைத் தாங்களே உற்பத்தி செய்துகொண்டனர். இவர்கள் பயன்படுத்திய கருவிகள் சாதாரணமானவையாகவும் தொழில்நுட்பத்தில் எளியவையாகவும் இருந்தன. நிலம் அனைவருக்கும் பொதுவாக இருந்தது. மக்கள் கூட்டுழைப்பு, கூட்டுண்ணல், பகிர்வு என்ற நிலைகளில் அனைவரும் குழுவாக இணைந்து வாழ்ந்தனர். எனவே இச்சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகளோ, தனியுடைமையோ, வர்க்க பேதங்களோ தோன்றவில்லை. இவர்கள் தங்களின் அத்தியாவசிய உணவுத் தேவைக்காகப் பிற நிலத்தவர்களுடன் தேவை நோக்கிலான பண்டப் பரிமாற்றத்தில் தங்கள் தேவைகளை நிறைவேற்றிக் கொண்டனர்.

முல்லை நிலத்தவர்களின் உற்பத்திச் சாதனங்களாகக் கால்நடை வளர்ப்பும், வன்புல வேளாண்மையும் விளங்கின. ஆண்கள் மேய்த்தல் தொழிலோடு வேளாண்மையிலும் நுழைந்து உற்பத்திச் சக்திகளின் மீது ஆதிக்கம் செலுத்தினர். பெண்கள் வீடுசார்ந்த பணிகளில் இயங்கவேண்டிய நிலையில் இருந்தனர். பால்படு பொருட்களைப் பண்டமாற்று செய்து பொருள் ஈட்டும் நடவடிக்கைகளில் ஈடுபட்டனர்.

முல்லை நிலத்தவர்களின் நிலையான குடியிருப்பும் கால்நடை வளர்ப்புடன் கூடிய வேளாண்மையும் சமூகத்தில் சொத்துடைமை தோன்ற அடித்தளமிட்டது. கால்நடைகள் இவர்களின் முக்கியச் சொத்தாக இருந்தன. பொருளாதாரப் பெருக்கத்தில் அவை இன்றியமையாத இடத்தைப் பெற்றிருந்தன. ஆணின் சொத்துடைமையை நிலைநாட்டுவதற்காகப் பெண்ணுக்குக் கற்பொழுக்கம் என்னும் ஒழுக்கநெறி கற்பிக்கப்படுவதற்கான சூழல் உருவானது. இதற்கு ஆண்பெண் இடையிலான உற்பத்தி உறவு காரணமாக அமைந்தது.

மருதநிலப் பகுதியின் நீர்வளமும் நிலவளமும் தொடர்ச்சியான வேளாண்மைக்கு வித்திட்டு பொருளாதார மேம்பாட்டுக்குக் காரணமானது. உபரி உற்பத்தி ஏற்பட்டுச் சொத்துடைமை தோன்ற அடித்தளமிட்டது. பிற தொழில்களின் தோற்றத்திற்கு வழிகோலியது. சமூகத்தில் புரவலன் இரவலன் என்ற வர்க்க பேதங்கள் தோன்ற ஆரம்பித்தது. உற்பத்திக் கருவியாக விளங்கிய நிலம் தனிஉடைமையாக மாறியது. வினைஞர், தொழுவர், துடியர் எனப்பட்ட கடைநிலைத் தொழிலாளர்கள் தோற்றம் பெற்றனர்.

நெய்தல் நிலத்தவர்கள் கடல்சார் தொழில்களான மீன்பிடித்தல், கடலில் மூழ்கி முத்தெடுத்தல், சங்கெடுத்தல் மற்றும் உப்பு விளைத்தல் போன்ற தொழில்களைச் செய்து வந்தனர். உப்பை உமணர்களிடம் கொடுத்து நெல்லைப் பண்டமாற்றாகப் பெற்றுக்கொண்டனர். பரதவப் பெண்களும் உப்பை நெல்லுக்குப் பண்டமாற்று செய்யும் பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். கடல் கடந்த அயல்நாட்டு வணிகம் செழிப்பதற்கும் நகரங்கள் உருவாவதற்கும் நெய்தல் நிலத்தின்கண் அமைந்த துறைமுகங்கள் காரணமாக அமைந்தன.

வறண்ட பாலை நிலப்பகுதியில் வாழ்ந்த எயினர், ஆறலைகள்வர் என்போர் வழிப்போக்கர்களிடமிருந்தும், வணிகக் குழுக்களிடமிருந்தும் அவர்களைத் துன்புறுத்தியும் கொன்றும் அவர்களிடமிருந்து பொருட்களைக் கொள்ளையடித்தும், கால்நடைகளைக் கவர்ந்தும் வாழ்வதை முக்கியத் தொழில்களாகக் கொண்டிருந்தனர். போர்களிலும் இவர்கள் படை உதவிக்காகப் பயன்படுத்திக் கொள்ளப்பட்டனர்.

நானிலச் சமூகத்தில் தேவை நோக்கிலான பண்டப் பரிமாற்றமும், வணிகநோக்கிலான பண்டப் பரிமாற்றமும் உற்பத்தி உறவுக்குப் பாலம் அமைத்துத் தந்தன.

சங்க காலச் சமூகத்தில் நேரடியான உணவு உற்பத்தியிலிருந்து விலகி உணவு உற்பத்தி சார்ந்த தொழில்களில் ஈடுபட்ட குடிமக்களுக்கான கருவிகளையும், புழங்கு பொருட்களையும் உருவாக்கித்தந்த தொழில்பிரிவினர் தோற்றம் பெற்றனர். இவர்கள் சமூக வளர்ச்சியிலும் உற்பத்திப் பெருக்கத்திலும் முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகத் திகழ்ந்தனர். இவர்களில் ஒரு பிரிவினர் சேவைக் குடிகளாகவும் திகழ்ந்தனர். உற்பத்தி உறவுகளில் பெரும் மாற்றம் தோன்றக் காரணமாக அமைந்தனர்.

அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதர், ஒற்றர், நீதி வழங்குவோர், மெய்க்காப்பாளர், நாழிகைக் கணக்கர், அரண்மனைப் பணிப்பெண்கள், சூதர், மாகதர், வேதாளிகர், முரசறைவோர், காவலர், குதிரைப்படை வீரர், யானைப் படை வீரர், காலாட்படை வீரர் முதலானோர் அடிப்படையில் உணவு உற்பத்தியிலிருந்து விலகி ஆளும் வர்க்கத்திற்குச் சேவைசெய்யும் குடிமக்களாவர். இத்தகைய அரசு சார்ந்த பணியாளர் பிரிவானது சமூகத்தில் வர்க்க பேதம் தோன்றிவிட்டமைக்கான அடிப்படை ஆதாரமாக அமைகிறது.

ஆடல், பாடல், இசை போன்றவற்றில் தேர்ச்சி பெற்ற நிகழ்த்துக் கலைஞர்கள் அனைவரும் ஒரு குழுவாக இயங்கினர். இவர்கள் அரசர்களிடமும் குறுநில மன்னர்களிடமும், ஊர்கள்தோறும் சென்றும் தங்கள் கலைத்திறனைக் காட்டி அதன்மூலம் பெற்ற பொருள்கொண்டு வாழும் வாழ்க்கை முறையைக் கொண்டவர்களாகத் திகழ்ந்தனர். நிலையற்ற பொருளாதாரத்தைக் கொண்டிருந்த இவர்கள் வறுமைப்பட்டவர்களாகவே இருந்தனர். இவர்கள் தங்களை ஆதரித்த புரவலர்களுக்கு நன்றிக்கடனாக அவர்களை மக்கள் மத்தியில் புகழ்ந்து பாடினர்.

போர்க் கைதிகளை அடிமைகளாக்கிக் கொள்ளும் முறையும் வழக்கத்திற்கு வந்துவிட்டது. அவர்களுள் பெண்கள் ''கொண்டி மகளிர்'' எனப்பட்டனர். அரசனால் சிறைப்படுத்திக் கொண்டுவரப்பட்ட பகை மன்னர்களின் உரிமை மனைவியர் அம்பலங்களைத் தூய்மைப்படுத்துதல், விளக்கேற்றுதல் போன்ற பணிகளில் ஈடுபடுத்தப்பட்டனர்.

உற்பத்திக் கருவிகளில் ஏற்பட்ட மாற்றமும் அதன் மூலம் கிடைத்த உபரியும் பாணர், விறலி முதலிய இசைக் கலைஞர்களை மதிப்பிறக்கம் செய்தது, பரத்தைமை நிறுவனப்படுத்தப்பட்டது. பெண்கள் உற்பத்தியிலிருந்து பின்னுக்குத் தள்ளப்பட்டனர். இதனால் பெண்கள் ஆணைச் சார்ந்து இயங்கும் நிலைக்கு ஆளாயினர்.

மேல்தட்டு வர்க்கத்தைச் சார்ந்த பெண்கள் முற்றிலும் உற்பத்தியிலிருந்து விளக்கப்பட்டு அவர்கள் ஆண்களுக்கான நுகர்ச்சிப் பொருளாக மாற்றமடைவதற்கும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை நிலங்களில் வாழ்ந்த விளிம்புநிலைப் பெண்கள் ஆண்களுக்கு இணையாக உணவு சேகரித்தல், கால்நடை வளர்த்தல், உப்பு விளைத்தல், மீன் உணக்கல் முதலிய பணிகளில் ஈடுபட்டிருந்ததால் ஆண்களுக்குச் சமமாக மதிக்கப்பட்டதற்கும், உற்பத்தியில் அவர்களின் பங்களிப்பே காரணமாக அமைந்திருந்தது.

புரப்போர் இரப்போர் என்னும் நிலைகளைக்கொண்டு தொன்மைச் சமூகத்தின் பகுத்தல் மரபு ஈதல் மரபாக மாற்றமடைந்ததை அறியமுடிகிறது. இது பண்டைய சமூகத்தில் வர்க்க பேதம் கால்கொண்டுவிட்டதைக் காட்டுகிறது. அரசின் வருவாயில் கொண்டிப்பொருள் மிகமுக்கியமான வருவாயாகத் திகழ்ந்தது.

புழங்குபொருளை அடிப்படையாகக்கொண்ட சங்ககால மக்கள் பண்பாட்டை நோக்கும்போது, மக்கள் வாழ்ந்த சூழல், மூலப்பொருட்கள் கிடைக்கும் தன்மை, தொழில் நுட்ப அறிவு, பொருளாதார வளம், மக்களின் தேவை, அழகியல் உணர்வு, பிற சமூகத்தவர்களோடு கொண்டிருந்த தொடர்பு ஆகியவற்றைப் பொறுத்தே அவர்கள் பயன்படுத்தும் பொருள்கள் அமைந்திருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.

வீடுசார் புழங்கு பொருட்கள் அந்தந்த நிலச்சூழல், பொருளாதார வசதி, தொழில்நுட்ப அறிவு ஆகியவற்றுக்கு ஏற்ப அமைந்திருப்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ள அணிகலன்களை நோக்கும்போது அவற்றை வளமனைகளில் வாழ்ந்தவர்களே மிகுதியான அளவுக்குப் பயன்படுத்தியதை

அறிந்துகொள்ள முடிகிறது. மக்கள் உச்சி முதல் பாதம் வரை பல்வேறு அணிகலன்களை அணிந்துள்ளனர். அணிகலன்கள் பொன், வெள்ளி, முத்து, மணி, சங்கு, தாவரங்களின் தண்டு ஆகியவற்றால் செய்யப்பட்டதை அறிந்துகொள்ள முடிகிறது. குதிரை, யானை, தேர் முதலியனவும் அணிகலன்களால் ஒப்பனை செய்யப்பட்டன.

அளவைக் கருவிகளைக் குறித்து நோக்கும்போது நாழி, அம்பணம், தராசுத் தட்டு, துலாக்கோல், குறுநீர்க் கன்னல் ஆகியன புழக்கத்தில் இருந்ததை அறியமுடிகிறது.

ஏராளமான இசைக்கருவிகள் பயன்பாட்டில் இருந்துள்ளன. யாழ் என்னும் நரம்பு இசைக் கருவியைப் பாணர்கள் பயன்படுத்தியுள்ளனர். குழலை இசைக்கலைஞர்களும் ஆயர்களும் வாசித்துள்ளனர். தூம்பு, ஊதுகொம்பு, வயிர் எனப்பட்ட காற்று இசைக் கருவிகள் புழக்கத்தில் இருந்தன. இவற்றில் ஊதுகொம்பினை ஆயர்களும், வேட்டைத் தொழிலை மேற்கொண்ட வேட்டுவர்களும் பயன்படுத்தியுள்ளனர். வயிர் எனப்பட்ட ஊதுகொம்பும், சங்கும் அரசர்கள் வெற்றிபெற்றுத் தன் படையோடு திரும்புப்போது முழக்கப்பட்டன.

தோல் இசைக் கருவிகளாக முரசு, முழவு, துடி, பறை, பதலை, தடாரி, தட்டை, ஆகுளி, எல்லரி, மகுளி, மத்தரி எனப்பட்ட கருவிகளை அறிந்துகொள்ள முடிகிறது. அவற்றைப் பாண்குடியினர் மிகுதியும் பயன்படுத்தியுள்ளனர். இத்தோலிசைக் கருவிகளில்பல போர், வழிபாடு, திருமணம், சடங்கு, வேட்டை, வேளாண்மை போன்றவற்றிலும் இடம்பெற்றிருந்தன. இது சங்க காலச் சமூகத்தில் இசைக்கு இருந்த முக்கியத்துவத்தைப் புலப்படுத்துகிறது.

பண்டைக் காலத்தில் போர்க்கருவிகளாக வில், அம்பு, தூணி, வேல், வாள், கவசம், கேடயம், கவண், ஏணி போன்றவை இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.

வேளாண் கருவிகளாக ஆம்பி, கலப்பை, தளம்பு, களைக்கொட்டு, அரிவாள், வண்டி போன்றனவும், பறவைகளை விரட்டப் பயன்பட்ட தழல், தட்டை, குளிர், கவண் எனப்பட்ட கருவிகளும் விலங்குகளைப் பிடிக்க அடார் எனப்பட்ட பொறியும் மக்களால் பயன்படுத்தப்பட்டதை அறியமுடிகிறது.

அங்குசம், தாற்றுக்கோல், அரம், உளி, ஊசி, துருத்தி, கட்டளைக்கல், தாம்பு, கழு, சுடுபடை, கணிச்சி, மழு, தூண்டில், வலை, வில், வேல் போன்ற தொழிற் கருவிகளைக் குறித்து அறிந்துகொள்ள முடிகிறது.

மண்டை, ஈமத்தாழி, வாள், படிமம், கழங்கு, கால்கழி கட்டில், யாழ், குழல், முரசு, துடி, ஆகுளி போன்றவற்றைச் சடங்கு நிகழ்வுகளில் இடம்பெற்ற பொருட்களாக அறியமுடிகிறது.

பெண்கள் மை, பூ, பூக்களால் தொடுக்கப்பட்ட கண்ணி, கோதை எனப்பட்ட மாலைகள், தொடலை எனப்பட்ட தழையாடைகள், தொய்யில் ஆகியவற்றால் தங்களை ஒப்பனை செய்துகொண்டனர். ஆண்கள் சந்தனக் குழம்பினாலும் பெண்கள் தங்கள் கூந்தலை அகில், சந்தனம் போன்றவற்றின் புகையினாலும் மணமூட்டிக் கொண்டனர்.

மேற்குறித்த புழங்குபொருட்களின் வாயிலாக பண்டைக்கால மக்களின் தொழில் நுட்ப அறிவையும், அழகியல் உணர்வையும் அறிந்துகொள்ள முடிகிறது. மக்கள் இசைக்கலைக்குத் தந்த முக்கியத்துவத்தை அறிந்துகொள்ள முடிகிறது.

சங்க இலக்கியம் வழி அறியலாகும் பொருட்கள் தோல், மரம், இலை, தழை, ஓலை, மூங்கில், மண், கல், உலோகம் எனப் பலவகையான மூலப்பொருட்களைக் கொண்டு செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் ஆண்களால் உருவாக்கப்பட்ட பொருள்கள் நீண்டநாள் பயன்படுத்தக் கூடியதாகவும், பெண்களால் உருவாக்கப்பட்ட பொருட்கள் எளிதில் அழியக்கூடியதாகவும் இருந்ததை உணரமுடிகிறது.

காடுசார் மூலப்பொருட்களைக்கொண்டு ஆண்களும், ஊர்ப்புற மூலம்பொருட்களைக்கொண்டு பெண்களும், பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருந்தனர்.

ஆண்கள் நெருப்போடு தொடர்புடைய பொருள்களையும், பெண்கள் நீரோடு தொடர்புடைய பொருள்களையும் பெரிதும் உருவாக்கியுள்ளனர். சாதாரண கருவிகளைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் பொருட்களைப் பெண்களும், கடினமான கருவிகளைப் பயன்படுத்தி உருவாக்கப்படும் பொருட்களை ஆண்களும் உற்பத்தி செய்துள்ளனர். ஆண்கள் அழிவுப் பணிக்கான கருவிகளையும் பெண்கள் ஆக்கப் பணிக்கான பொருட்களையும் உற்பத்தி செய்துள்ளனர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

சூழலுக்கும் சமூக அமைப்புக்கும் ஏற்பச் சங்ககாலச் சமுதாயம் ஏற்ற இறக்கங்களைக்கொண்ட பன்முகப்பட்ட சமூகமாக இருந்ததையும், ஒவ்வொரு சமூகமும் தனித்த பண்பாட்டுக்கூறுகளைக்கொண்டு விளங்கியதையும் இவ்வாய்வு வெளிப்படுத்தியுள்ளது.

இலக்கிய ஆய்வுகள் ஒரு குறிப்பிட்ட எல்லையோடு நின்றுவிடுவதில்லை. அவை புதியபுதிய அறிவுத்துறைகளில் நோக்கப்படும்போது புதிய பொருண்மைகளை வெளிப்படுத்துகின்றன. எனவே இவ்வாய்வின் தொடர்ச்சியாக சங்க இலக்கியத்தை பெண்ணிய மானிடவியல், மொழியியல் மானிடவியல் நோக்கில் அணுகுவது சங்க இலக்கியத்தையும் சங்ககாலச் சமூகத்தையும் புரிந்துகொள்ள மேலும்உதவும்.